தற்குக் காரணம் யாது? எந்த அற்புத அபார சக்தி இப்படிச் செய்வித்தது?

மேலும், பிரான்சு தேசத்தில் பூதத்துவ, வானதத்துவ சாஸ்திரங்களிற் பெருமைபெற்ற (M. Blendit) பிலெண்டிட் என்னும் சாஸ்திரியார், பாரீஸ்நகரத்தில் தாம் பிரசுரஞ்செய்த வானசாஸ்திர பத்திரிகையில் (The Paris Astronomical Journal) "ஒருகாலத்தில் (Sun) சூரிய கிரஹமும், (Moon) சந்திரகிரஹமும், அங்காரகாதி கிரஹங்களும் ஒரே பிரம்மாண்ட பிண்டமாகவிருந்து, பிறகு நாளாவட்டத்தில் பலவித் துண்டு கிரஹங்களாகப் பிரிந்ததாகவும், பூமியாகிய நமது கிரஹமும், வெள்ளி, புதாதி கிரஹங்கள் பிரிவதற்கு ஆறு பிரளயகாலங்களுக்கு முன்பாகவே பிரிந்திருக்க வேண்டுமென்றும், (Chaotic Period) கொயேடிக்கு என்னும் சப்த நக்ஷத்திரங்களின் காலம் முதல், சரியான பிராணிகள் ஜனிப்பதற்கு 5,00,00,000 கோடிவருஷங்களா யிருக்கவேண்டுமென்றும், ஆல்பஸ் (Alps) முதலான மலைகளில் 24,40,00000 கோடிவருஷங்களுக்கு முன் உஷ்ண ஜனித கந்தமூலாதிகள் தோன்றியதாகவும்; ஆகவே, நமது பூமியானது (ஆதித்தன்) சூர்யகிரஹபிண்டத்திலிருந்து பிரிந்து 6,00,00,00,000 கோடிவருஷங்களாகி யிருக்கவேண்டுமென்றும் எழுதியிருக்கின்றனர். இவ்வித மாற்றத்துக்குக் காரணம் யாது? மேலும் கி. பி. 1863-ஆ பிரசுரமான "*பிலசாபிகல் மாகஸின்" என்ற சஞ்சிகையில், "சர்வில்லியம் தாம்சன்" (Sir William Thomson) என்னும் சாஸ்திரியார்: பூதத்வ சாஸ்த்ரோக்தமாக, நமது பூமியின் மேல் கெட்டந்தோன்றி 9,80,00,000 வருஷங்களாகி யிருக்கவேண்டுமென்றும் கணித்திருக்கிறார்.

‡ ஹாட்டன் சாஸ்திரியார், பூதத்வத்தைப்பற்றி தாம் செய்த நான்காவது ப்ரசங்கத்தில், நமது பூமியை 20,000°

* Professor Sir William Thomson has calculated the probable age of the crust of the earth to be about 98,000,000 of years; which must, therefore, comprehend the whole geological history of our planet.—*The Philosophical Magazine*.

‡ From Professor Houghton's fourth lecture on Geology we learn that it took the earth 350,000,000 years to cool from 20,000°, to 200° centigrade; and that to cool from 212°, Fahrenheit to 77°, required 2,293,000,000 of years.—A work lately

முதல் 200° டிகிரிவரையில் குளிர்ச்சியாக்க 35,00,00,000 கோடிவருஷங்களானதாகவும், 212° பாரின் டிகிரிமுதல் 77° டிக்கிரிவரையில் குளிர்ச்சியாக்க, 2,29,80,00,000 கோடிவருஷங்களாகி யிருக்கவேண்டுமென்றும் பிரஸ்தாபித்திருக்கின்றனர். நாம்வேறொரு * பூதத்வசாஸ்திரியாருடைய நூலைப் பார்த்ததில், நமது பாதத்திற்கடியில் பயங்கரமான குழப்பங்களையும், இப்போது பார்க்கும்படியான பாறைகளெல்லாம் ஒரு காலத்தில் அக்கினிக்கிடங்களாகவும்; அவைகளின் சுவாலையின் புகையால் ஜீவிகள் ஜீவிக்கக்கூடாமலும், சுத்தமான வாயுவில்லாமலும், பிறகு நமது கண்டங்களுந் தேசங்களும் சமுத்திரங்களால் மூடப்பட்டும்; பிறகு ஒருவித பயங்கரமான பிராணிகள் தோன்றி, அவைகள் அப்போதிருந்த கந்தமூலாதிகளைப் பாழாக்கியதாகவும்; பிறகு உத்தராயண தக்ஷிணாயனவரைகள் பனிக்கட்டிகளால் மூடப்பட்டிருந்ததாகவும்; அதன்பேரில் பனிப்புசல் காற்றெழும்பி யாவற்றையுமடிக்க, இப்படி பல நூற்றாண்டுகள் கழிந்து, புசல்

published, called "The Pre-Glacial Man" considers the glacial epochs on the surface of the earth to result from the extreme elongation, at certain periods, of the transverse axis of the terrestrial orbit. The last period of this sort took place about 350,000 years ago and continued about 270,000 years, ending 50,000 years ago. According to "Dension's Astronomy," when the eccentricity of the earth's orbit was 10,500,000 miles, and winter in our hemisphere coincided with the earth's greatest distance from the sun, the mean cold of winter was 73°, below its present temperature.

* I go out with my geological teacher for a ramble. He shows me under my feet, the traces of awful convulsions, of times when the solid rocks rolled in liquid fire; when the atmosphere, a hundred miles high, was filled with gases no animate lungs could breathe. He shows me other long periods, in which an immeasurable ocean rolled above our continents, depositing them in successive strata, through uncalculated myriads of years. Again, he shows me other epochs, during which fearful animals crawled amid the slime of a half-dried earth and devoured its gigantic vegetation. Again the scene shifts, and all this northern hemisphere is a mass of ice; upon which one snow-storm beats and drifts and falls day and night during a hundred years. The storm at last ceases; the snow melts; the icebergs and glaciers fall away: new heavens and a new earth arrive fit for the home of man.—"*Steps of Belief.*"

தணிய, பனியுருக, புகையோய, சுத்தமான காற்றெழும்ப, பூமியானது ஜனங்கள் வசிக்கும் இப்போதிருக்கும்படியான உலகமானதாகவும் தெரிவித்திருக்கின்றனர்.

இப்படிப்பட்ட அற்புதமான மாறுதல்களைச் செய்யக் காரணம் யாது? அது எப்படிப்பட்ட சக்தியை யுடையதா யிருக்கவேண்டும்? பெரும்பாறைகளும், குன்றுகளும் எப்படி வந்தன? அவைகள் நாளாவட்டத்தில் கரைந்துகொண்டு வரச் செய்வதற்குக் காரணம் யாது?

சில மாதங்களுக்குமுன், ஜர்மனிதேசத்தில் பிரசுரமாகிய பூதத்துவ நூலின்படி, இப்போது நமது பூமியின் அடிப்பாகத்தில் சிலமைல்கள் வரையில் வெட்டிப்பார்ப்போமாகில், அங்கு ஜுவாலையோடு கூடிய அகண்ட அக்கினி சமுத்திரமாகவும், அந்த அக்கினிசமுத்திரத்திற்கு மேல்பாகம், மிகவும் மெலிந்த கிட்டத்தினால் மூடப்பட்டிருப்பதாகவும், அந்த கிட்டப் பிரத்தியேகத்தின்மேல், அத்லாந்திக்கு, பசிபிக் காதி மஹாசமுத்திரங்களிருப்பதாகவுந் தெரியவருகிறது. மேலும் அந்தக் கிட்டப் பிரத்தியேகத்திலோர் சிறு துவாரமுண்டாகில், அத்லாந்திக்கு முதலான ஜல சமுத்திரங்களின் ஜலம் அதில் வடிந்து, அந்த பவுதிகவடி மத்திய அக்கினி சமுத்திரமழிந்து மண்டலத்தில் மானுஷீகாதி ஜீவகோடிகளும், கந்தமூலாதிகளும் நாசமாகி விடுமென்றும்; அப்படிக்கன்றி அந்த பவுதிகஅடி மத்யத் தீசமுத்திரஞ் சற்றதிகமாக ஜுவாலித்து, ஜுவாலை பீறிட்டு மேலுக்கெழும்பில், நமது ஜலசமுத்திரங்கள் கொந்தளிப்புடன் கொக்கரித்துப் பொங்கி ஜலப்பிரளயமாகி விடுமென்றுஞ் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படி யமைப்பதற்குக் காரணம் யாது? இந்த பவுதிக அடி மத்தியசமுத்திர மேலுக்கெழும்பாமலிடையிற் கேவலமாகிய மிகமெலிந்த கிட்டத்தினால் தடுக்கப்பட்டும், பூமிக்குச் சீதமும், உஷ்ணமும், தாம் தாமிருக்கவேண்டிய ஸ்திதியிலிருக்கவுஞ் செய்வதற்குக் காரணம் யாது? மானுஷீகர்களுடைய மதியை மயக்கும்படியாக மலைகளைப்போலெழும்பிக் கர்ஜித்துவரும் பேரலைகளையும், பயங்கரமாக வெழும்பி அரைநிமிஷத்தில் பிரபஞ்சத்தையே சின்னபின்னமாக்கக் கூடிய புயல் காற்றையும் உண்டாக்கவும், அடக்கவும் காரணம் யாது? இவ்வளவேன், பஞ்ச பூதங்களி லொன்றாகிய வாயுவின் பொருத்தத்தைப் பாருங்கள்.

முதலாவது, அது பூமிக்கு உஷ்ணத்தையும் வெளிச்சத்தையுங் கொடுப்பதன்றியில், பூமியை யதிகமாகக் குளிரவைக்காமலும், அதிகமாக உஷ்ணமிகாமலு மோர்மெலிந்த துணிபோலிருந்து தடுத்து, பூமியிலுள்ள அசுத்தங்களை நீக்கிப் பரிசுத்தமாக்குகின்றது. பிறகு மேகத்திலிருந்து மழைநீரைக் கொண்டுவந்து கந்தமூலாதி ஜீவகோடி சமூஹங்களைச் சம்ரக்ஷணை செய்கின்றது. மேலும், அது மனுஷர்களாகிய நமக்கோ இன்றியமையாத சாதனமாகவுமிருக்கிறது. சுத்தமான காற்றில்லாவிட்டால் நாமுயிரோடிருக்கமாட்டோம். ஒருகாலத்தில் கல்கத்தாவில் சுத்த காற்றில்லாத இருட்டறையிலிருந்த ஜனங்களநேக ரேக காலத்தில் மடிந்துவிட்டதாக இந்துதேச சரித்திரத்தில் படித்திருப்பதன்றியில்; சமீபகாலத்திற்கு முன் சேலம் பட்டுநூற்காரர் தெருவிலிருந்த சேந்துக்கிணற்றில் சுத்தக் காற்றில்லாமையால் அதிலிறங்கிய மூன்று புருஷர்களு மேககாலத்தில் மடிந்த விஷயம் நாம் பிரத்தியக்ஷத்தில் பார்த்திருக்கிறோம். இந்தக் காற்றினாலே யல்லவா, நாம் செயற்கையாகிய பிரகாசத்தையும், சப்தத்தையும் விளக்குகிறோம். ஸ்ரீசந்திரசேகர பிரம்மாநந்தருடைய சாதுரியமான பிரம்மாநந்தப் பிரசங்கங்களும் காற்றின் சகாயத்தினாலல்லவா வெளியாகவேண்டும்? இப்போது ஸ்ரீமது சந்திரசேகரையர் பிரசங்கித்த உபாசனையையும் காற்றினுதவியினாலல்லவா யாங்கேட்டோம். ஸ்ரீ தாவத்சாய்பின் சாரந்தா வாத்திய சங்கீதங்களையும் காற்றினாலல்லவா அறியவேண்டும்? காற்றில்லாவிட்டால் குயிலின் குரலைக் கேட்பதெப்படி? காற்றில்லாவிட்டால் கிளியின் வார்த்தைகளைக் கேட்பதெப்படி? காற்றில்லாவிட்டால் சுருதிகள் வெளிவந்ததெப்படி? ஏ! காற்றில்லாவிட்டால் இப்போது நான் செய்யுமிப் பிரசங்கத்தை நீங்கள் கேட்பதெப்படி? காற்றில்லாவிடில், கடல்களின் அலைகள் சப்தங்களடங்கிக் கரையோடு மோதாதிருக்கும். பக்ஷிகள் பாடும்பாட்டுகளையுங் கேளோம். சில்வண்டுகளும் சிறிட்டமா. வீணையாதி வாத்தியக்கருவிகளும், துப்பாக்கி முதலான வெடிக் குழல்களும், காற்றில்லாவிடில் இருந்தும் பிரயோஜனமென்ன? மேககர்ச்சனையுங் கேளோம். சுகந்த வாசனையுள்ள புஷ்பங்களிலிருக்கும் சுவாசனையை யறிவதெப்படி? காற்றில்லாவிடில் இந்தப் பளிங்கு விளக்குகளு மெரியா. தீயும் ஜ்வலிக்காது. கப்பலு மோடாது. ககனமார்க்கத்தில் போகும் பலூன் என்ற புகைக் கூண்டும் போகாது. கடைசியாகக் காற்றில்லா

விட்டால் யாதும் அசையாது. இம்மட்டோ! இந்தக்காற்றிருந் தேயல்லவா Hydrogen—ஜலவாயுவும் Oxygen—பிராணவாயுவு முண்டாகின்றது. இவ்வித பேதம் மற்றெந்தப் பூதத்திலாவதாகுமோ?

ஆகாயம் என்பது ஒரே பூதியம் என்று அநேக வருஷங்களாக எண்ணி இருந்தார்கள். பிறகு போன நூற்றாண்டிலே அதைத் தக்கபடி பரிசோதிக்கையில், அது ஆக்ஸிஜன் (Oxygen) என்னும் தண்ணீரிலிருக்கிற பிராணவாயுவை ஒரு பங்கும், நைட்ரோஜன் (Nitrogen) என்னும் உப்பு வாயுவை நான்கு பங்கும் கொஞ்சம் (Carbon)கரிவாயுவாதிகள் கலந்ததாய் காணப்பட்டது. இதில் பிராணவாயுவுதான் ஜீவஜந்துக்களுடைய பிராணாதாரம்; ஆனால், ஆகாயம் முழுவதும் இந்த பிராணவாயுவாக இருந்தால்,எந்த ஜந்துவும் உயிரற்றுப்போம்; ஆகவே, அது உப்புவாயுவோடு அளவாக கலக்கப்பட்டிருக்கிறது. ஜீவஜெந்துக்கள் சுவாசத்தை உள்ளேவாங்கும்போது இந்த மிச்ர வாயுவை உள்ளே கொள்ளுகின்றன. இந்த மிச்ர வாயுவில் உள்ள ஆக்ஸிஜன் (Oxygen) பிராணவாயுவு சுவாசாசயத்தில் அமைந்திருக்கும் இரத்த நாம்புகளிலுள்ள இரத்தத்தோடு கலந்து அதைச்சுத்திப்படுத்தி சுவாசத்தை வெளியில் விடும்போது, ஜீவகோடிகளுக்கு உபயோக மற்ற நைட்ரஜன் (Nitrogen) என்னும் உப்புவாயுவும், தேகத்திலுண்டாகும் விஷத்தன்மையான கரித்திராவகம் போன்ற வாயுவும் வெளியில் வந்துவிடுகின்றது. ஜீவகோடிகளுக்கு உபயோக மற்று வெளியில் வந்துவிடும் இந்த விஷவாயுவு கந்தமூலங்களாகிய புல், பூண்டு, செடி, மரங்களுக்கு இன்றியமையாததாயிருக்கின்றது. இந்த விஷவாயுவை சோதிப்போமாகில் இது அடுப்புக்கரி (Carbon) சத்தும், ஆக்ஸிஜன் (Oxygen) என்னும் பிராணவாயுவும் கலந்த மிசிரவாயுவாக இருக்கிறது. இந்த வாயுவிலுள்ள அடுப்புக்கரி சத்தை கந்தமூலங்களாகிய தாவரங்கள் கதிரவன் வெளிச்சத்தின் உதவியால் பிரித்துக்கிரகித்துக்கொண்டு, அதற்கு உபயோகமற்ற ஆக்ஸிஜன் (Oxygen) என்னும் பிராணவாயுவை வெளிப்படுத்த, அந்தப் பிராணவாயுவை ஜீவகோடிகள் கிரகித்துக்கொண்டு வாழ்கின்றன. ஜீவகோடிகளும் தாவரங்களும் ஆகாயம் என்னும் இந்த பூதியத்தை இப்படிப் பிரித்துத் தம் தமக்கு இன்றியமையாத சத்துக்களை கிரஹித்துக்கொண்டு ஒன்றுக்கொன்று உதவி

செய்துக்கொள்வது என்ன ஆச்சரிய அமைப்பு! ஆகாயத்தின் உதவியினால்தான் பூமியில் அருணோதயத்துக்கு முன்னும், அஸ்தமனத்துக்குப்பின்னும்படிப்படியாகவெளிச்சமுண்டாக வும், படிப்படியாக வெளிச்சம் குறைபவும் ஆகிறது. ஆகாய மில்லாவிடில் ஆதித்தன் அஸ்தமனமான உடனே திடீரென்று இருள் பிரபஞ்சத்தைக் கவிந்துக்கொள்ளும்; மேலும், ஆகாயம் அண்டத்தைச் சூழ்ந்து கொண்டிருப்பதால் வெய்யோன் வெப்பத்தினால் குட்டை, குளம், சமுத்திரங்களிலிருக்கும் ஜலமானது ஆவிரூபமாக எழுந்து ஆகாயத்தில் சேர்ந்து நிற்க, அந்த ஆவி குளிர்ச்சியினால் ஜலரூபம் பெற்று மழைத் துளிக ளாக பூமியின்மேல் விழுகின்றது. இம்மட்டோ! ஒருவர் பேசும்போது ஆகாய சமுத்திரத்தில் அலைகளுண்டாகி அவ் வலைகள் நமது காதில்மோத நமக்கு தொனி கேட்கச்செய் கிறது. அது பூமியை அதிகமாகக் குளிர்ந்து போகாமலும், அதிகமாக உஷ்ணமிக்காமலும் ஓர்மெலிந்த துணிபோலிருந்து சீத உஷ்ணங்களை சமப்படுத்துகின்றது. இந்தப் பூமியில் சேரும் அசுத்தங்களை நீக்கிப் பரிசுத்த மாக்குகின்றது. ஆகாயம் இல்லாவிட்டால் எல்லா ஜீவஜெந்துக்களும், தாவரங் களும் பாழ்த்துப்போம். தீயும் விளக்கும் எரியாது, கப்பலோடாது, பசு பக்ஷிகளின் ஓசையும் கேட்காது, கீதவாத் தியங்கள் இருந்தும் பிரயோசனமில்லை. ஆகவே, ஆகாயம் நமக்கும் மற்ற புல் பூண்டு பிராணி சமூஹங்களுக்கும் இன்றி யமையாத பதார்த்தம். இப்படிப்பட்ட பெரும் பிரயோஜன முள்ள ஆகாயத்தை எந்த அத்புத புருஷன் படைத்தார்? இப்பொழுது நமது பூமியைச் சுற்றிக்கொண்டிருக்கும் ஆகாய மானது 8,983,889,440,000,000,000 பிரஞ்சு ராத்தல் கன முள்ளதாகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே ஆகாயம் இவ்வாறுபயோகப் படும்படிசெய்வதற்குக் காரணம் யாது?

இந்தப் பூமியிலிருக்கும் பொருள்கள் யாவும் ஒன்றை ஒன்று ஆதாரமாகத் தாவிக்கொண்டே யிருக்கின்றன. தாதுவர்க் கங்கள், மையக்கவர்ச்சியால் தமக்குத்தாமே ஆதாரமாகத் தாவிக்கொண்டும்; கந்தமூலபிராணிகள் பிருதிவியையும் வாயு வையும் அப்புவையு மாதாரமாகத் தாவிக்கொண்டும்; ஊர்வன கிருமி கீடாதி ஜீவிகள் கந்தமூல தாதுவர்க்கங்களை யாதாரமா கத் தாவிக்கொண்டும்; கடைசியாக, நமது பூமியும் தன் பிரா ணனுக்கும், வளர்ச்சிக்கும், உஷ்ணத்திற்கும் பிரகாசத்திற்கும்

சூரியனை யாதாரமாகக் கொண்டிருக்கின்றது. அந்தச் சூரிய னும், ஆறு சந்திரர்களாற் சூழப்பட்ட Georgium Sidus எர்சலென்ற (Uranus) கிரகத்தையும், எழுசந்திரர்களாற் சூழப்பட்ட Saturn = சனிக்கிரஹத்தையும், நான்கு சந்திரர் களாற் சூழப்பட்ட Jupiter = வியாழக்கிரஹத்தையும், மற் றும் வெள்ளி, புதனாதி அநேக கிரஹங்களையும் மத்தியை நாடும் ஓட்ட மிழுப்புக் கவர்ச்சிகளின் ஆதரவைப் பெற் றிருக்கின்றது. அந்தந்தக் கிரஹங்களுமப்படியே யொன்றை யொன்று தம் தம் நிலையை விடாமலும், கதியைவிடாமலும், தம் தம் பரிமாணத்துக்கு தக்க வேகமாய் அந்தரத்தில் தம் தம் வருடகதி, தினகதிகளுக்குத் தக்கபடி சுழன்று, ஒன்று மற்றொன்றை யாதாரமாகக் கொண்டிருக்கின்றன. இப்படி யொன்று மற்றொன்றை யாதாரமாகக் கொண்டிருக்கும்படி செய்வதற்குக் காரணம் யாது? ககளசாஸ்திரத்தையும், கணி தசாஸ்திரத்தைய மனுசரித்துப் பார்க்கும்போது, சகல கிர ஹங்களும் தம் தம் நிலையைவிட்டப்புறம்போகாமலும், தம் தம் பரிமாணத்தை மீறாமலும், தம்தமக்குரிய பிரயாணத் தைக் கடக்காமலு மிருப்பதாகவே தோற்றுகின்றன. இப் படியாக்குவதற்குக் காரணம் யாது? எந்த அற்புத சக்தி இப் படிச் செய்தது?

ஆஸ்திகர்களாகிய யாமோ, இத்தியாதி பேதங்களுக்குக் காரணம் கடவுளென்று சொல்லுவோம்; ஆனால், கடவுளில்லை யென்று சந்தேகிக்கும் சில நாஸ்திகர்களோ, இப்பேதாதி களுக்குக் காரண மின்னதென்று சொல்ல வகையற்று, வாயி ருந்தும் பேசா ஊமைகளைப் போலிருக்கவேண்டும்! ஒரு வேளை, சில நாஸ்திகர்கள் இத்தியாதிகளுக்குக் காரணம் (Nature) சுபாவம், அல்லது இயற்கையென்று சாதிப்பார் கள். அப்படியாகில், (Nature) இயற்கை யென்றாலும், பூலோகத்தில் கடவுளுக்கிருக்கும் பல பெயர்களில் இதுவு மொன்றாகவே யிருக்கின்றது. இத்தியாதிகாரணங்களுக்குக் கர்த்தாவாக விருக்கும் பொருளுக்குச் சிலர் (Nature) இயற் கையென்றும்; சிலர், பிரம்மமென்றும்; சிலர், சிவமென் றும்; சிலர் விஷ்ணுவென்றும்; சிலர், அல்லாவென்றும்; சிலர், காட் (God) என்றும்; சிலர், எவனென்றும்; சிலர், பிருதிவி (Matter) என்றும்; சிலர், சித்தென்றும்; (Spirit) சிலர், (Geist) கிஸ்டென்றும்; சிலர், (Theos) தியோசென்

றும்; சிலர், El எல் என்றும்; சிலர், Thebal—திபேலென்றும்; சிலர், Natura naturata நெய்டிரியா நெய்ரேட்டாவென்றுஞ் சொல்லுவார்கள். இப்படிச் சொல்வதினால் பாதகமென்ன? இப்போதிருக்கும் வாதமெல்லாம் பொருளைப்பற்றியேயன்றி ப்பெயரைப்பற்றியல்லவே. சிலநாஸ்திகர்கள்: இயற்கை அல்லது (Nature) சுபாவமென்பது கடவுளென்னும் வஸ்து வல்லவென்று சாதிப்பார்களாகில்; இனி-இயற்கை (Nature) யென்பது தானென்ன? அது வஸ்துவா? அல்லது வெறும் வார்த்தையா? *வஸ்துவன்றி வார்த்தையாகில் வெறும்வார்த்தை யென்னசெய்யக்கூடும்? சுபாவம் அல்லது, இயற்கை யென்னும் பதம் ஒரு காரிய மெப்படிச் சம்பவித்தது, சம்பவிக்கிறதென்பதைக் குறிக்குமேயன்றி, அக்காரியம் சம்பவிப்பதற்காக வேண்டிய காரணத்தையும், கருத்தாவையுங் குறிக்காது. இயற்கையாக யாவும் நடக்கிறதெனில், பொறி புலனற்ற பிரதிவியாதி பஞ்சபூதாதிகள், பகுத்தறிவுக்கேற்ற விதமாகச் செய்வதெப்படி? பேதாபேதங்களை யறியும் பொருத்தம் பொறிபுலனற்ற பிரகிருதிக்குண்டோ? பகுத்தறியுஞ் சக்தியுண்டோ? கல்விமான்களே! இவ்வளவேன், நமது பூமியின்மேலிருக்கும் பொருள்களின் விமரிசை விநோதத்தைப் பாருங்கள்.

நமது பிரபஞ்சமாகிய பூமி, சகல சராசரபதார்த்தங்களடங்கியப் பாண்டாகாரமாகவிருக்கிறதன்றியில், கிருஷிசெய்யுங் குடியானவனைப்போல் நவதானியங்களையும், இதரபோஜன பதார்த்தங்களையும் நமக்காக முளைப்பித்துத்தருகின்றது. அப்பு, ஜலத்தைக் கொண்டுவந்து தருபவனைப்போல நமது ஸ்நான பானங்களுக் குதவிசெய்கின்றது. அக்கினி, சமயற்காரனைப்போல நளபாகஞ் செய்ய உதவுகின்றது. வாய்வு, வெளியிற்சாமரம்போல வீசுகின்றது. ஆகாயம், விளக்கேற்றுபவனைப்போற் சூரியசோம நக்ஷத்திராதி ஜோதிகோடிகளைத் தரித்துக்கொண்டிருக்கிறது. மேகங்கள், ஜலத்தைச் சுமந்து கொண்டு வந்திறங்கும் ஸ்திரீகளுக்குச் சமானமாகவிருக்கின்றது. நதி, பிரவாகம், குளம் முதலியவைகள் தண்ணீர் வைத்திருக்குங் கொப்பரைகளைப்போ லிருக்கின்றன. விருக்ஷஜாதி

* Nature is a word, what does it mean? To say nature or Law is merely describing how it happened but does not bring you a single step nearer to the *cause* or *power*.—"*Clarke*."

கள், (சவிய) தானியங்கள் முதலான பல சரக்குகளை வைத்
துக்கொண்டிருக்கும் கடைக்காரர்களைப் போல இலைகள்,
புஷ்பங்கள், பிஞ்சுகள், காய்கனிகள், கிழங்குகள் தானியங்
கள் முதலாகிய பலவிதசம்பாரங்களைத்தருகின்றன. பருத்திச்
செடி, பட்டுப்பூச்சி முதலானதுகள் நமக்கு வஸ்திர வியா
பாரிகளாகவும்; நாய், ஆடு, புலி, கரடி முதலியவைகள் சால்
வைகள், பச்சடங்கள், கம்பளங்கள் முதலானவைகளைத்
தரும் வர்த்தகர்களாகவு மிருக்கின்றன. பருவதங்கள், சமுத்
திரங்கள், இரத்தின வியாபாரிகளைப் போல நவரத்தின முத
லான விவிதத்திரவியங்களைத்தருகின்றன. பூஞ்செடிகள், புஷ்ப
மாலிகைகளைப்போ லிருகின்றன. நானாவித மூலிகைகள், அவு
ஷதங்களைத் தரும் வைத்தியர்களாக விருக்கின்றன. பூந்தோ
ட்டங்கள், நடனசாலைகளுக்குச் சமானமாக விருக்கின்றன.
மயில், அன்னம், புறா, வான்கோழி, கொக்கு முதலிய பக்ஷி
கள் நடன ஸ்திரீகளைப்போல நடனஞ்செய்கின்றன. கோகிலம்
கிளி, நாகணவாய் முதலான பக்ஷிகள் பாடகர்களைப்போல
கீதங்களைப் பாடுகின்றன. காகம், கழு, வல்லூறு, கோழி முத
லான பக்ஷிகளும், பாம்பு, பல்லி, அரணை முதலானவைகளும்
வீடுகளைச் சுத்திசெய்யும் ஜாடுமாலிகளைப்போல பல கிருமி
கீடங்களையும், செத்த ஜெந்துக்களாதி உச்சிட்டங்களையும்
பக்ஷிக்கின்றன. தேனீக்கள் தேனைத் தருகின்றன. எருமை,
ஆடு, மாடு முதலியவைகள் இடையர்களைப்போல நமக்குப்
பாலைத்தருகின்றன. எருமைக்கிடா, யானை, குதிரை, ஒட்டகம்
முதலியவைகள், நமக்கு வாகனங்களாகிச் சுமப்பதன்றியி
ன்னும் பலவித பாரங்களைச் சுமப்பதற்குங்கூட பிரயோஜ
னப்படுகின்றன. புல் முதலானவைகளோ அம் மிருகங்களுக்
காகாரமாக விருக்கின்றன. எறும்பு முதலானவைகள், வீடு
களைச் சுத்தி செய்வோரைப்போல் சிந்திக்கிடக்கும் பல
வஸ்துக்களைப் புசித்து கிரஹங்களைச் சுத்த மாக்குகின்றன.
நாய்கள், காவலாளிகளைப்போல வீடு முதலானதுகளைக் காக்
கின்றன. கழுதைகள் நமக்காகப் பல பாரங்களைச் சுமக்கின்
றன. சேவல், காகம், குருவி முதலியன நமக்குத் தினகர
னாகிய சூரிய னுதிக்கிறானென்று தெரியப்படுத்தத் தட்டி
யெழுப்பும் காரர்களைப்போலாகின்றன. சிங்கம், புலி, கரடி
முதலான துஷ்டமிருகங்கள், மேகங்கள் போய் தங்கி மழை
கள் பெய்வதற்கு அநுகூலமாக இருக்கும் வனங்களையும்,
காடுகளையும் மனுஷர் முதலானவர்கள் அடிக்கடி நுழைந்து

கெடுக்காதபடி இயற்கைக் காவற்காரர்களைப் போலிருந்து பாதுகாத்து வருவதோடு; பாம்பு, தேள் முதலிய சில விஷ செந்துக்கள் தெய்வபயத்தைப் போதிக்கும் ஆசாரியருக்குச் சமானமாக விருக்கின்றன.

நயத்தையும், பயத்தையுங் காட்டிப் பிள்ளைகளை வளர்க்குந் தாயைப்போல அந்தத் துஷ்ட மிருகங்களாலும்; இடி, மின்னல், காற்று, பூகம்பம், க்ஷாமம், வியாதி முதலான சங்கடங்களாற் பயத்தையும்,பக்தியையும்,சத்குணங்களையு முண்டாக்கும்பொருட்டு சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன. மேலும், எலிகளை மீரவொட்டாமற் றடுக்கப் பூனைகளும்; பாம்புகளை மீறவொட்டாதபடிக்கு கீரிகளும் மயில் முதலானவைகளு மிருப்பதுபோலவே, துஷ்டமிருகாதிகளை மீறவொட்டாதபடிக்குச் சத்துருமித்திராதிகளுமிருக்கின்றன. கடைசியாகப் பூலோகத்திலிருக்கும் சகல பதார்த்தங்களி லொன்றாகிலும் பிரயோஜனமற்றதாகத் தோற்றவேயில்லை, இப்படியாக்குவதற்குக் காரணம் யாது? (Nature) இயற்கையெனில், கேவலம் பொறிபுலனற்ற வெறும் வார்த்தையாகிய இயற்கை இப்படிப்பட்ட பேதாபேதங்களையும், பிரயோஜனமானவைகளையும்,படைக்கு மென்றெண்ணல் புத்திக்குப் பொருந்துமோ? சாதாரணமான மண்ணில் வளரும் பயிர் பூண்டுகள், விதம் விதமான வர்ணங்களாகவும், வகைகளாகவும், வளர்ச்சிகளாகவும் குணபேதங்களை யுடையவைகளாகவும் இருப்பதற்குக் காரணம் யாது?

சில நாஸ்திகர்க விசித்தியாதி பேதங்களுக்குத் தோற்ற (Development) மென்றுஞ் சாதிப்பர். நல்லது,தோற்றமென்றாலென்ன? அது பொருளா? அல்லது பொருள் பிரகாசிக்கும் விதத்திற் கிடப்பட்ட பெயரா? அல்லது அது வல்லமையற்ற வெறும் வார்த்தையா? தோற்றமென்பது, காரணமென்றுங் கருத்தாவென்றுஞ் சக்தி யென்றும் பொருளாகா. அஃது, பொருளின் போக்கேயன்றி, பொருள்போக்கிற்கான காரணமல்ல. ஒரு விதையிலிருந்து தண்டும், தண்டிலிருந்து தழைகளும், மொக்கிலிருந்து மலர்களும், புஷ்பங்களிலிருந்து காய்கனிகளுங் காணும் காட்சிக்கே தோற்றமென்று சொல்லலாம். அதாவது, ஒரு பதார்த்தத்திலிருந்து அதன் மற்றப் பாகம் விகசிதமாகும் விதமேயாம். ஆம், அது காரணமல்ல. கேவல விகசித விதமே யல்லவா? ஆகவே, இப்போதிருக்கும்

நமது உலகமும், மேல்சொன்னபடி பலவிதமாக மாறுதலை யடையும் விதத்திற்கு மாத்திரம் * தோற்றமென்று சொல்லலாமே யன்றி, அப்படி மாறுதலை யடைவதற்கும், மாறுதலை யடையச் செய்வதற்கும் காரண கர்த்தாவொன்றிருக்கவேண்டுமல்லவா? கேவலமாகிய ஜடப்பொருள்கள் அவைகளை இயக்கும்படியான ஓர்வித பிராணசக்தியானது அந்த ஜடப்பொருள்களுக்குள் அமைந்து இருப்பதாக சில நாஸ்திகர்கள் அங்கீகரிக்கிறார்களல்லவா? அப்படி அங்கீகரிக்கும் சக்தியாகிய பிராணன் என்பது தானென்ன?

பிராணன் என்பது இன்னதென்று இதுவரையிலும் அறிந்தவர்கள் இல்லை. ஆனால் அதன் இருப்பை, அதன் தொழில்களால் அறிகிறோம். எப்படியெனில், மானிட சரீரம் ஜனிக்கும்போது அந்த சரீரம் எந்தெந்த பதார்த்தங்கள் சேர்ந்து ஆக்கப்பட்டதோ, அந்த பதார்த்தங்களே எப்போதும் நிலையாக நிற்காமல்; தேகமுயற்சிக்கும், தேகத்தொழிலுக்கும் தக்க வேறு நூதன பதார்த்தங்கள் தெரிந்து எடுக்கப்பட்டு தேக தத்துவத்தோடு சேரச்சேர; பிறக்கும்போது இருந்த பழைய பதார்த்தங்கள் புது பதார்த்தங்களுக்கு தமது இடத்தைத்தந்துஆவிரூபமாக அகன்றுவிடுவது பிரத்தியக்ஷம். இப்படி தேகவிருத்திக்கு உபயோகமற்ற பழைய பதார்த்தங்களைக் கழித்தும், இன்றியமையா புது பதார்த்தங்களைச் சேர்த்தும், சரீரத்தைத் தேறும்படி செய்யும் சக்தி எதுவோ அதுவே பிராணன்.

இரண்டாவது—மானிட சரீரம் அதிக உஷ்ணமுள்ள பாலைவனத்தில் இருக்கினும், அல்லது குளிர்ச்சியான உறைபனிக்கட்டிகள் நிறைந்த வடதுருவ முனையில் இருக்கினும், அல்லது ஆகாயத்தில் தண்ணீர் வெந்நீராகும்படியான இடத்தில்ருக்கினும், உஷ்ண வரையறை (Thermometer) கருவியைக்கொண்டு சோதிப்போமாகில், இந்த மானிட சரீரத்துக்கு இன்றியமையாத (93° டிகிரி) உஷ்ணம் இருப்பது பிரத்தியக்ஷம். இப்படி மானிடன் எப்படிப்பட்ட சீதோஷ்ண தேச

* ("Development does not mean a *power* or *cause*: It is only a process. We say that in a plant the stalk is unfolded or developed out of the seed, the leaves out of the stalk, the flowers out of the bud, the fruit out of the flower. This is develoment, the way in which one part is unfolded out of another. But that is not a cause: it is only a method, a process") — "*Steps of Belief*".

த்தில் இருக்கினும், அவனுக்கு இன்றியமையாத உஷ்ணத்தை மாறிப்போகாதபடி பாதுகாக்கும் சக்தி எதுவோ அதுவே பிராணன்.

மூன்றாவது—பூமையக்கவர்ச்சி சித்தாந்தத்தின்படி, ஜலமானது எப்போதும் கீழ் நோக்கி வடிந்து விடவேண்டியது அதன் இயற்கை தருமமாதலால்; மானிட சரீரத்தில் பரந்து நிற்கும் ஜலபாகம், மானிடன் எழுந்து நிற்கும்போது அவனது அடிபாகமாகிய பாதங்களுக்கும், படுக்கும்போது முதுகுக்கு அடியிலும் வடிந்துவிடவேண்டும்; அப்படி வடிந்துவிடாமல் அந்தந்த பாகத்தின் ஜலம், அந்தந்த பாகத்திலேயே இருக்கும்படி செய்வது ஹிருதய தாளகத் தொழிலேயாம். இப்படி ஹிருதயதாளகங்கள் கிரமேண தம்தம் தொழில்களை செய்யச்செய்யும் சக்தி எதுவோ அதுவே பிராணன்.

நான்காவது—ஒரு பதார்த்தத்தை வேறொரு பதார்த்தம் அல்லது கருவியைக்கொண்டு உறைத்து தேய்த்தால் அது கரைந்து அழிந்துவிடுவது சுபாவம். இந்த பிரமாணப்படி உயிரற்ற சரீரமானது தேய்ப்பு, உறைப்புகளினால் மெலிந்து உறைந்து அழிந்துபோகின்றது. ஆனால் உயிருள்ள சரீரமோ தேய்ப்பு உறைப்புகளால் வன்மையைப் பெறுகின்றது. கடினமான வேலைகளைச் செய்பவர்கள், அக் கடினமான பதார்த்தங்களை அடிக்கடி தொட்டுச்செய்வதில் அக்கடின பதார்த்தங்களின் தேய்ப்பு உறைப்புகள் அவர்களுடைய கைகளின் தோல்களை தடிக்கச்செய்து கெட்டியாக்குவதும், காடு, கானல், கரடுகளில் சதா நடமாடுபவர்களுடைய பாதங்கள் கிரமேண தடித்து காப்புக்காய்த்து திடன் பெறுவதும் பிரத்தியக்ஷம். ஆகவே, தேய்ப்பு உறைப்புகள் சரீரத்தை மெலிதாக்கி அழிந்துபோகச்செய்யும் சுபாவத்தைத் தடுத்து, அத்தேய்ப்பு உறைப்புகளால் தேகத்துக்கு திடனை கொடுக்கும் சக்தி எதுவோ, அதுவே பிராணன்.

ஐந்தாவது—(உயிரற்ற) சரீரத்தைத் தன்கடையாக விட்டிருந்தால், அது அழுகிப்போக ஆரம்பித்து துர்னாற்றமெடுக்கவும், அந்தச் சரீரத்தில் சம்பந்தப்பட்டிருந்த பிருதிவி, அப்பு, வாயு முதலான பௌதிக பதார்த்தங்கள் பரந்து, தமக்கு இனமான பிரபஞ்ச பௌதிக பதார்த்தங்களுடன் சேர்ந்துவிடுகின்றன. இப்படி பூத உடலில் இருக்கும் பௌதிக பதார்த்தங்களை பிரபஞ்ச பௌதிக பதார்த்தங்களுடன் கல

ந்து மறைந்து போகாதபடி செய்யும் சக்தி எதுவோ, அதுவே பிராணன். இத்தியாதி தொழில்களினால் பிராணன் இன்னதென்று ஸ்பஷ்டமாகிறது. கேவலமாகிய ஓர் மானிட சரீரத்தின் வளர்ச்சிக்கும், உஷ்ணத்துக்கும், உறுதிக்கும், உயிர்ப்புக்கும், வாழ்வுக்கும் பிராணன் இன்றியமையாததாயிருக்கில், பிரம்மாண்ட கோளமாகும் இந்த ஜடஜகத்தாகிய சரீரம் பரமாத்துமாவாகிய பிராணன் இல்லாவிட்டால், ஒரு விநாடி நிலை நிற்குமோ?

பிராணன் என்பது இன்னதென்று தெரிவித்தோம். சிலர்: பிராணனே மனம், புத்தி, சித்தம், அகங்காரம், ஆத்துமா என்றாதி பல பெயர்களுடையதென்று என்னுகிறார்கள். சிலர் பிராணன் என்பது கேவலம் உயிர் அல்லது ஜீவன் என்றும், அது தன்னைப் பற்றியாவது அல்லது வேறு விஷயத்தைப் பற்றியாவது யோசிக்கும் தரைக்கு மனமென்னும் பெயரைப் பெறுகிறதாகவும் எண்ணுகிறார்கள். ஆத்தும தத்துவ சாஸ்திரிகளில் சிலர்: மனம் என்றால், எது தன்னையும் வேறு பதார்த்தங்களையும் பற்றி நினைக்கிறதோ, கருதுகிறதோ, எண்ணுகிறதோ, உணருகிறதோ, யூகிக்கிறதோ, சிந்திக்கிறதோ, வெறுக்கிறதோ, விரும்புகிறதோ, நிதானிக்கிறதோ, கவனிக்கிறதோ, சம்மதிக்கிறதோ, இத்தியாதி பலவித பகுத்தறிவுகளுக்கெல்லாம் கருவியாக இருக்கும் சக்தி எதுவோ அதுவே மனது என்று தீர்மானித்தார்கள். மனது என்னும் சேதனம் இல்லாவிடில் பிரபஞ்ச பௌதிக பூதியங்கள் ஒன்றோடொன்று சேரவும், சேர்ந்தவை பிரியவும் முடியா. மற்ற தாவர ஜங்கம ஜீவிகளும் தம் நிலையைவிட்டு நகரவும் தமக்கு இனமான வேறு பொருள்களைத் தம்மிடம் வருவிக்கவும் முடியா; ஆகவே, இந்த பிரபஞ்ச சிருஷ்டிகளுக்கு மனதே முக்கியமானதல்லவா?

## இனி பிராணிகளின் உற்பத்தி விவரத்தைப்பற்றி விசாரிப்போம்.

ஆதித்தனிடமிருந்து அக்னி ஜலபிண்டாமாகப் பிரிந்த இந்த பிரபஞ்சமானது பல்லாண்டு பல்லாண்டுகளாகப் பல கவர்ச்சிகளினால் பந்தப்பட்டுச் சுழல்வதனால்; இதன்மேலிருந்த பெரும் பாகமான உஷ்ணம் படிப்படியாகத் தணிந்த பிறகு, மேல்புறணி அல்லது மேல்கிட்டம் தோன்றியதாக முன்னமே சொல்லி இருக்கிறோமல்லவா? அதாவது:—

ஒரு வெங்காயத்தை எடுத்து அதன் மேல்தோல்களை உரித்துக்கொண்டே போனால், அது பல புரைகளால் மூடப்பட்டிருத்தல் பிரத்தியக்ஷமல்லவா? அதுபோலவே, இந்த பூமியும் அக்கினிமய ஸ்வரூபத்திலிருந்து இப்போதிருக்கும் படியான ஸ்திதியை அடைய பல்லாயிரம் வருஷங்களையும், பல்லாயிரம் கனதியானகிட்டம் அல்லது புறணிகளையும் பெற்றிருக்கிறது.

இதைப் பற்றியே பூதத்துவ சாஸ்திரிகள் இந்தப் பூமி, சூரியனை விட்டுப் பிரிந்த பிறகு, இப்போதிருக்கும்படியான குளிர்ந்த தன்மையை அடைய அநேக காலாவதிகளையும், கிட்டத்தின் கனதிகளையும் கணித்துக் கணக்கிட்டிருக்கிறார்கள்—அந்த கணக்கின்படி.

இந்த பூமியின் (முதல் காலாவதியில் Eozoic) ஆழ்ந்த அடிப்புறணி அல்லது கிட்டம் 70,000 அடிகள் கனதியுள்ளதாகவும்; அதற்கு அடுத்த மேற்புறணி இரண்டாவது காலாவதியில் (Palaeozoic) 42,000 அடிகள் கனதியுள்ளதாகவும்; அதற்கு அடுத்த மேற்புறணி 3-வது காலாவதியில் (Mesozoic) 15,000 அடிகள் கனதியுள்ளதாகவும்; அதற்கு அடுத்த மேற்புறணி நான்காவது காலாவதியில் (Tertiary) 3,000 அடிகள் கனதியுள்ளதாகவும்; அதற்கு அடுத்த மேற்புறணி ஐந்தாவது காலாவதியில் (Post Tertiary) 600 அடிகள் கனதியுள்ளதாகவும் படிப்படியாக மாற்றம் பெற்றும்; அப்புறணிகளில் முறையே முதலில் கடற் பஞ்சைப்போன்ற பூண்டுகளையும்; பிறகு, பெரன்சு என்னும் கல் கிளப்பி பூண்டுகளையும், பிறகு இலையற்ற செடி விருக்ஷங்களையும், பிறகு இலைகளோடு கூடிய செடி விருக்ஷங்களையும் படிப்படியாக விளையும்படி செய்வித்தும்; அவைகளின் சவசத்துக்களைக் கொண்டு, அவ்வப் பூண்டு பயிர் விருக்ஷங்களுக் கேற்றபடி முறையே முதலில் மோனிரா (Monera) என்ற சூக்ஷ்மரூப ஜந்துக்களையும், பிறகு மச்சங்களையும், பிறகு ஊர்வனங்களையும், பிறகு பால்தருட்படியான பிராணிகளையும், பிறகு பசு பக்ஷி மனுஷர்களையும் படைக்கப் பெற்றதாக ஸ்பஷ்டமாகிறது. எப்படியெனில்.

ஜீவமூலத்தோடு (Oxygen) ஜலமூலத்தை (Hydrogen) ஓர் அளவாகச் சேர்ப்பதனால், ஜலம் உண்டாகிறதைப்போல; சகல ஸ்தாவர ஜங்கமங்களுக்கும் சரீரியாகிய சர்வேசுவர

னது சுவாசங்களெனச் சொல்லத்தகும் மூலகாரண பூதங்களாகிய பிராணவாயுவையும் (Oxygen), கரிமூலவாயுவையும் (Carbon), ஜலவாயுவையும் (Hydrogen), உப்புவாயுவையும் (Nitrogen) பெரும்பாகமாகவும், அவைகளோடு கந்தகசத்து (Sulphur) பாஷ்கரசத்து (Phosphorus) முதலான மூலகாரணபூதங்களை சிறுபான்மை யாகவும் சேர்ந்து மூலபிரகிருதியோடு கலக்க, அவைகள் நாளாவட்டத்தில் திரண்டு, தாதுகந்தமூல பிராணிகளாகி, அவற்றின் சலசந்துக்களால் புரோடப்ளாசம் (Protoplasm) என்னும் பஞ்சுப் பாகைப்போன்ற பிராணோற்பத்திப்பொருளைத் தோன்றும்படி செய்விக்க, அதிலிருந்து பிராணிகோடிகள் ஜனிக்கின்றவைவாம்.

அந்த பிராணோற்பத்தி பஞ்சுப்பாகாகிய புரோடப்ளாசம் என்னும் ஜலஜல்லிக் குழம்பை, தக்க சூக்ஷ்ம வீக்ஷணி என்னும் (Microscope) அணுதரிசினி கண்ணாடியைக் கொண்டு சோதிப்போமாகில், அதில் கணக்கற்ற கெபிகளையும், அநேக வட்டவடிவான அறைகளையும் காணலாம். அந்தக் கெபி அறைகளும், அவ்வறைகளுக்குள் சூக்ஷ்மாணுக்களாகக் காணுகிறவைகளும் பிராணிகளாம்.

அந்த அறைகளில் அந்த ஸ்திதியில் இருக்கும் பிராணிகளுக்கு மோனேரா (Monera) ஏக சூக்ஷ்மாணு பிராணிகளென்று பெயர். அவைகளுக்கு உருவமும் வருணமுமில்லை, அவைகளிலிருந்து அமீயேபா (Amaebae) என்னும் அடிக்கடி மாறுந் தன்மையுள்ள சுழல் சூக்ஷ்ம ஜீவிகள் தோன்றுகின்றன—அவைகளிலிருந்து புரோடஜாவா (Protozoa) என்னும் (உருவமும் வருணமுமற்ற) சூக்ஷ்ம ஜல சரங்கள் தோன்றுகின்றன—அவைகளிலிருந்து ஸ்பாஞ்சி—கடற்பஞ்சைப் போன்ற பிராணிகள் (Sponges) தோன்றுகின்றன—அவைகளிலிருந்து பவளக்கொடியாக்கும் (Coral Builder) பிராணிகள் தோன்றுகின்றன. அவைகளிலிருந்து வெள்ளிமச்சங்களும், (Star fish) நத்தை நண்டு புழு பூச்சிகளுந் தோன்றுகின்றன. அவைகளிலிருந்து ஊர்வனங்களும், அவைகளிலிருந்து பக்ஷிகளும், வெளவால்களும், அவைகளிலிருந்து மிருகங்களும், அவைகளிலிருந்து வானரங்களும், அவைகளிலிருந்து வாலில்லாக் குரங்குகளும் தோன்றிய பிறகு, கடைசியாக—மானவஜாதியாராகிய மநுஷர்தோன்றினார்—ஆ! என்ன ஆச்சரியம்! கேவலம் தாது கந்த மூலத்தி லிருந்தும், அணுரூ

பமான அற்ப பிராணிகளிலிருந்தும், பிரபல ஞானம்பெற்று பிரகாசிக்கும் பிரஜைகளை (Evoleve) தோன்றச்செய்த சக்தியை வர்ணிக்க யாவரால் முடியும்? இக்கருத்தைக் கொண்டே இந்நாட்டு தத்துவ ஞானிகள் சித்து அசித்துக்களுக்குச் சரீரியான சர்வேசுவரன் மச்ச, கூர்ம, வராஹ, நாரசிம்ம, வாமன, இராமாதி அவதாரங்கள் எடுத்து ஜகத் கோடிகளையும், ஜந்து கோடிகளையும் வாழ்விக்கச் செய்கிறார் என்று வர்ணித்து எழுதி இருக்கிறார்கள்.

இதுவரையில் மானிட காட்சிக்கும், கேள்விக்கும் தெரிந்தும், ஜந்துலக்ஷண சாஸ்திரிகளால் குறிக்கப்பட்ட கணக்கை சோதிப்போமாகில், இந்த உலகில் கேவலம் ஜலபாசியைப் போல அசைந்து வாழும் பிராணிகளில் 20,000 வித வகுப்புகளும், பால்கொடுத்து பாதுகாக்கும் பிராணிகளில் 2,000 விதங்களும், மீன்களில் 12,000 விதங்களும், அணுரூப ஜந்துக்களில் 10,000 விதங்களும், சமுத்திர கிளிஞ்சல் ரூபமான பிராணிகளில் 6,000 விதங்களும், பூமி நத்தை வகைகளில் 2,000 விதங்களும், சிறுபூச்சி இனங்களில் 70,000 விதங்களும், வண்டு இனங்களில் 25,000 விதங்களும், இரத்தமுள்ள பிராணிகளில் 300,000 விதங்களும், மின்னும் பூச்சிகளில் 10,000 விதங்களும், வண்ணாரப் பூச்சி இனங்களில் 15,000 விதங்களும், பக்ஷி ஜாதிகளில் 6,000 விதங்களும், மிருக ஜாதிகளில் 2,000 விதங்களும் இருப்பதாகக் கணக்கிட்டிருக்கிறார்கள், ஆ! என்ன நியமனம் பாருங்கள்.

பிரபஞ்சத்திலிருக்கும் பதார்த்தாதி பிராணி சமூஹங்களையும், அவற்றின் ஆகாராதி பேதங்களையும் பார்க்கும்போது, அவைகள் ஒன்று மற்றொன்றிற்கு பிரயோஜனமானதாகவும்; ஒன்றுக்கோ, அல்லது மற்றவைகளுக்கோ பொருந்தியதாகவே பிரகாசிக்கின்றன. தாதுவர்க்கத்தைச் சார்ந்த இரும்பிற்கு (Oxygen) பிராணவாயுவும்; அக்கினி யெரிவதற்கு விறகும்; புல் முளைப்பதற்குப் பூமியும்; புஷ்பங்களுக்குப் பிரகாசமும்; வேர்கள் விருத்தியாவதற்கு வெய்யோனும், ஜலமும்; பழங்கள் பழுப்பதற்கு பிரபாகரனு முஷ்ணமு மிருப்பதைப் போலவே; ஒவ்வொரு கந்தமூல பதார்த்தங்களின் வேர், தண்டு, இலை, பூ, காய், கனிகளாதிகளை யாகார மாகக்கொண்டு உஜ்ஜீவிக்கும் பிராணிகளு மிருக்கின்றன. சில பிராணிகள் வேரையே யாகாரமாகவும், சில தண்டுகளையும், சில இலைகளையும், சில பூக்களையும், சில பழங்களை

யும், ஆகாரபூதமாகக் கொண்டிருப்பதன்றியில்; கோதுமைத்தானியத்தை யுண்ணும் பிராணிகள் வாதுமையை யாகாரமாகக்கொள்ளா! முத்துக்கொட்டை இலைகளை யுண்ணும் புழுக்கள், அத்திப்பழங்களை யுண்ணா! இவ்வித ஆகாரபேதங்கள் கேவலங் கந்தமூல பிராணிகளுக்கே யன்று. பருந்து, கழுகு, வல்லூறு முதலிய பக்ஷிகள் மாம்சபக்ஷணிகளாயும்; புறாமுதலான சில பக்ஷிகள் தானியவர்க்க பக்ஷணிகளாயும்; கிளி, கோகிலம் முதலான சிலபட்சிகள் கனிவர்க்கபக்ஷணிகளாயுமிருப்பதைப்போலவே, ஆடு மாடு முதலான சில மிருகங்கள் கந்தமூல பக்ஷணிகளாயும்; புலி, சிங்கம், கரடி முதலான சில மிருகங்கள் மாமிசபக்ஷணிகளாயு மிருக்கின்றன. ஓ! புத்திமான்களே! புலிக்குப் பசி யதிகமானாலும் புல்லை யுண்ணுமா? ஆடுமாடுகள் ஆற்றொணாப் பசியால் மடிந்தாலும் மற்றப் பிராணிகளின் மாம்சங்களை யுண்ணுமா? உண்ணமாட்டாதென்பது நீங்கள் யாவரு மறிந்ததேயல்லவா? பிராணிகளுக்கும் பூண்டுகளுக்கும் மத்தியில ஒருவித ஜந்துக்களிருக்கின்றன. அவைகள் பிராணிகளுமாகா, பயிர்களுமாகா. பார்வைக்குப் புல் பயிர்களைப்போலவே யிருந்து ஜங்கமங்களைப்போல் அசைந்தோடுகின்றன. இவைகளின் இரைப்பையானது குழலைப்போலிருக்கும். குழலின் இருபுறமும் உதடுகளைப்போல் சருமம் இரண்டு பிரிவாக விருக்கும். அவைகளின் வழியாக மண்தாதுக்களையும், கேசரங்களையும், பனி யாவியையுமுண்டு உயிர் வாழ்ந்திருக்கின்றன. இப்படிக் கேவலமாகிய கிருமி கீடக, பட்சி மிருகாதிகளுடைய ஆகாராதி பேதங்களை நியமித்த வஸ்தாவெது? "இயற்கை" எனில், கேவலம் கர்த்ருத்துவமற்ற வெறும் வார்த்தை யிவ்வித ஆகாராதி பேதங்களை யுண்டாக்குமெனில் யுக்திக்குப் பொருந்துமோ? கோழிக்குஞ்சு முட்டையிலிருக்கும்போது கேவலம் வெள்ளை மஞ்சள் கருக் கலப்பாக இருந்து, நாளாவட்டத்தில் குஞ்சு உருவைப்பெறவே, அக்குஞ்சு முட்டையை யுடைத்துக்கொண்டு வெளியில்வர, வலுவற்ற மூக்கின்மேல், ஒருவித கொம்புத் தன்மையுள்ள கடினப்பொருள் படரவே, அதன் சகாயத்தினால் முட்டையோட்டைக் கொத்தி, உடைத்து வெளியில் வந்த சில நாட்களுக்குப் பிறகு, பிரபஞ்சப் பொருள்களைப் பொருக்கி உண்ணும்படி முன் சொன்ன கொம்புத் தன்மையுள்ள கடினவஸ்து கிரமேண கழற்றிவிடுவது பிரத்தியக்ஷம். இது நியமனமல்லவா?

# 1. மானிடதேகத்தின் முன்பக்கத்து எலும்பு கோர்வைபடம்.

கருப்பிண்டத்தில் எலும்புகள் மிருதுவாய் இருக்கின்றன; அதற்கு குருத்தெலும்பு என்று பேர் (Cartilage); பிறகு வயது ஏற விருத்தியாக, அவைகளில் இருக்கிற சுண்ணம்பு படிப்படியாய் அதிகரிக்க உறுதிப்படும். தேகத்தில் பல ஒட்டான எலும்புகளுண்டு; தலை, இடுப்பு இவைகளின்




எலும்புகள் தட்டையாயும், புறம், முன்கை, தொடை, கால் இவைகளின் எலும்புகள் நீண்டும் முழங்கண்டு, கணுக்கை, கணுக்கால் இவைகளின் எலும்புகள் விருப்பமாயும் இருக்கின்றன. அவையாவன:—

சிரசில்-8, காதுக்குள்-6, முகத்தில்-14, பற்கள்-32, முள்ளந்தண்டில்-23, நாக்கில்-1, மார்பில்-1, விலாவில்-24, கைகளில்-61, கால்களில்-62, கைகால் பெருவிரல்களின் குளசுகளில் இருக்கிற சிறிய எலும்புகள்-8, ஆக மனிததேகத்தில் 240 எலும்புகள் இருக்கின்றன.

## 2. மானிடதேகத்தின் பின்பக்கத்து கோர்வை படம்.

புஜ எலும்பு நீண்ட சிகரம் உருளையாய், தோள்பட்டை எலும்போடும், கீழ்முனை சட்டையாய் முன்கை எலும்புகளோடும் சேர்ந்திருக்கின்றது. முன்கையில் 2 எலும்புகளுண்டு, உட்புறமாய் இருப்பதற்கு, இரத்தினி எலும்பென்றும், (Ulna)—வெளிப்புறமாய் இருப்பதற்கு, ஆரை எலும்




பென்றும் (Radius), இடுகுறிப்பெயர். மணிக்கட்டில் 8-எலும்புகளிருக்கின்றன. அவைகள் வரிசைக்கு 4-ஆக இரண்டு வரிசைகளாக இருக்கின்றன. உள்ளங்கையில், 5-எலும்புகளும், ஒவ்வொரு விரலுக்கு மும்மூன்றாக, 4-விரல்களில், 12-ம், பெருவிரலில் 2-ம் ஆக 14-எலும்புகளுண்டு.

சரீரத்தில் கீழ்ப்புறத்தில், 4 எலும்புகள் சேர்ந்து குழியாய் இருக்கிறதற்கு இடைக்குழி (Pelvis) என்று பேர். இந்த இடைக்குழியின் பக்கமாய் இருப்பவைகளுக்கு, இடுப்பெலும்புகளென்றும்; பின்புறமாய் இருப்பவைகளுக்கு கிரிகஸ்தான எலிம்பு. குயில் மூக்கெலும்பு, என்றும் பேர்.

நமது மானுஷீக ஜாதியின் ஜெனிப்பைப் பாருங்கள். ஒரு சிசுவானது மாத்ரு கற்பத்திலிருக்கும்போது, அது சுவாசம் விடுவதில்லை; ஆனாலது பூமியில் ஜெனித்தவுடனே சுவாசிப்பதற்கு வாயுவும், சூட்டைப் பெறுவதற்கு உஷ்ண முமம், பார்ப்பதற்குப் பிரகாசமும், ஆகாரத்திற் கமுதமும் ஆயத்தமாக விருக்கின்றன. அந்தச் சிசுவானது ஜெனிப்பதற் குச் சில நாட்களுக்கு முன் அந்த மாதாவின் மெல்லிய தனத் தில் அதிகப் பாலகப்படாது. ஆனாலந்தச் சிசுவானது ஜெனி த்தவுடனே யதினாகாரத்திற்காக உடனே பாலும் உண்டா கிறது. இவ்வித சமயோசித நியமனத்திற் காதாரபூதமெது? பொறி புலனற்ற கேவல வார்த்தையாகிய இயற்கைக்கு இவ் வித யுக்தி யிருக்குமெனில் புத்திக்குப் பொருந்துமோ?

பாலையுண்ணு மிந்தச் சிசுவானது பிறக்கும்போதே இரு பது பற்களை யுடைத்தாயிருக்கினும், அப்பற்கள் தாயின் மெல்லிய முலையிற் படாதபடி (Gum) தந்த (ஜவ்வு) போர் வையால் மூடப்பட்டிருக்கின்றன. மேலுமிந்தச் சிசுவானது பிறந்து சிலவாரங்கள் வரையில் பார்க்கும் அறிவையற்றும்; பிறகு பிரகாசமான பதார்த்தங்களை யடிக்கடி சுற்றிலும் பார் ப்பதனால் அவ்வறிவைப் பெறுகின்றது. அக்காலத்திலும், பதார்த்தங்களின் தளம் நீளமான பேதாபேதங்களை யறிய பாட்டாது. சப்தபேதங்களை யறியும் காதின் பிரயோஜன மும் அப்படியே. முதலில் ஒருவித தாழிசையை யறியும் ஞா னத்தை மாத்திரம் பெற்றிருக்கிறது. பாலருந்தும் ஞானம் மாத்திரம் பிறக்கும்போதே ஜனித்திருந்தாலும், பசி முதலா னவற்றை அனர்த்தமான அழுகையாலறிவித்தும், சுக சந் தோஷத்தைப் புன்னகையாலறிவித்தும், பிறகு நாலைந்து மா தங்கள் சென்று, ஓரசைவார்த்தைகளை உச்சரிக்கும். முதலில் கைவிரலை வாயில்வைத்துச் சப்பி, பிறகு நாளாவட்டத்தில் கைகளும், கால்களும் தம்தம் தொழிலைச் செய்ய வாரம்பிக் கின்றன. இந்த ஸ்திதியிலிருக்கும் சிசுவின் எலும்புகள் (Cartilage or gristle.) மிகவும் நட்பமான குருத்தெலும்புகளா கையால், சிசுவின் தேகத்தைத் தாங்குவதற்கும் தொழில் களைச் செய்வதற்கும் திடனற்றதாகவிருந்து; பிறகு, கிரம போஷணாதிகளால் (The Phosphate of lime.) நியாக்கினி சுண்ணும்பாதி பிராகிருதபதார்த்தம் விருத்தியாகி (Muscles) தசை நரம்புகளினாலும் திடனைப் பெற்றுக்கொண்டு சுமார் ஒரு வருஷமான பிறகு சிசுவானது நிமிர்ந்து நிற்கவும், தத்தி

நடக்கவும் ஆரம்பிக்கின்றது. இப்படிப்பட்ட சிசுவானது சரியான பருவத்தைப் பெற்றபோது தேகத்தின் தோலையுரித்துப் பரிசோதிப்போமாகில், அம்மானிட சிரசில் இருபத்திரண்டு எலும்புகளும்; முண்டத்திற்கு 52, எலும்புகளும் கைகளுக்கு 64, எலும்புகளும் கால்களுக்கு அறுபது எலும்புகளுமிருப்பதையும்: அவைகளைப் பந்தப்படுத்த நானூறாதசை நரம்புகள் பின்னிக்கொண்டிருப்பதையும்; இடைவிடாமலோடிக்கொண்டிருக்கும் இரத்த நரம்புகளையும், இன்னும் பற்பலவிதமான குடல்களையும் காணலாம். மானவஜாதியாருடைய இரத்த நரம்புகளில் இரத்தம் எப்படி ஓடுகிறதை உயிரோடிருக்கும் மநுஷனை சோதித்துப் பார்க்கவேண்டுமென்று (Dr. William Harvy) டாக்டர் ஹார்வி என்ற சாஸ்திரியார் சிந்தித்துக்கொண்டிருந்தார். அப்படி இருக்கையில் லார்ட்மாங்கமரி (Lord Montgomery) என்பவருடைய ஜேஷ்டகுமாரன் சிறுவயதில் கீழே விழுந்ததனால், விலா எலும்புகள் முறிந்து அது சவுக்கியப்படாமல் பெரிய புண்ணாகி, அப்புண்ணும் சுகப்படாமல் 18 வருஷம் வரையில் ஒரு துவாரமுண்டாகி அதின் மூலமாக ஹிருதயம், ஈரல், குண்டைக்காய் முதலானவைகள் தெரிந்துக்கொண்டிருக்க, அவைகளுக்கு காப்பாக ஒரு வெள்ளித்தகட்டைப் போட்டுக்கட்டி மூடிக்கொண்டிருந்ததாகவும், அந்தத் தகட்டை அவிழ்த்து அவ்வுடலுக்குள் நடிக்கும் ஈரல்முதலான உருப்புகளையும், இரத்த ஓட்டங்களையும் ஷ டாக்டர் ஹார்வி அவர்களும் (King Charles) சார்லெஸ் அரசரும் தமது மூன்றுவிரல்களை விட்டுத்தடவித்தொட்டுப்பார்த்ததில் அப்பிணியாளிக்குநோய் உண்டாகவில்லை என்றும் 1847-ளும்பதிப்பித்த டாக்டர் ஹார்வியின் (Anatomical exercises) அங்காதி பாதசாஸ்திரகிரந்தத்தில் எழுதியிருக்கிறார். மேலும் இந்தச்சரீரத்தைச் சாஸ்திரோக்தமாகச் சோதிப்போமாகில், சரீரம் முழுதிலுமுள்ள எலும்புகள் பதினைந்து பவுன் நிறையுள்ளதாகவும்; இருபத்தினைந்து பவுன் நிறையுள்ள இரத்தமும், தசையுமிருப்பதாகவும்; நாற்றறுபத்தாறு பவுன் நிறையுள்ள ஜலபாக மிருப்பதாகவும்; இந்த ஜலபாகத்தில் பத்துபவுன் சுண்ணாம்பும், பதினைந்து பவுன் கரியுமிருப்பதாகவும்; இந்தப்பதினைந்துபவுன் கரிபாகத்தில் (Oxygen) பிராணவாயுவும் (Nitrogen) அமிலவாயுவும் (Hydrogen) ஜலவாயுவும் கலந்திருப்பதாகவும் தோன்றுகிறது. இப்படிப்பட்ட ஆச்சரியமான அமைப்பிற்குக் காரணம் யாது?

தேகதத்துவத்தைப் பலநாள் படித்துப் பரிசோதித்த பண்டிதர்கள் இந்த மூன்றுவித வாயுவினால் பிராணனிருப்பதாகப் பிரஸ்தாபித்தாலும், இந்த மூன்றுவித வாயு உண்டானதற்கும், அவைகள் தக்க அளவாகக் கூடுவதற்கும் காரணம் இன்னதென்று நாளது வரையில் கண்டுபிடித்தார்கள் இல்லை. சிலர், பிராணவாயுவு, அமிலவாயுவு ஜலவாயுவுங் கூடிய சம்யோகத்தின்பொருளே புத்தி, சித்தமென்பாரேல், ஸ்பரிசஞானத்தை யறியவும், அற்புதமாக யோசிக்கவும், நியாயாநியாயங்களை நிதானிக்கவும், மறதியானவைகளைக் கவனிக்கவும், விஷயாதிகளை விசாரிக்கும்படியான விதமாக, இந்தப் பிராணவாயுவையும், அமிலவாயுவையும், ஜலவாயுவையும், பந்தப்படுத்தியதற்கும் காரணமொன்று வேண்டுமல்லவோ? அநந்தகோடி கிரந்தங்களையும், பத்திரிகைகளையும் அதிக சீக்கிரத்திற் பதிப்பித்துக் கொடுக்கத்தக்க அற்புதமான அச்சியந்திரங்களையும்; பருவதங்களைப்போல பிறிட்டெழும்பும் பேரலைகளுக்கும், சூரிய வெப்பத்திற்கும், சண்டமாருதத்திற்கும், பெருமழைகளுக்கும், அஞ்சாமல், மோதுகின்ற அலைகளையும் காற்றையும் கண்டுகாணாட பார்க்கிக்கொண்டு கம்பீரமாகச் செல்லும் கப்பல்களையும்; அண்டமும் பிண்டமும் அசைந்தாட, மேக கர்ஜனைக் கொப்பான பேரொலியுடன் அந்திபகலாக வநேக காததூரங்களுக்கு அற்பகாலத்திற் போகும் புகைவண்டிகளையும், அநந்தகோடி மைல்களின் தூரத்திலிருக்கும் அகிலாண்ட கோடிகளையும் அதிகத்தெளிவாய்ச் சமீபத்திலிருந்து பார்ப்பதற்கொப்பாகச் செய்யக்கூடிய நச்சுக்குழாய்களையும், அணுவிலுமணுவாக விருக்கப்பட்ட பொருள்களை அதிக பெரிதாகத் தோற்றுவிக்கும் அணுதரிசனிகளையும், உலகத்திலுள்ள பதார்த்தங்களின் உருவங்களை உண்மையாகக்காட்ட உதவும் ஒளிசித்திர யந்திரத்தையும், மாருதவேகத்தையும், மனோவேகத்தையும் மழுங்கச்செய்து, மகாலக்ஷம்மைல்களின் தூரங்களிலிருப்போருக்கு மினிட்டுகாலத்தில் மனோபீஷ்டங்களை யறிவிக்கத்தக்க மின்தபால்களையும், பிரம்மாண்டமும் சித்திரவிநோதமுமான சிங்கார கோபுராதி கட்டிடங்களையும்; இந்தமூன்றுவித வாயுக்களாற்செய்யப்படலாமெனில் யுக்திக்குப்பொருந்துமோ? இந்தமூன்றுவிதவாயுக்கள் காலத்துக்குக்காலம் ககனத்திலாடும் கிரகாதிகளைக்கண்டு கணிக்கவும், காலத்துக்குத்தக்கபடி கீதாதிகிரந்தங்களைச் செய்யவும் சக்தியுடைத்தெனில் வேடிக்கை வார்த்தைதானே?

மேலும், நியூயார்க் (New York) தேசத்தில் பிரசுரம் செய்துவரப்பட்ட "The Phrenological Journal and Science of Health" என்னும் ஒரு தத்துவ சஞ்சிகையில், பிராணவாயுவும், அமிலவாயுவும், ஜலவாயுவும் தம் தம் நிறைகளில் குறையாதிருந்தா லன்றி மனுஷர் உயிர்பெற்றுய்தல் அசாத்தியமென்றும்; இவற்றின் போஷணைக்கென்றே கந்த மூலாதிகள் கருதிப் படைக்கப்பட் டிருக்கவேண்டுமென்றும் ஒரு சிறந்த தத்துவசாஸ்திரியார் சொல்லியிருக்கிறார். மேலும் மனுஷர்கள் ஆதியில் (Ourang-Outang) வாலில்லாக்குரங்கு ஜாதியிலிருந்து உண்டானவர்களென்று Mr. Darwin— டார்வின்சாஸ்திரியார் சொல்லியதைப்பற்றி, பரிசோதித்தறிய அங்காதிபாத சாஸ்திரிகளில் சிலர் சோதித்து, மானவஜாதியாருடைய மூளையில் (Cerebrum) பெரியமூளையையும், (Cerebellum) சிறிய மூளையையும் (Spinal marrow) முள்ளந்தண்டுக் கொடியையும், (Medella Oblongata) முள்ளந்தண்டுக்கொடியின் சிகரத்தையுமெடுத்து (Ourang-Outang) வாலில்லாக் குரங்குகளின்மூளை முதலானவைகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில், அவைகள் உருவத்திலும், தொழிலிலும், அதிக வித்தியாசமாக விருப்பதாகவும்; மனுஷஜாதிகளுக்கு, நிமிர்ந்து நின்று நடப்பதற்கேற்ற அவயவங்களும், அதற்குத் தக்க விரல்களும்; குரங்குகளுக்கோவெனில் நான்குகால்களால் நின்று நடக்கவும், மரங்களைத் தொத்திப் பற்றத்தக்க குவிந்த விரல்களையு முடையனவாய்ப் படைக்கப்பட் டிருக்கிறதாக நிரூபிக்கின்றனர். அமெரிக்கா கண்டத்திலிருக்கும் Chicago சிககியாகோ மாகாணத்தில் பிரசுரமாகிவருகின்ற ஒரு மத தத்துவ சஞ்சிகையில் மனுஷருக்கு ஜனிக்கும் * "எண்ணம் அல்லது யோசனை பாஷையாக வாத்திக்கவும், கருத்து கருமத்திற்குட்பட்டு காரியங்களைச் செய்யவும்" எந்த அற்புத யந்திர சக்தியாலாகிறதோ அதை யறிகிலேமென்று சில வைத்திய வைதீகாதி சாஸ்திரிகள் மனமுவந்து செப்பியிருக்கின்றனர். மேலும், நமது மூளையின் பெருமையையும், அது அமைக்கப்பட்டிருக்கும் ஆச்சரிய உருவத்தையும் சொல்லவும் வேண்டுமோ? மிருதுவான மூளைக்குச் சேதம் வராமல் மண்டையோடு எவ்வளவு பலமுள்ளதாக விருக்கின்றது.

* 'We do not know by what wonderful mechanism the *thought* falls into the speech, and *will* into the action". *The Religious Philosophical Journal.*

மண்டையோட்டின் முன்பாகத்தில் அறிவிற்காதாரமான மூளையின் பாகமும், மண்டையோட்டின் பின்பாகத்தில் பிராணத்திற் காதாரமான மூளையும் அமைத்திருப்ப தென்ன விந்தை! மானவ ஜாதியாருடைய மண்டை மூளையானது சாதாரண பார்வைக்கு இள நீல வெண்ணிறங் கலந்த ஓர்வித திரவியமாகத் தோன்றினும், அதை எடுத்து 100 பங்காகப் பிரித்து, பரிசோதிக்கையில் 100-க்கு 80 பங்கு ஜலபாகமும், 5 பங்கு கொழுப்பு பாகமும், 7 பங்கு அல்பம் (Albumen) என்னும் முட்டையின் வெள்ளைக் கருவைப்போன்ற பாகமும், 1 பங்கு ஆஸ்மோசம் என்னும் இரசாயன சிறு நரம்பு சதை பாகமும், ஒன்றரைப்பங்கு பாஷ்கர (Phosphorus) மும், பாக்கி $5\frac{1}{2}$ ஐந்தரைபாகம் உப்பு, புளிப்பான சத்துக்களும், பின்னும் பிராணவாயு, உப்புவாயு, ஜலவாயு, கரியுப்புச் சத்துக்கள் கலந்திருப்பனவாகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இப்படி பலவித வஸ்துக்களால் கலந்திருக்கும் மூளை சமயோசிதமாக நினைக்கவும், எண்ணவும்செய்ய ஒருகாரணம் வேண்டுமல்லவா? மேலும், நமது தேகத்திலிருக்கும் இரத்த நரம்புகளில் இடைவிடாமல், (தூங்கும் காலத்திலும்) இரத்தம் ஓடிக்கொண்டிருக்கும் அதிசயமென்னே! இந்த இரத்தமானது உறுப்புகளைப் போஷித்தபிறகு கறுத்து கெட்டுப் போய்விடுகிறது. பிறகு நுரையீரலுக்குச் சென்று உசுவாச நிசுவாசத்தால் சுத்தியாகி சிவந்துவிடுகிறது. பிறகு இருதயத்தின் இடது பக்கத்துக் கோடி மறுபடியும் நாடி நரம்புகளின் வழியாகச் சென்று தேகமெங்கும் பரவுகின்றது. (The stomach) அன்னாசயம் (Caecum) சிறுகுடல், பெருங்குடல் கூடுதலையும், (Duodenum) துணை குக்ஷி (Liver) ஈரல், (Rectum) குதம் (Spleen) பீலிகம் (Cervical Vertebrae) கழுத்து முள்ளெலும்பாதிகளின் அமைப்பைப் பாருங்கள்? என்ன விந்தை! விந்தை! (Nature) சுபாவமென்ற வெறும் வார்த்தை தற்செயலா யிப்படிப்பட்ட அமைப்பை யமைக்குமென்ச் செப்புதல் பயித்தியக்காரத்தனமே யன்றி யுக்திக்காவது, சாஸ்திரத்திற்காவது அடுத்ததாகுமோ? ஓ சற்சனரே! நமது சரீரத்தின் கூடாகாரந்தான் இப்படியாகில், சரீரத்தின் பஞ்சேந்திரியங்களைப் பற்றிப் பொறுமையுடன் பாருங்கள். என்ன ஆநந்தத்தைத் தருகின்றன.

## TEH EYE—கண்.

கடல்சூழ்ந்த ஞாலத்தையும் அதிலுள்ள சராசரப்பொருள்களையும், ககனமார்க்கத்திலாடும் தூமகேதாதி கிரகாண்டபிண்டங்களையும் கண்டதிசயிக்கும்படி கருணாநிதியாகிய கடவுளாற் சிருஷ்டிக்கப்பட்ட நமது கண்களின் ஆச்சரியமான அமைப்பை யென்னென்று சொல்லுவேன். இந்த அற்புதக் கருவியின் அமைப்பை ஆழ்ந்து யோசித்துப்பாருங்கள். நமது கண்கள் மண்டையோட்டின் முன்பாகத்திலிருக்கும் ஓரங்குல இடைவெளியிலுள்ள குழிகளில் கோளரூபமாகப் பதிக்கப்பட்டிருக்கின்றன. முக்கியமான சில புரைகளால் மூடப்பட்ட கண்விழியோ, (The Sclerotic Coat) கடினையென்னும் வெண்மையான ஜவ்வினாலும்; (The Cornea) சுக்கிலமண்டலம் அல்லது சிருங்கையென்னும் முன் பக்கத்தில் மினுக்கமாய் மிதந்து தோற்றும் ஜவ்வினாலும்; (The Choroid) தாணிசமென்னும், மிகநுண்ணிய இரத்தக் குழல்களாற் பின்னியிருக்கப்பட்ட ஜவ்வினாலும்; (The Iris) கிருஷ்ணமண்டலம் அல்லது வருணியென்னும் வித்தியாசமான நிறங்களைக்கொடுக்கும் கருத்த விழிக்குள்ள ஜவ்வினாலும் (The Ciliary Body) பரிதீக மல்லது (Crystalline Lens) இபவத்தின் விளம்பைச் சூழ்ந்திருக்கும் வட்டமான கவச ஜவ்வுகளின் படலமாக விருக்கின்றன. இவ் விநோத கவச ஜவ்வுகளுக்குள் முந்நீராகிய (Aqueous Humor) வனமென்னு முதற் சுவச்ச நீரும், (Crystalline Lens) விழிக்குள் வட்டித்து இருபுறமுங் குவிந்து விளங்கும் பளிங்குபோன்ற நீரும், (Vitreous Humor) இயவமென்னும் பளிங்குபோன்ற நீருமாக (Humor of the Eye) மூன்றுவித ஜலபாண்ட நீர்களு மிருக்கின்றன. முன்சொன்ன ஜவ்வுகளில் (The Sclerotic) கடினையென்னும் வெள்ளை ஜவ்வானது, கண் விழிக்குப் பலமான நல்ல உறையாக விருக்கின்றது. சுக்கில மண்டல மென்னும் ஜவ்வோவெனில், விழியின் முன்பாகத்தில் கருப்பணம்போல உருவொளியுள்ளதாயும், மற்றெந்தப் பாகத்தைப் பார்க்கிலும் அதிகமாகப் பிதுங்கியுந் தோற்றுகின்றது. தாணிசமென்பது மெல்லிய இரத்தக் குழல்களாற் பின்னியிருக்கப்பட்டும் வெள்ளை ஜவ்விற்கு அடுத்தும், கறுப்புநிறமுள்ளதாயும் கண்ணைப் போஷிப்பதற்காக நுண்ணிய இரத்தக் குழல்களை யுடையதாயுமிருக்கின்றது. கிருஷ்ண மண்டலமானது;

சுக்கில மண்டலத்திற்குச் சற்றுத் தூரமாகவும், கண்கள் பல வித்தியாசமாகக் காணப்படும்படிநேத்திரங்களுக்குநிறத்தைக் கொடுக்கின்றது. இதன் நடுமத்தியில் தாரையென்னுங் கரும் புள்ளியாகிய கண்மணியிருக்கிறது. இது நேத்திரத்திற் படும் பிரகாசத்திற்குத் தக்கபடி அதிக பிரகாசமுண்டாகும்போது சுருங்கியும்,அற்பப்பிரகாசமுண்டாகும்போதுவிரிந்தும் நிற்கி றது. தரணி ஜவ்விற்கு அடுத்திருக்கும் (The retina) தரிசிய மென்னும் வெண்மையான மெல்லிய ஜவ்வே,முதலில் காட்சி ப்புலன் சேருமிடமாக விருக்கிறது. இனி முன்னீர்களில் வன மென்ற நீரானது, பலவித வருணங்களைத் தரும் கிருஷ்ண மண்டலத்திற்கு முன்பின்னாகவும், சுக்கில மண்டலத்திற்கும், விழியில் வட்டித்திருக்கும் பளிங்குபோன்ற இயவத்திற்கு மிடையி லிருப்பதன்றியில் கிருஷ்ண மண்டலமும் நீந்திக் கொண்டிருக்கிறது. விழிக்குள் வட்டித்திருக்கும் பளிங்குபோ ன்ற இயவமென்னும் நீரோ முன்பகுதியி லிருக்கும் வனமெ ன்னும் நீருக்கும் தாரைக்கும் பின்னாகவும், படிகம்போன்ற நீருக்கு முன்னாகவும் மிதக்கின்றது. இந்த படிக நீரோ, இரு புறமுங் குவிந்து பளிங்குபோன்றிருக்கு மியவத்திற்கும் பின் அடுத்திருக்கின்றது. பார்வை நரம்பானது மண்டையிலிருக் கும் மூளையிலிருந்து கிளம்பி, விழியின் பின்பாகமட்டும் ஓடிப் படர்ந்து விரிந்து (The retina) தரிசிய ஜவ்வில் நீந்துகிறது. நாம் பதார்த்தங்களைப் பார்க்கும்பொழுது (Crystalline Humor) இயவமென்ற பளிங்கு நீரின் அமைப்பினாலும் (Vitreous Humor) பிரதிபலிஸ்படிக நீரினாலும், பதார்த் தங்களின் கதிர்களை யிழுத்து (The retinea) தரிசியத்தில் பிரதிபலிக்க அப்படி ஜ்வலிக்கும் பதார்த்தங்களின் உணர்ச்சி, பார்வை நரம்புகளின் வழியாய் மூளைக்குச் சென்று மூளையில் மோத, ஷை பதார்த்தங்கள் இன்னின்ன வருணங்களுடைய வென்று மனதிற்குத் தெரிவிக்கின்றது. இந்தக் கண்கள் சிசு வானது தாயின் கர்ப்பத்தில் இருக்கும்போதே சிருஷ்டிக்கப் பட்டிருக்கினும், கர்ப்பத்தி லிருக்கும்போது தம் தொழிலைச் செய்யாதபடி அமைக்கப் பெற்று, பிரபஞ்சத்திற் பிறந்து பிரபஞ்ச பிரகாசம் நேத்திர நரம்புகளில் தாக்கிய பிறகே தம் தொழில்களைச் செய்ய வாரம்பிக்கின்றன. இது நியமனமல் லவா? (The Nature) சுபாவமென்ற வெறும் வார்த்தை இப்படிப்பட்ட அமைப்பை யமைக்குமோ? சுபாவத்திற்கு, கறுப்பு, வெளுப்பென்ற வருண பேதங்களை யறியச்செய்யும்

சக்தியுண்டோ? ஆ! இந்தக் கண்களின் பெருமை யென்னே? வானத்திலும், பூமியிலுமிருக்கும் சகல பதார்த்தங்களைப் பார்த்தானந்தப்படச் செய்வதற்கு இன்றியமையாக் கருவியாகிய கண், தற்செயலா லாகியதெனில் பயித்தியக் காரத்தனமே யல்லவா?

## The Ear—செவி.

இனிக் காதின் அமைப்பை யென்னென்று சொல்லுவேன். இதனாலேயல்லவா இம்மை மறுமைக்கேற்ற சப்தஞானத்தை யறிந்து சந்தோஷப்படுகிறோம். இதன் உருவமோ விநோதமானதாயிருக்கிறது. அங்காதிபாதசாஸ்திரிகள்: இந்த விநோத உருவாகிய காதை (The External Ear) வெளிக்காதென்றும்; (The Middle Ear) நடுக்காதென்றும்; (The Internal Ear) உட்காதென்றும் வகுத்திருக்கின்றனர். அவற்றில் வெளிக்காதானது சிரசுக்குப் புறம்பே சிலபுருவங்களாகிப் படர்ந்த முருந்தாயும், சிரசினுள் நடுக்காது வரையில் ஒரு அங்குல நீளமாயும், சற்று வளைந்த துவாரமாயுந் தோலினால் மூடப்பட்டிருக்கிறதாகவும்; அந்த துவாரத்துக்குள் புழு, பூச்சி, காற்று நுழையாதபடி தடுக்கக் குறும்பியும், மேற்படி காதின் வெளியில் மயிர்களும் அமைக்கப்பட்டிருப்பதாகத் தோன்றுவதுமன்றி, இந்தத் துவாரத்தினுட் கடையில் (The Ear's Drum) ஆனகமென்னும் பாதியளவுக்கு உருவொளியான ஓர் ஜவ்வானது வெளிக்காதுக்கும், நடுக்காதுக்கும் எல்லையாயிருக்கிறது. நடுக்காதிலோவெனில் மனுஷ ஜாதியின் சரீரத்திலிருக்கும் எலும்புகளெல்லாவற்றிலும் மிகவும் நுண்ணிய (The Hammer Bone) சுத்திகையெலும்பு (The Anvil Bone) அடைக்கலெலும்பு (The Stirrup Bone) சுவட்டெலும்பு என்ற மூன்றுவித எலும்புகளிருக்கிறதன்றியில், அக்கோவை யெலும்புகள் (The Drum of the Ear) ஆனகத்திற்கும், உட்காதிற்கும் பொருந்தியிருக்கின்றன. இந்த நடுக்காதிலிருக்கும் (Eustachian tube) கண்டகரண துவாரமென்ற வாய்க்குள்போகும் குழலிருக்கின்றது. (The Internal Ear) உட்காதோவெனில் (Labyrinth) பிரமணமென்று சொல்லத்தக்க மிகவுஞ் சிக்குமுக்குள்ள குடைவாயிருக்கிறது. இதற்குள்ளும் (Vestibule) வாரி, (Cochlea) கம்பு, (Semicircular Canals) திரிதடமென்ற மூன்று வளைகுழலறைகளிருக்கின்றன. இந்த உட்கா

தினுள்ளுறையர்பிருக்கும் ஜவ்வெலும்பின் ஜலத்தில், மூளையிலிருந்து கிளம்பிவந்திருக்கும் (Auditory Nerves) சிரவண நரம்புக் கூந்தல்கள் படர்ந்து நீந்திக்கொண்டிருக்கின்றன. இவ்வளவா? வெளிக்காதானது ஓசையின் அணுத்திரள்களைக் கூட்டியதை நடுக்காதுக்குள்ளே செலுத்த, அது காதுக்குள்ளிருக்கும் (The Membrana tympaui) ஆனகமென்னும் காதினுள் ஜவ்வில் அதிர்ந்து, அவ்வானகத்தோடு தொடுக்கப்பட்டிருக்கும் எலும்புகளில் மோதி, யக்கோவை வழியாய் யுட்காதின் அறைகளில் படர்ந்திருக்கும்(Auditory Nerves) சிரவண நரம்புகளில் சுழல, அந்நரம்புகளின் வழியாக சப்தத்தின் பேதாபேதங்கள் மூளைக்கெட்டி,மனதிற்குத் தெரிவிக்கின்றது. இதென்னவித்தை? ஸ்ரீசந்திரசேகரருடைய உபநியாச மித்தன்மையான சப்தமென்றும்; குரலின் ஓசை இப்படிப்பட்டதென்றும்; குயிலின் ஓசை இப்படிப்பட்டதென்றும்; தாவத்சாயிபின் சார்ந்தா ஓசை இப்படிப்பட்டதென்றும் விதம்விதமான சப்தபேதங்களை ஒரேவித நரம்புகளா லறிவிக்கச் சுபாவமென்னும் வெறும் வார்த்தைக்குச் சக்தியுண்டோ? சுபாவமென்னும் வெறும் வார்த்தை ஆரபி, பைரவி, முகாரி, தோடிமுதலானவைகளின் சப்த பேதமறியுஞ் சக்தியை யுடைத்தாயிருக்கு மெனில் யுக்திக்குப் பொருந்துமோ?

## THE NOSE—நாசி.

இனி மானவஜாதிகளுக்கு அமைக்கப்பட்டிருக்கும் மூக்கின் மகிமையை யென்னென்றெடுத் துரைப்பேன்! இந்த மூக்கானது சுவாசம் விடுவதற்கே யன்றி; நம்மைச் சுற்றிலுமுள்ள பதார்த்தங்களின் வாசனையை முகர்ந்து, அவ்வப்பதார்த்தங்களின் பிரயோசனத்தையும், பெருமையையுங்காட்டி,துர்க்கந்தமான பதார்த்தங்களைத் தூரத்தில் விட்டெறியவும், சுகந்தமுள்ள பதார்த்தங்களை உட்கொள்ளச் செய்யவும் ஆதாரமாக விருக்கின்றது. இத்தொழிலைச் செய்யத்தக்க விதமாக மூக்கமைக்கப்பட்டிருக்கும் பெருமையைப் பாருங்கள். மூக்கின் அடிப்பாகம் மெல்லியதசையாலும், மேல்பாகத்தில் எலும்பினாலும் உருவாக்கப்பட்டிருக்கிறது. இந்த எலும்பின் இடைப்பிரதேசத்தில் (The Ethmides) கந்தானந்த துவாரபீடமென்று சொல்லப்பட்ட(The Sieve-like Bone) சல்லடைக் கண்களைப்போன்ற நுண்ணிய எலும்பிருக்கிறது.

இதுவே கந்தந்தாங்கும் ஸ்தானம். இதனுட்பாகத்தில் (The Olfactory Nerves) ஆக்கிராண நரம்புகள் மூளையிலிருந்து கிளம்பிவந்து மிதந்துகொண்டிருக்கின்றன. இந்த எலும்பின் வெளிபாகத்திற்கு (Mucous Membrane) சிங்காணமேதை யென்று சொல்லப்படும். சளியூறுஞ் சவ்வுமேற்படி எலும்பின் சிறுதுவாரங்களையும், (The Olfactory Nerves) ஆக்கிராண நரம்புகளின் நுண்ணிய கூந்தலையும் மூடிக்கொண்டிருக்கின்றது. நாம் ஒரு பதார்த்தத்தின் வாசனையை யறிய விரும்பி அப்பதார்த்தத்தை எடுத்து மூக்கிற்குச் சமீபமாகப் பிடித்துக் காற்றை யுள்ளே யுறிஞ்சினால், அந்தக் காற்றானது அந்தப் பதார்த்தத்தின் வாசனையான அணுக்களைக்கொண்டு மூக்கினுள் (Mucous Membrane) சிங்காணமேதை ஜவ்விற் கடுத்திருக்கும் (The Ethmoides) கந்தானந்த துவாரங்களிற்சென்று, அவ்விடமிருக்கும் ஆக்கிராண நரம்புக் கூந்தலிற் றாக்க, அந்த நரம்புகளின் வழியாய் மூளைக்கெட்டி, அப்பதார்த்த மித்தன்மையான வாசனையுடையதென்று மனதிற் கறிவிக்கின்றது. (The Ethmoides) கந்தானந்த துவார எலும்பானது அநேக சிறுதுவாரங்களற்று, ஒரே பெரிய துவாரமுள்ளதாயிருக்கில், காரமுள்ள வாசனைப்பட்டு ஆக்கிராணநொய்ய நரம்புகளின் கூந்தல்கள் கெட்டுப்போகுமென்றே, அந்த எலும்பானது பல சிறு துவாரங்களுள்ளதா யிருக்கிறதன்றியில்; காரமான காற்றைத் தடுக்கச் சிங்காணமேதை யென்னும் ஜவ்வில் சதா சளி ஊறிக்கொண்டே யிருக்கிறது. இந்த அற்புத அமைப்பிற்குக் காரணம் யாது? (The Nature) சுபாவ மெனில், மல்லிகை யின் வாசனை யின்னதென்றும், மருதாணியின் வாசனை யின்ன தென்றும் விதம்விதமாகக் கண்டுகொள்ளும் சக்தி கேவலம் ஒரேவித தசை நரம்புகளுக்கெப்படி வந்தது?

## THE MOUTH—வாய்.

இனி வாக்கினால் விவரிப்பதற்கு அசாத்தியமாகிய வாயின் அமைப்பைப் பாருங்கள். வாயிருப்பதனாலல்லவா நாம் உண்டு உயிர்வாழ்கின்றனம். வாயில் வைக்கும் போஜன திபதார்த்தங்கள் வெளியில் விழாதபடிக்கும், பற்களுக்குக் காவலாகவும், பேசுவதற்குப் பொருத்தமாகவும் உதடுகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. பற்களில் முன்வாய்ப்பற்கள்: கடினமான பதார்த்தங்களைக் கண்டதுண்டமாக்க கூர்மையாகவும், அப்படித்துண்டாக்கிய பதார்த்தங்களை மாப்பதமாக மெல்லுவ

தற்கு அடிவாய்ப்பற்கள் அகலமாகவும் அமைக்கப்பட்டிருக்கிறதன்றியில், பேசுவதற்கும் பற்களுடைய பெருதவியும் வேண்டியதாகவே யிருக்கின்றன. இவ்விதமாகக் கடித்துத் துண்டாக்கிய பதார்த்தங்களை, அடிவாய்ப் பற்கள் மென்று கொடுக்க, அப்பதார்த்தங்களிலிருக்கும் உப்பு, புளி, காரம், சுவையாதிகளை யறிய நாக்கும் அமைக்கப்பட்டிருக்கிறது. ஆஹா! இந்த நாவின் பெருமையென்னே! இந்த நாவானது, பார்வைக்குக் கேவலம் ஒரு மாம்சத்துண்டாகவிருக்கினும், இதனுடைய பிரயோஜனத்தைப்பற்றிப் பூரணமாய்ப் பிரசங்கிக்கமுடியுமோ! இந்த நாக்கின் அடியில் (Sublingual Gland) உமிழ்நீர்க் கோளமும், நாக்கின் மேற்பாகத்தில் (The Papilla) பாபிலா என்ற கூரான சிறிய குமிழிகளைப் போன்ற முனைகளுமிருக்கின்றன. இம்முனைகட்கடியில் (Gustatory) சுவையறிநரம்பு, (Glossopharingeal) தொண்டைபாகநரம்பு (Hypoglossal) அதோ பாகநரம்பென்ற நண்ணிய நரம்புக் கூந்தல்கள் மூளையிலிருந்து கிளம்பிவந்து நீந்திக் கொண்டிருக்கின்றன. ஆகவே, ஒரு பதார்த்தத்தை நாக்கில் வைத்த உடனே அதன் சுவை, உமிழ்நீரில் கசிய, உடனே Papilla பாபிலா என்னும் சிறிய கூர்மையுள்ளமுனைகள் வீங்கி நீளுகின்றன. அப்படி நீளும் அம்முனைகளி னடியிலிருக்கும் சுவை நரம்புக் கூந்தல்கள், அம்முனைகளைத் தாக்கும். அப்படித்தாக்கிய நரம்புகளின் வழியாய் அப்பதார்த்தம் இவ்விதச் சுவை யுடைத்தென்று மூளைக்கெட்டி மனதிற்கு அறிவிக்கின்றது. இதென்ன விந்தை? (Nature) சுபாவமென்னும் வார்த்தையா லேற்படும் நாவானது உப்பு, புளி, காரம், முதலான பலபேதமான சுவைகளை யறியுமோ? மேலும், சுபாவமெனில், பேசும் நாக்கு எப்போதும் பேசிக்கொண்டும்; பாடும் நாக்கு எப்போதும் பாடிக்கொண்டுமே யல்லவா இருக்கவேண்டும். அப்படிக்கன்றி மனத்தூண்டுதலின்படி, பேசவேண்டியகாலத்தில் மாத்திரம் பலவிதமாகப் பேசவும், பாடவேண்டிய காலத்தில்மாத்திரம் பலவிதமாகப் பாடவும், சும்மா இருக்கவேண்டியகாலத்திற் சும்மாவிருக்கவும் நியமிப்பதெது? கேவல வார்த்தையாலாகுமோ!

## THE FEELING—ஸ்பரிசம்.

இனி ஸ்பரிச ஞானத்தின் பெருமையை யென்னென்று சொல்லுவேன்? இப்புலனை யறிவதற்கு முக்கியமானவை

கேவலமான நரம்புக் கூந்தல்களே. இந்த நரம்புகள் (spinal Cord) முள்ளந்தண்டுக் கொடியின் பின்பாகத்திலிருந்து தோன்றித் தோலிலே படர்ந்து நீந்திக்கொண்டிருக்கின்றன. ஆகவே சரீரத்தில் மிகவும் கேவலமான காற்றுப்பட்டாலும், வேறெந்த வஸ்துக்களழுந்தினாலும் உடனே ஸ்பரிச நரம்புகளின் வழியாக மூளைக்கெட்டி அப்பதார்த்தங்கள், குளிர்ச்சியோ, காங்கையோ, கூர்மையோ அழுத்தமோ, முரணையென்பதை மனதிற் கறிவிக்கின்றது. ஆஹா! என்ன விந்தை! பிரபஞ்சத்தின் பொருள்களைப்பார்த்து அதிசயிக்கத்தக்க கண் பார்வையற்றவர்கள், இந்த ஸ்பரிச ஞானத்தால் அநேக பதார்த்தங்களைத் தடவிப்பார்த் தானந்திக்கவும், புத்தகமூகலியவற்றில் பதிக்கப்பட்ட எழுத்துக்களைத் தடவி யோதவுமுதவுகின்றது. இது (Nature) சுபாவமெனில் கேவலம் ஓரேவித நரம்புகள், சீத உஷ்ண பேதங்களை யறிவதற்குக்காரணம் யாது? கூரோ, முனையோவென்ற பேதமறியும்படி செய்விப்பதற்குக் காரணம் யாது?

## THE HAND—கை.

பஞ்சேந்திரியங்களின் பெருமை தானிப்படியாகில், நமது கையின் விநோதமான அமைப்பைப்பற்றி என்ன சொல்லுவேன்! நமது கையானது தோள்வளை முட்டுகள், முழங்கை முட்டுகள், முன்கை முட்டுகள் முதலான பலவித முட்டுகளால் பிணைக்கப்படாமல் கேவலம் ஒரே துண்டுக் கட்டையாக இருக்கில், அது என்ன வேலைக்கு பிரயோஜனப்படும்? நமது இஷ்டப்படி வளைக்கவும், நீட்டவுமுடியுமா? இஷ்டப்படி வளைக்கவும் நீட்டவும் கூடாத குண்டுத்தடியாக இருந்தால், நாம் வேலைசெய்து உண்டு வாழ்வதெப்படி? மேலும் விரல்களுக்கு முடிவில் நகங்கள் அமைக்கப்பெற்றிருக்கின்றன. அந்த நகங்களே அமைக்கப்படாதிருக்கில், வேலைகள் செய்ய விரல்கள் உபயோகப்படாதன்றோ? (Scapula) புஜஎலும்பையும், (Humerus) தோள்பாகங்களையும், (Ulna and Radius) முன்கைகளையும் (Carpus) மணிக்கட்டுகளையும், (Metacarpus) விரல்மடிப்பையும் (Phalanges) விரல் எலும்புகளையும் பாருங்கள். என்ன விந்தையான விதமாக நரம்புத் தசைகளால் உருவாக்கப்பட் டிருக்கின்றன. இந்தக் கையானது குவிந்திருக்கவும், நீட்டவும், குறுகவுஞ் செய்யத்தக்கதாகவுமிருக்கிறது. மனது ஒன்றை நினைக்க, அதை விரல்கள் யாவும்

ஒன்றுய்க் கூடியாவது, தனித்தாவது, ஒன்றன் பின் ஒன்ருக வாவது செய்கின்றன. அஹா! இந்தக் கையானது எவ்வளவு பிரயோஜன முள்ளதாக விருக்கிறது. ஸ்ரீரங்கம், காஞ்சிபுரம், பாபேல்,ரோமாபுரிமுதலான இடங்களிலுள்ள கோபுரங்களைக் கட்டியதுங்கைகளே யல்லவோ? விதம்விதமான சிங்காரமாளிகை சித்திரவினோதங்கள், இயந்திரங்கள், தூமகேது முதலியவற்றை திருஷ்டிக்கிழுக்கத்தக்க தூரதிருஷ்டிக் கண்ணுடிகள், அணுரூபாதி அற்புதங்களை யறிந்தானந்தப்படத்தக்க அணுதர்சினியாதிகள், ஆச்சரியமான அச்சு இயந்திரங்கள், மின்சாராதி புகைவண்டிச் சூத்திரங்கள், நாமிப்போதிருக்கும் இந்த பிரம்மமந்திர முதலானவை கையினுலேயல்லவா செய்யப்பட்டன. இம்மாத்திரமோ! கிரந்தங்களை யெழுதுவதும் கைகளே யல்லவா? இப்படிப்பட்ட கைகளுக்குக் காரணம்யாது! (Nature) சுபாவமெனில், கையாகிய உருவத்திலிருக்கும், பலவிதப் பொருத்துக்களின் அமைப்பைப் பார்க்கும் பயித்தியக்காரனும்,இப்பொருத்துக்களுக்குக் காரணமொன்றிருக்க வேண்டுமென்று சொல்லுவான். ஏனெனில் எல்லாம் சுபாவமென்கிற பக்ஷத்தில், எழுதுங்கை யெப்போதும் எழுதிக்கொண்டே யிருக்கவேண்டுமல்லவா? ஆனுல் கைகளோ மனோதருமத்தின்படி, எழுதவேண்டிய காலத்தில் எழுதவும்; செய்யவேண்டிய காலத்தில் செய்யவும்; கட்டவேண்டிய காலத்திற் கட்டத்தக்க பேதங்களையுடையதாகலின், இதைச் சுபாவமென்னும் வெறும் வார்த்தையாலமைக்க முடியுமோ?

இந்தக் கைகளிலே யல்லவா நாடிகள் நடப்பதையும் பார்க்கிறோம்.இந்த நாடிகளை நடத்துவதற்குக் காரணம் யாது? நாடிகளுஞ் சுபாவமெனில், அந்த நாடிகளும் ஒரேவிதமாயிராமல் ஒருக்கால் பித்தநாடி மெதுவாகவும், வாதநாடி வேகமாகவும் ஓடவேண்டிய காரணமென்னே? வெறும்வார்த்தையாகிய இயற்கை வித்தியாசத்தை யுண்டாக்குமோ?

மானிடரின் தேக அமைப்பு கேவலம் (Nature) சுபாவமெனில் மூடத்தனமேயாம். ஏனெனில், மூக்கிருக்கவேண்டிய விடத்தில் காதும்; காதிருக்கவேண்டியவிடத்தில் கண்ணும்; கையிருக்கவேண்டியவிடத்திற் காலுமிருக்குமேயாகில் யாது பிரயோஜனம்? (Nature) சுபாவமாய் அமைவதாகில் எங்கெங்கே அங்கங்க ளெங்கெங் கிருக்கவேண்டுமென்ற சந்கேதமே கிடையா! (Lal Baug) லால்பாக்கு தோட்டத்திலி

ருக்கும் ஒரு பதார்த்தத்தின் பெருமையைக் காதினுடைய சகாயத்தால் மனது விரும்ப, அப்பதார்த்தத்தைக் கால்களினால் நடந்துபோய்க் கைகளால் கொள்ளவும்; அது கூர்மையோ, மூரணேவென்பதை ஸ்பரிச நரம்புகளறிவிக்கவும்; அது வெண்மையோ கருமையோ வென்ற வருண பேதத்தைக் கண்கள் காட்டவும்; அது சுகந்தமுள்ளதோ துர்க்கந்தமுள்ளதோ வென்று மூக்கு முகரவும்; அதை வாயில் வைக்க அதை விழாதபடி உதடுகள் தடுக்கவும்; அப்பதார்த்தங் கடினமானதாகில் முன் வாயிலுள்ள கூர்மையான பற்கள் அதைக் கண்டதுண்டமாக்கவும்; அப்படித் துண்டிகளாக்கப்பட்டவைகளை யகலமாகிய அடிவாய்ப் பற்கள் மாவைப்போலமென்று கொடுக்கவும், அப்படி மென்றதனு லுண்டாகும் இரசத்தை உப்போ, புளிப்போ, இனிப்போ வென்ற சுவைகள் நாக்கின் சகாயத்தினுல் மூளைக்கெட்ட மனது ஆனந்த மடைகின்றது! பிறகு அந்தப் பதார்த்தமானது அன்னவாகி வழியாய்க் கீழுக்கிறங்கி தீனிப் பையில் போய் விழுகின்றது. இவ்விதமாகவே, சாப்பிடப்பட்ட அன்னபானுதிகள், தீனிப்பையிற் போய்ச் சேர, அந்தத் தீனிப்பையானது அதைப் பிசைந்து மெதுவாக மசியும்படி செய்கின்றது. அப்போது தீனிப்பையில் ஜெனிக்கும் (Gastric Juice) ஜடராக்கினி யென்னும் ரசமானது ஷை பதார்த்தங்களுடன் கலந்து (Chyme) அன்னப்பாகாகின்றது. அந்த அன்னப்பாகு, சிறுகுடலி லிறங்க, அப்போது கல்லீரலில் பிறக்கும் (Bile) பித்தநீர் வந்துசேர, அந்த அன்னப்பாகிலிருக்கும் இரசம் வேருகவும், திப்பி வேருகவும் பிரிந்துவிடுகின்றது. அன்னரசத்தைச் சிறுகுடலிலிருக்கிற நரம்புகள் கிரகித்துக்கொண்டு, இடது பக்கம் புஜநாளத்திற் கொண்டுபோய்ச் சேர்க்கும். அந்த அன்னரசம் நுரையீரலுக்குப் போய் இரத்தமாகி தேகத்தைப் போஷிக்கின்றது. திப்பி மலமாகி வெளிப்பட்டு விடுகின்றது. அன்னபானுதிகளால் தேகத்தில் குறைகிற ரத்தம் மறுபடியும் பூரணமாகின்றது. சிசுவானது தாயின் கர்ப்பத்திலிருக்கும்போதே சுவாசக் குழல் முதலான உறுப்புகள் படைக்கப்பெற்றிருந்தும் அவைகள் கர்ப்பத்திலிருக்கும்போது தொழிலற்றிருந்து, பிறகு பிரபஞ்சத்திற் பிறந்தவுடனே, பிரபஞ்ச வெளிக் காற்றுபட தம் தம் தொழில்கள் செய்ய ஆரம்பிக்கின்றன. ஓ! இதென்ன விந்தையான நியமனம்! என்ன விந்தையான அமைப்பு? (Nature) சுபாவமென்னும் கேவ

லமான வார்த்தை இப்படி எங்கெந்த உறுப்புகளெங்கெங் கிருந்து எங்கெந்தத் தொழிலைச் செய்யவேண்டுமோ, அதை யே செய்விக்கச் சக்தியுடையதாமோ, கண்ணிணு லறியத்தக்க வருணபேதங்களைக் காதிணு லறியக்கூடுமோ? காதினாலறியத் தக்கஓசையை மூக்கிணு லறியக்கூடுமோ? ஒருக்காலும் கூடா தல்லவா! மேலும், கண் காது முதலிய உறுப்புகளின் நரம் பாதி தசைகள் ஒரேவிதமாக விருக்கச் செய்கையின் பேதங் கள் மாத்திரம் வித்தியாசப்படுவதேன்?

மானிடருக்குக் குளிரும், உஷ்ணமும், அதிகரிக்கும் போது தம்மைக் காத்துக்கொள்ள கரடிமுதலான மிருகங்க ளுக் கிருக்கும்படியான தடித்த மயிரோடுகூடிய சருமங்களில் லாவிட்டாலும் தம் புத்தி யுக்திகளால் பலவித மிருகாதிகளின் மயிர் முதலானதுகளைக் கொண்டு துகிலிகளைச்செய்து போர் த்திக்கொள்ளவும்; கடினமான பதார்த்தங்களைக் கடித்துண்ண மிருகாதிகளுக் கிருக்கும்படியான பற்கள் மானிடர்க்கில்லா விட்டாலும், அந்தக் கடினமான மிருகங்களுடைய மாமிசாதி களையும் பதமாக்கிச் சமைத் துண்ணவும்; பக்ஷி மிருகாதி கள் தம்மைக் காத்துக்கொள்ள நகங்களும், பற்களு முடைத் தாயிருப்பதைப் போல மானிடருக் கில்லையாயினும் பற்பல வித கருவிகளைச் செய்து கொள்ளவும்; பக்ஷிகளைப்போல ஆகாயத்தில் பறக்கச்சக்தியற்ற மநுஷர் அந்த பக்ஷிகளையெல் லாம் தம் பாதத்தினடியில் வருவித்தாட்டி வசமாக்கச் சக்தி யுடையவராகவு மிருப்பதற்குக் காரணம் யாது? (Nature) சுபாவமெனில் இவ்வித பேத முண்டாகுமோ?

மானவஜாதியில் ஒரு வகையாராகிய (Female Sex) ஸ்திரீகளைப் பாருங்கள். பிறக்கும்போது ஸ்திரீ புருஷர்களு க்கு ஒரேவிதமாக விருந்த ஸ்தனங்கள், பெண்களுக்கு மாத் திரம் பருவமடையும்போது பருத்துப் பேருதவி யடைந் திருப்பதற்குக் காரணம் யாது? சகல அங்காதி நடை யுடை, யாகார நித்திரை மைதுனாதிகளைச் சமமாக உடைய ஸ்திரீ களுக்கு மாத்திரம், அல்குல் என்கிற குழியும்; புருஷர்களுக்கு ஒருவித ஆண்குறியாகிய கருவியு மிருக்கவேண்டிய காரண மென்ன? ஜனனமே (Nature) சுபாவமெனில் ஸ்திரீ ரூபம், புருஷ ரூபம் பேதப்பட் டிருப்பதற்குக் காரணம் யாது? ஸ்திரீ புருஷ சம்போகத்தினால், ஸ்திரீகள் வயிற்றில் மாத்தி ரம் கருப்பந் தரிக்கையில், புருஷர்கள் வயிற்றில் கருவு தரி

யாததற்குக் காரணம் யாது? (Nature) சுபாவமெனில், ஸ்திரீகளுக்கிருக்கும்படியான ரூபம் சுகதுக்காதிகளைச் சமமாக உடைய புருஷர்கள் வயிற்றிலும் கருப்பந் தரிக்கா திருக்கும் படியான விதமாகப் படைக்கப்பட் டிருப்பதற்குக் காரணம் யாது? ஓ! கனவான்களே, இனி, நம்மைச் சுற்றிலுமிருக்கும் பலவித பிராணிகளின் தேகாதி பேதங்களைப் பற்றிச் சொல லுகிறேன் கேளுங்கள்.

மானிடருடைய கை முதலான கருவிகளின் அமைப்பு இவ்வளவு விந்தையாக அமைக்கப்பெற்றிருக்கிறதெனில்; மிருகத்திலும் பக்ஷிகளிலுஞ் சேராமல், மனுஷனைப்போல் ஓர் விதமானக் கைகளையுடைய வெளவால்களுடையக் கைகளைப்பற்றி பரிசோதிப்போ மாகில், மஹா விந்தையிலும் விந்தையாகத் தோற்றுகின்றன—மேஸ்டர் ஸ்பாலநஸானி என்னும் ஓர் தத்துவ சாஸ்திரி ஒரு வெளவாலைப் பிடித்து அதன் இறக்கையைச் சோதிக்கையில் அதில் அநேக ஸ்பரிச உணர்ச்சி நரம்புகள் சூழ்ந்திருப்பதாகவும், அந் நரம்புகளின் சகாயத்தால் இருட்டில் கண்களின் உதவி இல்லாமலே புழு பூச்சிகளைப் பிடித்து உண்பதாகவும், மழைப் பனிக் காலங்களில் வெளியில் வந்தால் அதன் இறக்கை சம்பட்டைகள் கெட்டுப் போகுமெனக் கருதி ஒரு வருஷத்தில் ஆறுமாத காலமாக உணவு உறக்கமில்லாமல் தலைகீழாகத்தொங்கியாட கைவிரல்களின் நகங்கள் கூர்மையான வைகளாகவும், கெட்டியானவைகளாகவும் இருப்பதாகத் தெரிவித்திருக்கிறார். இது என்ன ஆச்சரியமான அமைப்பு? விந்தையான நியமனம்?

அணுதரிசினி யென்னும் (Microscope) அற்புதக் கருவியைக் கொண்டு, அணுவிலு மதிகச் சிறியதாக விருக்கும் (Animalcule) பிராணிகளின் கண், காது, உடல் முதலான உறுப்புகளைப் பரிசோதிக்கையில் யெவ்வளவோ விந்தையாகவும், அவைகள் அவ்வப் பிராணிகளுடைய உபயோகத்திற்கு ஏற்ற விதமாகவுஞ் சிருஷ்டிக்கப்பட் டிருப்பதைக் காணலாம். ஒரு பிந்து ஜலத்திலிருக்கும் பிராணி சமூகத்தை சாஸ்திர ரீதியாகப் பார்வையிட்ட போதிலு மித்தன்மையான அமைப்பிற்குக் காரணமாகும் கர்த்தாவின் காருணியம் கரதலாமலகம்போலாகும். கடைசியாக (Darwin) டார்வின் சாஸ்திரியின் கோட்பாட்டை யனுசரிக்கினும், ஒரு சிருஷ்டிகர்த்தா வேண்டியே யிருக்கிறது. ஏனெனில், கண், காது, கை, கால்

முதலிய தேகாதி உறுப்புகள் ஏதோ ஒரு ஆதி செபியில் (Cell) இருந்து தோன்றியதாகக் கொண்டாலும்; அந்த ஆதி செபியையும், அதிலிருந் திவ்வித விதவிதமான உறுப்புகளையும் தோன்றத் தக்கதாக நியமித்ததெது?

சில நாஸ்திக வாதிகள்—இந்த உலகமானது (Primeval Nebula) ஆதிதாரகாகணத்தில் நக்ஷத்திர ஜோதிமய மேகப் புகையாகவிருந்து, வேறாகிப், பலநாள் சுழன்றுந் தன்னுதிமயமற்று கந்தமூல ஜீவிகளும், மனுஷர்களும் வாழும்படியான இப்போதிருக்கும் ஸ்திதியைப் பெற்றதென்பரேல், அப்படித் தாரகா கணத்திலிருந்து பிரிவதற்கும், தன்னுதிநிலை நிற சுபாவமற்று,இப்போதிருக்கும்படியான சிறப்பைப் பெறுவதற்கும் ஓர் கர்த்தா வேண்டுமல்லவோ?மேலும்,இந்த உலகமும், இதைப்போல அந்தரத்திலசைவாடும் ஆதித்தன், சநி, சுக்கிரன், வியாழன், புதன், செவ்வாய், திங்கள் முதலான கிரகாண்டகோடிகளும், ஒரு காலத்தில் ஏகாண்ட பிண்டமாக விருந்தும்; பிறகு, வேறு வேறு துண்டு துண்டாண்டங்களாகப்பிரிந்தும்; சில்காலம் பயங்கரமான அக்கினிச்சுவாலைகளாற் சூழப்பட்டும்; பிறகு, கந்தமூல கிருமிகீடாதிகளால் சூழப்பட்டும்; பிறகு, மிருகாதிமானவ ஜாதிகளால் வசிக்கத் தக்க இவ்வித உலகங்களாகி, இப்போதிருக்கும்படியான பெயர்களைப் பெற்றதாகவும் சில நாஸ்திகவாதிகள் சொல்வரேல், இப்படிப் பிரிவதற்கும், இப்படிப்பட்ட மாறுதல்களைச் செய்வதற்கும், ஒருகாலமும், கருத்தாவும், வேண்டுமல்லவோ? ஒருவேளை, இந்தப்பூமியைத் தன் பூர்வபயங்கர ஸ்திதியிலிருந்து இப்போதிருக்கும்படியான ஸ்திதிக்குக் கொண்டுவரும்படியான ஓர் இரகசிய சக்தி இந்தப் பிரபஞ்ச பஞ்சபூதத்தில் மறைந்திருக்கிறதாகக் கொண்டாலும்; இந்த அற்புத சக்தி யானது, எப்போதும் பஞ்சபூதத்தி லிருந்திருக்க வேண்டும். ஏனெனில், ஆதிகாலத்தில் இப்படிப்பட்ட சக்தி பஞ்சபூதத்திலில்லாதிருக்கில்; இந்தபூமியைத் தன் பூர்வஸ்திதியிலிருந்து இப்போ திருக்கும்படியான ஸ்திதிக்குக் கொண்டுவரவும்; இப்போது பூமியில் காணும் அற்புதப் பொருள்களைப் படைக்கும்பொருட்டும்; அந்தச் சக்தி தனக்குத்தானே படைத்துக் கொண்டிருக்கவேண்டும். இப்படிப் படைத்துக்கொள்ளுதல் அசம்பவமன்றோ? பூதத்துவ வான்தத்துவ சாஸ்திரோக்தமாகப் பார்க்கும்போது,

இந்தச் சக்தி (power) எப்போதும் ஒரேவிதமா யிருப்பதாகக் கொள்ளக்கூடவில்லை. ஏனெனில் (Development) தோற்றமானது நாளுக்குநாள் விருத்தியாகவும், விநோதமாகவும் ஜ்வலிக்கின்றது. ஆகவே, நாஸ்திகவாதிகள்: பிராகிருத பிரபஞ்சத்தி லிவ்விதமாகத் தோற்றுவிக்கும் கிரியாசக்தி அடிக்கடி ஜனிக்கிறதாகக் கொள்ளாதபக்ஷத்தில், அந்தச் சக்தி எப்போதும் இந்தப் பிராகிருதத்தில் இருந்தேயிருக்கவேண்டுமென்று கொள்ளவேண்டும். அஃதெப்போதும் கிருஷி செய்து கொண்டிருக்கிறதாகக் கொள்ளும் பக்ஷத்தில், அது முடிவற்றகாலமாக அநந்த பரிபூரண வஸ்துவிலிருந்தே தோன்றியிருக்கவேண்டும்.

மேலும், அசுத்தத்தை நீக்கிப் பரிசுத்தத்தையும்; அஞ்ஞானத்தை நீக்கி ஞானத்தையும் கொள்வதைப்போல; பிரபஞ்சத்தில் காணும் (Development) தோற்றங்கள் யாதொரு விதியும் முடிவுமற்ற குருட்டுச்சக்தியாலின்றி, அபாரசக்தியும், யுக்தியுமுடைய வஸ்துவினால் படைக்கப்பட்டாலன்றி இவ்வளவு மேன்மையானதாக அமையுமெனல் புத்திக்குப் பொருந்துமோ! மேலும், தோற்றமென்பது மறைவிலிருக்கும்படியான பதார்த்தங்களைப் பிரகாசிக்கச் செய்யும் விதமென்றுஞ் சிலநாஸ்திகவாதிகளே சொல்லுகிறபடியால்; ஒரு காலத்தில், அக்கினிக் கடல்களினாலும், புசல்காற்றினாலும்; ஒருகாலத்தில் கந்த மூலாதிகளாலும், பயங்கர மிருகாதிகளாலும் மூடப்பட்டிருந்த இந்த உலகத்தில், சிரேஷ்டமான மானவஜாதிகளை இப்போது தோற்றுவித்திருக்கிறபடியால்; இப்படியே, சிலகாலம் சென்றபிறகு, (தோற்றத்தின் பிரமாணத்தால்) (Law of Development) இப்போதிருக்கும் மானவ ஜாதியிலும் சிரேஷ்டமான சிருஷ்டிகர்த்தாவையும் தோற்றுவிக்கவேண்டும். ஆகவே, கடவுள் உலகத்தைப் படைக்கவில்லையென்று நாஸ்திகர்கள் சொல்லும் பக்ஷத்தில்; உலகத் தோற்றமாவது, கடவுளைப் படைக்கவேண்டியதாகிறது. ஆகவே எப்படியும் கடவுளிருக்கிறாரல்லவா?

சில நாஸ்திகர்கள் கடவுள் கருணையுடையவராகில், அவர் படைத்த உலகில் பிணிபாவம், துக்கமுதலானவைகள் இருக்கவேண்டியதேன் என்று கேட்கிறார்கள். மநுஷர்கள் அநுபவிக்கும் பெரும்பான்மையான பிணி, பாவம் துக்கங்களுக்கு அவர்களே முக்கிய காரணர்களாக இருக்கிறார்கள். இதன்

உண்மை அநுபவசாலிகளுக்குத் தெரியவரும். பிரதிமநுஷனும் தான் உண்ணும் உணவினாலும், மிதமிஞ்சிய காமகுரோதாதிகளையும், கல்விஞானம் இல்லாமையால் பெரும்பான்மையான பிணிகளையும் பாவங்களையும் துக்கங்களையும் படைத்துக்கொண்டு பரிதவிக்கின்றன. பிராணிகளுக்குச் சம்படவிக்கும் பிணிகளைக் கண்டிக்க மருந்துகளும், பாவத்தை நீக்கிக்கொள்ள அநுதாபமான பிரார்த்தனைகளும், துக்கங்களை நீக்கிக்கொள்ள கல்வியறிவும் சாதுசங்கங்களு மிருக்க, அவைகளைக்கொண்டு நிவர்த்திசெய்துகொண்டு நிம்மதியாக இராமலிருத்தல் யாருடைய குற்றம்? பாவப்பிணிகளை பரமேசுவரரே நேரில் வந்து தீர்க்கவேண்டுமோ?

சில நாஸ்திகவாதிகள்: கடவுளெங்கிருந்து உலகத்தைப் படைத்தாரென்றும்; என்னத்திற்கு படைத்தாரென்றும்; எப்போது படைக்கப்பட்டதென்றும்; பரிபூரண கடவுளாற் சிருஷ்டிக்கப்பட்ட உலகம், அபரி பூரணமாக விருப்பதற்குக் காரணமென்னை யென்றுங் கேட்பதால்; இக்கேள்விகளுக்கு ஒருவித சமாதானஞ் சொல்வதைக் கேளுங்கள்.

கடவுள் எங்கிருந்து உலகத்தைப்படைத்தாரெனில்; 'எங்கும் நிறைந் திருந்துக்கொண்டே படைத்திருக்கிறார். சிலர், கடவுளானவர் கைலாசம், வைகுண்ட முதலான இடங்களில் தனியாக இருந்துகொண்டு, சிருஷ்டியாதித் தொழில்களைச் செய்து வருவதாக எண்ணி இருக்கிறார்கள். அது யுக்தமானதாகத் தோற்றவில்லை. அவர் சகல சராசர பிரபஞ்சங்களுக்குள்ளும் வெளியும் நிறைந்து தம் காரியங்களைச் செய்கிறாராகையால், அவர் சராசர பிரபஞ்சங்களுக்கு வேறான தனி இடத்திலிருந்து சிருஷ்டிக்கிறார் என்று எண்ணுவதற்கு இடமில்லாமல் எங்குமிருந்தும் படைக்கிறார் என்று சொல்லுவோம்.

என்னத்திற்காக படைத்தாரெனில், இக் கேள்விக்குத் தக்கவிடை சொல்லப் போதுமான காலமும் கல்வியும் விருத்தியாகவில்லை. பெற்றோர் குடும்பத்திற் செய்யும் கருமங்களை பார்க்கும் பிள்ளைகள், அக்கருமங்களின் கருத்தை அறிவதெப்படி? அன்னியர் அறிவித்தாலும் அவை யறியும்படியான காலமும் கல்வியும் வருகிறவரையில் அறிந்துகொள்

வது கஷ்டமல்லவா? அதுபோலவே, அபாரசக்தியும், யோச னையு முடையவரான கர்த்தா இவ்வுலகத்தை என்னத்திற்காக படைத்தாரென்று சிறு பூச்சிகளிலும் கேவலமாகிய நாம் சொல்லக் கூடுமோ? அவருடைய லீலா விபூதியை விவரிக்க யாரால் முடியும்?

எப்போது படைக்கப்பட்ட தெனில், அநேக லட்ச வருடங்களுக்கு முன் படைக்கப் பட்டதென்று சிலரும்; ஐம்பதினாயிரம் வருடங்களுக்குமுன் படைக்கப் பட்டதெ ன்று சிலரும்; ஐயாயிரம் வருடங்களுக்கு முன் படைக்கப் பட்டதென்றும் சிலரும்;அவரவர்கள் கல்விகேள்விகளுக்கும் காலதேச நாகரீக யுக்திகளுக்கும் தக்கபடி சொல்லக் கூடிய தாக விருக்கினும்; சரியான காலத்தைக் கண்டு சொல்லும் படியான கல்வி கேள்வியும் சாஸ்திரச் சீர்திருத்தமும் ஆஸ் திகர்களுக்குள்ளும், நாஸ்திகர்களென்று என்று எண்ணப்பட் டவர்களுக்குள்ளும் நாளது வரையில் விருத்தியாகவில்லை. நமது உலகத்திற்கு ஆதார பூதமாக இருக்கும் சூரிய உலகம் உற்பத்தியாக 35,00,00,000 வருஷங்க ளானதாக லீகாண் டிய சாஸ்திரியும் 150,00,000 வருஷங்க ளாகியதாக ஸ்ரீவிலி யம் தாம்சன் சாஸ்திரியாரும் கணித்து 1887-ம்வரு தெரி வித்திருக்கிறார். ஆயினும் சரியானகாலம் இன்னும் வியக்தமா கத்தெரியவில்லை. கடைசியாகப்பரிபூரணகடவுளாற்சிருஷ்டிக் கப்பட்ட உலகம், அபரிபூரணமாக விருப்ப தேனெனில்; பரி பூரணக் கடவுளாற் சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சம், பரிபூர ணமாக விருக்குந் தன்மையை யறியு மறிவின்மையால், அப ரிபூரண மென்னுந் தோஷத்தை யாரோபிக்க விடமாகிறது. எப்படியெனில், கண்ணாடி ஜன்னல்களையுடைய ஓரறையிற் புகுந்த பக்ஷியானது: அந்த அறையை விட்டப்புறம்போக சரியான வழியைக் கண்டு வெளியே ஓடாமல்; கேவலம், பிர காசத்தைத் தரும் ஜன்னலின் கண்ணாடியில் மோதிக்கொ ண்டு, இந்த அழகிய அறைக்குச் சரியான வழியின்மையால், அபரி பூரணக் கட்டிடமென்று கொள்வதைப் போலவும்; வானரங்கள், மாதளம் முதலான பிஞ்சுகளின் விதைகளையும் அதை மூடிக்கொண் டிருக்கும் தோல்களையும் பிரித்துண் ணும் வகையறியாமல் ஷை மாதளாதிகளின்பேரில் அபரி பூரண தோஷாரோபணஞ் சூட்டுவதைப் போலவும்; சிலர்: பிரபஞ்சத்தில் நமக்கோ, அல்லது வேறு பிராணிகளுக்கோ,

மற்றெவைகளுக்கோ மிக உபயோகமாகப் படைக்கப்பட்டிருப்பவைகளின் உண்மையைக் கண்டறியாமல் தோஷாரோபணஞ் செய்கின்றனர். பூகம்பம், புசல்காற்று, கொடிய வியாதிகள், புலி, பாம்பு, பாஷாணம், பஞ்சம் முதலானவைகள் எவ்வளவோ உபயோக மானவைகளா யிருப்ப தன்றியில், நீதி போதனைகளையுங் கற்பிக்கின்றன. இவைகளின் பெருமைகளை யறிந்துய்ய மானிடருக்குப் போதுமான ஞானமும், காலமும் வளரவில்லை. நன்மையே வடிவாகக்கொண்ட கடவுளின் சிருஷ்டியாகிய இந்தப் பிரபஞ்சம் நன்மை வடிவாகவே யிருக்கிறது. நரர்கள் இதன் பெருமையை நன்குணர நாட்கள் பலவாக வேண்டும். கடைசியாகத் தருக்க சாஸ்த்திரத்தை யனுசரிக்கினும்; பிரகாசமென்பதைப் பொருளாக்கப்பட்டிருக்கிறதேயன்றி, இருட்டையும் ஓர் பொருளாக்கப் படவில்லை. எவ்விடத்தில், பிரகாசமென்னும் பொருளில்லையோ அவ்விடத்திற்கு,இருட்டென்பதைப் போலவே; எப்போது எவ்விடத்தில் இருக்கும் நன்மையை யறியும்படியான ஞானமில்லையோ அப்போது, அவ்விடத்தில் தீமையாரோபிக்கின்றனர்.

அந்த எல்லாம் வல்ல வள்ளலின் அபாரசக்தியையும், கருணையையும், பூரணமாய் அறியும் சக்தியின்மையால்

1. "நஞ்சமுமமுதமு நாகும்வீடுமாய்
வஞ்சமுஞானமு மறப்புமாயினை

"All are but parts of a stupendous whole,
Whose body nature is and God the soul,
That changed through all, and yet in all the same,
Great in the Earth, as in the starry frame,
Warms in the sun, refreshes in the breeze,
Glows in the stars, and blossoms in the trees,
Lives through all life, extends through all extent,
Spreads undivided, operates unspent,
To Him, no high, no low, no great, no small,
He fills, He bounds, connects and equals all,
Safe in the hand of one disposing Power,
Or in tne ratal or the mortal hour,
All nature is but art unknown to thee,
All chance, direction which thou can't not see,
All discord, harmony not understood,
All partial evil, universal good.

இருவினைப்பகுதியு மின்பதுன்பமுங்
கருணையும்வெகுளியுங் கருத்துமாயினை" என்றும் ;

2. " அருவேயுருவேயமுதேயழகே யாவேகாவேபே
ரறிவேசெறிவே யலரேமணமேயாதாராநீதா
கருவேமுளையே விளைவேபுனலே காலேவானேநீள்
கதிரேயொளியேயளியேவெளியே கானேதேனேசேர்."
என்றும் ;

3. " பூதலயமாகின்ற மாயைமுதலென்பர்சிலர்
பொறிபுலனடங்குமிடமே
பொருளென்பர் சிலர்கரண முடிவென்பர் சிலர்
குணம் போனவிடமென்பர் சிலபேர்
நாதவடிவென்பர் சிலர்விந்துமய மென்பர்சிலர்
நட்டநடுவேயிருந்த
நாமென்பர்சில ருருவமாமென்பர்சிலர்
கருதிலருவென்பர்சிலபேர்
பேதமறவுயிர்கெட்ட நிலயமென்றிவர்சிலர்
பேசினருவென்பர்சிலபேர்
பின்னுமுன்னுங்கெட்ட சூனியமதென்பர்சிலர்
பிறவுமேமொழிவரிவையாற்
பாதரசமாய்மனது சஞ்சலப்படுமலாற்
பரமசுகநிஷ்டைபெறுமோ." என்றும் ;

4. " விண்ணிறைந்தவெளியாயென்
மனவெளியிற் கலந்தறிவாம் வெளியினூடு
தண்ணிறைந்தபேரமுதாய்ச்
சதாநந்தமானபெருந்தகையேநிற்பா
லுண்ணிறைந்த பேரன்பாலுள்ளுருகி
மொழிகுளறியுவகையாகிக்

---

Whate'er exists within this universe
Is all to be regarded as enveloped
By the great Lord, as if wrapped in a vesture
There is one only Being who exists
Unmoved, yet moving swifter than the mind ;
Who far outstrips the senses, though as Gods
They strive to reach Him ; who himself at rest
T.anscends the fleetest flight of other beings ;
Who like the air, supports all vital action,
He moves, yet moves not; he is far, yet near
He is within this universe. Whoe'er beholds
All living creatures as in Him and Him
The Universal Spirit—as in all
Henceforth regards no creature with contempt.

கண்ணிறைந்த புனலுகுப்பக்கரமுகிழ்ப்ப
நின்னருளைக்கருத்திலவைப்பாம்." என்றும் ;

5. " சராசரப்புவியாய்ப் புனலுமாய்த்
தனஞ்சயனு யொளிவானுய்ப்
பராவருமுருவாய் பராபரப்பொருளாய்ப்
பரவியபழமறைப்பொருளே—"என்றும்.

6. " அண்டமடுக்கித்திண்புவனத்தைத்
தாழாதாழாதே
யம்புலிவைத்துச்செங்கதிர்வைத்துப்
போமாறேயாதே
பண்டசலப்பொற் றண்டகிறுத்திச்
சாயாதோயாதே
பம்புமலைக்கைத்தெண்டிரையிட்டுச்
சீறுதேறுதே
தொண்டர்வழுத்தப் பண்டெடுத்தாய்
தோலாதோராதே." என்றும் ;

7. " பஞ்சபூதமுமாகியொன்றிடாதொழியாது
பண்படாதழியாதுளே
பம்பிடாதுதியாது சம்பிடாதிறவாது
பங்கமாயகலாதுநே
ரஞ்சுளேயமையாது நெஞ்சுளேதரியா
தனந்தமாய் விரியாதுவாநந்தமாய்" என்றும்.

திருவருட்பாவில்.

அண்டங்கள்பலவாகி யவற்றின்மேலு
மளவாகியளவாத வதீதமாகிப்
பிண்டங்களனந்தவகை யாகிப்பிண்டம்
பிறங்குகின்ற பொருளாகிப் பேதந்தோன்றும்
பண்டங்கள்பலவாகி யிவற்றைக்காக்கும்
பதியாகியானந்தம் பழுத்துச்சாந்தங்
கொண்டெங்கு நிழல்பரப்பித் தழைத்தஞானக்
கொழுங்கடவுட் டருவாகிக் குலவுந்தேவே.

வானேயவ்வானுலவுங் காற்றேகாற்றின்
வருநெருப்பே நெருப்புறுநீர் வடிவேநீரிற்
றானேயும்புவியேயப் புவியிற்றங்குந்
தாபரமேசங்கமமே சாற்றுகின்ற
வூனேநல்லுயிரே யுள்ளொளியே யுள்ளத்துணர்வே
யவ்வுணர்வு கலந்தூறுகின்ற

தேனேமுக்கனியே செங்கரும்பே பாகின்றீஞ்சுவையே
சுவையினைத்துந் திரண்டதேவே.

உலகநிலைமுழுதாகி யாங்காங்குள்ள
வுயிராகி யுயிர்க்குயிரா மொளிதானாகிக்
கலகநிலையறியாத காட்சியாகிக்
கதியாகிமெய்ஞ்ஞானக் கண்ணதாகி
யிலகுசிதாகாசமதாய்ப் பரமாகாச
வியல்பாகி யிணையொன்று மில்லாதாகி
யலகிலறிவானந்த மாகிச்சச்சி
தானந்தமயமாகி யமர்ந்ததேவே.

உலகமெலாந்தனிநிறைந்த வுண்மையாகி
யோகியர்தம்மனுபவத்தி னுவப்பாயென்றுங்
கலகமுறா உபசாந்த நிலையதாகிக்
களங்சமற்றவருண் ஞானக்காட்சியாகி
விலகுலுறா துபநிடவானந்தமாகி
மீதாளத்தெளிர்கின்ற விளக்கமாகி
யிலகுபராபரமாய்ச்சிற் பரமாயன்ப
ரிதயமலர்மீதிருந்த வின்பத்தேவே.

வித்தாகி முளையாகி விளைவதாகி
விளைவிக்கும்பொருளாகி மேலுமாகிக்
கொத்தாகிப்பயனாகிக் கொள்வோனாகிக்
குறைவாகிநிறைவாகிக் குறைவிலாத
சத்தாகிச்சித்தாகி யின்பமாகிச்
சதாநிலையாயெவ்வுயிர்க்குஞ் சாட்சியாகி
முத்தாகிமாணிக்க மாகித்தெய்வ
முழுவயிரத்தனிமணியாய் முளைத்ததேவே.

என்றும் பின்னும் பலர்: பற்பலவிதமாகச் சொல்லியிருக்கிறார்கள். கடைசியாக பூலோகத்திலுள்ள பிரபலமான பெரியமதங்களை ஸ்தாபித்த மதாதிபதிகளும், பண்டிதர்களும், பாமரர்களும், பக்திமான்களும், தத்துவசாஸ்திரிகளெல்லாரும் "அகரமுதல வெழுத்தெல்லா மாதிபகவன் முதற்றேயுலகு." என்று திருவள்ளுவ நாயனார் செப்பியதைப் போலவே ஆதியில் கடவுள் பூமியைப் படைத்துப் பாதுகாத்து வருவதாகச் சொல்லியிருக்கிறார்கள். பூலோகத்திற் பூர்வம்முதல் பெரும் புகழைப்பெற்ற பூர்வாசாரியர்களாகிய நம்முன்னோரும், இது விஷயமாக வேத உபநிஷத்துகளாகச் சொல்லிய சில வாக்கியங்களைக் கூறுகிறேன்.

தைத்திரிய உபநிஷத்து, பிருகுவல்லி 1-வது அனுவாகத்தில் "யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே, யேநஜாதாநி ஜீவந்தி, யத்பிரயந்த்யபிஸம்விஸந்தி, தத்விஜிஜ்ஞாஸஸ்வ தத்ப்ரஹ்ம்" என்று சொல்லப்பெற்றிருக்கிறது. இதன் கருத்தாவது— எதனிடத்திலிருந்து (சிதசிதாத்மகமாகிய) ஜகத் முதலான பொருள்களுண்டாகின்றனவோ, உண்டானவை எதனால் நிலைபெற்றிருக்கின்றனவோ, எதனிடம் மீண்டும் சென்று சேர்கின்றனவோ அதை முக்கியமாக அறிய விரும்புங்கள், அது ப்ரஹ்மம் என்று கோஷிக்கின்றது.

இத்யாதி உபநிஷத்துக்களை அநுசரித்தே ஸ்ரீ வியாசர் உலகசிருஷ்டியைப்பற்றி தாம் இயற்றிய பிரம்மசூத்திரத்தில் பின்வருகிறபடி சொல்லியிருக்கிறார். "ஜன்மாத்யஸ்யயதஃ" இந்தபிரபஞ்ச சிருஷ்டிஸ்திதிலயங்களுக்கு எவன் காரணனோ அவனே பிரஹ்மமென்றும், "ஆகாஶஸ்தலிங்காத்" சகலபூதங்களின் உற்பத்திஸ்திதிலயங்களுக்குக் காரணமான ஆகாசவாச்சியன் பிரஹ்மமே என்றும், "சாக்ஷாச்சோபயாம்நாத்." பிரபஞ்ச உற்பத்தி லயாதி காரணங்கள் பிரஹ்மத்தினலேயே யாகிறபடியால், பிரஹ்மமே ஜகத்துக்கு உபாதானகாரணமென்றும் "ஆத்மகிருதேஃ பரிணமாத்" பிரஹ்மமானது தனக்குத் தானே பிரபஞ்சரூபமாக பரிணமிக்கச் செய்துகொள்ளுகிறதெனறும், யோநிஸ் சஹிகீயதே" பிரஹமத்தின் தேகத்திலிருந்து பிரபஞ்ச முண்டானதால் அப் பிரஹ்மமே உபாதான காரணமென்றும், "ஸர்வோபேதா சததர்ஸநாத்" ஸர்வ சக்தியையுடைய சர்வேசுவரனே ஜகத்தை சிருஷ்டித்துப் பாதுகாத்துவருகிறான் என்றும் பின்னும் பலவிதமாகச் சொல்லி இருக்கிறார். இம்மட்டோ! உலக சிருஷ்டியைப்பற்றி பிரஸ்தாபிக்கும் பின்னும்சில உபநிஷத்துக்களைப் பாருங்கள்.

* கடோபநிஷத்து. 6-வது வல்லி, 2-வது வாக்கியத்தில்.

"இதோ இருக்கிற உலகமுழுதும் பரமாத்துமாவினிடத்திலிருந்து வெளிப்பட்டதாகி பிராணஸ்வரூபனுகிய அவரிலேயே அசைந்துக் கொண்டிருக்கின்றது. இடிக்கிற இடியைப்

* "யதிதம் கிஞ்ச ஜகத்ஸர்வம் ப்ராண ஏஜதி நிஃஸ்ருதம்; மஹத்பயம் வஜ்ரமுத்யதம் ய ஏதத்விதுரம்ருதாஸ்தே பவந்தி"

போல், அவர்மிகவும் பயங்கரமானவர், இந்த வஸ்துவை அறிகிறவர்கள் நித்தியபதவியுடையவர்களாகின்றனர்.'' என்றும்;

* தைத்திரியம், ஆநந்தவல்லி 9-வது அநுவாகம், இரண்டாவது வாக்கியத்தில்.

''அவர் உலகத்தைப்படைக்கும விஷயமாக ஆலோசனை செய்தார்; ஆலோசனை செய்துகொண்டே, இங்கே எவ்வளவு ஸ்வல்பமா யிருக்கின்றனவோ இவை யாவற்றையும் படைத்தார்.'' என்றும்;

† முண்டகோபநிஷத்து, 2-வது முண்டகம் 1-வது கண்டம், மூன்றாவது வாக்கியத்தில்.

'' இவரில் பிராணனும், மனதும், எல்லா இந்திரியங்களும் வானமும், காற்றும், தீயும், யாவற்றையுந் தாங்கிக்கொண்டிருக்கிற பூமியும் உண்டாகின்றன,'' என்றும்;

‡ ''பிராஹதாரணியம், 5-வது அத்தியாயம், 9-வதுவாக்கியத்தில்''

'' இந்த அழிவற்ற பொருளினது நியமத்தால் மண்ணுலகமும், விண்ணுலகங்களும் தாங்கப்பட்டிருக்கின்றன.'' என்றும்;

§ ஈசோபநிஷத்து, முதலாவது வாக்கியத்தில்

---

* ''ஸ தபொ தப்யத ஸ தபஸ்தப்த்வா இத3ம் ஸர்வ மஸ்ருஜத யதி3த3ம் கிஞ்ச.''

† ''ஏதஸ்மாஜ்ஜாயதெ ப்ராணோ மந: ஸர்வேந்த்3ரியாணி ச; க2ம் வாயுர்ஜ்யோதிராப: ப்ருதி2வீ விஶ்வஸ்ய தா4ரிணீ.''

‡ ''ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸநெ கா3ர்கி3 த்3யாவாப்ருதி2வ்யௌ வித்4ருதெ திஷ்ட2த:.''

§ ''ஈஶா வாஸ்ய மித3ம் ஸர்வம் யத்கிஞ்ச ஜக3த்யாம் ஜக3த்; தெந த்யக்தெந பு4ஞ்ஜீதா2 மா க்3ருத4: கஸ்யஸ்வித்3 த4நம்.''

"இந்தப் பிரமாண்டத்தில் ஏதோ கிஞ்சித்தாக இருக்கிற இவ்வுலக முழுமையும் பரமேசுவரனால் வியாபிக்கப்பட்டிருக்கிறது, பாபசிந்தையைவிட்டுப் பிரம்மாநந்தத்தை யடையுங்கள், யாருடைய பொருளையும் விரும்பாதேயுங்கள்." என்றும்;

* "இந்தத்தேவன் உலகத்தை உண்டுபண்ணினவன். மஹாத்மா; இவர் ஜனங்களுடைய உள்ளங்களில் எப்பொழுதும் நன்றாக வீற்றிருக்கிறார்." என்றும்;

† பிரஹதாரண்ணியம் 9-வது அத்தியாயம், 4-வது பிராமணம், 22-வது வாக்கியத்தில்.

"இவர் யாவற்றிற்கும் ஈசுவரர், இவர்எல்லாப்பொருளுக்கும்தலைவர், இவர் எல்லாப்பொருள்களையுங் காப்பவர், இவர், இவ்வுலகங்கள் தன்னிலைவிட்டு மாறுதபடி சேதுவைப்போல யாவற்றையுந் தாங்கிக் கொண்டிருக்கிறார்." என்றும்;

‡ முண்டகோபநிஷத்து 2-வது முண்டகம் 2-வது கண்டம் 5-வது வாக்கியத்தில்.

"இவரிடத்தில் விண்ணுலகமும், மண்ணுலகமும், ஆகாயமும், மனதுடன் எல்லாப்பொறிகளும் நிலைப்பட்டிருக்கின்றன. ஒன்றாகிய அந்த பரமாத்துமாவை அறியுங்கள்: அவருக்குப் புறம்பாகிய வார்த்தைகளை விடுங்கள், மோக்ஷமார்க்கத்திற்கு இவர் சேதுவைப்போன்றவர்." என்றும்.

---

* "ஏஷ தேவோ விஶ்வகர்மா மஹாத்மா ஸதா ஜநாநாம் ஹ்ருதயே ஸந்நிவிஷ்ட:"

† "ஏஷ ஸர்வேஶ்வர ஏஷ பூதாதிபதிரேஷ பூதபால ஏஷ ஸேதுர்விதரண ஏஷாம் லோகாநாமஸம்பேதாய."

‡ "யஸ்மிந்த்யௌ: ப்ருதிவீ சாந்தரிக்ஷமோதம் மந: ஸஹ ப்ராணைஶ்ச ஸர்வை: தமேவைகம் ஜாநத ஆத்மாநமந்யா வாசோ விமுஞ்சதாம்ருதஸ்யைஷ ஸேது:."

* பிரஹதாரண்ணியம் 5-வது அத்தியாயம் 7-வாக்கியத்தில்.

"ஓ கார்க்கீ! இந்தஅழிவற்றபுருஷனுடைய நியமனத்தினால், நிமிஷங்களும் முகூர்த்தங்களும், அகோராத்திரங்களும் பக்ஷங்களும், மாதங்களும், பருவங்களும், வருஷங்களும் நியமத்தில் வைக்கப்பட்டிருக்கின்றன." என்றும்,

† பிரஹதாரண்ணியம், ஷை வாக்கியத்தில்.

"இந்தஅழிவற்றபொருளினதுநியமனத்தினால் ஓகார்க்கீ! கிழக்கு திக்கைநோக்கி ஓடுகிற வேறு ஆறுகளும், மேற்குதிசையை நோக்கி ஓடுகிற வேறு ஆறுகளும், பனியினால் வெண்மையாயிருக்கின்றமலைகளிலிருந்துபெருகுகின்றன" என்றும்;

‡ நாராயணம் 12-வது வாக்கியத்தில்,

"எங்கும் அவரது கண், எங்கும் அவரது முகம், எங்கும் அவரது கை, எங்கும் அவரது கால், அவர் மனிதரது உடலுக்குக் கைகளையும்; பறவைகளினது உடலுக்கு இறகுகளையும், சேர்த்து வைத்திருக்கிறார். ஒன்றாகிய கடவுளே மண்ணுலகத்தையும், விண்ணுலகத்தையும் படைத்தார்" என்றும்;

§ முண்டகோபநிஷத்தில்.

---

* "ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸநே கார்கி நிமேஷா முஹூர்தா அஹோராத்ராண்யர்தமாஸா மாஸா ருதவ: ஸம்வத்ஸரா இதி வித்ருதாஸ்திஷ்டந்தி."

† "ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸநே கார்கி ப்ராச்யோऽந்யா நத்ய: ஸ்யந்தந்தே ஶ்வேதேப்ய: பர்வதேப்ய: ப்ரதீச்யோऽந்யா:."

‡ "விஶ்வதஶ்சக்ஷுருத விஶ்வதோமுகோ விஶ்வதோஹஸ்த உத விஶ்வதஸ்பாத் ஸம் பாஹுப்யாம் நமதி ஸம் பதத்ரைர் த்யாவாப்ருதிவீ ஜநயந்தேவ ஏக:."

§ [illegible] லோகா: கர்மஸு [illegible].

"யார் தேவதைகளுக் கதிபதியோ, யாரிடத்தில் உலகங்கள் நிலைபெற்றிருக்கின்றனவோ, யார் இரண்டுகால் ஜந்துக்களையும், நான்குக்கால் ஜந்துக்களையும், நியமத்தில் வைத்துக் கொண்டிருக்கிறாரோ, அவர், பிறப்பற்ற இந்த மஹாத்துமா." என்றும்;

* பிரஹதாரண்ணியம் 7வது அத்தியாயம் முதலாவது வாக்கியத்தில்:—

" இப்படிப்பட்ட இப்பரமாத்துமாவே யாவற்றுக்கும் நிபந்தா; யாவற்றிற்குந்தலைவர். அவர் இவ்வுலகத்தில் எந்தப் பொருள்களிருக்கின்றனவோ அவை யாவற்றையும் நியமத்தில் வைத்துக்கொண்டிருக்கிறார்." என்றும்;

† சுவேதாச்வதர உபநிஷத்தில்,

"யார் உலகத்தைப் படைத்தவரோ, உலகத்தை யறிந்தவரோ, ஆன்மாக்களுக்குக் காரணரோ, ஞானமுள்ளவரோ, காலத்திற்குத் தலைவரோ, குணத்தையுடையவரோ, யாவற்றையுமறிந்தவரோ, அவர் அசித்துப்பொருள், சித்துபொருள் இரண்டையும் காப்பவர், குணங்களுக்குத் தலைவர், ஸம்ஸாரத்தினது நிலைக்கும் பந்தமோக்ஷங்களுக்கும் காரணரானவர்." என்றும்;

‡ "அவர் ஞானஸ்வரூபி, அழிவற்றவர், யாவற்றிற்கும் தலைவராகிய நன்றாக விருப்பவர், எல்லாவிடத்திற்கும் போகி

* 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯𑍇𑌶𑌾𑌨𑌃 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯𑌾𑌧𑌿𑌪𑌤𑌿𑌃 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌪𑍍𑌰𑌶𑌾𑌸𑍍𑌤𑌿 𑌯𑌦𑌿𑌦𑌂 𑌕𑌿𑌂𑌚.

† 𑌸𑌵𑌿𑌶𑍍𑌵𑌕𑍃𑌦𑍍𑌵𑌿𑌶𑍍𑌵𑌵𑌿𑌦𑌾𑌤𑍍𑌮𑌯𑍋𑌨𑌿𑌃 𑌯𑌃 𑌕𑌾𑌲𑌕𑌾𑌲𑍋 𑌗𑍁𑌣𑍀𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌦𑍍𑌯𑌃, 𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞 𑌪𑌤𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑍇𑌶𑌃 𑌸𑌂𑌸𑌾𑌰𑌮𑍋𑌕𑍍𑌷𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌬𑌨𑍍𑌧𑌹𑍇𑌤𑍁𑌃.

‡ 𑌸𑌤𑌨𑍍𑌮𑌯𑍋𑌹𑍍𑌯𑌮𑍃𑌤 𑌈𑌶𑌸𑌂𑌸𑍍𑌥𑍋 𑌜𑍍𑌞𑌃 𑌸𑌰𑍍𑌵𑌗𑍋𑌭𑍁𑌵𑌨𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌯𑌗𑍋𑌪𑍍𑌤𑌾; 𑌯 𑌈𑌶𑍇𑌽𑌸𑍍𑌯𑌜𑌗𑌤𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍇𑌵 𑌨𑌾𑌨𑍍𑌯𑍋 𑌹𑍇𑌤𑍁𑌰𑍍𑌵𑌿𑌦𑍍𑌯𑌤 𑌈𑌶𑌨𑌾𑌯; 𑌤𑌂 𑌹𑌦𑍇𑌵𑌮𑌾𑌤𑍍𑌮 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌂 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑍁𑌰𑍍𑌵𑍈 𑌶𑌰𑌣𑌮𑌹𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇.

றவர். இவ்வுலகத்தின் பாலகர், யார் இவ்வுலகத்தை எப்பொழுதும் நியமத்தில் வைத்திருக்கிருரோ, அவர்தவிர இவ்வுலக நியமத்திற்கு வேறு காரணமில்லை. நான் முமுக்ஷுவாகி ஆத்தும புத்திப் பிரகாசனுகிய அப்பரமேசுவரனை சரணடைகிறேன்.” என்றும்;

ஸவ்ருக்ஷகாலாக்ருதிபி: பரோந்யோ யஸ்மாத் ப்ரபஞ்ச: பரிவர்த்ததேயம்; தர்மாவஹம் பாபநுதம் பகேஶம் ஜ்ஞாத்வாத்மஸ்தமம்ருதம் விஶ்வதாம; விஶ்வஸ்யைகம் பரிவேஷ்டிதாரம் ஜ்ஞாத்வா ஶிவம் ஶாந்திமத்யந்தமேதி.

“யாரில் இந்தப் பிரபஞ்சம் சுழன்று கொண்டிருக்கிறதோ; அவர், உலகம், காலம், உருவமுடைய பொருள்கள் இவையெல்லாவற்றையும்விடச் சிறந்தவர், வேருனவர். அவர் தருமத்திற்கு மூலமானவர். பாபத்தைப் போக்குகிறவர். செல்வத்திற்குத் தலைவர். அவர் எல்லா உயிர்களுக்கும் உள்ளேயிருப்பவர். அழிவற்றவர், உலகத்திற் காதாரமானவர். அவர் நன்மையே வடிவாக உடையவர். உலகத்தைச் சூழ்ந்திருக்கிற ஒருவர். அவரை யறிந்து உயிர்கள் மிகச் சாந்தியைப் பெறுகின்றன” என்று பல நூற்றுண்டுகளுக்கு முன்பே சொல்லியிருக்கிருர்கள். ஆகவே, இந்த உலகம் கடவுளால்தான் படைத்துப் பாதுகாக்கப்பட்டு வருகிறதென்னும் கொள்கை சுருதி யுக்தி யனுபவத்திற்குப் பொருந்தி யிருக்கிறது.

ஆகையால், அகிலாண்டகோடி பிரம்மாண்டங்களைப் படைத்து ஆதரித்துவரும் அபாரசக்தியும், அபாரகருணையுமுள்ள ஆதிமத்தியாந்த ரகிதமான வஸ்துவை நாம் ஆராதித்து துதிப்போமாக.

## தேவாரம்.

“அண்டகோடிகள்படைத்தேயவையசைவுறச்செய்தின்னும்
பிண்டமாதிகளுக்கெல்லாம்பிராணனுயிருந்துலாவிப்
பண்டைநான்மறைக்குமெட்டாப்பகவநின்னடிதனக்கே
தொண்டுகொன்புரிக்தேனின்னைத்தொழுதய்யும்வரமளிப்பாய்.”

ஓம்! சாந்தி: சாந்தி: சாந்தி: ஹரி: ஓம்.

ஓம்.

பிரஹ்மணேநம:

# ஜீவாத்துமா

## "ஸ்தூலதேகத்திலிருக்கிறது"

என்பதைப்பற்றிப்

பெங்களூர் பிரஹ்மோபாசனா சாலையில்

(1880-௵ 31௳ நடந்த 9-வது பிரஹ்மோற்சவ காலத்தில்)

சேலம், பகடால, நரஸிம்முலு நாயுடவர்கள்

செய்த உபந்நியாசமாகிய

# ஆஸ்திகமத சித்தாந்தம்

அல்லது

# மதவிருக்ஷத்தின்

## இரண்டாம் பாகம்.



## இரண்டாவது அத்தியாயம்.



𑌶𑍃𑌣𑍍𑌵𑌨𑍍𑌤𑍁 𑌵𑌿𑌶𑍍𑌵𑍇 𑌅𑌮𑍃𑌤𑌸𑍍𑌯 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌃
𑌆 𑌯𑍇 𑌧𑌾𑌮𑌾𑌨𑌿 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑌿 𑌤𑌸𑍍𑌥𑍁𑌃 ॥

ஓ! ரமணீயமான விடங்களில் வசிப்பவர்களும் நித்தியருடைய பிள்ளைகளுமாகிய எல்லா உயிர்களே! செவியுற்றுக் கேளுங்கள்!

"𑌸𑌤𑍍𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌨𑌨𑍍𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌯𑍋𑌵𑍇𑌦 𑌨𑌿𑌹𑌿𑌤𑌂 𑌗𑍁𑌹𑌾𑌯𑌾𑌂 𑌪𑌰𑌮𑍇 𑌵𑍍𑌯𑍋𑌮𑌨𑍍 𑌸𑍋𑌽𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 𑌸𑌹 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌾 𑌵𑌿𑌪𑌶𑍍𑌚𑌿𑌤𑌾"

" ஸத்தியஸ்வரூபியும் ஞானஸ்வரூபியும், முடிவற்றவரு மான பிரம்மத்தைச் சிறந்த தேகாகாசத்தில் ஆத்துமாவினிட த்தில் இருப்பதாக யார் அறிகின்றாரோ, அவர் எல்லாமறிந்த பிரம்மத்துடன் ஸகல போகங்களையு மனுபவிக்கிறார்."

---

ஆன்மகோடிகளையாக்கியவைகளும்வாழ்வதற்கே
மேன்மையாமுலகமீன்றமேலோர்கள்போற்றும்மைசூர்
பான்மையாம்பெங்களூருபரப்பிரம்மமண்டபத்தில்
ஆன்மலக்கணம்யாஞ்செய்யவாண்மைதந்தருள்வாய்தேவே.

அறிவிற் சிறந்த அன்பர்களே!

ஆனந்தத்தையே தரும் இந்த ஆலயத்திற் செய்யும் பிரசங்கத்தை நீங்கள் யாவருங் கேட்கிறீர்களல்லவா? இப்ப டிப் பிரசங்கஞ் செய்வது எது? கேவலம் பிராகிருதமான ஸ்தூலதேகமா? அல்லது இந்த ஸ்தூல தேகத்திலிருக்கும் "நான்" என்கிற சக்தியா? கேவலம் எலும்புகளால் கட் டப்பட்டும், தோல் ஜவ்வு தசையாதிகளால் கவசமாக மூடப்பட்ட ஸ்தூலதேகமா: திரிசிரபுரத்திலிருந்து சேலத்தி ற்கும்; சேலத்திலிருந்து பெங்களூருக்கும்; புகைவண்டியால் வந்து, மழையா லடிபட்டு இந்தப் பிரம்மாலயத்தில் பிரசங் கஞ் செய்யக்கூடுமா? ஒருக்காலமும் செய்யக்கூடா தல்லவா? ஆகவே, தூரத்தையும் நேரத்தையும், இருளையும், பொருளை யும் பாராட்டாமல் கட்டை வண்டிகளிலும், புகைவண்டிகளி லும் ஏறிப் பேரானந்தத்தைத் தரும் இந்த மஹோற்சவத் திற் பிரசங்கம் செய்யும்படியான "ஓர் சக்தி" இந்த ஸ்தூல தேகத்தி லிருந்திருக்க வேண்டுமென்கிற யூகை உங்களுக்குள் ஜனிக்குமல்லவா? அந்தச் சக்தியேதான் "நான்" அல்லது ஜீவாத்மா. இப்படி ஸ்தூல தேகத்தில், "நான்" அல்லது "தான்" என்கிற "ஜீவாத்மா" இருக்கிற தென்பது எனது கோட்பாடு மாத்திரமல்ல. மனிதனென்பது: பிராகிருதமான ஸ்தூலதேகமும்; அப்பிராகிருதமான சூக்ஷ்ம தேகமாகும் ஜீவாத்மாவுங் கூடிய வஸ்துவென்றும்; ஜீவாத்மாவே "தான்" என்றும்; இந்தத் "தான்" என்கிற ஜீவாத்மாவின் உபகரண மே ஸ்தூலதேகமென்றும்; மனம், புத்தி, சித்தம், அகங்கார மென்னும் அந்தக்கரணம் ஜீவாத்மாவைச் சார்ந்தவைகளெ ன்றும்; ஜீவாத்மா சுதந்தரனாகி விருக்கினும், ஸ்தூல தேகத் தில் சம்பந்தப் பட்டபடியால் பரதந்தரியென்றும்; ஸ்தூல தேகமானது ஜீவாத்மாவுக்கு ஓர் ஊழியனைப்போல உழைத்

துவந்தாலும், அந்த ஜீவாத்மாவை (பெட்டியைப்போன்ற) தனக்குள்வைத்து மூடிக்கொண் டிருக்கிறதென்றும்; முடிவில் ஜீவாத்மாவானது பரமாத்மாவினிடம் சேருமென்றும்; ஸ்தூல தேகமோவெனில், பூமியில் பஞ்சபூதத்தில் லயமாகி விடுகிறதென்றுந் தொன்றுதொட்டு ஹிந்துக்களாலும், சீனராலும், பாரசீகராலும், யூதேயராலும், கிரேக்க ரோமகர்களாலும், கடைசியாகக் கிறிஸ்தவர்களாலும், மகம்மதியர்களாலும், படிப்பாளிகளாலும், பாமரர்களாலுங் கொண்டாடப்பட்டு வருவது உங்களில் அனேகருக்குத் தெரிந்த விஷயமல்லவா?

ஆனால், ஹிந்து தேசத்தில் பூர்வத்திலிருந்த சாங்கிய சார்வாகாதி சமயத்தார்களிற் சிலரும், Nero—நீரோ, Mansel—மான்சல், Gibbon—கிப்பன், Hume—ஹ்யூம், Reid—ரீட், Buckle—பக்கில், Magaris—மாகரிஸ், Buchner—பக்கினீர், Bain—பெயின், Profeser—புரொபெஸர், Heckel—ஹெக்கல், Bradlaugh—பிராட்லா முதலானவர்களைப் போன்ற வேறுதேசத்து நாஸ்திகரென்ற சந்தேக வாதிகளிற் சிலர்மாத்திரம், ஜீவாத்மாவைப்பற்றிப் பலவிதமாகப் பிரஸ்தாபித்துச் சில புஸ்தகங்களைப் பிரசுரஞ்செய்திருக்கின்றனர்.

இவர்களில் சிலர்: "ஸ்தூல தேகத்தைவிட ஜீவாத்மாவிற்கு உருவும், பொறிபுலனு மில்லையே, அப்படிப்பட்ட ஜீவாத்மாவிற்கு அறிவேது? உணர்ச்சியேது? நரக, சுவர்க்கங்களை யெப்படி யனுபவிக்கும்?" என்று சொல்லியிருக்கிறார்கள்.

சிலர்: "ஜீவாத்மா அருவமாகில், அது உருவமாகிய ஸ்தூல தேகத்தை யெப்படித் தாங்கிகொள்ளுமென்றும்; ஜீவாத்மா உருவென்றால், உடலுக்குள்ளுடல் எப்படித்தங்கி நிற்குமென்றும்; ஜீவாத்மா அணுவெனில், நவத்துவாரங்களிற்புகுந்து ஓடிப்போகாமல் நிற்குமோ வென்றும்; ஜீவாத்மா நித்தியமாகில், அதற்கு உதய, அஸ்தமனமில்லையே யென்றும்; ஜீவாத்மா எங்கு முள்ளதென்றால், அது ஸ்தூல தேகங்கள்தோறும் பேதப்படுகிறபடியால் எங்கு மில்லையென்றும்; ஸ்தூல தேகத்தைவிட்டு ஜீவாத்மா பிரிந்துபோகிறதை யாராவது பார்த்ததுண்டா வென்றுஞ்" சொல்லி யிருக்கிறார்கள்.

சிலர்: பஞ்சபூதத்தின் ஐக்கியத்தினுலுண்டான ஸ்தூல தேகமே பிராணன் அல்லது ஜீவாத்மாவென்றும்; ஸ்தூலதேகம் பஞ்சபூதத்தில் லயமாகிவிடும்போது, அந்தப் பிராணனுகிய ஜீவாத்மாவும் பொருளற்றுப் பஞ்சபூதத்தில் லயமாகிவிடுமென்றும்; ஜீவாத்மாவென்ற ஒரு வஸ்துவிருக்கில்,நேத்திரத்திற்கேன் தோன்றவில்லையென்றும்; ஸ்தூலதேகத்தை வதைத்தால், ஜீவாத்மா வருந்தக் கூடுமோ வென்றும், ஸ்தூல தேகம் அங்கஹீன மாகிவிட்டால், ஜீவாத்மா யாதொரு கருமத்தையுஞ் செய்யாதிருப்பதேனென்றும்; ஜீவாத்மாவானது எப்போதும் ஒரேவிதமானதாகில் பாலியம், யௌவனம், முதுமைக் காலங்களில், ஸ்தூலதேகத்துக்குத்தக்கபடி வித்தியாசமாக நடிக்கக் காரண மேதென்றும்; ஆகவே, ஜீவாத்மாவென்ற ஒருபொருள்ஸ்தூலதேகத்திலிருப்பதாக எண்ண விடமில்லையென்றும்,பஞ்சபூதத்தின் ஐக்கியத்தால் சகலமும் நடக்கிறதென்றும், பஞ்சபூதமிருப்பது மாத்திரம் உண்மையென்றும்" இன்னும் பலவகையாகச் சொல்லியிருக்கிறார்கள்.

கல்வி கேள்விகளிற் சிறந்த கனவான்களே, கேளுங்கள், கேளுங்கள்!

(ஆத்மாவென்ற பதத்தின் பொருள்)

ஆத்மா என்கிற பதத்திற்கு அநேகர் அநேக விதமாக அருத்தஞ் செய்திருக்கிறார்கள். அமரம், பிரதமகாண்டம் காலவர்க்கம் 137-வதுசுலோகத்தில் உஉ—"க்ஷேத்ரஜ்ஞ ஆத்மா புருஷ:" க்ஷேத்திரஜ்ஞாதி சப்தங்கள் மூன்றென்றும்! ஸாங்க்யம் — சாங்கியத்தில், ஜீவனுடைய பெயர்களென்றும்! "க்ஷேத்ரம் ஶரீரம் ஜாநாதீதி க்ஷேத்ரஜ்ஞ:, ஜ்ஞ அவபோதநே" "க்ஷேத்திரமென்றால்"—சரீரம்: அதை அறிந்தவன்என்றும்; "அததி ஸம்ஸாரதீத்யாத்மா அத ஸாதத்ய கமநே"—சம்சாரத்திலேயே ஜ்வலிப்பவன் என்றும்; "அத்தி ஸ்வகர்மபலமிதி வா ஆத்மா அத பக்ஷணே—சுவகர்மபலத்தை பக்ஷிக்கின்றவன் என்றும்; "புரி ஶரீரே ஶேத இதி புருஷ: ஶீங் ஸ்வப்நே" புரமென்றால் சரீரம். அதிலிருப்பவனுகையால் புருஷன் என்றும்; "புரி தேஹே வஸதீ

திவா புமான் புருஷ: ஷட்ஸு வர்ஷமநந்தவஸாதயே நபு" சரீரத்தி லிருக்கின்றவன் என்றும்; அதே அமரம், திருதியகாண்டம், நானார்த்தவர்க்கை, நாந்தசப்தம் 226-வது சுலோகத்தில் * "ஆத்மா யத்நோ த்ருதிர்புத்தி: ஸ்வபாவோ ப்ரஹ்ம வர்ஷ்ம ச" ஆத்மன் என்னும் சப்தம்: யத்தினத்திற்கும், தைரியத்திற்கும், புத்திக்கும், சுபாவத்திற்கும், பரமாத்மாவிற்கும், தேகத்திற்கும் (வ) "ச" காரத்தினால் ஜீவனுக்கும் சொல்லலாமென்றும்; "அததீதி ஆத்மா" ந, பு "அதஸாதத்யேந இடைவிடாமல் சஞ்சரிப்பது என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் பரதகண்டத்தின் பூர்வபாஷா பிரபாகரராகப் பிரகாசிக்கும் ஸ்ரீமத் ஜீவாநந்த வித்தியாசாகரர்: தாராநாத தர்க்காலங்கார வாசஸ்பதி யவர்களுடைய பெருமுயற்சியால் வெளியாகிய "ஸமஸ்கிருதாபிதானம்" என்னும் அகராதியில், "ஆத்மா" என்ற பதத்திற்கு அத + மனிண் — ஆத்மன். ("அத ஸாதத்யேந") என்றும், "அததீதி ஆத்மா" — ஸ்வபாவ: — சுவரூபம், யத்ந: — யத்னம், தேஹ: — தேகம், மந: — மனது, வ்யாப்தி: — வியாபாரம், வ்ருத்தி: — விருத்தி, அர்க்க: — சூரியன், அக்நி: — அக்கினி, வாயு: — வாய்வு, ஜீவ: — ஜீவன், ப்ரஹ்மணி — பிரமம் முதலானவைகளுக்குச் சொல்லலாமென்றுஞ் சொல்லி யிருக்கின்றனர், இது நிற்க.

---

† பு॥ யத்ராப்நோதி யதாதத்தே யச்சாத்தி விஷயாநிஹ। யச்சாஸ்ய ஸந்ததோ பாவஸ்தஸ்மாதாத்மேதி கீர்த்யதே। 'ப்ரஹ்ம - ஸ்வாத்ம விஜ்ஞாநாத்மந:। ஸர்வத்ர வ்யாப்த இத்யர்த்த:। ஸ்வாபாவஸ்வபாவஜாதிர்வ:। க்ருதோ - ஷ்ட்ராத்மா - க்ஷேத்ர "யாத்மா-பரமாத்மேதி-ஆத்மேதி ஸர்வம்। ஸரீரமாத்மா "க்ஷேத்ராத்மா। ஜீவாத்மா நாநார்த்த வர்த்ததே இதி॥

ஸ்த்ரா॥ ஆத்மந்ஸ்ப்ருஹேயதிவேஜீவ இதிஸேஷ:॥

(அமரம் டீகை.)

"ஆத்மாவின்" பொருளைப் பற்றி தமிழ் கிரந்தங்களைப் பரிசோதிப்போமாகில், அதற்குப் பிராணன், ஜீவன், ஆன்மா, நாயகன், அதிகாரி, பிரதானி, உயிர், கூத்தன், முதலான பெயர்களால் வழங்கப்பட்டு வருவதாகத் தெரிய வருகின்றது. இதைப் பற்றியே, "குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே உடம்போடுயிரிடை நட்பு,"—என்று திருவள்ளுவ நாயனார் சொன்னதன்றியில்; "தோற்பைகள் நின்று தொழிலறச் செய்தூட்டுங்கூத்தன் புறப்பட்டக்கால்," என்று நாலடியிலும் சொல்லப்பட்டிருக்கின்றது. பொதுவாக வேதாந்த நூல்களிலோ வெனில் "அகங்காரம் முதல் ஸ்தூலதேகபரியந்தமான காரியகாரண சங்கவிர்தத்துக் கெல்லாம் அதிஷ்டானமாய், இருதய கமலத்தில் அகமகமென்று ஸ்மரித்துக்கொண் டிருக்கின்ற பிரத்யகாத்ம சைதன்னியமே ஆத்மாவென்றுஞ் சொல்லப்படும். பின்னும் பலர் பலவிதமாகச் சொல்லி யிருக்கின்றனர்.

கடைசியாக ஞாலமெங்கும் ஞாயிறைப்போல கப்பிக் கொண்டிருக்கும் ஆங்கிலேய பாஷையில் ஆத்மாவிற்கு*Soul

* The Spiritual, rational and immortal part in man. That part of man which enables him to think and which renders him a subject of moral Government. Sometimes, in distinction from the higher nature or spirit of man, and so called animal soul, that is, the seat of life, the sensitive affections and phantasy, exclusive of the voluntary and rational powers. Sometimes, in distinction from the mind the moral and emotional part of man's nature, the seat of feeling in distinction from intellect. Sometimes, the intellect only; the understanding the seat of knowledge, as distinguished from feeling! "*Webster*."

By the term Soul (applied to Humanity) I mean the *Thinking* Conscious, Substance, be the substance what it might. By the term MIND I mean the Soul's collected knowledge; but inasmuch as the soul's knowledge, namely, its INTELLIGENCE, is the cause of its activity, its motive-power or Source of Action. I shall generally speak of Mind and Soul as convertable terms, and employ the term INTELLIGENCE as a Synonym of both—*The Alpha, page.* 66.

Among the Jews, the Soul was considered to be, not only the principle of *thought*, but also the principle of *life*. We, in our philosophy, follow the Romans, who regarded the thinking principle as one thing, and the principle of life as another. The Romans called the principle of thought—MENS, whence

—ஸோல்என்றும்; அதாவது, மனிதனில் அழியாத அறிவுள்ள ஆவியைப்போன்ற பாகமென்றும்; மனிதனை யூகிக்கவும், நியாயக்கட்டுப்பாட்டிற் குட்படுத்தவும் செய்யும் நாயகமென்றும் மனிதனுடைய மஹோன்னத சுபாவம், அல்லது சக்தியென்றும்; பிராணாத்மா அல்லது உயிர் நிலையென்றும்; அறிவு ஆண்மைக்கு மீறிய பஞ்சேந்திரியப் பிரிய காரணமாகும் மாயா ரூபமென்றும்; மனோமங்கல மென்றும்; மானுஷீக மனோமய மேன்மை யென்றும்; மானத உணர்ச்சியின் உறைவிடமென்றும்; மானத ரூபமென்றும்; அறிவென்றும்; உணர்ச்சியின் பேதத்தை யறியும் புத்தியென்றும் இன்னும் பலவிதமாகச் சொல்லப்பட் டிருக்கின்றது.

இனி "ஆத்ம" இலக்கணத்தைப் பற்றி, நமது தேசத்து அத்வைதிகளும், துவைதிகளும், விசிஷ்டாத்வைதிகளும் சொல்வதைக் கேளுங்கள்.

(ஆத்மாவைப்பற்றி * அத்வைதிகளுடைய கருத்து)

ஆத்மாவைப் பற்றி அத்வைதிகள், உபதேச உண்மை, கைவல்ய நவநீதம், ரிபுகீதை, சிவஞான வள்ளலார், தாயுமான ஸ்வாமிகள், மகாவாக்கியம், மெய்மொழி, சுருதிசார மகாவாக்கியம், அத்துவித உண்மை, வாசிஷ்டம், அபரோட்சாத்மானுபவ தீபிகை யாதி கிரந்தங்களிற் பலவிதமாகப் பேசியிருக்கிறார்கள்.

---

comes our word mental; and the principle of life—ANIMA, whence comes our words *animation*, *animated* as when we speak of the *animated creation*. But in the New Testament, one Greek word expresses the principle of Bodily life and of moral and intellectual power. According to this, it was the Soul which kept the body alive. Some have gone further, and thought that the Soul formed the Body; and that there is a natural connection between each man's form and face, and the character of the Soul; as when Spencer says:

" For of the Soul the body form doth take,
For Soul is form, and doth the Body make."

*The Soul its Nature and Capacities,'*

*The Christian Doctrine of Prayer.—page.* 226.

* அத்வைதம்—இரண்டற்றது—அல்லது ஒன்று என்னும் கொள்கை.

இவர்களி லொருவகையார்: "அவித்தையும், அதிஷ்டான சைதன்னியமும், சைதன்னிய கற்பிதமான அபஞ்சீகிருத, பூத, காரியலிங்க சரீரமும், அதிற் பிரதிபிம்பித்த சிதாபாசனும், சிதாபாச தருமமான கிஞ்சிக்ஞத்வ கர்த்ருத்வ போக்த்ருத்வாதிகளும் கூடியதே * ஜீவஸ்வரூப மென்றுஞ் சொல்லி யிருக்கிறார்கள்.

மற்றொரு வகையார்: அகங்காரம் முதல் ஸ்தூலதேக பரியந்தமான காரிய காரண சங்கவாதத்துக் கெல்லாம் அதிஷ்டானமாய் ஹிருதய கமலத்தில் அகமகமென்று ஸ்மரித்துக் கொண்டிருக்கிற பிரத்யகாத்ம சைதன்னியமே † ஆத்மாவென்றும்.

---

* [illegible] ।
[illegible] ।
[illegible] ।
[illegible] ॥

க॥ [illegible] ।
[illegible] ।
[illegible] ।
[illegible] ॥

(சீதாராமாஞ்சனேயம்.)

† ஆன்மாவைத்தேகமென் றுமறிந்தார்பொன்னைப்பணியென்றார்
மானதிசமுண்டாய்ந்தானேமண்ணைக்கடமாய்நிச்சயித்தா
ரானதந்துபடமென்றேயறநிச்சயித்தாதுபோலு
மானமூடமதனாலேயான்மாத்தேகமெனவறிந்தார்.

அறியுமணியைநெருப்பென்றுமறிந்தார்போலமுகிலோடச்
செறிசந்திரன்றானோடுதல்போற்சலமேயசையச்சந்திரன்றா
னறியவசையுதென்றாற்போலஞ்ஞானத்தாலான்மாவை
பிரியாதேகமாயறிந்தார்பின்னமானவவித்தையினால்.

அவித்தையினாலேயான்மாவிடத்தினிற்றேகமென்று
நவிற்றியவித்தியாசநாமமுண்டாயிற்றென்றே
யவித்தைபோயவிவேகந்தன்னாலறியவேசீவான்மாவும்
தவித்திடாபரமான்மாவுமயிக்கியத்தாவரங்கள்தானே.

(அபரோக்ஷாத்மானுபவதீபிகை)

ஆகையினு லயமாத்மா வெனும் பதத்தால் விளங்கிய சீவாத்மாவுக்கும், ஏகேகபிரம்மமென மொழிபதத் தாம் பரமாத்மாவினுக் கயிக்கியம், மோகவிபரீதமற நான்குவாக் கியத்தாலு மொழிந்தாரேனும்,போகபூரண சொரூபஞான மன்றித் தோன்ருத பொலிவுஞ் சொல்வாம்.

மற்றுமொரு விதமாயிவ் வாக்கியத்தின் மதிக்கின்ற பொருளினையு முரைப்பக்கேளாய், சற்றுமிருண் மருவாத சொப்ரகாச சைதன்னிய வடிவான ப்ரத்யகாத்மா, உற்றவயமாத்மா வென்றுரைக்கப்பட்ட உபயவித பதத்துக்கு மர்த்தமாகும், முற்றுமிலா விவ்வுலகின் மூலவஸ்து மொழிவுற்ற பிரம்மபதத் தர்த்தமாமே.

(மகாவாக்கியம்)

இந்த ஆத்மாவுக்கு * ஸ்தூல † சூட்சும ‡ காரணமென்னும் மூன்றுவித தேகங்களும்; சாக்கிர சொப்பன சுழுத்தியென்னு மூன்றுவித அவஸ்தைகளும்; அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயமென்ற

* அஸ்தி சர்ம த்வசா நாடீ ரோமமாம்ஸமேவ யதா ததா ।
க்ஷிதிரேவம்விதா ப்ரோக்தா ஸர்வஶாஸ்த்ரேஷு கீர்த்திதா: ॥
மூத்ரஶ்லேஷ்மா ததா ஸ்வேத: ஶுக்லம் ஶோணிதமேவ ச ।
ஆப: ஏவம்விதா: ப்ரோக்தா: ஸர்வஶாஸ்த்ரேஷு கீர்த்திதா: ॥
க்ஷுதா த்ருஷ்ணா ததா நித்ரா ஆலஸ்யம் மைதுநம் ததா ।
அக்நி: ஏவம்விதா: ப்ரோக்தா: ஸர்வஶாஸ்த்ரேஷு கீர்த்திதா: ॥
தாவநம் வல்கநம் சைவ ஆகுஞ்சநம் ப்ரஸாரணம் ।
வாயு: ஏவம்விதா: ப்ரோக்தா: ஸர்வஶாஸ்த்ரேஷு கீர்த்திதா: ॥
ராகத்வேஷௌ பயம் லஜ்ஜா மோஹஶ்சைவ யதா ததா ।
நப: ஏவம்விதம் ப்ரோக்தம் ஸர்வஶாஸ்த்ரேஷு கீர்த்திதா: ॥

† பஞ்சப்ராணமநோபுத்தி தஶேந்த்ரியஸமந்விதம் ।
அபஞ்சீக்ருதபூதோத்தம் ஸூக்ஷ்மாங்கம் போகஸாதநம் ॥

‡ அநாத்யவித்யாநிர்வாச்யா காரணோபாதிருச்யதே ।
உபாதித்ரிதயாதந்யமாத்மாநமவதாரயேத் ॥
தேஹேந்த்ரியமநோபுத்தி ப்ரக்ருதிப்யோ விலக்ஷணம் ।
தத்வ்ருத்திஸாக்ஷிணம் வித்யாதாத்மாநம் ராஜவத்ஸதா ॥

(சத்தப்பிரகரணம்.)

ஐந்துவித * கோசங்களு மிருக்கிறதென்றுஞ் சொல்லியிருக்கிறார்கள். எப்படி யெனில்.

ஸ்தூல சரீரத்தில்:—ஞானேந்திரியபஞ்சகம் ஒன்றும், கன்மேந்திரிய பஞ்சகம் ஒன்றும், இவற்றைப் பகுத்தறிகிற அந்தக் கரணங்கள் நாலும், இவற்றிற் கெல்லாம சேர்க்கை கொடுப்பதான பிராணாதி பஞ்சகம் ஒன்றும், இவ்வேழுபாதியுடன் கூடி நின்றவிடம் அன்னமய கோசமாகிய ஸ்தூல தேகமென்றும்; இதுவே ஜாக்கிராவஸ்தையென்றும்; இவ்வவஸ்தையில் ஸ்தூல சரீரத்தி லபிமானிக்கப்பட்ட ஆத்மா, விசுவன், வியவகாரிகன், சிதாபாசனென்ற பெயர்களைப்பெறுமென்றும் ;

சூட்சும தேகமாவது:—முன்சொன்ன ஏழுபாதியில் இருவகை இந்திரியமான விரண்டு உபாதிகளும் நீங்க கரணம் நாலும், பிராணாதி யொன்றுமான ஐந்துபாதியுடன் கூடிநின்றவிடமே பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயமென்னும் கோசத்திரயாத்மகமானதே சூட்சும தேகமென்றும்; இதுவே சொப்பனவஸ்தை யென்றும், இவ்வவஸ்தையில் சூட்சும சரீரத்தி லபிமானிக்கப்பட்ட ஆத்மா: தைஜஸன், பிராதிபாஸிகன் சொப்பன கற்பிதனென்ற பெயர்களைப் பெறுமென்றும்;

இனி காரணதேகமாவது—முன்சொன்ன ஐந்துபாதியில், கரணம் நாலும் நீங்கிப் பிராணாதியாகிய ஒருபாதியுடன் கூடி முன்சொன்ன உபாதியெல்லாந் திரண்டு, ஒன்றாகி மூலப்பிரகிருதியாய் நின்றவிடமே ஆனந்தமயகோசமாகிய காரண தேகமென்றும்; அதுவே சுழுத்தியவஸ்தையென்றும்; அதிலன்புற் றபிமானிக்கும் ஆத்மா பிராஞ்ஞன், பாரமார்த்திகன் அவிச்சின்னனென்னும் பெயர்களைப் பெறுமென்றுஞ் சொல்லியிருக்கிறார்கள். மேலும், ஏழுபாதியுடன் கூடிய ஸ்தூல தேகம் ஜாக்கிர மனோவிசாலம் சொப்பனத்தி லழியுமாகையால் ஜாக்கிரமான ஸ்தூலதேகமும், இதி லபிமான நாமமான விசுவன், விவகாரிகன், சிதாபாசனும் நீ யல்லவென்றும் ;

* தூலமாமன்னகோசம் தூலத்திற்பிராணனுற்றால்
வாலியபிராணகோசம் மன்னுமிம்மனோமயத்தால்
சாலவேபுத்தியுற்றால் தருமம்விஞ்ஞானகோசம்
ஏலவேவிடயமுன்போலியன்றதுகோசமாமே(தத்துவதீபிகை.)

ஐந்துபாதியுடன் கூடிநின்ற சூட்சுமதேகம் சொப்பனமென்றும், சொப்பனமுஞ் ஜாக்கிரவாசனுமயமும் சுழுத்தியிலழிவதால் சொப்பனமான சூட்சுமதேகமும், அதிலபிமானித்த தைஜஸன், பிராதிபாஸிகன், சோற்பனகற்பிதனென்னும் பெயர்களும் நீயல்லவென்றும்; பிராணுதியாகிய வோருபாதியுடன் கூடிநின்ற, மூலப்பிரகிருதியான காரணதேகஞ் சுழுத்தியென்றும், அந்த சுழுத்தி யேதுந்தெரியாமல் அந்தகாரமாயிருக்குமாகையால், சுழுத்தியான காரணதேகமும், அதிலபிமானித்த பிராஞ்ஞன், பாரமார்த்திகன், அவிச்சின்னன் என்ற அபிமானப் பெயர்களும் நீயல்லவென்றும்; இனி மூன்றவஸ்தையும், மூன்று தேகமும் நானல்லவென்னுமிடத்தில், நான் ஆவதாரெனில், ஸ்தூலசூட்சும காரணதேக அந்தர்ப்பூதமான ஜாக்கிர சொப்பன சுழுத்தியென்னும் அவஸ்தாத்திரயங்களின் விரிவொடுக்கங்களைக் கண்டுணர்ந்து அவற்றிற்கெல்லாம் விலட்சணமாகியும், சாக்ஷியாகியும், அன்னியமாகியும் விளங்குகின்ற தொம்பதார்த்த மனனதுரிய சொரூபமான சுத்தசைதன்னிய அறிவே * நீயென்றும்" சொல்லியிருக்கிறார்கள். வேறோரிடத்தில் "நீ என்ற ஆத்மாவே பிரத்தியகாத்மா வென்றும், பிரம்மம், சிவமென்ற பெயர்களைப் பெற்றுப் பிரகாசிக்குமென்றும் சொல்லியிருக்கிறார்கள். அஃதெப்படியெனில், துவம்பதத்தில் வியஷ்டிஸ்தூல சூட்சும காரணதேகவிலட்சணமாகவும், சாக்ஷியாகவும் விளங்கி நின்றபடியால் பிரத்யகாத்மா வென்றும்; தத்பதத்தில், சமாதிஷ்டஸ்தூலசூட்சுமகாரண தேக விலட்சணமாகவும், சாட்சியாக

---

* ஸ்தூலசூக்குமஞ்ஞானந் தோன்றுமூன்றவத்தைதாமுங்
காலமோர்மூன்றுஞ்சன்மக் கடலெழுங்கல்லோலங்கள்
போலவேவந்துவந்து போனவெத்தனையென்பேனு
ஞலமர்கடவுளானே யவைக்கெலாஞ்சாட்சிநீயே.

எல்லாங்கண் டறியுமென்னை எதுகொண்டறிவேனென்று
சொல்லாதேசுயமாஞ்சோதிச் சுடருக்குட்சுடர்வேறுண்டோ
பல்லார்முன்றசமன்றனனைப் பார்ப்பதுந்தனைக்கொண்டேதான்
அல்லாதுபதினென்றானு மவனிடத்துண்டோபாராய்.

அறிவுக்குமறிவுசெய்யு மறிவுவேறுண்டென்றெண்ணு
மறிவற்றருதர்க்கமூடர்க் கனவத்தைபலமாய்த்திரு
மறிபடும்பொருணீயல்லை யறிபடாப்பொருணீயல்லை
யறிபொருளாகுமுன்னை யனுபவித்தறிவாய்நீயே.

(கைவல்யநவநீதம்.)

வும் விளங்கி நிற்குமாமையால் பிரம்ம மென்றும்; அசிபத த்தில் சத்ரூபசத்தி சித்ரூபசத்தி ஆனந்தரூப சத்தியான ஸ்தூலசூட்சும காரணதேக விலக்ஷணமாகவும், சாட்சியாக வும் விளங்கி நிற்குமாகையால், சிவமென்றும் நாமம் வரு மாம்; இதுவெல்லாம் உபாதித்திரயத்தினால் வரும் நாமமென றும், இந்த உபாதித்திரயங்களைத் தள்ளுங்காலத்தில் சுத்தப் பிரம்மமான வஸ்து வொன்றே நித்திய பரிபூரணமா யிருக் கும் என்றுஞ்" சொல்லியிருக்கிறார்கள். கடைசியாக, எவ் வகையாலும், ஆத்மாவைப்பற்றிப் பலவிதமாகச் சொல்லி னும், ஆத்மா என்னும் பொருளுண்டென்பதை யாவரும் ஒத்துக்கொள்ளுகிறார்களல்லவா?

(ஆத்மாவைப்பற்றி * துவைதிகளுடைய கருத்து.)

துவைதிகளும் "ஆத்மா உண்டென்று ஒத்துக்கொள்ளு கிறவர்களாக விருப்பதைப்பற்றியே, "துவி" என்ற சம்ஸ்கி ருதபதமானது, துவி=இரண்டு, அதாவது, ஜீவாத்மா-பர மாத்மா உண்டென்று சொல்வோரெனப் பொருள்படும் "துவைதி"களென்ற பெயரைப் பெற்றிருக்கின்றனர்.

விசிஷ்டாத்வைதிகளும் ஆத்மாவை உண்டென்று ஒத் துக்கொள்ளுகிறார்கள். அந்த மதஸ்தர்கள் ஜீவாத்துமாவைப் பற்றி;—முண்டகோபநிஷத்து 1-2-12; 3-0-9; 2-21-லும், ஸ்ரீ கீதை 16-18, 2-29. 13-19. 2-20, 2-25, 2-24, 3-27, 10-10, 16-8, 16-18-லும்; பாரதம் உத்தி, 41-34, மோக்ஷம்-49, 72, அநுசாசனபருவம் 150.16-9, 175-லும், விஷ்ணுபுராணம் 6-5-59, 12-13-67, 6-7-22, 2-13-67-85, 980, 6-7-12, 6-7-20-லும்; 122-82-லும்; பாகவத்தி லும்; திருவாய்மொழி, 8-8-5, 3-2-1, 2-6-8-லும்; சுவே தாசுவதர உபநிஷத்து 1-10-1-12-லும்; புருஷஸூக்தத்தி லும்; ஆனந்தவல்லியிலும்; நாமலிங்கானுசாசனம் 5-1-லும்; பிரகதாரணிய உபநிஷத்து 6-3-7, 6-3-9, 14. 12, 6-4-3, 6-4-6, 6-5-15, 6-4-22-லும்; ஸ்ரீபாஷ்யம், 1-1-1: 2-2-1-லும்; கடவல்லி 1-2-18-லும்; பிரம்மசூத்திரம் 2-3-2, 2-2-32, 2-3-33, 2-3-40-லும்; தத்துவசாகரம்-46-லும்; தைத்தி ரிய உபநிஷத்து 1-6-1-லும்: சித்திதிரயமுதலான கிரந்தங்

‡ த்வயம்—இரண்டு—அதாவது ஜீவாத்மா வேறு, பரமாத்மா வேறு என்று சொல்லுங் கொள்கை.

களிற் சொல்லப்பட்ட பிரமாணங்களைக்கொண்டு தத்துவதிரயகிரந்தத்தில்,வினவிடையாக வெழுதியிருப்பதைச் சொல்லுகிறேன் கேளுங்கள்.]

(ஆத்மாவைப்பற்றி * விசிஷ்டாத்வைதிகளின்கருத்து.)

† " ஆத்மஸ்வரூபம், தேகேந்திரிய மனப்பிராணபுத்தி விலக்ஷணமாய், அஜடமாய், ஆனந்தரூபமாய், நித்யமாய், அணுவாய், அவியக்தமாய், அசிந்த்யமாய், நிரவயவமாய், நிர்விகாரமாய், ஞானாச்ரயமாய், ஈச்வரனுக்கு நியாம்யமாய், தார்யமாய், சேஷமாய் இருக்கும்.

ஆத்மஸ்வரூபம், தேஹாதி விலக்ஷண்மானபடி யென்னென்னில் ?

தேஹாதிகள் : " என்னுடைய தேஹாதிகள் " என்று ஆத்மாவில் வேறுபட்டுத் தோற்றுகையாலும், " இதம் " என்று தோற்றுகையாலும். ஆத்மா "நான்" என்று தோற்றுகையாலும், இவை யொருக்கால் தோற்றி, யொருக்கால் தோற்றாமையாலும், ‡ ஆத்மா எப்போதும் தோற்றுகையாலும், இவை பலவாகையாலும், ஆத்மா ஒருவனாகையாலும், ஆத்மா இவற்றில் விலக்ஷணனென்று கொள்ளவேண்டும். இந்த

---

* விஶிஷ்டம்=சேர்க்கை. விஶிஷ்டாத்வைதம்=சேர்ந்த தன்மையினால் ஒன்றென்னும் கொள்கை.

† ஆத்மா ஜ்ஞாநமயோ அமல: (வி-புரா-6-7-22)
க்ஷராத்மாநாவீஶதே தேவ ஏக: (சுவே-1-10)
விலக்ஷணஸ்வவேதிகாஸ்ஸ்ரீய ஹ்ருதயே நாத நவஸாமிண:(ஸ்தோ-20)
அந்யோந்தர ஆத்மா ஆநந்தமய (ஆனந்தவல்லி)

‡ ஆத்மா தேவமநுஷ்யாகாரேண வம் ஶ்வியம்ஶ: வ்ய கீர்த்தித:
ஸம்ஹாநிவக்ஷவர்ணவவர்ணம் ந்ரியாணிவ ।
புவர்ணதவர்ண ஜ்ஞாநமயம்யாதியஸ்தயா ।
ஆநம்வகாரேணைவோக்தம் மகாரேண த்வஹம் க்ருதி: ।
வகாரேண மகாரேண ஆநாநுவ்யக்ருதிரவ்யதே ॥
ஆத்மா தேவமநுஷ்யாகாரேண வஞ்சிவம்ஶ: வ்ய கீர்த்தித: ।
(பாத்துமோத்திரம்.)

யுக்திகளுக்குக் கண்ணழிவுண்டேயாகிலும், சாஸ்திரபலத்தாலே ஆத்மா தேஹாதி * விலக்ஷணனாகக்கடவன்.

அஜடமாகையாவது=ஞானத்தை யொழியவுந் தானே தோற்றுகை.

† ஆநந்தரூபமாகையாவது=சுகரூபமாயிருக்கை. "உணர்ந்தவன் சுகமாக உறங்கினேன்" என்கையாலே, சுகரூபமாகக்கடவது.

‡ நித்தியமாகையாவது=எப்போது முண்டாகை, எப்போது முண்டாகில், ஜன்மமரணங்களுண்டாகிறபடி யென்னென்னில்? ஜன்மமாவது=தேகசம்பந்தம். மரணமாவது=தேஹவியோகம்.

§ அணுவானபடி யென்னென்னில்? ஹிருதயப் பிரதேசத்தில் நின்று, முத்கிரமித்துப் போவதுவருவதாமென்று, சாஸ்திரங்களிற் காணலாம். அணுவாய் ஹிருதயத்திலே நிற்குமாகில், சரீரமெங்குமொக்கச் சுகதுக்கங்களைப் புஜிக்கிறபடி யென்னென்னில்? மணித்யுமணிதீபாதிகளோரிடத்திலேயிருக்கப் பிரபை எங்குமொக்க வியாபிக்குமாப்போலே, ஞானமெங்குமொக்க வியாபிக்கையாலே யவற்றைப் புஜிக்கத்தடை

---

* ஹ்ருத்யந்தர்ஜ்யோதி: புருஷ: (பிரக-2-6-3-7)
ஜ்ஞாத்ருஸம்வேத்யம் ததா ஜ்ஞாநம் (தத்துவசேகரம்)
தஜ்ஜ்ஞாநமயம் ஹ்யேதத் ஸ்வஸம்வேத்யமநௌபமம்
(விஷ்ணு-பு-1-22-42)

† ஆநந்தமயம் ஸர்வம் ஸ்வம் ப்ரதிகூலவிவர்ஜித: |
ஸ்வாத்மஸ்வாநந்தஸந்தோஹஸ்தத்ஸ்வஸாக்ஷிகவைபவ: ||
(தத்துவசேகரம்)

‡ நித்யோ நித்யாநாம் (சுவே-2-5-13)
ப்ரக்ருதிம் புருஷம் சைவ வித்த்யநாதீ உபாவபி
(கீதை-13-19)

§ தேந ப்ரத்யோதேநைஷ ஆத்மா நிஷ்க்ராமதி சக்ஷுஷோ வா மூர்த்நோ வாந்யேப்யோ வா சரீரதேசேப்ய:
(பிரகு-உப-6-4-2)

யில்லை. ஒருவன் ஏககாலத்திலே யநேக தேஹங்களைப் பரிகிரஹிக்கிறதும் ஞானவியாப்தியாலே.

* அவியக்தமாகையாவது—கடபடாதிகளை கிரஹிக்கிற சக்ஷுராதிகளால் தோற்றாதிருக்கை.

† அசிந்தியமாகையாவது—அசித்தோடு சஜாதீயமென்று நினைக்கவொண்ணாதிருக்கை.

‡ நிரவயவமாகையாவது—அவயவ சமுதாயமன்றிக்கே யிருக்கை.

§ நிர்விகாரமாகையாவது—அசித்துப்போலே விகாரிக்கையன்றிக்கே யொருபடிப்பட்டிருக்கை. இப்படியிருக்கையாலே சஸ்திரம், அக்கினி, ஜலம், வாதம், ஆதபந்தொடக்கமானவற்றால் சேதித்தல், தகித்தல், நனைத்தல், சோஷிப்பித்தல் செய்கைக்கு அயோக்கியமாயிருக்கும். ஆர்ஹதர்: ஆத்மாவை தேகபரிமாணனென்றார்கள். அது சுருதி விருத்தம். அநேக தேகங்களைப் பரிகிரகிக்கிற யோகிகள் ஸ்வரூபத்துக்கு சைதிலியம்வரும்.

|| ஞாத்ராஸ்ரயமாகையாவது—ஞானத்திற் கிருப்பிடமாகவிருக்கை. ஆத்மா, ஞானத்திற் கிருப்பிடமின்றிக்கே ஞானமாத்திரமாகில் "நானறிவென்று சொல்லவேண்டும்," நானறியாநின்றேனென்னக்கூடாது. ஞாதாவென்றபோதே, கர்த்தா

---

* வ்யக்திர்நாம சக்ஷுராதி கடபடாதிவஸ்து ப்ரகாசகம் ப்ரமாணம் | தத்விஷயத்வரஹிதோ(அ)வ்யக்த: || (கீதாபாஷ்யே-2-25)

† யதஸ்சக்ஷுராதிவ ஸஜாதீயஸ்ய ஸர்வப்ரமாண ஸ்வபாவஸ்ய ஸஜாதீயத்வேந தத்ஸ்வபாவயுக்ததயா சிந்தயிதுமபி ந ஶக்யம் (கீதாபாஷ்யே-2-25)

‡ விஜ்ஞாநமய: (தைத்-2-4-1) விஜ்ஞாநகந:
(பிரக-2-4-4-12)

§ அயமாத்மா (சா-உப)

|| ஏஷ ஹி த்ரஷ்டா ஸ்ப்ரஷ்டா ஶ்ரோதா க்ராதா ரஸயிதா மந்தா போத்தா கர்தா விஜ்ஞாதாத்மா புருஷ: (பிர-உ-4-9)

போக்தாவென்னுமிடம் சொல்லிற்றாயித்து. கர்திருத்வபோக்திருத்வங்கள் ஞானவஸ்தாவிசேஷங்களாகையாலே, சிலர் : குணங்களுக்கே கர்திருத்வமுள்ளது,, ஆத்மாவுக்கில்லையென்றார்கள். அப்போதிவனுக்கு சாஸ்திரவசியதையும், போக்திருத்வமும் கெடும். ஸாம்ஸாரிக பிரவிருத்திகளில் கர்திருத்துவம் ஸ்வரூபபிரயுக்தமன்று. குணசம்சர்க்கம், கர்த்திருத்தவந்தானி ஸ்வரூபாதீனம். ஞானாசிரயமாகில் சாஸ்திரங்களிலே இவனை ஞானமென்று சொல்லுவானேனென்னில் : ஞானத்தையொழியவும் தன்னை யறிகையாலும், ஞானம் சாரபூதகுணமாய் நிரூபகதர்மமாகையாலுஞ் சொல்லிற்று.

* நியாமியமாகையாவது—ஈச்வரபுத்தியதீனமாக வெல்லாவியாபாரங்களு முண்டாம்படி யிருக்கை.

† தாரியமாகையாவது—அவனுடைய ஸ்வரூப சங்கற்பங்களை யொழிந்தபோது தன் சத்தையில்லையாம்படியிருக்கை.

‡ சேஷமாகையாவது—சந்தன குசும தாம்பூலாதிகளைப் போலே அவனுக் கிஷ்ட வினியோகார்கமாயிருக்கை, இதுதான் குருக்ஷேத்ர புத்ர களத்ராதிகளைப்போல பிருதக் சித்தியாதிகளுக்கு யோக்கியமாம்படி யிருக்கை; அன்றிக்கே சரீரம் போலே யவற்றுக்கயோக்கியமாயிருக்கை. இந்த ஆத்ம ஸ்வரூபந்தான், பத்த, முக்த, நித்தியரூபேண மூன்றுபடிபட்டிருக்கும்.

|| பத்தரென்கிறது—சம்சாரிகளை.
முக்தரென்கிறது—சம்சாரசம்பந்த மற்றவர்களை.

---

* ய ஆத்மநி திஷ்டந் ஆத்மநோऽந்தரோ யமாத்மா ந வேத யஸ்யாத்மா சரீரம்| ய ஆத்மாநமந்தரோ யமயதி ஸ த ஆத்மாந்தர்யாம்யம்ருத: (சு-ப-உ)

† ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரசாஸநே கார்கி ஸூர்யாசந்த்ரமஸௌ வித்ருதௌ திஷ்டத: (பிரக-உப-5-8-9)

‡ யஸ்யேஷ்டவிநியோகார்ஹ: சேஷ: சப்தேந கத்யதே | ஸ்வரூபேண ஜகத்ஸர்வம் யஸ்யேஷ்டம் விநியுஜ்யதே (வேதார்த்த)

|| [illegible] (தை-உ-2-6-50)

§ நித்தியரென்கிறது—ஒருநாளும் சம்சரியாத சேஷ சேஷாஸநாதிகளை.

ஜலத்துக்கு அக்கினி சம்சிருஷ்டஸ்தாலி சம்சர்க்கத்தாலே ஔஷ்ணிய சப்தாதிகளுண்டாகிறாப்போலே, ஆத்மாவுக்கும் அசித்சம்பந்தத்தாலே அவித்யாகர்மவாசனை ருசிகளுண்டாகின்றன. அசித்துக் கழிந்தவாறே அவித்யாதிகள் கழியுமென்பார்கள். இம்மூன்றும் தனித்தனியே அனந்தமாயிருக்கும்.

சிலர் ஆத்மபேதமில்லை, யேகாத்மாவேயுள்ளதென்றார்கள். அந்த பக்ஷத்தில், ஒருவன் சுகிக்கிற காலத்திலே வேறொருவன் துக்கிக்கக்கூடாது. அது தேகபேதத்தாலேயென்னில், சவுபரிசரீரத்திலும் அதுகாணவேணும். ஒருவன் சம்சரிக்கயும், ஒருவன் முக்தனாகையும், ஒருவன் சிஷியனாகயும், ஒருவனாசாரியனாகையும் கூடாது. விஷமசிருஷ்டியுங்கூடாது. ஆத்பபேதம் சொல்லுகிற சுருதியோடும் விரோதிக்கும். சுருதி ஔபாதிகபேதத்தை சொல்லுகிறதென்னவொண்ணாது. மோக்ஷதசையிலும் பேதம் உண்டாகையாலே, அப்போது தேவமனுஷியாதி பேதமும் காமக்ரோதாதிபேதமும் கழிந்து, ஆத்மாக்கள் ஸ்வரூபமத்தியந்தம் சமமாய் யொருபடியாலும் பேதம் சொல்லவொண்ணாதபடியிருந்ததேயாகிலும் பரிமாணமும், எடையும், ஆகாரமுமொத்திருக்கிற பொற்குடங்கள், இரத்தினங்கள், வ்ரீஹிகள் தொடக்கமானவற்றிற்குப் பேதமுண்டாகிறாப்போலே ஸ்வரூபபேதமும் சித்தம். ஆகவே, ஆத்மபேதம் கொள்ளவேணும். இப்போதிவர்களுக்கு லக்ஷணம் சேஷத்துவத்தோடேகூடின ஞாதிருத்வம். இவர்களுடைய ஞானந்தானஸ்வரூபம் போலே நித்யதிரவியமாய், அஜடமாய், ஆனந்தரூபமாயிருக்கும்.

ஆனால் ஞானத்திற்கும், ஸ்வரூபத்துக்கும் வாசியென்னெனில், ஸ்வரூபம் தர்மியாய், சங்கோச விகாசங்களுக்கயோக்கியமாய், தன்னையொழிந்தவற்றைப் பிரகாசிப்பியாமலே, தனக்குத்தான் பிரகாசிக்கக்கடவதாய் அணுவாயிருக்கும்.

ஞானம், தருமமாய், சங்கோசவிகாசங்களுக்கு யோக்கியமாய் தன்னையொழிந்தவற்றை பிரகாசிப்பிக்கக்கடவதாய்த்

§ யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவா: (புருஷசூக்தம்.)

தனக்குத்தான் பிரகாசியாதே, ஆத்மாவுக்குப் பிரகாசிக்கக்கடவதாய் விபுவாயிருக்கும். அதில் சிலருடைய ஞானம் எப்போதும் விபுவாயிருக்கும். சிலருடைய ஞானம் எப்போதும் அவிபுவாயிருக்கும். சிலருடைய ஞானம் ஒருக்கால் விபுவாய், ஒருக்கால் அவிபுவாயிருக்கும்.

ஞானம் நித்தியமாகில், "எனக்கு ஞானம் பிறந்தது, நசித்தது என்கிறபடியென்னெனில்; இந்திரியத்துவாரா பிரசரித்து விஷயங்களை கிரகிப்பது மீளுவதாகையாலே அப்படி சொல்லக்குறையில்லை. இதுதானேகமாயிருக்கச்செய்தே நானாவாய் தோற்றுகிறது பிரசரண பேதத்தாலே.

* திரவிய மானபடியென்னெனில், கிரியாகுணங்களுக்காசிரயமாய், அஜடமாயிருக்கையாலே திரவியமாகக்கடவது.

அஜடமாகில், சுஷுப்தி மூர்ச்சாதிகளில் தோற்றவேண்டாவோ வெனில், பிரசரணமில்லாமையாலே தோன்றுது.

ஆனந்த ரூபமாகையாவது = ஞானம் பிரகாசிக்கும் போதனுகூலமாயிருக்கை. விஷச்சிராதிகளைக் காட்டும் போது பிரதிகூலமாயிருக்கை, கடிதேஹாத் பிரமாதிகள் † ஈசுவராத்மகமாகையாலே எல்லா பதார்த்தங்களுக்கு மனுகூல்யமே ஸ்வபாவம். பிரதிகூல்யம் வந்தேறி, மற்ற வனுகூல்யம் ஸ்வாபாவிகமாகில் ஒருவனுக்கொருக்காலோரிடத்திலே அனுகூலங்களான சந்தன குஸுமாதிகள் தேசாந்தரே, காலாந்தரே, இவன்றனக்கும் அத்தேசத்திலே அக்காலத்திலே வேறொருவனுக்கும். ‡ பிரதிகூலங்களாகக் கூடாதென்றுஞ்" சொல்லியிருக்கிறார்கள்.

---

* க்ரியாஶ்ரயத்வம், குணாஶ்ரயத்வம் ।
(வைஷ்ணவதேவதா.)

† ஜகத்ஸர்வம் ஶரீரம்தே (ஶ்ரீ ராமாயண-120-26.)

‡ வஸ்த்வேகமேவ து:காய ஸுகாயேர்ஷ்யாகமாய ச । கோபாய ச யதஸ்தஸ்மாத்வஸ்து வஸ்த்வாத்மகம் குத: । ததேவ ப்ரீதயே பூத்வா புநர்து:காய ஜாயதே । ததேவ கோபாய யத: ப்ரஸாதாய ச ஜாயதே । தஸ்மாத்து:காத்மகம் நாஸ்தி ந ச கிஞ்சித்ஸுகாத்மகம் (விஷ்ணுபுராணம்-2-6-45.)

இனி நாஸ்திகர்களென்ற சில சந்தேகவாதிகள் வினவும் சில வினாக்களுக்கு விடை சொல்லுகிறதைக் கேளுங்கள்.

"ஜடப்பொருள் தோன்றியிருப்பது தெரிகிறதேயன்றி அஜடப்பொருள் தோன்றியிருப்பது தெரியவில்லையென்றும்; நமக்கு ஸ்தூலதேகமிருப்பதுமாத்திரம் தெரிகிறதே யொழிய சூக்ஷ்மதேகமுடைய, ஜீவாத்துமா இருப்பது தெரியவில்லை" யென்றுஞ் சில நாஸ்திகர்கள் சொல்லுகிறார்கள். இந்தமதம்முற்றும் மறுக்கக்கூடியதாயிருக்கிறது. ஏனெனில், நாம் ஸ்தூலதேகமாய் இருக்கிறோமென்று சொல்வதைப் பார்க்கிலும் சூக்ஷ்மதேகமாய் அதாவது, ஆத்துமஸ்வரூபமாயிருக்கிறோ மென்று உறுதியாகச் சொல்லலாம். நாம் ஸ்தூலதேகத்தைப்பற்றி யறிந்திருப்பதெல்லாங் கூடி அதன் பரப்பு, நீளம், அகலம், கடினம், மெலிவு வருணம், வாசனையாதிகளே யல்லவா? அதுபோலவே * மனம், † புத்தி, ‡ சித்தம், ¶ அஹங்காரமாகும் அந்தக்கரணத்திற் காதாரமாயும்; ஒன்றைப்பற்றிச் சிந்திக்கவும், ஆசிக்கவும், நேசிக்கவும், பகைக்கவும், பயப்படவும், வெறுக்கவும், விரும்பவும், வர்த்திக்குந் தன்மைகளால் ஆத்மஸ்வரூபமும் வெட்டவெளியாகின்றது. நாம், எப்படி ஒருபொருளைத் தழுவவும், முகரவும், ருசிபார்க்கவும் கூடுமோ? அப்படியே, ஒருபொருளைப்பற்றி (நமக்

* ஐயமுஞ்சலனமு நிற்கச்செய்தலும்
மெய்யவெங்கொடுமையும் விகற்பமேவலும்
பொய்யதுணர்த்தலும் பொருத்தநோக்கலும்
மையல்கொண்டிடலும் மறிவுமாண்மையும்.

† அருளுறவிருத்தலும் அபயங்காத்தலும்
மருளுறுபுணணிய பாவமாக்ஷியும்
தெருளுறுவிகாரமுந் திடப்படுத்தலும்
பொருள்தருமூவகைப் புத்தியாகுமே.

‡ அருந்தவமுயற்சியு மடிகள்பேணலும்
விருந்தெதிர் கொள்கையும் மேன்மைகூறலும்
வருந்தினர்யாவரு மேத்தவாழ்தலும்
திருந்தியவிச்செயல் சித்தமாகுமே.

¶ பாகமூர்க்கமும் பின்பிளாண்மையும்
மோகமுஞ்செயவெண முடிவிலாமையும்
சோகமுங்கீழ்மையும் துரோகசொப்பனம்
மாய்கையுஞ்செய்யுமாங் காரமாதலால். [சித்திபார்]

(சுள்) நாம், நேசிக்கவும், யோசிக்கவும், விரும்பவும் கூடுமல்லவா? நாம் இந்திரியஞானத்தை யறிவதைப்போலவே, நமக்குள்ளிருக்கும் எண்ணத்தின் காரணமாகிய மனதையும் அறிகிறோம்.

" ஜடப்பொருள் இன்னதென்று நமக்குத்தெரியும், ஆத்துமா அப்படித் தெரியாதிருப்ப தென்னையென்றும், சில நாஸ்திகர்கள் சொல்லுகிறார்கள். நல்லது, ஜடப்பொருளென்றாலென்ன? நமது இந்திரிய ஞானத்தினால் அறியக்கூடியவைகள்தானே ஜடப்பொருள்; அதாவது, நமது கண்களால் காணக்கூடியதும்; காதுகளால் கேட்கக்கூடியதும்; மூக்கினால் முகரக்கூடியதும் நாக்கினால் ருசிபார்க்கக்கூடியதும்; மெய்யினாலுணரக் கூடியதுந்தானே. அப்படியானால், என்னுடைய மனதைத்தொடக் கூடுமோ? என்னுடைய உணர்ச்சியை ருசிபார்த்தறியக் கூடுமோ? என்னுடைய சித்தத்தை முகரக்கூடுமோ? என்னுடைய ஆண்மையையும், ஆசையையும் அளவிடக்கூடுமோ? கூடாதல்லவா. ஏன் கூடாதெனில் இவைகள் ஜடப்பொருள்கள் அல்லவாகையால் கூடாதென்பது உண்மை. ஆகவே, இந்தப்பிரபஞ்சத்தில் ஜடப்பொருளைத் தவிர வேறு சில அஜடப்பொருள்கள் இருப்பது உண்மையென்றும்; அந்த அஜடப்பொருள்கள் ஜடப்பொருள்களிருக்கின்ற உண்மையைப்போலவே, (அவைகளும)உண்மையாகவேயிருக்கிறதென்றும் ஸ்பஷ்டமாகிற தல்லவா?

இன்னுங்கேளுங்கள். நான் ஸ்தூலதேகியாக இருக்கிறேனென்று சொல்வதைப்பார்க்கிலும், நான் சூக்ஷ்மதேகியாகும் ஆத்மஸ்வரூபனாக விருக்கிறேனென்பதை பலவிதத்திலுஞ்சாதித்து சித்தாந்தமாக்கக்கூடும். உதாரணமாக,இதோ பாருங்கள்,—எனக்கு முன்பாக ஓர் மாம்பழ மிருப்பதாகவும், அதையான் பார்ப்பதாக நீங்கள் சொல்வதாகவும் வைத்துக்கொள்வோம். எதை நான் பார்க்கிறேனெனில், வட்டமாயும், வடிவாயும், வருணமாயும் வாசனையாயுமிருக்கத்தக்க ஒரு வஸ்து வாகிய மாம்பழத்தை நான் பார்க்கிறதாக நீவிர் சொல்லும் பக்ஷத்தில் அதையான் மறுக்கத் தக்கதே. ஏனெனில், எனக்குள் இருக்கும் இந்திரியஞ்ஞானத்தினால், வட்டமாயும், வடிவாயும், வருணமாயும் இருக்கிற ஒருபொருள் தோன்றுகிறதாகப் பாவிக்கிறேன். அந்த இந்திரியஞ்ஞானம் எங்கேயிருக்கிறது? எனக்குள்ளாகவேயிருக்கிற தல்லவா? ஆகவே' தொட்டும், முகர்ந்தும், ருசிபார்க்கத்தக்கதுமான, எனது இந்திரிய

ஜ்ஞானத்துக்குப் புறம்பே அதாவது, எனக்கு வெளியில், வட்டமானதாயும், வடிவானதாயும் பழுப்பானதாயும், இருக்கும்படியான ஓர் மாம்பழமிருப்பதாக வெப்படிச்சொல்லக் கூடும்? நான் அறிவதெல்லாங் கூடி எனக்குள்ளிருக்கும் இந்திரியஞ்ஞானமே யல்லவா? எனக்குள் ளிருப்பதைப் போல எனக்கு வெளியிலிருக்கும் மாம்பழத்தில் இந்திரிய ஜ்ஞானமில்லை யென்பது யாவருமறிந்த சங்கதியே. ஆகவே, வெளியிலிருக்கும் அந்த மாம்பழத்தை யறியத்தக்க இந்திரியஜ்ஞானம் எனக்குள்ளாகவே யிருக்கும்போது எனக்கு வெளியிலும், எனது இந்திரியஜ் ஞானத்துக்கு வெளியிலும், ஒரு மாம்பழ மிருப்பதைப் பார்ப்பதாகச் சொல்லக் கூடுமோ? கூடாதல்லவா. ஆனால், எனக்கு வெளியில் இந்த மாம்பழ மிருப்பதை யான் பார்ப்பதாக சொல்ல வேண்டியபட்சத்தில், எனக்குள் ஜனிக்கும் யூகையின் ஆதாரத்தினால் தான் சொல்லவேண்டும். ஏனெனில், யான் (எனக்கு) வெளியில் ஒரு பொருளிருப்பதாக பாவிக்கும்போது, அப்படி பாவிக்கும் பொருளை எனக்குள் யானே ஸ்ருஷ்டித்துக் கொள்ளுதல். அசாத்திய மாகையாலும், இவ்வித பதார்த்தத்தின உணர்ச்சியை (எனக்குள்) ஜனிப்பிக்க எனக்கு வெளியில் யாதோ ஒருபொரு ளிருந்திருக்க வேண்டுமென்றும் * இயற்

* [illegible]

(ராமஸ்தவராஜயம்.)

" [illegible] "

" [illegible] "

[illegible]

(சீதாராமாஞ்சனேய சம்வாதம்.)

கை ஜ்ஞானத்தால் யூகித்துச் சொல்லுகிறேன். ஆகவே, எனது இந்திரிய ஜ்ஞானத்தினால் இயற்கையறிவை யியங்கச் செய்வதே ஜடப்பொருள். ஆனால், என்மனதி லிருக்கும் இயற்கை ஜ்ஞானமானது, அஜடமாயும், எனது உணர்ச்சியி னாலுண்டாகும் அனுமானத்திலும் சிறந்த சத்தியமாயுமிருக் கிறதல்லவா? இதுதான் ஜீவாத்மா. மேலும், வெளியில் தோன்றும் உற்பன்னங்களை யிந்திரிய ஞானத்தினா லறியும் போது, அவைகள் யாதோ ஒரு ஜடபதார்த்தத்தி லிருந்து உண்டாயிருக்கவேண்டு மென யூகையா லறிகிறதைப்போ லவே; சாக்கிர சொப்பனத்தில் நமக்குள் ஜனிக்கும், எண் ணங்களையும், யோசனைகளையும், உணர்ச்சிகளையும், சுகசந் தோஷங்களையும் நாம் அறியும்போது இவைகளெல்லாம் ஜனிக்க யாதோ ஓர் அஜடபதார்த்தம் இருக்கவேண்டு மென்று சுவானுபூதியால் கொள்ளவேண்டி யிருக்கிறது. அந்தப் பதார்த்தந்தான் ஜீவாத்மா. மேலும், ஜடபதார்த் தத்திலிருந்து உண்டாகும் உற்பன்னங்கள்: அஜடபதார்த் தத்திலிருந்து உண்டாகும் உற்பன்னங்களைவிட வித்தியாசப் பட்டிருப்பதால், பதார்த்த பேதமுங் கொள்ளவேண்டு மல்லவா! ஆகவே, உலகில் ஜடமாகிய தேகமும், அஜடமா கிய ஆத்மாவும் இருப்பது ஸ்பஷ்டமல்லவா?

"ஆத்துமாவானது: தேகத்தின் எந்த விடத்திலிருக்கிற தென்று" சில நாஸ்திகவாதிகள் வினவுகிறார்கள். இந்த வின விற்கு முன்னோர்கள் பலவிதமாக விடையுரைத்திருக்கின்ற னர். அம்முன்னோர்களில் ஒரு வகுப்பார்: ஜீவாத்மாவானது * சாக்கிரத்தில், புருவமத்தியில் அல்லது லலாடத்தினிடமாக விருக்கிறதென்றும், அந்த நிலையில் அந்த ஜீவாத்துமாவானது பூரணசக்தியோடு நடித்துக்கொண்டிருக்கிறதென்றும்; † சொப்

* கண்டனைவந்தும் கலந்தவோரைந்தும், உண்டனநான்கும் ஒங்கிஉணர்ந்தபின், பண்டயினுதிபாந்தது சாக்கிரம், அண்டமுந் தானு யமர்ந்ததுகாணே. (திருமந்திரம்.)

† [illegible]

பனத்தில், ஜீவாத்மாவானது: கந்தரம் அல்லது கழுத்தினிடமிருக்கிறதென்றும், அப்போது அதன் சக்தியிற் சற்று குறைவுபட் டிருக்குமென்றும்;— * சுழுத்தியில், ஜீவாத்துமாவானது: ஹிருதயத்தினிட மிருக்குமென்றும், அப்போது அதன் சக்தியில் முன்னிலுஞ் சற்று குறைவுபட் டிருக்குமென்றும்;— † துரியத்தில், ஜீவாத்துமாவானது: நாபியினிட மிருக்குமென்றும், அப்போது அதன் சக்தி முன்னிலும் அதிகங் குறைவுபட் டிருக்குமென்றும்,—‡ துரியாதீதத்தில், ஜீவாத்துமாவானது மூலாதாரத்தில் மூழ்கித் தன் சக்தி முற்றுங் குறைவுபட்டுத் தேகத்தைவிட்டு நீங்கும் நிலையிலிருக்குமென்றும் சொல்லியிருக்கிறார்கள். ஆனால், பரதகண்டத்தில் வாழ்ந்து வந்த பெருமையுற்ற முன்னோர்: § "தேகத்தில்

* "ஆன மனமும் அறிகின்ற புத்தியும்
ஊன மிழந்துநின் றுள்ளே யுயிர்ப்பெய்தி
தான மிழந்து தயங்கிய வாறுபோல்
ஊனை யிழந்த சுழுத்திய தாமே."

† "தானத் தெழுந்து திரியுந் துரியதானம்
வானத் தெழுந்துபோய் வையம் பிறக்கிட்டு
கானத் தெழுந்து கருத்தின தலையிலே
ஊனைத் தவிர்ந்து ஒழித்திருந் தானே."

‡ "துரியமிருப்பது சாக்கிரத் துள்ளே
நரியள் பதினொன்கும் நஞ்சுண் டற்றது
பரிய ரவியும் பாரிப் பரந்திடம்
துரிய மிருந்திடம் சொல்லவொண் ணாதே." (திருமந்திரம்.)

"முன்னே அறிந்ததும் அறியா திருந்தது முதலதீதம்
பின்னே நினைவின்றி மூச்சிட் டறிந்த பிறைதுரியம்
மன்னே மயங்கியை யுற்ற சுழுத்தி மனநினைவால்
தன்னோர் கனவது தானறிந் தொத்தது சாக்கிரமே."
(அறிவானந்த சித்தியார்.)

§ 𑌹𑍃𑌦𑌯𑌂 𑌤𑌦𑍍𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌯𑌾𑌦𑍍𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯𑌾𑌯𑌤𑌨𑌂 𑌮𑌹𑌤𑍍. 𑌸𑌨𑍍𑌤𑌤𑌂 𑌶𑌿𑌰𑌾𑌭𑌿𑌸𑍍𑌤𑍁 𑌲𑌮𑍍𑌬𑌤𑍍𑌯𑌾𑌕𑍋𑌶 𑌸𑌨𑍍𑌨𑌿𑌭𑌮𑍍 | 𑌤𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑍇 𑌸𑍁𑌷𑌿𑌰𑌂 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌂 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌮𑍍 | 𑌤𑌸𑍍𑌯 𑌮𑌧𑍍𑌯𑍇 𑌵𑌹𑍍𑌨𑌿𑌶𑌿𑌖𑌾 𑌅𑌣𑍀𑌯𑍋𑌰𑍍𑌧𑍍𑌵𑌾 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 | 𑌨𑍀𑌲𑌤𑍋𑌯𑌦𑌮𑌧𑍍𑌯𑌸𑍍𑌥𑌾𑌦𑍍𑌵𑌿𑌦𑍍𑌯𑍁𑌲𑍍𑌲𑍇𑌖𑍇𑌵 𑌭𑌾𑌸𑍍𑌵𑌰𑌾 | 𑌨𑍀𑌵𑌾𑌰𑌶𑍂𑌕𑌵𑌤𑍍𑌤𑌨𑍍𑌵𑍀 𑌪𑍀𑌤𑌾 𑌭𑌾𑌸𑍍𑌵𑌤𑍍𑌯𑌣𑍂𑌪𑌮𑌾 : 𑌤𑌸𑍍𑌯𑌾𑌃𑌶𑌿𑌖𑌾𑌯𑌾 𑌮𑌧𑍍𑌯𑍇 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 ||

எது சகலத்திற்கும் மஹத்தான ஸ்தானமோ, அது ஹிருதயமென்று சொல்லப்படும்; அது நரம்புகளாலே சூழப்பட்ட ஒரு பையைப்போலும், அதில் ஒரு சிறு துவாரமுண்டு; அதில் சகலமும் வைக்கப்பட்டிருக்கிறது. அதன் மத்தியில் மேல்நோக்கிய வெகு சூக்ஷ்மமான ஒருஅக்கினிச்சிகை வைக்கப்பட்டிருக்கிறது; அந்தச் சிகையானது கருமேகத்தின் நடுவில் தோன்றும் மின்னல் கொடியைப்போல் பிரகாசிக்கின்றது; அது செந்நெல் நுனியைப்போல் சூக்ஷ்மமாயும், சிவந்த நிறமுடையதாயுமிருக்கின்றது; அந்த சிகையின் மத்தியில் ஓரணுவைப்போல் ஆத்மா இருக்கிறது'' என்று சொல்லியிருக்கின்றனர்.

''ஜீவாத்மாவானது ஹிருதயத்தளவிலே நிற்குமாகில், சரீரமெங்கு மொக்கச் சுகதுக்கங்களை யெப்படி யனுபவிக்கக்கூடும்?'' என்று சில நாஸ்திகர்கள் வினவுகிறார்கள். இந்த வினை மிகவும் உபயோகமற்றது. ஏனெனில், ''தீபம் ஓரிடத்திலேயிருக்கப் பிரபை யெங்குமொக்கப் பிரகாசிக்கிறதைப்போல வே, ஞான சூரியனைப்போன்ற ஜீவாத்மா ஹிருதயத்திலிருந்தாலும், அதன்ஞான மெங்கு மொக்க வியாபிக்கையாலே சுகதுக்கங்களை யறியத் தடையில்லையென்று முன்னோரும் சொல்லியிருக்கிறார்கள். மேலும், (Telegraphic office) மின் தபாலாபீசுக்குள்ளிருக்கும் ஒருவன்: அநேகவிடங்களின் விருத்தாந்தச் சங்கதிகளை யநேக கருவிகளுள்ள தந்திகளின் மூலமாகத் தான் தெரிந்துகொள்வதும் தெரிவித்துக்கொள்வது மெப்படியோ, அப்படியே ஜீவாத்மாவானது ஹிருதய கோசத்திற்குள் இருந்துகொண்டு, கருவிகரணாதிகளால் தெரிந்துகொள்ளவேண்டியவைகளைத் தெரிந்துகொண்டும், தெரிவிக்க வேண்டியவைகளைத் தெரிவித்துக்கொண்டுமிருக்கிறது. இதுவரையில் மின்தபால்கள் தந்திக்கம்பிகளின் மூலமாகப் போக்கு வரத்து செய்யப்பட்டுவந்து, இப்போது தந்திகளின் சகாயமில்லாமலே (Wireless Telegrams) போக்கு வரத்து செய்யப்பட்டு வருகின்றன. மேலும், (Tram Car) டிராம்கார் என்னும் ஸ்காந்தக் கவர்ச்சிவண்டிகளுக்கு வேண்டிய சக்தியை (Power Station) பவர், சக்தியூட்டும் ஸ்டேஷன்களிலிருந்து ஊட்ட, அந்தச் சக்தியினால் வண்டிகள் யாதொரு இஞ்சின் முதலியவைகளின் உதவி இல்லாமலே போக்குவரத்து செய்து வருவது பிரத்தியக்ஷமல்லவா ?

"ஜீவாத்மா சர்வ சக்தியை யுடையதா? அல்லது மித சக்தியை யுடையதா? பால்யம், யவ்வனம், முதுமைப்பருவங்களிலும்; தேகத்தில் வியாதி முதலியவைகள் சம்பவிக்கும் காலங்களிலும், அது பேதப்பட்டு நிற்கவேண்டிய காரணமென்னை?" என்றும், "தேகத்துக்கும் ஜீவாத்மாவுக்கும் சம்பந்தமுண்டோ?" என்றும், "மண்டையில் ஓரடிபட்டு எலும்பு நசுங்கி மூளையிற் றுக்கினால், உடனே எண்ணமும் புத்தியாதிகளு மொடுங்கிப் போகவேண்டியதென்னை?" என்றும் சில நாஸ்திகர்கள் வினவுகிறார்கள்.

பரமாத்மா: பூரணஞ்ஞானமும், பூரணசக்தியு முடையதென்றும்,—ஜீவாத்மா: அந்தப் பரமாத்மாவினிடத்திலிருந்து மிதசக்தியையும், மிதஞ்ஞானத்தையும் பெற்று; மனம், புத்தி, சித்தம், அஹங்காரமாகிய அந்தக்கரணங்களையும்; மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய இந்திரியங்களையுங் கொண்டு நடிக்கிறதென்று முன்னமே சொல்லியிருக்கிறோம். மேலும், இந்த உலகத்தில் ஜீவாத்மாவானது: ஸ்தூலதேகத்தோடு சம்பந்தப்பட் டிருப்பதால், சில சமயங்களில் (ஜீவாத்மாவானது) ஸ்தூலதேகத்தை விட்டு யாதொரு காரியத்தைச் செய்யச் சக்தியற்றதாயு மிருக்கிறது. பால்யம் அல்லது குழந்தைப்பருவத்தில், ஸ்தூலதேகத்தைச் சார்ந்த கருவிகரணாதிகள் சிறுத்துப் பலமற்றதா யிருப்பதால்; மனம், புத்தி, சித்தம், அஹங்காராதிகள் அவ்வளவாகத் தத்தந் தொழில்களைச் செய்யமாட்டா. யௌவ்வன பருவத்தில் கருவிகரணாதிகள் பெருத்துப் போதுமான பலத்தைப் பெற்றிருப்பதால் தக்கபடி எண்ணவும், யோசிக்கவும், ஆச்ரயிக்கவும், நேசிக்கவும், பகைக்கவும், வெறுக்கவும், விரும்பவும் கூடியதாக விருக்கின்றது. பிறகு, முதுமைப் பருவத்தில் மூளையாதி கருவிகள் உழைத்து உழைத்துக் கருவிகரணாதிகள் தளர்ந்து பலக்ஷீணப்பட்டுப் போகிறபடியால், தக்கபடி யோசிக்கவும், எண்ணவுங் கூடாமல் போய்விடுகிறது. எப்படியெனில், சாரங்தா வித்வான் தாவத்து சாய்பு: ஒரு புது வாத்தியக் கருவியைக் கொண்டு சங்கீதம் வாசித்துக் காட்டக்கூடும்; ஆனால், அவருடைய சங்கீத வாத்தியமானது: நவீனமாயிருக்கில் அதன் தந்திகளும், நரம்புகளும், காற்றுக்குழல்களும் அதிக இறுக்கமாக இருக்கிறபடியால் அப்போது நாதம் விநோதமாக இருக்கமாட்டாது. அந்த வாத்தியக் கருவியானது (யௌவ்வன தசையை யடைவதைப்போல) சற்றுப் பழகித் தக்கபடி

தளர்ந்தால், அப்போது அந்த வாத்தியக் கருவியால் விநோத மாக வாசிக்கலாம். பிறகு, அந்த வாத்தியக் கருவியே பல நாள் சென்று பழையதாகிவிட்டால், அதன் பிரடை துவாரங் கள் பெருத்தும், அடிப்பாகத்துப் பலகைகளும், நாற்றுக்குழ ல்களும், தளர்ந்தும் காற்றோடும்படியாகி விடுகிறபடியால், அப்போது அந்தக் கருவியில் வாசிக்கும் நாதம் விநோதமற்ற தாய், சிலவேளைகளில் வாத்தியம் வாசிப்பதற்கே உபயோக மற்றதாகி விடுகிறது. இப்படி இந்த வாத்தியக் கருவியானது தளர்ந்து கெட்டுப்போய் விட்டதனால் தாவத்சாயபுக்கு சார ந்தா வாத்தியம் வாசிக்கத் தெரியாதென்று சொல்லலாமா? தாவத் சாயபினிடம் வேறு நல்ல வாத்தியக் கருவியைக் கொடுத்துப்பாருங்கள். அப்போது அவர் வாத்திய விநோதத் தைக் காட்டுவார். அதேமாதிரியாகவே, பலஹீனமற்ற கருவி கரணாதிகளையுடைய ஸ்தூலதேகத்தை, ஜீவாத்மாவுக்குக் கொடுத்துப்பார்த்தால், அப்போது அது தன் தொழிலைச் சரி யாகச் செய்யாமற்போகாது. இவ்வளவேன்? உளி, சுத்தி முத லான கருவிகளற்ற ஒரு தச்சன், இந்த பிரஹ்ம மண்டபத் தில் இருக்கும் மேஜை, பெஞ்சு முதலியவைகளைச் செய்ய மாட்டுவானா? தச்சன் எவ்வளவு புத்திசாலியாகவிருக்கினும், தன் கருவிகள் இல்லாவிட்டாலும், தன் கருவிகள் பழமைப் பட்டுக் கெட்டுப்போய்விட்டாலும், தன் தொழிலைச் சரியாக எப்படிச் செய்யமாட்டானோ, அப்படியே, ஜீவாத்மா சக்தி யுள்ள வஸ்துவாகவிருக்கினும், தன் கருவியாகிய ஸ்தூலதே கம் சரியாக அமைந்திருந்தாலன்றித் தன் சக்தியைக் காட்டல் கஷ்டமே. ஒருவன் எழுதுவதில் அதிக வல்லவனாக இருக்கி னும், எழுதுங் கருவிகளாகிய இறகு, மை, கடிதம் முதலான சாதனங்களின்றி அவன் சரியாக எழுதமாட்டானல்லவா? மேலும், எழுதுங் கருவிகள் பழமைபட்டுக் கெட்டுப்போய் விட்டாலும் சரியாக வெழுதக்கூடாதல்லவா? ஒரு இரண வைத்தியன் எவ்வளவு சமர்த்தனாக இருக்கினும், அவனு டைய கத்தி முதலிய கருவிகள் துருப்பிடித்துத் தக்கபடியில் லாததானால், அவன் இரணங்களை யறுத்துப்பார்த்தல் அசாத் தியமல்லவா? ஒரு ககோள சாஸ்திரி நெடுந்தூரத்தி லிருக்கப் பட்ட கிரகாண்ட நக்ஷத்திர தூமகேதாதி உற்பாதங்களைத் தனது தூரவீக்ஷணக்கருவியால் கண்டு கணிக்கக் கூடியவனாக இருக்கினும், தனது தூரதிருஷ்டிக் கண்ணாடியின்முன் சிறு மப்பு அல்லது மந்தாரம் கட்டினும், அந்தக் கண்ணாடியின்

வழியாக யாதொன்றையும் பார்க்கத் தப்பி அவன் கணிப்பது அசாத்தியமல்லவா? சுமார் 50-வருஷங்களுக்குமுன் (Rouen) ரியூன் என்னும் பட்டணத்தில் (LeCat) லிகாட் என்ற ஒரு டாக்டரிடம் ஒரு கப்பல் வேலைக்காரனைப் பிரக்ஞையற்ற ஸ்திதியில் கொண்டுவந்தார்கள். அந்தமனிதன் கப்பலின் ஒரு பெரிய கொடிமரத்தின்மீதிருந்து விழ மண்டையோடு உடைந்து, அதன் ஒரு சில்லெலும்புத் துண்டு மூளையைத் தாக்க, அவன் ஸ்மரணையற்றுப்போகப்பலஆஸ்பத்திரிகளில் 13-மாத காலங்களாக வைக்கப்பட்டு, பிறகு மேற்சொன்ன லிகாட்டு என்னும் டாக்டரிடம் கொண்டுவரவே, அவர் மூளையில்தாக்கியிருந்த சில்லெலும்பை ஜாக்கிரதையாக நீக்கிவிட, அந்த மனிதனுக்கு ஞாபகம் வந்துவிட்டதாக கூபர் சாஸ்திரி சொல்லி இருக்கிறார். ஆகவே, ஜீவாத்மாவானது: எவ்வளவு சக்தியுள்ளதாகவிருந்தினும், இந்த உலகத்தில் ஸ்தூலதேகத்தைச் சேர்ந்தே தன் சக்தியைக் காட்டக்கூடியதா யிருக்கிறது.

சில நாஸ்திகர்: "தேகத்துக்கும் ஜீவாத்மாவுக்கும் சம்பந்தமுண்டோ?" என்று கேட்கிறார்கள். ஆம், இந்தப் பூலோகத்தில் ஜீவாத்மாவானது ஸ்தூலதேகத்தின் உதவியின்றி யாதொன்றையும் செய்யக்கூடாத ஓர்வித சம்பந்த முடையதாக இருக்கினும், தாமரையிலைக்கும் ஜலத்தின் திவலைக்கும் எப்படிச் சம்பந்தா சம்பந்தமோ, அப்படியே ஸ்தூலதேகத்துக்கும் ஜீவாத்மாவுக்கும் சம்பந்தா சம்பந்தம் கொள்ளவேண்டும்.

"ஸ்தூலதேகத்துக்கும் ஆத்மாவுக்கும் சம்பந்தா சம்பந்தமெனில், சிலவேளைகளில் ஆத்மாவே, ஸ்தூலதேகத்தின் உதவியின்றி விவகாரங்களைச் செய்யவேண்டுமே?" என்று சில நாஸ்திகர்கள் வினவுகிறார்கள். ஆம், ஸ்தூலதேகத்தின் ஸ்திதி ஜீவாத்மாவை எப்படிப் பீடிக்கிறதோ, அதேவிதமாக ஜீவாத்மாவின் சக்தியும் ஸ்தூலதேகத்தைப் பீடிக்கின்றது. எப்படியெனில், ஒரு மனிதன் சரீர ஆரோக்கிய ஸ்திதியிலிருக்கிறதாக வைத்துக்கொள்ளுவோம். அந்த மனிதன் சந்தோஷமாக உண்டு உல்லாசமாக இருக்கும்போது, அவனது பந்துமித்திரரில் உயிர்த்துணையான ஒருவர் இறந்துபோனதாகத் தபால்வழியாய்க் கடிதம்வந்து அதைப் பிரித்து வாசித்தால், உடனே மதிமயங்கிப் புத்தி யுக்திகளற்றுப் பிரேதம் போலாய்விடுகிறான். சில வேளைகளில், இதே சிந்தனை மனதி

வழுந்த, மனம் மூளையிலும் ஹிருதயத்திலும் தாக்கப் பிரா ணன் போய்விடுகிறதுமுண்டு. இப்படியாதல் ஜடபதார்த்த மாகிய ஸ்தூலதேகத்தின் காரணமன்றே. அஜடமாகிய மன தின் மூலமாக அறிந்த மரணசங்கதியே யல்லவா காரண மாக இருக்கின்றது. மேலும், இந்த பிரஹ்ம மண்டபத்து க்கு அடுத்த அறையிலிருக்கும் அன்பர் ஒருவர், நமது பக்தி ரச கீர்த்தனைகளைக் கேட்ட உடனே எவ்வளவோ சந்தோஷ மடைகிறார். அந்த அன்பர் நம்மையும், நாம் பாடும் கீர்த்த னைகளையும் பார்க்காமலிருந்தும், கேவலம் இன்னிசையானது மனதிற்றுக்க, மனது ஆநந்தபரவசமாகி முகத்தைக் குளிர வைக்கின்றது. ஆகவே, ஸ்தூலதேகமெப்படி ஜீவாத்மா வைத் தனக்குள் அடக்கிவைத்து வருத்துகின்றதோ, அப் படியே ஜீவாத்மாவும் ஸ்தூலதேகத்தைத் தன்வசமாக்கிக் கொண்டு வருத்துகின்றது.

யோகசாஸ்திரங்களையும், சங்கராசாரியருடைய கிலகிரந் தங்களையும், ஐரோப்பா அமெரிகா தேசங்களின் (Spiritua-lists) மானதபூஜகியர்களுடைய * கிரந்தங்களையும், (Theo-sophist) யோகவித்தியா சஞ்சிகைகளையும், ஆங்கிலேயதேச த்தில் பிரசுரமான Night Side of Nature)"நைட்சைடாப் நேச்சர்" என்றுதி கிரந்தங்களையும் வாசித்துப் பார்க்கையில், பலவருடங்களுக்குமுன் இறந்து மறைந்துபோன மனிதர், (Ethereal Bodies) சூக்ஷ்மதேகிகளாக வந்து பற்பல வித மாகத் தமது பந்துமித்திரர்களிடம் பேசிவந்ததைப் பிரத்தி யக்ஷமாகக் கண்டதாகவும், பலவித பலமான சாக்ஷிகளுடன் பிரஸ்தாபிக்கப்பட் டிருக்கின்றன. நமது தேசத்து யோகிக ளும் கூடுவிட்டுக் கூடுபுகுந்து அநேக அற்புதங்களைச் செய்து வந்ததைப் பலர் பார்த்தெழுதியிருக்கின்றனர். சங்கராசாரி யரும் கூடுவிட்டுக் கூடுபாய்ந்ததாக அவரது வாழ்க்கைச்

* (1) Mesmerism and its Phenomena. (2) Phsychography. (3) The Debatable Land. (4) Foot-falls on the bound of another world. (5) Report of Spiritualism. (6) Miracles and modern Spiritualism. (7) Planchetta or the Despair of Science. (8) Proof palpable of immortality. (9) The soul of things (10) Isis unveiled.

சரித்திரத்தை எழுதியவர் * உண்மையாக நம்பி, பம்பாய்தேசத்தி லிப்போது பிரசுரஞ்செய்யப்பட்ட (Theosophist) யோகவித்தியா சஞ்சிகையிலே யெழுதியிருக்கின்றனர். அந்த சஞ்சிகைகளையும், (Night Side of Nature)"நைட்சைடாப் நேச்சர்" என்ற கிரந்தத்தையும் வாசித்தால், இறந்துபோனவர்கள் யாதொரு ஸ்தூலதேக சம்பந்தமற்று சூக்ஷ்மசரீரிகளாகிச் சதா சஞ்சாரஞ்செய்து வருவதையும், சாகா மனுஷர்களுடன் சல்லாபனைகளைச் செய்துவருவதையும் ஸ்பஷ்டமாக்குகின்றன. இத்தியாதிகளால் ஜீவாத்மா ஸ்தூலதேக சம்பந்தமில்லாமல் ஜ்வலிக்கிறதல்லவா ?

ஜீவாத்மாவே புருஷனைப்போலவும்,ஸ்தூலதேகமே அந்தப்புருஷன் வசிக்கும்வீட்டைப்போலவும் அல்லதுஒருபோர்வையைப்போலவு மிருக்கிறது. ஸ்தூலதேகமாகிய வீடு அல்லது போர்வை விசாலமானதாகவும்,வசதியானதாகவுமிருந்தாலன்றிப் புருஷனாகிய ஜீவாத்மா சுகமாகவாழ்வது சங்கடமேயாகிலும், அந்தப் புருஷனாகிய ஜீவாத்மாவின் வசத்திலேயே ஸ்தூலதேகமாகிய வீடும் அல்லது போர்வையு மிருப்பதால், அந்தப்புருஷனாகியஜீவாத்மாவின் இஷ்டப்படிசெய்யக்கூடிய

* As he (Saukaracharia) was going out with his pupils, they met the corps of a certain king named *Amaraka* (of Amirtapura to the west of Mandana Misaru city according to Anandagiri) lying at the foot of a tree in the forest surrounded by males and females mourning his death. Taking advantage of the opportunity, Saukara entrusted his *own Body* to the charge of his pupils and caused his *Soul* to enter this corpse of the king. The supposed resuscitation which followed delighted the people and king, Saukara was taken in triumph from the forest of death to the throne of royalty.—*Kasinath Trimbuk Telang, M. A., L.L.B.*

The incident is too important to pass by without editorial comment. The power of the Yogi to quit his *own body* and enter and animate that of another person, though affirmed by Patangali and included among the Siddis of Krisna is discredited by Europeanized young Indians—Naturally enough, since, as Western Biologists deny a *Soul* to man, it is an unthinkable proposition to them that the Yogi's *Soul* should be able to enter anothers body. That such an unreasoning infidelity should prevail among the pupils of European schools,is quite reason enough why an effort should be made to revive in India those schools of Psychology in which the Aryan youth were theoretically and practically taughtthe occult laws of man and Nature.-*Theosophist, January* 1880.

தாகவு மிருக்கிறது. நாம் ஒரு கூலிக்காரனை வேலையறிந்து வேலைசெய்ய எப்படித் தூண்டுகிறோமோ, அப்படியே ஸ்தூல தேகமாகிய கூலிக்காரனை, வேலையறிந்து உண்ணவும், உறங்கவும், ஓடவும், ஆடவும், பாடவும், ஜீவாத்மாவாகிய அதிகாரி தூண்டுகிறான். கேவலம், அஜடமாகிய மனோதிடத்தினாலும், உத்சாகத்தினாலும் ஜடபதார்த்தமாகிய ஸ்தூலதேகத்தைச்சார்ந்தஅநேகவியாதிகளை நீக்கிவருவதுபிரத்தியட்சமே. ஸ்ரீமான் ஜகந்நாதநாயடவர்களுடைய பெரியவாகட நூல்களில் மனோதைரியமும், மனோ உத்சாகமும் சிறந்த அவிழ்தங்களாக எழுதப்பட்டிருக்கின்றன. சேலத்தில்,சிலநாட்களுக்குமுன்பு, ஆஸ்பத்திரி டிரசராகவிருந்த ஒரு பண்டிதர், சப்கோர்ட்டு ரைட்டர் ம-ா-ா-ஸ்ரீ கோபாலகிருஷ்ண ஐயருக்குச் சம்பவித்த பயங்கரமான ஸ்தூலதேக வியாதிக்கு அந்த நோயாளியின் மனதே காரணமென்று கண்டு, அந்த ஸ்தூலதேக வியாதியைப் பத்து தினத்துக்குள் சவுக்கியப் படுத்துவதாகவும், இந்த வார்த்தையை உறுதிப்படுத்த ஷை வியாதியஸ்தருக்கு சாபாகடிதத்தில் உறுதிமொழி யெழுதித்தருவதாகவும் மனோ தைரியத்தை உத்சாகப்படுத்த, அந்த வியாதி மூன்றும்நாளே யாதொரு அவிழ்தமின்றி சொஸ்தமானது பிரத்தியக்ஷமாக அறிந்த விஷயம். இத்யாதி விஷயங்களால் அஜடமாகிய ஜீவாத்மாவுக்கு, ஜடபதார்த்தமாகிய ஸ்தூலம் வசப்பட்டிருக்கிறது பட்டப்பகல்போற் றெரிகிறதல்லவா? கடைசியாக "நான்" என்பது ஒருமைப் பொருளாகவும், அதாவது, ஏகி அல்லது தனிமைப் பொருளாகவு மிருக்கிறேன் என்பது தெள்ளத் தெரிந்ததே.இதற்குச் சுவானுபவத்துக்கு மிஞ்சிய சாக்ஷியம் வேண்டியதில்லை.

ஸ்தூலதேகமாகிய ஜடபதார்த்தம் பெருக்கக்கூடியதாயும் வகுக்கக்கூடியதாயு மிருக்கிறது. ஆகவே ஒவ்வொரு ஜடபதார்த்தமும் வலப்பாகம், இடப்பாகம், மேற்பாகம்,கீழ்ப்பாகம், உட்பாகம், வெளிப்பாகம் என்ற பாகங்களையுடையதாகக் கருதக்கூடியதாயு மிருக்கிறது. ஆனால் நான் என்னும் பொருளைப்பற்றி இப்படிக் கருதக்கூடவில்லை.நான் எண்ணுகிறேன், நான் நினைக்கிறேன், நான் உணருகிறேன், நான் விரும்புகிறேன், நான் வெறுக்கிறேன், நான் பார்க்கிறேன், நான் கேட்கிறேன், நான் வாசனையறிகிறேன், நான் புசிக்கிறேன், நான் பேசுகிறேன், நான் அசைகிறேன், நான் செய்கிறேன், நான் நடக்கிறேன், நான் நிற்கிறேன், நான் பிரார்த்திக்கிறேன்,

நான் பிரசங்கஞ் செய்கிறேன், நான் வாழ்கிறேன் என்றுசொல்லும்போது, இப்படி விரும்புகிறதும், மற்றக்காரியங்களைச் செய்கிறதுமான இந்த "நான்" என்னும் தன்மை ஒருமைப் பெயர் நீண்டதென்றும், குறுகியதென்றும், வகுக்கக்கூடியதென்றும், பெருக்கக்கூடியதென்றும், மேலும், அதற்கு மேற்பாகமாவது,கீழ்ப்பாகமாவது இருக்கிறதென்றும்கருதக் கூடுமோ? கூடாதல்லவா. ஆகவே,* "நான்"என்னும் தன்மை ஒருமைப்பொருளாகிய இந்த அஜட பதார்த்தத்தை வகுக்கவும், பெருக்கவும் தக்க பதார்த்தங்களையுடைய ஜடப்பொருளல்லாததாக இருந்தும், சுவானுபவத்தா லறிகிறோமல்லவா? நாம் சிறுபிராயத்திற் செய்த அநேக காரியங்களும், தரிசித்த இடங்களும் இன்றும் ஞாபகத்தி லிருக்கிறதல்லவா? அந்த ஞாபகம் (Memory)ஜடமா? அஜடமா? ஜடமாகில்தேகத்தில் எங்கிருக்கிறது ? அஜடமாகில் எங்கிருக்கிறது? ஜடமாகில் ஸ்தூலதேகம் வளரும்போது அதுவும் வளரவேண்டுமே.அத

* "பிண்டமா முடனு னல்லேன் பிராணவா யுவுநா னல்லேன்
கண்டவைம் பொறியு மல்லேன் கரணமோர் நான்கு மல்லேன்
பண்டைய வறிவு நானென் றுன்னருள் கொண்டு பார்க்கி
லெண்டிசை கீழ்மே லெங்கு மேகனு யிருக்கின் றேனே."
"தூலத் தனுவு நானல்லேன் சூக்கத் தனுவு நானல்லேன்
மூலத் தனுவு நானல்லேன் மும்மைத் தனுவும் பொய்யன்றோ
ஞாலத் தனுவை நானென்றே நம்பிக் கெட்டே நெடுங்காலஞ்
சாலத்தெளிந்தேனினிஞானத்தனுவே யெனக்குத்தனுவென்றே.
(சிவஞான வள்ளலார்.)

"ஸ்தூலவுடல் சூக்கமதே சத்தி யில்லை
ஸ்தூலவுடல் சூக்கவுட லிவ்வி ரண்டு
மாலயமாங் காரணத்தே சத்தி யில்லை
யவைமூன்றந் துரியத்து லிலவே யில்லை
கோலமுறுந் தேகமெலா மிலாத தாலுங்
கூறபடாச் சின்மாத்ர சொரூப மொன்றே
காலமொரு மூன்றிலுமே யிருப்ப தாலுங்
களங்கமிலாச் சின்மாத்ர சொரூப மோநான்."
"கனவினிடை நனவில்லை யிவ்வி ரண்டுங்
காரணமாஞ் சுழுத்திதனி லில்லை யந்த
நனவாதிச் சுழுத்திகளுந் துரியத் தில்லை
நாலுவித வவத்தைகளுஞ் சுத்தத் தில்லை
சொனவிதமா யவத்தையெலா மிலா ததனுஞ்
சுத்தமதாஞ் சின்மாத்ர சொரூப மொன்றே
யனவாத மழியாம லிருப்ப தாலு
மத்துவித சின்மாத்ர சொரூப மோநான்." (ரிபுகீதை)

ற்கு நீளம், அகலம், உயர முதலான அளவு பேதமுண்டா? அது அஜடமாகில் எவ்விதமாகத் தேகத்தில் எங்கு இருக்கிறது? நாஸ்திகர் சொல்லமுடியுமோ?

"மிருகங்கள், பட்சிகள், கிருமி கீட கந்தமூலாதிகளுக்கும் ஜீவாத்மா உண்டோ" என்று சில நாஸ்திகவாதிகள் வினவுகிறார்கள். ஆம், நாய் முதலான சில மிருகங்கள் சில சமயங்களில் ஆச்சரியமான காரியங்களைச் செய்துவருவதைப் பிரத்தியக்ஷமாகப் பார்த்து மிருக்கிறோம். பூனை முதலான சில பிராணிகள், தம் குட்டிகளுக்கு இரையைப் பிடித்து உண்ணும்படியான காலம் வந்ததாவென் றறிவதற்காக, சுண்டெலி முதலான சிறிய பிராணிகளைக் குற்றுயிருடன் பிடித்துத் தன் குட்டிகளின் முன்விட்டுத் தாம் பதுங்கிப் பார்த்துக் கொண் டிருப்பதை யாம் பார்த்திருக்கிறோம். சுண்டெலிகளும், பேரெலிகளும் தம் வளைகளை யற்புதமாக அமைத்துப் பல பொருள்களைச் சேர்த்துவைக்கும் விநோதத்தை Cuvier—கியூவர் சாஸ்திரியும் Buffon—பஃவன் சாஸ்திரியும் மிக மேன்மையாக எழுதி யிருக்கிறார்கள். மேலும், மிருகராஜனாகிய சிங்கமும், ஹீனமான நாய்க்குட்டியும் சகோதர பட்சத்துடன் ஒரே குகையில் வாழ்ந்து வந்ததாக கியூவர் சாஸ்திரி சொல்லியிருக்கிறார். கரடிகள், தன் எஜமானனுடைய சப்தத்தைக் கேட்டவுடனே ஆநந்தப்படுகின்றன. பசு முதலான சில மிருகங்கள் தாம் ஈன்ற கன்றுகளின் விஷயமாக மெய்மறந்து உபசரிக்கின்றன. Ourang outang—வாலில்லா வானரங்கள் சில மனுஷர்கள் செய்யப்பட்ட கிரியைகளில் அநேகஞ் செய்வதைப்பற்றி M. Flourens—ம. ப்லோரென்ஸ் சாஸ்திரியார் பெரிய கிரந்தமெழுதியிருக்கிறார். சில குரங்குகள் தம்குட்டிகள் மரங்களைத் தாவும்படிப் பழக்குவிப்பதை யாமும் பார்த்திருக்கின்றோம்.

இராஜாளிகளும் பருந்துகளும் தம் குஞ்சுகள் இரையைப் பிடித்து உண்ணுந் திறமையை யறியும்படிக்குத் தாய்ப்பக்ஷிகள் ஓர்மாம்ஸத்துண்டையேந்தி உயரப்பறந்து நின்று கூட்டிலிருக்கும் குஞ்சுகளை மேலே பறந்துவரக் கூப்பிட்டு, அந்தக் குஞ்சுகளுக்கு நேராக அந்தத் தசைத் துண்டத்தைப் போட்டுப் பார்க்கும்; அப்போது குஞ்சுகள் அந்தத் துண்டத்தைத் தாவிப்பிடிக்கப் பிசகிவிட்டால் உடனே தாய்ப்பக்ஷிகள் வேகமாய்விழுந்து தாவிப்பிடிக்கும் விதத்தைக் கற்பிக்கின்றன. சில பருந்துகள்: தம் குஞ்சுகள் பறக்குந்திறமையைக் காணும்படி

ஆணும் பேடுமாகிய பெரிய பக்ஷிகள் தம் குஞ்சுகளை உயர எடுத்துக்கொண்டு போய்விட்டுப் பழக்குவிப்பதாக M. Demalle-டிமால்சாஸ்திரியார் சொல்லியிருக்கிறார். சிலவாத்துகள் தமது முட்டைகளை வேறு பக்ஷிகளின் கூண்டிலிட்டுக் குஞ்சு பொரிக்க வேண்டிய உபாயங்களை நாடுவதாக Leiroy—லியரி சாஸ்திரியார் சொல்லியிருக்கிறார். வானம்பாடிகளும், ஊர்க்குருவிகளும், தூக்கணாங்குருவிகளும், வேறு சில ஆண் பக்ஷிகளும் விநோதமாகக் கூண்டுகளைக் கட்டி, அதனுள் ஜலம் விழாதபடித் தம் சிறகுகளையே உதிர்த்து, கஷ்டத்தோடு முட்டையிட்டு அவயங்காத்துக் குஞ்சுபொரிக்கும் பெட்டைகளுக்கும் குஞ்சுகளுக்கும் இரைதேடிக் கொடுத்தும், தம் பெட்டைகளுக்கு உச்சாகமுண்டாகும்படி கீதங்கள்பாடுகின்றன. தம் கூண்டுகளுக்கும் குஞ்சுகளுக்கும் அபாய முண்டாகும்போது மிகவும் பரிதாபமான சத்தமிட்டுக் கதறுகின்றன. புறாக்கள் நெடுந்தூரம் உயரப் பறந்து அநேகமைல் தூரங்களிலிருக்கும் தமது எஜமானனுடைய வீட்டிற்கே வந்து விடுகின்றன.

எறும்புகளின் வாசஸ்தானத்தைப் பார்க்கில் மிகவும் ஆச்சரியத்தைக் கொடுக்கின்றது. எறும்பின் முட்டைகளுக்கு யாதாவது கெடுதி சம்பவிக்கிற பக்ஷத்தில், யாதொரு சத்தமுமில்லாமல் சைகைக் குறிப்புகளால் வேறு எறும்புகளுக்கு அறிவித்து அழைத்து, உடனேஎல்லா எறும்புகளுங்கூட்டங் கூடி அந்தமுட்டைகளை அப்புறப்படுத்திப் பாதுகாக்கமுயல்வதாக Dr. Franklin—பிரான்க்லின் சாஸ்திரியார் எழுதியிருக்கிறார்.

எறும்புப்புலி என்ற சிலபூச்சிகள், எறும்புகளை வெகு தந்திரமாகப் படுகுழியில் விழ்த்தி விழுங்குகின்றன. சில வண்டுகள்: தவளை, தேரையாதி பிராணிகள் இறந்தால் அவற்றின் உடல்களை மனுஷர்களைப் போலவே குழியிற்போட்டு அடக்கஞ் செய்வதாக * Gleditsch—கிலிடிட்ஸ்கு சாஸ்திரி

* Gleditsch relates that one of his friends desiring to dry the body of a toad, stuck it upon the end of a stick planted in the ground, to prevent it from being carried away by the Sexton-Beetle, which abounded in the place—this, however, was unavailing. The beetles having assembled round the stick, surveyed the object and tried the ground, deliberately applied themselves to make an excavation around the stick; and having undermined it, soon brought it to the ground, after which, they not only buried the carcase of the toad, but also the stick itself.

யார் செப்பியிருக்கிறார். சிலந்திப்பூச்சிகள் ஈக்களைக் கொன்று தமது இடங்களுக்குக் கொண்டுபோகும்போது, அவைகளைத் தம் சக்திக்குத் தக்கபடி பல சிறிய துண்டங்களாக்கிக் கொண்டுபோவதாக Darwin * டார்வின் சாஸ்திரி சொல்லியிருக்கிறார். சில வண்டுகள் விநோதமான கூண்டுகளைக் கட்டுகின்றன. † வாத்துகளும் மீன்களும் யாதொருவருடைய போதனையின்றி நீந்துகின்றன. மீன்களும், பாம்பாதி சில ஊர்வனவைகளும் அபாயம் வரும்போது வெகு ஜாக்கிரதையாய்த் தப்பிக் கொள்வதற்கு முயல்வதாக Plutarch—புளுடார்க்கு சாஸ்திரியும் சொல்லியிருக்கிறார். பெரும்பான்மையாகப் பிராணி சமூகங்களிடத்தில் அன்பு, தயை, தானம், கிருபை, ஐக்கியம், சுவஜாதி அபிமானம், புருஷப்பிரியம், பேடைப் பிரியம்,குஞ்சுகளைப் பாதுகாக்கும் பொறுப்பு முதலான குணவிசேஷங்களை நாம் காணும்போது இத்யாதி ஆச்சரியங்களுக்கு ஓர்வித ஜீவாத்மாவே காரணமென்று பட்டப்பகலைப்

* Darwin relates, that walking one day in his garden, he perceived upon one of the walks a sphex, which had just seized a fly almost as large as itself. Being unable to carry off the body whole, it cut off with its mandibles the head and the abdomen, only retaining the trunk, to which the wings were attached. With these it flew away, but the wind acting when the wings of the fly caused the Sphex which bore it to be whirled round, and obstructed its flight. Thereupon the sphex again alighted upon the walk, and deliberately cut off first one wing and then the other, and then resumed its flights, carrying off its prey.

† When a mixed brook of chickens and ducklings hatched by a hen approach for the first time a pond of water, the ducklings precipitate themselves into the liquid in spite of their adopted mother to prevent them, and contrary to the example of the chickens, with whom they have come into life and from whom they have never been separated. The ducklings who do this may have never before seen water or any individuals of their own species, yet they use their webbed feet as propellers with as much skill as the oldest and most experienced of their race.—*Plutarch.*

போலப் பிரகாசிக்கிறதல்லவா? சாதாரணமாகத் * தேன்கூண்டுகளையும், தேனீக்களின் தொழில்களையும் பாருங்கள்; என்ன ஆச்சரியமா யிருக்கின்றன.

பைபிலைச் சார்ந்த ஆதியாகமம், முதலதிகாரம் 20-வது வாக்கியத்தில்: ஜலத்தில் நீந்திவாழும் ஜந்துக்களுக்கும் ஜீவாத்மாவிருக்கிறதென்றும், அதேயாகமம் 30-வது வாக்கியத்தில் பூமியிலிருக்கும் ஒவ்வொரு மிருகத்துக்கும், ஆகாயத்தில் பறக்கும் ஒவ்வொரு பக்ஷிக்கும், நிலத்திலூரும் ஒவ்வொரு புழுவுக்கும் ஜீவாத்மா இருப்பதாக எபிரேய பாஷையில் சொல்லப்பட்டிருக்கிறது. அரிஸ்டாட்டில் (Aristotle) என்னும் தத்துவ சாஸ்திரியாருடைய கிரந்தங்களில், ஒவ்வொரு மனுஷனுக்கும் ஜீவாத்மா இருப்பதைப்போலவே, ஒவ்வொரு பிராணிக்கும் பிராணாத்மாவும்; ஒவ்வொரு புல், பூண்டு, கந்தமூலத்திற்கும் முளைப்பிக்கும் சக்தியாகிய ஆத்மாவும் இருப்பதாகச் செப்பி யிருக்கிறார். கான்பியூசியஸ் (Confucius) என்னும் சீனதேசத்துத் தீர்க்கதரிசியும் ஜீவாத்மாவைப்பற்றிப் பேசியிருக்கிறார். சீனதேசத்தில் சில வகுப்பாருக்குள், ஒரு விநோத வழக்கம் நடந்தேறி வருகிறது. அதாவது, அந்த வகுப்பைச் சார்ந்தோரில் யாருக்காவது வியாதி சம்பவித்து மரணம் சம்பவிக்கிற தருணத்தில், அந்த நோயாளியின் பந்துமித்திரர்களும் வேறு சிலருங்கூடி, அந் நோயாளியி னுள்ளிருக்கும் ஜீவாத்மா ஸ்தூலதேகத்தை

* "Hark ! the bee winds her small but mellow horn,
Blithe to salute the sunny smile of morn,
O'er thy my downs she bends her busy course,
And many a stream allures her to its source,
'Tis noon' tis night. That eye so finely wrought,
Beyond the search of sense, the soar of thought,
Now vainly asks the scenes she left behind,
Its orb so full, its vision so confined,
Who guides the patient pilgrim to her cell ?
Who bids her soul with conscious triumph swell ?
With conscious truth retrace the mazy clue
Of varied scents that charmed her as she flew?
Hail, memory hail ! thy universal reign
Guards the least link of Being's glorious chain.—*Rogers*."

விட்டுப் பிரிந்துபோகாமற் பயப்பட்டு அடங்கி அந்தத் தேக
த்திலேயே யிருப்பதற்காகப் பலவித வாத்தியங்களை முழங்
கும்படி செய்வார்கள். சிலர்: மேலும் கீழும் பார்த்து ஷை
நோயாளியின் ஜீவாத்மாவைத் தியானித்து, "ஓ ஜீவாத்மாவே?
நீ இந்த ஸ்தூலதேகத்தைவிட்டுப் பிரிந்து போகாதேயும்!
நின்க்கு மரியாதை செய்கிறோம்! நின்னைப் போகவிடமாட்
டோம்" என்று பிரார்த்திப்பார்கள்.

மகமதியருடைய கொரானிலும் ஜீவாத்மாவைப்பற்றி
விசேஷமாகப் பிரஸ்தாபிக்கப்பட் டிருக்கிறது. பார்சிக மத
குருவாகிய ஜொராஷ்டரும், எகிப்து தேசத்து மதாதிபதி
களும், பவுத்த மதத்தை ஸ்தாபித்த புத்தரும், மற்றும்
கிரேக், ரோமக மதாதிபர்களும் கிறிஸ்துமத ஸ்தாபகராகிய
ஏசுகிறிஸ்துநாதரும் ஜீவாத்மா உண்டென்று ஸ்தாபிதம்
செய்தவர்களே. கடைசியாகப் பூலோகத்தில் சிறந்த தத்துவ
ஞானியாகிய (Plato) பிலேடோ என்பவரும் ஜீவாத்மா
உண்டென்று ஸ்தாபித்தார். இவரிலும் சிறந்த ஞானியாகிய
சாக்ரட்டஸ் (Socrates) என்பவர் 2300-வருஷங்களுக்கு
முன்பே ஜீவாத்மா உண்டென்று ஸ்தாபித்து, அதன் விஷய
மாகப் பலவித கஷ்டங்களையு மனுபவித்தார். இந்த மகாத்மா
விஷத்தை யுட்கொள்வதற்குச் சற்று முந்தி, இவருடைய
சிடன் ஒருவன் இவரைப் பார்த்து: "தங்களை எப்படிப் புதை
த்தால் சம்மதம்?" என்று கேட்க, இந்த ஞானியானவர் முக
மலர்ந்து, "நான் என்கிற என்னை நீங்கள் பிடிக்கக் கூடுமாகில்
இஷ்டப்படி புதைக்கலாம்" என்றும், "நான் புதைக்கப் படுவ
தற்கு அகப்படமாட்டேன்" என்றும் சொல்லிவிட்டார். இத
னால் நான் என்கிற தன்மை யொருமைப் பெயராகிய ஜீவாத்
மாவைப் பிடிக்கக் கூடாதென்றும், நான் என்கிற ஜீவாத்மா
சாகமாட்டாதென்றுங் கருத்தாகிறதல்லவா?

சிலர்: "பஞ்ச பூதத்தினாலாகிய ஸ்தூல தேகத்தின் ஐக்
கியமே ஜீவசக்தி யல்லது பிராணன்" என்றும், "ஸ்தூலதேகம்
மரணமடையும்போது அதன் ஐக்கியத்தினா லுண்டான
ஜீவசக்தியும் பஞ்ச பூதத்தில் லயமாகிறபடியால், இனி
ஜீவன் ஒன்று வேறானதாக இருக்கிறதென்று எண்ணுதல்
பிசகு" என்று சொல்லுகிறார்கள். நல்லது இந்தக் கேள்வியா
கிலும் யுக்திக்குப் பொருந்துமோ பார்ப்போம்.

அங்காதிபாத சாஸ்திராதிகளைப் பார்த்து வருகையில், மானிட சரீரத்தில் * 14-பவுன் எலும்பும், 24-பவுன் இரத்த முந்தசையும், 166-பவுன் ஜலமும், இந்த ஜலபாகத்தில் 10-பவுன் சுண்ணும்பும், 14-பவுன் கரியும்; இந்தக் கரிபாகத்தில் (Oxygen) பிராணவாயுவும், (Nitrogen) அமிலவாயுவும், (Hydrogen) ஜலவாயுவுங் கலந்திருப்பதாகத் தெரியவருகிறது. இத்யாதி ஜடபதார்த்த ஐக்கியத்திலாகிய மனிதன் பிரபஞ்சத்தில் பிரகாசிக்கும் பற்பல பொருள்களைப் பார்க்கவும், தீர்க்கவும், எண்ணவும், பண்ணவும், திரும்பவும், விரும்பவும் செய்கிறதென்னில், பார்க்கிற கண்கள் எப்போதும் பார்த்துக்கொண்டும், கேட்குங் காதுகள் எப்போதுங் கேட்டுக்கொண்டும், பேசும் நாக்கு எப்போதும் பேசிக்கொண்டும், எழுதுங் கை எப்போதும் எழுதிக்கொண்டுமே யிருக்கவேண்டும். ஏனெனில், ஜடபதார்த்தத்தை யசையவைத்தால் அது எப்போதும் † அசைந்துகொண்டே யிருக்கவேண்டுமே

* "Now those, who think that the intellectual principle residing in the human body is nothing more than a quality or a property arising from the matter composing it, must be able to imagine how 14 lbs. of charcoal, 10 lbs. of lime, and 116 lbs. of water, can be so mixed up with 14 lbs. of air, as to make a material thing—machine let us call it—which can *feel*, *think*, *judge*, *remember* and *reason*. Let us try to imagine for example, the possibility of such a mass of charcoal, lime and water, discovering the existence, position and motion of the planet Neptune before it was ever seen; of ascertaining the periodicity of the planetary inequalities, countless ages before many of these inequalities had passed through one of their periods; of inventing the Printing Press, the Ship, the Steam Engine and the Electric Telegraph; of composing "Paradise Lost; of producing, the Transfiguration and Antinous, or of designing the Partheon!" Dr. Lardner.

† Matter is a term in philosophy, signifying whatever is extended and capable of making resistance; hence all bodies whether solid or fluid, that are extended and resist, are material or made up of matter. Matter is of itself inactive, and indifferent to rest or motion.

Motion is the act of changing place; or it is that affection of matter by which it passes from one point to another. A body at rest will continue so for ever, unless it be put in motion by some external cause; and a body in *motion* will move for ever, unless topped by some external courses—*Pinnoek's Astronomy*."

யொழிய, அசைவற்று நிற்க ஹேதுவில்லை யல்லவா? ஆனால், மானிடர்களோவெனில், தம் மனோதர்மத்தின்படி பார்க்க வேண்டிய காலத்தில் மாத்திரம் பார்த்தும், பேசவேண்டிய காலத்தில் மாத்திரம் பேசியும், பாடவேண்டிய காலத்தில் மாத்திரம் பாடியும், எழுதவேண்டிய காலத்தில் மாத்திரம் எழுதியும் வருவது பிரத்யக்ஷ அனுபவமாகையாலும், கேவலமான ஜடபதார்த்தம் இப்படிச் சமயோசிதமான காரியங்களைச் செய்வது அசாத்யமாகையாலும், இப்படிப்பட்ட காரியங்களைக் காலானுகூலத்துக்குத் தக்கபடி செய்விக்க (ஜடபதார்த்தத்தைவிட) ஒரு தனியான சக்தி யிருக்கவேண்டுமென்றே ஸ்பஷ்டமாகிறது. ஏனெனில், ஜடபதார்த்தம் அசைவற்றிருந்தால், அது எப்போதும் அசைவற்றிருக்க வேண்டுமே யொழிய, மறுபடியும் அசைய ஹேதுவில்லை. ஆகவே ஜடபதார்த்தம் வேறாகவும், அதை யசையவைக்கும் * சக்தி வேறாகவும் இருப்பது பட்டப்பகலைப்போல் தெரிகிறது. இதன் உண்மையைக் ககோளாதி தத்வ நூல்களைக் கொண்டு பலவித திருஷ்டாந்தங்களால் நிரூபிக்கலாம். ஆனதைப் பற்றியே, ஜடபதார்த்தம் வேறானதாகவும், அதை

* M. Buchner's critics find him equally weak when he considers the relation of *matter* to *motion*. They use against him the scientific doctrine of INERTIA, accepted by most philosophers, from Newton to Laplace. This doctrine is that of the indifference of matter as respects motion or rest. If put in motion, it has no tendency to stop; if at rest no tendency to move. This is a fundamental *law* of science, some science astronomy for example, would be impossible; for this tendency in matter to motion or rest would enter as an unknown element into every calculation; and derange its results. Every astronomical verification, therefore, is a proof of the doctrine of INERTIA, and so disproves the statement that force is a property of matter. Force must be something outside of matter, and is admitted (says Mr. Martineau) both by Comte and Mill to be hyperphysical. Mr. Martineau very clearly shows (in his article, "Nature and God") that all force is of one type, and that type mind. Thus we have another confutation of materialism, derived from one of the fundamental laws of physical science.—*Materialism and Immaterialism.*"

யியக்குஞ் சக்தியும் வேறானதாகவு மிருக்கவேண்டுமென்று மில் (Mill), கொம்டி (Comte) என்கிற தற்கால தத்துவ ஞானிகளும் ஒத்துக்கொள்வதாக மிஸ்டர் மார்ட்டினியூ (Mr. Martineau) சாஸ்திரியார் சொல்லி யிருக்கிறார். அந்த சக்தியேதான் ஜீவாத்மாவென்றும், பிராணனென்றும், உயிரென்றும் பலவிதமாக உலகத்தார் கொண்டாடி வருகின்றனர். கனவான்களே! நமது இந்துதேசத்திலிருந்த பூர்வாசாரியர்களாகிய ரிஷிகளும், முனிவர்களும், யதிகளும் (உலகத்தின் மற்றத் தேசத்தார்களைப் பார்க்கிலும்) ஜீவாத்மா உண்டென்று ஸ்தாபித்து, அதற்காக அநேக பிரமாணங்களைச் சொல்லி யிருக்கின்றனர். நமது சதுர்வேதங்களும், உபநிஷத்துக்களும், உலகத்தின்மற்ற மதஸ்தர்களுடைய நூல்களைப் பார்க்கிலும் புராதனமும், புகழும் பெற்றவைகள். அவைகளில் * முண்டகோப உபநிஷத்து3-வது முண்டகம், க-வது கண்டம், க-வது வாக்கியத்தில்,

"இரண்டு அழகான பறவைகள்—(ஜீவாத்மா, பரமாத்மா) இரட்டையாகவும், தோழமையுடனும் குடியிருக்கின்றன. அவற்றுள் ஒன்று செய்கைகளின் பயன்களை யனுபவிக்கின்றது. மற்றொன்று பார்க்காமல் அனுபவித்துக்கொண்டு மாத்திரம் இருக்கின்றது" என்றும்,

† மேற்படி உபநிஷத்து, மூன்றாவது முண்டகம், 4-வது கண்டம், 2-வது வாக்கியத்தில்,

"ஜீவாத்மா சரீரத்தி லிருந்துகொண்டு தீனத்தன்மையில் மூழ்கியதாகித் துயரப்படுகின்றது. ஆனால், எப்போதும் யாவராலும் தொழப்பட்ட ஈசனையும், அவரது மகிமையையும் பார்க்கின்றதோ அப்போது துயரமற்றதாகிறது" என்றும்,

* 𑌦𑍍𑌵𑌾 𑌸𑍁𑌪𑌰𑍍𑌣𑌾 𑌸𑌯𑍁𑌜𑌾 𑌸𑌖𑌾𑌯𑌾 𑌸𑌮𑌾𑌨𑌂 𑌵𑍃𑌕𑍍𑌷𑌂 𑌪𑌰𑌿𑌷𑌸𑍍𑌵𑌜𑌾𑌤𑍇; 𑌤𑌯𑍋𑌰𑌨𑍍𑌯𑌃 𑌪𑌿𑌪𑍍𑌪𑌲𑌂 𑌸𑍍𑌵𑌾𑌦𑍍𑌵𑌤𑍍𑌤𑍍𑌯𑌨𑌶𑍍𑌨𑌨𑍍𑌨𑌨𑍍𑌯𑍋 𑌅𑌭𑌿𑌚𑌾𑌕𑌶𑍀𑌤𑌿.

† 𑌸𑌮𑌾𑌨𑍇 𑌵𑍃𑌕𑍍𑌷𑍇 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌨𑌿𑌮𑌗𑍍𑌨𑍋𑌽𑌨𑍀𑌶𑌯𑌾 𑌶𑍋𑌚𑌤𑌿 𑌮𑍁𑌹𑍍𑌯𑌮𑌾𑌨𑌃; 𑌜𑍁𑌷𑍍𑌟𑌂 𑌯𑌦𑌾 𑌪𑌶𑍍𑌯𑌤𑍍𑌯𑌨𑍍𑌯𑌮𑍀𑌶𑌮𑌸𑍍𑌯 𑌮𑌹𑌿𑌮𑌾𑌨𑌮𑌿𑌤𑌿 𑌵𑍀𑌤𑌶𑍋𑌕𑌃.

* கடோபநிஷத்து 3-வது வல்லி, 1-வது வாக்கியத்தில், "சரீரத்தில் சிறந்த இடத்தில் இருவரிருக்கிறார்கள்; அவர்களில் ஒருவர் தமது செய்கைகளுக்குரிய பயனை யநுபவிக்கிறார். மற்றொருவர் பலனைக் கொடுக்கிறார். ப்ரஹ்மஜ்ஞானிகளும், ஐந்து அக்கினிகளை வளர்ப்பவர்களும், த்ருணாசிகேதர்களும், அவர்களை நிழலும் ஒளியும்போல பரஸ்பரம் அதி ஸமீப ஸம்பந்தமுடையவர்களென்றும் வேறுவேறானவர்களென்றும் உரைக்கின்றனர்" என்றும்,

† ப்ரஹதாரண்யம், 9-வது அத்தியாயம், 4-வது ப்ராஹ்மணம், 5-வது வாக்கியத்தில்,

"யாரெப்படிச் செய்கிறாரோ, யாரெப்படி ஆசரிக்கிறாரோ, அவரப்படியாகிறார். நல்ல காரியங்களைச் செய்கிறவர் நல்லவராகிறார். பாப காரியங்களைச் செய்கிறவர் பாபியாகிறார். தர்மகாரியங்களைச் செய்வதனால் ஆன்மா பரிசுத்தமுள்ளதாகிறது. பாப காரியங்களைச் செய்வதனால் ஆன்மா பாபமுள்ளதாகிறது" என்றும்,

‡ ஷை பிரமாணம், 23-வது வாக்கியத்தில்,

"ப்ரஹ்மஜ்ஞானி வெளி இந்திரியங்களையும், உள்ளிந்திரியங்களையும் வசப்படுத்திக்கொண்டு, பாபத்தில்வெறுப்புற்று, சுக துக்கங்களைப் பொறுத்துக்கொண்டு, தன்னிடத்திலேயே பரமாத்மாவைத் தரிசிக்கிறார்" என்றும்,

---

* 𑌋𑌤𑌂 𑌪𑌿𑌬𑌨𑍍𑌤𑍌 𑌸𑍁𑌕𑍃𑌤𑌸𑍍𑌯 𑌲𑍋𑌕𑍇 𑌗𑍁𑌹𑌾𑌂
𑌪𑍍𑌰𑌵𑌿𑌷𑍍𑌟𑍌 𑌪𑌰𑌮𑍇 𑌪𑌰𑌾𑌰𑍍𑌧𑍇 । 𑌛𑌾𑌯𑌾𑌤𑌪𑍌 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍋
𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 𑌪𑌞𑍍𑌚𑌾𑌗𑍍𑌨𑌯𑍋 𑌯𑍇 𑌚 𑌤𑍍𑌰𑌿𑌣𑌾𑌚𑌿𑌕𑍇𑌤𑌾𑌃.

† 𑌯𑌥𑌾𑌕𑌾𑌰𑍀 𑌯𑌥𑌾𑌚𑌾𑌰𑍀 𑌤𑌥𑌾 𑌭𑌵𑌤𑌿; 𑌸𑌾𑌧𑍁𑌕𑌾𑌰𑍀
𑌸𑌾𑌧𑍁𑌰𑍍𑌭𑌵𑌤𑌿; 𑌪𑌾𑌪𑌕𑌾𑌰𑍀 𑌪𑌾𑌪𑍋 𑌭𑌵𑌤𑌿; 𑌪𑍁𑌣𑍍𑌯𑌃
𑌪𑍁𑌣𑍍𑌯𑍇𑌨 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌭𑌵𑌤𑌿 𑌪𑌾𑌪𑌃 𑌪𑌾𑌪𑍇𑌨.

‡ 𑌶𑌾𑌨𑍍𑌤𑍋 𑌦𑌾𑌨𑍍𑌤 𑌉𑌪𑌰𑌤𑌸𑍍𑌤𑌿𑌤𑌿𑌕𑍍𑌷𑍁𑌃 𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾𑌽𑌽𑌤𑍍𑌮
𑌨𑍍𑌯𑍇𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿.

* முண்டகோபநிஷத்து, 3-வது முண்டகம், 2-வது கண்டம், 4-வது வாக்கியத்தில்,

“எந்த பரஹ்மஜ்ஞானி இந்த உபாயங்களால் ப்ரஹ்மத்தை யடைய முயலுகிறாரோ அவருடைய ஆன்மா பரஹ்மமென்னும் வீட்டையடைகிறது” என்றும்,

† எப்பொழுதும் ஆன்மாவிலிருக்கிற பரமாத்மாவே அறியப்படத்தக்கது. அதன் பின்னர் அறியப்படத்தக்கது சிறிதுமில்லை என்றும் சொல்லியிருப்பதால், ஜட பதார்த்தமாகிய ஸ்தூலதேகத்தில் அஜட பதார்த்தமாகிய ஜீவாத்மாவுமிருப்பது சுருதி யுக்தி ஸ்வாநுபவத்துக்குப் பொருந்தியிருக்கிறது. பரமாத்மா ஓர் பேரானந்தப் பெரிய சமுத்திரம். அதில் ஜீவாத்மாக்கள் அநந்தகோடி தீவுகளாகப் பிரகாசிக்கின்றன. அந்த தீபங்களுக்கொப்பான ஜீவாத்மாக்கள் உற்பத்திக்கு அந்தப் பேரானந்த பெரிய சமுத்திரமாகிய பரமாத்மாவே காரணம். அப்படி உற்பத்தியாகிய ஜீவாத்மாக்கள் தமது இருப்புக்கும், போஷணைக்கும் ஆதாரமான பரமாத்மாவில் சுகித்து சதா பேரானந்த முறுகின்றன.

ஆகையால், அகிலாண்டகோடிகளையும், அவற்றுள் வாழும் அநந்தகோடி ஆன்மாக்களையும் படைத்துப் பாதுகாத்து வரும் அபாரசக்தியையுடைய அப்ரமேய பரமாத்மாவை நாம் பணிந்து பிரார்த்தனை செய்வோமாக.

தேவாரம்.

வான்முதல் உலகம்யாவும் வாகுடன் அடுக்கிப்பின்னும்
ஆன்ம கோடிகளை யாக்கி யாதரித்திடு மெங்கோவை
நான்மறை போற்றும் ப்ரஹ்ம நாவலர் சமாஜத்தாரை
என்காக்கத் தாமதந்தான் எந்தையே விந்தைதேவே.

ஹரி: ஓம். சாந்தி: சாந்தி: சாந்தி:

---

* 𑌯 𑌏𑌤𑍈𑌰𑍁𑌪𑌾𑌯𑍈𑌰𑍍𑌯𑌤𑌤𑍇 𑌯𑌸𑍍𑌤𑍁 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌂𑌸𑍍𑌤𑌸𑍍𑌯𑍈𑌷 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌶𑌤𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌧𑌾𑌮.

† 𑌏𑌤𑌜𑍍𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍇𑌵𑌾𑌤𑍍𑌮𑌸𑌂𑌸𑍍𑌥𑌂 𑌨𑌾𑌤𑌃 𑌪𑌰𑌂 𑌵𑍇𑌦𑌿𑌤𑌵𑍍𑌯𑌂 𑌹𑌿 𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍.

ஓம்.

ப்ரஹ்மணேநமः

# பரமாத்மா

அல்லது

## "கடவுள் ஒருவர் இருக்கிறார்"

என்பதைப்பற்றிப்

பேங்களூர் ப்ரஹ்மோபாசனா சாலையில்

1880ஞு ஜூன்மீ 1உ நடந்த 9-வது ப்ரஹ்மோற்சவகாலத்தில்

சேலம். பகடால. நரஸிம்முலு நாயடவர்கள்

செய்த உபந்யாசமாகிய

# ஆஸ்திகமத சித்தாந்தம்

அல்லது

# மதவிருக்ஷத்தின்

## முதல்பாகம்.

---

### மூன்றாவது அத்தியாயம்.

---

காப்பு.

" [illegible] |
[illegible]."

" [illegible]
[illegible]"

"ஓம் என்கிற எழுத்தினால்விளங்குகிற தெதுவோ, அது ப்ரஹ்மம்; சகலதேவதைகளும் அதைப் பூஜிக்கின்றனர். உ()

கத்தினிடையேயிருக்கும் பூஜிக்கப்படத்தக்க பரமாத்மாவை, எல்லாத் தேவதைகளும் நியதமாக உபாஸிக்கின்றனர்.

"எது அந்த ப்ரஹ்மமோ, அதற்குமுன் ஒன்றுமில்லை; அது அழிவற்றது; பயமற்றது; சாந்தராகி அதை உபாஸி யுங்கள்.

---

விருத்தம்.

"ஒருவனு மெங்குந்தோன்றி யோங்கிய உலகந்தன்னைத்
தருந்தொழில் தானேபூண்டு தயையுட னாத்மகோடி
விரும்பிய வின்பமெல்லாம் விவிதமா யளித்துக்காக்கும்
பரம்பொரு ளான ஏக பரமனார் பதங்கள்போற்றி."

கட்டளைக்கலித்துறை.

"வானந் தராதலம் வாரிதி வன்னி வளிமுதலின்
றானந்த மாதியி லானெள்ளி லெண்ணெ யெனவகன்றன்
ஆனந்த மாக்கட லாடும் பிரானடி யார்களுறுங்
ஈனந் தவிர்த்திடு வான்கழ லென்று மிறைஞ்சுவமே."

---

விருத்தம்.

ஏகமாய்எங்குமாகி யாவையும்படைத்துநித்தியம்
ஆகவேண்டியதைச்செய்யும் அப்பன்நின் ஆத்திகத்தைப்
போகமேதரும்பெங்களூரு ப்ரஹ்மமந்திரத்திற்செப்ப
சோகமேயில்லாச்சுத்த சொல்வண்மையீவாய்த்தேவே.

---

அறிவுள்ள அன்பர்களே!

ஆன்மகோடிகளின் இருப்பையும், அவற்றின் அற்புத மான நடிப்பையும்பற்றி நேற்றையதினம் பிரஸ்தாபித்தே னல்லவா? அவ்வான்மகோடிக ளுண்டாவதற்கும், அவை அற்புதமாக ஜ்வலிப்பதற்கும், ஓர்ஆதிகாரணவஸ்து இருந்திரு க்கவேண்டுமென்று ஸஹஜ ஜ்ஞானம் அறிவிக்கிறது. அந்த ஸஹஜ ஜ்ஞானத்தினு லறியப்படும் வஸ்துவைத்தான் பரமா த்மாவென்றும், பரப்ரஹ்மமென்றும், பராபரவஸ்துவென் றும், விஷ்ணுவென்றும், சிவனென்றும், அசலனென்றும், அக்ஷயனென்றும், அச்சுதனென்றும், அமலனென்றும், ஆதி

யென்றும், இறையோனென்றும், ஈஸ்வரனென்றும், உத்தமனென்றும், எல்லாம் வல்லோனென்றும், ஏகனென்றும், ஐயனென்றும், கர்த்தாவென்றும், சச்சிதாநந்தனென்றும், தேவனென்றும், நாதனென்றும், நாயகனென்றும், நாராயணனென்றும், பகவானென்றும், பரமபிதாவென்றும், பிரானென்றும், பூரணனென்றும், மகேசனென்றும், மூவுலகேந்திரனென்றும், அகிலநாதனென்றும், இரக்ஷகனென்றும், இராமனென்றும், வித்தகனென்றும், விமலனென்றும், வீரனென்றும், வேந்தனென்றும், மெய்யோனென்றும், வேதனென்றும், வேதாந்தனென்றும், கடவுளென்றும், காட் (God) என்றும், அல்லா (Ahalla) வென்றும், ஜிஹோவா (Jehova) வென்றும், திபேல் (Thebale) என்றும், தியோஸ் (Theos) என்றும், கிஸ்டு (Giest) என்றும், எல் (El) என்றும், பரமார்த்தன் (Matter) என்றும், செரானு அகரானு (Zeruna Akerana) என்றும், ஆர்மஸ்டு (Ormuzed) என்றும், பதா Ptha) என்றும், நாக்பாநாக் (Nak Pa Nak) என்றும், பிதல் (Bethel) என்றும், இலோஹியம் (Elelohim) என்றும், ஆத்மா (Spirit) என்றும், சிருஷ்டிகர்த்தா (Natura Naturata) என்றும், இன்னும் பற்பலவிதமான பெயர்களால் எக்காலத்திலும் எத்தேசங்களிலும் கொண்டாடி வருகிறார்கள்.

ஆனால், நாஸ்திகரென்ற சந்தேகவாதிகளிற் சிலர் மாத்திரம் இதை யாக்ஷேபித்து, "இந்தக் கடவு ளிருப்பதற்குத் திருஷ்டாந்தம் காட்டினாலன்றி நம்பமாட்டோம்" என்றும், "கடவுளிருந்தால் கண்ணுக்குப் புலப்படாரா?" என்றும், "அப்படிப் புலப்படாத கடவுளை நம்புவதெப்படி?" என்றும், "கடவுளை நம்புவதனால் பிரயோஜனமென்ன?" என்றும், "கடவு ளில்லாவிட்டால் உலகம் விருத்தியாகாதோ?" என்றும், "கடவுளிருப்பதாகச் சொல்லுவது ஜ்ஞானமற்ற மூடஜனங்களை யேமாற்றிப் பொருள்பறிக்கக் குருமாராகிய திருடர்கள் கட்டிவைத்த கட்டுக்கதை" என்றும், "சகலமும ஸ்வபாவமாக நடந்துவருகிறது" என்றும், இன்னும் பலவிதமான கேள்விகளைக் கேட்டு வருகிறார்கள். இத்யாதி கேள்விகளைப் பற்றி இன்று பிரஸ்தாபிக்கிறேன்.

நாம், நியாயவாயிலாக அதாவது தருக்க சாஸ்திரோக்தமாக எவ்வேறோருக்கு நிரூபித்துக்காட்டக்கூடாததும், அவ்வேவையோராகிய பிறரும், நமக்கு நியாயவாயிலாக, அதாவது,

தருக்க சாஸ்திரோக்தமாக நிரூபித்துக் காட்டக் கூடாதது மான அநேக வஸ்துக்களையும் விஷயங்களையும் நம்புகிறோம். எப்படியெனில்,

நான் இருக்கிறதைப் பற்றி அதாவது, எனது சொந்த (அஸ்தித்வமாகிய) இருப்பைப்பற்றி நம்புகிறேன். நான் இருப்பதைப்பற்றி நான் நம்புவதன்றியில், எனது சகஜ ஜ்ஞானத் திலும் அறிகிறேன். இதுவே யான் கொண்டிருக்கிற அறிவிற் சிறந்த சத்தியம். ஏனெனில், நான் இருப்பதைப்பற்றி, நானே சந்தேகித்தால், அப்படிச் சந்தேகிப்பதனாலும் எனது இருப்பு ஸ்பஷ்டமாகிறது. மேலும், இபபடிச் சந்தேகிக்க நான் இருந்தாலன்றிச் சந்தேகிக்கக் கூடாதாகையால், நான் இருப்பதைப்பற்றி நம்பாதிருக்க முயன்றாலும், அப்படி முயலுந் தன்மையாலும், எனது இருப்பு முன்னிலும் அதிக ஸ்பஷ்டமாகிறது. அப்படிக் கிருந்தும் எனது இருப்பின் உண்மையைப்பற்றி ஒரு சந்தேக வாதிக்கு, தருக்க சாஸ்த்ரோக்தமாக நிரூபித்துக்காட்டல் அசாத்தியமாகும். எப்படியெனில்,

இந்த ப்ரஹ்ம மண்டபத்தில் "நீங்களிருப்பதைப்பற்றி நியாயவாயிலாக நிரூபித்துக் காட்டுங்கள பார்ப்போம். நீங்களிருப்பதைப்பற்றி யான் நம்பக்கூடவில்லை" என்றால், நீங்கள் தருக்க சாஸ்திரோக்தமாக நிரூபித்துக் காட்டக்கூடுமோ? ஒருவேளை "நாங்களிருப்பதை நீர் பார்க்கவில்லையா? நாங்கள பேசுவதை நீர் கேட்கவில்லையா? எங்களை நீர் தொடவில்லையா? இத்யாதிகளே (நாங்க ளிருப்பதற்கு) சாக்ஷியம்" என்று சொல்லுவீர்களாகில், அதை யான் மறுக்கத்தக்கதாகவே யிருக்கின்றது. ஏனெனில், நீங்களிருப்பதை யான் பார்ப்பதாகவும், நீங்கள் பேசுவதைக் கேட்பதாகவும், உங்களைத் தொட்டதாகவும் எனக்குள் பாவிக்கிறேனேயொழிய, நீங்கள் எனது கண் காது வெளிக்கு வெளியிலிருப்பதாக எப்படிச் சொல்லக்கூடும்? நான் தூங்கும்போது உண்டாகும் கனவிலும் இதேவிதமாகவே உங்களைப் பார்ப்பதாகவும், உங்களைத் தொடுவதாகவும், நீங்கள் பேசுவதைக் கேட்பதாகவும் பாவிக்கிறேன். ஆகவே, இப்பொழுது நீங்க ளிருப்பதைப்பற்றிக் கனவு காண்கிறேன் என்று ஏன் சொல்லக்கூடாது? ஜாக்கிரதாவஸ்தையாகிய இப்போது கண்டும்கேட்டும் வருபவைகளைப் போலவே, தூங்குங் காலமாகிய சொப்பனத்திலும் கண்டுங் கேட்டும் வருகிறபடியால், நீங்கள் (எனது கனவில் காணப்படு

பவரைப்போல் அல்லாமல்)என் மனதிற்கு வெளியாக இருக்கப்பட்டவர்களென்று நிரூபித்துக் காட்டக்கூடுமோ? ஒருகாலமுங் கூடாது. எப்படிப்பட்ட தருக்கசாஸ்திரியும் இதை நியாயவாயிலாக நிரூபித்துக்காட்ட முடியவே முடியாது. சகஜஜ்ஞானத்தினால் மாத்திரம் அறியவேண்டுமேயொழிய மற்றப்படி நிரூபித்த லசாத்தியம். அதுபோலவே, ஒரு சந்தேகவாதிக்குப்பிரபஞ்சத்தின் பகிர்ப்பாகத்திலிருக்கும்—வெளிப்பொருள்களைப்பற்றி நிரூபித்துக் காட்டுதல் அசாத்தியம். எப்படியெனில்,

பிரபஞ்சத்தின் வெளிப் பொருள்களின் இருப்பைப் பற்றி யான் சந்தேகப்படுவேனாகில், நீங்களந்த வெளிப்பொருள்களைச்சந்தேகமறத் தருக்கசாஸ்திரோக்தமாக நிரூபித்துக் காட்டல் அசாத்தியமாகவே முடியும். ஒருவேளை, "நீர் பிரபஞ்சத்தின் வெளிப்பொருள்களைப் பார்க்கவில்லையா? அவற்றைத் தொடவில்லையா? அவைகள் உமக்கு வெளியாக இருப்பது விளங்கவில்லையா?" என்று நீங்கள் சொல்லுவீர்களானால், "ஆம்; அவை எனக்கு வெளியே யிருப்பதாகவும், பார்ப்பதாகவும், தொடுவதாகவும் சொல்லுகிறேன்." ஆனால், நான் தூங்கும்போது கனவிற்காணும் பொருள்களும், எனக்கு வெளியே யிருப்பனவாகத் தோன்றுகிறபடியால், கனவிற்காணும் பொருள்களும் எனக்கு வெளியிலிருக்கும் பொருள்களாகவே யல்லவா சொல்லவேண்டி இருக்கின்றன. எனது சொந்த ஸ்மரணையாகிய உணர்ச்சி யிருப்பதுமாத்திரம் எனக்குத் தெரிகிறதேயொழிய, அதற்குண்மையாக இசைந்தபொருள்கள், எனக்கு வெளியே இருப்பதாக நம்பக்கூடுமோ? கூடாதல்லவா. ஆகவே, பிரபஞ்சத்தின் வெளிப்பொருள்களைத் தருக்கசாஸ்திரோக்தமாகநிரூபிக்கமுயன்றால் முடியாது. பிரதி மனிதனுடைய இருப்பைப்பற்றியும், பிரபஞ்சத்தின் வெளிப்பொருள்களின் இருப்பைப்பற்றியும், மானவஜாதி யார் யாவரும் உண்மையாகக்கொண்டு நம்பிவந்தாலும், அவைகளை சகஜஜ்ஞானமாகிய மனசாக்ஷியா லறியவேண்டுமேயொழிய தருக்க சாஸ்த்ரோக்தமாக நிரூபித்தல் அசாத்தியமாகவே முடியும்.

ஒருவேளை பிரபஞ்சத்தின் வெளிப்பொருள்களின் இருப்பைப்பற்றி ஒருவாறு தருக்க சாஸ்த்ரோக்தமாக நிரூபிக்கக்

கூடியதாகவிருக்கினும், முழுதுந் திருப்திகரமாக உண்மைப் படுத்திக்காட்டல் அசாத்தியமே. எப்படியெனில்,

இங்கிலாந்து என்னும் ஒரு தீவு இருக்கிறதாகவும், அதில் பிராட்லாவென்னப்பட்ட ஒருவரிருப்பதாகவும், தருக்கசாஸ்த்ரோக்தமாக நிரூபிக்கில், ஒருவேளை நம்பக்கூடியதாக இருக்கினும்; நாமே அந்த இங்கிலாந்து தீவுக்குப் போய், அந்த பிராட்லா என்னப்பட்டவரைக் கண்டு பேசுவோமாகில், அப்போது மாத்திரம் அந்த நியாய நிரூபகத்தில் முற்றும் நம்பித் திருப்தியடையக் கூடுமல்லவா? ஆகவே, நியாயவாயிலாகப் பொருள்களின் இருப்பைப்பற்றி நிரூபித்து நம்பச் செய்வதைப் பார்க்கினும், சகஜ ஜ்ஞானத்தினாலும், சுவானுபவத்தினாலும் அறிந்து நம்புவது போதுமான திருப்திகரமாக இருக்கும். இதற்கு இன்னும் இரண்டொரு திருஷ்டாந்தரங்களைச் சொல்லுகிறேன்.

சங்கீதஜ்ஞானத்தை யறியுஞ் சக்தியற்ற செவிடன் சங்கீதத்தின் இருப்பைப்பற்றி நம்பவேமாட்டான். அப்படிப்பட்ட செவிடனுக்கு சங்கீதத்தின் இருப்பைப்பற்றி நியாயவாயிலாக ஒருவாறு நிரூபித்துக்காட்டி நம்பச்செய்யலாம். எப்படியெனில், உலகத்தில் சங்கீதமில்லாவிட்டால் எண்ணிறந்த ஜனங்கள், அது விஷயமாகப் பாடுபட்டுத் தேடியபொருளையும், பெருமைபெற்ற பொழுதையும் பாழாக்கவேண்டியதேனென்றும், எக்காலத்தாரும் எத்தேசத்தாரும் சங்கீதவாத்யக் கருவிகளாகிய வீணை, சாரந்தா, பிடில், சரபத்து, தம்பூர், சித்தார், கின்னரம், கிளார்நட்டு, நாகசுரம், பியானு, ஆர்மோனியம் முதலியவற்றைச் செய்து விற்பனை செய்ய வேண்டியதேனென்றும், இத்யாதி கருவிகாரிய காரணங்களால் சங்கீதமிருப்பது உண்மையென்றும் பலர்கூடிச் சொல்லும்பக்ஷத்தில், அந்தச்செவிடன் இத்யாதி நியாயங்களினால் சங்கீதத்தின் இருப்பைப்பற்றி ஒருவாறு நம்பக்கூடும். ஆனால், அந்தச் செவிடனுக்கே சங்கீத ஜ்ஞானமிருந்து, பைரவிராகமிப்படிப்பட்டதென்றும், பியாகடைராகமிப்படிப்பட்டதென்றும், புன்னாகவராளி இப்படிப்பட்டதென்றும், கேதாரம் இப்படிப்பட்டதென்றும், காம்போதி இப்படிப்பட்டதென்றும், தோடி இப்படிப்பட்டதென்றும், தசாவந்தி இப்படிப்பட்டதென்றும், அவற்றைப் பற்பலவிதமாகப் பிரயோகிக்கும் விநோதங்களைத் தானே கேட்டு ஆநந்தத்தை

யடையக்கூடுமாகில், அப்போது அந்தச் செவிடனுக்கு, நாம் நூறுவித நியாயவாயிலாகக் காட்டுவதைப் பார்க்கிலும், ஸகஜ ஜ்ஞானத்தினாலும், சுவானுபவத்தினாலும் அறியும் இச் சங்கீதத்தின் இருப்பைப்பற்றிமுழு உண்மையாக நம்பித்திருப்தி யடையக்கூடுமல்லவா? ஆகவே, ஸகஜ ஜ்ஞானத்தினாலறிந்து உய்தலே சிரேஷ்டமாகும். இவ்விதமாகவே, பிறவிக்குருடனாகவிருக்கும் ஒருவனுக்குப் பற்பலவிதமாகப்பிரகாசிக்கும் பலவிதவருணங்களோடும், சுந்தரத்தோடும், ஜ்வலிப்போடும், சாயையோடும் கூடியிருக்கிற பிரத்தியக்ஷ பிரபஞ்சத்தின் விநோதமான அமைப்பை நியாயவாயிலாக ஒருவாறு நிரூபித்துக் காட்டலாம். எப்படியெனில், பிறவிக் குருடராகிய சிலர் தவிர, எத்தேசத்திலும் எக்காலத்திலு மிருக்கும் ஏராளமான ஜனங்கள் இந்தப் பிரத்தியக்ஷ பிரபஞ்சமானது பற்பலவிதமான வருணசிங்காரத்தோடும், பிரகாசத்தோடும், சாயையோடும் அமைக்கப்பட்டிருக்கிறதென்று கோஷிக்கிறபடியால், கேவலமாகிய சில குருடர்களைவிடப் பெரும்பான்மையோர் சொல்வதையே சிரேஷ்டமாகக் கொள்ளவேண்டுமென்றுதி நியாயங்களால் அப்பிறவிக் குருடனுக்கு ஒருவாறு நிரூபித்து நம்பச்செய்யலாம். ஆனால், அந்தப் பிறவிக் குருடனே இந்தப் பெருமைபெற்ற பிரபஞ்சத்தையும், இதில் பிரபாகரனுடைய பிரகாசத்தினால் பற்பலவிதமாக இருக்கும் வருணபேதங்களையும், வஸ்துகோடிகளையும், சாயையும், சுகிர்தமான சிங்காரத்தையும் (குருட்டுத்தனமற்று) தானே பார்த்து ஆனந்தப்படுவானாகில் அப்போது ஆயிரம்விதமான நியாயங்களைக்கொண்டு நிரூபித்து நம்பச் செய்வதைப் பார்க்கிலும் அதிக திருப்திகரமாக இருப்பானல்லவா? அதுபோலவே, கடவுளின் இருப்பைப்பற்றி ஆக்ஷேபிக்கும் நாஸ்திகரென்ற சந்தேகவாதிகள் ஸகஜ ஜ்ஞானத்தினால் கடவுளின் இருப்பை யறிந்து உய்யாமல், வருணபேதங்க ளில்லையென்று ஆக்ஷேபிக்கும் குருடரைப்போலவும், சங்கீதமில்லையென் றாக்ஷேபிக்கும் செவிடரைப்போலவும், அகக்கண் குருடராகியும், அகக்காது செவிடராகியும் அலைந்து அவதிப்படுவார்கள். அப்படிப்பட்டவர்களுக்குக் கடவுளின் இருப்பைப்பற்றி இரண்டொரு நியாயாதாரங்களைச் சொல்லுவோம். இதுவிஷயத்தில் முன்பு செவிடனுக்கும், குருடனுக்கும் செப்பியதைப்போலவே நாஸ்திகரென்ற சந்தேக வாதிகளுக்குஞ் சொல்லவேண்டியிருக்கிறது. அதாவது,

எக்காலத்திலும் எத்தேசத்திலும் ஏராளமான ஜனங்கள் கூடி, "ஒரு ஆதிகடவு ளுண்டென்று நம்பிவருவதையும், அந்தக்கடவுளின் இலக்கணங்களைச் சொல்லுவதில், சிலர் சிற்சில விஷயங்களில் பேதப்பட்டு அப்பேதங்களினாலே ஒருவருக்கொருவர் சண்டை சச்சரவுகளைச்செய்து மண்டைகளையுடைத்துக்கொண்டு மரணமடைகிறதையும் கேட்டிருக்கிறோம், பார்த்தும் வருகிறோம். மேலும், எக்காலத்திலும் எத்தேசத்திலு மிருந்த ஏராளமான ஜனங்கள் கூடி இந்த உலகத்தைப படைத்துக் காத்து அழிக்கவல்ல ஒன்று அல்லது பலகடவுள்க ளிருப்பதாக நம்பியும், பிறரையும் நம்பும்படி செய்வித்தலும், அதுவிஷயத்தில் அருமையான பிராணனையுங் கொடுத்தும், பாடுபட்டுத் தேடியபொருளையும்பொருட் செய்யாமல் பாடுபடுவது பிரத்தியக்ஷ மல்லவா? இந்த * உலகமேபொ[illegible]பும் இத்தெய்வபக்திகபடஜால நிரூபிதமோ? இஃது காரணமற்ற காரியமோ? இந்த ஸ்தாபனம் சத்தியமானதன்றோ? இந்த வுலகத்திலிருக்கும் மாந்தர்: வருணத்திலும், வடிவிலும், வேஷத்திலும், பாஷையிலும், ஆகாரங்களிலும் பற்பலவிதமாகப் பேதப்பட்டிருந்தும், அவர்கள் எல்லோரும் ஒருதேவன் அல்லது பலதேவர்கள் உண்டென்னும் பொதுவான தெய்வபக்தியில் நம்பிக்கை வைக்கும் சர்வலோகசஞ்சாரமாகிய இப்பொதுஸ்தாபனம் பொய்யானதோ? இந்தப் பொதுவான தெய்வபக்தி எங்கும் எப்போதும் உண்டாவதற்குக் காரணம் யாது? கேவலமாகிய சிலர் சொல்லுங் கோட்பாட்டை யனுசரிக்கும் நாஸ்திகர்கள்: பிரபஞ்சத்தில் பெரும்பான்மையோருடைய கோட்பாடாகிய தெய்வபக்தியை (முன்சொன்ன செவிடன், குருடனைப்போல) அனுசரிக்கப் போதுமான நியாயமுடையதாகவிருந்தும், இந்தத் தெய்வபக்தியாகு மதவிஷயமான குழூஉக்குறிகளைக் குருமாரென்ற சில துஷ்டர்கள் தமது பிழைப்பைக்கருதியும், தமது மனைவி மக்களுடைய க்ஷேமத்தைக் கருதியும், தமக்கு மற்ற ஜனங்கள் சீடர்களாகி யடிமைகளைப்போ லலைந்து வருந்தி போஷிப்புக்கானவைகளைத் தேடி, காணிக்கையாகக் கொடுத்துத் தொண்டு செய்துவர வேண்டுமென்ற கெட்ட எண்ணத்தி

* There is a religious idea in every nation.—Theodor Parker. A proof of the existence of God usually called the ontological proof is to be found in the very idea of God existing in the human mind.—Dr. Clarke.

ளுல் சுவாமியென்றும், சாத்திரமென்றும், சடங்கென்றும், சட்டதிட்டங்களென்றும், சங்கல்பமென்றும், சாயுஜ்யமென்றும் கட்டிவைத்த சதிமோசமான சங்கேதங்களென்றும் பலவித சாக்குகளைச் சொல்லி வருகிறார்கள். இதெப்படியிருக்கிறதெனில், சங்கீத ஜ்ஞானமில்லாத செவிடன்,(சங்கீத ஜ்ஞான மிருப்பவருக்கு விற்பனை செய்வதற்காக) வீணை, சாரந்தா, பிடில், சர்பத்து, கின்னாரம் முதலான வாத்தியக் கருவிகளைக் கஷ்டப்பட்டுச் செய்துகொண்டு வருபவனைப் பார்த்து, "அடா சங்கீதமேது? இங்கீதமேது? சங்கீதமிருப்பதாகவும்,அதற்காக வாத்தியக் கருவிகளைச்செய்துகொண்டு வந்ததாகவும் சதிமோசஞ் செய்து மதியற்றவரை மயக்கிக் காசு பறிக்கக் கரடுமுரடு கோணலான கட்டைகளையும், கயிறுகளையும், கம்பிகளையும், நரம்புகளையுங் கொண்டுவந்தாயோ?" என்று வாய்கொண்டளவு திட்டியனுப்புவதைப்போ லிருக்கிறது. செவிடனுக்குச் சங்கீதத்தின் அருமை பெருமை யறியும்படியான சக்தி யிருக்குமாகில் இப்படிச் சொல்லுவானோ? இதேமாதிரியாகவே கடவுளுடையபெருமையை யறியச் சக்தியற்றுக் குருமாரை நிந்தித்தல் சிலருடைய கோட்பாடாகவே யிருக்கிறது.

ஆத்மா பிரத்தியக்ஷ திருஷ்டாந்தத்தைக்கொண்டு பரிக்ஷிக்கும்போது, மாநவ ஜாதியாராகிய நமது உள்ளத்தில், கடவுளின் இருப்பு எப்போதும் ஸ்தாபிதமாகியிருப்பது பலவிதத்திலும் ஸ்பஷ்டமாகிறது. மாநவ ஜாதியாராகிய நாம், நம்மை அபூரணரேன்றும், பரதந்திரரேன்றும் நம்புகிறோம். அப்படி நம்புவதற்குள், பூரணமும், சுவதந்திரமுமான பொருளொன்றிருக்கிறதென்னும் நம்பிக்கையும் அடங்கி யிருக்கிறது. பூரணமும், சுவதந்திரமுமான வஸ்து ஒன்று இல்லாவிடில், நம்மை அபூரணரென்றும், பரதந்திரரென்றும் நம்புவதற்கு ஆதாரமில்லை. பரதந்திரமும், அபூரணமுமான வஸ்துவின் இருப்பினுல், சுவதந்திரமும் பூரணமுமான வஸ்துவின் இருப்பு வெளியாகிறது. இந்த நம்பிக்கை இயற்கையாகவே இருக்கிறபடியால் இதைப் பரிக்ஷித்த லனுவசியம். மானிடராகிய நாம், நமக்குள்ளும், நமக்கு வெளியிலும் காணும் சகலமும் அபூர்ணமும், பரதந்திரமுமானவைகளாகவே யிருக்கின்றன. பிரபஞ்சத்தின் இயற்கை விநோதத்தைப்பற்றி எப்படியவதானித்தாலும் அவ்விடத்தும் அநந்த பரிபூரணத்தைக்

கண்டிலோம். ஒருவேளை இந்த அனந்த பூரணவஸ்து விருக்கிறதென்னும் எண்ணத்தை மாநவ ஜாதியார்கள் கற்பித்துக் கொடுத்தார்களோவென்று யூகித்தாலும் அதுவும் புத்திக்குப் பொருந்தவில்லை. ஏனெனில், மாநவஜாதியார் தமக்குள்ளும் வெளியிலும் பார்க்கும் சகலமும் அபூரணமும், பரதந்திரமுமானவைகளாக விருக்க, அநந்தமும் பூரணமுமான வஸ்துவின் இருப்பைப்பற்றிச் சர்வசூனியத்திலிருந்துதானே சிருஷ்டித்துக் கற்பிக்க வேண்டியதாகிறது. இஃது நியாயத்துக்கும், நம்பிக்கைக்கும் பொருந்துமோ? ஒருகாலமும் பொருந்தாது. அபூரணமும், பரதந்திரமுமான பொருட்களைப் பார்க்கும்போது, அப்பொருட்களைப் படைத்து அவற்றிற்கு ஆசிரயமான ஒரு பூரண சுவதந்திர வஸ்து இருக்கிறதென்னும் இயற்கையான ஆத்துமப் பிரத்தியயமானது யாவருடைய உள்ளத்திலு மிருக்கிறது. இந்த ஆத்தும ப்ரத்யயவிஷயத்திற் சந்தேகப்பட்டால், நியாயத்தின் வேர் நாசமாகிப்போம். அப்போது சகலத்திலும் சந்தேகமும் விநோதமான உணர்ச்சியுமுண்டாகி, பிரதி மனுடனுடைய சொந்த இருப்பின் விஷயத்திலும், பிரபஞ்ச வெளிப்பொருள்களின் இருப்பின் விஷயத்திலும் சந்தேக முண்டாகிவிடும். ஆகவே, ஆத்தும ப்ரத்யயத்தை யாதாரமாகக்கொண்டு அறியும் ஜ்ஞானமே சகலவிதத்திலுஞ் சிறந்ததென்று (Anselum) அன்சலம், (Spinoza) ஸ்பினோசா, (Leibnitz) லெயிப்னிட்ஸ், (Clarke) க்ளார்க்கு முதலான வேறுதேசத்துத் தத்துவஞானிகளும், நமதுதேசத்துத் தத்துவ சிரோன்மணிகளாகிய மஹரிஷிகளுஞ் சொல்லியிருக்கிறார்கள்.

கனவான்களே!

நான் நேற்றையதினம் செய்த உபந்யாஸத்தில், ஜீவாத்மாவிருப்பது உண்மையென்றும், ஜடபதார்த்தத்தைப் பார்த்து நம்புவதைப்போலவே, அஜட பதார்த்தமாகிய ஜீவாத்மாவின் இருப்பைப்பற்றியும் நாம் நம்பலாம் என்றும் சொல்லி யிருக்கிறேன். மேலும், ஜடபதார்த்தத்தைப்பற்றி நாம் அறியக்கூடியதெல்லாங்கூடி நமது இந்திரிய ஞானத்தின் வழியாகத் தோன்றும் உற்பன்னங்களேயென்றும், இவ்விந்திரிய ஞானத்தினு லுண்டாகும் உற்பன்னங்கள் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டுத் தோற்றுவதால் இவ்வுற்பன்னங்கள் யாவும் ஜடபதார்த்தத்தி லடங்கியிருக்க வேண்டுமென

யூகித்து அறிகிறோமென்றும், அதேவிதமாகவே, மனசாக்ஷியினலறிகிற மனம், புத்தி, சித்தம், அகங்காராதிகள் ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டிருப்பனவாகத் தோற்றுகிற தன்மையால், இவை யாவும் ஜீவாத்மா வென்னும் ஒரு வஸ்துவுக்கு ளடங்கியிருக்க வேண்டுமென்றும் சொல்லியும் இருக்கிறேன். ஜடபதார்த்தத்திலும், ஜீவாத்மாவிலும் இருந்துண்டாகும் உற்பன்னங்களைப்பற்றிப் பரிசோதிக்கையில், அவை யாவும் அபூரணமும் பரதந்திரமும் முடிவுள்ளவும் மாறுதலை யடையக் கூடியவையுமா யிருக்கின்றன. இருந்திருக்க, இவற்றைவிட அநந்தமும் பூரணமும் சுதந்திரமுமான சில உற்பன்னங்களிருப்பதாகத் தோற்றுகின்றன. அதாவது, நாம் வெளியையும், காலத்தையும் எல்லையாகப் படுத்தக் கூடுமோ? மூலகாரணத்தையும், காரியத்தையும், சக்தியையும், சந்தோஷத்தையும், ஜ்ஞானத்தையும் எல்லையாகப் படுத்தக்கூடுமோ? கூடாதல்லவா? ஆகவே, அபூரணமும் பரதந்திரமுமான காரண காரிய நியமனங்களுக்கு மேலாகச் சுவதந்திர சக்தியும், பூரண ஞானமும், பூரண சந்தோஷமும் இருக்கிறதாக ஸகஜ ஜ்ஞானத்தா லறிகிறோம். மேலும், இவையாவும் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டிருப்பனவாகத் தோற்றுகிறபடியால், இவை யாவும் யாதோ ஒரு வஸ்துவி லடங்கியிருந்து உற்பத்தியா யிருக்கவேண்டு மென்றும், அந்த வஸ்துவே தான் கடவுளாக இருக்கவேண்டுமென்றும் ஸகஜ ஜ்ஞானத்தி லறிகிறோம். எப்படியெனில், பகிரிந்திரியங்களா லறியும் உற்பன்னங்கள், ஜடபதார்த்தத்திலிருந்து உண்டாயிருக்க வேண்டுமென் றெப்படி யூகித்தறிகிறோமோ, அதேவிதமாக ஆத்ம ஜ்ஞானோற்பன்னங்களுக்குக் கடவுளே ஆதாரமென்று அனுமானித் தறிகிறோம். அதாவது, பகிரிந்திரியங்களால் பார்க்கும் உற்பன்னங்களால் ஜடபதார்த்தத்தையும், மனோக்த உற்பன்னங்களால் ஜீவாத்மாவையும் அனுமானித் தறிவதைப்போலவே, ஆத்மஜ்ஞான உற்பன்னங்களால் கடவுளையும் அறிகிறோம். இம்மூன்று உதாரணங்களுக்கும் ஸகஜ ஜ்ஞானமே காரணமாக இருக்கிறது.

கடவுளின் இருப்பைப்பற்றி ஆத்துமப் பிரத்யயத்தால் நிரூபித்தோம். இனி அண்டத்தின் அமைப்பைப் பற்றிப் பரீட்சிப்போம.

"இந்த விநோதமாகிய உலகம் எங்கிருந்து வந்தது? இந்த உலகத்தை நாமும்படைக்கவில்லை; கடவுளும் படைக்கவில்லை" என்று நாஸ்திகராகிய சந்தேகவாதிகள் சொல்லுகிறார்கள். அப்படியாகில், இந்த உலகமானது தனக்குத் தானே தோன்றி யிருக்கிறதென்று சொல்லவேண்டும். அப்படிச் சொல்லும் பக்ஷத்தில், அதுவும் யுக்தத்திற்குப் பொருந் தாது. ஏனெனில், உலகம் தனக்குத்தானே தோன்றி யிருக் கிறதெனில், அது சர்வ சூனியத்திலிருந்து தானே தோன்றி யிருக்கவேண்டும். சர்வசூனியத்திலிருந்து இவ்வளவு விநோத மான உலகம் தோன்றுமென்று சொல்லுதல் பரிஹாஸமான வார்த்தையாக விருக்கிறது. ஒருவேளை யிந்த உலகம் எப் போதுமிருக்கிறதாகச்சொல்லுவார்களாகில் அதனெப்போதும் ஒரேவிதமாக இருக்கவேண்டுமே யொழிய, பற்பல விதமாக * மாறுவதற்கு ஹேதுவில்லையே. இந்தவுலகமோ தினே தினே பற்பலவிதமாக மாறிச் சிங்காரமாகிச் சிறந்து விளங்குகிறது. பூததத்துவ ஜடதத்துவ சாஸ்திரங்களைப் பரிசோதிக்கையில், ஆதியில் இந்த உலகில் இருந்த பயங்கரமான விருக்ஷாதி கந்த மூலங்களும்; பயங்கரமான மிருகங்கள், பக்ஷிகள், ஊர்வனங் கள் மறைந்து இப்போது நவநவமான விருக்ஷங்களும் விலங் குகளும் உண்டாகி இருப்பதாகத் தெரியவருகிறது. இப்படி மாற்றம் பெறுவதற்குக் காரணம் யாது? சுபாவமெனில், அது அதனுடைய போக்கைப்பற்றிச் சொல்லும் பதமேயன்றி அப்போக்குக்குக் காரணமாக விருக்கும் வஸ்துவாகிய சக்தி யாகாதே. தோற்றமெனில், அது விகசிக்கும் விதத்திற்குச் சொல்லும் வார்த்தையே யல்லாமல் விகசிக்கச் செய்யும் வல் லமை யாகாது.

இந்த உலகம் வந்தவிதந்தான் எப்படி? இப்பிரபஞ்சத் தின் வெளியில் தோன்றும் பூதாதிகளெல்லாம் ஒன்றை

* Professor Huxley, in an article in "The *Academy*" Oct. 9th 1869, takes a similar view. He says ' The teleological and the mechanical views of nature are not necessarily mutually exclusive. On the contrary, the more purely a mechanist the speculator is, the more firmly does he assume a primordial molecular arrangement, of which all the phenomena of the universe are consequences; and the more completely is he thereby at the mercy of the teleologist, who can always defy him to disprove that this arrangement was intended to evolve the phenomena of the universe" &c.

யொன்று தாவிக்கொண்டும், எத்தனையோ விநோதமாகவும், உபயோகார்த்தமாகவும் நியமிக்கப்பட்டிருப்பனவாகவே தோற்றுகிறதல்லவா?

பஞ்சபூதத்தி லொன்றாகிய அப்புவென்னும் ஜலத்தைப்பற்றி யோசித்துப் பாருங்கள். ஜலமானது தனிபூதமென்று அநேக நூற்றாண்டுகளாக அநேகர் நம்பி இருந்தார்கள். ஆனால், அதை சாஸ்திரோக்தமாகப் பரிசோதிக்கையில், அது ஒரு அளவு ஜீவமூலமும், இரண்டுபாக அளவு ஜலமும் அதாவது ஒருபங்கு ஜலமூலத்தில் எட்டுப்பங்கு பிராணவாயு சேர்ந்து ஜலமாக அமைந்திருப்பது என்ன ஆச்சரியம். நமக்குப்பிரதிதினமும் ஸ்நானபானாதிகளுக்குஇன்றியமையாததாக விருக்கும் ஜலத்தின் பெருமையென்னே! இந்த ஜலத்தில் அநந்தகோடி ஜீவிகள் (Animalcule) அதாவது, அணுதர்சினி (Microscope) முதலான யந்திரங்களின் சகாயத்தினால் மாத்திரம் பார்த்து அதிசயிக்கத்தக்க அணுவிலும் அணுவாக விருந்து நீந்தும் பிராணிகளின் சுகிருதமான வாசஸ்தலஆதார பூதமாகவு மிருப்பதன்றியில், சாதாரணபார்வைக்கு ஸ்பஷ்டமாகும் பிரபஞ்சத்தின் புற்பூண்டுகளுக்கெல்லாம் பிராணாதாரமாகவும் இருக்கின்றது. இதன் போஷணையி லிருக்கும் புற்பூண்டுகளின் சாரத்தையும், சத்தையும் கொண்டல்லவா உலகிலுள்ள உயிர்கள் யாவும் பசித்தபோது உண்டும், தவிக்கும்போது தாகசாந்தியைச் செய்தும் உய்கின்றன. இந்த ஜலமோ உப்பு, புளிப்பு, காரம், தித்திப்பாதி யாதொரு வருணமும் ருசியுமற்றிருப்பது மிகவும் விந்தையான நியமிப்பாக இருக்கிறது. ஜலமிப்படிப்பட்ட பதார்த்தமாக இருப்பதனாலேதான் நமக்கு எக்காலத்தில் எந்தவிதமான ருசி, வருணமுள்ள பானமாகச் செய்யவேண்டுமென்று விரும்புகிறோமோ அதற்கிசைந்தபடி செய்வதற்கு ஏற்றவிதமாக விருக்கிறது. ஜலம், இனிப்பாக இருக்கவேண்டுமென்று விரும்பும்போது இனிப்பாக்கியும், புளிப்பாக இருக்கவேண்டுமென்று விரும்பும்போது புளிப்பாக்கியும், மற்றும் நாம் விரும்பும் சுவைகளைப் புகட்டி உபயோகப் படுத்திக்கொண்டு வருகிறோம். அப்படிக்கன்றி ஜலமானது புளிப்பாகவோ, இனிப்பாகவோ படைக்கப்பட்டிருக்கில், ஜலசரங்களாகிய மீன்முதலான ஜந்து கோடிகளும், கந்தமூலாதிகளும் மற்றப் பிராணி சமூகங்களும் பாழ்த்துப்போம். சமுத்திரத்தின் ஜலம் உப்புள்ளதாக விருப்பதும் விந்தையான நியமனமாகவே இருக்

கிறது. சமுத்திரத்தின்ஜலம், உப்புள்ளதாகஇராவிடில் கெட்டு நாற்றமெடுத்துப் போவதன்றியில், நாவா யாத்திரை செய்வதும் கஷ்டமென்று சிலசாஸ்திரிகள் சொல்லி யிருக்கிறார்கள். சமுத்திரத்தின் ஜலத்திலிருக்கும் உப்பை இயந்திரத்தின் சகாயத்தால் பிரித்து நன்னீராக்கலாம். ஜலத்தின் பெருமை என்னே? பிராணிகளுக்குப் பிராணாதாரமாக விருப்பதன்றியில், திவ்யமான அமிர்தமாயு மிருக்கிறதல்லவா? ஜலமே இல்லாவிட்டால் யாதுகாரியம் நிகழும்? நமது பூமியில் போதுமான ஜலமில்லாவிட்டால் பிரபஞ்ச அக்கினியாகிய நெருப்பு, பிரபஞ்சத்தையே பஸ்மமாக்கிவிடும். மேலும், இந்தப் பிரபஞ்ச அக்கினியாகிய நெருப்பு இல்லாவிட்டால் இந்த ஜலமானது பிரபஞ்சத்தையே ஒரு பெரிய பனிக்கட்டியாக்கி விடும். இம்மட்டோ, இந்தப் பிரபஞ்சத்தில் போதுமான (ஜலத்தினாலுண்டாகும்) குளிர்ச்சி யில்லாவிட்டால் பிரபாகரனிடமிருந்து பிரதி நிமிஷந்தோறும் 1,20,00,000 மைல் தூரம் பீறிட்டுவரும் பிரகாசமானது பிரபஞ்சத்தி லிருக்கும் படைப்புகளின் நேத்திரங்களைப் பாழாக்கி விடுவதன்றியில், பஸ்மமாக்கிவிடவுங் கூடும். இஃது ஆச்சரியமான நியமனமல்லவா? இப்படிச் செய்விக்கும் சக்தி யாது?

இப்படிப்பட்ட ஜலத்திற்கு வேறொரு பூதமாகிய காற்றின் உதவி இன்றியமையாததா யிருக்கிறது. இந்தக் காற்றின் அற்புதமான அமைப்பைப் பற்றி முன்னமே விஸ்தரித்துச் சொல்லி யிருக்கிறோம்? இந்தக் காற்றினா லல்லவா நாம் சுவாசம் விடுகிறோம். சப்தத்தைக் கேட்கிறோம்; கந்தத்தை யறிகிறோம்; காக்ஷியைக் காண்கிறோம். இந்தக் காற்றில் இரண்டுவித வகுப்புக ளிருக்கின்றன. * ஒன்று

* The two living kingdoms, animal and vegetable fill each of them so important and extensive a place in nature, that it is plainly of the utmost consequence that the arrangements which maintain the existence of the one should not clash and interfere with those which provide for the continuance of the other. Now not only do we find this effected, but, by a most wonderful adaptation, the one is rendered even essential to the other. Oxygen, as was formerly explained, is the elementary principle upon which animal life may be said to depend. Carbon, on the contarry, is a principle noxious to animal bodies, and their exist-

பிராணிகளாகிய நமக்கும், ஒன்று கந்தமூலாதிகளுக்கும் இன்றியமையாததாக விருக்கிறது. பிராணிகளுக்கு உதவாத காற்றுக் கந்தமூலாதிகளுக்கும், கந்தமூலாதிகளுக்கு உதவாதகாற்று பிராணிகளாகிய நமக்கும் இன்றியமையாததா யிருப்பது படைப்பல்லவா? நியமனமல்லவா? இம்மட்டோ, சமுத்திரத்தி லிருக்கும் உவர்நீரிலிருந்து உப்பைக் கழித்து நீரை மாத்திரம் ஆவி ரூபமாகக் கொண்டுபோய் நன்னீராக்கியும் மேகங்களாக மாற்றியும் மழையாய்ப் பெய்யச் செய்கின்றது.

மேலும், மழை பெய்யும்போது சிறு துளிகளாகவும் விழும்படி செய்கின்றது. அப்படிக்கன்றி மழையானது பெரிய நீர்க்கட்டிகளாகப் பெய்யில் நிலத்திலிருக்கும் சகல கந்தமூல கிருமிகீட பிராணிகள் நிர்மூலமாகிவிடும். அப்படிப்பட்ட நஷ்ட முண்டாகாதபடிக்குக் கீரை முதலான பயிர் பூண்டுகளுக்கு ஜலத்தைக்கொண்டு கையினால் தெளிப்பதைப் போலச் சிறு துளிகளாக விழச்செய்கிறது. இந்தக் காற்று இப்படிப்பட்ட விநோதமும் விந்தையுமாய் அமைந்திருப்பதற்குக் காரணம் யாது? நியந்தா இல்லாமல் இப்படிப்பட்ட நியமன முண்டாகுமோ? மற்ற பூதங்களின் பெருமையைப்

---

ence would terminate, would they not give it off occasionally as it collects in them. To vegetable life, however this very principle is absolutely indispensable. Carbon is the chief nutriment of plants, and they retain it, giving out at the same time the oxygen with which it is connected when absorbed by them from the atmosphere. Thus, by this difference in their nutriment, we have a continual round mutual benefit conferred by the animal and vegetable worlds on every animal body giving out the carbon necessary to plants, though noxious to themselves and plants in their turn paying back the gift by a perpetual supply of the oxygen on which animal life depends the extent of this reciprocal benefit may be conceived from the fact, that in twenty four hours, 40,000 cubic inches of Carbonic acid gas are given off by the lungs of Man 40,000 inches of gas contain two thirds of a pound of Carbon or Charcoal.—*Paley*.

"Without a mind how the air is composed the Oxygen and Hydrogen.—*Parker*.

பற்றிப் பிரஸ்தாபிப்பதைப் பார்க்கிலும் நீங்களே சற்று யோசித்தால் அவற்றின் அமைப்பு ஆனந்த சாகரத்தில் மூழ்கும்படிசெய்யும். அகண்ட கடலால் சூழப்பட்ட தாரணியில் தாதுவர்க்கங்களையே யாதாரமாகக்கொண்டிருக்கிற பற்பலவிதமான பயிர்பூண்டுக ளிருக்கின்றன; அவற்றில் சிலவற்றிற்கு மண் முதலியவைகளே வேண்டியதில்லை; சில ஜலத்தை மாத்திரம் ஆதாரமாகக்கொண் டிருக்கின்றன; சில வாயுவை மாத்திரம் ஆதாரமாகக்கொண் டிருக்கின்றன; சில அந்தரத்தில் அற்புதமாக வளருகின்றன. இப்படியாதல் நியமனமல்லவா? பூமியில் முளைக்கும் கந்தமூலங்களும், ஒரு நியந்தாவின் நியமனத்தையே காட்டுகின்றன. விதையிலிருந்து உண்டாகும் கந்தமூலங்களுக்கு யாதொரு சேதமும் உண்டாகாதபடி அவ்விதைகள் கெட்டியாகவும், சுளுவில் கெடாதபடி கற்களைப்போலவு மிருக்கின்றன. விதைகளை யுடைத்து சாஸ்த்ரோக்தமாகப் பரிசோதித்துப் பார்ப்போமாகில், அதற்குள் ளிருக்கும் பிராணாதாரமான முளைகளைக் காப்பதற்குப் பலவித பந்தோபஸ்தான புறைகளும் மெலிந்த தோல்களும் படர்ந்து மூடிக்கொண்டிருக்கின்றன.

மேலும், அந்த விதைகள் தண்டுகளிலிருந்து மேலோங்கிவளரும்போது, அவற்றிற்குச் சேதமுண்டாகாதபடி, பலமும் வளமுமுள்ள கோதுகள், அல்லது தோல்களினால் காக்கும்படி நியமிக்கப்பட் டிருக்கின்றன. இம்மட்டோ, இயற்கையாகவோ செயற்கையாகவோ பூமியில் தலைகீழாகவும், கால் மேலாகவும் விழப்பட்ட விதைகளிலிருந்து உலகத்துக்கு உபயோகமான முளை மேலுக்குக் கிளம்பிக்கொண்டு வந்து விடுகின்றது. அதற்காதாரமான வேர்கள் அடியில் படர்ந்து பலமாகப் பிடித்துக் கொள்ளுகின்றன. இஃது ஆச்சரியமான நியமனமல்லவா? மாருதத்தினாலோ அல்லது மநுஷனாலோ பூமியில் விழப்பட்ட ஆயிரக்கணக்கான விதைகளில் கொஞ்சம் மாத்திரம் சரியான நிலையாக விழுமேயன்றி மற்றப்படி யாவும் விழா. அப்படி விழுந்தும் முளைமாத்திரம் மேலே கிளம்பிக்கொண்டு வந்துவிடுகின்றது. அப்படிக்கன்றி தலைகீழாக விழப்பட்ட விதைகளின் முளைகள் அடிப்பாகத்தில் வளர்ந்து வேர்கள் மாத்திரம் பூமியின் மேற்பாகத்தில் வந்து படர்ந்தால் யாது பிரயோஜனத்தையுங் கொடுக்கமாட்டா தல்லவா? மேலும், விதைகள் யாவும் நெருக்கமாக ஒரேவிடத்தில் விழு

ந்தால் விருத்திக்கு இடமில்லாமல் போகுமென்று சில விதைகளுக்கு ஒருவிதச் சப்பட்டை யல்லது இறகுகளிருக்கின்றன. விதைகள் முற்றும் முதிர்ந்து பக்குவகாலங் கிட்டிவிடில் அவைகள் வெடித்துத் தூரமாகப் போய்விழுந்து வளர்ந்து விருத்தியாகின்றன. இறகுகள் அல்லது சப்பட்டைகளற்ற சில கந்தமூலங்களின் விதைகள், காலமாகுந்தருணத்தில் காற்றினால் வாரிக்கொண்டுபோகப்பட்டுத்தூரத்திற் கொண்டுபோய்ப் பறக்கவிழச் செய்கின்றது. ஆலமரத்தின் சிறு விதைக்குள் எவ்வளவு அற்புதமான வேர், மரம், இலை, காய், கனி முதலானவைகளடங்கியிருத்தல் நியமனமல்லவா? ஓங்கிவளர்ந்து நிற்கும் உயர் விருக்ஷங்களில் உண்டாகும் காய்கனிகள் பெருத்துப் பெரியதாகவிருக்கில், அவை பூமியிலிருக்கும் பிராணிகளின்மேல் விழுந்து அப்பிராணிகளுக்குச் சேதமுண்டாகுமென்றே அவ்வுயரமான மரங்களிலுண்டாகும் காய், கனிகள் அதிகச் சிறியவைகளாகவும், அம்மரங்களின் அடிகளிவிருக்கப்பட்ட பிராணிகளுக்கு அபாய முண்டுபண்ணாத விதமாகவும் இருக்கின்றன. பூமியில் படர்ந்து வளரும் பூசணி சுரை முதலியவற்றில் உண்டாகும் காய்கனிகளை இயற்கையாலோ,செயற்கையாலோ தாங்கும்படியான பூமிமுதலான சாதனங்க ளிருப்பதால், அவை பெருத்துப் பெரியவைகளாக விருக்கின்றன. பனை, தெங்கு பலாமுதலான சில உயர்ந்துவளரும் விருக்ஷங்களின் காய், கனிகள் பெருத்து கனமானவைகளாக இருப்பதால், அவைகள் சுளுவில் கீழே விழாதபடியாகப் பலமான நார்ப்பிடிப்புக்களால் பிணைக்கப்பட்டிருக்கின்றன. மேலும், பலா முதலான விருக்ஷங்களின் காய், கனிகள் அதிகப் பெரியவைகளாக இருப்பதால் அவை அவ்விருக்ஷங்களின் சிகரங்களில் உற்பத்தியாகில், அக்காய்கனிகளின் பளுவினால் அவ்விருக்ஷங்களே பாழ்த்துப்போமென்று பலமான கிளைகளிலும், அடிமரங்களிலும் (காய்கனிகள்) உற்பத்தியாகின்றன. இது நியமனமல்லவா? இம்மட்டோ, பிரபஞ்சம் முழுவதும் பற்பலவிதமும் பற்பல உபயோகமுமான புற்பூண்டுகளாகிய பாயால் போர்க்கப்பட்டிருக்கின்றது. இப்புற்பூண்டுகளில்லாவிடில் பலகோடி பிராணிகள் பிழைப்பதெப்படி? இவ்வளவேன்? பூமியாகிய பிரகிருதியும் சாதாரணமான ஒரேவித வருணமாகவும், விதைகள் பலவும் ஒரேவித வருணமாகவுமிருக்க, அவற்றாலுண்டாகும் விருக்ஷாதி புற்பூண்டுகள் மாத்திரம் பற்பல வருண பேதங்களால் வித்தியாசப்பட் டிருக்கவேண்

டியதென்ன? விருக்ஷங்களின் வேர்கள், ஒருவித வருணமுள்ளவையாயும், ரூபமுள்ளவையாயும், குணமுள்ளவையாயும்; தண்டுகளும், கிளைகளும் வேறுவிதமான ரூபமுள்ளவையாயும், வருணமுள்ளவையாயும், குணமுள்ளவையாயும்; இலைகள் வேறுவிதமான ரூபமுள்ளவையாயும், வருணமுள்ளவையாயும், குணபேத முள்ளவையாயும்; புஷ்பங்கள் வேறுவித வருணமுள்ளவையாயும், ரூபமுள்ளவையாயும், குணமுள்ளவையாயும், காய்கள் வேறுவித வருணமுள்ளவையாயும், வேறுவித ரூபமுள்ளவையாயும், வேறுவித குணமுள்ளவையாயும்; கனிகள் வேறுவித வருணமுள்ளவையாயும், வேறுவித குணமுள்ளவையாயு மிருக்கச் செய்வதற்குக் காரணம் யாது? சில கந்தமூலங்கள் சில்லரையாதி பிராணிகளுக்கும், சில: பக்ஷிகளுக்கும், சில: மிருகங்களுக்கும், சில: மனிதராகிய நமக்கும் உபயோகமானவையாக விருக்கின்றன. சில கந்தமூலங்கள், பிராணிகளைப் போஷிக்கின்றனவே. சில விஷமிக்கச் செய்கின்றனவே. அப்படி விஷமிக்கச் செய்வதாக இருக்கினும், பிராணிகளின் சரீர கருவிகளினுடைய தொழில்கள் கெட்டு வியாதி யுண்டாகும்போது அவ்விஷத்தன்மையான கந்தமூலங்கள் அமிர்தசஞ்சீவியைப்போல் அவுடதங்களாகின்றன. இப்படியாதல் நியமன மல்லவா ?

மல்லிகை, முல்லை முதலிய மலர்களின் சுவாசனையைச் சொல்லி முடியுமோ? சில புஷ்பங்களின் அழகையும், அமைப்பையும் வருணிக்க நம்மாலாமோ. புஷ்பங்களின் வருணங்களும், அழகும் வித்தியாசப்பட் டிருப்பதைப்போல் அவற்றின் குணங்களும் வித்தியாசப்பட் டிருக்கின்றன. காய், கனிகளின் ரூபாதிகுணங்கள் வித்தியாசப்பட்டிருக்கும் விநோதத்தைச் சொல்லமுடியுமோ ? கடைசியாக இந்தக் கடல்சூழ்ந்த ஞாலமே கணக்கற்ற கந்தமூலங்களால் சிங்காரிக்கப்பட்ட ஓர் ஆநந்த நடனசாலையாக விருப்பது நியமனமல்லவோ ? இலையுதிர்காலத்தில் காய்ந்து பட்டுப்போனவையாகத் தோன்றும் விருக்ஷங்கள், வசந்தகாலத்தில் தழைத்துத் துளிர்விட்டுப் பூத்துக் காய் கனிகளோடு கம்பிரமாகவிருத்தல் நியமனமல்லவோ? கந்தமூலங்களுடைய நியமனமே யிப்படியிருக்க, பிராணிகளுடைய நியமன மெவ்வளவோ விந்தையாக விருக்கின்றன.

அப்புவாகிய ஜலத்திலும், ஆகாயத்திலும் அனந்தகோடி பிராணிகள் கஷ்டமில்லாமல் சுகமாக ஜீவிக்கின்றன. அவற்றுள் சிலவற்றினுடைய உற்பாதி யுருவங்களை சூக்ஷ்மவீக்ஷணியாகிய (Microscope) இயந்தர சகாயத்தினால் பார்க்கும்போது அவற்றின் ஆச்சரியமான அமைப்பு வாசாமகோசரமாக விருக்கின்றது. சில புழுக்களுக்கு இருபக்கம் முகமும், சில புழுக்களுக்குப் பலபக்கமுகமாயு மிருக்கின்றன. சிலபுழுக்கள் தம்மைக் காத்துக்கொள்ளக் கூர்மையுள்ள மூக்குகளும், அம்மூக்குகளில் வேண்டியபோது ஜனிக்கத்தக்க விஷத்தையுங் கொண்டிருக்கின்றன. கம்பிளிப் பூச்சிகளும், வண்ணாரப் பூச்சிகளும், மழைக்காலத்தில் தம்மையும் தமது முட்டைகளையும் காத்துக்கொள்ள வேண்டிய சாதனங்களைத் தேடிக் கொள்ளுகின்றன. தேன் பூச்சிகளின் புத்தி நுட்பத்தைப் பற்றிப் பூரணமாகப் பேசமுடியுமோ? பற்பல புஷ்பங்களிலிருந்து மதுவையுறிஞ்சி, அம்மது புளித்துக் கெட்டுப்போகாமல் பலநாளிருக்கும்படி மெழுகினால் சிறுஅறைகளைச்செய்து பாதுகாப்பாக வைத்துவருகின்றன. அந்த மெழுகோவெனில், ஷை பூச்சிகள் உண்ணும் ஒருவிதப் பொடியிலிருந்து கழிக்குஞ் சத்தாகவிருக்கின்றது. மனிதராகிய நாம் அத்தேனைக் கொண்டுவந்து கெட்டுப்போகாதபடி பாதுகாத்த லசாத்தியமாக விருக்கிறது. தேன் கூண்டின் அற்புதத்தைச் சொல்லி முடியுமோ? மின்னும்பூச்சிகளைப் பாருங்கள். ஆண் மின்னும்பூச்சிகளுக்கோ பறக்கும்படியான ஒருவிதஇறக்கைகளிருக்கின்றன. பெண் மின்னும்பூச்சிகளோ ஒருவிதக் கம்பிளிப்பூச்சிகளாக விருக்கின்றன. சிலந்திப்பூச்சிகள் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்துக்குப் பறக்கும்படியான இறகுகளற்றவாக விருந்தும், அவை அந்தரத்திற்போய் நூல் கோட்டையைக் கட்டி அதில் சஞ்சாரம் செய்கின்றன. நத்தையாதிய சிலபிராணிகளுக்கு அதிகஉஷ்ணம்பட்டால் பாழ்த்துப்போமென்று அவற்றைப் போர்த்துக் காப்பாற்றிக்கொள்ள விநோதமான ஓட்டைப்போன்ற கிளிஞ்சில் குகைகள் சிருஷ்டிக்கப்பட் டிருக்கின்றன. அவை சஞ்சாரஞ் செய்யும்போது அந்தக் காப்பு ஓடுகளோடும் போய்வருகின்றன. மீன் முதலான ஜலசராதிகள் எப்போதும் ஜலத்திலிருந்தே வாழவேண்டியிருப்பதால், அவற்றின் உடல்முதலானவை ஜலத்தினால் பாதிக்கப்படாமலும், பார்க்கும்போதும் புசிக்கும்போதும் ஜலத்தினால் யாதொரு நிர்ப்பந்தமு மில்லாதிருக்கும்

படியானவிதமாகப் படைக்கப்பட் டிருக்கின்றன. மலேமே லிருக்கும்பிராணிகள்நிலத்திலும்வாழத்தக்கதாகவிருக்கினும், நிலத்திலிருக்கும் பிராணிகள் நீரிலும், நீரிலிருக்கும் பிராணிகள் நிலத்திலும் வாழுதலசாத்தியமேயல்லவா? முதலேமுதலான பிராணிகள் நீரிலிருந்து உய்யும்படியாகவே நியமிக்கப் பட் டிருக்கின்றன. அவை நீரிலிருக்கும்போது பெரிய யானைகளையும் அடித்துக் கொல்லும்படியான சக்தியை யுடைத்தாயிருக்கின்றன. ஆனால், அவை நீரைவிட்டு நிலத்துக்கு வந்தால் கேவலமான சிறிய மிருகங்களால் அடிக்கப்பட்டுச் சாகும். ஜலத்தில் ஜ்வலிப்போடு நடிக்கும் மீன் முதலானவை நிலத்தில் வரில் நிமிஷத்தில் சாகும். இப்படியாதல் நியமனமல்லவா? பாலேவனங்களில் பிரயாணம் செய்வோருக்கு இன்றியமையாச் சாதனமாகிய ஒட்டகத்தைப் பரிசோதிப்போம். கூரியகற்களும்,கரடுகளும்,சுடுமணலும் நிறைந்தபயங்கர பாலேவனங்களில் ஒட்டகையைத்தவிர குதிரை முதலான எவ்விதவாகனங்களும்உபயோகப்படா. பாலேவனங்களில்புல், பூண்டு,பச்சைநீர் கிடைக்காமல் ஒருவித உப்பான முட் பூண்டு மாத்திரம் விளேயும். ஒட்டைகள் அப்பூண்டை ஐந்தாறு தினங்களுக்கொருதடவையுண்டு,சுமார் ஆறுமாதகாலம் தண்ணீரில்லாமல் பயங்கர புயல்காற்றில் போய்வரும். புயல்காற்றினல் மண்முதலானவை பறந்துவந்து, பார்க்கும் கண்களேயும் சிக்கையும் கெடுக்காத வண்ணம் ஓர்வித ஜவ்வுத்தோல் உடனுக்குடனேவந்து அதன் கண்களேயும் மூக்கையும் மூடிப் பாதுகாக்கும். அதன் பாதங்கள் பாறைக்கற்கள்மீதும் பயங்கரமணல் மீதும்லாடமில்லாமல் நடந்தாலும் ஒருவிதப்பருத்தித்தசைத் தோலுள்ளதாக இருப்பதால்அப்படி நடப்பதனல் உரைபட்டுத்தேய்ந்துபோவதில்லே;அதற்கு லாடமும்வேண்டியதில்லே. மேலும்,ஒட்டகையின்வயிற்றில்,12-அறைகளமைக்கப்பட்டு, அவற்றில் ஜலமானது ஆவியாக எழும்பிப் போகாத ஒருபையில் மேற்கண்ட ஜலத்தை சேர்த்து வைத்திருப்பதால், அரேபியர் ஆபத்துக்காலத்தில் ஒட்டகையைக் கொன்று அதிலுள்ளஜலத்தை யெடுத்துக் குடித்துச் சுகமடைவார்கள். ஆ! என்ன விந்தை! இது நிற்க,

பக்ஷிகளின் விநோதங்களேப் பாருங்கள்! ஜலத்தில் வாழத் தக்க பக்ஷிகளுடைய இறகாதிகள் ஜலத்தினல் யாதொரு பாதக முண்டாகாதபடி நெய்ப்பற்றுள்ளவைகளாக இருக்

அப்புவாகிய ஜலத்திலும், ஆகாயத்திலும் அனந்தகோடி பிராணிகள் கஷ்டமில்லாமல் சுகமாக ஜீவிக்கின்றன. அவற்றுள் சிலவற்றினுடைய உற்பாதி யுருவங்களை சூக்ஷ்மவீக்ஷணியாகிய (Microscope) இயந்தர சகாயத்தினால் பார்க்கும்போது அவற்றின் ஆச்சரியமான அமைப்பு வாசாமகோசரமாக விருக்கின்றது. சில புழுக்களுக்கு இருபக்கம் முகமும், சில புழுக்களுக்குப் பலபக்கமுகமாயு மிருக்கின்றன. சிலபுழுக்கள் தம்மைக் காத்துக்கொள்ளக் கூர்மையுள்ள மூக்குகளும், அம்மூக்குகளில் வேண்டியபோது ஜனிக்கத்தக்க விஷத்தையுங் கொண்டிருக்கின்றன. கம்பிளிப் பூச்சிகளும், வண்ணாரப் பூச்சிகளும், மழைக்காலத்தில் தம்மையும் தமது முட்டைகளையும் காத்துக்கொள்ள வேண்டிய சாதனங்களைத் தேடிக்கொள்ளுகின்றன. தேன் பூச்சிகளின் புத்தி நுட்பத்தைப் பற்றிப் பூரணமாகப் பேசமுடியுமோ? பற்பல புஷ்பங்களிலிருந்து மதுவையுறிஞ்சி, அம்மது புளித்துக் கெட்டுப்போகாமல் பலநாளிருக்கும்படி மெழுகினால் சிறுஅறைகளைச்செய்து பாதுகாப்பாக வைத்துவருகின்றன. அந்த மெழுகோவெனில், ஷை பூச்சிகள் உண்ணும் ஒருவிதப் பொடியிலிருந்து கழிக்குஞ் சத்தாகவிருக்கின்றது. மனிதராகிய நாம் அத்தேனைக் கொண்டுவந்து கெட்டுப்போகாதபடி பாதுகாத்த லசாத்தியமாக விருக்கிறது. தேன் கூண்டின் அற்புதத்தைச் சொல்லி முடியுமோ? மின்னும்பூச்சிகளைப் பாருங்கள். ஆண் மின்னும்பூச்சிகளுக்கோ பறக்கும்படியான ஒருவிதஇறக்கைகளிருக்கின்றன. பெண் மின்னும்பூச்சிகளோ ஒருவிதக் கம்பிளிப்பூச்சிகளாக விருக்கின்றன. சிலந்திப்பூச்சிகள் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்துக்குப் பறக்கும்படியான இறகுகளற்றவாக விருந்தும், அவை அந்தரத்திற்போய் நூல் கோட்டையைக் கட்டி அதில் சஞ்சாரம் செய்கின்றன. நத்தையாதிய சிலபிராணிகளுக்கு அதிகஉஷ்ணம்பட்டால் பாழ்த்துப்போமென்று அவற்றைப் போர்த்துக் காப்பாற்றிக்கொள்ள விநோதமான ஓட்டைப்போன்ற கிளிஞ்சில் குகைகள் சிருஷ்டிக்கப்பட் டிருக்கின்றன. அவை சஞ்சாரஞ் செய்யும்போது அந்தக் காப்பு ஓடுகளோடும் போய்வருகின்றன. மீன் முதலான ஜலசராதிகள் எப்போதும் ஜலத்திலிருந்தே வாழவேண்டியிருப்பதால், அவற்றின் உடல்முதலானவை ஜலத்தினால் பாதிக்கப்படாமலும், பார்க்கும்போதும் புசிக்கும்போதும் ஜலத்தினால் யாதொரு நிர்ப்பந்தமு மில்லாதிருக்கும்

படியானவிதமாகப் படைக்கப்பட் டிருக்கின்றன. மேலுமே விருக்கும்பிராணிகள்நிலத்திலும்வாழத்தக்கதாகவிருக்கினும், நிலத்திலிருக்கும் பிராணிகள் நீரிலும், நீரிலிருக்கும் பிராணிகள் நிலத்திலும் வாழுதலசாத்தியமேயல்லவா? முதலைமுதலான பிராணிகள் நீரிலிருந்து உய்யும்படியாகவே நியமிக்கப் பட் டிருக்கின்றன. அவை நீரிலிருக்கும்போது பெரிய யானைகளையும் அடித்துக் கொல்லும்படியான சக்தியை யுடைத்தாயிருக்கின்றன. ஆனால், அவை நீரைவிட்டு நிலத்துக்கு வந்தால் கேவலமான சிறிய மிருகங்களால் அடிக்கப்பட்டுச் சாகும். ஜலத்தில் ஜ்வலிப்போடு நடிக்கும் மீன் முதலானவை நிலத்தில் வரில் நிமிஷத்தில் சாகும். இப்படியாதல் நியமனமல்லவா? பாலைவனங்களில் பிரயாணம் செய்வோருக்கு இன்றியமையாச் சாதனமாகிய ஒட்டகத்தைப் பரிசோதிப்போம். கூரியகற்களும்,கரடுகளும்,சுடுமணலும் நிறைந்தபயங்கர பாலைவனங்களில் ஒட்டகையைத்தவிர குதிரை முதலான எவ்விதவாகனங்களும்உபயோகப்படா. பாலைவனங்களில்புல், பூண்டு,பச்சைநீர் கிடைக்காமல் ஒருவித உப்பான முட் பூண்டு மாத்திரம் விளையும். ஒட்டைகள் அப்பூண்டை ஐந்தாறுதினங்களுக்கொருதடவையுண்டு,சுமார் ஆறுமாதகாலம் தண்ணீரில்லாமல் பயங்கர புயல்காற்றில் போய்வரும். புயல்காற்றினால் மண்முதலானவை பறந்துவந்து, பார்க்கும் கண்களையும் சிக்கையும் கெடுக்காத வண்ணம் ஓர்வித ஜவ்வுத்தோல் உடனுக்குடனேவந்து அதன் கண்களையும் மூக்கையும் மூடிப் பாதுகாக்கும். அதன் பாதங்கள் பாறைக்கற்கள்மீதும் பயங்கரமணல்மீதும்லாடமில்லாமல் நடந்தாலும் ஒருவிதப்பருத்தித்தசைத் தோலுள்ளதாக இருப்பதால்அப்படி நடப்பதனால் உரைப்பட்டுத்தேய்ந்துபோவதில்லை;அதற்கு லாடமும்வேண்டியதில்லை. மேலும்,ஒட்டகையின்வயிற்றில்,12-அறைகளமைக்கப்பட்டு, அவற்றில் ஜலமானது ஆவியாக எழும்பிப் போகாத ஒருபையில் மேற்கண்ட ஜலத்தை சேர்த்து வைத்திருப்பதால், அரேபியர் ஆபத்துக்காலத்தில் ஒட்டகையைக் கொன்று அதிலுள்ளஜலத்தை யெடுத்துக் குடித்துச் சுகமடைவார்கள். ஆ! என்ன விந்தை! இது நிற்க,

பக்ஷிகளின் விநோதங்களைப் பாருங்கள்! ஜலத்தில் வாழத்தக்க பக்ஷிகளுடைய இறகாதிகள் ஜலத்தினால் யாதொரு பாதக முண்டாகாதபடி நெய்ப்பற்றுள்ளவைகளாக இருக்

கின்றன. சில பக்ஷிகள், நீரில்விழச் சாகும். சில பட்சிகள், நீரில்லாவிடில் சாகும். பாம்பாதி சில ஊர்வனங்களும், சில மிருகங்களும் நீரில்லாவிடில் சாகும். சில நீரில்விழச் சாகும். பாம்பாதி ஊர்வனங்களுடைய வால்களும், தோல்களும் விநோதமான நியமனமாக விருக்கின்றன. மிருகங்களுடைய உருவம், வருணம், குணம், செய்கை, காலம், இடம், ஆகாராதிகளில் அநந்த லக்ஷபேதமாக விருப்பனபோலவே; பட்சிகளுடைய உருவம், வருணம், குணம், செய்கை, காலம், இடம், ஆகாராதிகளும் விசித்திரமாக வித்தியாசப்பட்டிருக்கின்றன.

பிராணிகளுடைய கண், காது, கை, கால், இறகுகள் இரட்டையாக விருக்கினும், காரியாம்சத்தில் இவ்விரண்டு அங்கங்களும் கூடித் தொழிலைச்செய்வது ப்ரதியக்ஷ அதிசயமல்லவா? அதாவது பிராணிகளின் வலதுகண் பார்க்கும்போது அதை யனுசரித்து இடதுகண்ணும் பார்த்தலும், வலதுகை ஒருவேலையைச் செய்யும்போது இடதுகையும் அதை யனுசரித்துச் செய்தலும், வலதுகால் நடக்கும்போது அதை யனுசரித்து இடதுகாலும் நடத்தலும், வலது பக்கத்து இறகை யாட்டும்போது இடது பக்கத்து இறகும் அதை யனுசரித்தலும் நியமனமல்லவா? மேலும், ஜலத்தில் நீந்தி வாழவேண்டிய பட்சி மிருகங்களுக்குத் தோல் (Web feet) பாதங்களும், பூமியில்நடந்து வாழப்பட்ட பட்சி மிருகங்களுக்கு நகங்களோடும் விரல்களோடும் கூடிய பாதங்களும் உடைத்தாயிருப்பது ஆச்சரியமான நியமனமல்லவா?

ஜலசராதிகளை யாகாரமாகக் கொண்டிருக்கும் கொக்கு, நாரைமுதலான பட்சிகளுக்குத் தோல் பாதங்கள் இல்லாவிட்டாலும்; மீன் முதலியவற்றைக் கொத்தி யெடுத்துக்கொண்டுபோய் உண்ணும்படியாக நீண்ட மூக்குகளும், நீண்ட கால்களும், ஜலத்தில் விழுவதனால் கெட்டுப்போகாத இறகு முதலானவை இருப்பன பிரத்தியக்ஷ நியமனமல்லவா? வௌவால் முதலான சில பிராணிகள் நிலத்தில் நடக்கச் சக்தியற்றவையாக விருப்பதால்,மேலே பறக்கத்தக்க ஓர்விதமான தோல், இறகுகளையும்;மரக்கிளைகளைப்பற்றித் தொங்கி யாடும்படியான ஓர்வித கால்நகங்களையும் உள்ளனவாயிருப்பன நியமனமல்லவா? கிளிகளைப்போன்ற சில பட்சிகளினது மூக்குகளின் மேற்

பாகம் அதிகமாகக் குதிந்திருப்பதனுல், அவை முன்னேக்கிப் பறக்கத்தக்கவையாகவிருக்கின்றன. அதாவது; அவற்றின் மூக்கின்மேற்பாகம் அவற்றின் முதுகெலும்புடன் பந்தப்பட்டிருப்பதால், அப்பட்சிகள் வாயைத் திறக்கும்போது வில்வளைவான முதுகெலும்பு உதைப்பைத் தருகின்றது. ஆகவே, அவை வாயைத்திறந்து கத்திக்கொண்டு பறக்கவேண்டியிருக்கின்றன.

யானை முதலான சில மிருகங்களுக்கு நீண்ட கழுத்தில்லாமையால் அவை உண்டு உயிர்வாழ்தல் அசாத்தியமல்லவா? ஆனதுபற்றியே யானைகளுக்குத் துதிக்கைகளும், கொம்புகளும், ஒட்டகை முதலான சில மிருகங்கள் உயரமானவைகளாகையால் அவைகளுக்கு நீண்ட கழுத்துக்களும், பாலைவனங்களில் வளரும் ஒருவித கல்கட்டையான பூண்டுகளை உரித்து உண்ணுவதற்குக் கூர்மையான முன்வாய்ப் பற்களும் படைக்கப்பட்டிருக்கின்றன. இஃது பிரத்யட்ச நியமனமல்லவா? பாம்புமுதலான சில ஊர்வனங்களுக்குப் பறக்க இறகுகளும் நடக்கக் கால்களும் இராவிடினும், அவை அதிவேகமாக ஊர்ந்துப் போகத்தக்க விதமாக வில்வளைவான உறுப்புக்களோடு நியமிக்கப்பட்டிருப்பன பிரத்யட்சம். பாம்பு, புலி, சிங்க முதலான சில ஜந்துக்களுக்கு இறகுகளும் இருக்கில், அவை ஜநசமூகத்தை நாசப்படுத்திவிடுமென இறகுகளற்றிருத்தல் ஆச்சரியமல்லவா?

மேலும், இராத்திரி காலங்களில் சஞ்சாரஞ் செய்யும் ஆந்தை, வௌவால் முதலான சில ஜந்துக்களுடைய கண்களையறுத்துப் பரிசோதிக்கையில், அவை இரவில் மாத்திரம் விசேஷமாகப் பார்க்கத்தக்க விதமாகவும், சூரியப் பிரகாசத்தில் மழுக்கமடையத்தக்கதாகவும் படைக்கப்பட்டிருப்பது பிரத்யக்ஷமாகின்றன. இப்படியாதல் நியமனமல்லவா? கனவான்களே! கேளுங்கள். மண்டலத்திலிருக்கும் மானவஜாதியின் நியமனத்தை யென்னென்று சொல்லுவேன்.

ஒரு சிசுவானது பிறக்கும்போதே பற்களையுடைத்தாயிருந்தும், அவை பாலை யருந்தும்போது தாயின் மெல்லிய தனத்தில் காயப்பட்டு அபாய முண்டாகாதபடி மிருதுவான தந்தபோர்வையாகிய ஜவ்வினுல் மூடப்பட்டிருக்கின்றன. அந்

குழந்தைகள் தாயினுடைய பாலை யருந்துதலைவிட்டுச் சற்று கடினமான பதார்த்தங்களைக் கடித்து மெல்லும்படியான பருவங் கிட்டும்போது அந்தத் தந்தப்போர்வையும் விலகிச் சற்று கூர்மையான * பற்கள் வெளியாகின்றன. பட்சி மிருகாதிகளின் குஞ்சு குட்டிகள் பிறக்கும்போதே அவற்றின் வாய் முதலான கருவிகள் பூரணமாகவிருக்க, மனிதருடைய சிசுக்களுக்குமாத்திரம் தம்பற்கள் தொழிலற்று மறைந்திருத்தல் நியமனமல்லவா? மேலும், சிசுவின் உதடுகளும், நாவும் பாலை யுறிஞ்சும்படியான இயந்திரமாகவும், சிசுவானது ஜனித்த உடனே அதன் ஆகாரத்துக்காகவே தாயாருடைய முலையில் பால் ஜனிப்பது விந்தையான நியமனமல்லவா? பிறந்த சிசுவுக்குப் பாலை யருந்தும்படி நாம் படிப்பித்தோமா? அல்லது சிசுவானது எந்த பாடசாலையிலாவது இந்தப் படிப்பைக் கற்றுக்கொண்டதா? சிசுவுக்கிருக்கும் கண், காது, கை, கால் முதலான உறுப்புக்கள் பிரபஞ்சத்தில் பிறந்து வந்து பிரகாசம் முதலிய பேறுகளைப் பெற்றபிறகே தம் தம் செய்கைகளைச் செய்யப் பிரயத்தனப்படுகின்றன. அப்படிக்கின்றித் தாயாரின் கருப்பத்தி லிருக்கும்போதே கண், காது, கை, கால்கள் தம் தம் தொழில்களைச் செய்ய ஆரம்பித்தால் தாய்மார்கள் பிழைப்ப தெப்படி? நரஜீவிகள் விருத்தியாவ தெப்படி? இப்படியாதல் நியமனமல்லவா? இஃது கட்டளையல்லவா?

மானவஜாதியாருடைய அங்காதிபாகங்களை யறுத்துப் பரிசோதித்துப் பாருங்கள். அவ்வங்கங்கள் ஒன்றுக்கொன்று பொருந்தியவையாயும், இன்றி யமையாதவையாயும் நியமிக்கப்பட்டிருக்கின்றன. ஈரல், கல்லீரல், நுரையீரல், குண்டைக்காய், இரைப்பை, ஹிருதயம் முதலியவை அற்புதமாக அமைக்கப்பட்டும் பிணைக்கப்பட்டு மிருக்கின்றன. தேக்கிலும் திடமான மரங்களைப் பார்க்கிலும் கெட்டியான எலும்புகளால் அடுக்கப்பட்டும், அவை தளராதபடிக்கு நரம்புகளாகிய கயிற்றால் கட்டப்பட்டும், சந்துபொருந்துகளில்லாமல் இரத்தத்தால் பிசைந்து சாந்துப்பதமாகிய மாம்சத்தினால் சுவர்வைக்கப்பட்டும், அச்சுவர்களுக்குச் சேதம் வராதபடி சருமமாகிய தோலினால் மூடப்பட்டும் இருக்கிற அ

* How a boy teeth could give a man teeth without a mind?—Parker.

ஞான கோட்டைக்கொப்பாகிய மானிட சரீரத்தில் ஜீவாத்மா போகவும் வரவும் போதுமான நவதுவாரங்களாகிய ஒன்பது வாசல்களாலும் நிருமாணிக்கப்பட் டிருக்கிறதல்லவா? இந்தச் சரீரமாகும் விநோதமாகிய கோட்டையை எந்தத் தச்சனுவது, கருமானுவது, ஒட்டனுவது கூடிக் கட்டினார்களா? இஃது நியமனமல்லவா? சரீரத்தின் பாகங்களெல்லாம்மெலிவானவையாகவிருக்க, மகா மேன்மையாகிய மனதிற்காதாரமான மூளையிருக்கும் மண்டையோடு மாத்திரம் அதிகக் கெட்டியானதாகவும், கடினமானதாகவும், கனமானதாகவு மிருப்பது நியமனமல்லவா? ஒன்பது கோடியே ஐம்பதுலக்ஷம் மைல் தூரத்திலிருக்கும் சூரியன் முதலான கிரகங்களை யதிக நுட்பமாகக் கண்டறியும்படி செய்யும் இன்றியமையாத கருவியாகிய தூரதிருஷ்டிணியையும், மற்றும் அற்புதமான கருவிகளையுஞ் செய்யுங் கைகளின் விநோதமான அமைப்பையும் சொல்லிமுடியுமோ? கோபுராதி பிரம்மாண்டமான கட்டிடங்களைக் கட்டுவதுங் கைகளேயல்லவா? ககோள, பூகோள, பாகவத, பாரத, இராமாயணுதி கிரந்தங்களை யெழுதியதும் கைகளேயல்லவா? சீனுதேசத்தில ஒரு வித்வான் அறுபதுவருஷகாலங்களாக ஒரு விஷயத்தைப்பற்றிப் பெரிய கிரந்தங்களை எழுதியதுங் கைகளேயல்லவா? இந்தக் கைக ளிவ்வாறு செய்யும்படியாக விருப்பது நியமனமல்லவா? மனிதருடைய மற்ற அங்கங்களின் அமைப்பு எவ்வளவோ விநோதத்தையும் வியப்பையுந் தரத்தக்கதாக விருக்கின்றன. மேலும், மனிதருடைய சிரசு சிறியதாகவும், இடை பெரியதாகவும், அடிகள் மிகவும் சிறியதாகவும் இருந்தும், தேகமானது நிற்கும்போது கீழேவிழாமல் வில்லைப்போல் இழுப்புக் கவர்ச்சிகளுக்குப் பந்தப்பட் டிருப்பது நியமனமல்லவா? பட்சி,மிருகங்கள் குளிர்காய்ச்சலுக்குத் தக்கபடி போர்த்துப் பாதுகாத்துக்கொள்ள தடித்துக் கெட்டியான இறகுகளையும்,மயிர்களையும், மொத்தமான தோல்களையும் இயற்கையாகவே பெற்றுக்கொண் டிருக்கின்றன. மனிதர்களாகிய நமக்கோ அப்படிப்பட்டதோல்களும் மயிர்களும் இல்லாவிடினும், தேசத்துக்கும் காலத்துக்கும் தக்கபடி செயற்கையாகிய சிறந்த உடைகளைச்செய்து போர்த்துக்கொள்ளும்படியான புத்தியைப் பெற்றிருக்கிறேரும். இஃது நியமனமல்லவா? மனிதன் அதிக பயங்கரமான உஷ்ணமுள்ள நாட்டிலிருக்கினும், அல்லது அதிக பயங்கரமான பனிக்கட்டிகள் நிறைந்த குளிர்

நாட்டிலிருக்கினும், அவனுடைய தேக உஷ்ணம் 96 டிகிரிக்கு உட்பட்டிருத்தல் நியமனமல்லவா? மேலும், ஊர்வன, பட்சி, மிருகாதிகள் தமக்கு அபாயமுண்டாகும்போது தம்மைக் காத்துக்கொள்ள பற்கள், மூக்குகள், நகங்கள், கொம்புகள், வால்கள் முதலான இயற்கைச் சாதனங்களையுடைத்தாயிருந்தும்; அப்படிப்பட்ட பிராணிகளையெல்லாம் மனிதராகிய நம்முடைய வசமாக்கிக் கொள்ளும்படியான புத்தியென்னும் சிறந்த காப்பாகிய ஆயுதத்தைப் பெற்றிருப்பது நியமனமல்லவா? நமது கண், காதுகளின் நியமனத்தையென்னென்று சொல்லுவேன்? அவற்றின் அமைப்பையும், அவற்றின் செய்கைகளையுஞ் சரியாகச் சொல்லிக் காட்ட மனிதரால் முடியுமோ? இவ்வுறுப்புக்கள் தாம் இருக்கும் இடம்விட் டப்புறப்பட்டிருக்கில் யாது பிரயோஜனத்தைத் தரும்? கண்களிருக்கிற இடத்தில் கைகளும், கைகள் இருக்கிறவிடத்தில் கால்களும், கால்கள் இருக்கிறவிடத்தில் காதுகளுமிருக்கில் யாது பிரயோஜனப்படும்? மூக்கினுடையவும், நாக்கினுடையவும் அமைப்பைப்பற்றி யோசித்துப் பாருங்கள்.

கருதிய ஒருபழம் இருக்கப்பட்ட இடத்தைக் காதால் கேட்டும், காலால் நடந்தும், கண்ணால் கண்டும், கையால் கொண்டும், மூக்கால் முகர்ந்தும், முன்வாய்ப் பற்களால் கடித்தும், அடிவாய்ப்பற்களால் மென்றும், நாவால் ருசிபார்த்து அறிந்தும் ஆனந்தப்படும் மனதின் பெருமை யென்னே? நமது கண்களின் அமைப்பை முன்னமே விவரமாகச் சொல்லியிருக்கிறேன். மெதுவான கண்களுக்குச் சேதம் வராதபடி யெவ்வளவோ பாதுகாப்பாகப் பொருந்திய குழிகள் நியமிக்கப்பட் டிருக்கின்றன. கண்ணில் அதிகப்பிரகாசமும், அணுவைப்போன்ற தூசுகளும் விழாதபடிக்கும், தூங்கும்போது புழு, பூச்சி, தூசுகளினால் அபாயமுண்டாகாதபடிக்கும் இமைகள் அமைக்கப்பட் டிருக்கின்றன. இவ்விமைகள் சமயமறிந்து கண்களை மூடிக் காப்பது விந்தையல்லவா? சயயோசிதமாகக் கண்களை மூடிப் பாதுகாக்கும் இமைகளை நாம் தூண்டுகிறோமோ? இமைகள் வேண்டியபோது மூடித் திறக்குதல் அற்புதமல்லவா? இஃது நியமனமல்லவா? இவற்றைச் சுபாவமெனல் வேடிக்கை வார்த்தையேயல்லவா? இதுநிற்க, ஜீவகோடிகளுக் குண்டாகும் நித்திரையின் நியம

னத்தைச் சற்று யோசித்துப் பாருங்கள். இதற்கென்றே நிச்சப்தமான இரவை யுண்டாக்கியிருப்பது நியமனமல்லவா? நித்திரையின்றி ஜீவிகள் ஜீவிக்குமோ? நித்திரை செய்யும்படி யாராவது பிராணிகளுக்குப் படிப்பித்தார்களோ? அதற்கென்று பாடசாலைகளை வைத்திருக்கிறார்களோ? இஃது நியமனமல்லவா? பிரபஞ்சத்திலிருக்கும் பிராணிகளின் அங்காதிகளின் நியமன மிப்படியிருக்க, பிராணிகளுக்கிருக்கும் சகஜ ஜ்ஞானமாகிய இயற்கை யறிவைப்பற்றி யோசித்துப் பாருங்கள். பிராணி சமூகங்கள் உஜ்ஜீவிக்க யாரொருவருடைய தூண்டுதலின்றித் தத்தமக்குவேண்டிய ஆகாரங்களைக் கொள்ளுவதல்லாமல் அவற்றை ஜீரணமாக்கிக்கொள்ள நித்திரையையும் செய்து உய்கின்றன. ஜந்துகோடிகளில், ஆண்கள் பற்பலவிதமான உருவங்களையும் வருணங்களையும் கொண்டிருந்தும்; அவற்றிற்கு வேறுபாடான உருவங்களையும், வருணங்களையும் உடைய பெண்களைத்தேடிப் புணர்ந்து சுகப்படுகின்றன. வண்ணாரப் பூச்சிகளில் பெண்ணும் ஆணும் பேதமான வருணாதிகளை யுடையதாக விருந்தும், ஒன்றுக்கொன்று தெரிந்து புணர்ந்து முட்டையிடுகின்றன. அப்படி முட்டையிட்ட பிறகு அவைகளைப்பற்றி பாதுகாப்பதற்கு அவ்வளவாகக் கருத்தைச் செலுத்தாவிட்டாலும், அம்முட்டைகளிலிருந்து குஞ்சுகள் வெளியாகின்றன. அந்தக் குஞ்சுகளுக்குத் தாய்தந்தைக ளின்னவையென்று தெரியாது. அப்படியிருந்தும் அக்குஞ்சுகள் பெரிதான பிறகு தமது முட்டைகளை எந்த இலைகளில் இடவேண்டியதோ அவ்விலைகளை இயற்கை ஜ்ஞானத்தா லறிந்து முட்டை யிடுகின்றன. இந்த இயற்கையறிவு, பட்சிகள் முதலான பிராணிகளிடத்தில் மிகவும் விநோதமாக விளங்குகின்றது. ஊர்க்குருவிகளில், ஆண் ஒருவித வருணமுள்ளதாகவும், பெண் வேறுவித வருண முள்ளதாகவு மிருந்தும், ஆண்குருவி யின்னதென்றும், பெண்குருவி யின்னதென்றும் ஒன்றுக்கொன்று தெரிந்துகொண்டு புணர்ந்து சுகப்படுகின்றனவல்லவா? இந்தக் குருவிக ளிப்படிக்கூடிக் குலாவும்படி அவற்றின் தாய்ப்பட்சிகள் கலியாணஞ்செய்து வைத்தனவோ? அல்லது, நாமாவது கூட்டிவைத்தோமோ? எந்தப் புரோகிதனாவது, அல்லது ஜோசியனாவது வந்து பஞ்சாங்கம் பார்த்துக் கலியாணஞ் செய்துவைத்தானோ? மேலும், இப்பட்சிகள் இம்மட்டி லிருக்கின்றனவோ? மனிதர்கள் தம்மனைவி மக்களுடன் கூடிக்

குலாவிச் சுகமாக வாழும்படியாகவும்; மழை,வெயில் முதலான அபாய முண்டாகாதபடி பலமாகவும், பாதுகாப்பாகவும், வீடுகளைக் கட்டிக்கொண்டு இல்லற தருமத்தை நடத்திவருவதைப் போலவே இப்பட்சிகளும் ஆணும் பேடுமாகக் கூடி மரங்களிலும், மனிதர் முதலானவர்களாலும்; மழை, வெய்யில் முதலியவற்றாலும், யாதொரு அபாய முண்டாகாத விடங்களிலும் விசித்திர விநோதமான வீடுகளாகிய கூடுகளைக் கட்டிக்கொண்டு,அக்கூடுகளில் தாமும் தம் குடும்பமாகிய குஞ்சுகளும் கூடிக் கொஞ்சிக் குலாவி வாழ்வதற்குப் போதுமானதாயும், தமது இறகுகளையும் வேறு மிருதுவான பருத்தி முதலானவைகளையுங் கொண்டுபோய் மெத்தையாகப் போட்டு அதில் முட்டையிட்டு அவயங்காத்துக் குஞ்சுபொரித்து, அக்குஞ்சுகள் பெரிதாகிப் பறந்து இரை தேடி யுண்டு உய்யும் பக்குவமாகும் வரையில் பராமரித்து வருகின்றன. சில குருவிகள் இருட்டுக் காலங்களில் தமது கூண்டுகளைத் தெரிந்து புகுவதற்கும், கூண்டுகளுக்கு வெளிச்சம் கொடுப்பதற்கும் மின்னும்பூச்சிகளையுங் கொண்டுபோய்த் தம் கூண்டுகளின் வாசலுக்கு அருகில் வைத்துக்கொள்ளுகின்றன. குருவிகளுக்கிருக்கும் இந்த விநோதமான புத்தியை மனிதர் போதித்தனரோ? இந்த இயற்கையறிவு நியமனமல்லவா? குருவிகளின் முட்டைகளை யுடைத்துப் பார்க்கையில் அதில் நீர்ப்பாண்டமாகிய வெள்ளைக்கருவும், மஞ்சள்கருவும் இருப்பதுமாத்திரம் தெரிகிறதே யொழிய, அதிலிருந்து எலும்பு, தோல், சதை, இறகுகளோடுங் கூடிய சிங்காரமான அருமைக் குஞ்சுக ளிருக்கிறதென்று அம்முட்டைகளையிட்ட தாய்ப் பட்சிகளுக்கு எப்படித் தெரியும்?மேலும்,அம்முட்டைகளுக்குத் தாய்ப் பட்சிகளின் கால், நக, மூக்குகளினாலும்; மழை, குளிர்ச்சி முதலியவற்றாலுஞ் சேத முண்டாகாதபடிக்கும், (தாய்ப் பட்சிகள்) மெதுவாகப் படுத்துத் தம் சூட்டினால் அவயங்காத்தால்தான் குஞ்சுகளாகுமென்று அத்தாய்ப் பட்சிகளுக்கு யாராவது போதித்தனரோ? கேவலமாகிய பட்சிகள் அவயங்காத்தல் ஆச்சரியமான காரியமல்லவா? இந்தப்படிப்பு எப்படி வந்தது? வெள்ளை, மஞ்சள், கருநீராகவிருக்கும் முட்டைகளுக்குள் தமது அருமைக் குஞ்சுக ளிருப்பதாகத் தாய்ப் பட்சிகளுக்கு எப்படித் தெரியும்? மனிதராகிய நாமும் பட்சிகளுக்கு இரசாயன சாஸ்திரத்தைப் படிப்பித்தோ மில்லையே? இந்த ஜ்ஞான மெப்படி வந்தது? குஞ்சுபொரித்த

உடனே யக் குஞ்சுகளுக்கும், அவற்றை ஆதரவில் வைத்துப் பாதுகாக்குந் தாய்ப்பட்சிக்கும், ஆகாரமாகும் வஸ்துக்களை ஆண்பட்சிபோய்த் தேடிக்கொண்டு வந்து கொடுத்து, குஞ்சுகளுக்கும் பேடுக்கும் உற்சாக முண்டாகும்படி கீதம் பாடுகின்றது. அக்குஞ்சுகளுக்கு அபாய முண்டாகிறதைக் கண்டால், தாய்ப்பட்சிகள் பரிதாபமான முகத்துடன் அலறி அழுவதைச் சொல்லல் முடியுமோ! இம்மட்டோ! இக்குஞ்சுகள் இரைதேடியுண்ணும் வித்தையையும், பறக்கும் வித்தையையும், அபாய முண்டாகும்போது தப்பித்துக்கொள்ளும் வித்தையையும் தாய்ப்பட்சிகள் எவ்வளவோ யுக்தியோடு போதித்து வருகின்றன. இது நியமனமல்லவா? மயில் முட்டையை யுடைத்துப் பார்ப்பவர்களுக்கு அதில் கருநீர் இருப்பது மாத்திரம் தோன்றும். அதன்மேல் குஞ்சுகளான பிறகு ஆண்குஞ்சுக்குப் பச்சை, நீலம், ஊதா முதலான பல வர்ண விநோத கண்கள் படர்ந்து, பார்வைக்கு இரமணீயமாகத் தோன்றுகின்றன. அவ்வர்ணங்கள் ஒரு பலகை அல்லது கடிதத்தில் தீட்டப்படாமல், மெல்லிய மயிர்கள் பலவற்றின்மேலும் பொருந்தும்படி படைக்கப்பட்டிருப்பது பிரத்தியக்ஷம். அதன் முட்டைக் கருவில் இவ்வித வர்ணபேதங்களைக் கண்டோமா? இல்லையே. ஆ! என்ன விந்தையான அமைப்பு! இவ்வளவேன்? பசு, புலி முதலான மிருகங்கள் தங்கள் கன்றுமுதலிய குட்டிகளின்விஷயமாகப் படும்பாடு கொஞ்சமோ? அவை தமது குட்டிகளிடத்தில் வைத்திருக்கும் பாசத்திற்கு அளவுண்டோ? இப்பாசமிருத்தல் நியமனமல்லவா? கடைசியாக மானவ ஜாதியாருக்கிருக்கும் இயற்கையறிவைப் பாருங்கள்! ஆண்மக்களுக்கும் பெண்மக்களுக்கும் இரண்டொரு அங்கங்கள் வேறுபட்டிருந்தும், பருவகாலம் வந்தபோது, ஆண்கள் பெண்களையும்; பெண்கள் ஆண்களையும் தேடிக் கூடிக் குலாவி வருதல் நியமனமல்லவா? புருஷர் பெண்களையும், பெண்கள் புருஷரையும் தேடிக் கூடிக்குலாவி வருவதனு லல்லவா உலகப் பிரஜாவியாபாரம் விருத்தியாகிச் சிறந்து விளங்குகின்றது. எப்படிப்பட்ட புருஷர்களும் பெண்களைக் கண்டமாத்திரத்தில் அவர்கள்மேல் காமவிகாரங் கொண்டுபின் பற்றல் சகஜமாகவே யிருக்கிறதல்லவா? பட்சி மிருகங்களும் தம்மினமாகிய பெண்களைப் பின் தொடர்ந்துபோதல் சஹஜமேயல்லவா? பெண் பிராணிகளிடத்தில் இப்படிப் பிரியம் வைக்கும்படியான ஸ்காந்தக் கவர்ச்சியிருப்பது நியமன மல்

லவா? இதற்கு இயற்கையாக விருக்கும் அன்பே காரணமாக விருக்கின்றது. எத்தேசத்திலும், எக்காலத்திலும் உண்டா யிருக்கிற பெரும்பான்மையான காவியகிரந்தங்களும், நாடகங் களும், ஸ்திரீ புருஷர்களுக்கு உண்டாகும் அன்பைப்பற்றியே யல்லவா கோஷிக்கின்றன. இராமன் வனவாசஞ் செய்ததும் ஸ்திரீயினாலே யல்லவா? இராவணன் வாலி முதலானவர்கள் மாண்டதும் ஸ்திரீயினாலே யல்லவா? இவற்றைக் கட் டுக் கதைகளாகக் கொண்டாலும், காரியம் மாத்திரம் இக்கா லத்திலும் காணக்கூடிய பிரத்தியக்ஷமாக விருக்கிறதல்லவா? இப்படிப்பட்ட அன்பு இருப்பது நியமனமல்லவா? இந்த அன்பினால் கூடி யீன்ற மக்களின்பேரில் பெற்றோர்கள் வைக்கும் அன்பிற்குக் கங்குகரை யுண்டோ? பெற்றோர்களு க்கு இயற்கையாக விருக்கும் அன்பில்லாவிடில் பிரபஞ்சம் பிரஜைகளால் பிரகாசிப்பதெப்படி? பெற்றோர்களுக்கு அன்பில்லாவிடில் பிள்ளைகள் விருத்தியாவதெப்படி? அரிச் சந்திரமஹாராஜனுடைய புத்திரனாகிய *உலோகிதாஸன் அர

* Without Love, how I would love my wife, child, &c.—Parker.

அரிச்சந்திரபுராணம்.

1 "ஓடினா னுள்ள மெல்லா முருகினாள் கருகி மேனி
வாடினாள் விறகு வைத்த விடத்தினுக் கருகே வந்தாள்
நாடினாள் கழுகும் பேயும் நரிகளுங் குறளுந் துன்றிக்
கூடிய குழுவி னுப்பண் குமரனைச் சென்று கண்டாள்."

2 "கண்டனள் கதறி வீழ்ந்தாள் கழுகெலா மிரியல் போகக்
கொண்டதோர் மகவி னைசை யாவியைக் கொள்ளை கொள்ள
முண்டகக் கரத்தா லேந்தி முருகனை மடிமேல் வைத்தே
அண்டரு மறுகி யேங்க வாய்திறந் தாற்ற லுற்றாள்."

3 "பனியா னனைந்து வெயிலா லுலர்ந்து பசியா லலைந்து முலவா
அனியாய வெங்க ணரவா லிறந்த வதிபாவ மென்கொ லறியேன்
தனியே கிடந்து விடநோய் செறிந்து தரைமீ துருண்ட மகனே
இனியாரை நம்பியுயிர்வாழ்வமென்ற னிறையோனும்யானுமவமே."

4 "வானின் றிழிந்து சொரிகின்ற தாரை மழைபோல வீழ விழிநீர்
ஊனின்றி மேனி யுதிரங்கள் சிந்த வுயிரின்றி வெம்பு தழலின்
மேனின்று வெந்த தளிர்போ லுயங்கி விதியாரை நொந்து தனியே
யானின் றிரங்க வேனென்ப தில்லை யிதுவோவு னீதி மகனே."

வால் கடிக்கப்பட் டிறந்தபோது அவன் தாயாகிய சந்திரமதி பரிதபித்துப் புலம்பியதாகச்சொல்வதும் அன்பென்னும்பாசத்தினாலே யல்லவா? பிள்ளைகள் விஷயமாகப் பிராணனைக் கொடுக்கும் பெற்றாரைக் கண்டிலோமே? நெடுந்தூரமும்,நெடு நாளும் போயிருந்து வரப்பட்ட பிள்ளைகளையும், அல்லது, கொடிய வியாதிகளாலும் வேறு கஷ்டங்களாலுங் கட்டுப் பட்டு விடுதலையைப் பெற்ற பிள்ளைகளையும் பெற்றோர்கள் பார்த்தபொழுது தேகம் புளகாங்கிதமாகி அவர்களைக் கட்டியணைத்து முத்தமிட்டுக் கண்ணீர் சொரிய ஆனந்த சாகரத்தில் மூழ்குதல் பிரத்தியக்ஷமல்லவா? அன்பாகிய பாசத்தின் அருமையென்னே? இது கட்டுப்பாடா? இயற்கையே யல்லவா? இந்த அன்பு மனிததேகத்தில் எங்கே இருக்கிறது? எவ்விதமாக இருக்கிறது? அதன் உயரம், நீளம், அகலம் மொத்தம் இவ்வளவென்று சொல்லக்கூடுமா? அது கண்களால் காணக்கூடாத அஜட பதார்த்தமாக இருந்தும், இகபர சுகத்துக்கு இன்றியமையாததாக நியமிக்கப்பட் டிருத்தல்ஆச்சரியமல்லவா? நியமனமல்லவா?

மேலும், ஒரு புருஷன் ஒரு பெண்ணையும், ஒருபெண் ஒரு புருஷனையும் புணர்ந்து பிள்ளைகளைப் பெற்று பிரஜா விருத்தியாக்க வேண்டுமென்று நியமிக்கப்பட்டிருப்பது பிரத்தியக்ஷம். அப்படிக்கன்றி, ஒரு புருஷன் பல பெண்களையும், ஒரு பெண் பல புருஷர்களையும் புணர்ந்தால் பிரஜா விருத்தி குன்றிப் போவதன்றி, பெற்றோருக்கும் பிள்ளைகளுக்கும் பலவித கஷ்டங்களுண்டாகும். எப்படியெனில், ஒரு புருஷன் பல பெண்களைக் கொண்டால், அவனுடைய அன்பானது அழகும் அடக்கமும் அமைப்புமுடைய ஒரு பெண்ணின்மீது மாத்திரம் மிதமிஞ்சி யிருக்குமேயல்லா

5. "என்னுய கன்றன் மணிமார்பி லேறிவிளையாடு கின்ற வெழிலோய்
முன்னுய் விளைந்த கனன்மூழ்க வெம்மின் முதலே நடந்த மதலாய்
சென்னுய் திரண்டு செறிகா ளிருந்து தெளியா திரங்கு மெனை நீ
அன்னுய் வருந்த லையெனுத துன்ற னறிவுக் கடாது மகனே."

6. "மறவா ளெயிற்று மணிமா சுணத்தின் வலியா லிறந்து ளவெனோ
திறவா திருக்கு மதிபாவி தன்னெ டுறவே தெனக்க ருதியோ
திறவாய் சிவந்த கனிவா யுரைத்தல் செய்கிலாய் முகத்து விழியாய்
பிறவாத நித்த னடியை வழுத்து பெருமா னளித்த மகனே."

(அரிச்சந்திரபுராணம்.)

மல், பல பெண்களிடமுமிரா. அப்போது அவனுடைய மற்ற மனைவிகள் சக்களத்திக் காய்ச்சலினால் சதா சண்டை செய்வார்கள். இதேவிதமாகவே, ஒரு பெண் பல புருஷரைத் தழுவினால், அவளுடைய விசேஷ அன்பு ஒரு புருஷன் மீது மாத்திரம் அதிகமாக விருக்கும்; அப்போது மற்ற புருஷர்கள் அவளையும் அவளுடைய ஆசைக் கண்ணாளனையும் கொல்லச் சமயந் தேடுவார்கள். இத்தியாதிகளை நாம் பிரத்தியக்ஷமாகக் காண்கிறோம்.

மேலும், பல புருஷர்களைப் புணரும் பெண்களுக்கும், பல பெண்களைப் புணரும் புருஷர்களுக்கும் அறையாப்பு, கொறுக்கு முதலான கரந்தி வியாதிகள் காண்பது விசேஷ மல்லவா? தாசி வேசிகளுக்கும், அவர்களோடு புணரும் புருஷர்களுக்கும் பலவியாதிகள் குடிகொண்டிருப்பது பிரத்யக்ஷ மல்லவா? அல்லாமலும், பெண்களுக்குப் புருஷர்களுடைய உதவி இன்றியமையாததா யிருக்கிறது. பெண்கள்பெற்ற பிள்ளைகளைப் பெற்றோராகிய தாயும் தந்தையும் கூடிக் காப்பாற்றவேண்டும். எக்காலத்திலும் எத்தேசத்திலு மிருந்த பெண்கள் புருஷனுடைய உதவியில்லாமல் பிள்ளைகளைப் பரிபாலித்து வந்ததாகத் தோற்றவில்லை. ஏனெனில், ஒரு பெண் ஒரு பிள்ளையைப் பெற்றால், அப்பிள்ளை தனக்கு வேண்டிய உணவாதிகளைத் தானே தேடி உய்வதற்குக் குறைந்தபட்சம் பதினன்கு பதினைந்து வருஷங்களாகவேண்டும். இப்பதினான்கு பதினைந்து வருஷங்களுக்குள்ளாக அந்தப்பெண்ணுக்கு மறுபடியும் பத்துப் பனிரண்டு பிள்ளைகள் பிறந்துவிடும். இப்பிள்ளைகளை யெல்லாம் தாயாராகிய அந்த ஒரு பெண்ணே வளர்த்துப் பாதுகாத்தல் அசாத்தியமல்லவா? ஆகவே, பிள்ளைகளைப் பாதுகாக்கப் புருஷனுடைய உதவி யின்றியமையாததா யிருக்கிறது. ஆனால், ஒரு புருஷன் பல பெண்களைப் புணர்ந்து பல பிள்ளைகளைப் பெற்றால், அப் பல பிள்ளைகளை ஒரே புருஷனாகிய தகப்பன் போஷித்துப் பாதுகாத்தல் கஷ்டமல்லவா? ஒருவேளை பாதுகாத்தாலும், அவனுக்கிருக்கும் அநேக மனைவிகளில் தனக்குப் பிரியமான ஆசைக் கண்ணாட்டியாகிய ஒருத்தியின்மேல் அதிக பிரியத்தையும், அவ்வொருத்தி பெற்ற பிள்ளைகளின்மேல் அதிக நேசத்தையுங் காட்டவேண்டி வரும். அப்படிச் செய்கையில் சக்களத்திச் சண்டையும் சச்சரவும் அதிகமாகும். அதேவித

மாகவே, ஒரு பெண் பல புருஷர்களைப் புணர்ந்து பல பிள்ளைகளைப் பெற்றால், அந்தப் பலபிள்ளைகளைப் பலதந்தைகள் கூடிபோஷித்தலும் அசாத்தியம். ஆகவே, ஒருபுருஷன் ஒரு பெண்ணையும், ஒரு பெண் ஒரு புருஷனையும் தழுவிப் பிள்ளைகளைப் பெற்று, அப்பிள்ளைகளை அத்தாயும் தந்தையுங் கூடிபோஷிக்கவேண்டுமென்னும் நியமனம் ஆதிகாலந் தொடங்கி சகஜமாக வருவதாய்த் தோன்றுகிறது. மேலும், ஸ்திரீகள் ஐம்பது வயதுக்கு மேற்பட்டால் கருப்பந்தரித்துப் பிள்ளைகளைப் பெறுவதில்லை. இதற்குக் காரணமேதென்று பார்க்குமிடத்து, ஸ்திரீ புருஷர்களுக்கு ஐம்பது வயதாகிவிட்டால், அவர்களுடைய பலம் குன்றித் தமக்குப் பிறக்கும் பிள்ளைகளைப் பாதுகாத்துப் போஷிக்கும் சக்தி குறைந்துபோவதே காரணமாக விருக்கிறது. இப்படியாதல் நியமனமல்லவா? மானவ ஜாதியாராகிய நமது மணக்கோலமென்னுங் கலியாணத்தின் பெருமையைப்பற்றி யோசித்துப் பாருங்கள். கலியாணத்தினால் * மூன்றுவித பெரியபேருக ளிருக்கின்றன.

முதலாவது:-மனிதராகியநாம்நமது மிருகத்தன்மையான மோகசாந்தியைச் செய்துகொள்ளுகிறோம். இரண்டாவது:- நமது இரகசியங்களையும்,கஷ்ட நிஷ்டூரங்களையும், இஷ்டலாபங்களையும் இருதய சினேகிதையான மனைவியிடஞ் சொல்லி சந்தோஷமாகக் கூடி வாழ்கிறோம். மூன்றாவது:—பிணி முதலான கஷ்டங்கள் சம்பவிக்கும்போதும்,நமக்கு வயது முதிர்ந்து பலங்குன்றிப் போகும்போதும், நம்மை போஷித்து பாதுகாக்கவும்,நமக்குத் துணையாக நிற்கப் பிள்ளைகளைப் பெற்றுக்கொண்டு சுகப்படுகிறோம். இம்மூன்று விஷயங்களுக்கு கலியாணம் இன்றியமையாததாக விருக்கின்றது. இஃது நியமனமல்லவா? பட்சி மிருகாதிகளுக்கு இப்படிப்பட்ட கலியாணமுண்டோ? அவைகள் சுகமாக விருக்கவில்லையா வென்று சிலர் ஆக்ஷேபிக்கக் கூடும். ஆனால், அது நியாயமான ஆக்ஷேபனையல்ல; ஏனெனில், பட்சி மிருகாதிகளில், சில தமக்கு வேண்டிய உணவு முதலானதுகளைத் தாமே சம்பாதித்துக்கொண்டு உய்யலாம். ஆனால், மானவ ஜாதியாராகிய

* There are three grand divisions in marriage. 1st, Animal gratification. 2nd, Pecuniary profit. 3rd, Social Respectability. There is no band in marriage if there is no God.—Theodor Parker.

நமக்கோ அப்படியல்ல. புருஷனுடைய உதவியின்றிப் பெண்ணும், பெண்ணின் உதவியின்றிப் பிள்ளைகளும், அந்தப் பெண்ணினுடையவும், பிள்ளைகளினுடையவும் உதவியின்றிப் புருஷனும் சுகமாகவாழ்த லசாத்தியமல்லவா? ஆகவே, ஒரு புருஷனும் ஒரு பெண்ணுங்கூடிப் பிள்ளைகளைப் பெற்று ஒருவருக்கொருவர் உதவியாகவிருந்து வாழ்ந்து வருதல் நியமனமல்லவா?

கனவான்களே! * இந்தப் பிரபஞ்சத்தி லிருக்கும்பொருள்கள் யாவும் ஒரு நியந்தாவால் கருதி நியமிக்கப்பட் டிருப்பதன்றி, இப் பிரபஞ்சத்துக்கு மேலேயிருக்கும் பொருள்களும் நியமிக்கப்பட் டிருப்பனவாகவே யிருக்கின்றன. ககனமார்க்கத்தில் அசைந்தாடும் கதிரோன் முதலான கிரகங்களின் நியமனங்களைப் பாருங்கள். இக் கிரகங்களில் அநேகம், நாம் வாசஞ்செய்யும் இந்தச் சிறிய உலகத்தைப் பார்க்கிலும் பலமடங்கு பிரம்மாண்டமானவைகளாகவும், எண்ணிறந்த ஜனங்களாலும் விசித்திர விநோதங்களாலும் நியமிக்கப்பட் டிருப்பதன்றி, இவற்றில் சில நான்கு சந்திரர்களாலும், சில ஆறு சந்திரர்களாலும், சில ஏழு சந்திரர்களாலுஞ் சூழப்பட்டும், நீரகம் பொருந்தியவைகளாயு மிருந்தும், தந்தம் நிலையையும் தினவருஷ கதிகளை விடாமலும் சுழன்றுகொண் டிருக்கும் விநோதம் நியமனமல்லவா? நமது சூரிய கிரஹம் திவ்விய தேஜஸ்ஸோடும், உஷ்ணத்தோடுங் கூடி மத்தியில் நின்று ஜ்வலித்தாட, அதைச் சுற்றிலும் புதன், வியாழன் முதலான அநேக கிரகங்கள் ஒன்றுக்கொன்று இழுப்புக்கவர்ச்சி ஓட்டக் கவர்ச்சிகளால் பந்தப்பட்டு, தந்தம் கதியை விடாமல் அசைந்தாடும் விநோதம். அற்புதத்திலும் அற்புதமல்லவா.

சூரியபிம்பம் சிருஷ்டிப் பொருள்களில் சிறந்தது. பிரபஞ்சப்பிராணகோடிகளுக்குஇன்றியமையாப் பொருள்களுக்கெல்லாம் பிரதானமாக இருப்பதால் பிரபாகரனை பிரபஞ்சத்துக்குப் பிராணன் என்று எண்ணுவோரும் உண்டு. அருணோதயகாக்ஷி சிருஷ்டியில் காணும் எல்லா காக்ஷிகளிலும் சிறந்த

* If I look up I see starry heaven, and if I see under different kinds of grass and plants, in the middle, different faces and &c.—Parker.

காக்ஷி. ஆதித்தன் ஆகாச வீதியில் பிரவேசிக்கும் முன்னம், அதன் அக்கினி ரூபமான கலைகள் மேகங்களின் ஊடாகப் பீறிக்கொண்டு பிரவேசிப்பதைப் பார்க்கில், அந்தத் தினகர னுடைய வருகையைத் தேவதூதர்கள் முன்னடியாகவந்து உலகத்தாருக்கு எச்சரிக்கை செய்வதைப்போல் இருக்கின் றன. இந்த எச்சரிக்கையைக் கண்டு இரவியின் வருகைக்கு எதிர்பார்க்கும் சில நிமிஷங்களுக்குள், வெய்யோனும் உதித்து வர, அதன் குன்றுவளம் பொருந்திய பிரகாசம் பிரபஞ்சத் தின் பல பக்கங்களிலும், பல பொருள்களின்மீதும் பீறிக் கொண்டு பாய, கடன்ஞாலத்தை கௌவிக்கொண்டிருந்த காடாந்தகாரமான இருள் யாரிடமும் சொல்லாமல் ஓடிப்போ கின்றது. மனோரஞ்சிதமான மலர்களின்மேல் விழுந்து தூங் கும் பனித்துளிகளின்மீது கதிரவன் காந்திவிழ, அப்பனித் துளிகள் முத்துப் பவள மரகத மாணிக்கங்களைப் போல மதிக்கச் செய்கின்றது. பாலசூரியன் உஜ்ஜுவல ரூபத்து டன் வருவதைக் கண்டு அநந்தகோடி பக்ஷிகள் உற்சாகம் பொருந்திய உள்ளத்துடன் இனிய கீதங்களைப் பாடி, வேந் தனை வந்தன வழிபாடுடன் வரவழைப்பதைப் போல நடிக் கின்றன. பிரபஞ்ச இயற்கைப் பொருள்களாகிய பருவத பிர தேசங்கள், பள்ளத்தாக்குகள், பலவிருக்ஷ வனங்கள் விநோத வருணங்களைப் பெற்று, விண்மணியின் பெருமையை உத் கோஷிக்கின்றன. இந்த விந்தையான வைகறையில் எந்தப் பிராணிதான் உற்சாக மடையா திருக்கும்? அநந்தகோடி கிருமி கீடகங்கள் எழுந்து களிப்புடன் பாடிப் பறந்து பரிதி யைப் பெருமைப் படுத்துகின்றன. பகலவன் பிரகாசத்தி னல் பறவை, பசு, பலவித செடி, கொடி, மரம் முதலான உத்பீஜங்கள் உயிர்ப்பை யடைகின்றன. இந்த பானுவின் பிர காசத்தினல் உஷ்ணமும், உஷ்ணத்தினல் மேகங்களும், மேக ங்களினல் மழைகளும், மழைகளினல் மண்ணுலகத்துக்கு மகிழ்ச்சியும் உண்டாகிறது. ஆ! இப்படிப்பட்ட அற்புதங்க ளுக்கு இடையிலிருக்கும் மானவ ஜாதியாராகிய நாம் இந்த ஆதவன் அருமைப் பெருமையைக் கண்டு ஆனந்தப்படாமல் இருக்கக்கூடுமோ?

இப்படி இந்தப் பிரபஞ்சத்துக்கு அற்புத ஆநந்தத்தை விளைவிக்கும் சூரிய பிம்பத்தின் தத்துவத்தைப் பற்றி சாஸ் திரோக்தமாக சோதிப்போமாகில், அது நமது பூமியைப்

பார்க்கிலும் பதின்மூன்று லக்ஷம் பங்குள்ள பெரிய உலகம். அதாவது, நாம் வசிக்கும் மண்ணுலகத்தைப்போல் பதின்மூன்று லக்ஷம் உலகங்கள் சேர்ந்தால் எவ்வளவு பெரிய உலகமாகுமோ, அவ்வளவு பெரிய உலகம் சூரியன். அது எட்டு லக்ஷத்து எண்பதினாயிரம் மயில்கள் குறுக்களவு நீளமும், இருபத்தெட்டு லக்ஷம் மயில்கள் சுற்றளவும், முப்பத்தெட்டு லக்ஷம் மயில்கள் விஸ்தீரணமுமுள்ள பிரம்மாண்ட உலகமாயிருந்தும், நமது உலகத்துக்கு ஒன்பது கோடியே இருபது லக்ஷம் மயில்கள் தூரத்திலிருப்பதால், நமது இயற்கைப் பார்வைக்குச் சிறியதாகத் தோன்றுகிறது. இந்தச் சூரியவுலகில் பிரம்மாண்ட பருவதங்களும், பள்ளத்தாக்குகளும், சமுத்திரங்களும் இருப்பதன்றி, அதி பயங்கர அக்கினி மலைகளும் அநந்தமிருக்கின்றன. அவற்றின் புகையானது அடிக்கடி கரும்புள்ளிகளைப் போலக் காணுகின்றன. அவற்றின் ஒரு புள்ளி எழுபத்தேழாயிரம் மயில் குறுக்களவும், மற்றொன்று லக்ஷத்து எண்பதினாயிரம் மயில் நீளமுமுள்ளதாம். இந்தச் சூரியவுலகத்திலிருந்து நமது உலகத்துக்கு வரும் உஷ்ணம், அந்தச் சூரியவுலகத்தில் இயற்கையாக இராமல் அதற்கு அநேக லக்ஷம் மயில்களுக்குத் தூரத்தில் சுற்றிக்கொண்டிருக்கும் அதன் மேகங்களில் இருந்து உண்டாவதால், அந்த சூரிய வுலகத்திலும் அநந்தகோடி ஜனங்கள் சுகமாக வாழ்ந்துகொண்டிருக்கின்றனர்.

சந்திர கிரஹங்களுடைய அமைப்பையும் பிரயோஜனங்களையும் பார்க்கும் எவர் மனதுதான் இந்த அற்புதப் படைப்புக்கு ஆதாரமான சக்தி கிடையாதென்று சொல்லக் கூடுமோ? மேலும், சில நாஸ்திகவாதிகள் சூரியனைப்பற்றிப் பரிக்ஷித்தபோது, அதன் உஷ்ணம் தினே தினே குறைந்துகொண்டு சூரிய உலகமே சுருங்கிக்கொண்டு வருவதால், கூடிய சீக்கிரத்தில் சூரிய உலகத்தின் உஷ்ணம் குறைந்து சுருங்கிவிட, அதை ஆதாரமாகக் கொண்டிருக்கும் பூமிமுதலான கிரகங்கள் தணிந்து தக்கைகளைப்போ லாகிவிடுமென்று சொல்லுகிறார்கள். இந்த விஷயத்தைப்பற்றிச் சில பெரிய வானசாஸ்திரிகள் பரிசோதித்துப் பார்த்ததில், நமது சூரியன் தினம் ஒன்றுக்கு 9 அங்குலம் சுருங்கி வருவதாகவும், அந்தக் கணக்கின்படி 100 வருஷங்களுக்கு 20 மயில் சுற்றளவுதான் சுருங்கக் கூடுமென்றும், ஆனால் சூரிய பிண்டத்தின்

மத்திய அளவு 8 லக்ஷத்து 60 மயில் இருப்பதால், 40,000 வருஷங்கள் சென்றாலும் 20,000 மயில்தான் சுருங்கக் கூடுமென்றும் கணக்கிட்டிருக்கிறார்கள். ஆ! என்ன அற்புத நியமனமாக இருக்கிறது பாருங்கள்.

நமது சிரசிற்குமேல் ஒவ்வொரு இரவிலும் நவ நவமாக உருவம் பூண்டு பிரகாசித்து பிரபஞ்சத்தின் பல பொருள்களிலும் அமுதம்போன்ற கிரணங்களை வீசும் தமநாசகனுடைய தன்மை என்ன? அது மாந்தருடைய மனதை மலரச் செய்யும், அதன் மனோகரமான வெளிச்சத்தினால் உத்பீஜங்கள் வளப்பமான தன்மையுடனும் வன்மையுடனு மிருக்கின்றன. இரமணீயமான சந்திர பிம்பத்தின் தத்துவத்தை சாஸ்திர ரீதியாகச் சோதிப்போமாகில், நிசாபதி நமது பூமிக்கு இரண்டரை லக்ஷம் மயில் தூரத்தில், இரண்டாயிரத்து நூற்றருபது மயில் குறுக்களவுள்ளதாயும், அதற்கு இயற்கையாக இல்லாத பிரகாசத்தைப் பானுவினிடம் பெற்று நமது பூமிக்குத் தரும் ஓர் பெரிய உலகம். இந்த சந்திர பூமியை தூரவீக்ஷணிக் கருவியைக்கொண்டு பார்ப்போமாகில், அதில் அநேக பர்வதங்களும், பெரும்பாறைகளும், பள்ளத்தாக்குகளும் தெரிகின்றன. அந்தப் பருவதங்களில் சில மூன்றுமயில் நான்குமயில் உயரமுள்ளவைகளாக விருக்கின்றன. இப்படிப்பட்ட சூரிய சந்திர பிம்பங்கள் அப்பரமேயருடைய சக்தியினால் தாங்கப்பட்டும், அவரது சக்தியால் அந்தரத்தில் ஆடிக்கொண்டு மிருக்கின்றன.

இப்பிரம்மாண்டமான கிரகங்களை யிப்படி யமைந்திருக்கவும் அசையவுஞ் செய்வது நியமனமல்லவா? ஆ! என்ன நியமனம்! எங்கும் எக்காலத்திலும் நியமனங்களைப் பார்த்து வருவது பிரத்தியட்சம். நமது பூமியின் அடிப்பாகத்தை வெட்டி வெகுதூரம் பார்த்தபோதிலும், அங்கும் ஆச்சரியமான அக்கினி சமுத்திரங்களும், அதற்குமேல் புகையும், அதற்குமேல் கக்கங்களும், அதற்குமேல் பாறைகளும், அதற்குமேல் மணலும், அதற்குமேல் களிமண்ணும், அதற்குமேல் ஜலசமுத்திரமு மிருப்பதாகப் பூதத்துவ சாஸ்திரிகள் சொல்லுகின்றனர். இப்படியமைந்திருப்பது நியமனமல்லவா? மேலும், நாம் பார்க்கப்பட்ட பொருள்கள் யாவும் ஒன்றையொன்று தாவிக்கொண்டும், ஒன்றுக்கொன்று ஆதாரமாகப் பந்தப்பட்டுக்கொண்டு மிருக்கின்றன.

தாதுவர்க்கங்கள்: தம்மைத்தாமே தாவி யாதார பந்தத்
தில் கட்டுண்டும்; கந்தமூலங்கள்: தாது வர்க்கங்களையும், மண்,
ஜலம், காற்று முதலானதுகளையும் ஆதாரமாகக் கொண்டும்,
பிராணிகள்: அக்கந்த மூலங்களையும் தாது வர்க்கங்களையும்
ஆதாரமாகக் கொண்டும், பக்ஷிமிருகாதி மனிதர்கள் அக்கந்த
மூல பிராணிகளைத் தாவிக்கொண்டும், கடைசியாக, இந்தப்
பிரபஞ்சமும் தன் பிராணன் பிரகாச ஓட்டங்களுக்குக் ககன
தலத்திலாடுகின்ற சூரியன் முதலான கிரஹங்களை யாதாரமா
கக்கொண்டும் இருப்பது பிரத்யட்சமல்லவா? இப்படி யிருத்
தல் நியமனமல்லவா? இவ்வளவேன்? நாமிருக்கும் இந்த ப்ரம்
ஹ மந்திரமும், இதிலிருக்கும் பீடங்களும், பிரகாசமான தீப
ஜோதிகளும் தற்செயலா யுண்டாயிற்றோ? நமது அத்யந்த
தோழராகிய ஸ்ரீ அப்பாவுபிள்ளை சுபேதார் பஹதருடைய
நியமனத்தினாலல்லவா உண்டாயிற்று.

நண்பர்களே! நாடு நகரங்களில் காணும் மாடமாளிகை
கூடகோபுரங்களையும், வீடுவாசல்களையும், தோட்டம் சிங்கார
நந்தவனங்களையும் காணும்போது, அவைகளை நியமித்தவர்க
ளுடைய பெருமை பிரபலமாக்குகிறதைப்போலவே, பிர
பஞ்சத்திலிருக்கும் பர்வத பிரதேசங்களையும், வனங்களையும்,
காடுகளையும், அவைகளில் இயற்கையாக அமைக்கப்பெற்றிரு
க்கும் பெருமைகளையும் காணுந்தோறும், அவைகளை அவ்
விதமாக நியமித்த நியந்தாவின் பெருமையைப் பிரபலப்படுத்
துகிறதே. நாம் வசந்தகாலத்தில், வனங்களும் வயல்களும்
காடுகளும் சூழப்பெற்றிருக்கும் பர்வத பிரதேசங்களுக்குப்
போய் அவைகளைச் சுற்றிப் பார்ப்போமாகில், அங்கு தோன்
றும் பிரம்மாண்டமும் பயங்கரமுமான பர்வதங்களும், அவ
ற்றின் மேலிருக்கும் பிரம்மாண்ட குன்றுகளும், சஞ்சலமும்
சலனமு மற்று, சர்வேசுரரைக் காண்பதற்கு விண்ணுலகை
நோக்கி (மௌன யோகிகளைப்போல் அசைவற்று) நிரந்தர
மாக நிற்க, அந்த மலைகளாகிய மௌன யோகிகளின் சலன
மும் சஞ்சலமு மற்ற தபசை, சர்வேசுரரானவர் கண்டு
கொண்டாடி, விண்ணுலகத்திலிருந்து தேவாமிர்தத்தை வாரி
வாரிக் கொடுப்பதைப் போல், அப் பர்வதங்களின் சிகரங்
களில் பெய்த விண்ணுலகின் பனித்துளிகள் உறைந்து,
வெய்யோனைப்போல் வெளுத்துப் பெரும்பனிக்கட்டிகளாகி,
பிரபாகரனுடைய பிரகாசம் அவற்றின்மேல்பட, பற்பல

வித நவரத்தினங்களினால் செய்யப்பட்ட பொன்மணி கிரீடங்களைப்போல் அவைகளுக்குச் சடகோபுரங்கள் வைத்திருப்பனபோல் பிரதிபிம்பிக்கின்றன. அந்த உன்னதமான பர்வத தேகங்களை அலங்கரிக்க விநோதமான தேக்கு, தேவதாரம், தெங்கு, மா, பலா, கதலி, கமுகு, கொன்றை, கொய்யா, புன்னை, பாதரி, பன்னீர், பாரிஜாதம், சந்தனம், அகில், மகிழ், வன்னி, அசோகம், அத்தி, அரசு, ஆலம், சம்பகம், மதனகாம முதலான விருக்ஷஜாதிகள் கொம்புங் கிளைகளுமாய்ப் பருத்து, நெரித்து, படர்ந்து, அடர்ந்து அவற்றின் அழகிய இலைகள் தென்றலால் நடிக்கவும், அவற்றின் புஷ்பங்கள் விதம் விதமான வர்ணங்களோடும், வாசனைகளோடும் விகஸித்தும், அவற்றின் விதம் விதமான காய்கனிகள் வான்வெள்ளிகளைப் போல் பிரகாசித்தும், அவைகள் பானுவின் உஷ்ணத்தினால் பழுத்து வெடித்து அதன் தேனை வண்டுகளுண்டு, ரீம் ரீம் என்று மந்தகீதம் பாடியாடவும், அவ்விருக்ஷங்கள் தங்களைப் படைத்து ஆதரிக்கும் அகிலவினோதனுடைய ஆயாசத்தைத் தீர்ப்பதைப்போலவும், அவ்வள்ளல் விண்ணுலகத்திலிருக்கிறதாகவும் எண்ணித் தம் குன்றுவளம் பொருந்திய அழகிய குளிர்ந்த இலைகள், பூக்கள், கனிகளோடுகூடி வெண்சாமரம் வீச, விண்ணுலகைநோக்கி வளர்ந்துகொண்டிருப்பதுபோலுமிருக்கின்றன.

இப்படி வளர்ச்சியையும், வன்மையையுமுடைய விருக்ஷங்களான நாயகர்களுக்கு உதவிசெய்யவந்த நாயகிகளைப் போல; மல்லிகை, முல்லை, ஜாஜி, சம்பங்கி முதலான கொடிசெடிகள் அவ்விருக்ஷங்களுக்கடியில் முளைத்து வளர்ந்து, அவ்விருக்ஷங்களின்மீது உத்தம நாயகிமார் தம் உத்தமநாயகரை எப்போதும் தழுவிச் சேர்வதுபோலவும், அந்த விருக்ஷங்களின்மீது ஐம்பு சரங்களைப்போலவும், மரகத மாணிக்க மலர் மாலைகளைப் போலவும் படர்ந்து அவ்விருக்ஷங்களை அலங்கரித்தும், தமது ஒப்பற்ற புஷ்பங்கள் குப்பென புஷ்பிக்க, தம் நாயகராகிய அவ்விருக்ஷங்களையும், அவ்விருக்ஷங்களுக் கிருப்பிடமான பர்வதங்களையும், அப்பர்வதங்களுக் காதாரமான பரமேசுவரரையும் பரிமளிக்கச் செய்கின்றன. அப்பர்வதங்களையடுத்த பள்ளத்தாக்குகளில் புஞ்சை நஞ்சை பயிர்கள் வளர்ந்து, அவற்றின் தானிய இளங்கதிர்கள் பொன்மணிகளைப்போல் பிரகாசித்து, இப்பொன்போன்ற மணிகளையுண்

டாக்கும் பயிர்களைப்படைத்த ஜகதீசுவரரின் பொற்கரங்களு க்கு முத்தமிட மேல்நோக்கிப் போவதைப்போல் ஆடுகின் றன.

அதன்முதிர்ந்த கதிர்களோவெனில், பராபர வஸ்துவின் அபார பெருமையை யுணர்ந்த பெரியோர், அப்பரமேஸ் வரருடைய பாதங்களின் மீதே தன்சிரம் சாய்க்கும் வண்ண மாக அப்பயிர்களின் முதிர்ந்த தானிய பொன்மணிகள் குச்சு குச்சுகளாகித் தலைவணங்கித் தம்மைப் படைத்த ஜகதீசுவர னுடைய அடிகளை நாடிக்கொண்டு சாய்வதைப்போல் பிர காசிக்கின்றன. அப்பர்வத பிரதேசங்களெங்கும் பற்பலவித புஷ்பச்செடிகளாலும், அவற்றின் ஆபரணங்களாக அப்புஷ் பங்களின்மீது பெய்த முத்துகளைப்போன்ற பனித்துளிக ளாலும், பொன் செடிகளாலும், பச்சைப் பசேரெனத் தோன்றும் பசும் புற்களாலும் நிறைந்து, அப்பர்வத பிரதே சங்களிடம் வரப்பட்டவர்களுக்குப் பட்டு மகம்மல் ஜமக்காள மிட்டழைப்பதுபோல நின்று நிலக்காற்றால் நடிக்கின்றன. பர்வதங்களின் பல சிகரங்களில் பரமேசுவரருடைய காரு ண்ணியத்தைக் காட்டுவதுபோல அநேக ஊற்றுக் கண்களும் ஜல சுரங்கங்களும் உற்பத்தியாகி, அவற்றிலிருந்து சுத்தஜலம் பீறிட்டெழுந்து, ஜகதீசுவரனை நம்பினோருக்கு அவனருள் இப்படித்தான் எதேஷ்டமாக வருமென்று உத்கோஷிப் பதைப்போல அடுத்த பள்ளத் தாக்குகளில் குபீர் குபீரெ ன்று வெள்ளி ரசம்போல் விழுந்து, பேரருவிகளாகவும் சிற் றருவிகளாகவும் பாய்ந்து, பல கற்களிலும் செடிகளிலும் தாக்கி, சர்வேசுவரரின் சக்தியைப் பற்றி சலசலவென்று பாடுகின்றன. அப்படிப் பாயும் அருவிகளின் அழகிய கரை யோரங்களிலும், அதனுதகத்தினு லுண்டாகிய வாவி கூப தடாகங்களிலும், கரை தீரங்களிலும்; ஆடு, மாடு, பசு, புலி, யானை, நாய், நரி, மான், மந்தி முதலான மிருகங்கள் அங்கு எதேஷ்டமாக விருக்கும் அநேக உணவுகளைக் கௌவியும் கௌவியும் தின்று தேக்கெறிந்து, மனோபீஷ்டத்தின்படி திரிந்து விளையாடி, விண்ணுலகிற் கொப்பான இப்பர்வத வனங்களை மானிடர் வந்து மிதமிஞ்சிக் கெடுக்காவண்ணம் இயற்கைக் காவலாளிகளைப்போலக் காக்கின்றன.

அருகில்நிற்கும் விருக்ஷங்களிலும், செடிகொடிகளிலும்; பச்சை, நாகம், சாரை, விரியன் முதலான அழகிய பாம்பினங்

கள் மணிமாலைகளைப்போல அம்மரங்களில் தொங்கி, அவ்வனங்களை அன்னியர் புகுந்து கெடுக்காதவண்ணம் வேலிகளைப்போலிருந்து காப்பதாக ஊஞ்சலாடிக்கொண்டிருக்கின்றன. அடியிலிருக்கும் அழகிய பிரன்ஸ் புல்லுகளை மனிதர் கெடுக்காவண்ணம் அழகிய அட்டைகள் நீள நீண்டு எச்சரிக்கை யிடுகின்றன. அங்கு அருணோதய காலத்தில் ஆநந்த பரவசமாகி, அப்பனிடத்தில் அன்பையும் நன்றியறிதலையும் காட்டி, அவர் மஹிமையைத் தாமறிந்தாற்போலும், அவரது சிருஷ்டி செய்த கஷ்டமாகிய ஆயாசத்தைத் தீர்ப்பதுபோலும்; கோகிலம், கிளி, நாகணவாய், சக்கிரவாகம், செம்போத்து, வானம்பாடி முதலான பக்ஷிகள் தமக்குத் தெரிந்த பாஷைகளில் இனிய கீதங்களைப்பாடியும் ஆனந்தமுண்டாக்கியும்; அவற்றில் சில பக்ஷிகள் குதித்துக் கிளைகளில் விளையாடியும், (உத்தம கன்னிகைகள் கொம்மியடித் தாடுவதுபோல) விருக்ஷங்களிலிருக்கும் கனிகளைத் தாவி தாவி உண்டு உல்லாசமாக ஆடுகின்றன. அப்படி விருக்ஷங்களின்மேல் பாடும் பக்ஷிகளின் கீதங்களுக்கேற்க அடியில் மயில், அன்னம், புறா முதலான பக்ஷிகள் தம் பலவித வருண அலங்காரமான இறக்கைகளை விரித்து (கற்புடைய மாதர் தம் கணவர்மெச்ச நடித்து நடப்பதுபோல) தம் சிருஷ்டிகர்த்தாவாகிய கடவுளின் ஆநந்த அழகைக் கொண்டாடி நடிக்கின்றன. மீளவும் இப்பர்வத பிரதேசங்களை நாடிவரும் தபோநிதிகள், எதீந்திரியர்கள், ஜிதேந்திரியர்களாகிய மஹான்கள் சுகமாகத்தங்கியிருப்பதற்குஇயற்கையானகுகைகளும், பலவித புஷ்பக்கொடிகளாலாகிய சிங்கார லதகிருஹங்களும், அங்குவந்து தங்கப்பட்டவர்க்குப் பலவித கனிகளும் கிழங்குகளும், காமதேனுவைப்போன்ற காட்டுப் பசுக்கள் தமது தித்திப்பான பாலில் பாதி பாகத்தைத் தம்மோடு குதித்துக் குதித்துத் துள்ளி விளையாடும் தம் கண்மணிகளான கன்றுகள் குடிக்கக் கொடுத்ததுபோக, மீதியைக் குடிப்பதற் கியாருமில்லையே என்று ஏங்கி, மஹாத்துமாக்களான வனசஞ்சாரிகளுக்காவது உபயோகமாகும்படி பர்வத குகைகளுக்கும், லதகிருகங்களுக்கும் அருகில் போய், அங்கு கிடக்கும் பாறைக்கற்களின்மீது படுத்துத் தம் மடிகளை அழுத்த, அமிர்தத்துக்கொப்பான அவற்றின் பால் தானாக வடிந்து வெண்ணூறுகளாகப் பெருகிப் பாய்ந்தோடிய பிறகு, பிரபாகரனுடைய உஷ்ணத்தினால் காய்ந்து வெடித்து ஸ்படிக துண்டுகளைப்போலவும், பத்தாசு கட்டிகளைப்போலவும் பிர

காசிக்கும் பாற்கட்டிகளையும்; குளிர் சீதளமுதலானதுகளால் வருந்தாதபடி ஏலம், இஞ்சி, சுக்கு, மிளகு, கிராம்பு முதலான மலைதரும் பொருட்களையும், புலித்தோல் மரவுரி முதலான சர்மங்களையும் மந்திகள் கொண்டுவந்து சேர்த்து வைக்கின்றன. ஏகாந்தவாசிகளுக்கு "ஏகமேவாத்விதீயம், பிரம்மகிருபாஹிகேவலம்" என்ற சுருதிகளை அப்பர்வத ரிஷிகள் பாடுவதைக் கிளிகள் பழக்கத்தால் பாடஞ்செய்து அங்கு பாடுகின்றன. மற்ற சில்வண்டுகளனைத்தும் "ஓம் தத்சத்" என்று ஒரே ராகமாகப்பாடி ஆநந்த மூட்டுகின்றன.

இப்படிப்பட்டவிடத்தில் பிரபஞ்ச சம்பந்தமான பாப தாபங்கள் பிரவேசிக்க வழியில்லை. இவ்விடத்தில் உலக ஆசா பாசங்கள் வந்து அணுகுவதற்கு அதிகாரமில்லை. உலக தாபத்திரியங்களால் வருந்தும் மானுஷிக ஹிருதயங்களைக் கிருபாநிதியாகிய கடவுள் தம் கருணைக் கரங்களால் தடவிக் கொடுத்து அழைப்பதுபோல் குளிர்ந்த காற்று தேகத்தின் மீது வீசி சாந்தியை அடையச் செய்கின்றது. மேலும், பர்வத பிரதேசங்களில் அடிக்கடி மழைபெய்வது சஹஜமாகையால், அவ்விடத்துக்குப் போகும் பக்திமான்களுக்கு அப்பரமேஸ்வரனுடைய இருப்பைக் காட்டும்படி, மேக கர்ச்சனைகள் கிடு, கிடு, தாம், தாம், திம், திம் என்று அடிக்கடி கர்ஜித்து நான் எங்கும் இருக்கிறேன் என்று அடிக்கடி நினைப்பூட்ட, அவரது மஹிமா சக்தியை மின்னற்கொடிகள் மோஹன சுந்தரிகளைப் போல ஜ்வலித்து நடித்துக்காட்ட, இத்தியாதிகளைக் கண்டும் கேட்டும் அறிந்த பக்திமான்களுக்குக் கடவுள் கருணாரசம் பொழிவதைப்போல் அடிக்கடி பாட்டம் பாட்டமாக மழை பெய்து மனதைச் சாந்தப்படுத்தும். இம்மட்டோ! அந்தப் பர்வத பிரதேசங்களிற் கண்ணுறும் பற்பல பதார்த்தங்களும் பரமேசுவரருடைய மஹிமையைப் பிரதிஷ்டையாக்கி, அவ் வள்ளலைச் சிந்திக்கச் செய்கின்றன. ஆம், அவைகள் நமது பிரயத்தினமில்லாமலும், நம்மையறியாமலும் மனதை பகவத்தியாநத்தில் மூழ்கிச் சதாநந்த யோக சமாதியையடையச் செய்கின்றவல்லவா? இம்மட்டோ! பயங்கரமான அலைகளையுடைய சமுத்திர கரையோரங்களிலும், பனிக்கட்டிகளால் நிறைவடதுருவதீவுகளிலும், பின்னும் மானவஜாதியார் வாசம் செய்யாத தீவுகளிலும் ஏகாந்தமாகப் போய் அவைகளைச் சுற்றிப் பார்த்தால் இப்படிப் பற்பலவித அற்புதமானவைகள்

எங்கிருந்து வந்தன? எப்போது வந்தன? எப்படி வந்தன? இவைகள் யாவும் ஒன்றுக்கொன்று வித்தியாசப்பட் டிருக்க வேண்டியதென்னே? என்றும் சற்று யோசித்துப் பார்க்கையில், இப்படிப்பட்ட விதம்விதமான நியமனங்களுக்கு யாதோ ஒரு நியந்தா இருக்கவேண்டுமென்றும், ஒரு நியந்தாவில்லாமல் இத்தகைய அற்புதமான பொருள்க ளுண்டாவதற்கு விதியில்லையென்றும் இயற்கையறிவு போதிக்குமல்லவா? மேலும், இவ்வுலகில் மானவஜாதியாருடைய ஸ்தூல தேகத்தைச் சார்ந்த கண், காது, மூக்கு, வாய், தேகத்தினுறிந்து ஆநந்த மடையத்தக்க காக்ஷிப் பொருள்கள், கேள்விப் பொருள்கள், வாசனை தரும்பொருள்கள், உண்ணும் பொருள்கள, ஸ்பரிசகாற்று ஆகிய பஞ்சேந்திரியங்களுக்கேற்ற இனமானவை பிரபஞ்ச வெளியிற் படைக்கப் பெற்றிருத்தல் பிரதியக்ஷம். ஆனால், நம்மவருக்குள் இருக்கும் சத்தியம், சாந்தம், தருமம், நன்றியறிவு, பரோபகாரம், நீதி, பரிசுத்தம், பக்தி முதலான எண்ணங்களுக்கு இனமானவை பிரபஞ்ச வெளிப்பொருளில் காணுமையால், அவைகட்கு இனமான குணங்களுடைய ஒருபொருள் வேண்டுமே! அவை எங்கிருந்து எவரால் எப்படி ஜனித்தன? இம்மட்டோ?

இதோ பாருங்கள்! என் கையில் லார்டு பேகன் நூலாசிரியர் எழுதிய ஒரு அழகிய சிறுபுத்தக மிருக்கிறது. இந்தக் கிரந்தத்தில் எவ்வளவோ அருமையான சங்கதிக ளிருக்கின்றன. அவற்றை வாசிக்குந்தோறும் நம்மை சந்தோஷ சாகரத்தில் மூழ்கச்செய்கின்றன. இந்தக்கிரந்தம் நியமனமல்லவா? இந்தக்கிரந்தம் லார்டு பேகன் நூலாசிரியரால் கருதியெழுதிப் பதிப்பித்துப் பிரபல மாக்காமல் தற்செயலாக வந்ததோ? நியமனமில்லாமல் தற்செயலாக வந்ததாகில், எப்போது மிருக்கப்பட்ட மண்ணிலிருக்கும் ஈயமானது தானுக வந்து நெருப்பில்விழுந்து உருகி இங்கிலீஷ் எழுத்துக்களாகி யிருக்கவேண்டும். அவ்வெழுத்துக்களும் தானுகவெழுந்து, இயற்கையாக அமைந்த அழகிய அச்சுக்கூடத்துக்கு வந்து, "லார்ட்டு பேகன்" நூலாசிரியருடைய கருத்துக்களைப்போலத் தாமே கோர்த்துக்கொண்டு மிருக்கவேண்டும். அப்படித் தன்னிச்சையாகக் கோர்த்துக்கொண்ட எழுத்துக்கள் இயற்கையாக வந்துகிடக்கும் அற்புதமான அச்சியந்திரத்தின்மேலேறியுட்கார்ந்துகொண் டிருக்கவேண்டும். அப்போது தற்செய

லாலாகிய "மையானது" தற்செயலாக வெழுந்துபோய் அவ் வெழுத்துக்களுக்குத் தடவியிருக்கவேண்டும். பிறகு, பருத்தி முதலான செடிகளிலிருக்கும் வஸ்துக்கள் தற்செயலாகக் கிளம்பிப்போய் ஜலத்தில் விழுந்து மக்கி, தற்செயலாக அழுகிய் கடிதங்களாகி, அக்கடிதங்கள் அந்த அச்சுக்கூடங்களுக்குத் தானுகப்போய், அச்சியந்திரத்தின்மீதிலேறி யவ்விடம் தற்செயலாக அடுக்கிக்கொண்டும், மைதீட்டிக்கொண்டு மிருக்கிற எழுத்துக்களின்மேல் விழுந்து தற்செயலாகப் பதித்துக் கொள்ளவேண்டும். அப்படிப் பதிப்பித்துக்கொண்ட கடிதங்கள், புத்தகம் கட்டப்பட்ட விடத்துக்குத் தற்செயலாகப் போய்த் தானுகத் தைத்துக்கொண்டும், அட்டைகளை மாட்டிக் கொண்டும், அங்கு தற்செயலாக வந்துகிடக்கும் வருணமான தோற்போர்வையைப் போர்த்துக்கொண்டும், தற்செயலாய்ப் பொன்மயமான எழுத்துக்களால் பேரைத் தீட்டிக்கொண்டும் இந்தப்புத்தகரூபமாகியிருக்கவேண்டும். பிறகு தற்செயலாகத் தபாலாபீசுக்குப் போய், தபால்முத்திரைகளை யொட்டிக்கொண்டும், பிறகு தற்செயலாக வண்டிகளிலும், வாகனங்களிலும் ஏறிக் கப்பலில்போய் விழுந்தும்,கடல்களைத் தாண்டியும், மறுபடியும் தபாலாபீசுக்குப் போய், அவ்விடம் தற்செயலாக விருக்கும் மனிதனிடம் சேர்ந்தும், அவனைத் தூக்கிக்கொள்ளும்படி செய்தும், என்னிடம் வந்து சேர்ந்திருக்கவேண்டும்.இப்படி வந்தால்தான் தற்செயல், அல்லதுசுபாவமென்று சொல்லப்படும். இதை நீங்கள் நம்புவீர்களா? அல்லது இந்தக் கிரந்தத்தை லார்டு பேகன் நூலாசிரியர் * கருதி யெழுதியும், (Faust) பாஸ்டு என்றவரால் செய்யப்பட்ட அச்சியந்திரத்தில் அநேகருடைய உதவியால் கோர்க்கப்பட்டும், பதிக்கப்பட்டும், வேறு சிலரால் கட்டப்பட்டும், நமது வேண்டுகோளின்படி நமக்கு அனுப்பியிருக்கிறார்களென்று சொல்வதை நம்புவீர்களா?

இந்தப்பிரபஞ்சமும், இதிலிருக்கப்பட்ட சகலமும் தற்செயலாக வந்ததெனில், இந்தப் ப்ரஹ்மமண்டபமும், ஸ்ரீரங்கம், மதுரை,காஞ்சி, திருப்பதி முதலான விடங்களிலிருக்கும் பிரம்மாண்டமான கட்டிடங்களும், கோயில்களும், கோபுரங்

* Without a mind how my sermons and books could come. *** Do you think that there is not a mind in man to make a Steam Engine, &c., &c.—*Parker.*

களும், குளங்களும், கோட்டைகளும், கொத்தளங்களும், லால்பாக், பீபில்ஸ்பார்க்கு முதலான உத்தியானவனங்களும், கண்காட்சிச்சாலைகளும் மானிட நியமனமின்றித்தற்செயலாக வந்திருக்கவேண்டும். மேலும், புகைக்கப்பல்களும், புகைவண்டிகளும், புகைக்கூண்டுகளும், இருப்புப்பாதைகளும், இயந்திரக் கலப்பைகளும், அச்சியந்திரங்களும், பருத்தி ஆலைகளும், "டார்பிடோ" வென்ற வெடிமீன்களும், துப்பாக்கிகளும், பீரங்கிகளும், மற்றுங் கத்திமுதலான கருவிகளும் நியமனமின்றித் தற்செயலாகத்தான் வந்திருக்கவேண்டும். இம்மட்டோ? அகராதிகள், நிகண்டுகள், தருக்கநூல்கள், இலக்கணங்கள், இலக்கியமாகிய இராமாயணம், பாரதம், பாகவதம், பைபில், கொரான் முதலான கிரந்தங்களும் தற்செயலாகத்தான் வந்திருக்கவேண்டும். கடைசியாக, எனது கிரந்தங்களும், பிரஸங்கங்களும், உபந்நியாஸங்களும், இந்த ஆஸ்திகமதசித்தாந்த கிரந்தமும் தற்செயலாகத்தான் வந்திருக்கவேண்டும். இந்த நியாயத்தை யாராவது அங்கீகரிப்பீர்களோ? இவைகள் யாவும் மானிட நியமனமல்லவா? இந்நியமனங்களினால் நியந்தாக்களின் இருப்பை யியற்கைஞானம் அறிவிக்கவில்லையா? இயந்திரங்களைப் பாராத ஒருவனிடம் காலத்தைக்காட்டும் ஒரு கடியாரத்தைக்கொடுத்து இந்த இயந்திரம் தற்செயலாலாகியதென்று சொன்னால் அவன் நம்புவானோ? ஒருக்காலும் நம்பமாட்டான். ஏனெனில், அந்தக் கடியாரத்தில் அற்புதமான வில்லுகளும், சில்லுகளும், முள்ளுகளும் இருப்பதன்றியில், அவை ஒன்றோடொன்று பொருந்தும்படி வெவ்வேறு விதமான உறுப்புக்களும் இருப்பதால், அவ்வவ்வுறுப்புக்களையவ்வவ்விடத்திற்கும் காலத்திற்கும் பொருந்தும்படி யோசித்துச்செய்த புத்தியொன்றிருக்கவேண்டுமென்று இயற்கையறிவு போதிக்குமல்லவா? மேலும், பற்பலவிதமான சக்கரங்களும், வில்லுகளும், சில்லுகளும் தற்செயலாக உண்டாகி யிருந்ததாகச் சொன்னாலும், அவற்றை யெல்லாந் திரட்டி அவ்வவ்விடங்களுக்கும், காலங்களுக்கும் தக்கபடி யிணைத்து நடக்கச்செய்வதற்குக் கையாகிய ஒரு நியந்தா வேண்டுமல்லவா? நியந்தாவில்லாமல் நியமன மெப்படி யுண்டாகும்? இந்தப் பூலோகத்தின் அடி, நடு, முடியிலிருக்கும் சகலமும் ஒரு நியந்தாவினால் நியமிக்கப்பட்டிருத்தல் பலவிதத்திலும் பிரத்யக்ஷமாகிறதே. அந்த நியந்தாவாகிய சக்தி அகக்கண் குருடருக்கு மறைவிலிருந்து மகிமையான நியமனங்களைச்செய்கின்றது. நாம் ஒரு

பெரியகடிகாரத்தின் வெளிப்பாகத்தில் பார்க்கும்போது, மணி ணியையும், மினிட்டையும் காட்டும்முள்ளுகளின் இருப்புமாத்திரம் விளங்கும். பிறகு, ஒருவிதமான "டிக், டிக்," என்னும் சப்தம் கேட்கின்றது. ஆனால், வெளியில் தோன்றும் மேல்தகட்டை (Dial Plate) நீக்கி உள்ளேயிருக்கும் அற்புதமான சக்கிரங்களையும், வில்லுகளையும் பார்த்தால், அவைகளின் அமைப்பின் பெருமையும், நியமிப்பின் அருமையான அறிவும் பிரத்யட்சமாகிறது. மேலும், அந்தக் கடிகாரத்திற்கு ஒரு நியமனம், "உண்டு, உண்டு" என்று சொல்லும் பாஷையாகப் பெண்டுலம் ஆடியுங் கோஷ்டிக்கின்றது. உதாரணமாகவே மானவஜாதியின் கையிலாடும் நாடிகளைத் தொட்டுப் பார்த்தாலும், ஒரு நியந்தாவின் நியமனம் உண்டு உண்டு என்றே கோஷ்டிக்கின்றன. அந்நாடிகளிருக்கப்பட்ட விடத்தை யறுத்துப்பார்த்தால்; அப்போது மாத்திரம் அவற்றின் நியமனம் அற்புதமாகத்தோன்றும். கடிகாரத்தின் அருமை பெருமைகளை மேற்றகடு மூடிக்கொண்டிருப்பதைப்போலவும், நாடிகளின் அருமை பெருமைகளை நரம்பு, தசை, தோல் மூடிக்கொண்டிருப்பதைப்போலவும், சில மனிதர்களுடைய அகக்கண்ணை, அஞ்ஞானமாகிய போர்வை மூடிக்கொண்டிருக்கிறது. அப்போர்வையை நீக்கிப் பார்த்தால், நியமனத்தின் அருமை பெருமையும், அந்த நியமனத்துக்குக் காரணமாகிய நியந்தாவின் அருமை பெருமையும் பிரத்தியட்சமாகும். இந்த நியந்தாவைத்தான் கடவுளென்றும், கர்த்தாவென்றும் எத்தேசத்தாரும் எக்காலத்தாரும் கொண்டாடி வருகிறார்கள். கனவான்களே கேளுங்கள்!

முன் சொன்ன இம்மூன்றுவித திருஷ்டாந்தங்களே, அதாவது கடவுளின் இருப்பைப்பற்றி ஆத்மப் பிரதியத்தால் அல்லது ஸகஜஞானத்தினா லறியும் திருஷ்டாந்தமும், அண்டத்திலிருக்கும் அபூரண நியமனங்களைக் காட்டும் பிரபஞ்ச ஞான திருஷ்டாந்தமும், பிரபஞ்சத்தின் அழகான அமைப்பும்; வஸ்து, ஜந்துக்கூட்டங்களின் அமைப்பும, அவற்றின் பொருத்தம் முதலானவற்றைக் காட்டும் நியமனத்தின் திருஷ்டாந்தமும் போதுமான சாக்ஷியமென்று நமது தேசத்து மஹாரிஷிகளும், புறதேசத்துத் தத்துவசிகாமணிகளும் கோஷ்டித்திருக்கின்றனர்.

இம்மூன்றுவித நியாயங்களினால் அந்த அநந்த பரிபூரண இந்திரியமையாத நியந்தாவின் இருப்பு, மானவஜாதியா

ருடைய உள்ளத்தில் பதிந்திருப்பது பல்விதத்திலும் சுவதசித்த ஞானத்தினால் பிரத்தியட்சமாகிறது. 'அப்படியிருக்க, தருக்கநூலாதாரத்தை யனுசரித்துத் தருக்கமாடி மண்டையை யுடைத்துக்கொள்வதில் யாது பிரயோஜனம்? கடைசியாக, தருக்க சாஸ்திர நியாயந்தானென்ன? அதுவும் சுவதசித்த ஞானத்தை யுண்டாக்குவதுதானே. அந்த சுவதசித்த ஞானமும் மனிதனிடத்திலேயே யிருக்கிறது. ஆகவே, தருக்கமாடுவதற்கும், தருக்க நூல்களைச் செய்வதற்கும் தன்னை யாதாரமாகக்கொண்டுதானே தருக்கிக்கவும், தருக்கமெழுதவும் வேண்டும். அப்படிச் செய்வதனாலும் தனது இருப்பின் சத்தியம் முதலில் வெளியாகிறது. எப்போது தான் இருக்கிற சத்தியம் வெளியாகிறதோ, அப்போது தனது இருப்பின் சத்தியத்திற்கும், தன்னைத் தருக்கமாடும்படியேவும் எண்ணங்களுக்கும், அவ்வெண்ணங்கள் கிரியைகளாக வெளியாவதற்கும், அப்படி வெளியாக்கும் வஸ்துவுக்கும் தலைமையான வஸ்து ஒன்று இருக்கவேண்டுமென்று ஸஹஜஞானம் அறிவிக்கிறதல்லவா? இதனாலும் கடவுளின் இருப்பு ஸ்பஷ்டமாகிறது. ஆகையால், அபூரணமும் பரதந்திரமுமான மானவ ஜாதியார்களால் கண்டும் கேட்டும் செய்யப்பட்ட ககோள நூல்(Astronomy), பூகோளநூல்(Geography), ஜடதத்துவ நூல் (Natural Philosophy), ஆத்தும தத்துவநூல், மற்றும் தருக்க இலக்கண இலக்கிய நூல்களெல்லாம், அப்பிரமேயமாகிய அநந்த பூரணவஸ்துவின் பெருமையையே கோஷ்டிக்கின்றன. ஆனால், அந்நூல்கள் அபூரணமும், பரதந்திரமுமுள்ள மனிதர்களால் செய்யப்பட்டவையாகையால், அநந்தபூரண சுவதந்திர சுவாமியின் இருப்பைப்பற்றிச் சரியாய்ச் சொல்ல சக்தியற்றதா யிருக்கின்றன. ஆனதைப்பற்றியே, கடவுளின் இருப்பையும், இலக்கணங்களையும்பற்றிச் சண்டை சச்சரவுகளுண்டாய்ச் சந்தேகத்திற்கிடமாகி வாதாடுகிறார்கள். அப்படி வாதாடுபவர்களைத்தான் நாஸ்திகரென்று உலகத்தில் சொல்லப்பட்டும், வையப்பட்டும் வருகிறது. இவ்வளவேயன்றி, உலகத்தில் நாஸ்திகமென்னும் ஒரு மதமும் கிடையாது. நாஸ்திகரும் கிடையார். ஏனெனில், எவன் நாஸ்திகனென்று வருகிறானோ, அப்போது ஆஸ்திகத்துவமாகிய ஒருவஸ்து இருந்தாலன்றி (அந்தவஸ்துவைப்பற்றி யாக்ஷேபிக்கும்) நாஸ்திகத்வம் ஜனிப்பதற்கிடமில்லை. அதாவது:— ஒருவஸ்து இருக்கிறதாகக் கொண்டால் மாத்திரம், அதைப்

பற்றி யாக்ஷேபித்தல் நியாயமாகுமேயன்றி, இல்லாத வஸ்துவைப்பற்றி நாஸ்திகர் ஆக்ஷேபிப்பதில் யாது பிரயோஜனமுமில்லை யல்லவா? ஆகவே, எப்போது நாஸ்திகன் கடவுளில்லையென்று சொல்ல * வாய்திறக்கிறானோ, அப்போதே (அதாவது, அவன் வாயைத் திறக்கும்போதே) கடவுள் அவனது உள்ளத்திற் குடிகொண்டிருக்கிறார். அப்படிக் குடிகொண்டிருப்பதை சுவதசித்த ஜ்ஞானத்தினாலும் சுவானுபவத்தினாலும் அறிந்து ஆனந்தப்படவேண்டும்.

கனவான்களே!

கடவுளின் இருப்பைப்பற்றிச் சந்தேகிக்கும் நாஸ்திகருக்கு ஒருவாறு விடை சொன்னேன். இனி, நாம் கடவுளை நம்பவேண்டியதைப் பற்றியும், அப்படி நம்பி நடப்பதனால் உண்டாகும் சுகசந்தோஷங்களைப்பற்றியும் சொல்லுகிறேன்.

நாம் கடவுளின் இருப்பை நம்பி பக்திசெய்ய வேண்டியதேன் என்று யாராகிலுங் கேட்டால், அந்த வினாவுக்குப் பலவிதமாக விடை சொல்லக்கூடும். எப்படியெனில்,

முதலாவது:—எக்காலத்தும் எத்தேசத்தும் ஜனங்கள், தமக்கு மேலான ஒரு அநந்த பூரண சுவதந்திர சுவாமி இருக்க வேண்டுமென்றும், அந்தச் சுவாமியே தமக்கு ஆச்சரியமாகவும், ஆபத் பந்துவாகவும் இருக்கிறதென்றும் நம்பி பக்திசெய்தல் சகஜமும்,மானவஜன்ம மெடுக்கும்போது கூடவே பிறந்த பேறாகவு மிருப்பதால், நாம் கடவுளின் இருப்பைப்பற்றி நம்பவேண்டியே யிருக்கிறது.

இரண்டாவது:— மாநவஜாதியார், தமக்குள்ளும் புறமும், மேலுங் கீழும், எங்கும் எப்போதும் பார்க்கும்

* "Atheism dares to say that God does not exist. But as God is **Thought** of our **Thought**; to think that God does not exist and yet more to say that God]does exist.—(**Thought** plus **Activity=Life**) is a two-fold denial of Atheism from the very lips of the Atheist. If God is Love, no man that loves is an atheist (So atheism is a self-destructive Theory; only a *Theory*! *Dulls Advice to S. P. N.*

"Atheists did not hink there was no God; they only thought that they thought so."—*Theodore Parker*.

பொருள்கள் யாவும் விசித்திரமான நியமனத்தைக் காட்டுவதன்றியில் அவையாவும் அபூரணமும், அநித்தியமுமானவையாய் யிருப்பதால், இவற்றிற் சிறந்த சுவதந்திர அநந்த பூரணவஸ்து ஒன்று இருந்து இவற்றைப் படைத்திருக்க வேண்டுமென்று சகஜ ஜ்ஞானம் அறிவிப்பதால், அந்த வஸ்துவாகிய கடவுளின் இருப்பைப்பற்றி நம்பவேண்டியே யிருக்கிறது.

மூன்றுவது:—மாநவ ஜாதியாருடைய இகபர சுகத்துக்கும் கடவுளுடைய பயபக்தி யின்றியமையாததா யிருப்பதால் கடவுளை நம்பவேண்டியே யிருக்கிறது.

நான்காவது:—எக்காலத்திலும், எத்தேசங்களிலு மிருக்கும் பெரும்பான்மையான பண்டிதர்களும், பாமரர்களும், கடவுளின் இருப்பைப்பற்றி நம்பியே யிருக்கிறார்கள்.

ஐந்தாவது :—மாநவ ஜாதியார் கடவுளை நம்புவதனால் இகத்திலும் பரத்திலும் யாதொரு நஷ்டத்தை யடைவதில்லை; ஆகையால், நாம் கடவுளின் இருப்பைப்பற்றி நம்பவேண்டி யிருக்கிறது.

ஆறாவது :—பூலோகத்திலிருந்த பிரபலமான தத்துவசிரோமணிகளும், நமது தேசத்து வேதபுருஷர்களும், மஹாரிஷிகளும், மற்ற வித்துவான்களும் கடவுளின் இருப்பைப் பற்றி நம்பி பக்தியாய் நடந்திருக்கிறபடியால், நாமும் கடவுளின் இருப்பைப்பற்றி நம்பவேண்டியே யிருக்கிறது.

ஏழாவது :—சத்தியம், நீதி, பரிசுத்தம், தருமம், பூததயை, பரோபகார முதலிய குணங்கள் நமக்குள் ஜனிக்கின்றன. அவை ஜனிப்பதற்கு அவைகட்கு இனமான வஸ்து கட்டாயமாக இருக்கவேண்டும். அக்குணங்கள் இல்லாவிடில் உலகம் பாழ்த்துப்போம். ஆகவே, அக்குணச் சிறப்புக்களை நம்மிடம் ஜனிப்பிக்க ஒரு சத்தியஸ்வரூபி அல்லது நீதிஸ்வரூபி, அல்லது தருமஸ்வரூபி இருப்பதைப்பற்றி நாம் நம்பவேண்டி யிருக்கிறது. இவைகளைச் சற்று விவரமாகச் சொல்லுகிறேன் கேளுங்கள் !

முதலாவது :—மாநவ ஜாதியார் பசித்தபோது போஜனம் செய்தல் சகஜ ஜ்ஞானத்தினு லல்லாமல், பசித்தபோது போஜனம் செய்யாவிட்டால் பிராணன் போய்விடுமென்று

புத்தகங்களால் படித்தறிந்த படிப்பாலல்லவே. ஆகலின், கடவுளின் இருப்பைப்பற்றி சகஜ ஜ்ஞானம் அறிவிப்பதால், யாதொரு படிப்புமின்றிக் கடவுளின் இருப்பைப்பற்றி நம்பவேண்டி யிருக்கிறது. மானிடர் நாஸ்திகராகிவிட்டால், அவர்களுடைய ஆத்ம பிரத்யயத்தாலுண்டாகும் சுவதசித்த ஞானம் அடியோடு அழுபட்டுப்போம் அப்போது சகலமான வெளிப் பொருள்களின் இருப்பிலும், மானிடருடைய சொந்த இருப்பிலுஞ் சந்தேகம் ஜெனித்து யாதொரு காரியத்தை யும் செய்ய வகையற்றுப் போகும்படியான தன்மை சம்பவிக்கும். மேலும், மானிடராகிய நாம், இந்த உலகத்தி லனுபவிக்கும் சுகம் மிகவும் அற்பமாகவும், திருப்தியற்றதாகவும், பூரணசந்தோஷ மற்றதாகவும் இருக்கிறபடியால், இவற்றை யெல்லாம் பூரணமாகவடைந்து ஆனந்தப்படும்படியான ஒரு வஸ்து இருந்தாலன்றித் தேறுதலை யடையமாட்டோம். மேலும், நமக்கு உள்ளும் புறமும் பார்க்கும் சகலமும் அநந்தமும் சுதந்திரமும் பூரணமுமான வஸ்துக்களைக் காணுகிறுந்தும், அப்படிப்பட்ட வஸ்து இருக்கவேண்டுமென்னும் ஞானம் நமக்குள் ஜனித்திருக்கிறது. ஆகவே, அப்படிப்பட்ட அனந்த சுவதந்திர பூரணவஸ்துவை யடைய வேண்டிய முயற்சி செய்வது சஹஜமாகவே யிருக்கிறபடியால், கடவுளின் இருப்பைப்பற்றி நம்பவேண்டியே யிருக்கிறது.

இரண்டாவது :— பிரபஞ்சத்தின் வெளியில் எங்கும் அளவிறந்த ஜ்ஞான கௌசலத்தையும், அற்புதமான அமைப்புகளையும், கருணமயமான கருத்துக்களையும், நிர்ணயமான நியமனங்களையும், பிரகாசமான பிரமாணங்களையும், ஆச்சரியமும் அழகும்வாய்ந்த ஆனந்தத்தையும்காண்கிறோம். காணும் காட்சிகள் யாவும் கடவுளின இருப்பைப்பற்றிக் கானம் செய்கின்றன. வசந்தகாலமும்: வெகு விநோதமான புஷ்பங்களாலும், பற்பலவிதமான பட்சிகளாலும், ஜீவகோடிகளுக்கு ஜனிக்கும் குதூஹலங்களாலும் கடவுளின் இருப்பைப் பற்றிப் படனம் செய்கின்றது. கோடைக்காலமும் : கம்பீரமான மேக கர்ஜ்ஜனைகளால் கடவுளின் இருப்பைக் காட்டுகின்றது. மழைக்காலமும் மவுனமான மழைகளால் கடவுளின் இருப்பை மகிழ்ச்சியோடு மகிமைப்படுத்துகின்றது. பனிக்காலமும்: பற்பலவிதமான பனிங்கு பாவனைகளால் கடவுளின்

இருப்பை பஜிக்கின்றது. பூமியின்மேலும், கீழும், திக்குகளிலும் வீசும் காற்றும், கடவுளின் இருப்பைப்பற்றிக் கதறுகின்றது. சண்டமாருதமும்: சுவாமியின் இருப்பைப்பற்றி ஸ்துதி செய்கின்றது. மகத்தான சமுத்திரங்களும், அமலையான அலைகளும் கடவுளின் இருப்பைப்பற்றி அலைகின்றது.

பிறக்கும் பிரதிதினங்களும், பிரபாவம்பொருந்திய பிரபாகரனும் சகலசந்தோஷ பிரகாசத்தோடு கடவுளின் இருப்பைப் பிரஸங்கஞ் செய்கின்றான். இன்றியமையாத இருளும், இன்பவடிவான சந்திரனும் கடவுளின் இருப்பை இங்கிதமாக்குகின்றன. மலரும் மல்லிகைகளும், பரிமளிக்கும் பாதிரி பன்னீர் ரோஜாபுஷ்பங்களும் கடவுளின் இருப்பைப்புகழ்ந்து பேசுகின்றன. பாடும்பக்ஷிகளும், படர்கொடிகளின் சிங்காரமான சிகரங்களும், விருக்ஷங்களின் இளந்தளிர்களும், சலசலவென்று சப்தித்து பாய்ந்தோடும் ஆறுகளும், கடவுளின் இருப்பைப்பற்றிப் பறையடிக்கின்றன. மானிடர்களும் தம் அருமைமக்களுக்கு, இராமன், இலட்சுமணன், நாராயணன், சங்கரன், சாம்பவன் என்று தேவப்பெயர்களையிட்டுக் கடவுளின்இருப்பைச் சதா அழைத்து தியானானுஷ்டானஞ் செய்து வருகிறார்கள். ஜகத்திலும், ஜகத்திலிருக்கும் சகலத்திலும், ககனத்திலும், ககனத்திலிருக்கும் சகலத்திலும்,கடவுளுடைய இருப்புப் பட்டப்பகல்போல ஸ்பஷ்டமாகிறது * சகலத்திலுங் கடவுளும் கடவுளில் சகலமும் இருப்பதுபிரத்தியட்சமாகிறபடியால் நாம் கடவுளின் இருப்பைப்பற்றி நம்பவேண்டியே யிருக்கிறது.

மூன்றாவது:— நேமியிலிருக்கும் பிரதி நரஜீவியின் சுகமான வாழ்க்கைக்கும், சமாதானத்துக்கும்,காப்புக்கும், கடவுளின் இருப்பைப்பற்றிய நம்பிக்கை யின்றியமையாததாயிருக்கிறது. நன்மையைச் செய்பவர்களுக்குச் சாசுவத

---

* "From whom, and through whom, and to whom are all things,
Above all and through all and in us all, &c.
In Him we live and move and have ourbeing;"
"God ! let the torrents, like a voice of nations,
Answer : and let the ice-plains echo, God,
God, sing ye meadow streams with gladsome voice,
Ye pine groves, with your soft and soul-like sound,
Ye signs and wonders of the elements."

மான நன்மையும், தீமையைச் செய்பவர்களுக்குக் குரூர மான நரகதண்டனையும் விதிக்கப்படுமென்ற தெய்வகட்டளை யாகிய பரலோகபயமும், இந்தப் பரலோக ஏகராஜாதிபத்தி யத்தை ஒருவாறு தழுவியே தீமையைச் செய்யப்பட்டவர் களுக்கு இகத்தில் தண்டனை விதிக்கும்படியான பூலோகத்தின் ராஜகட்டளைகளும் இருக்கும்போதே, இந்த உலகத்தில் திகி ல்டையும்படியான திருட்டுகளும், பயப்படும்படியான பொய்ச் சாட்சிகளும, குரூரமானகொலைபாதகங்களும், அபாண்டமான அநியாயங்களும நடந்துவருவது பிரத்யட்சமாக விருக்கின் றன. இனிக் கடவுளேயில்லையென்றும், கடவுளுடைய தண் டனையும் இல்லையென்றுஞ் சாதிக்கும் நாஸ்திகர்கள் விருத்தி யாகி அவர்களுடைய குதர்ககமான கோட்பாடுவிருத்தியாகில், உலகத்தில் நியாயமேது? சத்தியமேது? தருமமேது? யாரைக் கொன்றாலுமென்ன? யார்பொருளையெடுத்துக்கொண்டாலும் பாதகமென்ன? யாருடைய மனைவிமக்களை யார்புணர்ந்து விய பசாரம் செய்தாலும் பாதகமென்ன? புருஷர்கள் தமது மனைவிமார்களையும், மனைவிகள் தம் கொழுநரையும், குழந் தைகளையும கொலைசெய்தாலும் பாதகமென்ன? பெற்றோர், உற்றோர், பெரியோர், சிறியோரென்னும் பேதமேது? பெண் டீர் பிள்ளைகளென்ற பேதமேது? பண்டிதர், பாமரரென்ற பேதமேது? சாதுக்கள், துஷ்டர்கள் என்ற பேதமேது? நன்மை, தீமையென்னும் பேதமேது? நியாயம் அநியாய மென்ற வியவஸ்தையேது? பஞ்சைகளை வஞ்சனைசெய்து இல ஞ்சம்வாங்கினால் பாதகமேது? சகலரும் சுவயலாபத்தையும், சுவதந்திரத்தையும்பற்றிப் போராடுவார்கள். சகலமும் பலத் தவனுடைய காணியாட்சி யாகிவிடும். அந்தப் பலசாலியோ தனக்குப் பிரியமான பொருள்கள் பலஹீனரிட மிருக்கில் அவற்றைப் பலாத்காரஞ்செய்து பிடுங்கிக்கொள்வான்.

ஜகத்தில் சுந்தரமான பெண்கள் வெளியில் வரக் கூடுமோ! வந்தால் புணர்வதற்குப் பலரும் இச்சிக்க, முடிவில் பலத்தவன் கொண்டுபோய்விடுவான். பலமற்ற பேதைகளிட மிருக்கும் பெண், பொன், மண் ஆகிய பொருள்களைப் பல சாலிகள் போர்செய்து பலாத்காரமாக எடுத்துக்கொள்ளுவார் கள். கடைசியாகப் பலசாலிகளே அரசராகி விடுவார்கள். அவன் தெய்வபக்தியும் தெய்வபயமுமற்ற அரசனே அவன், தனது இஷ்டப்படி வெறிக்க மதுபானங்களைக்குடித்து, மாம்

ஸாதிகளை யுண்டு, மனதுக்கினிய மாதரைத்தேடி மிருகம்போலப்புணர்ந்து, அவன் தன் இஷ்டப்பிரகாரம் நடக்காத குடிகளை மிருகவேட்டை யாடுவதைப்போலக் கொன்று ஆனந்தப்படுவான். அவனுடையராஜ்ஜியத்தில் பேதைக்குடிகள் படுங்கஷ்டம் கொஞ்சமாமோ? தெய்வபக்தியில்லாவிட்டால் நியாயமும் இல்லை; நீதியுமில்லை; கண்டதே காட்சி கொண்டதே கோலமாக முடிந்து உலகம் கெட்டுப்போகுமாகையால், கடவுளின் இருப்பை நம்பித் தெய்வபக்தி செய்யவேண்டியது இன்றியமையாததா யிருக்கின்றது.

நான்காவது:—எக்காலத்திலும், எத்தேசத்திலு மிருந்த முக்காலே மூன்றுவிசத்துக்கு மேலான பண்டிதர்களும், காடுவனாந்திர தீவுகளில் காட்டுமிருகங்களைப்போல் வதிந்துவரும் பயங்கரமாய்த் தோன்றும் பாமரர்களுமாகிய எல்லா ஜாதியார்களும், எல்லாவித பாஷையைப் பேசப்பட்டவர்களும், எல்லாவிதமான மதஸ்தர்களும், எல்லாக் கோத்திரத்தார்களும், ஜ்ஞானவழியாகவும், அஜ்ஞான வழியாகவும் பற்பலவித பெயர்களால் கடவுளின் இருப்பை நம்பி பக்தியாயிருந்ததும் இருக்கிறதும் பிரத்தியக்ஷமாக விருக்கிறது. நமது ஹிந்துக்களும், சீனரும், யூதேயரும், கிறிஸ்தவரும், மஹம்மதியரும், பாரசீகரும், ஆப்பிரிக்காவைச்சார்ந்த நிகிரோவியரும், ஸ்காந்தி

1. "Athiest must have some idea of God, therefore he acts aright and feels justice * * * also truth, holy, kindness, love, manner, &c.

2. There is no reason why atheists should do and speak, lovely, rightly, kindly, justly, and holy while they are difficult * * * To think and speak truth, to do right, to feel kind, to love holy, do come by nature? Atheist has no obligation to go on with them.

3. There is no such a thing as duty, no absolute right, while man is his own Cause, Originator, Providence and Director. So he is perfectly free to do exactly what he pleases. He recognizes no higher Law while he is needy and passionate.

4. Negation of God also comes to the negation of the control of our temptation. No rule to avoid Ambition, Adultery, Slavery, Sensuality, &c. Husband can kill the wife and children, &c.—*Theodore Parker*.

நோவியரும், ரோமகரும், கிரேக்கரும், எகிப்தியரும், மற்றும் பூலோகத்திலுள்ள பெரியஜாதியார்களெல்லாம் தெய்வ பக்தி யுள்ளவர்களாகவே யிருக்கின்றனர். அநேக லக்ஷம் பொன்னை யலட்சியமாகச் செலவழித்து ஸ்ரீரங்கம், மதுரை, காஞ்சி, திருப்பதி, மகாபலீஸ்வரம், திருக்குடந்தை, திருவானைக்காவல், திருத்தஞ்சை, திருச்சேறை, திருச்சிதம்பரம், இராமேஸ்வரம், காசி, கயை, அலகபாத்து முதலான விடங்களிலிருக்கும், கோயில்களையும், கோபுரங்களையும், மண்டபங்களையும், தருமசாலைகளையும், தாமரைத் தடாகங்களையும், தெய்வபக்தியினாலல்லவா கட்டிவைத்திருக்கின்றனர். தெய்வபக்தியினாலல்லவா யூதேயரும் மகத்தான மண்டபங்களைக் கட்டியிருக்கிறார்கள். தெய்வபக்தியினாலல்லவா, எகிப்தியரும் அற்புதமான குகைகளையும், கட்டிடக் கோபுரங்களையும், கோயில்களையும் கட்டியிருக்கிறார்கள். தெய்வபக்தியினாலல்லவா சீனரும், பர்மியரும், பொன்மயமான மண்டபங்களையும், கோயில்களையும் சிகரங்களையும் கட்டியிருக்கிறார்கள். தெய்வபக்தியினாலல்லவா, அரபிதேசத்திலிருக்கும் மகத்தான மசூதிகளும், மாளிகைகளும் கட்டியிருக்கிறார்கள். அதென்? பட்டணத்திலுள்ள மன்றோ நீல் முதலான பிரதிமைகளும், கட்டிடங்களும் தெய்வபக்தியினா லல்லவா ஏற்படுத்தப்பட்டன. உரோமதேசத்திலுள்ள சிறப்ப விஞ்ஞானமான கோயில்களும்,கட்டிடங்களும், தெய்வபக்தியினாலல்லவா கட்டப்பட்டன. சிறப சாஸ்திரங்களும், சங்கீத மேளவாத்தியங்களும், நாகரீகமான உடைகளும், உணவுகளும், வாழ்வும் தெய்வபக்தியினா லல்லவா விருத்தியாகின்றன.

---

The following is the size of some of the largest churches in Europe and America. St. Peter's Church at Rome will hold 54,000 persons; Milan Cathedral, 37,000; St. Paul's at Rome, 32,000; St. Paul's at London, 35,600; St. Petronio at Bologna, 24,000; Florence Cathedral, 24,300; Antwerp Cathedral, 24,000; St. Sophia's Constantinople, 23,000; St. John Lateran Rome, 22,900; Notre Dame, at Paris, 21,000; Pisa Cathedral, 13,000; St. Stephen's at Vienna, 12,400; St. Dominic's at Bologna, 12,000; St. Peter's at Bologna, 11,500; Cathedral of Vienna, 11,000; St. Marks, Venice, 7,000; Spurgeon's Tabernacle, London, 7,000; Dr. Talmage's 4,500; Dr. Hall's Church fifth Avenue, New York 2,000.—*Lucknow Witness.*

கனவான்களே கேளுங்கள். கடல் சூழ்ந்த ஞாலத்திற் சிறந்து விளங்கும் கட்டிடங்களில் பெரும்பான்மையும், கடவுளிடத் திருக்கும் பக்தியினாலேயே கட்டப்பட் டிருக்கிறதல்லவா? கடைசியாக, யான் இப்போது உபந்யாஸம் செய்யும் இக்கட்டிடமும் கடவுளிடத்தில் நம்பிக்கையுள்ள பக்தியினா லல்லவா கட்டப்பட் டிருக்கிறது. இம்மட்டோ! இந்த உலகிலிருக்கும் பெரிய நூல்கள் யாவும் கடவுளுடைய இருப்பையும், பக்தியையும்பற்றியே பேசியிருக்கின்றன. பெருமையும், பரிமளமும், பரிசுத்த சமாதானமும் பொருந்திய நமது வேதங்களின் பெருமையென்னே, இவைகளின் இனிய ஸ்வரங்களின் சங்கீதமென்னே, பைபிலின் பிரகாசமும் பெருமையுமென்னே, குரானின் கம்பீரமென்னே, ஜெந்தவின் ஜ்வலிப்பென்னே; இப்பெருநூல்களின் காவியாலங்காரங்களையும் கருத்துக்களையும் யாவராலும் அமைக்க முடியுமோ? விராட் சொரூபத்தைப்பற்றி வேதபுருஷர்களைப் போல் வருணித்தவர் இக்காலத்திலுண்டோ? ஈசுவர இப்பிரபாவத்தை ஏசுகிறிஸ்துவைப்போல் பிரஸ்தாபித்தவர் இக்காலத்திலுண்டோ? மகாதேவ பக்தியை மகம்மது நபியைப்போல் மகிமைப்படுத்துபவர் இக்காலத்திலுண்டோ? ஜகஜ்ஜோதியைப்போல் ஜகத்காரண வஸ்துவை ஜௌராஷ்டிரைப்போல் ஜோதிமயமாக்கிக் காட்டுவோர் இக்காலத்திலுண்டோ? ஜீவாதார வஸ்துவை சங்கராசாரியரைப்போல் சித்தாந்தப்படுத்தி நிரூபிப்பவர் இக்காலத்திலுண்டோ? நாமரூபமற்ற வஸ்துவை இராமானுஜரைப்போல் தியானம் செய்யும் தீரர்கள் இக்காலத்திலுண்டோ? சராசரத்தைப் படைத்த சச்சிதானந்தத்தை சமரசமாக ஸ்தோத்திரம் செய்த இராமமோஹனராயரைப்போன்ற சத்திய சமய ஸ்தாபிகர் இக்காலத்திலுண்டோ? இப்படிச் சகல தேசங்களிலும் சகல காலங்களிலும் இருந்த சகல ஞானவான்களும் தெய்வபக்தியுள்ளவர்களாக விருந்தமையால் கடவுளின் இருப்பை நம்ப வேண்டியே யிருக்கிறது.

ஐந்தாவது:—கடவுளின் இருப்பை நம்பிப் பக்தியோடு பயந்து நடந்தால்தான் இந்தப் பூலோகத்தில் சுகமும் சந்தோஷமும் சமாதானமும் விருத்தியாகும். அப்படிக் கில்லாவிடில், பாவையர்கள் பதிவிரதாதர்மத்தைக் கடந்து புருஷர்களையும் பிள்ளைகளையுங் கொன்று, தமக்கிஷ்டமானவர்களை

யெல்லாம் புணர்ந்து பாழ்த்துப் போவார்கள்; பிள்ளைகளை யும், பத்தாவையும், பந்துக்களையும் பாதுகாப்பது அருமை. புருஷர்களும் தம் பத்தினிமார்களையும், பிள்ளைகளையும், பந் துமித்திரர்களையும், பழுத்து விருத்தாப்பியமான பெற்றோ ரையும் பாதுகாப்பதருமை. புருஷர்கள் வேண்டியபோது பல பெண்களைத் தேடி மிருகங்களைப்போலப் புணர்ந்து அலை வார்கள். பிள்ளைகளும் தம்தம் இஷ்டப்படியுண்டு உறங்கிப் பலமாதரைத் தேடிக் கூடிக் காட்டு மிருகங்களைப்போ லாய் விடுவார்கள்.

ஆகவே, தெய்வபத்தி இல்லற தருமத்திற்கு இன்றி யமையாததா யிருக்கிறது. மேலும், தெய்வபக்தி யிருந்தால் தான் இராஜாக்களும், தமக்கு மேலான ஏகசக்ராதிபதியாகிய தேவனுடைய பயங்கொண்டு தமது குடிகளை மிருகங்களைப் போல வேட்டையாடி விபசரித்துப் பொருள்பறித்துப் பர தேசிகளைப்போ லாக்காமல் பச்சாதாபத்துடன் பாதுகாக்க முயல்வார்கள். தெய்வபக்தியினால்தான் அடிமைகளும், அநி யாயமாகத் தண்டிக்கப்பட்டவர்களும், திக்கற்ற பேதைப் பிணியாளிகளும், திடனையும் தைரியத்தையும் பெறுவார்கள். தெய்வபக்தியே மாநவ ஜாதியாருக்கு சத்ய சாமார்த்தியத் தையும், தைரியத்தையும், துணிவையும், உத்ஸாஹத்தையும் தருகின்றது. சத்தியத்திற்காகவே யல்லவா அன்று ஹரிச் சந்திரன் தனது இராஜ்ஜியத்தையும் நாடு நகரங்களையும் கூட கோபுரங்களையும் விட்டொழித்தும், மனைவி மக்களைத் துற ந்தும், புலையனுருவாகிப் பிணம் புதைக்கும் இடுகாட்டில் பர தவித்துநின்று பிரகாசித்தான். தருமத்தைக் காக்கும்பொரு ட்டே யல்லவா அன்று கன்னன் தனது அருமையான உயிர் யுத்தகளத்தில் தவித்து நிற்கும்போது, பிராமணனுகப் பொய்வேடம் தரித்துவந்த ஸ்ரீ கிருஷ்ணன், அந்தக் கன்ன னுடைய உயிருக்குயிரான புண்ணிய தருமங்களைத் தனக்குத் தத்தஞ்செய்ய வேண்டுமென வேண்ட, அந்தக் கன்னனும் தம் சொந்த சுகத்தைக் கருதாமல் தத்தம் செய்தது சுவாமி பக்திக்கும் சத்தியத்திற்கும் தருமத்திற்கும்பயந்தேயல்லவா? இது விஷயமாக வில்லிபுத்தூரார் பாடியிருக்கும் பாரதக் கவியில் சொல்வதைக் கேளுங்கள்.

"அத்தவெற் பிரண்டு விற்கிடை யெனப்போ
யாதவின் சாய்தல்கண் டருளி

முத்தருக் கெல்லாம் மூலமாய் வேத
முதற்கொழுந் தாகிய முதல்வன்
சித்திரச் சிலக்கை விசயனைச் செருநீ
பொழிகெனத் தேர்மிசை நிருத்தி
மெய்தவப் படிவ வேதிய ஞகி
வெயிலவன் புதல்வனை யடைந்தான்.

தாண்டிய தரங்கக் கருங்கட லுடுத்த
தரணியிற் றளர்ந்தவர் தமக்கு
வேண்டிய தருதி நீயெனக் கேட்டேன்
மேருவி னிடைத்தவம் பூண்டே
னீண்டிய வறுமைப் பெருந்துய ருழந்தே
னியைந்ததொன் றிக்கணத் தளிப்பாய்
தூண்டிய கவனத் துரகதத் தடந்தேர்ச்
சுடர்தரத் தோன்றிய தோன்றல்.

என்றுகொண் டந்த வந்தண னுரைப்ப
விருசெவிக் கமுதெனக் கேட்டு
வென்றிகொள் விசயன் விசயவெங் கணையால்
மெய்தளர்ந் திரதமேல் விழுவே
னன்றென நகைத்துத் தரத்தகு பொருணீ
நவில்கென நான்மறை யவனு
மொன்றிய படிநின் புண்ணிய மனைத்து
முதவுகென் றலுமுள மகிழ்ந்தான்.

ஆவியோ நிலையிற் கலங்கிய தியாக்கை
யகத்ததோ புறத்ததோ வறியேன்
பாவியேன் வேண்டும் பொருளெலா நயக்கும்
பக்குவந் தன்னில்வந் திலையா
லோவிலா தியான்செய் புண்ணிய மனைத்து
முதவினேன் கொள்கநீ யுனக்குப்
பூவில்வா ழயனு நிகரல னென்றாற்
புண்ணிய மிதனினும் பெரிதோ.

என்னமுன் மொழிந்து கரங்குவித் திறைஞ்ச
விறைஞ்சலர்க் கெழிலியே றனையான்
கன்னனை யுவகைக் கருத்தினு னோக்கிக்
கைப்புன லுடன்தரு கென்ன

வன்னவ னிதயத் தம்பின்வா யம்பா
லளித்தலு மங்கையா லேற்றன்
முன்னமோ ரவுணன் செங்கைநீ ரேற்று
மூவுல கமுமுடன் கவர்ந்தோன்.

மல்லலந் தொடைய னிருபனை முனிவன்
மகிழ்ந்துநீ வேண்டிய வரங்கள்
சொல்லுக வுனக்குத் தருதுமென் றுரைப்பச்
சூரன்மா மதலையுஞ் சொல்வா
னல்லல்வெவ் வினையா லின்னமுற் பவமுண்
டாயினு மேழெழு பிறப்பு
மில்லையென் றிரப்போர்க் கில்லையென் றுரையா
விதயநீ யளித்தரு ளென்றான்.

மைத்துன னுரைத்த வாய்மைகேட் டையன்
மனமல ருகந்துகந் தாயனை
கைத்தல மலரான் மார்புறத் தழுவிக்
கண்மலர்க் கருணைநீ ராட்டி
யெத்தனைப் பிறவி யெடுக்கினு மவற்று
ளீகையுஞ் செல்வமு மெய்தி
முத்தியும் பெறுதி முடிவிலென் றுரைத்தான்
மூவரு மொருவனு மூர்த்தி."

என்று பாடியிருக்கிறார். ஆ! என்ன தரும சிந்தை! இது சுவாமி பக்தியினு லுண்டான விரதமல்லவா?

நிற்க, சமணரோடும் சாக்கியரோடும் போராடிய சைவர்களுக்கும், சைவர்களோடு போராடிய இராமாநுஜருக்கும், கூரேசருக்கும், சத்யத்தின் விஷயமாகச் சிலுவையில் அறையப்பட்ட ஏசுகிறிஸ்து நாதருக்கும், மூடரான அரேபியருடைய அஞ்ஞான அர்ச்சையைக் கண்டித்த மகமதுநபிக்கும், இந்துமதத்தில் நாளாவட்டத்தில்வந்து நவீனமாக நுழைந்த அசங்கியங்களை நீக்கிப் பரிசுத்த ஆஸ்திகமதத்தை ஸ்தாபித்த இராமமோஹனராயருக்கும், அநேக இக்கட்டுகளால் கஷ்டப்பட்டு உரோமராஜ்ஜியத்தில் தெய்வபக்தியைப் போதித்த பவுல் என்பவருக்கும், பாப்புகளுடைய அக்கிரமங்களைக் கண்டித்த லூதருக்கும் கடைசியாக உண்மைக்காக உயிரைக்கொடுத்த * சாக்ரடீஸ் என்னும் சிறந்த ஜ்ஞானிக்கும், தைரியத்தையும்,

* If there is no God there is no love, courage and hope. —*Parker.*

துணிவையும், உற்சாகத்தையும் தந்தது தேவபக்தியே யல்லவா? மேலும், உலகத்தி லெங்கெங்கும் வித்தியாபி விருத்தியும், சாஸ்திரவிருத்தியும், தத்துவவிருத்தியும், மற்றும் இகலோகசுகவாழ்க்கைக்கு இன்றியமையாதனவாக விருக்கும் சகலமான சத்ஸ்தாபனங்கள் யாவும் தெய்வபக்தி யுள்ளவர்களா லல்லவா ஸ்தாபிக்கப்பட்டும் விருத்தியாக்கப்பட்டும் வருகின்றன. ஆம், இவைகளெல்லாம் தெய்வபக்தியை விளக்கும்பொருட்டே ஸ்தாபிக்கப்பட்டும் விருத்தியாக்கப்பட்டும் வருகின்றன. ஒருவேளை பூலோகத்தில் பல நாஸ்திகர்களிருந்தால் அவர்கள் நியாயமாக இராஜ்ஜியபரிபாலனம் செய்துவரக் கூடுமோ? கூடவே கூடாது. ஏனெனில், தெய்வபக்தியற்ற சகலரும் விதியின்வரம்பைக் கடந்து இராஜாக்களாகவிருந்து சுகசந்தோஷத்தை யனுபவிக்கப் போர்செய்து, கடைசியில் யார் பலமுடையவனோ அந்த ஜயசீலனுடைய வசத்தில் இராஜ்யபரிபாலனஞ் செய்யும்படி வரில், அவன் தனக்கு மேலான யாதொரு பயமும் பக்தியுமின்றி, வேண்டியபோது உண்டு உறங்கி, கண்டதே காட்சியாகவும் கொண்டதே கோலமாகவும், பெண்டுகளின் போகமே பேரின்பமாகவும், இறப்பே முத்தியாகவும் நினைத்து, தமது இஷ்டப்படியெல்லாம் நடத்த முயல்வான். ஆனால், உலகத்தாரெல்லோரும் அவனிஷ்டப்படி நடக்க ஆட்சேபிக்க அகங்காரங்கொண்டு, நான்பெரியவன், நீ பெரியவனென்று சொல்லி யெப்போதும் சண்டை சச்சரவுகளும், கஷ்டங்களும், கொலைகளும் நடந்துகொண்டே அந்நாஸ்திகருடைய ராஜ்யமுழுதும் சமர்க்களமாகவும், சுடலையாகவு மிருக்கும். மேலும், நாஸ்திகருடைய ராஜ்யத்தில் கல்வியுந் தலைதூக்காது; கைத்தொழில் முயற்சிகளும் கசப்பாகிவிடும். சாஸ்திரங்களும் சுவரூபமற்றுப்போம். தத்துவங்களும் தலைநீட்டா. ஜனங்களுக்குச் சந்தோஷமும் சமாதானமும் சற்றும் இருக்காது. சர்வத்திராளும் சங்கடப்படுவார்கள். இதற்குத் திருஷ்டாந்தமாக ஐரோபாவைச்சார்ந்த நிரோ என்ற அரசனாலும், நமது தேசத்திலிருந்த ஒருவித நாஸ்திகராக எண்ணப்பட்ட புத்தர் முதலான ராச்சியங்களிலும் குடிகளும், அரசர்களும் பட்டகஷ்டம் கொஞ்சமோ? இந்து மதஸ்தர்களாகிய நம்மவர்கள் புத்தருடைய ஆளுகையையும் மதத்தையும் அடியோடு அழித்துப்போடவேண்டுமென்னும் எண்ணத்தினாலல்லவா நமது இந்துதேசத்தின்மீது படையெடுத்து வந்த மஹம்மதியரைத் தடுக்காமல் கட்டுப்பாடு

செய்துகொண்டு, புத்தராகிய ஓர்வித நாஸ்திகரிடமிருந்த ஆளுகையை மஹம்மதியரிடம் போம்படி செய்துவிட்டார்கள். ஆகவே தெய்வபக்தியானது இந்த பூலோகசுகத்துக்கும் இன்றியமையாததா யிருக்கிறது.

இதுநிற்க, இங்கிலாந்திலிருக்கும் பிராட்லாவென்பவர் பிரசங்க சக்திமானுகவிருந்தும், கிறிஸ்து மதத்திலிருந்த சிலகுத்ஸிதக் கொள்கைகளைக் கண்டித்து வந்ததனால், அவருக்குப் பலபேருடைய முயற்சியால் கிடைத்த "பார்லிமெண்டு" என்னும் சபையின் மெம்பர்வேலையிலமர்ந்து, பேசும் சுதந்தரத்தை யிழந்து, பலவித கஷ்டங்களுக்கும் பாத்திரரானது பிரத்தியக்ஷமல்லவா? அவரைச்சார்ந்த அன்னிபிசாண்டு என்ற மாதும் ஷை பிராட்லாவின் கொள்கையை யனுசரித்து வருவதைக் கண்டு, தனது புருஷனுடையவும், பிள்ளைகளினுடையவும் சுகவாழ்க்கையையும் விட்டுப்போய்த் தனியாக விருந்து கஷ்டஜீவனம் செய்துவருவதும் பிரத்தியக்ஷமல்லவா? ஆகவே நாஸ்திகரென்னும் சந்தேகவாதிகளுக்கு இகத்தில் சுகமுமில்லையே! மேலும், அவர்கள் இகத்தில் தெய்வ பயமும், பக்தியுமின்றிச் செய்யும் கெட்ட கிருத்தியங்களுக்காகவும், தெய்வதூஷணத்திற்காகவும், இறந்தபிறகும் தெய்வ தண்டனையுங் கிடைக்குமாகையால், பரத்திலும் சுகமில்லையல்லவா? அதாவது, நாஸ்திகன் இந்த உலகத்தில் பலவித கஷ்டங்களை யனுபவித்து, இறந்தால் (அவன் எண்ணுவதைப் போல்)கடவுளும்,பரலோகதண்டனையுமில்லாவிடில் யாதொரு கெடுதியும் இல்லை. ஆனால் (ஆஸ்திகன் நம்பியிருக்கிறதைப் போல்) கடவுளும், கடவுளின் தண்டனையு மிருந்துவிட்டால் அவன் பரலோக தண்டனையையும் அனுபவித்துக் கஷ்டப்படவும் வேண்டும்.

ஆகவே, நாஸ்திகனுக்கு இகத்திலுங்கஷ்டம். பரத்திலுங் கஷ்டமேயல்லவா? ஆஸ்திகனுக்கோவெனில், அவன் தெய்வ பக்தியோடும், பயத்தோடும் நடக்கும் நன்னடக்கைகளுக்காக இந்த உலகத்திலுஞ் சுகமுண்டு;அவன் இறந்தபிறகு(அந்த ஆஸ்திகன் நம்பியபடி) கடவுளும், பரலோகசுகமு மிருக்கில், அவன் பூமியிலிருக்கும்போது கடவுளுக்குப் பயந்து நடந்த நன்னடக்கைகளுக்காகப் பரலோகத்திலுஞ் சுகமும் சந்தோஷமும் கிடைக்கும். ஆனால்,(நாஸ்திகன் எண்ணுவதைப் போல்) கடவுளும் பரலோகசுகமும் இல்லாவிட்டால், அந்த

ஆஸ்திகனுக்கு யாதொரு தீமையுமில்லை, கஷ்டமுமில்லை, நஷ்டமுமில்லையல்லவா? ஆகவே, ஆஸ்திகனுக்கு இகத்திலாவது சுகமுண்டாகிறது; அவன் இறந்தபிறகு அவன் எண்ணியதைப்போல் கடவுளிருந்துவிட்டால் பரத்திலும் சுகமுண்டாகிறது. ஆகையால், நாம் கடவுளின் இருப்பை நம்பவேண்டியே யிருக்கிறது.

ஆறுவது.—பூலோகத்திலிருந்த புத்திமான்களும், தத்துவசிரோமணிகளும் தெய்வபக்தர்களாகவே யிருந்தார்கள். அதற்கு உதாரணமாக:—

* கடவுளைச் சரியாய்க்காண்பது கஷ்டம் என்றும், பிறருக்கு அவருடைய பிரதாபத்தைச் சரியாய் வருணித்தல் அசாத்தியமென்றும்,லோகராட்டியனனஅந்த பராபரவஸ்து தாம் படைத்த சகலத்திற்கும் இடையில் இராஜாவாகவும், தம்மைச் சுற்றி யிருக்கப்பட்ட சகலத்திற்கும் நியந்தாவாக இருப்பதாகவும் (Plato) "பிளேடோ" என்பவர் சொல்லி யிருக்கிறார்.

† "கடவுள் தனது சிருஷ்டிப் பொருள்களில் மறைந்து அவருடைய இருப்பைப்பற்றி நாஸ்திகர் மறுக்கவும், அப்படி மறுப்பவர்களை இடிக்கிற இடியினால் கொல்லும்படியான பயத்தைக் காட்டித் தனது மிகத் தூய்மையான பூரணத்தன்மையைக் காட்டுகிறார்" என்று (Schiller) சிகிலியர் என்பவர் சொல்லியிருக்கிறார்.

‡ "கடவுளுடைய பெயர் இன்னதென்றும், கடவுளை நம்புவோன் இன்னவனென்றும், கடவுளை நம்பாதவன் இன்

* "To know God aright", says Plato " is difficult; to speak of Him aright to others almost impossible."

* * Around the king of all, are all things; and He is the Cause of all good.—*Plato*.

† " He veils Himself behind His works," says Schiller, " and allows the atheist to deny His being, by that very tolerance, showing His majestic presence more fully then if He had struck him dead with a thunderbolt."—*Schiller*.

‡ " Who shall name Him ?
Who dare say
I believe in Him ?
Who can deny Him,—
Who venture to affirm
I believe in Him not?"—*Goethe*.

னவனென்றும், யாராகிலும் துணிந்து சொல்லக் கூடுமோ" என்று (Goethe) குய்த்து என்பவர் சொல்லியிருக்கிறார்.

* "கடவுள் சகலத்தையும் பார்க்கிறார்; ஆனால் அவரைப் பூரணமாகப் பார்க்கமுடியாது" என்று (Euripides) யூரிபிடஸ் என்பவர் சொல்லியிருக்கிறார்.

† "கடவுள் ஒருவர். சிலர் சொல்லுகிறபடி அவர் இந்த உலகத்தின் புறம்பாகிய வெளியிலன்றி இந்தப் பிரபஞ்சத்தின் உள்ளாகவே யிருக்கிறார். சகல வஸ்துக் கூட்டங்களில் பூரணமாக நிறைந்தும், சகலத்தையும் பார்த்தும், அவைகள் யாவும் ஒன்றுக்கொன்று பொருந்தும்படி செய்து நடித்தும், விண்ணுலகத்திற்கு விகசிதமான வெளிச்சத்தையும் கொடுத்தார். மேலும், பிரபஞ்சத்துக்குப் பிராணனும், பூலோகத்துக்குப் பிதாவுமாகவிருந்து சகலத்தையும் ஜீவலிக்கவும் செய்கிறார்" என்று (Pythagoras) பிதாகரஸ் என்பவர் சொல்லியிருக்கிறார்.

‡ விண்ணுலகத்தையும், மண்ணுலகத்தையும், பேரலைகளையுடைய கடல்களையும், சண்டமாருதத்தையும், படைத்த சத்திய ஸ்வரூபியாகிய சுவாமியொருவர் உண்டு" என்று (Sophocles) ஸ்பாகில்ஸ் என்பவர் சொல்லியிருக்கிறார்.

---

* Euripides declares, "God sees all things, and is Himself unseen."

† The Pythagoreans said, "God is one. He is not, as some suppose, outside this frame of things, but within it. In all the entireness of His being, He is in the whole circle of existence, surveying all nature, and blending in harmonious union the whole; Giver of light in Heaven, and Father of all; the Mind and Life of the whole world; Mover of all things."

‡ "One in truth, one in God,
Who made both Heaven and the far-reaching earth,
And ocean's blue wave and the mighty winds,
But many of us mortals, deceived in heart,
Have set up for ourselves as a consolation in our affliction,
Images of the Gods, of doll or wood, or brass, or gold or ivory,
And worship these with vain sacrifices."—*Sophocles.*

* "சகல தூஷணைகளையும் விடுங்கள். யார் நீதிதுரந்தரரோ அவரிடம் முறையிடுகிறேன். எவர் உலகராட்டியராகவும் அழிவற்றவராகவும் இருக்கிறாரோ அவரை நேராய் அறிந்து அடைய முயலுங்கள். அவர் சுயம்புவான ஒருவர். அவரிடமிருந்தே சகலமும் ஜனிக்கின்றன. அவரது சக்தியெங்கும் ஜ்வலிக்கின்றன. அழியும்படியான யாவரும் அவரைப் பூரணமாகப் பார்க்கக் கூடாததாகவிருக்கினும், அவர் யாவற்றையும் பார்க்கிறார்" என்று (Orpheus) ஆர்பியஸ் என்பவர் சொல்லியிருக்கிறார்.

† நாம் எவ்வளவு சுவாபிமான முள்ளவர்களாக விருக்கினும், இஸ்பானியரைப் பார்க்கிலும் எண்ணில் மிகுந்தோரன்று? பலத்தில் காலியர்களைப் பார்க்கிலும் அதிகரித்தோரில்லை. தந்திரத்தில் கார்த்திஜீனியர்களையும், வித்தையில் கிரேக்கர்களையும் வென்றோமில்லை. ஆயினும், தெய்வபக்தியிலும் வைதிக விஷயங்களிலும், எத்தேசத்தாரிலும் எச்சனங்களிலும் மேன்மையுற்றிருக்கிறோம். அமிதகராகிய பலதேவர்களுடைய வன்மையின் ஆளுகைக்கும், ஆக்கினைக்கும் சகலமும் உட்பட்டிருக்கின்றனவென்றும், பூரணமாகவறியும் ஞானத்தில் சிறந்தவர்களாக விருக்கிறோம்" என்று (Cicero) சிசிரோ சொல்லியிருக்கிறார்.

‡ "நமக்கு உள்ளும் வெளியிலும் பார்க்கும் சகலமும் பரதந்திரமும் அபூரணமுமாகவிருக்க, நமது கருத்தில் மாத்தி

---

* And Orpheus, as quoted by Clement of Alexandria, says "I shall utter to whom it is lawful; but let the doors be closed against all the profane walk in the straight path to the immortal and only King of the universe. For He is one self-proceeding. From Him all things come: His power is in all. No mortal sees Him, but He sees all."

† "Some nations, conscript fathers, excel us—as do the Spaniards in numbers, the Gauls in physical strength, the Carthagenians in cunning, the Greeks in art; but we the Romans, surpass all others in piety, in religion, and that one wisdom, which sees that all things are governed and directed by the will of the immortal gods."— *Cicero.*

‡ "We have the idea of a perfect Being in our minds. But existence is a part of this idea, and a necessary part; for an

ரம் ஒரு அநந்தபூரண சுவதந்திர வஸ்து இருக்கவேண்டுமென்னும் எண்ணம் எப்படி வந்தது?" என்று (Descarts) டிஸ்கார்ட்ஸ் முதலானவர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

$ சர்வசக்தியும், சர்வஞ்ஞானமுமுள்ள பகவானில்லாமல், அகிலாண்டங்கள் ஜனிக்கவும், ஜ்வலிக்கவுமாட்டா. ஆதித்தனும் மற்ற கிரகாண்ட தூமகேதாதிகள் ஓரபார சக்தியும் ஞானமுமுடைய பராபர வஸ்துவினாலன்றி சூனியத்திலிருந் துண்டாகமாட்டா" என்று (Newton) நியூடன் சாஸ்திரி சொல்லியிருக்கிறார்.

* இப் பிரம்மாண்டமானது (அந்தர்யாமியாய் ஆளாநின்ற கடவுளாகிய) ஓர் மனது இல்லாமல் வீற்றிருக்கிறதென நம்புவதைவிட லீஜண்டு, டால்மண்டு, அலிகொரான் (முதலிய) கிரந்தங்களில் காணப்பட்ட எல்லாக் கட்டுக்கதைகளை நம்புவது எனக்கு எளிதாயிருக்கும். ஆகவே கடவுள் நாஸ்திகத்தின் குற்றத்தை விளக்க அற்புதங்களைச் செய்யவில்லை;

---

imaginary being is less perfect than a real being. Therefore, we are so made as necessarily to believe in the existence of a perfect Being. Whenever we think of God, we are obliged to think of Him as existing. And we can have no higher proof of any reality than that we necessarily believe in its existence so soon as the idea of it arises in our mind."—*Clarke.*

$ "All these movements according to rule and purpose, cannot have their origin in merely mechanical forces. This most exquisite combination of sun and planets, and comets can have sprung from nothing short of the counsel and dominion of a Being at once intelligent and mighty."—*Progress.*

* I had rather believe all the fables in the Legend, and the Talmund, and the Alcoran, that than this universal frame is without a *mind.* It is true that a little philosophy inclineth man's mind to atheism, but depth in philosophy bringeth men's minds about religion, for while the mind of man looketh upon second causes scattered, it may sometimes rest in them and go no further; but when it beholdeth the chain of them confederate and linked together, it must needs fly to Providence and Deity." —*Lord Bacon.*

ஏனெனில், அவனது சாதாரணமான சிருஷ்டிப் பொருள் அதன் குற்றத்தைக் காட்டுகின்றது. அற்பமான தத்துவ விசாரணை மனிதர் மனதை நாஸ்திகத்தை நோக்கும்படி செய்யினும், ஆழ்ந்த தத்துவ விசாரணை மனிதர் மனதை ஆஸ்திகத்திற்குக் கொண்டுவருகின்றது" என்று (Lord Bacon) லார்ட்டு பேகன் சொல்லியிருக்கிறார்.

இனி கடவுளின் இருப்பைப்பற்றி நமது தேசத்து முன்னோர்களும்,

* கடோபநிஷத்து, 3-வது வல்லி, 14-ம் வாக்யத்தில்,

"ஓ உயிர்களே! எழுந்திருங்கள். அஞ்ஞானத் தூக்கத்தை விட்டு விழித்துக்கொள்ளுங்கள். பிரஹ்ம நிஷ்டராகிய சிறந்த ஆசாரியரிடத்துக்குச் சென்று ஞானத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள். விவேகிகள், இந்த வழியைத் தீட்டப்பட்ட கத்திமுனையைப்போலச் செல்வதற் கரிதானதால், நடப்பதற்குக் கடினமானதென்று உரைக்கின்றனர்" என்றும்,

† முண்டகோபநிஷத்து, 2 - வது முண்டகம், 2-வது கண்டம், 2-வது வாக்யத்தில்,

"யார் ஞான ஒளியையே வடிவாக உடையவரோ, யார் அணுவிலும் அதிசூக்ஷ்ம மானவரோ, யாரிடத்தில் உலகங்களும் உலகத்தவரும் நிலைப்படுத்தப்பட் டிருக்கின்றனரோ, அவரே சத்ய ஸ்வரூபி, அவரே அழிவற்றவர், அவரே ஞானத்தினால் அறியப்படத்தக்கவர். ஓ பிரிய சிஷ்யனே! நீ யவரை ஞானத்தினால் அறியக்கடவாய்" என்றும்,

---

* [Grantha text, illegible] ||

† [Grantha text, illegible] ||

* சுவேதாசுவதர உபநிஷத்து, 6-ம் அத்தியாயம், 11-வது வாக்யத்தில்,

"கடவுள் ஒருவர். எல்லாப் பூதங்களிலு மறைந்திருப்பவர். யாவற்றிலும் நிறைந்திருப்பவர். எல்லாப் பூதங்களிலும் உள்ளே யிருப்பவர். சகல செய்கைகளுக்குந் தலைவர். எல்லா பூதங்களுக்கும் இருப்பிடமாக இருப்பவர். யாவற்றிற்கும் சாக்ஷியாக இருப்பவர். ஜ்ஞானஸ்வரூபி. சங்கராகிதர் படைக்கப்பட்ட பொருள்களுடைய பண்புகளற்றவர்" என்றும்,

சாந்தோக்யம், 8-வது ப்ரபாடகம், 14-வது கண்டம், முதலாவது வாக்யத்தில்,

† "ப்ரஹ்மத்தின் பெயர் ஆகாயம், அவர் பெயரும் உருவமுமுள்ள பொருள்களினுடைய நிர்வாகர் பெயரும் உருவமுமுள்ள பொருள்களைக் காட்டிலும் வேறானவர். அவர் ப்ரஹ்மம். அவர் அழிவற்றவர்" என்றும்,

‡ தைத்திரீய உபநிஷத்து, ப்ருகுவல்லி, க-வது அநுவாகத்தில்,

"எதனிடத்திலிருந்து (சிதசிதாத்மகமாகிய) பொருள்கள் உண்டாகின்றனவோ, உண்டானவை எதனால் நிலைபெற்றிருக்கின்றனவோ, (முடிவில்) எதை நோக்கிச்சென்று அடைகின்றனவோ அதை விசேஷமாய் அறிய விரும்புங்கள், அது ப்ரஹ்மம்" என்றும்,

---

* 𑌏𑌕𑍋 𑌦𑍇𑌵𑌃 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌗𑍂𑌢𑌃 𑌸𑌰𑍍𑌵𑌵𑍍𑌯𑌾𑌪𑍀 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾 । 𑌕𑌰𑍍𑌮𑌾𑌧𑍍𑌯𑌕𑍍𑌷𑌃 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌧𑌿𑌵𑌾𑌸𑌃 𑌸𑌾𑌕𑍍𑌷𑍀 𑌚𑍇𑌤𑌾 𑌕𑍇𑌵𑌲𑍋 𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌶𑍍𑌚 ॥

† 𑌆𑌕𑌾𑌶𑍋 𑌵𑍈 𑌨𑌾𑌮 𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑌯𑍋𑌰𑍍𑌨𑌿𑌰𑍍𑌵𑌹𑌿𑌤𑌾 । 𑌤𑍇 𑌯𑌦𑌨𑍍𑌤𑌰𑌾 𑌤𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌦𑌮𑍃𑌤𑌂 ॥

‡ 𑌯𑌤𑍋 𑌵𑌾 𑌇𑌮𑌾𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 𑌯𑍇𑌨 𑌜𑌾𑌤𑌾𑌨𑌿 𑌜𑍀𑌵𑌨𑍍𑌤𑌿 𑌯𑌤𑍍𑌪𑍍𑌰𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌭𑌿𑌸𑌂𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿 𑌤𑌦𑍍𑌵𑌿𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑌸𑍍𑌵 𑌤𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 ॥

முண்டகோபநிஷத்து, க-வது கண்டம், 6-வது வாக்கியத்தில்,

* "யார் ஜ்ஞானேந்திரியங்களுக்கு விஷயரோ, கர்மேந்திரியங்களுக் கதீதரோ, பிறப்பற்றவரோ, வருணமற்றவரோ, கண்காதுக ளில்லாதவரோ, அந்தக் கைகால்க ளற்றவரும், என்றுமுள்ளவரும், எங்குமுள்ளவரும், யாவற்றிலு முள்ளவரும், அதி சூக்ஷ்மமான தன்மை யுடையவரும், அழிவற்றவரும், எல்லாப் பொருள்களுக்கும் பிறப்பிடமுமானவரை, விவேகிகள் எங்கும் பார்க்கின்றனர்" என்றும்;

ப்ரஹதாரண்யம், 5-வது அத்யாயம், 8-வது ப்ராஹ்மணம், 8-வது வாக்கியத்தில்,

† "ஓ கார்க்கி! பிரமஞானிகள் யாரைப் பணிகிறார்களோ அவர் இந்த அழிவற்றபுருஷன். அவர் ஸ்தூலரன்று, குறுகினவரன்று, நீட்சியுடையவருமன்று, அவர் வருணமுள்ள பொருளன்று, திரவியப்பொருளன்று, அவர் நிழலன்று, இருளன்று, காற்றன்று, ஆகாயமன்று, சுகதுக்கமற்றவர், இரசநேந்திரியமற்றவர், கிராணேந்திரியமற்றவர், கண்ணற்றவர், காதற்றவர், வாக்கற்றவர், மிதமாகிய மனதற்றவர், முகமற்றவர், அவருக்கு ஒப்பில்லை" என்றும்;

கேனோபநிஷத்து 2-வது கண்டம், 2-ம் வாக்கியத்தில்,

‡ "யான் ப்ரஹ்மத்தை முற்று மறிந்தேனென்று நினைக்கவில்லை; அது அறியப்பட்டதுமன்று; அறியப்படாதது

* 𑌯𑌤𑍍𑌤𑌦𑌦𑍍𑌰𑍇𑌶𑍍𑌯𑌮𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑌮𑌗𑍋𑌤𑍍𑌰𑌮𑌵𑌰𑍍𑌣𑌮𑌚𑌕𑍍𑌷𑍁𑌃-
𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂 - 𑌤𑌦𑌪𑌾𑌣𑌿𑌪𑌾𑌦𑌂 - 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌵𑌿𑌭𑍁𑌂 - 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌂
𑌸𑍁𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌂 - 𑌤𑌦𑌵𑍍𑌯𑌯𑌂 - 𑌯𑌦𑍍𑌭𑍂𑌤𑌯𑍋𑌨𑌿𑌂 𑌪𑌰𑌿𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿
𑌧𑍀𑌰𑌾𑌃॥

† 𑌏𑌤𑌦𑍍𑌵𑍈 𑌤𑌦𑌕𑍍𑌷𑌰𑌂 𑌗𑌾𑌰𑍍𑌗𑌿 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾 𑌅𑌭𑌿𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 । 𑌅𑌸𑍍𑌥𑍂𑌲𑌮𑌨𑌣𑍍𑌵𑌹𑍍𑌰𑌸𑍍𑌵𑌮𑌦𑍀𑌰𑍍𑌘𑌮𑌲𑍋𑌹𑌿𑌤𑌮𑌸𑍍𑌨𑍇𑌹𑌮𑌚𑍍𑌛𑌾𑌯𑌮𑌤𑌮𑌃 । 𑌅𑌵𑌾𑌯𑍍𑌵𑌨𑌾𑌕𑌾𑌶𑌮𑌸𑌙𑍍𑌗𑌮𑌰𑌸𑌮𑌗𑌨𑍍𑌧𑌮𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑍍𑌕𑌮𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌮𑌵𑌾𑌗𑌮𑌨𑍋'𑌤𑍇𑌜𑌸𑍍𑌕𑌮𑌪𑍍𑌰𑌾𑌣𑌮𑌮𑍁𑌖𑌮𑌮𑌾𑌤𑍍𑌰𑌂.

‡ 𑌨𑌾𑌹𑌂 𑌮𑌨𑍍𑌯𑍇 𑌸𑍁𑌵𑍇𑌦𑍇𑌤𑌿 𑌨𑍋 𑌨 𑌵𑍇𑌦𑍇𑌤𑌿 𑌵𑍇𑌦 𑌚 ।
𑌯𑍋 𑌨𑌸𑍍𑌤𑌦𑍍𑌵𑍇𑌦 𑌤𑌦𑍍𑌵𑍇𑌦 𑌨𑍋 𑌨 𑌵𑍇𑌦𑍇𑌤𑌿 𑌵𑍇𑌦 𑌚.

மன்று. "அது அறியப்பட்டதுமன்று, அறியப்படாதது மன்று" என்னும் வாக்கியப்பொருளை நமக்குள் யார் அறிகின்றனரோ அவர்களே பிரஹ்மத்தை யறிகின்றனர்" என்றும்;

* ஈசோபநிஷத்து 4-வது வாக்கியத்தில்: "கடவுள் ஒருவர். அவர் அசைபவரல்லர். மனதைவிட அதிக விரைவாகச் செல்பவர். பொறிகளுக்குமுன் செல்லுகிற இக்கடவுளை, பொறிகளி லொன்றும் அடையமாட்டாது. அவர் ஸ்திரமாக விருந்தும், விரைவாகச் செல்லுகிற மனமுதலிய பொறிகளைக் கடந்து செல்லுகிறார். காற்று அவரிடத்தி லிருந்துகொண்டு உயிர்களுக்கு உடல்களினது அசைவைத் தருகின்றது" என்றும்;

† ஈசோபநிஷத்து 5-வது வாக்கியத்தில்: "அவர் அசைகிறார், அசையவில்லை; அவர் தூரத்திலிருக்கிறார், அவர்சமீபத்திலுமிருக்கிறார்; அவர் இந்த யாவற்றிற்கும் உள்ளேயிருக்கிறார், அவர் இந்த யாவற்றிற்கும் வெளியே யிருக்கிறார்" என்றும்;

முண்டகோபநிஷத்து, 2-வது முண்டகம், 2-வது கண்டம், பத்தாம் வாக்கியத்தில்,

‡ ப்ரஹ்மஜ்ஞானிகள் ஜ்ஞானமயமாகிய கோசத்தில் நிர்மலமானதும், பெருமைபொருந்தியதும், நிரவயவமானதும், சுத்தமானதும், ஒளிக்கு ஒளியானதுமான பரமாத்மாவை அறிகின்றனர்" என்றும்;

ஸ்வேதாஸ்வதர உபநிஷத்து, 6-வது அத்யாயம், 7-வது வாக்கியத்தில்,

---

* 𑌅𑌨𑍇𑌜𑌦𑍇𑌕𑌂 𑌮𑌨𑌸𑍋 𑌜𑌵𑍀𑌯𑍋 𑌨𑍈𑌨𑌦𑍍𑌦𑍇𑌵𑌾 𑌆𑌪𑍍𑌨𑍁𑌵𑌨𑍍𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑌰𑍍𑌷𑌤𑍍 । 𑌤𑌦𑍍𑌧𑌾𑌵𑌤𑍋𑌽𑌨𑍍𑌯𑌾𑌨𑌤𑍍𑌯𑍇𑌤𑌿 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍍𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑌪𑍋 𑌮𑌾𑌤𑌰𑌿𑌶𑍍𑌵𑌾 𑌦𑌧𑌾𑌤𑌿 ॥

† 𑌤𑌦𑍇𑌜𑌤𑌿 𑌤𑌨𑍍𑌨𑍈𑌜𑌤𑌿 𑌤𑌦𑍍𑌦𑍂𑌰𑍇 𑌤𑌦𑍍𑌵𑌨𑍍𑌤𑌿𑌕𑍇 𑌤𑌦𑌨𑍍𑌤𑌰𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌤𑌦𑍁 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌯 𑌬𑌾𑌹𑍍𑌯𑌤𑌃.

‡ 𑌹𑌿𑌰𑌣𑍍𑌮𑌯𑍇 𑌪𑌰𑍇 𑌕𑍋𑌶𑍇 𑌵𑌿𑌰𑌜𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑌿𑌷𑍍𑌕𑌲𑌮𑍍 । 𑌤𑌚𑍍𑌛𑍁𑌭𑍍𑌰𑌂 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑌾𑌂 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌸𑍍𑌤𑌦𑍍𑌯𑌦𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌦𑍋 𑌵𑌿𑌦𑍁𑌃 ॥

*எல்லாப் பிரபுக்களுக்கும் சிறந்த பிரபுவும், எல்லாத் தேவதைகளுக்கும் சிறந்த தேவதையும், எல்லாத் தலைவர்களுக்கும் சிறந்ததலைவனும், சிறந்த எல்லாவற்றிலும் சிறந்தவரும், தானாக விளங்குகிறவரும், உலகங்களுக்கு ஈசனும், துதிக்கப் படத்தக்கவனுமானவனை யாமறிவோம்'' என்றும்;

ப்ரஹதாரண்யம், 6-வது அத்யாயம், 4-வது ப்ராஹ்மணம், 20-வது வாக்கியத்தில்,

†ஒப்பற்றவரும், அழிவற்றவருமான கடவுளை ஒருவரென்று அறியத்தக்கது; அவர் நிர்மலமானவர், ஆகாயத்தைவிட சூக்ஷ்மமானவர், பிறப்பற்றவர், பரமாத்மா, பெரியவர், நித்தியமானவர்'' என்றும்;

கடோபநிஷத்து, 5-வது வல்லி, 8-வது வாக்கியத்தில்,

‡ "எந்தப் பூரணபுருஷர்: எல்லா உயிர்களும் உறங்கிக் கொண்டிருக்கையிலும் தாம் விழித்துக்கொண்டிருந்து அவைகளுக்கு வேண்டிய யாவற்றையும் படைத்துக்கொண்டிருக்கின்றாரோ, அவர் சுத்தர், அவர் ப்ரஹ்மம், அவர் அழிவற்றவரென்று சொல்லப்படுகிறார்'' என்றும்;

சுவேதாஸ்வதர உபநிஷத்து, 3-ம் அத்யாயம், 16-ம் வாக்யத்தில்,

---

* 𑌤𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌾𑌣𑌾𑌂 𑌪𑌰𑌮𑌂𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌂। 𑌤𑌂𑌦𑍈𑌵𑌤𑌾𑌨𑌾𑌂 𑌪𑌰𑌮𑌞𑍍𑌚𑌦𑍈𑌵𑌤𑌂 । 𑌪𑌤𑌿𑌂𑌪𑌤𑍀𑌨𑌾𑌂𑌪𑌰𑌮𑌂𑌪𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑍍। 𑌵𑌿𑌦𑌾𑌮𑌦𑍇𑌵𑌂 𑌭𑍁𑌵𑌨𑍇𑌶𑌮𑍀𑌡𑍍𑌯𑌮𑍍 ॥

† 𑌏𑌕𑌧𑍈𑌵𑌾𑌨𑍁𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌮𑍇𑌤𑌦𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌂 𑌧𑍍𑌰𑍁𑌵𑌂। 𑌵𑌿𑌰𑌜𑌃𑌪𑌰𑌆𑌕𑌾𑌶𑌾𑌦𑌜 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌮𑌹𑌾𑌨𑍍𑌧𑍍𑌰𑍁𑌵𑌃 ॥

‡ 𑌯 𑌏𑌷𑌸𑍁𑌪𑍍𑌤𑍇𑌷𑍁 𑌜𑌾𑌗𑌰𑍍𑌤𑌿𑌕𑌾𑌮𑌂 𑌕𑌾𑌮𑌂𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌨𑌿𑌰𑍍𑌮𑌿𑌮𑌾𑌣𑌃 । 𑌤𑌦𑍇𑌵𑌶𑍁𑌕𑍍𑌰𑌂𑌤𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 । 𑌤𑌦𑍇𑌵𑌾𑌮𑍃𑌤𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌤𑌸𑍍𑌮𑌿𑌁𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌶𑍍𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑍇 𑌤𑌦𑍁𑌨𑌾𑌤𑍍𑌯𑍇𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑌨 ॥

* "அவருக்குக் கையில்லை, ஆயினும் கிரஹிக்கிறார்; அவருக்குக் கால் இல்லை, ஆயினும் நடக்கிறார்; அவருக்குக் கண்ணில்லை, ஆயினும் பார்க்கிறார்; அவர் அறியத்தக்க யாவற்றையும் அறிகிறார்; ஆனால் அவரை முற்றும் அறிந்தவரில்லை; அவரை யாவற்றிற்கு முதன்மையானவரென்றும், பூரணரென்றும் பெரியவரென்றும் உரைக்கின்றனர்" என்றும்;

கடோபநிஷத்து, 2-வது வல்லி, 14-ம் வாக்கியத்தில்,

† "இந்தப் பரமாத்மாவுக்குப் பிறப்பில்லை; இறப்புமில்லை; இவர் எல்லாமறிந்தவர்; இவர் ஒன்றிலிருந் துண்டாவதில்லை; ஒன்றாவதுமில்லை" என்றும்;

தைத்திரியம், ஆநந்தவல்லி, 7-வது அநுவாகம், முதலாவது வாக்கியத்தில்,

‡ "வெளியில் ஆனந்தஸ்வரூபனாகிய பரமாத்மா இராவிடில் யாருக்குச் சரீர அசைவு உண்டாகும்? யார் உயிர் வாழ்வார்? இவரே யவரவரது செய்கைக்குத் தக்க இன்பத்தைத் தருகிறார்" என்றும்;

தைத்திரியம், ப்ருகுவல்லி, 6-வது அநுவாகத்தில்,

§ நிச்சயமாய் இவ்வுயிர்கள் ஆனந்த ஸ்வரூபனிடத்திலிருந்தே உண்டாகின்றன. உண்டானவை ஆனந்தஸ்வரூபனாலேயே நிலைபெற் றிருக்கின்றன. ஆனந்தரூபனையே நோக்கிச்சென் றடைகின்றன" என்றும்;

---

* 𑌅𑌪𑌾𑌣𑌿𑌪𑌾𑌦𑍋 𑌜𑌵𑌨𑍋 𑌗𑍍𑌰𑌹𑍀𑌤𑌾 । 𑌪𑌶𑍍𑌯𑌤𑍍𑌯𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 𑌸 𑌶𑍃𑌣𑍋𑌤𑍍𑌯𑌕𑌰𑍍𑌣𑌃 । 𑌸 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌵𑍇𑌦𑍍𑌯𑌂 𑌨 𑌚 𑌤𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑌿 𑌵𑍇𑌤𑍍𑌤𑌾 𑌤𑌮𑌾𑌹𑍁𑌰𑌗𑍍𑌰𑍍𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌮𑌹𑌾𑌨𑍍𑌤𑌮𑍍 ॥

† 𑌨 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌮𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌵𑌾 𑌵𑌿𑌪𑌶𑍍𑌚𑌿𑌨𑍍𑌨𑌾𑌯𑌂 𑌕𑍁𑌤𑌶𑍍𑌚𑌿𑌨𑍍𑌨 𑌬𑌭𑍂𑌵 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 ॥

‡ 𑌕𑍋 𑌹𑍍𑌯𑍇𑌵𑌾𑌨𑍍𑌯𑌾𑌤𑍍𑌕𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌯𑌦𑍇𑌷 𑌆𑌕𑌾𑌶 𑌆𑌨𑌨𑍍𑌦𑍋 𑌨 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌏𑌷 𑌹𑍍𑌯𑍇𑌵𑌾𑌨𑌨𑍍𑌦𑌯𑌾𑌤𑌿 ॥

§ 𑌆𑌨𑌨𑍍𑌦𑌾𑌦𑍍𑌧𑍍𑌯𑍇𑌵 𑌖𑌲𑍍𑌵𑌿𑌮𑌾𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 । 𑌆𑌨𑌨𑍍𑌦𑍇𑌨 𑌜𑌾𑌤𑌾𑌨𑌿 𑌜𑍀𑌵𑌨𑍍𑌤𑌿 । 𑌆𑌨𑌨𑍍𑌦𑌂 𑌪𑍍𑌰𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌭𑌿𑌸𑌂𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿 ।

ப்ரஹதாரண்யம், 6-வது அத்யாயம், 3-வது ப்ராஹ்மணம், 3-வது வாக்கியத்தில்,

* "பரமாத்மாவே ஜீவாத்மாவுக்குச் சிறந்தபதவி; பரமாத்மாவே ஜீவாத்மாவுக்குச் சிறந்த செல்வம்; பரமாத்மாவே ஜீவாத்மாவுக்குச் சிறந்த உலகம்; பரமாத்மாவே ஜீவாத்மாவுக்குச் சிறந்த ஆனந்தம்; இப்பேரானந்தத்தின் அம்சத்தையே வேறு வேறு உயிர்கள் அனுபவிக்கின்றன" என்றும்;

மாண்டூக்யம், 2-வது கண்டம், 2-வது வாக்கியத்தில்,

† "கடவுள் கண்ணால் காணப்படாதவர்; கருமேந்திரியங்களால் கவரப்படாதவர்; வியவஹரிக்கப்படக் கூடாதவர்; பரிமிதமான லக்ஷணமற்றவர்; கருத்திலடங்காதவர்; சொல்லிமுடியாதவர்; உயிர்களின் ஆத்மபிரத்தியயத்தையே தன்னிருத்தலுக்குப் பிரமாணமாக உடையவர்; சம்ஸார தருமத்தைக் கடந்தவர்; சாந்தமானவர்; மங்களஸ்வரூபி, ஒப்புயர்வான இரண்டு மற்றவர்" என்றும் சொல்லியிருக்கிறார்கள். இம்மட்டோ! சகல தேசங்களிலிருக்கும் சகலமான பாஷையை வழங்கப்பட்டவர்களும் தம்தம் பாஷையால் அந்தப் பராபர வஸ்துவைப் பறபல விதமாக வருணித்திருக்கிறார்கள். நமது தென்தேசத்தில் அமிழ்தினும் சுவையுடைய தமிழ்ப்பாஷையையறிந்த ஜ்ஞானிகளும், வித்வான்களும், கவிவாணர்களும் செப்பிய சிலகவிகளைச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

திருவள்ளுவர்குறள்.

கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின்.

---

* 𑌏𑌷𑌾𑌸𑍍𑌯 𑌪𑌰𑌮𑌾𑌗𑌤𑌿 𑌰𑍇𑌷𑌾𑌸𑍍𑌯 𑌪𑌰𑌮𑌾𑌸𑌂𑌪 𑌦𑍇𑌷𑍋𑌽𑌸𑍍𑌯 𑌪𑌰𑌮𑍋𑌲𑍋𑌕 𑌏𑌷𑍋𑌽𑌸𑍍𑌯 𑌪𑌰𑌮𑌆𑌨𑌨𑍍𑌦𑌃 । 𑌏𑌤𑌸𑍍𑌯𑍈𑌵𑌾𑌨𑌨𑍍𑌦𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌯𑌾𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌮𑍁𑌪𑌜𑍀𑌵𑌨𑍍𑌤𑌿 ॥

† 𑌅𑌦𑍃𑌷𑍍𑌟𑌮𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑍍𑌯𑌮𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑌮𑌲𑌕𑍍𑌷𑌣𑌮𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌮𑌵𑍍𑌯𑌪𑌦𑍇𑌶𑍍𑌯𑌮𑍇𑌕𑌾𑌤𑍍𑌮𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌸𑌾𑌰𑌂 𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑍋𑌪𑌶𑌮𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌶𑌿𑌵𑌮𑌦𑍍𑌵𑍈𑌤𑌂 ॥

தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது.

பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார்.

எவ்வுயிருங் காக்கவொரு ஈசனுண்டோ வில்லையோ
அவ்வுயிரில் யாதொருவ னல்லனோ—வவ்வி
அருகுவது கொண்டிங் கலைவதே னன்னே
வருகுவது தானே வரும்.

### ஔவைகுறள்.

வாயுவாய் மன்னுயிராய் மற்றவற்றி னுட்பொருளாய்
ஆயுமிடந் தானே சிவம்.

கண்டத் தளவிற் கடிய வொளிகாணில்
அண்டத்த ராகு முடம்பு.

நல்லன நூல்பல கற்பினுங் காண்பரிதே
எல்லை யில்லாத சிவம்.

இட்டமுட னென்றலையி லின்னபடி யென்றெழுதி
விட்டசிவ னுஞ்செத்து விட்டானோ—முட்டமுட்டப்
பஞ்சமே யானாலும் பாரமவனுக் கன்னாய்
நெஞ்சமே யஞ்சாதே நீ.

### உபமை.

அத்திமுத லெறும்பீ றானவுயி ரத்தனைக்கும்
சித்தமகிழ்ந் தளிக்குந் தேசிகன்—முற்றவே
கற்பித்தான் போனானோ காக்கக் கடனிலையோ
வற்பனோ வன்னா யரன்.

### அதிகமான்.

கருப்பைக்குண் முட்டைக்குங் கல்லினுட் டேரைக்கும்
விருப்புற் றமுதளிக்கு மெய்யன்—உருப்பெற்றால்
ஊட்டி வளர்க்கானோ வோகெடுவா யன்னாய்கேள்
வாட்ட முனக்கேன் மகிழ்.

### உறுவை.

அண்டப்பைக் குள்ளுயிர்தன் றாயருந்தத் தானருந்தும்
அண்டத் துயிர்பிழைப்ப தாச்சரியம்—மண்டி
அலைகின்ற வன்னா யானுடைய வுண்மை
நிலைகண்டு நீயறிந்து நில்.

## கபிலர்.

கண்ணுழையாக் காட்டிற் கருங்கற் றவளைக்கும்
உண்ணும் படியறிந் தூட்டுமவர்—நண்ணும்
நமக்கும் படியளப்பார் நாரியோர் பாகர்
தமக்குத் தொழிலென்ன தான்.

## வள்ளியம்மை.

அன்னை வயிற்றி லருத்திவளர்த் தவன்றான்
இன்னும் வளர்க்கானோ வென்றாயே—மின்னாவம்
சூடும் பெருமான் சுடுகாட்டி னின்றுவினை
யாடும் பெருமா னவன்.

## திருமந்திரம்.

ஆறு சமயமுங் கண்டிலர் கண்டில
ராறு சமயப் பொருளு மவனலன்
றேறுமின் றேறித் தெளிமின் றெளிந்தபின்
மாறுத லின்றி மனைபுக லாமே.

## ஞானவாசிட்டம்.

தவமகந் தீர்த்தஞ் சேவை யருச்சனை தான மாதி
யவமயக் கத்தானீனுல் விலங்குபோ லவலத் தாழ்வார்
பவமுறு மிவற்றை விட்டுப் பரிசுத்த பரம போகங்
கவர்வுறப் பற்றி யெல்லாக் காதலு நீங்கி நிற்பாய்.

## அஞ்ஞவதைப்பரணி.

தலைபலவாய்ப் பெயர்பலவாய் நதிக ளெல்லாஞ்
சாகரத்தி லொருநீராந் தன்மை போலப்
பலபலவாய்ச் சொல்லுநெறி யெல்லாஞ் சொல்லப்
பட்டதொரு பொருளினையாம் பணிதல் செய்வாம்.

## அவிரோதவுந்தியார்.

அயனாதி மூவரு மாங்கவர் தம்ம
தியைதரு வேடமு முந்தீபற
எல்லாமு மியாமெம துந்தீபற.

## ஆனந்தத்திரட்டு.

எப்பொருள் களுந்தா னாகி யிலங்கிடப் படுவ னீச
னப்படி விளங்கு கின்ற தறிதலே பரன்ற னக்கு
மெய்ப்படு பூசை வேறோர் செயலினா லன்று மெய்யே
யிப்படி ஞானந் தன்னா லிறைஞ்சிடப் படுவ னீசன்.

### திருந்திரட்டு.

அண்டமெண் டிக்கெங் கண்ணு மடங்கச்சூ னியம தாகக்
கண்டுகொண் டிருக்கக் கண்ட கருத்தையு மறவே விட்டார்
அண்டமெண் டிக்கெங் கண்ணு மாய்நின்ற வானந் தத்தைக்
கண்டுகொண் டிருக்கும் வண்ணங் கணத்தில்வந் துதிக்கு மன்றே.

### திருவம்மானை.

பார்த்த விடமெல்லாம் பரமன்கா ணம்மானை
பாராம லிந்நாளும் பாழ்பட்டே னம்மானை.

### தத்துவராயர்.

உள்ளத் திருந்து மொளித்தான் பரன்குரவன்
கள்ளந்தனைத் தவிர்த்துக் காட்டினான்—வள்ள
லருவான கோலமோ வக்கோலங் காட்டுங்
குருவான கோலமோ கூறு.

### வீராகமம்.

அடுத்த தின்ற மையான்மா வாகுமென் றறிந்து நல்லோர்
நடித்திடுஞ் சமய வாத நற்றவஞ் செபந்தி யானம்
படிற்றுல கியற்கை யாவும் பாகதி விலக்கா மென்றே
விடுத்தருட் குரவன் பாத மேவிமெய்ப் பணிசெய் வாரே.

### திருவாசகம்.

நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்று
னுலகே ழெனத்திசைபத் தெனத்தா னொருவனுமே
பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ.

சுந்தரத் தின்பக் குயிலே சூழ்சுடர் ஞாயிறு போல
அந்தரத் தேநின் றிழிந்திங் கடியவ ராசை யறுப்பான்
முந்து நடுவு முடிவு மாகிய மூவ ரறியாச்
சிந்துரச் சேவடி யானைச் சேவக னைவரக் கூவாய்.

### சிவானந்தமாலை.

எங்குஞ் சிவமொழிய வில்லையவன் றன்னுணை
யங்கந் திரல்கருவி ஆணவமாம் பொங்குமிருண்
மைசெய்த மாமாயை மாயைவினை மற்றனைத்தும்
பொய்பொய் பொய்பொய் பொய்பொய் பொய்.

### சிவபோகசாரம்.

ஆர்பெரிய ரார்சிறிய ராருறவ ரார்பகைஞர்
சீர்பெரிய ரானந்த சிற்சொருபர்—பேர்பெரியர்
எங்கெங்குந் தாமா யிருந்துசட சித்தனைத்தும்
அங்கங் கியற்றுவ தானல்.

### பட்டணத்தார்.

சொல்லிலும் சொல்லின் முடிவிலும் வேதச் சுருதியிலு
மல்லிலு மாசற்ற வாகாயந் தன்னிலு மாய்ந்துவிட்டோ
ரில்லிலு மன்ப ரிடத்திலு மீச னிருக்குமிடங்
கல்லிலுஞ் செம்பிலு மோவிருப் பானெங்கள் கண்ணுதலே.

### திருவாய்மொழி.

உயர்வற வுயர்நல முடையவ னெவனவன்
மயர்வற மதிநல மருளின னெவனவன்
அயர்வறு மமரர்க ளதிபதி யெவனவன்
துயரறு சுடரடி தொழுதெழென் மனனே.

திருமா ளுன்முகன் செஞ்சடையா னென்றிவர்க ளெம்
பெருமான் றன்மை யாரறிகிற் பார்பேசி யென்
னொருமா முதல்வா ஆழிப்பிரா னென்னையா ளுடைக்
கருமா மேனிய னென்பனென் காதல்க லக்கவே.

### தாயுமானவர்.

அங்கிங் கெனாதபடி யெங்கும் ப்ரகாசமா
யானந்த பூர்த்தியாகி
யருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
யகிலாண்ட கோடியெல்லாந்
தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது மனவாக்கினிற்
றட்டாம னின்றதெது சமயகோ டிகளெலாந்
தந்தெய்வ மென்றெய்வமென்
றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதெது
வெங்கணும் பெருவழக்கா
யாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமா
யென்றைக்கு முள்ளதெதுமேற்
கங்குல்பக லறநின்ற வெல்லையுள தெதுவது
கருத்திற் கிசைந்ததுவே
கண்டன வெலாமோன வுருவெளிய தாகவும்
கருதியஞ் சலிசெய்குவாம்.

### திருவருட்பா.

அளவிறந்த நெடுங்காலஞ் சித்தர் யோக
ரறிஞர்மல ரயன்முதலோ ரனந்த வேதங்
களவிறந்துங் காணுதி யிறந்துஞ் செய்யுங்
கடுந்தவத்துங் காண்பரிதாங் கடவு ளாகி
யுளவிறந்த வெம்போல்வா ருள்ளத் துள்ளே
யூருகின்ற தெள்ளமுத வூற லாகிப்

பிளவிறந்து பிண்டாண்ட முழுதுந் தானாய்ப்
பிறங்குகின்ற பெருங்கருணைப் பெரிய தேவே.

பொன்னாகி மணியாகிப் போக மாகிப்
புறமாகி யகமாகிப் புனித மாகி
மன்னாகி மலையாகிக் கடலு மாகி
மதியாகி ரவியாகி மற்று மாகி
முன்னாகிப் பின்னாகி நடுவு மாகி
முழுதாகி நாதமுற முழங்கி யெங்கு
மின்னாகிப் பரவியின்ப வெள்ளந் தேக்க
வியன்கருணைப் பொழிமுகிலாய் விளங்குந் தேவே.

பொற்குன்றே யகம்புறமும் பொலிந்து நின்ற
பூரணமே யாரணத்துட் பொருளே யென்றுங்
கற்கின்றோர்க் கினியசுவைக் கரும்பே தேனே
கற்பகமே கற்பகத்தீங் கனியே வாய்மைச்
சொற்குன்றா நாவகத்துண் மாறா வின்பந்
தோற்றுகின்ற திருவருட்சீர்ச் சோதி யேவிண்
ணிற்கின்ற சுடரேயச் சுடருள் ளோங்கு
நீளொளியே யவ்வொளிக்கு ணிறைந்த தேவே.

கோவேயென் குணக்குன்றே குன்றா ஞானக்
கொழுந்தேனே செழும்பாகே குளிர்ந்த மோனக்
காவேமெய் யறிவின்ப மயமே யென்றன்
கண்ணேநற் கருணையாங் கரும்பே வானத்
தேவேயத் தேவுக்குந் தெளிய வொண்ணாத்
தெய்வமே வாடாமற் றிகழ்சிற் போதப்
பூவேயப் பூவிலுறு மணமே யெங்கும்
பூரணமாய் நிறைந்தருளும் புனிதத் தேவே.

வேதாந்த நிலையாகிச் சித்தாந் தத்தின்
மெய்யாகிச் சமரசத்தின் விவேக மாகி
நாதாந்த வெளியாகி முத்தாந் தத்தி
னடுவாகி நவநிலைக்கு நண்ணா தாகி
மூதாண்ட கோடியெல்லாந் தாங்கி நின்ற
முதலாகி மனோதீத முத்தி யாகி
வாதாண்ட சமயநெறிக் கமையா தென்று
மௌனவியோ மத்தினிடை வயங்குந் தேவே.

தோன்றுதுவி தாத்துவித மாய்வி சிட்டாத்
துவிதமாய்க் கேவலாத் துவித மாகிச்
சான்றசுத்தாத் துவிதமாய்ச் சத்தந் தோய்ந்த
சமரசாத் துவித முமாய்த் தன்னை யன்றி

மூன்றுநிலை வேறென்று மிலதா யென்று
முள்ளதாய் நிரதிசய வுணர்வா யெல்லா
மீன்றருளுந் தாயாகித் தந்தை யாகி
யெழிற்குருவாய்த் தெய்வதமா யிலங்குந் தேவே.

என்னுயிர்நீ யென்னுயிர்க்கோ ருயிரு நீயென்
னின்னுயிர்க்குத் துணைவனீ யென்னை யீன்ற
வன்னைநீ யென்னுடைய வப்ப நீயென்
னரும்பொருணீ யென்னிதயத் தன்பு நீயென்
னன்னெறிநீ யெனக்குரிய வுறவு நீயென்
னற்குருநீ யெனைக்கலந்த நட்பு நீயென்
றன்னுடைய வாழ்வுநீ யென்னைக் காக்குந்
தலைவனீ குணம்யாவுந் தழைத்த தேவே.

தத்துவமே தத்துவா தீத மேசிற்
சுயம்புவே யெங்குநிறை சாட்சியே மெய்ச்
சத்துவமே சத்துவத்தின் பயனு மின்பந்
தந்தருளும் பெருவாழ்வாஞ் சாமி யேயென்
சித்தநிலை தெளிவிக்கு மொளிபே சற்றுந்
தெவிட்டாத தெள்ளமுதே தேனே யென்றுஞ்
சுத்தநெறி திறம்பாதா ரறிவிற் றோய்ந்த
சுகப்பொருளே மெய்ஞ்ஞானந் துலங்குந் தேவே.

சகமாகிச் சீவனு யீச னாகிச்
சதுமுகனுந் திருமாலா யரன்று னாகி
மகமாயை முதலாய்க்கூ டத்த னாகி
வான்பிரம மாகியெல்லா வழக்கு மாகி
இகமாகிப் பரமாகிச் சமய கோடி
யெத்தனையு மாகியவை யெட்டா வான்கற்
பகமாகிப் பரமாகிப் பரம மாகிப்
பராபரமாய்ப் பரம்பரமாய்ப் பதியுந் தேவே.

என்று சொல்லியிருக்கிறார்கள்.

ஏழாவது.—நமக்குள் சத்தியம், சாந்தம், நீதி, தருமம், பூதநயை, பரோபகாரம், மனசாக்ஷி முதலான குணங்கள் இயற்கையாகவே ஜனித்து, அக்குணங்களுக் கேற்றபடி உலகத்தாரிடம் சத்தியமாகவும், சாந்தமாகவும், நீதியாகவும், தருமமாகவும், பூததயையுடனும் பரோபகாரத்தைக் கருதி மனோசாக்ஷிக்கு விரோதமில்லாமல் நடக்கப் பிரவர்த்திக்கிறோம். இத்யாதி திவ்ய குணங்களால் உலகத்தார் சுகமாக வாழ்ந்து

வருவதுபிரத்தியட்சம். இக்குணங்கள்பஞ்சபூதங்களாலாகிய ஜடப்பொருள்க ளல்லவே. அவைகளுக்கு அகலம், நீளம், உயர முதலான அளவு கிடையா? அப்படிக்கிருந்தும், சுவானுபவத்தா லறிந்து ஆநந்த மடைகிறோம். அவைகளின் இருப்பு உண்மையே யல்லவா? எப்படி அவைகளின் இருப்பு உண்மையோ அப்படியே அவைகளைப் படைத்த கடவுளின் இருப்பும் அநுபவசித்த மாகையால் நாம் கடவுளின் இருப்பைப்பற்றி நம்பவேண்டி இருக்கிறது.

இத்யாதி ஆதாரங்களால் இப்பிரபஞ்சத்தையும், இப்பிரபஞ்சத்திலுள்ள பிராணிகோடிகளையும் படைத் தளித் தழிக்கவல்ல பராபரவஸ்துவாகிய பரமாத்மாஉண்டென்னும் ஆஸ்திகமத சித்தாந்தம்: சுருதி, யுக்தி, அநுபவத்துக்குப் பொருந்தி யிருக்கிறது.

இந்த ஆஸ்திகமதமே காலதேச வர்த்தமானங்களைத் தழுவி இந்துமதமென்றும், சீனமதமென்றும், யூதமதமென்றும், எகிப்தமதமென்றும், கிறிஸ்துமதமென்றும், மகமது மதமென்றும், பாரசீக மதமென்றும், ஸ்காந்திநேவியன் மதமென்றும், உரோமக மதமென்றும், கிரேக்க மதமென்றும், (இந்துமதத்தின் கிளைகளாகிய) வைஷ்ணவமதமென்றும், சைவமதமென்றும், சாக்தமதமென்றும், வைரவமதமென்றும், காணபத்த மதமென்றும், கௌமார மதமென்றும், பௌத்தமதமென்றும், ஜைனமதமென்றும், சௌரமதமென்றும், சாந்திரமதமென்றும், சாக்கியர்மதமென்றும், பிரஹ்மசமாஜ மதமென்றும், பின்னும் பற்பல பெயர்களால் பிரகாசிக்கின்றன. இம்மதங்க ளுண்டான காலதேச காரண காரியங்களையும் அந்தந்த மதங்களை விருத்தியாக்கிய மதாசாரியர்களுடைய சரித்திரங்களையும், அந்தந்த மதங்களுக்குடைய கிரந்தங்களையும், அந்தந்த கிரந்தங்களில் காணும் அருமை பெருமைகளையும் இன்றையதினமே பிரசங்கித் தறிவித்தல் அசாத்திய மல்லவா? அவைகளைப்பற்றி இன்னொருகால் இப் பிரம்ம மண்டபத்தில் பிரசங்கஞ்செய்ய நிச்சயித் திருக்கின்றனன். ஆகையால், உடன் பிறவிகளாகிய சகோதர கனவான்களே! நாமெல்லோரும் எம்பெருமானாகிய பேரானந்தப் பெருங்கடவுளைப் போற்றிப் பெருமைபெற்று வாழ்வோமாக.

## போற்றி-தேவாரங்கள்.

அகிலமாம் பெருமை பெற்ற அகிலாண்டங்களைப் படைத்துச்
சகலமாம் பொருளுண்டாக்கிச் சாஸ்வித சுகமளிக்கும்
இகபர மிரண்டினுக்கும் ஈசனு யிருந்துலாவும்
ஜகமதி லாத்மகோடி ஜனிப்பித்த தேவே போற்றி.

ஆதியா யனாதி யாகி யப்பனு யன்னை யாகிச்
சோதியாய்ச் சுடராய் நிற்குஞ் சுயம்புவாய்ச் சுத்த னுகி
நீதியாய் நித்யனுகி நிர்மல நிரூப னுகி
ஓதியாய் நிற்கு மெங்கள் ஒருவனே போற்றி போற்றி.

இங்குமா யங்கு மாகி இனியதாய்க் கனிய தாகி
எங்குமா யோக மாகி யாதினுஞ் சக்தி யாகித்
தங்குமோர் பொருளொப் பில்லாச் சர்வவல் லவனு மாகிக்
கொங்குசேர் கோவே தேவே குணக்குன்றே போற்றி போற்றி.

ஈசனு யிருக்கு மெங்கள் ஈகைசா கரமு மாகி
நேசனு யுறவு செய்ய நேத்திரம் போல்வ தாகி
மோசமே போனேம் நின்னை முழுவது மறந்தை யையோ
தாசரைப் பாது காப்பாய்த் தயாநிதி போற்றி போற்றி.

எவர்களும் போற்றும் பெங்களூர் ஏகீசர் பக்த ராகும்
தவமதிற் சிறந்த பிரம்ம ஸமாஜத்தார் நின்னைப் போற்ற
அவனியி லுள்ள பல்லோ ரனைவரைப் பாது காத்துப்
பவங்களைப் போக்க வேண்டும் பரமனே போற்றி போற்றி.

———:o:———

## வாழி விருத்தம்.

சாத்திரஞ்சொல்லும்சுவாமி சகலவேதங்கள்வாழி
பாத்திரமாகுஞ்சத்தியம் பகர்ப்ரஹ்மஸமாஜம்வாழி
ஆத்திகமதவித்தாந்தம் அகிலாண்டமெங்கும்வாழி
நேத்தியாய்ப்படிப்போர்கேட்போர்நித்தமும்வாழிமாதோ.

ஓம், ப்ரஹ்மக்ருபாஹிகேவலம்.

சாந்தி : சாந்தி : சாந்தி : ஹரி : ஓம்.

மதவிருக்ஷத்தின் முதல்பாகமாகிய
ஆஸ்திகமத சித்தாந்தம்
முற்றிற்று.

———

மதவிருக்ஷத்தின்

இரண்டாம்பாகமாகிய

# இந்து சமயம்.



இஃது

சே. ப. நரசிம்மலு நாயுடு

கோயமுத்தூர்

பிரம்ம மந்திரத்தில் செய்த

உபந்நியாசங்களின்

சாரசங்கிரகம்.

ஓம்.

பரப்ரஹ்மணேநம:

# இந்து சமயம்.

## பூர்வ சரித்திரம்.

இந்து சமயத்தைப்பற்றி யறிவிக்குமுன் இந்தத் தேசத்தினுடைய விஸ்தீரண முதலானவைகளைப்பற்றிச் சங்கிரகமாகச் சொல்லவேண்டியது ஆவசியமே.

இந்த இந்துதேசமானது ஆசியா கண்டத்தின் தென் திசையில், தென் வடலாக 19,000 மையில் நீளமும், கீழ்மேலாக 1800 மைல் அகலமும், அல்லது 15 லட்சம் மையில் சுற்றளவுமுள்ளது; இமாலயம், விந்தியம் ஆகிய மலைகளாலும்; சிந்து, கங்கை, யமுனை, கிருஷ்ணை, கோதாவரி, காவிரி முதலான நதிகளாலும்; 30 கோடி ஜனங்களாலும், எண்ணிறந்த எதிகளாலும், கணக்கற்ற கல்விமான்களாலும், மஹத்தான மதங்களாலும், மாகூஷிமை பெற்ற பிரம்மாண்ட தேசம். இந்தேசத்தின் ஆதிக்குடிகள் குடியேறிய வகையை விவரிக்கும் நூல் ஒன்றும் கிடையாது. ஆனால், ஐரோப்பியருடைய ஆராய்ச்சியின்படி கி. மு. 3000-ளவு முன்பு மத்திய ஆசியாவின் அருகிலிருக்கும் காஸ்பியன் கடலுக்குச் சமீபத்தில் இடையர்களாக இருந்த சிதியர், மங்கோலியர் முதலானவர்கள் கூடித் துரேனியராகி, அவர்களே ஆரியவம்சத்தாராகப் பாரசிகதேசத்தின்மேல் விழுந்து இந்துதேசத்திற்கு வந்து, சிந்துநதிக்கரையில் குடியேறினதாகத் தெரியவருகிறது. அக்காலத்தில் சிந்துநதிக்கு இந்துநதியென்ற பெயரும் இருந்தபடியால், அதன் கரையோரத்தில் குடியேறிய ஆரியருக்கும் இந்துக்கள் என்ற பெயரை பாரசீகர் வைத்ததாகச் சொல்லப்படுகிறது. ஆரியரென்றும் பதம் ஆர்—என்னும் பகுதியினால் வந்தது. அப்பகுதிக்குக் கலப்பை உழுதல் என்று பொருள்; ஆகவே, ஆரியர் என்றால் உழுது பயிரிட்டு வாழ்வோரென்று அருத்தமாகிறது. அப்பதத்திற்கு ஸம்ஸ்கிருத பாஷையில் மேன்மக்கள் என்று பொருள். அவர்கள் வதித்த

இத்தேசத்திற்கு ஆரியாவர்த்தம் என்ற ஓர் பெயரும் வழங்கி வந்தது. ஆனால், சமய நூல்களில் இதற்கு ஜம்புத்வீபமென்றும், குமாரிககண்டமென்றும், பாதன் ஆண்டமையால் பரத வருஷம் அல்லது பரதகண்டம் என்றும் வழங்கிவரப்பட்டது. இந்த ஆரியர் கி. மு. 1500ஞு முன்பு மத்திய இந்தியாவில் பரவினார்கள். ஆனால், தென்தேசத்திலிருக்கும் திராவிடர் முதலானவர்களுடைய பிறப்பு வளர்ப்புகளைப்பற்றிப் பேசும் சரியான புத்தகம் அபூர்வம். இந்த ஆரியர்களும், திராவிடரும் நாளாவட்டத்தில் 14 ஜாதிக்காரர்களாகி, (1) ஹிந்தி, (2) பெங்காளி, (3) மஹாராட்டிரம், (4) குஜராத்தி, (5) பஞ்சாபீ, (6) காஷ்மீரி, (7) சிந்தி, (8) ஒரிய, (9) தமிழ், (10) மலையாளம், (11) தெலுங்கு, (12) கன்னடம், (13) காண்டு, (14) கொலோரியன் முதலான பாஷைகளை வழங்கி வந்தார்கள். ஆனால் ஆரியர் மாத்திரம் ஸம்ஸ்கிருதத்தை லௌகீக வைதீக விஷயங்களில் உபயோகப்படுத்தினார்கள் என்பதற்குச் சந்தேகமேயில்லை. தற்காலத்திலோவெனில் நூற்றுக்கதிகமான பாஷைகள் வழங்கிவருகின்றன. இந்த ஆரியர்கள் வெகுகாலமாக ஆடுமாடுகளை மேய்த்துக்கொண்டு காலங் கழித்து வந்தாலும், கல்வி கேள்விகளில் இந்தப் பூலோகத்திலுள்ள சகல ஜாதியார்களிலும் சிறந்தவர்களாக விருந்தார்கள். பொதுவாக ஸம்ஸ்கிருத பாஷைக்கு எழுத்துக்களில்லாமையாலும், ஆரியர்களுடைய நடையுடை முதலானவைகளைக் காட்டச் சரித்திரமே யில்லாமையாலும், அவர்களுடைய பூர்வ ஸ்திதியையும், சமயாசாரங்களையும் விவரமாயறிந்து தெளிவித்தல் அசாத்தியமே; ஆனாலும், இந்துவென்று உடம்பெடுத்து 50 வருஷகாலமாக இந்து சமயத்தைப்பற்றி இத்தேசத்து நூல்களினாலும், இங்கிலீஷ் பாஷையில் மொழிபெயர்க்கப்பட்ட இந்துசமய நூல்களினாலும் யாமறிந்ததைச் சுருக்கமாக அறிவிக்கிறோம்.

## க-வது, இந்துமதஞானோதயத்தின் முதற்படி, வேதம்.

### சுருதிகளின் உற்பத்தி விபரம்.

இந்து சமயத்தைச் சரியாக அறிவிக்கவேண்டுமாயின் அவற்றின் சுருதி, ஸ்மிருதி, புராண, இதிகாசாதிகளை விசாரிக்கவேண்டும். முதலாவது: சுருதியாகிய வேதத்தைப்பற்றிச் சொல்லுவோம்.

## இந்துமத வேதங்களின் விவரம்.

வேதம் என்பது வடமொழிப்பதம். இப்பதம் வித் என்னும் தாதுவிலிருந்து பிறந்தது. இதற்கு "வேதயதீதிவேத:" அறிவிக்கின்றமையால் வேதம் என்னும் பெயரைப் பெற்றது. இப்பதத்திற்கு அமரத்தில் வேதம், சுருதி, ஆம்நாயம் என்னும் மூன்று பதங்களும் ஒரேபொருளைக் குறிப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இவற்றுள் வேதம் என்பதற்கு நிஷ்பத்தி கூறுங்கால் "விதந்தியநேந தர்மாதர்மா விதிவேத:" என்றதனால் இதன் சஹாயத்தினால் தர்மாதர்மங்களை அறிகிறார்கள் ஆகையால், வேதமாயிற்றென்றும்; "சுரூயத இதி சருதி:" என்றதனால் கேட்கப்படுவதனால் என்றால் பரமேசுவரரிடமிருந்து நேராகக் கேட்கப்பட்டபடியால் சுருதி ஆயிற்றென்றும்; சுரோத்ரேந்திரியத்தால் சப்த ரூபமாக அறியப்படுகிறபடியால் "சுருதி" ஆயிற்றென்றும்; "ஆம்நாயதே பாரம்பர்யேணேத்யாம்நாய:" என்றால், பரம்பரையாய் அப்பியசிக்கப்படுகின்றமையால், என்றால், தகப்பன் மகனுக்கும், மகன் பேரனுக்கும் இன்னும் இவ்விதமாகவே சந்ததிதோறும் சந்தைசொல்லி நிலைத்தபடியால் "ஆம்நாயம்" என்ற பெயரைப் பெற்றதென்றும் பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

இந்த வேதத்தை ஆதியில் பரமேசுவரரே இயற்றியதாக இன்றளவும் சிலர் எண்ணியிருக்கிறார்கள்; எப்படியெனில், ஆதியில் பரமேசுவரரே இந்த வேதத்தை ஆதிமனுஷனாகிய பிரம்மாவுக்கு நேராக உபதேசித்ததாகவும், அந்த பிரம்மாவானவர் அக்காலத்திலிருந்த சில உத்தம ரிஷிகளுக்கும், தபோநிதிகளுக்கும், முனிவர்களுக்கும் உபதேசித்ததாகவும்; அவர்கள் தம் தம் சீடர்களுக்கு வரிசைக்கிரமமாகப் போதித்தும் வரவே, சங்கன் என்னும் ஓர் அசுரன் அந்தவேதத்தைத் திருடிக்கொண்டுபோய் மறைத்து வைத்துவிட்டதாகவும், அதை மறுபடியும் மச்சஸ்வரூப பெயரையுடைய பரமேசுவரர் மீட்டுக்கொடுத்துப் பத்திரமாக வைத்துப் பாதுகாக்கும்படி கட்டளையிட்டதாகவும், ஆகவே, அன்றுமுதல் இந்த வேதத்திற்கு இரகசியசாதனம் என்னும் மறை என்ற பெயரைப் பெற்றதாகவும், அதை அத்தியயனம் செய்து ஆதரிக்க அநர்ஹாளான மூடர்வசம் அகப்படாதபடி, சுருதி நாமசப்த ரூபமாக்கிச் சிலமஹான்களுடைய ஹ்ருதயம் என்னும் மஹா

இரகசியமான பெட்டியில் மறைந்து வைக்கப்பட்டும், அவர்களால் அவர் சந்ததிகளில் சாதுக்களான சிலருக்கு மாத்திரம் சந்தை சொல்லிப் பாதுகாக்கப்பட்டதாகவும் சொல்லுகிறார்கள். இப்படி இந்த வேதத்தைப் பரமேசுவரராலேயே ஆதியில் போதிக்கப்பட்ட தென்பவர்களுக்கு சிரேளதிகள் என்று பெயர்.

சிலர், வேதத்தில் கண்ட சந்ததிகள் பல காலங்களில் பல மஹான்களால் இயற்றப்பட்டவைகளாகவும், அதற்கு உதாரணமாக, விசுவாமித்திரர் : ரிக்வேதம் 3-வது கண்டத்திலுள்ள கீதங்களுக்குக் கர்த்தாவாகவும்; பாரத்துவாஜர் : ரிக்குவேதம் 6-வதுகண்டத்தில்சேர்மானமான கீதங்களுக்குக்கர்த்தாவாகவும், வசிஷ்டர்: ஷை 7-வது கண்டத்தின் கீதங்களுக்குக் கர்த்தாவாகவும், கிருத்சம்மதன்: ஷை 2-வது கண்டத்தில்டங்கிய கீதங்களுக்குக் கர்த்தாவாகவும், வாமதேவர் : ஷை 4-வது கண்டத்தின் கீதங்களுக்குக் கர்த்தாவாகவும், புதர் அத்திரியன் மற்ற சந்ததிகள்: 5-வது கண்டத்தின் கீதங்களுக்குக் கர்த்தாவாகவும் இருக்கிறதன்றியில்; அகஸ்தியர், கஸியபர், ஆங்கீரசர், ஜமதக்கினி, பராசரர், கௌதமர், பிரகஸ்பதி, நாரதர், கண்ணுவர், மேதாத்தி, மதுசந்தனர், சுனஸேபன், குத்ஸன், சலியன், விரகங்கர், திர்தசயன் முதலானவர்கள ஷை வேதத்தின் மற்ற காண்டங்களின் கீதங்களுக்குக் கர்த்தர்களாக இருப்பதாலும்,இவர்கள் யாவரும் மானவஜாதியார்களாகையாலும், இவர்களால் இயற்றப்பட்ட வேதவாக்கியங்களாலேயே பரமேசுவரரின் பெருமை வியக்தமாக விளங்கமாட்டாததாகையாலும்; இவர்களையும், இவர்களிலும் வல்லவர்களையும், மற்றும் அநந்த அற்புதமான சராசரங்களையும் தாங்கிக்கொண்டிருக்கிற இந்தப் பிரபஞ்சமே பரமேசுவரருடைய பெருமையைப் பல மடங்கு பிரபலமாகக் காட்டுவதால், இந்தப் பிரபஞ்சமே வேதமென்றும் சொல்லுகிறார்கள். இப்படி இப்பிரபஞ்சமே வேதமென்று சொல்லுபவர்களுக்குப் பிரபஞ்ச வேதிகள் என்று பெயர்.

இப்படி இந்த வேதத்தின் உற்பத்தியைப்பற்றிப் பலர் பலவிதமாக அபிப்பிராயப்பட்டாலும், இதில் அடங்கியிருக்கும் பொருள்கள் மாத்திரம் இந்தப் பூவுலகில் பிரபலமாகவிருந்து எல்லாத் தேசத்தாருடையவும், எல்லாக் காலத்தாருடையவும், எல்லா ஜாதியாருடையவும், எல்லா மதஸ்தர்க

ளுடையவும், எல்லா வேதங்களுக்கும் புராதனமும் பெருமை பெற்றதும், இகபர சுகத்துக்கு இன்றியமையாத கர்மானுஷ்டானங்களைப்பற்றியும், தத்துவஞானத்தைப்பற்றியும், ஈசுவர உபாசனையைப்பற்றியும், ஈசுவரனை அடைந்து ஆநந்தமடையும் வழியைப்பற்றியும், தெள்ளத்தெளியத் தெரிவிக்கும் சிறந்த சாதனமென்று சகலகால சகலதேச புத்திமான்களும் அங்கீகரிக்கிறார்கள்.

## வேதத்தின் மூன்று காண்டங்கள்.

இப்படிப்பட்ட இந்து வேதத்தில் கரும காண்டம், உபாசனா காண்டம், ஞான காண்டமென்ற மூன்று வகுப்புகளிருக்கின்றன.

1. முதல் வகுப்பாகிய கரும காண்டத்தில்: இகபர சுகத்துக்கேற்ற கர்மானுஷ்டானங்களைச் செய்கிற முறைகளையும், அசுவமேதம் முதலான யாகக்கிரியைகளைச் செய்கிற விதங்களையும், அவைகளைச் செய்வதனால் கிடைக்கும் பலன்களைப்பற்றியும்,—

2. இரண்டாவது வகுப்பாகிய உபாஸனா காண்டத்தில்: பரமேசுவரரிடம் பக்தியை வைக்கும் விதங்களையும், அப்படி பக்தி வைப்பவர்களுக்கு உண்டாகும் பலன்களைப்பற்றியும்,—

3. மூன்றாவது வகுப்பாகிய ஞான காண்டத்தில்: தத்துவஞானத்தினால் பிரமஞானத்தை யடையும் வழியையும், அதனாலடையக்கூடிய பலனைப்பற்றியும் சொல்லப்பட்டிருக்கின்றது.

## பிராம்மண மந்திரங்கள்.

மேலும், இந்த வேதத்தில் பிராம்மணம், மந்திரம் என்னும் இரண்டு பாகங்களிருக்கின்றன. பிராமமணம் என்றால் பிராம்மணர் அனுஷ்டிக்கவேண்டிய விதிகள். மந்திரம் என்றால் ஸ்தோத்திரங்கள். இவற்றில் வேதோக்த கருமங்களையும், அவைகளை உபயோகப்படுத்தும் விதங்களையும், உதாரணங்களையும், தர்க்கங்களையும், தத்துவ விஷயங்களையும்பற்றிப் போதிக்கிற சங்கேதங்க ளிருக்கின்றன. அன்றியும், ஒவ்வொரு சங்கேதத்துக்கும் ஒவ்வொரு பிராம்மணமும், அந்தந்த பிராம்

மணங்கள் அந்தந்த வேதத்தின் கருத்தை ஸ்தாபிக்கின்றது. எப்படியெனில், ருக்வேதபாகத்தின் பிராம்மணங்கள் ஹோத்ரி களுடைய கடமைகளைப்பற்றியும், யஜுர் வேதத்தின் பிராம் மணங்கள் அதவர்யூவின் கடமைகளையும், சாமவேதத்தின் பிராம்மணங்கள் யுத்காதிரி பாடும் சாமகானத்தையும்பற்றிச் சொல்லியிருக்கிறதன்றியில், வேதபாகத்தில் புராதனமான ஐதரேய பிராம்மணமும் கௌசிதாகி பிராம்மணங்களும்; எஜுர்(கருப்பு)வேதபாகத்தில் தைத்திரேய பிராம்மணமும், ஷை வெள்ளைவேத பாகத்தில் சாதாபத பிராமணமும், சாம வேத பாகத்தில் சிறந்த எட்டுப் பிராம்மணங்களில் தாண்டிய பிராம்மணமும், அதர்வணவேதபாகத்தில் கோபாத பிராம் மணமும் இருக்கிறது. இந்தப் பிராம்மண மந்திரங்கள் ஆரிய ருடைய ஆதி வசன காவியங்களெனத் தோற்றுகின்றன. இந்துவேதத்தில் இப்படி பிராம்மண மந்திரங்களிருப்பதன்றி யில், அநேக ஆரண்ணியங்கள் என்னும் வேறொருவித பாகங் களும் இருக்கின்றன.

## ஆரணியகங்கள்.

அருணன்—சூரியன் சூரியமண்டலாவர்த்தியான ஈசுவர ஸ்தோத்திரங்கள் மலிந்திருக்கின்றமையால் ஆருணம், ஆரண் யகம் எனப் பெயர்பெற்றதெனச் சொல்வாரு முண்டு. மேலும், வேதத்துக்குள்ள பலநாமங்களில் "ஆரணம்" என் பதும் ஒரு பெயராய் வழங்குகிறதாகச் சிலர் அபிப்பிராயப் படுகிறார்கள். ஆயினும்,

ஆரண்யகம் என்றால் ஸம்ஸ்கிருத பாஷையில் வனம் என்று பெயர். அதாவது ஆரியர்கள் இல்லறத்தைத் துறந்து, வானப்பிரஸ்தம் சன்னியாசம் பெற்றுக்கொண்ட பிறகு, காடு வனங்களுக்குப்போய் ஜகதீசுவரனைப் பாடிப் பொழுதுபோக் கும் பாட்டுகளாம். இவ்வாரணியகங்களில் பரமேசுவர ருடைய பெருமையைப்பற்றியும், பின்னும் வனவாசிகள் அனுஷ்டிக்கவேண்டிய தருமாதிசடங்குகளைப்பற்றியும் சொல் லப்பட்ட பிரமாண பத்ததிக ளிருக்கின்றன. இவைகளில் பிரஹதாரணியகம், தைதிரியாரணியகம், ஐதிரேயாரணியகம், கௌசிதாகி ஆரணியகம் என்ற நான்கும் சிறந்தவை. இவ் வாரணியகங்களின் ஆழ்ந்த கருத்துக்களை உற்றுப்பார்ப்பவர் களுக்கு, இவை கேவலம் முன் சொன்ன பிராம்மணங்களின்

விரித்துரை என்று ஸ்பஷ்டமாகும்; ஆனால், பிராம்மணங்களுக்கும் ஆரண்யகங்களுக்கும் வித்தியாசம் என்னவென்று பரிசிலனை செய்யில், இவ்வாரணியகங்களில் தத்துவ ஞானத்தைப்பற்றி விசேஷமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதமாகத் தத்துவஞானத்தைப் போதிக்கப்பட்டவைகளுக்கு உபநிஷத்துக்கள் என்று பெயர். இந்த உபநிஷத்து பாகங்களைத்தான் பரதகண்டத்தில் பெரும்பான்மையார் பெருமைப்படுத்திக் கொண்டாடுகிறார்கள்.

இவ்வுபநிஷத்துக்களின் ஆதாரத்தையே வேதத்தின் முடிவான சாராம்சத்தைத் தழுவுபவர்களென்னும் வேதாந்திகளும்; சாங்கியர், வைசேஷிகர், நையாயிகர், யோகிகள் என்றுதி தத்வசாஸ்திரிகளும் தம்தம் சித்தாந்தங்களுக்குப் பிரமாணங்களாகக் கொண்டாடுவதன்றியில்; இந்த ஆரியதேசத்தில் ஆதியிலிருந்த அநேக மதஸ்தர்களும், இக்காலத்திலிருக்கும் சைவம், வைணவம், சாக்தேயம், காணுபத்தியாதி அநேக மதஸ்தர்களும், தம்தம் மதங்களுக்கு ஆதார பிரமாணங்களென்று சொல்லிக் கொண்டாடுகிறார்கள். இவ்வாரணியங்களுக்கும் உபநிஷத்துக்களுக்கும் அதிக நெருங்கிய சம்பந்தம் இருப்பதைப்பற்றியே, இவ்வாரணியகங்களையும், உபநிஷத்துக்களையும் கலந்து சாதாபதபிரமாணத்தைச் சார்ந்ததை பிரஹதாரணியக உபநிஷத்து என்றும், ஐதரேய உபநிஷத்தைச் சார்ந்ததை ஐதரேய பிரமாணமென்றும் சொல்வது ஸ்பஷ்டம்.

இப்படி ஆரணியகம் உபநிஷத்துக்களென்னும் பாகங்கள்தவிர வேதத்தில் சூத்திரங்கள் என்னும் பாகங்களுமிருக்கின்றன.

## சூத்திரங்கள்.

சூத்திரங்கள் என்றால் சுருக்கமானவைகள். இவைகள் வேதங்களுக்கும் பிற்காலத்து ஸ்மிருதிகளுக்கும் சம்பந்தப்படுத்துகிறவைகளாக இருக்கின்றன. இவைகளில் கல்ப சூத்திரங்கள், கிருஹ்ய சூத்திரங்கள், சமயாசாரிக சூத்திரங்கள் சிறந்தவை.

ஆரியர் வேதத்தில் இப்படி கருமகாண்டம், உபாசனா காண்டம், ஞானகாண்டம், பிராம்மணங்கள், மந்திரங்கள், ஆரணியகங்கள், உபநிஷத்துக்கள், சூத்திரங்கள், யாகயக்ஞியங்

கள் முதலானவை ஒருமிக்கக்கலந்து படிப்பவருக்குக் கஷ்ட சாத்தியமாக விருந்தமையால், வாதராயணரிஷியானவர் (அத்தியயனம் செய்வோருக்கு அநுகூலமுண்டாகும்படி இந்த ஆரியர்வேதத்தை) ரிக்கு, யஜுர், சாமம், அதர்வணம் என நாலுவேதங்களாக வகுத்தார். அன்றுமுதல் அந்த மஹரிஷிக்கு வியாசர் அதாவது வி + ஆஸ்=வகுத்தல், வேதத்தை வகுத்தவர் என்னும் வேதவியாசர் எனப் பெயருண்டாகியது. அப்படி அவர் வகுத்த வேதத்தின் நான்குவகுப்புகளின்சார சங்கிரகத்தை இதனடியில் காட்டுகிறோம்.

## இருக்குவேதம்.

இருக்கு என்பது ரிக் என்னும் வினைச்சொல்லிலிருந்து உற்பவமாகியது. இப்பதத்துக்குத் துதித்தல், ஸ்தோத்திரம் செய்தல் என்றுகி பொருளாம், என்றால், பரமாத்மாவைச் சங்கீத பிரார்த்தனைகளினால் புகழ்ந்துகொண்டாடும் வாக்கியங்களையுடைய பாகமாம்.

இந்த ரிக்வேத பாகம் 10-மண்டலங்களாக வகுக்கப்பட்டும், சுமார் 3000-வருஷங்களுக்குமுன்பே இதன் ஒவ்வொரு வாக்கியம், வார்த்தை, சீர், அசைகளை எண்ணிக் கணக்கிட்டதில்; 10,672 சங்கீதப்பாட்டுகளும், 1,53,825 பதங்களும், 4,32,000 அசைகளும் அடங்கியிருக்கின்றதாகக் கணக்கிட்டிருக்கின்றார்கள். இந்தப்பத்துமண்டலங்களில் ஒன்றுமுதல் ஏழுவரையிலுள்ள மண்டலங்களில் பெரும்பான்மையான சங்கீதங்கள் பரப்ரஹ்மத்தை அகனி என்னும் நாமத்தால் பாடப்பட்டிருக்கின்றன. 10 - வது மண்டலத்தில் ப்ரஹ்மத்தை இந்திர நாமத்தால் பாடப்பட்டிருக்கின்றது. மற்ற சங்கீதங்கள் ப்ரஹ்மத்தை வைஸ்வதேவதைப் பெயரால் பாடப்பட்டிருக்கின்றது. 8-வது மண்டலத்தில் 92 சங்கிதங்களும், 9-வது மண்டலத்தில் 114 சங்கிதங்களும், இவைகளில் சில சோமபூண்டைப்பற்றியும் பாடப்பட்டிருக்கின்றது.

இந்த ரிக்வேதத்தைப்பற்றிச் சற்று விவரமாகச் சொல்ல வேண்டுமானால், இதை அஷ்டபாகங்கள் அல்லது சந்தஸூக்களாக வகுக்கப்பட்டும், இந்த சந்தஸூக்களையும் உட்பிரிவுகளான அநேக அத்தியாயங்களாக வகுக்கப்பட்டும், மற்றொருபிரிவைப் பத்துமண்டலங்களாகவும், இந்த 10 மண்டலங்களுக்குள் 100-க்கு மேற்பட்ட அனுவாகங்களாகவும்

வகுக்கப்பட்டிருக்கிறதன்றியில், இவ்வனுவாகங்களில் சுமார் 1000 சூத்திரங்களென்னும் கீதங்களும், மேலேநின்ற உட்பிரிவில் 2000 வருக்கமென்னும் பிரிவுகளும், ஆக இவ்விரண்டில் 10,000-க்கு மேற்பட்ட சங்கீதங்கள் அடங்கியிருக்கின்றன.

மேலும், இதில் ஒவ்வொரு சங்கீதத்தை இயற்றிய ரிஷியின் பெயரும், அது எந்தத் தேவதையின் பெயரால் இயற்றப்பட்டதோ அந்தத் தேவதையின் பெயரும், எந்த விஷயத்துக்காக இயற்றப்பட்டதோ அந்த விஷயத்தின் விவரமும், எவ்வித கர்மானுஷ்டானங்களால் ஓதப்படவேண்டுமோ அவையும், இசைவிகற்பங்களும், கீதங்களின் கருத்தும் அறிவிக்கப்பட்டிருக்கின்றன.

அன்றியும், இந்த வேதத்தின் முதற்புத்தகம் 15-வது அத்தியாயத்தில்: குத்ஸன் என்பவனைப்பற்றியும்,கங்காபுத்திரன் திருதன் என்பவனைப்பற்றியும் 2-கீதங்களும்; மற்றொரு கீதத்தில் அப்புவின் புத்திரர்களாகிய ஆப்தியாகன் என்றுதித்தோர்களர்கள் ஓர் பாலைவனத்தின் வழியாகப்போய், அவர்களில் ஒருவன் தாகத்துக்காகக் கிணற்றிலிறங்க, மேலிருந்தவன் ஓர் வண்டியின் சக்கிரத்தை அக்கிணற்றின்மேலே போட்டு மூட, உள்ளிருந்தவன் பரிதாபத்தோடு பாடிய கீதங்களிருக்கின்றன.

இருபத்து மூன்றுவது அத்தியாயத்தில்: அகஸ்தியர், இந்திரன், மருத்துக்கள்கூடி நடந்த சல்லாபனைகளும், 24-வதில் பரமேசுவரனை: அசுவினி, ஆதித்தன் முதலான பெயர்களால் அகஸ்தியர் பாடிய 26-கீதங்களும், அவர் விஷத்துக்கு அஞ்சிப்பாடிய கடைசி கீதமும் இருக்கின்றன. இதே மாதிரியாகவே 7-வது புத்தகம், 3-வது அத்தியாயம், 8-வது பிரகரணத்தில் வசிஷ்டரும் விஷத்தின் வேதனையை நீக்கப் பாடியிருக்கின்றார்.

மூன்றுவது புத்தகம் 5-அத்தியாயங்களில்: காதிமன்னன் புத்திரன் விசுவாமித்திரன் இயற்றிய பிரார்த்தனைகளில் கடைசிக் கீதத்தில் 6-மந்திரங்களும், அவற்றின் ஒன்றில் பரமாத்மாவை ஓங்காரங் காயத்திரியுமாகப் பாடப்பட்டிருக்கின்றது.

6-வது புத்தகம் 3-கீதங்களில் பரமேசுவரனைச் சூரியன் பெயரால் பிரார்த்திக்கப்பட்டும், மழையில்லாத காலத்தில்

மேகத்தை நோக்கிப் பாடியும், தவளைகள் கூவுகிறபடியாகவும் வசிஷ்டர் பாடிய பாட்டுகளு மிருக்கின்றன.

7-வது புத்தகம் 3-வது அத்தியாயக் கடைசியில் ஆரியர் ஆதியில் வீடுவாசல்களைக் கட்டும்போது உச்சரிக்கும் மந்திரங்களும், இல்லறதேவதையைப்பற்றிய கீதங்களும், 4-வது அத்தியாயம் 4-வது கீதத்தில் ருத்திரனை நோக்கிப் பாடும் பாட்டுகளு மிருக்கின்றன.

7-வது புத்தகத்தின் கடைசிப் பாகத்தில் ஆதிகாலத்திலிருந்த ராஜாக்களுடைய பெயர்விவரங்களைப்பற்றிப் பிரஸ்தாபிக்கப்பட் டிருக்கின்றது.

8-வது புத்தகம் 27-வது அத்தியாயத்தில்: இராஜபட்டாபிஷேகம் செய்யும் விவரங்களைப்பற்றியும்; 3-முதல் 38-வரையிலுள்ள அத்தியாயங்களில்: இந்திரன் தேவர்களை வர்ணிக்கும் விதங்களையும்; 34-வது அத்தியாயத்தில்: பயபக்திக்குரிய கர்மங்களைப்பற்றியும்; 4-வது அத்தியாயத்தில்: புரோஹிதர்களையும், ஆசாரியர்களையும் தெரிந்தெடுக்கும் விஷயங்களைப்பற்றியும், அவர்களுக்குச் செய்யவேண்டிய மரியாதைகளைப்பற்றியும் பிரஸ்தாபிக்கப்பட் டிருக்கின்றது.

10-வது புத்தகம் 6-வது அத்தியாயத்தில்: சத்துருக்களை ஜயிக்கக்கருதி 2-கீதங்களும், 7-வது அத்தியாயத்தில்: சந்திர சூரியர் சல்லாபனையைப்பற்றியும்; எமன் எமுனைவைக் கெடுக்க எத்தனித்தபோது நீதிமொழிகளைப் பாடித்தடுத்த கீதங்களும், 10-வது அத்தியாயம் கடைசிப்பாகத்தில்: அம்பாரிஷன் குமாரி சிரேஷ்டவாக்காளைப்பற்றியும், முடிவில் சூரியனைப்பற்றி வர்ணிக்கப்பட்டும், 11-வது அத்தியாயத்தின் முதலில் மதுசந்தன் புத்திரன் அகமரசன் உலகசிருஷ்டி விஷயமாகப் பாடிய 2-கீதங்களு மிருக்கின்றன.

இந்த ரிக்வேத பாகத்துக்குச் சம்பந்தப்பட்ட மற்றோர் பாகத்துக்கு ஐதிரேய பிராம்மணம் என்று பெயர். இந்த பிராம்மணத்தை அஷ்டபஞ்சிகங்களாக வகுக்கப்பட்டும், அப்படி வகுக்கப்பட்ட பஞ்சிகங்களில், 5-அத்தியாயங்கள் அத்தியயனங்களாகவும், ஏகதேசமான எண்களுடைய பிரகரணங்கள் அல்லது ஸந்தலைகளென்னும் 285-பிரிவுகளுள்ளதாகவும் இருக்கின்றது. இந்த வேதத்தின் மற்றொரு பாகம்

ரேயஆர்ணியகம் 5-பாகங்களாகவும், 18-அத்தியாயங்களுள்ளதாகவும், இரண்டாவதில் 7-அத்தியாயங்களும் இருக்கின்றன. இதிலிருந்தே ஐதிரேய உபநிஷத்து உண்டாகியது.

இந்த உபநிஷத்தில் உலக சிருஷ்டியைப்பற்றி விசித்திர விநோதமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறதன்றியில், ஆத்ம தத்துவ விசாரணையைப்பற்றியும் விஸ்தாரமாக விவரிக்கப்பட்டிருக்கிறது.

அன்றியும், இந்த வேதத்தின் மற்றொரு முக்கிய சாகையைச் சார்ந்தது கவுஷீதாக பிராம்மண உபநிஷத்து. இதில் வேதாந்த தத்துவங்களைப்பற்றி அஜாதசத்துருவுக்கும், பாலாகி என்னும் குருவுக்கும் ஞானோபதேசமாக நடந்த சல்லாபனைகளும், இதன் சங்கிரகத்தை மாத்துவாசாரியர் குருவாகிய வித்தியாரணிய சுவாமிகள் 20-அத்தியாயங்களில் 12-உபநிஷத்துகளைச் செய்யுள் நடையாக விரித்துரைத்திருக்கின்றனர். இதைச்சார்ந்த கவுஷீதஹியின் மூலப்பிரதி வேதத்தின் ஒருபாகமாகவும், அதன் ஆரம்பத்தில் காங்கேயனி என்னும் இந்திரனும், சுவேதகேதுவும், அருணன் புத்திரனாகிய உத்தாலகரோடு செய்த பிரசங்கங்களிருக்கின்றன.

கடைசியாக இந்த ரிக்வேத பாகத்தில் பலபொருள்களைப்பற்றிச் சொல்லியிருக்கினும், பரப்ரஹ்மத்துக்கு அக்கினி, வாயு, சூரியன், பிரஜாபதி, இந்திரன், வருணன், மித்திரன் என்றுதி பெயர்களாலும், படைத்தழித்தாக்கவல்ல முத்தொழிற் காரணமூர்த்தி யென்றும், அவர் ஓம் என்னும் பெயரால் பிரகாசிக்கிறாரென்றும் பிரபலப்படுத்தப்பட்டிருக்கிறது.

## யஜுர்வேதம்.

ஸம்ஸ்கிருதபாஷையில் யாஜ் என்னும் பதத்திற்கு யாகம் பலி என்றுதி பொருள்களானபடியால், வேதத்தின் இந்தப் பாகத்தில் அதன் பொருளுக்குத் தக்கபடி ஆதி ஆரியர்கள் யாகம், பலி, தானம் முதலான சடங்குகளைச் செய்யும் விவரங்களும், புரோஹிதர்கள் பாடும் பாட்டு முதலியவைகளும், நைவேத்திய விவரங்களும், அவைகளுக்கு ஆதி முக்கிய ஆதாரங்களுமாக இருக்கின்றன. இதைத் தழுவிவரும்புரோஹிதர்களுக்கு அத்வர்யுகள் என்று பெயர்.

இந்த யஜுர்வேதத்தின் முதன்மையான பாகங்களில் மந்திரங்களும், சம்ஹிதத்தில் 40-அத்தியாயங்களில் ஸ்தோத்திரங்களு மிருக்கிறதன்றியில், ருக்வேதத்தில் இருப்பன போல 286-அநுவாகங்களும், சுமார் 1987-பிரகரணங்களும், ஒரே வாக்கியத்தைப் பலதரம் பாடுவதினால் 13-முதல் 117-கந்திகளும் அடங்கியிருக்கின்றன.

முதலிரண்டு அத்தியாயங்களில் அமாவாசை, பௌர்ணமி காலங்களில் செய்யவேண்டிய வேள்விகளைப்பற்றியும், கடைசிப் பிரகரணங்களில் பிதுர்கர்மங்களைச் செய்யும் விதங்களைப்பற்றியும், 3-வது அத்தியாயத்தில் நித்தியாக்கினி நிவேதனத்தைப்பற்றியும், இரத்த பலியைப்பற்றியும், அடுத்த 5-அத்தியாயங்களில் அக்கினிஷ்டோமத்தைப்பற்றியும், சோமபானத்தைப்பற்றியும் சொல்லப்பட்டிருக்கின்றன.

அடுத்த இரண்டு அத்தியாயங்களில் வாஜபேயம், ராஜசூயம், ராஜபட்டாபிஷேகம் முதலான சடங்குகளைப்பற்றியும், பத்தாவது அத்தியாயத்தின் கடைசிப் பிரகரணத்தில் சௌத்திராமணியாகத்தைப்பற்றியும், 19, 20-வது அத்தியாயங்களிலும், 22-முதல் 25-வரையிலும், இராஜாக்கள் சர்வதேச சக்கிரவர்த்திகளாக விரும்பிச்செய்யும் அசுவமேதயாகத்தின் சடங்குகளையும், சங்கிதங்களையும், அடுத்த இரண்டு அத்தியாயங்களில் பற்பலவித விஷங்களைப்பற்றியும் சொல்லப்பட்டிருக்கின்றன.

30, 31-வது அத்தியாயங்களில் சௌத்திராமணி, அசுவமேதயாகம், புருஷமேதயாகம், நாராயணபலி செய்யும் சடங்குகளைப்பற்றியும்; அடுத்த 2-அத்தியாயங்களில் சருவமேதயாகத்தைப்பற்றியும், அதற்கடுத்த அத்தியாயத்தில் பிதுர்மேதம் அல்லது அபர கிருத்தியங்களைப்பற்றியும்; கடைசி 5-அத்தியாயங்களில் அதர்வணபுத்திரன் அல்லது ததயக்கனைக் குறித்து யக்கியம், தவம், நியமம் முதலியவைகளைப்பற்றியும், கடைசி அத்தியாயத்தில் தத்துவஞானபிரம்மஞானங்களைப்பற்றியும் போதிக்கின்றது.

இந்த 5-அத்தியாயங்கள் தவிர, ஸ்தோத்திரத் திரட்டில் பரமேசுவரனை பிரஜாபதி, பரமேஷ்டி, நாராயணன், பிரஹஸ்பதி, இந்திரன், வருணன், அசுவினி என்றுதிப்பெயர்களால் வருணிக்கப்பட்டிருக்கின்றன. இந்த ஸ்தோத்திரங்களுக்கு வசிஷ்டர், வாமதேவர், விசுவாமித்திரர், மதசந்த

மேதாதிதிமுதலானவர்கள் கிரந்தகர்த்தர்களென்று ஸ்பஷ்டமாகிறது. மேலும்,

இந்த வேதத்தின் 40-வது அத்தியாயத்திலிருக்கும் ஈசாவாஸ்யம் என்னும் உபநிஷத்தை அதர்வணன் புத்திரனாகிய ததயக்கன் இயற்றியதாகவும் தோன்றுகிறது. 2-வது பாகத்தில் சதப்திய பிராம்மணமும் இதில் 14-காண்டங்களும், இக்காண்டங்களும் இரண்டு பாதங்களாக வகுக்கப்பட்டும், முதல் பாதத்தில் 10-காண்டங்களும், 2-வதில் 4-காண்டங்களு மிருக்கிறதன்றியில், புத்தக முழுதும் பிரபாடகம் என்னும் அத்தியாயங்களாகவும், காந்திகங்கள் என்னும் சிறிய பிரிவுகளாகவும் இருக்கின்றன. இந்தப் பாகமடங்கிய 14-காண்டங்களில் 68-அத்தியாயங்களும், 100-அத்தியயனங்களு மிருக்கின்றன.

பிராம்மணம் என்னும் பிரத்தியேகபாகத்தில் 440-பிரிவுகளும், 7624-காந்திகங்களு மிருக்கின்றன. சமய கிரியைகளுக்கடுத்த ஸ்தோத்திரங்களில் முதலிரண்டு காண்டங்கள் அமாவாசை, பௌர்ணமிகளில் ஓமாக்கினி செய்யும் விதங்களையும் விவரமாக்கப்பட்டிருக்கிறதன்றியில், 3-4-காண்டங்களில் சோமரசத்தைத் தயார்செய்யும் விதத்தையும், ஜயாதிஸ்தோமாதிகளைப்பற்றியும், அடுத்த 5-வது காண்டத்தில் ராஜசூய யாகத்தைப்பற்றியும், அதற்கடுத்த 4 - காண்டங்களில் யக்கிய ஓமாக்கினி பிரதிஷ்டையைப்பற்றியும், 10-வது காண்டத்தில் அக்கினி ரகசியத்தையும், அச்சடங்கைச் செய்வதனு உண்டாகும் பலன்களைப்பற்றியும், இரண்டாம் பாகத்தைச்சார்ந்த காண்டங்களில் சௌத்திராமணி யாகத்தையும், கடைசியிலிருக்கும் 4-வது காண்டத்தில் பிரம்மஞானத்தையும், முதல் 13-காண்டங்களில் அசுவமேதத்தையும், 16-வது காண்டத்தில் பிரஹதாரணியகத்தைப்பற்றியும் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றது.

இந்த யஜுர்வேதத்தில் சொல்லியிருக்கும் அசுவமேத புருஷமேதாதி யாகங்களில், உண்மையாகவே குதிரைகளையும் புருஷர்களையும் பலிகொடுப்பதாகச் சிலர் எண்ணுகிறார்கள். அந்தோ! அது தப்பெண்ணம். அசுவமேதயாகத்தில் 609-மிருகங்கள், பசுபக்ஷியாதி ஜந்துக்களை 21-யாகஸ்தம்பங்களில் கட்டியும், வீட்டுக்குரிய சாதுவான மிருகங்களைக் கற்

ராண்களுக்கு மத்தியில் கட்டியும் யாகஸ்தோத்திரங்களைச் செப்பியபிறகு, அப்பிராணிகளுக்கு எவ்வித வருத்தமும் இல்லாதபடி அவிழ்த்துவிடும்படி விதிகளிருப்பதன்றியில், புருஷமேதயாகத்தில் பற்பல குலஸ்தரான 185-புருஷரை 11-யாகஸ்தம்பங்களில் கட்டி ஒட்டலங்காரமான நாராயணபலி கீதங்களைப்பாடி முடிந்தபின் அப்புருஷர்களுக்கு எவ்விதமான வருத்தமும் கோடாமல் அவிழ்த்துவிடும்படி விதிகளிருக்கின்றன. ஆகவே, இந்த யாகங்களெல்லாம் கேவலம் ஒட்டலங்காரமே யொழிய யதார்த்தமான பலிகளல்லவென்று சந்நித வியாக்கியாநங்களால் ஸ்பஷ்டமாகின்றது. அன்றியும், யாகத்தில் உண்மையாகவே பலியிடுகிறவைகளை உண்ண வேண்டுமேன்ற விதிகளிருப்பதால்,புருஷர்களை யாக வஸ்துக்களாகக்கொண்டு சடங்குகளைச் செய்வோர், அந்த யாகபுருஷருடைய மாம்சத்தையும் உண்ணவேண்டுமென்றல்லவா ஏற்படுகிறது? இதை யாரேனும் ஒப்புவார்களா? அதே வேதத்தில் மநுஷமாமிசத்தை யுண்ணக்கூடாதென்று விதி இருப்பது பிரத்தியக்ஷமாகையால், இந்த யாகபலிகள் எல்லாம் ஒட்டலங்காரமேயாம்.

அதற்கு திருஷ்டாந்தமாக, அசுவமேதத்தின் தத்துவார்த்தத்தை விசாரிக்கும்போது அசுவமென்னும் பெயரைப் பெற்ற விராட்டுக்கு, காலைப்பொழுது சிரசாகவும், சூரியன் அதற்குக் கண்ணாகவும், சந்திரன் அதற்குக் காதாகவும், பின்னும் பலவிதமாக வர்ணிக்கப்பட்டு இருத்தல் தைத்திரிய யஜுர்வேதத்தில் சொல்லியிருப்ப தன்றியில், சதபதபிராம்மணம் 14-வது கண்டத்தில் பலிகளைக் கண்டித்திருத்தலும் பிரதியக்ஷம்.

இதைப்பற்றியே வேதவாக்கியங்களுக்கு பூதார்த்தவாதம், குணார்த்தவாதம் என்று இரண்டுவித அர்த்தங்களிருக்கின்றன. விசாரிப்பவர்களுக்கு உண்மை ஸ்பஷ்டமாகும்.

சதபத பிராம்மணத்தின் 14-வது காண்டத்தில் ப்ரஹதாரணியம், வாஜஸ்நேயி அல்லது சுவேதயஜுசுவின் அந்தமிருக்கிறது. அதில் 8-அத்தியாயங்களும், மற்றதில் ப்ரஹதாரணிய உபநிஷத்து அல்லது வாஜஸ்நேய உபநிஷத்து இருக்கிறது. இதற்கு யாக்ஞவல்கியர் போதகர்.

இந்த ப்ரஹதாரண்யத்தில் சிருஷ்டி விஷயத்தைப்பற்றியும், ஆத்மஞான பிரம்மஞான விஷயத்தைப்பற்றியும் பிர

பலமாகச் சொல்லப்பட் டிருக்கிறதன்றியில், யாக்ஞவல்கியருக்கும், அவர் மனைவி மயித்திரேயிக்கும் நடந்த தத்துவசர்ச்சையும் இருக்கிறது.

மேலும், வெள்ளை யஜுஸைவிட கருப்பு யஜுஸின் மந்திரங்கள் விஸ்தாரமாகவும், அதன் சம்ஹிதம் 7-காண்டங்களாகவும் வகுக்கப்பட்டும், அவற்றில், 5-முதல் 7-வரையில் அத்தியயன பிரபாடகங்களடங்கிய 650-கந்தியங்கள் இருக்கின்றன. அன்றியும், காண்டங்களாக வகுக்கப்பட்ட வேறொரு அட்டவணையின் மந்திரத்திரட்டில் அசுவமேதாதிகளைப்பற்றிச் சொல்லப்பட்டிருந்தாலும், கடைசிப் பாகத்தில் சிருஷ்டி விமர்சனையைப்பற்றி விஸ்தாரமாகச் சொல்லப்பட் டிருக்கின்றன. இதன் இரண்டாவது பாகத்திலிருக்கும் ஓர் ஆரணியத்தில் தைத்திரியம், நாராயணம், கடம், சுவேதாசுவதராதி உபநிஷத்துக்கள் இருக்கின்றன.

## சாமவேதம்.

சாமவேத முழுதும் சாமம் என்னும் இன்னிசை கீதங்களுள்ள பாகமாம். இதில் 1549-பாட்டுகளிருந்தாலும், சுமார் 78-பாட்டுகள் ரிக்வேதத்திலிருந்து இதில் சேர்க்கப்பட்டவைகளாகத் தோன்றுகின்றன.

இக்கானப்பாட்டுகளில் பரமேசுவரனை அக்கினி, இந்திரன் முதலான பெயர்களால் பாடப்பட்டிருக்கின்றன. வேதத்தின் இந்தப்பாகத்தைச் சற்று விவரமாகச் சொல்லவேண்டுமானால், இதில் பாபநிவாரணமாகிய பலனைக் கொடுக்கும் கீதங்களாகவும், இக்கீதங்களைப் பாடும்படியான இன்னிசை விகற்பங்களுடனும், இவற்றைப் பாடும் விதத்தினால் அப்பலனைப் பெறக்கூடியவைகளாகவு மிருக்கின்றன. இச் சாமகானத்தைப் பாடுபவர்களுக்கு யுத்காதிரிகள் என்று பெயர்.

இந்த வேதத்தின் பிரதான பாகத்திற்கு ஆர்ச்சிகம் என்று பெயர். இந்த ஆர்ச்சிகத்தில் அரையத்தியாயங்களாகவும், தஸ்தி என்னும் பிரகரணங்களாகவும் வகுக்கப்பட்ட 6-பிரபாடகங்களாகவும், ஒவ்வொரு பிரபாடகத்தில் 10-தஸ்திகளும், அவற்றில் 10-வாக்கியங்களும் அடங்கியிருக்கின்றன. பிரார்த்தனைத்திரட்டில் கிராமகேயகானம் 17-அத்தியாயங்களாகப் பாகிக்கப்பட் டிருக்கிறதன்றியில், மற்றொருபாகம்

ஆரண்யகமென்ற பெயரிடப்பட்டிருக்கிறது. இந்த ஆரணியகத்தையும் 3-பிரதிகளாகவும், 5-அத்தியாயங்களாகவும் வகுக்கப்பட்டும், அவைகளையும் அரை அத்தியாயங்களாகவும், பத்து பத்து பிரகரணங்களாகவும் வகுக்கப்பட்டுமிருக்கின்றன.

மேலும், மேலே காட்டிய அநுபந்தங்களில் உயிரெழுத்துகள் அளபெடுப்பதிலும், ஈருயிர்ப் புணர்ச்சிகளை இரண்டு அல்லது பல அசைகளாக்குவதிலும், ஓசையை ஒழுங்குபடுத்துவதற்காக இலக்க அடையாளங்களை ஏற்படுத்துவதற்கும் இலக்கணங்களிருக்கின்றன. இசைவிகற்பங்களுடைய சில தோத்திரப்பாட்டுகளின் வித்தியாசம் தெரிவதற்காகப் பாட்டுகளை ஒருதரமன்றிப் பலதரம் பாடப்படுகின்றன.

இந்தச் சாமவேதத்தில் ஆரிஷிய பிரமாணம் என்கிற பெயரினால் இரண்டு பாகங்களுக்கு அட்டவணைகளும், அதில் வாக்கியங்களுடைய பெயர்கள் அல்லது முதல் மொழிகள், ஆரணியகானத்தைத் தொடர்ந்துவருகிற கிராமகேயம் அல்லது ஆர்ச்சிகத்தில் வருகிறபடி இலக்கமிட்டும், அவைகள் எந்தெந்தத் தேவதையின் பெயரைச் சொல்லிப் பாடப்படுகின்றனவோ, அந்தந்தத் தேவதையின் பெயரும், சந்தர்ப்பத்தையும் குறிக்காமல் அதுதன் கிரந்தகர்த்தாவாகிய ரிஷியின் பெயரை மாத்திரம் குறிக்கப்பட்டும், இவைகளில் சில பாட்டுக்கள் காதுக்கும் கேட்காத விதமாயும், கேவலம் ஊகையினுலறியக்கூடிய ஊகைக்கானமென்ற ஒருவகுப்பாயுமிருக்கின்றன.

இந்தச் சாமவேதத்தின் 2-வது பாகத்துக்கு உரித்தான பிராம்மணம் என்னும் பெயரால் பலவித கிரந்தங்களும், இவற்றில் ஒன்று விரிவாயும், அவற்றிலொன்றான சாரதிவிநிஷம் என்பதில் 24-அத்தியாயங்களும், மற்றொன்றுக்கு அத்பூதம் என்றும், 3-வது பிராம்மணத்துக்கு பஞ்சவிம்ஷம் என்றும் பெயர்பெற்று, இதில் 24-அத்தியாயங்களிருக்கின்றன. மேலும், இந்த வேதபாகத்தின் பிராம்மணங்களில் தாந்தியம் என்னும் பிராம்மணம் பிரசித்தியானதாய் சாயனசாரியால் வியாக்கியானம் செய்யப்பட்டிருக்கிறதன்றியில், பாஞ்சிகம் என்னும் 2-ம் கண்டம் அடங்கிய பாகத்துக்கு அக்கினிஸ்தோமம் சமயாசாரச் சடங்கு விஷயத்தைச் சார்ந்திருக்கிறது.

கடைசியாக இந்த சாமவேதத்தில் சில பிராம்மண மந்திரங்களிருப்பதன்றியில் விசேஷமும் விஸ்தீர்ணமுமான

சாந்தோக்கிய உபநிஷத்து 8-பிரபாடங்களுடன் இருக்கின்றது. இவைகள் பிராம்மணங்களிலிருந்து சேர்க்கப்பட்டவைகளாகவும், 3-முதல் 10-வரையில் இலக்கமிடப்பட்டும், முதலிரண்டில்சமயாசார சடங்குகள் சேர்க்கப்படாமல் சுமார் 150-பிரகரணங்களுக்குமேலிருக்கின்றன.

இந்தச் சாமவேதத்தில் தலவாகரசாகையைச்சார்ந்த தலவாகர உபநிஷத்துமிருக்கிறது. ஸ்ரீ சங்கரர் பாஷ்யப்பிரகாரம் இது 9-வது அத்தியாயத்தைச் சார்ந்ததாகவும், 4-சந்தசுகளுடையதாகவும், உபாத்தியாயர்களுக்கும் சிடர்களுக்கும் நடந்த சல்லாபனைக ளடங்கியதாகவு மிருக்கிறது.

## அதர்வணவேதம்.

வேதத்தின் 4-வது பாகமாகிய இந்த அதர்வணவேத ஸ்தோத்திரங்களின் திரட்டு 28-காண்டங்களாகவும், 1015-வாக்கியங்களாகவும், சுமார் 100-க்கு மேற்பட்ட அநுவாகங்களாகவும், 760-க்கு மேற்பட்ட சூக்தங்கள், ரிக்குகள் ஏறக்குறைய 40-பிரபாடகங்களாகவும் பிரிக்கப்பட்டிருக்கின்றதன்றியில், 19-வது காண்டம் 45-வது சூக்தம் முழுதிலும் இந்த அதர்வணவேத பாஷை நடை முதலியவற்றைக் காட்டும், அந்தக் காண்டத்தின் ஆரம்பத்தில் 6-வது சூக்தம் வெள்ளை யஜுஸுவின் 31-வது அத்தியாயத்திலிருந்து இதற்குமுன்சொன்ன மொழிகளைப்போ லிருக்கின்றன.

ரிக்குகளிலும் ஆங்காங்கு ஒவ்வொரு மொழி பேதப்படுத்தி மாற்றியிருப்பதாகவும், அதே காண்டத்தின் அடுத்த சூக்தத்தில் கிருத்திகைமுதல் 28-நக்ஷத்திரங்களின் விவரத்தையும், ஆகிலேசம் மார்க்கசிர மாதங்களைப்பற்றிப் பிரஸ்தாபிக்கப்பட்டும், 19-வது காண்டம் 4-வது அநுவாகத்தில் மந்திரோச்சாடனத்தைப்பற்றியும், சத்துரு நாசத்தின் பொருட்டு அநேக சாபனைகளைப்பற்றியும் சொல்லப்பட்ட அலங்காரங்க ளிருக்கின்றன. இவை உண்மையில் தேகதத்துவ பீடிதங்களையும், ஆத்மதத்துவ பீடிதங்களையும் நீக்கிக்கொள்ளும் விதானங்களாம். அதற்கு திருஷ்டாந்தமாக அடுத்த வாக்கியங்களில் பரமேசுவரருக்கு யஜனியமென்னும் கிரியைகளையும் வேதாசார கிரியைகளையும் அநுஷ்டானங்களையும்பற்றிய ஸ்தோத்திர சூக்தங்கள் அநேகமிருக்கின்றன.

இந்த அதர்வண வேதத்தின் இரண்டாவது பாகத்துக்குக் கோபாத பிராம்மணம் சேர்ந்ததாயும், 5-பிரபாடகங்களையுடையதாயும், இதன் முதலத்தியாயத்தில் பிரபஞ்சத்திற்கு ஆதிகாரணம் பிரம்மமென்றும், இந்த அத்தியாயம் 4-வது பிரகரணத்தில் அதர்வணர் உலகத்தைச் சிருஷ்டித்துப் பிராணிகோடிகளைப் பாதுகாக்கும்படி பிரஜாபதியாக மாறியதைப்பற்றியும் சொல்லப்பட் டிருக்கிறதன்றியில், 5-வது அத்தியாயத்தில் முதல் புருஷன் பஞ்சாங்கத்திற்குச் சம்பந்தமுண்டாக்குகிற சம்வச்சரத்தோடு உண்டானவனாக எண்ணப்பட்டும், 5-வது பிரகரணத்தில் 12 - சந்திரமாசங்கள் ஒரு வருஷமென்றும், அதன் உட்பிரிவுகள் 360-நாள்களாகவும் 10,800-முகூர்த்தங்களாகவும் வகுக்கப்பட் டிருக்கின்றன.

மற்ற பாகங்கள் அடியிற்கண்ட உபநிஷத்துக்களையும் அவற்றின தாத்பரியங்களையும்பற்றிச் சொல்லியிருக்கின்றன.

இந்த அதர்வண வேதத்தில் முண்டக உபநிஷத்து இரண்டு பாகங்களாகவும், 6-பிரகரணங்களாகவும் சங்கரரால் பாஷ்யம் செய்யப்பட்டும், அந்த பாஷ்யத்துக்கு அநந்தஜஞானியர், கௌடபாதர், அநந்தகிரி முதலானவர்களுடைய விருத்தியுரையு மிருக்கிறது. வேதத்தின் இந்தப் பாகத்திலிருக்கும் நரசிம்மதாபனி என்னும் உபநிஷத்துக்கும் சங்கரர், கௌடபாதர் முதலானவர்கள் பாஷ்யம் செய்திருக்கின்றனர். இந்த உபநிஷத்துக்கடுத்திருக்கும் கடவல்லிக்கும் சங்கரர் பால கிருஷ்ணர் பாஷ்யமிருக்கின்றன. இதன் 6 - பிரகரணங்களில் நச்சிகேதசனுக்கும், யமனுக்கும் நடந்த சல்லாபனை இருக்கிறது. மேலும், இந்த அதர்வணத்தில்தான் கேனோபநிஷத்து என்னும் ஒரு சிறிய பாகம் இருக்கிறதன்றியில், நாராயண உபநிஷத்தும் இருக்கிறது. இதன் போக்கைப் பார்க்கும்போது தைத்திரிய யஜுர்வேதத்தின் ஆரணியத்தைச் சார்ந்து முடிந்திருக்கிறதாகத் தோற்றுகிறதன்றியில், பிருகுவல்லி, ஆநந்தவல்லி என்னும் தைத்திரியவாரணியம் என்கிற பெயரால் கருப்பு யஜுஸின் ஆரணியத்திலிருந்து இதில் சேர்த்ததாகத் தோற்றுகிறது.

ஆரியர் வேதத்தில் இருக்கும் சங்கதிகளின் சார சங்கிரகத்தை இதுவரை எடுத்துக் காட்டியதில், இதில் ஆரியருடைய ஆதிகர்மானுஷ்டானங்க ளின்னவை யென்றும், அக்காலத்தில் அவர்கள் தலைக்குத் தக்கபடி ஒரே பரப்

பிரம்மத்தை அக்கினி, வாயு, வருணன், மித்திரன் என்றுதி பெயர்களால் உபாஸனை செய்துவந்து, முடிவில் தத்துவஞானிகளாகி, அந்த ஒரே பிரம்மத்தை அறிந்து அநந்த கலியாண குணங்களால் அலங்கரித்து வேதாந்த உபநிஷத்துக்களைக்கொண்டு உஜ்ஜீவித்தார்களென்றும் ஸ்பஷ்டமாகும். இந்த வேதாந்த உபநிஷத்துக்கள் விருத்தியான கால முதல்தான் இந்த ஆரியாவர்த்தத்தில் அநந்த சமயக்கோட்பாடுகளும் சாஸ்திரக்கோட்பாடுகளு முண்டானதன்றியில், அவ்வுபநிஷத்துக்களே இப்பிரபஞ்ச பரிசுத்த ஆஸ்திகமதத்துக்கு ஆதி அஸ்திவாரங்களாகவும்; அவதார புருஷர்களைப் போன்ற ஸ்ரீ சங்கரர், மஹிதரர், வித்தியாரணியர், மத்வாசாரியர், இரங்க ராமானுஜர், இராமமோஹனர், தயாநந்தர் முதலான மஹான்களால் பல பாஷ்யங்கள் செய்யப்பட்டும் இன்றளவும் இந்நாட்டிலும் மற்றெந்நாட்டிலுமுள்ள தத்துவ சாஸ்திரிகளும் சாது சர்ஜனர்களும் கொண்டாடி வருகிறபடியால், இனி உபநிஷத்துக்களின் சார சங்கிரகத்தைப்பற்றி சற்று விசாரிப்போம்.

## உபநிஷத்துக்கள்.

உப+நி+ஷத்=உபநிஷத்து என்னும் பதம், ஷத் என்னும் தாதுவினால் உட்காரல் (Sit) என்றும்; நி என்னும் முன்னிடைச் சொல்லினால் கீழே (down) என்றும், உப என்னும் பதத்தினால் அருகில் அல்லது கிட்ட (near) என்றும், அதாவது ஒரு உபாத்தியாயருக்கு அருகில் சிடர்கள் சுற்றிக் கீழேஉட்கார்ந்து கேட்கும்படியான விஷயமென்றும், இதற்கு உதாரணமாகத் திரிகண்ட சேஷமென்பதில் சமீபசாதனம் என்னும் பதத்தினால் (வித்துவானிடத்தில்) அருகில் உட்கார்ந்து பாடம்கேட்டல் என்ற பொருளாகிறது என்று (பானினி முதலானோர்) அபிப்பிராயப்படுகிறார்கள்.

சிலர், ஷத் என்னும் பதத்துக்குக் கேடுத்தல், நசிக்கச் செய்தல் என்றுதி பொருள்களாகையால், இதன் சஹாயத்தால் காமக்குரோதாதிகளை நசிக்கச்செய்வதால் உபநிஷத்தென்றுபிற்றென்றும்; சிலர் ஷத் என்னும் பகுதிக்கு: முன்வருதல், எதிர்நிற்றல் என்றுதி பொருள்களாகையால், இந்த (உபநிஷத்தின் சகாயத்தால்) ஒருவன் பிரம்மஞானத்துக்கு முன்வரவும், எதிர்நிற்கவும் உதவியாயிருக்கிறதென்றும், ரிக் வேதம் 9-11-6-ல் நம்ஸ்இத்யுபஸிதாதா என்றதனால் அவரி

டம் நமஸ்கரித்துநில் என்பதாயும், சாந்தோக்யம் 6-10-1-ல் "அதமா பிரதர் யுபஸிதாதா" என்றதனால் "ஞானத்தின் பொருட்டு நாளைய தினம் காலை என்னிடம் வா" என்பதையும், கோபிலிய கிரஹசூத்திரம் 2-10-38-ல் ஒரு சிடன் தன் ஆசாரியன்முன் கைகட்டிப் பயபக்தியுடன் ஆசாரியனுடைய முகத்தையே பார்த்துக்கொண் டிருக்கவேண்டுமென்ற விதிக்கு யுபஸத் என்று சொல்லப்பட்டிருப்பதால், உபநிஷத்து என்பதற்கு ஆசாரியனருகில் உட்கார்ந்து கற்றுக்கொள்ளும் பிரமஞானமெனப் பொருள் செய்திருக்கிறார்கள்.

உபநிஷத்து என்னும் இந்த வடமொழிப் பதத்துக்கு அகராதிகளில்: இரகசியம், அந்தரங்கம், ஞானம், பிரார்த்தனை என்றுதி பொருள்களென்றும்; ஸ்ரீ சங்கரர் முதலான பாஷ்யக்காரர்கள்,இதற்குப் பிரமஞானம், தத்துவஞானம் என்றுதி பொருள்களென்றுஞ் சொல்லியிருக்கிறார்கள். ஆகவே, உபநிஷத்து என்னும் பதத்துக்கு "திவ்விய பரிபூரணஞானத்தையும், அந்த ஞானத்தினால் ஆசாபாசங்களினின்று நிவர்த்தியாகி மோக்ஷத்தையடையும் மார்க்கத்தையும் உண்மையாகக் காட்டும் சாதனம் என்பதாம். ஆனதுபற்றியே, மஹாவித்வசிரோன்மணியாகிய தாரநாத தர்க்கலங்கார வாசஸ்பதி யவர்கள் உபநிஷத்து என்னும் பதத்துக்கு "எது பரமேசுவரனுக்குச் சமீபத்தில் சேர்க்கின்றதோ", அதாவது எது ஜீவாத்துமாவைப் பரமாத்துமாவினிடம் சேர்க்கின்றதோ அதுவே உபநிஷத்தென்றும் உரைசெய்திருக்கின்றனர்.

இவ்வுபநிஷத்துக்களெல்லாம் நான்குவேதப் பிரிவுகளிலிருக்கும் சம்ஹிதை, பிராம்மணம், ஆரணியகம் என்ற பாகங்களைச் சார்ந்தவை. இவைகள் இவ்வளவு என்று சொல்லச் சரியான கணக்கு எவருக்கும் இதுவரையில் அகப்படவில்லை. மஹாவாக்கிய முக்தாவளி என்னும் கிரந்தத்தினாலும், முக்திக உபநிஷத்தினாலும்108-உபநிஷத்துக்களென்று சொல்லப்பட் டிருக்கின்றன. இந்த 108-ம் தக்ஷிணதேசத்தில் மஹா பரிசுத்தமான கணக்கென்றும், இந்தக் கணக்கின்படியே 108 விஷ்ணு ஆலயங்களிருப்பன பிரத்யக்ஷமாகையால், இந்த எண்ணை நம்பக்கூடாதென்று டர்னல் சாஸ்திரி அபிப்பிராயப்படுகிறார். வெபர் சாஸ்திரியார் 235-உபநிஷத்துக்க ளிருக்கிறதாகக் கணக்கிட்டிருக்கிறார்.சிலர்170-உபநிஷத்துக்களிருக்கிறதாகவும், இவைகளில் 52 - விசேஷமானவைகளாகவும்;

இவற்றில், முதல் 15-அதர்வணவேதத்தைச் சார்ந்தவைகளாக வும், மற்ற 37-பல சாகைகளைச் சார்ந்தவைகளாகவும், அடுத்த 9-உபநிஷத்துக்களில் 3 - முதல் 15 - வரையிலுள்ளவைகள் விசேஷமானவைக ளாகாமையால் எவரும் வியாக்கியானம் செய்யவில்லை என்றும், 16-முதல் 28-வரையிலுள்ள சில்லரை உபநிஷத்துக்களில் முதல் 13-க்கும் வியாக்கியானமில்லை என்றும், 29-முதல் 34-வரையிலுமுள்ள அடுத்த 6-உபநிஷத்துக் களுக்கு நரசிம்மதாபனி என்றும், இவைகள் 5: பூர்வதாபனி என்றும், இதற்குக் கௌடபாதரும் ஸ்ரீ சங்கரரும் பாஷ்யம் செய்திருக்கிறதாகவும், அடுத்த 2-உபநிஷத்துகளைக் கடவல்லி என்றும், அவற்றிற்கு ஸ்ரீ சங்கரர், பாலகிருஷ்ணர் பாஷ்யம் செய்திருக்கிறதாகவும்; அவைகளில் 6-பிரகரணங்கள் வல்லி என்றும், அவைகளும் உத்தரவல்லி பூர்வவல்லி என்னும் பெய ரைப்பெற்று, அதில் எமன் நச்சிகேதன் சம்வாதமடங்கியிருக் கின்றதென்றும், அடுத்த 3-உபநிஷத்துக்களுக்கும் வியாக்கி யானம் செய்யப்படவில்லையென்றும்; ஆநந்தவல்லி, பிருகு வல்லி என்ற உபநிஷத்துக்கள் தைத்திரியவாருணி என்ற பெயர்களால் விளக்கப்பட்டு கருப்பு யஜுஸ்ஸின் ஆரண்ய த்திலிருந்தெடுத்ததாகவும், மேலே சொன்ன 44-45-வது உப நிடதங்களைத் தொடர்ந்திருக்கிறதாகவும், மற்ற 7-உபநிஷத் துக்களுக்கும் வியாக்கியானம் கிடையாதென்றும் சொல்லு கிறார்கள்.

ஸ்ரீ நாராயணபட்டர் பாஷ்யம் செய்திருக்கிறதாக ஸ்ரீராம மாய தர்மரத்னாகரர் தமது (Bibliotheca Indian) இந்து வேதாகம நூலில் குறித்திருக்கிற உபநிஷத்துக்கள் எவையெனில்:—

(1) சிரோபநிஷத்து, (2) கர்போபநிஷத்து, (3) நாதவிந்து உபநிஷத்து, (4) பிரமவிந்து உபநிஷத்து, (5) அமிர்தவிந்து உப நிஷத்து, (6) தியானபிந்து உபநிஷத்து, (7) தேஜோபிந்து உப நிஷத்து, (8) யோகசிகா உபநிஷத்து, (9) யோகதத்துவ உபநிஷத்து, (10) சநியாச உபநிஷத்து, (11) ஆருணிய உப நிஷத்து, (12) பிரமவித்திய உபநிஷத்து, (13) குள்ஸிரிகா உபநிஷத்து, (14) கலிகா உபநிஷத்து, (15) அதர்வசிகா உப நிஷத்து, (16) பிராமோபநிஷத்து, (17) பிராணாக்கினிஹோதா உபநிஷத்து, (18) நீலருத்ரோபநிஷத்து, (19) காந்த சுருதி உபநிஷத்து, (20) பிண்ட உபநிஷத்து, (21) ஆத்மோபநிஷ

த்து, (22) இராமபூர்வதாபனி உபநிஷத்து, (23) இராமோத்திரதாபனி உபநிஷத்து, (24) ஹனமத்தூத உபநிஷத்து, (25) சர்வோபநிஷத்து, (26) ஹம்ஸ உபநிஷத்து, (27) பரமாம்ஸ உபநிஷத்து, (28) காபாலோபநிஷத்து, (29) கைவல்ய உபநிஷத்து, (30) காருட உபநிஷத்து, (31) நரசிம்ம பூர்வதாபனி உபநிஷத்து, (32) நரசிம்ம உத்தரதாபனி உபநிஷத்து, (33) ஸத்காகர உபநிஷத்து, (34) கோபாலதாபனி உபநிஷத்து என்றுதிகள் சமயாபிமானமும் சாதாரணமும் நவீனமுமானவைகளென்று எழுதியிருக்கின்றனர்.

இதற்குத் திருஷ்டாந்தமாக நமது தக்ஷிணதேசத்தில் தக்ஷிணாமூர்த்தி உபநிஷத்து, அன்னபூரணி உபநிஷத்து, அவதூதோபநிஷத்து, பஸ்மஜாபாலோபநிஷத்து, கைவல்யோபநிஷத்து, காலாக்கினி ருத்ரோபநிஷத்து, நிராலம்போபநிஷத்து, கணபத்திபுபநிஷத்து, ருத்திர பிராம்மணோபநிஷத்து, பாசுபத பிராம்மோபநிஷத்து முதலானவைகளை வைஷ்ணவர்கள் சிரேஷ்டமானவைகளெனக் கொள்ளாதிருப்பதுபோலவே; நாராயணோபநிஷத்து, வராஹோபநிஷத்து, வாசுதேவோபநிஷத்து, ஸீதோபநிஷத்து, ராமதாபனி உபநிஷத்து, நரசிம்மதாபனி உபநிஷத்து, கருடோபநிஷத்து, ஹயக்ரீவ உபநிஷத்து, கிருஷ்ணோபநிஷத்து, கோபாலதாபனி உபநிஷத்து, முதலானவைகளைச் சைவர்களும் சிரேஷ்டமானவைகளென்று கொள்ளாமலிருத்தல் பிரத்தியக்ஷம். மேலும்,

இந்த ஆரியநாட்டை ஆக்பர் பாதுஷா ஆண்டுவரும் காலத்தில், அவர் தாக்ஷணியத்துக்கு உட்பட்ட ஆரிய பண்டிதர் ஒருவர் அல்லா உபநிஷத்து என்ற பெயரால் ஒரு புது உபநிஷத்தைக் கற்பித்து வேதத்தில் நுழைத்த சங்கதி அநேகருக்குத் தெரிந்த விஷயம்; அதை இதனடியில் காண்பிக்கிறோம்.

## அல்லா உபநிஷத்து.

ஓம் அஸ்மல்லம் இல்லா-மித்ரா வருணோ-திவ்யநிதத்த, இலில்லாவருணோ ராஜபுணர்த்தத: ஹயாமிமித்ரோ இல்லம் இல்லல்லாதி - இல்லல்லாம் வருணோமித்ரோ தேஜகாம: ஹோதாரமிந்த்ரோ-மஹசூரிந்த்ர: அல்லோஜ்பாஸ்தம் ஸ்ராஸ்தம் பரமம் பூர்ணம். பிரம்மானமல்லாம்-அல்லோரசூர மஹமதாக்கம் - வரஸ்ய அல்லோ-அல்லம் அதல்லா உகமே

காகாம், அல்லம் உகாம் நிகதாகாம்-அல்லோயக்ன-நஹா-தா ஹா-த்தவாஹா அல்லாசூர்யசந்த்ர ஸர்வ நக்ஷத்ர: அல்லோ ருஷிநாம் ஸாதிவ்யாநிந்த்ரிய: பூர்வம்மயாபரமானஹ அந்தரிக்ஷஹ அல்லோபுருதிவ்ய அந்தரிக்ஷம் விஸ்வரூபம்-திவ்யாநிதாதி, இலில்லா வருணோ ராஜபுனர்த்தது: இல்லாகுவாரா, இல்லாகுவாரா இல்லில்லாதி இல்லில்லாஹ இல்லா இல்லில்லா அனதிஸ்வரூவ அதர்வணோசாகம். ஹ-ஒரும் ஹ்ரிம் ஜானன பாஸன் விதான் ஜலசர்ன அதிருஷ்டம் குருகுருபத் அஸ-ஒ ரஸம் ஹாரிணிம் ஹம அல்லோரசுர மஹமதாகம வரஸ்ய அல்லோ அல்லம் இல்லல்லாதி இல்லல்லாஹ்" என்பதே.

அல்லா என்னும் பதத்திற்கு ஸம்ஸ்கிருதத்தில் தாய் என்று பொருள்; அதாவது, அல்லாயிதி இத்யால், கிவ்ப் அவி புவியாயி குருணதி லாதிலா கா என்ற சப்தத்தில் ஸ்பஷ்டமாகும்.

ஆக்பர்பாதுஷாவுக்குப் பிறகு எத்தனைப் புது உபநிஷத்துக்களைப்பாடி வேதங்களில் நுழைத்தார்களோ தெரியவில்லை. இப்போது நமது நாட்டில் கொண்டாடிவரும் எல்லா உபநிஷத்துக்களையும் சம்பாதித்து, தக்கபடி பண்டிதர்களைக் கொண்டு சோதிப்போமானால், பெரும்பாகமான சில்லரை உபநிஷத்துகளெல்லாம் புராதனமான பத்துப் பெரிய உபநிஷத்துக்களிலிருந்து சில வாக்கியங்களை யெடுத்து, அவைகளுடன் தம்தம் மதசித்தாந்தத்துக்குத் தக்கபடி சில புது வாக்கியங்களைச் சேர்த்துப் புது உபநிஷத்துக்களாகப் பெயரிட்டிருத்தல் பிரத்தியக்ஷமாகும். இப்படிப்பட்ட புது உபநிஷத்துகள் அதர்வண வேதபாகத்தில் அதிக மிருக்கின்றன. புராதனமான பெரிய உபநிஷத்துக்களின் பாஷைநடைகளின் போக்கும், புது உபநிஷத்துக்களின் பாஷைநடைகளின் போக்கும் படிப்பாளிகளுக்குப் பட்டப்பகல்போல் ஸ்பஷ்டமாகும்.

ஸ்ரீ வேதமூர்த்திகளான சங்கராசாரியர் முதலான பிரபல பாஷியகாரர்களாலும், நிருக்தர்களாலும் பாஷ்யங்களும் வியாக்கியானங்களும் எழுதப்பட்டும், இராவணாதி மஹான்களால் செக்குபந்தி யேற்படுத்தப்பட்டும், ஹிமசேது பரியந்தமுள்ள சகலவித ஹிந்துமத புத்திமான்களாலும் அங்கீகரிக்கப்பட்ட உபநிஷத்துக்கள் பத்து, அவைகளே தமோபநிஷத்துக்களென்று எவராலும் கொண்டாடப்படுகின்றன. அவை எவையெனில்:—

(1) சாந்தோக்கிய உபநிஷத்து, (2) தலவாகரம் அல்லது கேனோபநிஷத்து, (3) ஐதரேய உபநிஷத்து, (4) கவுசிதாகி உபநிஷத்து, (5) வாஜஸ்நேயம் அல்லது ஈசா உபநிஷத்து, (6) கடோபநிஷத்து, (7) முண்டகஉபநிஷத்து, (8) தைத்திரேயக உபநிஷத்து, (9) பிரஹதாரணியக உபநிஷத்து, (10) சுவேதா சுவதர உபநிஷத்து, பிரஸ்னோபநிஷத்து என்பவைகளாம். ஸ்ரீ வித்தியாரணிய சுவாமிகள் இயற்றிய ஸர்வோபநிஷதார்த்த தநபூதிபிரசினை என்னும் கிரந்தத்தில் ஈசோபநிஷத்தைவிட்டு அதற்குப் பதில் மைத்திரேயண உபநிஷத்தைச் சேர்த்தும், இந்த தசோபநிஷத்துக்களே ஆதி உபநிஷத்துக்களென்றும், பட்டியமானவைகளென்றும், சகல சமயத்தாரும் அங்கீகரிக்கத்தக்கவையென்றும் சொல்லியிருக்கிறார்.

## தசோபநிஷத்துக்களின் சாரசங்கிரகம்.

### சாந்தோக்கிய உபநிஷத்து.

இது சாமவேதத்தைச் சார்ந்த பிரபாடகங்களென்னும் 8 - அத்தியாயங்களுடையதாயும், 150 - பிரகரணங்களுக்கு மேலான உபபிரிவுகளுடையதாயும், ஓங்கார பிரதிபாதிக மான பிரம்மஞானத்தைப் பிரபலமாக்குகின்றது. முதலிரண்டு பிரபாடகங்கள் சமயாசார சடங்குகளைப்பற்றிப் போதிப்பவைகளா யிருக்கினும், அது ஓங்கார ஸ்வரூபமான பிரம ஞானத்தைப்பற்றிப் போதிப்பதேயாகும்.

8 - வதில்: பிரஜாபதிக்கும் இந்திரனுக்கும் ஆத்மாவைக் குறித்த சல்லாபனையும், 7-வது அத்தியாயத்தில்: சநத்குமாரருக்கும் நாரதருக்கும் நடந்த சல்லாபனைகளும், 6-வது அத்தியாயத்தில்: சுவேதகேதுவுக்கும், உத்தாலகருக்கும் நடந்த சல்லாபனைகளும், 5-வது அத்தியாயத்தில்: ஜீவலன் புத்திரன் பிராவகன் உத்தாலகரை வேதாந்தத்தில் ஜயித்த சல்லாபனையும், 4-வது அத்தியாயத்தில்: ஜானன் சுருதி என்பவனைக் குறித்த கதையும், இந்த உபநிஷத்தின் 5-வது அத்தியாயத்தில்: உபமனியுவின் புத்திரன் பிராசீனசீலன், ஸத்திய ஜனியன், இந்திரதியூமன், ஜனன், உளதிலன் என்பவர்கள் செய்த பிரமலக்ஷண சர்ச்சையில் பிரமமானது பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாய முதலான பூதியங்களுக்கு மேற்பட்டு எல்லையற்ற சக்திப்பொருளென்று நிரூபித்துத் தர்க்கித்த விநோத சல்லாபனை இருக்கின்றது. இந்த சாந்தோக்கிய உபநிஷத்து வேதாந்த தத்துவஞானம் போதிப்பதிற் சிறந்தது.

## ஈசோபநிஷத்து.

இதை ஈசாவாஸ்யஉபநிஷத்து என்று சொல்வதுமுண்டு. இது யஜுர்வேதத்தைச் சார்ந்த ஒரு சிறிய உபநிஷத்தாக இருந்தபோதிலும், இதில் பிரபஞ்சப்பொருள்கள் எல்லாவற்றிலும் சிறந்தது பிரமஞானமென்றும், அதுவே நிரந்தரமானதென்றும், இதற்கு இரண்டாந்தரமானது வேதங்களில் சொல்லப்பட்டிருக்கிற கர்மானுஷ்டானங்களென்றும், குரு சிஷ்ய சல்லாபனை பாவனையாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த உபநிஷத்தை (Raja Ram Mohan Roy) இராஜாராம் மோஹனராயரும், (Sir William Jones) ஸர் வில்லியம் ஜோன்ஸ், (Bally) பெய்லி முதலானவர்கள் ஆங்கிலேய பாஷையில் மொழிபெயர்த்திருக்கின்றனர்.

## கடோபநிஷத்து.

இந்தக் கடோபநிஷத்தைச் சிலர்சாமவேதத்தையும், சிலர் அதர்வணவேதத்தையும், சிலர் யஜுர்வேதத்தையும் சார்ந்ததென்று எண்ணினாலும், இதுவரையில் ஆராய்ந்த பண்டித சிகாமணிகளால் இது யஜுர்வேத தைத்திரிய பிராம்மணத்தைச் சார்ந்ததென்றும், அதற்காதாரமாக இதில் நச்சிகேதருடைய கதையிருந்தலே பிரத்தியட்க்ஷமென்றும் ஸ்தாபிக்கிறார்கள்.

இந்த உபநிஷத்தில் கிட்டதிட்ட 6-வல்லிகள் (கொடிகள்) அல்லது சாகைகளும், இவற்றிற் சில வசன பாசுரங்களாகவும், சில கவிகளாகவும் இருக்கிறதன்றியில்; பாஷையின் வியாகரணம், சந்தசு ஆகியவைகளால் இது புராதன உபநிஷத்தென்று ஸ்பஷ்டமாகிறது. இதில் பரமாத்துமாவை தாத்திரி என்னும் பெயரால் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

இதை இராமமோஹனர் முதலில் இங்கிலீஷ் பாஷையில் மொழிபெயர்த்தாலும்; பாரசிகம், பிரான்சு, ஜெர்மனி பாஷைகளிலும் மொழிபெயர்க்கப்பட் டிருக்கிறதன்றியில், (Wendischaman) வெண்டிஸ்காமன், (Poley) போலி, (Gough) கவுப், (Weber) வெபர், (Muir) முயர், (Colebrook) கோல்புரூக், மோக்ஷமூலர் முதலியவர்களுடைய மொழிபெயர்ப்புக்களும் இருக்கின்றன.

### பிரசனோபநிஷத்து.

இது அதர்வண வேதத்திலிருக்கும் பிப்பலாட சாகையைச் சார்ந்தது. பிப்பலாடம் என்றால், இதைப் போதித்த ஓர் உபாத்தியாயருடைய பெயர். இதை மந்திரபாகத்தைச் சார்ந்ததென்று ஸ்ரீ சங்கரர் எண்ணினாலும், முண்டக உபநிஷத்தைச் சார்ந்த மந்திரோபநிஷத்தென்று ஆநந்தகிரியார் அபிப்பிராயப்பட்டார்; இதற்குத்திருஷ்டாந்தமாக மந்திரோபநிஷத்தென்று அநேக உபநிஷத்துக்களுக்குப் பொதுவாகச் சொல்லிவருவதும் பிரத்தியக்ஷம்.

### பிரஹதாரணிய உபநிஷத்து.

இது யஜுர்வேத பாகத்திலிருக்கும் சத்பத பிராம்மணத்தைச் சார்ந்த 6-அத்தியாயங்களுள்ளது. பிரம்மஞானத்தைப் போதிப்பதற்கு இதுவும் ஓர் விசேஷ உபநிஷத்து. இதற்கு ஸ்ரீ சங்கரர் செய்த பாஷியத்தை (Dr. Roer) ரோயர் என்பவர் இங்கிலீஷில் மொழிபெயர்த்திருக்கிறதன்றியில்; ஸ்ரீ துவிவேதி நாராயணசுனதி என்பவரும், துவிவேதி கங்கர் என்பவரும் வியாக்கியானம் செய்திருக்கின்றனர்.

### முண்டக உபநிஷத்து.

இது அதர்வணவேதத்தைச்சார்ந்த மந்திர உபநிஷத்து. இதில் யாக யக்கியங்களாலும், பூஜை புனஸ்கார கர்மங்களாலும் பிரமத்தை அடையக்கூடாதென்றும்; ஆனால், எவர் உலக ஆசாபாசங்களை விட்டொழித்துச் சுத்த சந்நியாசிகளாகின்றனரோ அப்படிப்பட்டவர்களால் மாத்திரம் அடையக்கூடுமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது; இதை (Dara Shoka) தாராஷோகா என்பவர் பாரஸீக பாஷையில் மொழிபெயர்த்தார். பிறகு (Roer) ரோயர் பண்டிதர் ஐரோப்பா பாஷையில் மொழிபெயர்த்தார்; பெயர்த்துமென்ன? இந்த உபநிஷத்துக்கு இந்தபெயர் வந்தகாரணம் இன்னதென்று பூரணமாகக் கண்டுபிடித்தார்களில்லை. சில சிறந்த பண்டிதர்கள் இதற்கு ஒருவித பொருளுரைத்திருக்கின்றனர். அதாவது, முண்டகமென்றால்—சுத்திசெய்யல் என்றும்; ஆகவே, மனம் புத்தி சித்தாதிகளைச் சுத்தி செய்விக்கும் உபநிஷத்து என்றும், இந்த உபநிஷத்தின் ஆதாரத்தைக்கொண்டே புத்த மதகுருமார்கள் சர்வாங்கமுண்டனமாக க்ஷவரம் செய்து

கொள்ளுகிறார்களாம். அதாவது ஸர்வாங்கம் மாசு நீக்கிச் சுத்திசெய்துகொள்ளுகிறார்கள் என்று சொல்லுகிறார்கள்.

## தைத்திரிய உபநிஷத்து.

இது யஜுர்வேதபாகத்தின் தைத்திரேய ஆரணியகத்திலிருக்கிறது. இதன் 10-பிரபாடகங்களில் முக்கியமான ஆரணியகங்கள் ஆறு; மற்ற 7-8-9-பிரபாடகங்கள் கூடியதற்கு தைத்திரிய உபநிஷத்தென்றும், 10-வது பிரபாடகத்தை மஹா நாராயண உபநிஷத்தென்றும் சிலர் அபிப்பிராயப்படுகிறார்கள். இதற்கு பாஷ்யம் செய்த ஸ்ரீ சங்கராசாரியர் தமது கிரந்தத்தில் சிக்ஷாவல்லி, பிரம்மாநந்தவல்லி என்று பெயரிட்டாலும், மூன்றாவதாகிய பிருகுவல்லியின் பெயரைப்பற்றிச் சொல்லாமல் பாஷ்யமாத்திரம் செய்திருக்கிறார். சயாயனர் இந்த தைத்திரேய ஆரணியகத்துக்கு பாஷ்யம் செய்தபோது இதன் 7-வது அத்தியாயம் சிக்ஷாத்தியாயம் என்றும், 12-அனுவாகங்களை சம்ஹித உபநிஷத்தென்றும் விவரப்படுத்தியிருக்கிறதன்றியில்; 8-9-பிரபாடகங்களுக்கு வாருணி உபநிஷத்தென்று சொல்லினர். இவர் பாஷ்யத்துக்கு சிக்ஷாபாஷ்யமென்றும் பெயர். இதன் ஆநந்தவல்லி பிருகுவல்லிகளைச் சில சமயங்களில்அதர்வண உபநிஷத்துக்களோடு சேர்த்துச் சொல்வாருமுண்டு. இதன் ஒவ்வோர்வல்லியின் முடிவில் அனுவாக அட்டவணையும், அப்படிப்பட்ட அனுவாகங்கள் பனிரெண்டு மிருக்கின்றன.

## சுவேதாசுவதர உபநிஷத்து.

இது கருப்பு யஜுர்வேதம் தைத்திரேயபாகத்தைச்சார்ந்ததும், சில சமயங்களில் சுவேதாசுவதர நாம மந்திரோபநிஷத்தென்று சொல்வதுமுண்டு. இதன் முதல் அத்தியாயத்தின் அந்தத்தில் சுவேதாசுவதரர் சிறந்த வனவாசிகளுக்குக் கற்பிக்கும்போது இது மஹா இரகசியத்துவமாகக் கொண்டாடவேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள். சுவேதாசுவதரம் என்றால் வெள்ளைக் கோவேறுகழுதைக்கும் பெயர். இது அக்காலத்தில் ஒருவருடைய பெயர். அதற்குத் திருஷ்டாந்தமாக, அர்ஜ்ஜுனனுக்கு, சுவேதாஸ்வா—வெள்ளைக்குதிரையென்று பெயரிருப்பதன்றியில், சில வேதரிஷிகளுக்கு ஷியாவாஸ்வா—கருங்குதிரை என்ற பெயருமிருந்தது.

இந்த உபநிஷத்தின்பெயரெப்படியிருக்கினும்வித்தியாரணியருடைய ஸர்வோபநிஷத்து அர்த்தானுபூதி பிரகாஸிகை என்னும் கிரந்தத்தில் கண்ட 12-உபநிஷத்துக்களில் இதுவும் ஒன்ருகவும், ஸ்ரீ சங்கரர் இதை ஓர் விசேஷ உபநிஷத்தாகக் கொண்டு பாஷ்யம் செய்திருக்கின்றனர். இது புராதனமும் கஷ்டமானதும் பரமாத்மாவை அக்கினி, ஆதித்தன், வாயு, ஹர, சிவ, பகவத் என்ருகி பெயர்களால் பாடப்பட்டுப் பிரகாசிக்கின்றது. சிலர் இதை யாதாரமாகக்கொண்டே பகவத்கீதை எழுதப்பெற்றதென்றும், சிலர் சைவசித்தாந்தம் ஸ்தாபிக்கப்பெற்றதென்றும் சொல்லிவருவதோடு இது ஓர் நவீன உபநிஷத்தென்று எண்ணுவாருமுண்டு.

இதிலிருந்தே சாங்கியசாஸ்திர முண்டானதாகச் சிலரும், வேதாந்தசாஸ்திர முண்டானதாகச் சிலரும் அபிப்பிராயப்பட்டாலும், இதில் பரமாத்துமாவைப் புருஷாகாரப்படுத்தியும், சுவரூப அத்துவைதத்தைக் கண்டித்தும், துவைதசித்தாந்தத்தை ஸ்தாபிக்கிறது. இதற்கு ஸ்ரீ சங்கரர் செய்த பாஷ்யத்தை (Dr. Roer) ரோயர் சாஸ்திரி முதலில் ஐரோபா பாஷையில் மொழிபெயர்த்தார். இந்த உபநிஷத்தின் சரித்திரத்தை விவரமாக அறிய விரும்புவோர் பரமாம்ஸ பரிவர்க்கநிரியநந்தாத்மருடைய சீடர் சங்கராநந்தர் செய்த பாஷ்யத்தைப் பார்க்கவும்.

## தலவாகரம் அல்லது கேனேபநிஷத்து.

இது சாமவேதத்திலிருக்கும் தலவாகர பிராம்மணத்தைச் சார்ந்தது. இதைக் கேனேபநிஷத்து என்று சொல்வதுமுண்டு. கேனிஸ்தம்—என்றுல் பிரமத்துக்கும் பெயராகையாலும், இந்த உபநிஷத்தில் பிரமஞானத்தைப்பற்றி விசேஷமாகச் சொல்லியிருப்பதாலும், இதை பிராமோபநிஷத்தென்றும் சிலர் சொல்வதுமுண்டு. இதற்கு பாஷ்யம் செய்த ஸ்ரீ சங்கரர் தலவாகர பிராம்மணத்தின் ஒன்பதாவது அத்தியாயமாகவும், பிரம்மஞானத்தைப்பற்றி விசேஷமாகச் சொல்வதாகவும், இதற்குமுந்தி இருக்கும் எட்டு அத்தியாயங்களில் யாகயக்கிய கருமானுஷ்டானங்களைப்பற்றி விவரமாகச் சொல்லிப் பிறகு வம்ஸ விருக்ஷத்தையும், காயத்திரி சமனத்தைப்பற்றியும் விவரித்திருக்கிறதாகச் சொல்லியிருந்தாலும், 1878-ஹு தஞ்சையில், (Dr. Burnell) பர்னல்

சாஸ்திரியார் தருந்த வேத வித்துவான்களைக்கொண்டும் புராதன கிரந்தங்களைக்கொண்டும் பரிசோதிக்கும்போது, இது தலவாகர பிராம்மணத்தைச் சார்ந்ததென்றும், இதன் ஒன்றுகுறையக் கடைசிப்பாகத்தில் 145-காண்டங்களில் காயத்திரி ஸமனத்தைப்பற்றியும், 134-வது காண்டம் வம்ஸாவளியைப் பற்றிச் சொல்லியிருப்பதாகவும்; இந்த கேனோபநிஷத்து 135 முதல் 145-வரையில் அதாவது 10-வது அனுவாகம் வரையிலிருப்பதாகவும், இதன் 139-வது அத்தியாயம் 'அலம்வா இதம் அகிரஅவிலித்' என்று ஆரம்பிக்கிறதாகவும் தெரியவந்ததன்றியில், இந்த உபநிஷத்தில் தாண்டியர், ஸத்தியாயனி என்னும் உபாத்தியாயர்களுடைய போதனைரூபமாக விருக்கிறதென்றும்; ஆகவே, இந்த பிராம்மணத்தின் பெரும்பாகம் அக்கினி ஹோத்ரம், அக்கினி ஸ்தோமாதிகளைப்பற்றியும், கடைசி 4-அத்தியாயங்களின் 145-வாக்கியங்களில் பிரம்ம ஞானத்தைப்பற்றிச் சொல்லியிருப்பதாகவும், ஸ்ரீ சங்கரர் சொல்லியிருப்பதைப்போல் இது 9-வது அத்தியாயத்தைச் சாராமல் 4-வது அத்தியாயத்தைச் சார்ந்த 10-வது அனுவாகமென்றும் தெரிவித்திருக்கிறார். இந்த உபநிஷத்தைப்பற்றி வித்துவான்களின் கருத்துக்கள் எப்படி இருந்தபோதிலும், இது ஒரு விசேஷ உபநிஷத்தானபடியால் முதலில் இராஜா ராமமோஹனர் பங்காள, ஹிந்தி, இங்லீஷ் பாஷைகளிலும், (Dara Shukoh) தாரா சுகோஎன்பவர் பார்சி பாஷையிலும், (Auquetil Defferroun) டப்பிரின் லத்தின்பாஷையிலும், (Wendischaman) வெண்டிஸ்காமன் ஜெர்மனி பாஷையிலும்; (Web) வெப், (Colebrook) கோல்புருக், (Poley) போலி ஆகியவர்கள் மற்ற ஐரோபா பாஷைகளிலும் மொழிபெயர்த்திருக்கின்றனர்.

## ஐதரேய உபநிஷத்து.

இது ருக்வேதத்திலிருக்கும் ஐதரேய ஆரணியகத்தைச் சார்ந்தது. ஐதரேய பிராம்மணத்தில் அநேக சில்லறைக்கிரந்தங்களுண்டு. அவற்றில் பிரம்மஞானத்தைப் போதிக்கும் சில பிராம்மணங்களை மஹிதாசர் என்னும் ரிஷியானவர் தம் சீடர்களுக்குப் போதித்த பாகத்துக்கு ஐதரேய உபநிஷத்து என்று சிலர் எண்ணுகிறார்கள். இந்த ஐதரேய ஆரணியகத்தின் சில பாகங்களில் கருமானுஷ்டானங்களைப்பற்றிப் போதித்தாலும், ஷை ஆரணியகத்தின் இண்டாவது பாகத்தைச் சார்

ந்த 4, 5, 6 - அத்தியாயங்களிலே யிருப்பதாகத் தோற்று கிறது. நாராயணேந்திரர், அநந்தஞானர், அநந்ததீர்த்தர் முதலானவர்கள் பாஷ்யம் செய்திருக்கின்றனர். இந்த ஐதரேய உபநிஷத்தை பாரசீக பாஷையில் மொழிபெயர்த் திருக்கிறதன்றியில், ராஜேந்திரலால் மித்திரர் ஸ்ரீ சங்கர பாஷ்யத்தின் மேல் சயாயனர் செய்த பாஷ்யத்தை இங்கிலீஷில் மொழி பெயர்த்திருக்கிறார்.

## கவுசிதாகி பிராம்மண உபநிஷத்து.

இந்த உபநிஷத்து ஐதரேய உபநிஷத்தைப்போல் ருக் வேத சாகையைச் சார்ந்தது. இது கவுசிதாகினி பிராம்மணத்தைச்சார்ந்த 30-அத்தியாயங்க ளுடையது. இதன் நான்கு அத்தியாயங்களும் அவற்றையடுத்த ஐந்து அத்தியாயங்களைப் போலவே ஐதரேய ஆரணியகத்தைச் சார்ந்தவைகளை நிகர்த்துத் தோன்றுகின்றன. இதற்கு சங்கராசாரியர் செய்த பாஷ்யத்தின்மேல் சங்கராநந்தர் தீபிகைஎழுதியிருக்கின்றனர். வித்தியாரணியரும், அநந்தாத்ம முனிகளும் பாஷ்யம் செய்திருக்கின்றனர். இதை விவரமாக அறியவிரும்புவோர் (Cowell) கவல் சாஸ்திரியின் மொழிபெயர்ப்பைப் பார்க்கவும்.

## உபநிஷத்துக்களின் பாஷ்யங்களும் அவை வெளியான விதமும்.

இந்து வேத வாக்கியங்களும் முக்கியமாக உபநிஷத்துக்களும் புராதனமானவைகளாக இருப்பதோடு, அவற்றின் பொருளைக் கற்றோரன்றி மற்றோர் கண்டறிதல் கஷ்ட சாத்தியம். மேலும், பெரும்பான்மையான வாக்கியங்களுக்கு, பூதார்த்தவாதம்=அதாவது நடந்ததை நடந்த விதமாகவும் சரித்திரமாகவும் சொல்லுதல் என்னும் அருத்தமும், குணார்த்தவாதம்=தத்துவ விஷயமாகவும், மஹிமா விஷயமாகவும் அலங்காரமாகவும் சொல்லுதல் என்னும் இரண்டுவித அர்த்தங்களும் இருப்பதன்றியில், ஒவ்வொரு வாக்கியத்துக்கும் 'கர்மார்த்தம்' 'ஞானார்த்தம்' என்ற இரண்டுவித அர்த்தங்களுமுண்டு.

இவ் வேதவாக்கியங்களுக்குத் தொன்றுதொட்டு மஹா வித்வசிகாமணிகள் பலர் பற்பலவித பாஷ்யங்களைச் செய்திருக்கினும், ஸ்ரீ வேதமூர்த்தி சங்கராசாரியருக்கு முன்பு

பாஷ்யம் செய்திருக்கிறவர்களுடைய பெயர் முதலான விவரங்களைத் திட்டமாகக் காட்டும் சரித்திர மகப்படவில்லை. ஆகவே, அப்பாஷ்யங்களை இக்காலத்தில் விசேஷமாகக் கொண்டாடுவாருமில்லை.

1198-ளு அதாவது ஏழாம் நூற்றுண்டுக்குமுன் ஓர் அவதார புருஷராக ஜனித்த ஸ்ரீசங்கராசாரியர் வேதவாக்கியங்களுக்கு பாஷ்யம்செய்த பிறகே, ஸ்ரீ வித்தியாரணியசுவாமிகள, மஹீதரர், சயாயனர், இரங்கராமாநுஜஜீயர், ஆனந்த தீர்த்தர், ஆநந்தகிரியார், அநந்தாநந்தர் முதலானவர்கள் பாஷ்யங்களைச் செய்தனர். இப்படிச் செய்த பாஷ்யங்கள் அந்தந்த மதஸ்தர்களில் உயர்குலத்தாராகிய சிலருக்குமாத்திரம் தெரிந்து அனுஷ்டித்து அந்தரங்கமாக வைத்திருந்தனர். பிறகு,

இந்த இந்துதேசம் மஹம்மதியர் வசமாகியதில், இடைக்கிடை இந்துக்களுக்கும் மகம்மதியர்களுக்கும் மத விஷயமாக மனஸ்தாபங்க ளுண்டாகிவரவே, மஹம்மதிய சக்கிரவர்த்திகளில் சமரஸவேத ஞானியாக இருந்த ஆக்பர்பாதுஷா சக்கிரவர்த்தியானவர் தமது ராஜாங்கத்துக் குட்பட்ட இந்து மஹம்மது மதஸ்தர்களுக்குள் சமயாதீத சஹோதர வாஞ்சை உண்டாக்கிச் சுகமாக வாழச்செய்தால் தமது ராஜ்ஜிய பாரத்துக்குச் சுகமும் க்ஷேமமு முண்டாகுமெனக்கருதி, அக்காலத்தில் தமது ஸமஸ்தானத்திலிருந்த ஆரியபண்டிதர்களைத் தருவித்துச் சில வேதவாக்கியங்களையும், பகவத்கீதாதி சில கிரந்தங்களையும் பார்சி முதலான பாஷைகளில் மொழிபெயர்ப்பித்துப் பரவச் செய்துகொண்டிருக்கையில் அவர் பரமபதமடைந்தனர்.

பிறகு அவரது பேரரும், ஷாஜிஹான் சக்கிரவர்த்தியின் ஜேஷ்ட குமாரருமாகிய மஹம்மது தாராசுகே சுல்தான் என்பவர் தமது பாட்டனார் ஆக்பர் பாதுஷாவைப்போலவே ஸமரஸ சமயஞானியாக இருந்தமையாலும், தாம் ஒருகால் காஷ்மீர தேசத்துக்குப் போயிருந்தபோது அவ்விடத்திய ஆரியபிராம்மணர்கள் அருணோதயகாலத்தில் வேத உபநிஷத்துக்களைப்பாடி உத்தமமே உபாசிப்பதைக்கண்டாநந்தித்து, இப்படிப்பட்ட வேதசுருதிகளை பார்சிபாஷையில் மொழிபெயர்த்துத் தம் இந்து மஹம்மது குடிகளுக்குக் கற்பித்தால், தமதுராஜ்யத்தில் மதக்கலகமின்றிச் சுகமாக வாழ்வார்களென்

றெண்ணித் தமது ராஜதானியாகிய டில்லி பட்டணத்துக்கு வந்து, கி. பி. 1640-ஹு காசிப்பட்டணத்திலிருந்த அநேக ஆரிய பண்டிதர்களைத் தருவித்தும், மஹாசபை கூட்டியும், அவர்களுதவியால் சுமார் 50-உபநிஷத்துக்களைப் பார்சிபாஷை யில் மொழிபெயர்ப்பிக்க ஆரம்பித்து 1657-ஹு முடிப பித்தார்.

இது சங்கதியையறிந்த இவர் தமையனும், இந்துமத துவேஷியுமாகிய அவுரங்கசீப்பானவர், இந்த வேத உப நிஷத்துக்கள் வெளியானால், மஹம்மது மதத்தின் மகிமை இந்தியாவில் மேலிட்டோங்காதெனக் கண்டு, அநியாயமாக மஹாசமரசஞானியாகிய மஹம்மது தாராசுகே சுல்த்தானவர் களைக் கொலைசெய்வித்தும், அந்த அவுரங்கசீபே இந்துதேச சக்கிரவர்த்தியாகியும் இந்து மதத்தைக் கண்டித்திறந்தார்.

அக்காலத்தில் இந்த இந்துதேசத்தில் பார்ஷி பாஷை யே இராஜகீய பாஷையாகி இமஸ்சேதுபரியந்தம் பரவியிருந் தமையாலும், பார்சிபாஷையில் மொழிபெயர்த்த உபநிஷத் துக்கள் இந்நாட்டில் பலபாகங்களில் பரவ ஹேதுவானதன்றி யில், அக்காலத்தில் ஐரோபாகண்டத்திலிருந்து இந்நாட்டுக்கு வர்த்தக விஷயமாகவும், வைதீகவிஷயமாகவும் வந்துபோ ய்க்கொண்டிருந்த கிரேக்கர், உரோமர், போர்த்துகேயர், பிரான்சியர் ஆகியவர்களுக்கும் ஷை உபநிஷத்துக்களின் பார ஷீக மொழிபெயர்ப்புக்கள் சிற்சில அகப்படவே அவர்கள் அவற்றை ஐரோபா கண்டத்துக்குக் கொண்டுபோய்; லத்தின், கிரேக், பிரான்சு, ஜெர்மனி, இங்கிலீஷ் முதலான பாஷை களில் மொழிபெயர்த்து விநோதசாலைகளில் விநோதகாக்ஷிக ளாக வைத்தார்கள்.

இந்தஇந்தியாவில் இங்கிலீஷ் ராஜ்யம் ஸ்தாபிக்கப்பட வே, அவர்களுடைய மதாநுஷ்டானிகளாகிய கிறிஸ்து பாதிரி மார்கள் இந்நாட்டுக்கு வந்து இந்துமதம் அஞ்ஞானமதமென் றும், கிறிஸ்துமதமே ஸத்தியமதமென்றும் தம் கிறிஸ்து மதத்தின் பெருமையைப்பற்றிப் பலவிடங்களில் பிரசங்கங் கள் செய்தும், கோயில்களைக் கட்டுவித்தும், இந்துக்களைத் தம் கிறிஸ்துமதத்துக்கு வந்துசேரும்படி போதித்தும் வரும் போது, இந்துக்கள் இந்தக்கிறிஸ்துமதத்தையும் இதற்குமுன் இந்நாட்டுக்கு வந்த மஹம்மது மதத்தையும் பார்த்து பிர

மித்துத் தம் சொந்தமதம் நல்லதா? அல்லது இந்நாட்டுக்கு நவீனமாக வந்த மதம் நல்லதா என்று ஏக்கங்கொண் டிருக்கையில்,

1774-ஆம் ஓர் அவதார புருஷராக ஜனித்த ஸ்ரீ ராஜா ராமமோஹன ராயர் என்னும் ஓர் பிராம்மண சிரேஷ்டர்: ஸம்ஸ்கிருதம், ஹிந்துவி, பங்காளி, பார்சி, அரபி, பாலி, கிரேக்கு, லத்தீன், இங்கிலீஷ் முதலான பல பாஷைகளைக் கற்றுத் தெளிந்த கல்விக்கடலும் நிபுணசிரோமணியுமாக இருந்தமையால், ஆரியவேதமென்னும் ஆழ்ந்த சமுத்திரத்தில் புகுந்து அதன் ஆழத்திலிருந்த முத்துக்களைப்போன்ற உபநிஷத்துக்களையெல்லாம் எடுத்து, அவைகளில் போலி முத்துகளாக இருந்தனவற்றை விட்டெறிந்து, ஆணிமுத்துகளாகவிருந்த தசோபநிஷத்துக்களைச் சேகரித்து வங்கபாஷையிலும், ஹிந்தி இங்கிலீஷ் முதலான பாஷைகளிலும் மொழிபெயர்த்தும், அவற்றிலுள்ள சத்துக்களான சரக்குகளைப் பலருக்குங் காட்டியும், அவைகளைச் சகலதேச, சகலகால, சகல மதஸ்தர்களும் சமரசமாகக் கொள்ளத்தக்கவையென்று தக்க தருக்கங்களால் பிரஸ்தாபித்ததுமன்றியில், தமது சுஜாதியாராகிய இந்துக்களைத் தம் இந்துமதமாகிய சொந்த மதத்திலேயே சத்துக்களிருப்பதால் அவர்கள் இந்நாட்டில் நவீனமாக வந்த மதங்களுக்கு ஏகவேண்டிய தனாவசியமென்று தகுந்த நியாயங்களால் நிரூபித்தும், அக்கருத்தை இந்நாட்டிற் பரவச்செய்ய 1830-ஆம் பிரம்மமத சித்தாந்த ஸபையை ஸ்தாபித்தும், இந்து தேசாபிமான விஷயமாக 1831-ஆம் இங்கிலாந்துக்குப் போக அங்கு பிரிஸ்டல் நகரத்தில் 1833-ஆம் பரமபதமடைந்தனர்.

பிறகு சம்வச்சராதி 1881-ஆம் வடமேற்குப் பாகத்தில் ஓர் அவதார புருஷராக ஜனித்த தயாநந்த சரஸ்வதியவர்களும் வேதங்களின் சில பாகங்களுக்கும், சில உபநிஷத்துக்களுக்கும் காலதேச வர்த்தமானத்தைத்தழுவி வியாக்கியானஞ் செய்ததைப் பாஞ்சால தேசத்திலிருக்கும் அவரது சீடர்களாகிய ஆரியஸமாஜத்தார் இந்துவி பாஷையிலும், இங்கிலீஷிலும் பதிப்பித்திருக்கின்றனர்.

இந்த (1) வது முதற்படியாகிய வேதத்தினால் சர்வேசுவரன் சகலபிரபஞ்ச வானாதி பூதங்களில்நிறைந்திருப்பதை அக்காலத்து இந்துக்களறிந்தும், அவரை அக்கினி, வருணன் முத

லான பெயர்களால் வர்ணித்தும், ருக், சாமவேதாதி கீத சுவரங்களாற் பாடியும் யாகயக்கியங்களைச் செய்தும், ஆரிய தருமங்களை யனுஷ்டித்தும், உபநிஷத்துக்களின்படி உத்தமோத்தமனாகிய ஜகதீசுவரனுடைய உண்மையான இலக்ஷணங்களை அறிந்தும் மஹோன்னத திசைபெற்று வாழ்ந்துவந்தார்கள்.

இப்படி இந்துமத வேதத்தில் பற்பல விஷயங்களைப்பற்றிப் பிரபலமாகச் சொல்லியிருக்கும் பொருளின் கருத்தை யறியாத சிலர் தம்தம் இஷ்டப்படி நவம்நவமானமதங்களைச் சிருஷ்டித்துக்கொண்டு தழுவி தத்தளித்து அவதிப்படவே, சிறந்த தத்துவஞானிகள் தோன்றி வேதத்திலிருக்கும் வேறுபாடான பிராம்மணங்களினால் சந்தேகவாதிகளாகி, நாம் யார்! எங்கிருந்து வந்தோம்? என்னத்திற்காக வந்தோம்? எங்கேபோய்ச் சேர்வோம்? நமக்கும் பிரபஞ்சத்துக்கும் இருக்குஞ் சம்பந்தம் யாது? ஸ்தூலதேகத்தைவிட ஆத்மாவென்னும் பொருளுண்டா? இந்த ஆத்மாவைவிட பரமாத்மாவென்னும் வேறு ஒரு வஸ்துவுண்டா? என்னுங் கேள்விகளைக் கேட்டுக்கொண்டு விஷயவிசாரணைசெய்து, கடைசியாக உபநிஷத்தாதிகளில் நம்பியும் நம்பாமலும் தமது சக்தி யுக்திகளுக்குத் தக்கபடி சாஸ்திரங்களை யுண்டாக்கினார்கள். அப்படிப்பட்ட சாஸ்திரங்கள் பலவாகவிருக்கினும், பெரும்பான்மையோரால் கொண்டாடிவருவன ஆறு சாஸ்திரங்களே. அவைகளையே இந்துமத ஞானோதயத்தின் இரண்டாம் படி என்று சொல்லலாம். அவையாவன:—

## 2-வது, இந்துமத ஞானோதயத்தின் இரண்டாம் படி.

## இந்துமத சாஸ்திரங்கள்.

(1) நியாயசாஸ்திரம்: இது கௌதமரால் ஸ்தாபிக்கப்பட்டது.

இது பதார்த்தங்களின் தாரதம்மிய தருமங்களைப் பிரமாண, பிரத்தியக்ஷ, அநுமான, உபமான, சப்த, பிரதிக்ன, ஹேது, உதாரண, உபமேய, நிகமன, வியாப்தி, வியாபக, வியாபிய, பிரமேய, சமாபிய, பிரயோஜன, திருஷ்டாந்த, சித்தாந்த, நிர்ணயாதிகளால் விவரமாக விளக்கும் தருக்கநூலே. (விவரமாக அறியவேண்டில் எனது தருக்க சாஸ்திர வினாவிடையைப் பார்க்கலாம்.)

(2) வைசேஷிக சாஸ்திரம்: இது கணாதரால் ஸ்தாபிக்கப் பட்டது.

இதில், நியாயசாஸ்திரத்திற் கண்ட தருக்க சித்தாந்தங்க ளிருக்கினும்; திரவிய, குணம், கர்ம, சாமானிய, விசேஷ, சம வாயம், அபாவமென்னும் பிரபஞ்சத்தை எழுவித பதார்த் தங்களாக வகுத்துத் தருக்க நூல் சிரேஷ்டமாக்கப்பட்ட தன்றியில், அணுரூபமாகிய மூலப்பிரகிருதியும், ஜீவனும், பர மாத்மாவும் படைக்கப்படாத அநாதி வஸ்துக்களென்றுஞ் சித்தாந்தப்படுத்தியிருக்கின்றது.

(3) சாங்கியசாஸ்திரம் : இது கபிலரால் ஸ்தாபிக்கப்பட் டது.

இதில் சத்வ, ராஜஸ, தாமஸ குணத்தொகுப்புகளா லாகிய பிரகிருதி அவ்யக்த மாயையோடு கூடிய அநாதிவஸ்து வாக விருப்பதென்றும்; இதுவே சத்து, சித்து, ஆநந்தமாகிய சச்சிதானந்தம் என்றும்; இதிலிருந்து மனம், புத்தி, அகங்கார தன்மாத்திரைகளாதி 23 - தத்துவங்கள் ஜனித்ததென்றும், புருஷதத்துவமென்னும் நிர்க்குணமான ஆத்மாவானது பிர கிருதியோடுகூடிப் பிரபஞ்சமாகப் பிரகாசிக்கச் செய்கின்ற தென்றும் ஒருவித நாஸ்திகத்தைப் போதிக்கின்றது. ஆயி னும், சிற்சிலவிடங்களில் ஹிரண்யகர்ப்ப னென்னும் சிருஷ் ட்டி கர்த்தாவைப்பற்றிப் பேசி, அசைவற்ற பிரகிருதியோடு சக்தியாகிய ஆத்மா சேர்ந்தே சகலமு முண்டாவதாகச் சொல்லியிருக்கிறது. இந்தச் சாத்திரத்திலிருந்தே பௌத்தம் சாக்தேய மதங்கள் ஜனித்தன.

(4) யோகசாஸ்திரம் : இது பதஞ்சலியால் ஸ்தாபிக்கப் பட்டது.

இதில், ஜீவாத்மாவானது பரமாத்மாவோடு பூரணமாகக் கலந்து, தானே தானாக அங்கிசை முதலிய இயமமும், தபசு முதலிய நியமமும், சுவஸ்திக முதலிய ஆசனமும், இரேசக முதலிய பிராணாயாமமும், சரீர முதலிய பிறத்தியாகாரமும், பூத முதலிய தாரணையும், அட்டாதார முதலிய சமாதி யும், என்னு மிவற்றை யனுட்டிக்கும் நிலையைப்பற்றிச் சொல்லியிருக்கிறது. (விவரமாக அறிய விரும்புவோர் எனது இராஜயோக நூலைப் பார்க்கவும்.)

(5) மீமாம்ச சாஸ்திரம் : இது ஜெயமுனிவரால் ஸ்தாபிக்கப்பட்டது.

இதில், உத்தரமீமாம்சை, பூர்வமீமாம்சை யென இரு வகுப்புகளுண்டு. உபநிஷத்துக்களின் கருத்தை விளக்கி அவ்வழிப்பட்டுய்ய உத்தரமீமாம்சமும், வேதத்தைச் சார்ந்த மந்திரங்கள், பிராம்மணங்களிற் கண்ட சடங்குகளை விளக்கி அவ்வழிப்பட்டுய்யப் பூர்வமீமாம்சமு மெழுதப்பட்டதே யொழிய, மற்றப்படி இது தத்துவசாஸ்திரமன்று. இதிற் பெரும்பாகம் வேதாந்தமா யிருக்கிறது. ஆயினும் சிருஷ்டி கர்த்தாவைக் கொண்டாடாமல், சிருஷ்டிகரால் வந்த வேதமே சப்தரூபமாகிய பிரம்மமென்றும், இந்த சப்த பிரம்மமே அனாதியென்றுஞ் சொல்லப்பட்டிருக்கிறது.

(6) வேதாந்த சாஸ்திரம் : இது வியாசரால் ஸ்தாபிக்கப்பட்டது.

இதில் இருக்குவேதத்தைச் சார்ந்த சாந்தோக்கிய உபநிஷத்திலிருக்கும் ஏகமேவாத்விதீயம் என்னும் வாக்கியத்தைக் கொண்டு, பிரபஞ்சத்தில் ஆத்மாவென்னும் வஸ்து ஒன்றே உண்மையென்றும், அது பிரபஞ்சமுழுமையும் பரவியிருக்கிறதென்றும், அதைவிட வேறு யாதுங் கிடையாதென்றும், பஞ்சேந்திரியங்களா லறியப்பட்ட பொருள்கள் பொய்யென்றும், ஆவரணவிட்சேப சக்தியினால் பஞ்சபூத,பஞ்சேந்திரிய, மனம் புத்தியாதிகள் ஆத்மாவை மூடிக்கொண் டிருப்பதாக, வியவகாரதிசையில் கொண்டாடினாலும்,அவித்தைநீங்கிப்பாரமார்த்திகதிசையில் ஆன்மாவாத்திரஞ் சத்தியமானதாகத் தோன்றுமென்றும், அதாவது, எப்படி வெங்காயத்தை அதன்புரைகள் மூடிக்கொண் டிருக்கிறதோ அப்படியே ஆத்மாவை அஞ்ஞானம் மூடிக்கொண் டிருப்பதால், அதை ஞானபலத்தினால் நீக்கில் அகம் பிரம்மமாக விளங்கும் என்று அத்வைதத்தைச் சொல்லியிருக்கிறதாகச் சிலர் கருத்து.

இந்த வேதாந்த சாஸ்திரத்திற்கே பிரம்ம சூத்திரம் அல்லது வியாச சூத்திரங்கள் என்று பெயர். இது நான்கு அத்தியாயங்களும், 156-அதிகரணங்களும், 545-சூத்திரங்களுமுடையதாகி; ஸ்ரீசங்கரர், இராமாநுஜர், மாத்துவர், நீலகண்டர் முதலானவர்களால் அத்வைத துவைத விசிஷ்டாத்வைத பாஷ்யங்கள் எழுதப்பெற்ற தத்துவ சாஸ்திரமாம்.

## தத்துவங்கள்.

இப்படி இந்த சாஸ்திரங்கள் பிரபலமான காலத்திற்றான் அநேக சாஸ்திரிகள் கிளம்பி, அநேக தத்துவங்களைக் கற்பித்துக்கொண்டு அவைகளைப் பற்றி சர்ச்சித்துக் கடைசியாகப் பெரும்பான்மையான படிப்பாளிகளால் 96-தத்துவங்களிருப்பதாக அங்கீகரிக்கப்பெற்றன. அவையாவன:—

### ஆத்தும தத்துவம்.

பூதம்-5:—(1) நிலம், (2) நீர், (3) தீ, (4) காற்று, (5) ஆகாயம்.

புலன்-5:—(1) சுவை, (2) ஒளி, (3) ஊறு, (4) ஓசை, (5) நாற்றம்.

கருமேந்திரியம்-5:—(1) மெய், (2) வாய், (3) கண், (4) மூக்கு, (5) செவி.

ஞானேந்திரியம்-5:—(1) வாக்கு, (2) பாதம், (3) பாணி (4) குதம், (5) உபஸ்த்தம்.

கரணம்-4:—(1) மனம், (2) புத்தி, (3) அகங்காரம், (4) சித்தம்.

நாடி-10:—(1) சுழுமுனை, (2) இடை, (3) பிங்கலை, (4) காந்தாரி, (5) அத்தி, (6) சிங்குவை, (7) அலம்புடை, (8) புருடன், (9) குகு, (10) சங்கினி.

அவத்தை-5:—(1) சாக்கிரம், (2) சொப்பனம், (3) சுழுத்தி, (4) துரியம், (5) துரியாதீதம்.

மலம்-3:—(1) ஆணவம், (2) காமியம், (3) மாயை.

குணம்-3:—(1) சாத்துவிகம், (2) இராசதம், (3) தாமதம்.

மண்டலம்-3:—(1) அக்கினி மண்டலம், (2) ஆதித்த மண்டலம், (3) சந்திர மண்டலம்.

பிணி-3:—(1) வாதம், (2) பித்தம், (3) சிலேட்டுமம்.

விகாரம்-8:—(1) காமம், (2) குரோதம், (3) உலோபம், (4) மோகம், (5) மதம், (6) மாற்சரியம், (7) இடம்பை, (8) அசூயை.

ஆதாரம்-6:—(1) மூலாதாரம், (2) சுவாதிட்டானம், (3) மணிபூரகம், (4) அநாகதம், (5) விசுத்தி, (6) ஆஞ்ஞை.

தாது-7:—(1) இரதம், (2) இரத்தம், (3) சுக்கிலம், (4) மூளை, (5) தசை, (6) எலும்பு, (7) தோல்.

வாயு 10:—(1) பிராணன், (2) அபானன், (3) சமானன், (4) உதானன், (5) வியானன், (6) நாகன், (7) கூர்மன், (8) கிரிகரன், (9) தனஞ்சயன், (10) தேவதத்தன்.

கோசம்-5:—(1) அன்னமயம், (2) பிராணமயம், (3) மனோமயம், (4) விஞ்ஞானமயம், (5) ஆனந்தமயம்.

வாயில்-9:—(1) கண், (2) காது, (3) மூக்கு, (4) வாய், (5) குதம், (6) குய்யம்.

ஆக 96-தத்துவங்களாம்.

## அக்காலத்தில் பிரபலமாக இருந்த கலைஞானங்களாவன:—

(1) அக்கரவிலக்கணம்.
(2) இலிகிதம்.
(3) கணிதம்.
(4) வேதம்.
(5) புராணம்.
(6) வியாகரணம்.
(7) நீதிசாஸ்திரம்.
(8) சோதிடசாத்திரம்.
(9) தருமசாத்திரம்.
(10) யோகசாத்திரம்.
(11) மந்திரசாத்திரம்.
(12) சகுனசாத்திரம்.
(13) சிற்பசாத்திரம்.
(14) வைத்தியசாத்திரம்.
(15) உருவசாத்திரம்.
(16) இதிகாசம்.
(17) காவியம்.
(18) அலங்காரம்.
(19) மதுரபாடணம்.
(20) நாடகம்.
(21) நிருத்தம்.
(22) சத்தப்பிரமம்.
(23) வீணை.
(24) வேணு.
(25) மிருதங்கம்.
(26) தாளம்.
(27) அத்திரபரீட்சை.
(28) கனகபரீட்சை.
(29) இரதபரீட்சை.
(30) கசபரீட்சை.
(31) அசுவபரீட்சை.
(32) இரத்தினபரீட்சை.
(33) பூமிபரீட்சை.
(34) சங்கிராமவிலக்கணம்.
(35) மல்லயுத்தம்.
(36) ஆகருடணம்.
(37) உச்சாடனம்.
(38) வித்துவேடணம்.

(39) மதனசாத்திரம்.
(40) மோகனம்.
(41) வசீகரணம்.
(42) இரசவாதம்.
(43) காந்தருவவாதம்.
(44) பைபீலவாதம்.
(45) கவுத்துகவாதம்.
(46) தாதுவாதம்.
(47) காருடம்.
(48) நட்டம்.
(49) முட்டி.
(50) ஆகாயப்பிரவேசம்.
(51) ஆகாயகமனம்.
(52) பரகாயப்பிரவேசம்.
(53) அதிரிசியம்.
(54) இந்திரசாலம்.
(55) மகேந்திரசாலம்.
(56) அக்கினித்தம்பம்.
(57) சலத்தம்பம்.
(58) வாயுத்தம்பம்.
(59) திட்டித்தம்பம்.
(60) வாக்குத்தம்பம்.
(61) சுக்கிலத்தம்பம்.
(62) கன்னத்தம்பம்.
(63) கட்கத்தம்பம்.
(64) அவத்தைப்பிரயோகம்.

இதிற் பெரும்பான்மையான நூல்கள் கால பேதத்தினல் மறைந்துவிட்ட தன்றியில், பிறகு இந்நாட்டின்மேற் படையெடுத்துவந்து வென்று குடிகொண்ட எவனர், மகம்மதியர்களால் நாசமாக்கப்பட்டதாகச் சில சரித்திரங்களினல் தெரியவருகிறது. இந்த இரண்டாவது படியினல் இந்துக்கள் தத்துவசாஸ்திர ஞானத்தைப் பூரணமாகப் பெற்று, பதார்த்தங்களின் தாரதம்மியங்களை உண்மையாக அறிந்து, உலகத்தில் ஒப்புயர்வற்ற ஜாதியாராக வாழ்ந்து வந்தார்கள்.

## 3-வது, இந்துமத ஞானேதயத்தின் மூன்ருவது படி.

### தருமசாஸ்திரங்கள்.

வேதங்கள் இந்நிலையிலிருக்க அவைகளை நன்கறிந்தவர்கள் கி. மு. 1200-வருஷங்களுக்குமுன் இந்துநதிக்கருகில் சரஸ்வதி ஆற்றிேரத்தி லிருந்த ஓர் பெரிய பட்டணத்தில் ஸ்மிருதியாதி தரும நூல்களை எழுதினர்கள். ஸ்மிருதி என்ருல் பாரம்பரியமாகப் பெரியவர்களால் கேட்டு எழுதப்பட்டவைகள். அக்காலத்தில் ஆரியர் குடியானவர்களாகிவிட்டபடியால், அவர்களுக்கு வேண்டிய சட்ட திட்டங்களுக்கு மநுதர்ம சாஸ்திரம் எழுதப்பட்டது. அப்புத்தகம் 12-பிரிவுகளாக வகுக்கப்பட்டு, முதற்பிரிவில் சிருஷ்டியைப்பற்றியும், 2-ல் படிப்பைப்பற்றியும், 3-ல் குரு பக்தியைப்பற்றியும்,

4-ல் நீதியைப்பற்றியும், 5-ல் உணவைப்பற்றியும், 6-ல் சந்நியாசத்தைப்பற்றியும், 7-ல் இராஜ தருமத்தைப்பற்றியும், 8-ல் நியாயகுற்ற சிக்ஷைகளைப்பற்றியும், 9-ல் ஸ்திரீ தருமத்தைப்பற்றியும், 10-ல் கால வித்தியாசத்தைப்பற்றியும், 11-ல் பிராயசித்தாதிகளைப்பற்றியும், 12-ல் பூர்வஜன்மம் புனர்ஜன்மங்களைப்பற்றியும், வெகுவிநோதமாக எழுதப்பட்டிருக்கின்றது.

சுருதிகளுக்குப் பின் சிறந்தவை ஸ்மிருதிகளென்று முன் சொல்லியிருக்கிறோம். இந்த ஸ்மிருதிகளினால் வேதங்களை நன்கறிவதற்கேற்ற வேதாங்கங்களை ஸ்தாபித்திருந்தாலும், சுருதிகளிற்கண்ட சடங்கு முதலியவற்றைப் பார்க்கிலும் சிறந்த கிருகஸ்தாச்சிரம சடங்காதிகளைப்பற்றியும், தர்மசாஸ்திர பக்திசாஸ்திர ஆசாராதிகளைப்பற்றியும், மநு, யாக்ஞியவல்கியராதி மஹாத்மாக்கள் எழுதினார்கள். இப்படிப்பட்ட சாஸ்திரங்கள் பலவாயினும் சிறந்தவை பத்தொன்பது. இப்பத்தொன்பதை யனுசரித்தே பிராம்மணமதஸ்தர் காலங்கழிக்கவேண்டும். அவற்றிற் பிரதானமானவை நான்காம். அவையாவன:—

(1) ஆசாரம்: அதாவது பரம்பரையாகப் பெரியோர்களனுசரித்து வந்ததைத் தழுவி நடப்பது சதாசாரமாம்; அப்படி நடவாதது துராசாரமாம்.

வியவஹாரம்: அதாவது துரைத்தன சட்டதிட்டங்களைத் தழுவி நடப்பதற்கு வேண்டிய விதிகளை யனுசரித்தலாம்.

(2) பிராயச்சித்தம்: அதாவது பாவத்தொழில்களை யனுசரித்ததற்கு க்ஷமிக்கவேண்டிய விதிகளை யனுசரித்தலாம்.

(3) கர்மபலம்: அதாவது பாவத்தினால் வருந்தும் ஆத்மாவை அனுதாபத்தால் சுத்தியாக்கி மோக்ஷத்துக் கேதுவாக்கலாம்.

(4) ஜாதிபேதம்: அதாவது பரப்பிரம்மத்தின் முகத்தில் பிராமணர்களும், புஜத்தில் க்ஷத்திரியர்களும், துடையில் வைசியர்களும், பாதத்தில் சூத்திரர்களும் பிறந்தார்களாம். இவர்களில் பிராம்மணர்: முக்கியமாக வைதீகவிஷயங்களையும்; க்ஷத்திரியர்:

தேச பரிபாலனத்தையும்; பூவைசியர், தனவைசியர், கோவைசியர் என மூவகைப்பட்ட வைசியர் விவசாய முதலியவற்றையும், சூத்திரர் அடிமைத் தொழில்களையுந் தழுவவேண்டும். இந்நால்வரில், பிராம்மணர் துவிஜர் என்னப்பட்ட இருபிறப்பாளர்களென்றும், இவர்கள் மச்சம், மாமிசம், மதுபானம், பிராம்மணரின் பொன்னைத் திருடல், குருபத்தினியைச் சேரல், துஷ்டசிநேகம் ஆகியவைகளை விட்டொழிய வேண்டியதால் சிறந்தவர்களாம். மேலும், பிரமசரியம், கிருஹஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என்னும் நான்கு ஆசிரமங்களையும்; கர்ப்பாதானம், பும்சவனம், சீமந்தநயனம், ஜாதககர்மம், நாமகர்மம், நிஷ்கரமணம், அன்னப்பிராசனம், சூடாகர்மம், கர்ணவேதனம், உபநயனம், கேசாந்தம், சமாவர்த்தனம், விவாஹம் ஆகிய சம்ஸ்காரங்களை யனுசரிக்கவேண்டும். இவைகளைச் சிலவேளைகளில் க்ஷத்திரியரும் வைசியரும் அனுசரிக்கலாம். இவைகளிற் சிறந்தது உபநயனமே. அதாவது, பிராம்மணன் எட்டு வயதிலும், க்ஷத்திரியன் பதினொன்றிலும், வைசியன் பனிரெண்டிலும் சூரியனைக் கும்பிட்டு அக்கினியைச் சுற்றிவர, குருவானவர் யக்ஞோபவீத மென்கிற பூணூலைத் தரிப்பித்து, காயத்திரியாதி மந்திரங்களைப் போதித்தலாம்.

இனியிந்த ஆச்சிரமத்திலிருந்து வைதிகாதி நூற்களைக் கற்ற பிறகு விவாஹம் நடாத்தப்படும். அந்த விவாஹம் பிரம்மம், தெய்வம், ஆர்ஷம், பிராஜாபத்தியம், அசுரம், காந்தர்வம், இராக்ஷசம், பைசாசம் என எட்டு வகைப்படும். இவைகளிற் பிரம்ம விவாஹமே சிறந்தது.

கலியாணத்தில் கன்னிகையானவள் அக்கினியை மூன்றுதரம் சுற்றிவரச் சொல்லும் சப்தபதியாதி சடங்குகள் நடந்தபின்பு, பிதாவானவன் பெண்ணின் கையைப் பிடித்து மாப்பிள்ளைக்குத் தத்தஞ்செய்ய, மாப்பிள்ளை தாலியைக்கட்டுதலே புராதனவழக்கம். இப்படி விவாஹமானவர்கள் பிரதிதினமும் பிரம்மயாஜனம், பிதுர்யாஜனம், தேவயாஜனம், பூதயாஜனம், மநுஷியாஜனம் என்ற ஐந்து மஹாபூஜைகளை யனுசரிக்க வேண்டும். இவர்களில் பிராமணர்கள் இல்லறதர்மங்களை நடாத்தும்போது, பெற்றோர் முதலான பெரியோர்களுக்குச் சிரார்த்த கர்மங்களைத் தப்பாமல் செய்யவேண்டும். இறந்துபோன தகப்பன், பாட்டன், முப்பாட்டன், தாயார்,

பாட்டி, முப்பாட்டி, தகப்பன்தாயார், தகப்பன்பாட்டி, தகப்
பன் முப்பாட்டி, சிறியதகப்பன், சிறியதாயார், மாமன், மாமி,
குரு முதலானவர்களுக்கு நித்தியம், பருவம், ஏகோதிட்டம்,
உபநயனம், விவாஹம் என்ற பலபெயர்களால் பலகாலங்களி
லும் இறந்தபிறகு செய்யவேண்டும். இப்படிச் செய்வதனால்
இறந்த பிரேதமானது சூக்ஷ்மகாரண தேகங்களைப் பெற்றுப்
பரிசுத்தமான பிதுர்தேவர்களாகி விடுகின்றனராம். பூர்வம்
சிரார்த்தகாலங்களில் மாம்சாதிகளையும் வழங்கி வந்ததாகத்
தெரியவருகிறது. சிலசமயங்களில் ஹஸ்த சிரார்த்தம், ஹிரண்
ணியசிரார்த்தம், ஆமன்னசிரார்த்தம், ததிசிரார்த்தம், நந்தி
சிரார்த்தம் முதலானவைகளை உயிரோடிருக்கும்பிராமணரைப்
பிதுர்தேவதைகளாக எண்ணி, பிராமணசந்தர்ப்பணம் செய்ய
வேண்டும். மேலும், சிரார்த்த பிண்டங்களைச் சபிண்டசாம
நோதங்களை யனுசரித்துச் செய்யவேண்டும். இவ்விதம் கிரு
ஹஸ்தாச்சிரமத்திலிருந்து நித்தியகருமங்களை முடித்த பிறகு,
வானப்பிரஸ்தம், சந்நியாசமென்னும் ஆசிரமங்களை யனுசரி
த்து ஜீவன்முக்தர்களாகவேண்டும். மறுதர்மத்தைச் சார்
ந்த யாக்ஞவல்கியமென்னும் சாஸ்திரத்திற்கு விஞ்ஞா
நேஸ்வரர் மிதாக்ஷரம் எனனும் சிறந்த உரையை எழுதி
யிருக்கிறார். அது காசி மிதிலை முதலான விடங்களில் மாத்
திரம் வழங்கி வருகிறது.

இப்படி ஆரிய பிராமணர்கள் உயர்குலம் இழிகுலம்
முதலான ஜாதிபேதங்களையும், சடங்குகளையும் ஸ்தாபித்து,
அக்காலத்திற் கற்றறிந்த பிராமணர்கள் கொழுத்து கர்விகளா
கித் தமக்கு மேலானவர்கள் இல்லையென்று அக்கிரமங்களைச்
செய்துவந்ததனால், சிலருக்கு அவைகளில் வெறுப்புண்டாகி
அந்தரங்கமாக ஆக்ஷேபனைகளைச் செய்துவந்தார்கள். அதா
வது, அவர்களில் வேதத்திற்கண்ட பிரம்மாவே சிருஷ்டிக
ரென் றெண்ணும் பிரம்மவாதிகளும், விஷ்ணுவே சிருஷ்டி
கர்த்தாவென்றுசாதிக்கும் வைணவர்களும், சிவனே சிருஷ்டி
கர்த்தரென்றெண்ணும் சைவர்களும், சக்தியே சிருஷ்டிகர்
த்தாவென்றெண்ணும் சாக்தேயர்களும், சூரியனே சிருஷ்டி
கர்த்தரென்றெண்ணும் சவுரர்களும், கணபதியே சிருஷ்டி
கர்த்தரென்றெண்ணும் காணாபத்தியர்களும், மதுமாம்சங்களை
யுண்டு திகம்பரியாகத் திரிவதே சிரேஷ்டமென் றெண்ணும்
காபாலிகர்களும், பிருதிவி அப்பு தேயு வாயு என்னும் நான்கு

பூதங்களின் திரிபே பிரபஞ்ச சிருஷ்டிக்குக் காரணமென்றெண்ணும் சார்வாகர்களும், இயற்கையாலே உலக சிருஷ்டியாகிறதென்றெண்ணும் பிருஹஸ்பதிவாதிகளும், உலகமும் அதிலுள்ள சகலபதார்த்தங்களும் சூனியமாக இருக்கிறதென்றெண்ணும் சூனியவாதிகளும், இவ்வுலகசுகமே உண்மையான சுகமென்றெண்ணும் லோகாயுதர்களும், சுகுதமுனிவருடைய சித்தாந்திகளாகிய சவுகதர் அல்லது சாக்கியர்களும், ஜோதி சாஸ்திரமே சிறந்ததென்றெண்ணும் சாபனகிகளும், உலகம் அநாதியென்றும் சிருஷ்டிக்கப்படவில்லையென்றும் சொல்லும் ஜைனர்களும், பரமாத்துமா ஜீவாத்துமா இல்லையென்னும் புத்தர்களும, உலகம் யாவும் மித்தையென்றும் மாயையென்றும் சாதிக்கும் மாயாவாதிகளும், மற்றுமநேக நாஸ்திக வாதிகளும் தோன்றி சர்ச்சித்து தருக்கமாடி வந்தார்கள்.

அப்படிச் செய்துவந்தவர்களிற் சிறந்தவரான க்ஷத்திரிய ஜாதியைச் சார்ந்த கவுதமபுத்த ரென்பவர்: வைசேஷிகம், சாங்கிய சாஸ்திரங்களைத் தழுவிப் புத்தசமயத்தை ஸ்தாபித்தார். இந்தப் புத்தசமயமானது கடவுளில்லையென்ற நாஸ்திகத்தையும், சகலரும் ஒரேஜாதியென்னும் சித்தாந்தத்தையும், இன்னும் பிராம்மண மதஸ்தர்களுக்கு விரோதமான கோட்பாடுகளையும் போதித்துவருவதாக எண்ணிப் பாமரஜனங்கள் பயந்து மயங்கி அதை யனுஷ்டிக்காமலிருக்கினும், சில்ஜனங்களும், சில ராஜாக்களும் அந்தப் புத்தமதத்தைச் சார்ந்துகொண்டார்கள். அந்தப் புத்தமதமும் சிலகாலம் பிரபலமாகவே பிரகாசித்தது. (இப்புத்த சமயத்தைப்பற்றிப் பின்னால் தனியாகச் சரித்திர மெழுதியிருக்கிறோமாகையால் அதில் விவரமாகக் காணலாம்.) ஆனால், புத்தசமயமானது கடைசியாகப் பிராமண சமயத்தாருடைய தந்திர யுக்திகளினால் நசிக்கத் தலைப்படவே, புத்தசமயத்தார் பண்டித பாமரர் சமூகத்தையும் தம்மதத்தையும் அவலம்பிக்கும்படியான அநேக விசித்திர விநோத சிற்பலங்கார கோயில்களையும், கட்டடங்களையும், சத்திரங்களையும், மண்டபங்களையும், சிலாரூபங்களையும், உற்சவ ஊர்க்கோலங்களையும் ஏற்படுத்தினார்கள். இவர்களைப் பார்த்து, பிராம்மண மதஸ்தர்களும் அதேமாதிரியாகச் செய்ய ஆரம்பித்து, தாந்திரிக சிற்பாதி சாஸ்திரங்களையும் விருத்தியாக்க ஆரம்பித்தார்கள்.

அதன் திருஷ்டாந்தமிது.

வியாசர்,பதஞ்சலி மகாமுனிவர்கள் வேதஉபநிஷத்துக்களைத் தழுவி, பரமாத்மாவானது: பிரபஞ்சம் யாவற்றிலும் நிறைந்தவஸ்துவென்றும், பிரதிமநுஷனும் பிரபஞ்சத்தைச் சார்ந்த பிராணியாகையால் பிரபஞ்சத்தைச் சார்ந்த பிரதிமனிதனிடத்திலும் பரமாத்மா விருக்கிறதென்றும், அப்படியிருப்பதால், பிரதிமநுஷனும் தன்னைத்தானறியவேண்டுமென்றும், தன்னைத்தானறிந்தால் தலைவனாகிய பரமாத்மாவை யறிந்தவனாகிறானென்றும் சொன்ன கருத்தையே பிராமண மதஸ்தர்களனுசரித்தபோதிலும், இப்படிப்பட்ட அதிருஷ்ய வஸ்துவை மூடஜனங்களறிந்துய்வது கஷ்டமென்றும், மானிடதேகமாகிய ஸ்தூலத்தில் ஆத்மாவாகிய பிரகாசமெப்படியிருக்கிறதோ அப்படியே, பிரபஞ்சமாகிய ஸ்தூலத்தில் ஆத்மாவாகிய சூரியன் தேவனென்றும் சூரியனை வணங்கவும், சிலர் கருத்தின்படி பிரபஞ்சம் யாவும் ஜலமயமானபடியால் ஜலமேதேவனென்றும், சிலர் கருத்தின்படி பிரபஞ்சம் யாவும் அக்கினிமயமாகையால் நெருப்பே தேவனென்றும், பிறகு பிறப்பிடமாகிய பிரகிருதியையும் வணங்கத் தலைப்பட்டும், பிறகு அடிக்கடி ஆகாயத்தில் சூரியனைப் பார்த்துத் துதிப்பதுங் கஷ்டமெனக் கண்டு, அண்டத்தில் அச்சூரியனுக்குப் பிரத்தியக்ஷமாகிய அக்கினியை ஆரியபிராமணர்கள் வீட்டில்வைத்துப் பூஜித்து வந்தார்கள். ஆனால் பிரகிருதி, ஜலம், வாயு ஆகியவைகளுக்குச் சமானமான உபமானங்கள் (நெருப்பைப்போல) அண்டத்தில் காட்டல் அசாத்தியமாகையால், அவைகளுக்குப் பிரத்தியக்ஷங்களாகக் கல், கட்டைகளைப் பிரதிநிதிகளாக்கியும்; பிறகு தாந்திரீக சிற்பாதி சாஸ்திர பலத்தினால் கல், கட்டை, லோகாதிகளால் விக்கிரகங்களைச் செய்வித்தும் வணங்கத் தலைப்பட்டார்கள். மேலும், பிரதிமநுஷனுந் தனது வீட்டில் இத்தன்மையான விக்கிரகங்களை வைத்து வணங்குவது கஷ்டமெனக் கண்டு, சகலருக்கும் உபயோகமும் பொதுவுமான கோயில்களைக் கட்டத்தலைப்பட்டார்கள். அந்தக்காலமுதல் இரதோற்சவ முதலானவைகளு முண்டானதாகத் தோன்றுகின்றன. எப்படியெனில், இந்தப் பூமியானது கோழிமுட்டையின் கோணரூபமாக விருப்பதைப்போலவே, இரதங்களை அடிசிறியதாகவும், இடை பெரியதாகவும், நுனி சிறியதாகவுஞ் செய்வித்து, அவைகளைப்பிரபஞ்சத்தின் பிரதிநிதிகளாக்கியும்,

அந்தரதங்களின் சுற்றிலுமிருக்கும் பிரதிமைகளைப் பிரபஞ்ச பிராணி கோடிகளுக்குப் பிரதிநிதிகளாக்கியும், மத்தியிலிருக்கும் விக்கிரகம் பரமாத்மாவாக எண்ணியுங் கொண்டாடப்பட்டது. மேலும், பிராமண மதஸ்தர்கள் புத்த சமயத்தாரைவென்றவிடங்களிலிருக்கும் தமதுகோயில்களில்ஜெயஸ்தம்பங்களை நாட்டிவந்தார்கள். கடைசியாக, முன்குறித்த பிறப்புக்கிடமாகிய பிரகிருதியை பிரம்மாவாகவும், சூரியனுக்குப் பிரதிநிதியாகுந் தீயை உருத்திரனாகவும், ஜலத்துக்குப் பிரதிநிதியாகிய வருணனை விஷ்ணுவாகவும் வர்ணித்தும், அவர்களுக்கு மனைவிமக்களையுங் கற்பித்தும், புத்திசாமார்த்திய சாதுரியங்களால் இதிகாஸ புராணங்களை யெழுதினார்கள்.

## 4-வது, இந்துமத ஞானோதயத்தின் நான்காவது படி.

### புராணங்களின் விவரம்.

புராணமென்றால் புராதனமான சங்கதிகளையுடையதாம். அதாவது, இந்துக்கள் தமது புராதனமான சுருதி ஸ்மிருதிகளை அறிந்துய்யச் சக்தியற்றபோது, அவர்களுக்குச் சுலபமான பாஷைகளில் அறம்பொருளின்பம் வீடென்னும் தருமங்களை யறிந்துய்யப் பெரியோர்களால் எழுதப்பட்ட நூல்களாம்.

### பதினெண் புராணங்களின் சரித்திர சாரசங்கிரகம்.

### புராணத்தின் பூர்வஸ்திதி.

கிருதயுகத்தில் பிரம்மாவினால் நூறுகோடி கிரந்தங்களுள்ள ஒரே நூலாக இயற்றப்பெற்றிருந்ததாகவும், அதைத் திரேதாயுகத்தில் சில ரிஷிகள் 118-சம்ஹிதைகளுள்ளதாகவும், 18-பிரிவுகளுள்ள ஒருகோடி கிரந்தங்களாகச் செய்ததாகவும், அவைகளை வேதவியாசர் துவாபரயுகத்தில் இலக்ஷம் கிரந்தங்களுள்ள 18-புராணங்களாகச் செய்ததாகவும் மச்சபுராணம் 53-வது அத்தியாயத்தில் விரிவாகச் சொல்லப்பெற்றிருக்கிறது. இப்போது இந்நாட்டில் (1) பிரம்மம், (2) பதுமம், (3) வைணவம், (4) சைவம், (5) பாகவதம், (6) பவுஷியம், (7) நாரதீயம், (8) மார்க்கண்டேயம், (9) ஆக்நேயம்,

(10) பிரம்மகைவர்த்தம், (11) இலிங்கம், (12) வராஹம், (13) ஸ்காந்தம், (14) வாமனம், (15) கூர்மம், (16) மச்சம், (17) காருடம், (18) பிரம்மாண்டமென்னும் பெயர்களை யுடைய 18-புராணங்களே பிரபலமானவைகள்.

## 1-வது, பிரம்மபுராணம்.

இது ஆதியில் 10,000 சுலோகங்களையுடையதாக இருந்து, இப்போது 7,000 முதல் 8,000 சுலோகங்களுள்ளதாகப் பிரகாசிக்கிறது. இதில் முக்கியமாக உலகசிருஷ்டி முதலான விவரங்களும், ஸ்ரீ ஜகந்நாதபுரியில் பிரகாசிக்கும் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய வைபவங்களும், பிரம்மாவினால் தக்ஷருக்கு உபதேசித்தவைகளும் சொல்லப்பெற்றிருக்கின்றன.

## 2-வது, பத்மபுராணம்.

இது பிரம்மாவானர் கமலாசனத்திலிருந்து சிருஷ்டி செய்த வைபவத்தைப் புலஸ்தியருக்குப் போதிக்க, அவர்பீஷ்மருக்குச் சொன்னதாக, ரோமஹரிஷியுடைய புத்திரராகிய சூதர், நைமிசாரணிய ரிஷிகளுக்குச் சொன்ன 55,000 சுலோகங்களை உடையது. இதில் சிவபெருமான்: விஷ்ணுவின் மகிமையைப் பார்வதிதேவிக்குச் சொல்லியதைப் பற்றியும், அவ்விருவரும் விஷ்ணுவைக் கொண்டாடியதைப்பற்றியும்; ஜைனமதஸ்தர், மிலேச்சர்கள் வந்த சங்கதிகளைப்பற்றியும்; ஸ்ரீரங்கம், திருப்பதி, விஜயநகர இராயனு சரித்திரங்களைப்பற்றியும் சொல்லப்பெற்றிருக்கின்றன. இதன் பூர்வ பாகத்தை வைஷ்ணவர்களும், உத்தரபாகத்தைச் சைவர்களும் பிரமாணமல்லவென்று சொல்வதனால், இது ஒரு மதத்துவேஷமான புராணமென்று அநேகருடைய அபிப்பிராயம்.

## 3-வது, விஷ்ணுபுராணம்.

இஃது புராணங்களுக் கெல்லாம் சிரேஷ்டமானதாம். ஏனெனில், புராணங்களுக்கு இன்றியமையாத பஞ்சலக்ஷணங்களோடு கூடியபுராணம் இதுவேயாம். இது ஆறு அம்சங்களுடையதாகவும், அநேக அத்தியாயங்களுடையதாகவும், 23,000 சுலோகங்களுடையதாகவும், பராசரர் மைத்திரேயருக்குப் போதித்ததாகவுமுள்ள சிறந்த புராணம். இதன் முதல் அத்தியாயத்தில்: உலகசிருஷ்டி விஷயத்தைப்பற்றியும், பிரஹலாதர் முதலானவர்களுடைய சரித்திரங்களைப்பற்றியும்;

இரண்டாவதில்: பிரபஞ்சம் சூரியசந்திராதிகள் பற்பல நகரங்கள் இவைகளின் விவரங்களைப்பற்றியும், பரதர் முதலானவர்களுடைய விவரங்களைப்பற்றியும்; மூன்றாவதில்: மநு, மந்வந்தரங்களின் விவரம், வேதப்பிரிவுகளின் விவரம், பிதுராதி சிரார்த்தங்களைச்செய்யும் விவரங்களைப்பற்றியும்; நான்காவதில்: சூரியசந்திரவம்சங்களின் விவரங்களைப்பற்றியும்; விஷ்ணுவானவர் கல்கியவதாரமெடுக்கும் விவரங்களைப்பற்றியும்; ஐந்தாவதில்: ஸ்ரீ கிருஷ்ணாவதார வைபவத்தைப்பற்றியும்; கலியுகதரும விவரத்தைப்பற்றியும்; ஆறாவதில்: கலியுகதருமம், மூன்று வினாசங்கள், மோக்ஷசாதனம் இவைகளைப்பற்றியும் விஸ்தரித்துச் சொல்லியிருக்கிற தன்றியில்; கலியுகத்தில் அரசுசெய்யும் சில இராஜவமிசத்தார் விஷயங்களும், விவரிக்கப்பெற் றிருக்கிறது.

## 4. சிவபுராணம்.

இதுவே வாயுபுராணம். இஃது நைமிசாரணிய ரிஷிகளுக்கு, சூதரால் சொல்லப்பெற்ற பிராகிரயா, உபாதகாத, அநுசங்கா, உபசம்ஹார என்னும் நான்கு பாதங்களையும், 24,000 சுலோகங்களையும் உடையதாகவுள்ளது. இது சுவேத கல்பத்தைப்பற்றியும், சிவபெருமானாகிய ருத்திரமூர்த்தியின் மஹத்துவத்தைப்பற்றியும் சொல்லுகின்றது.

## 5. ஸ்ரீ பாகவதபுராணம்.

இஃது அஸ்தினாபுரத்தின் அரசனும், அர்ஜ்ஜுனனுடைய பேரனுமாகிய பரிக்ஷித்து மஹாராஜனுக்கு வியாசருடைய புத்திரராகிய சுக வேதர் சொன்னதை நைமிசாரணிய ரிஷிகளுக்குச் சூதரால் சொல்லப்பெற்றது. 12-ஸ்கந்தங்களாகப் பிரிக்கப்பெற்ற 332-அத்தியாயங்களில், 18,000-சுலோகங்களையுடையதுமாகிய சிறந்தபுராணம். ஹிமசேதுவரையிலுள்ள பெரும்பான்மையான இந்துக்களால் புகழ்ந்துகொண்டாடப்படும் இந்தப் புராணத்தில், உலக சிருஷ்டி விமர்சனையைப் பற்றியும், இத்தேசத்தில் ஆண்ட சக்கரவர்த்திகள், மநுக்கள் ஆகியவர்களுடைய சரித்திரங்களைப்பற்றியும் விஷ்ணுபுராணத்தில் சொல்லியிருப்பதைப்போலவே விஸ்தரித்துச் சொல்லியிருப்பதோடு, பத்தாவது ஸ்கந்தத்தில் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினுடைய ஜனனம், லீலை ஆகியவற்றைப்பற்றியும் விஸ்தாரமாக அறிவிக்கப்பெற் றிருக்கின்றது. சிலர் இந்தப் பாகவத

புராணத்தைப் பூபதேவர் என்னும் வியாகரண பண்டிதர் இயற்றியதாக அபிப்பிராயப்படுகிறார்கள். அது சரியான அபிப்பிராயமாகத் தோற்றவில்லை. இந்தப் பாகவதபுராணத்திற்கு ஸ்ரீதரசுவாமிகள் இயற்றிய வியாக்கியான மிருக்கிறது. பூபதேவர் இயற்றியது தேவிபாகவதமென்னும் சைவமத கிரந்தமாம்.

## 6. நாரதீயபுராணம்.

இஃது நைமிசாரணிய ரிஷிகளுக்கு நாரதர் 25,000 சுலோகங்களில் பிருஹத் கல்பத்தைப்பற்றியும்; துருவர், பிரஹ்லாதர் ருக்மாங்கதன் இவர்களுடைய சரித்திரங்களைப்பற்றியும், ஏகாதசி விரதப்பலனைப்பற்றியும் சொல்லிய வைணவபுராணம். இப்போது அநுஷ்டானத்தில் 3,500 சுலோகங்கள்தான் இருக்கின்றன. மற்ற சுலோகங்கள் மறைந்திருக்கின்றன. மேலும், இதில்புராணலக்ஷணத்துக்குவேண்டிய உலகசிருஷ்டி விஷயத்தைப்பற்றியும், ஆண்டஅரசர் சக்கரவர்த்திகளுடைய சரித்திரங்களைப்பற்றியும் சொல்லப்பெற்றிருக்கவில்லை. அன்றியும், இந்த நாரதீயபுராணத்தைப்போலவே நாரதர், சனத்குமாரருக்குப்போதித்ததென்று சூதர் உபதேசித்ததாக இப்போது அநுஷ்டானத்தில் ஒன்றிருக்கின்றது. இஃது மார்க்கண்டேயர் உற்பத்தி, சாகர புத்திரர்களுடைய வமிசநாசம், நாராயண ஸ்தோத்திரங்கள் முதலியவற்றைப்பற்றி மாத்திரம் தெரிவிக்கின்றது.

## 7. மார்க்கண்டேயபுராணம்.

இஃது மார்க்கண்டேய மஹரிஷியால், தருமாதருமங்களைப்பற்றி ஜெயமுனிக்கு 9,000 சுலோகங்களில் சொல்லப்பெற்றிருக்கிறது. இதில் தேவலோகபக்ஷிகள் பிரம்மஞானத்தை போதிப்பதைப்பற்றியும், பலதேவருடைய தபசைப்பற்றியும், ஹரிச்சந்திரர் வைகுண்டத்தை அடைந்ததைப்பற்றியும், வசிஷ்டருக்கும் விசுவகர்மாவுக்கும் உண்டான கலகங்களைப்பற்றியும்; துர்கா, காளி, சாமுண்டி தேவிகளுடைய மஹத்துவங்களைப்பற்றியும்; உலக சிருஷ்டியாதி விஷயங்களைப்பற்றியும் பிரபலமாகச் சொல்லப்பெற்றிருக்கின்றது. இப்போது அநுஷ்டானத்தில் 6,900 சுலோகங்கள்தான் இருக்கின்றன. மற்ற 2,100 சுலோகங்கள் மறைந்திருக்கின்றன.

## 8. அக்கினிபுராணம்.

இஃது ஈசானகல்பத்தைப்பற்றி அக்கினிபகவான் வசிஷ்டருக்கு 16,000 சுலோகங்களில் போதித்தது. இதை வியாசர் கற்று, சூதருக்கு போதிக்க, அவர் நைமிசாரண்ய ரிஷிகளுக்கு உபதேசித்தார். இப்புராணம் இராமகிருஷ்ணவதாரங்களைப்பற்றியும், சிவபூஜை மஹத்துவத்தைப்பற்றியும்; பாணினி இயற்றிய வியாகரணத்தைப்பற்றியும், சாஸ்ருதரியற்றிய வைத்தியசாஸ்திரத்தைப்பற்றியும்; மல்லயுத்தம், முஷ்டியுத்தம், வில்வித்தைகளைப்பற்றியும்; விக்கிரமார்க்கன், சாலிவாஹனன் முதலான சில மன்னர்களுடைய சரித்திரங்களைப்பற்றியும் அறிவிக்கின்றது.

## 9. பவிஷிய புராணம்.

இஃது அகோர கல்பகாலத்தி லிவ்வுலகமிருக்கும் ஸ்திதியைப்பற்றியும், பிராணிகோடிகளின் ஸ்திதியைப்பற்றியும், சூரியனுடைய பிரதாபத்தைப்பற்றியும், பிரம்மா, சுவாயம்பு மனுவுக்கு 126 அத்தியாயங்களில் 14,000 சுலோகங்களாகக் கூறியது. இதன் ஐந்து அத்தியாயங்கள் பிர்மா, விஷ்ணு, சிவ விக்நேஸ்வராதி தேவர்களைப்பற்றியும்; 5-வது பிரதிசர்க்கம் சிருஷ்டியைப்பற்றியும் பிரஸ்தாபிக்கின்றன. மற்ற பாகங்களில், சமயாசார சம்ஸ்கார சந்தியாவந்தன சடங்குகளைப் பற்றியும்; குருபத்தி, ஜாதி, ஆசார தருமங்கள், விரதங்கள், நாகபஞ்சமி முதலியவற்றைப்பற்றியும் சொல்லப்பெற்றிருக்கின்றன. இப்போது அநுஷ்டானத்தில் 7,000 சுலோகங்கள்தா னிருக்கின்றன. மற்ற சுலோகங்கள் மறைந்தன. இதற்குச் சம்பந்தப்பட்டதாகச் சொல்லும் பவிஷியோத்தர புராணமென்று சொல்லும் ஓர் புராணம் 7,000 சுலோகங்களுடையதாக இருக்கிறது. இதில் இரத உற்சவம், மன்மதன் காமனாதிகளுடைய சரித்திரங்கள் சொல்லப்படுகின்றன.

## 10. பிரம்மகைவர்த்த புராணம்.

இஃது நாராயண ரிஷியானவர் நாரதருக்கும், அந்நாரதர் வியாசருக்கும், அவ்வியாசர் சூதருக்கும், அச்சூதர் நைமிசாரண்ய ரிஷிகளுக்கும் சொல்லிய பிரம்ம, பிரகிருதி, கணேச கிருஷ்ண ஜனனமென்னும் நான்கு கண்டங்களையுடையதாகி 18,000 சுலோகங்களால் பிரகாசிக்கிறது. இதில் பிரம்மதேவி,

கணேசர், கிருஷ்ணர் ஆகியவர்களுடைய பிரதாபங்களைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கினும்; இராதாகிருஷ்ணருடைய லீலைகளைப்பற்றியும், அவர் பிருந்தாவனத்திலும், கோகுலத்திலும் செய்த கிரீடைகளைப்பற்றியும், கோபிகைகளுடைய பக்தியைப்பற்றியும் பிரபலமாக வர்ணித்துச் சொல்லப்பெற்றிருக்கிறது.

## 11. இலிங்கபுராணம்.

இஃது தருமார்த்தகாமங்களின் இலக்ஷணங்களையும், அக்கினி கல்பகாலத்தில் மோக்ஷமடையும் விதத்தையும் பற்றி, பிரம்மாவுக்கு அக்கினி ஸ்வரூபரான மஹாதேவர் 11,000 சுலோகங்களில் சொன்ன சைவமத கிரந்தம். இதில் சிருஷ்டியாதி விஷயங்களைப்பற்றியும், சிவபெருமானே விஷ்ணுவைப்போலிருந்து சிவதருமங்களை நியமிப்பதைப்பற்றியும், அச்சிவபெருமான் கல்பங்கள்தோறும் 28-அவதாரங்களைச் செய்வதைப்பற்றியும், பயங்கரமான அக்கினி லிங்காவதாரமெடுப்பதைப்பற்றியும், விஷ்ணுவினும் சிவபெருமானே சிரேஷ்டரென்று காட்ட 1,000 வருஷகாலம் பல பக்கங்களில் திரிந்து, பிரம்மா விஷ்ணுவை அலக்கழித்ததைப்பற்றியும்; பத்மகல்பத்தையும், ததீசிமுனிவரைப்பற்றியும்; சிவபிரார்த்தனை, சிவமந்திர மஹாத்துவங்களைப்பற்றியும்; யோகசாதனையைச் செய்யும் விவரங்களைப்பற்றியும் பிரபலமாகச் சொல்லப்பெற்றிருக்கின்றது.

## 12. வராஹபுராணம்.

இஃது விஷ்ணுவானவர் வராஹாவதாரமெடுத்துப் பூமியை மீட்டியதையும்; மானவகல்பத்தையும், மதுராபுரி மகத்துவத்தையும், சுமந்தி முனிவருடைய சரித்திரத்தையும்; சிவபிரான், துர்க்காதேவியின் சரித்திரங்களையும்; தீர்த்த ஸ்தலங்களின் மகத்துவங்களையும் 24,000 சுலோகங்களால் சொல்லப்பட்ட சைவபுராணம்.

## 13. ஸ்காந்தபுராணம்.

இஃது மஹேசுவரர் தத்புருஷ கல்பத்தின் சங்கதிகளை, கந்தர் (அதாவது ஆறு சிரசுகளையுடைய) சுப்பிரமணியருக்கு உபதேசித்த 81,100 சுலோகங்களையுடைய சைவமத கிரந்தம். இது ஆறு சம்ஹிதைகளாகவும், 500 காண்டங்களாக

வும் பிரிக்கப்பெற்ற 5,00,000 சுலோகங்களுடையதாகச் சில கிரந்தங்களில் தெரிவிக்கப்பெற்றிருக்கின்றது. இதில் சூதசம்ஹிதை, சநத்குமாரசம்ஹிதை, சங்கரசம்ஹிதை, கபிலசம்ஹிதை என்றாதி பல சம்ஹிதைகளும்; பிரமோத்திர காண்டம், உத்கலகாண்டம், ரேவாகாண்டம், சிவரஹஸ்யகாண்டம், ஹிமவத்காண்டம் என்றாதி பலகாண்டங்களு மடங்கியிருக்கின்றன. இதில் காசிகாண்டம் ஒன்று மாத்திரம் 15,000 சுலோகங்களை யுடையதாயும்; அவைகளில் காசிக்ஷேத்திரத்தினுடையவும், அதையடுத்திருக்கும் க்ஷேத்திரங்களினுடையவும் மஹாத்மியங்களையும்; அகஸ்தியருடைய சரித்திரத்தையும், தக்ஷனாதீதசத்தில் இந்துமதம் பரவிய விவரத்தையும், காசிராஜனான திவதாசனுடைய சரித்திரத்தையும் விவரமாகத் தெரிவிக்கப்பெற்றிருக்கிறது. வட இந்தியாவிலுள்ளவர்கள், ஜகந்நாதத்தின் பெருமையும், அதை யடுத்திருக்கும் புவனேசுவரருடைய சரித்திரமும் உத்கலகாண்டத்தில் விவரித்திருப்பதைப்பற்றி விசேஷமாகக் கொண்டாடி வருகிறார்கள்.

## 14. வாமனபுராணம்.

இது திருவிக்கிரமருடைய இருப்பைப்பற்றியும், சிவ கல்பத்தைப்பற்றியும், பிரம்மதேவர் 10,000 சுலோகங்களாகச் சொல்லிய ஓர் பொதுப்புராணம். இப்போதுஅநுஷ்டானத்திலிருக்கும் புராணம் புலஸ்தியர் நாரதருக்குப் போதித்த 7,000 சுலோகங்களை யுடையதாயும்; இலிங்க பூஜையைப் பற்றியும், தக்ஷனுடைய யாகத்தைப்பற்றியும், காசிநகருக்கடுத்திருக்கும் பாபவிமோசன தீர்த்தத்தைப்பற்றியும், காம தேவனை எரித்தவிஷயத்தைப்பற்றியும், ஹிமாசலத்திலுள்ள பதரிகாச்சிரமத்திலிருக்கும் கேதார ஈசுவரரைப்பற்றியும், சரயுநதி குருக்ஷேத்திரங்களைப்பற்றியும், கோதாவரியைப் பற்றியும், உமாசிவ கல்யாணத்தைப்பற்றியும், கிருஷ்ணன் வாமனவதாரமாகிப் பலிச்சக்கரவர்த்தியை அடக்கியதைப் பற்றியும், மந்வந்தரங்களைப்பற்றியும் போதிக்கின்றது.

## 15. கூர்மபுராணம்.

இதில் விஷ்ணுவானவர் ஆமையாக அவதரித்துப் பூமிக்குள்ளாண்டு, புருஷார்த்தத்தைச் சாகரதீர்த்தத்தினிடத்தில் இந்திரத்யும்நனுக்குச் சொன்னதாக இலக்ஷ்மீகல்பத்தைப்

பற்றி 17,000 சுலோகங்கள் சொல்லப்பெற்றிருக்கின்றன. இப்போது அநுஷ்டானத்திலிருக்கும் கிரந்தம்: பிர்ம்ம, பகவதி, சவுரி, வைணவி என்னும் நான்கு சம்ஹிதைகளை யுடையதாயும்; 6,000 சுலோகங்க ளுடையதாயும், சூதர் நைமிசாரணிய ரிஷிகளுக்குப் போதித்த முதல் அத்தியாயத்தில் சிருஷ்டி விஷயத்தைப்பற்றியும், விஷ்ணுவின் அவதாரங்களைப் பற்றியும், சூரிய சந்திர வம்சாவளியைப்பற்றியும், பைரவர் செய்த அண்டகாசுரன் வதையைப்பற்றியும்; மஹேசுவரி, சிவம், சத்தி, ஹேமவதி என்ற நான்கு சக்திகளைப்பற்றியும்; சிவபெருமான் அவதாரங்களைப்பற்றியும்; காசிமஹாத்துவம், யோகவிஷயம், ஈசுவரகீதை, வியாசகீதை, வைரவம், வாமம், அரஹதம், யாமலசாஸ்திரங்களைப்பற்றியும் தெரிவிக்கின்றது.

## 16. மச்சபுராணம்.

இஃது விஷ்ணுவானவர் மச்ச அவதாரமெடுத்துப் பிரளயங்களையும் கல்பங்களையும்பற்றி மநுவுக்கு உபதேசித்த 20,000 சுலோகங்களையுடைய கிரந்தம். இப்போது 14-முதல் 15-ஆயிரம் சுலோகங்கள்தான் இருக்கின்றன. இவற்றில் பிரளயகாலத்தில் மநுவைப் பாதுகாத்த விஷயமும்; விஷ்ணு புராணத்திற்சொல்லியிருப்பதைப்போல் சிருஷ்டிவிஷயமும், பிதுர்தேவதைகள் விஷயமும்; இராஜவமிச பரம்பரை விஷயமும்; இல்லறவின்பம், விரதாதிவிவரம், சிவபெருமான், பெருமான், திரிபுராசுரர் வதை, தாரகா தைத்தியர்களுடைய சண்டை கலகங்கள், கார்த்திகேயர் ஜனனம், உமாதேவியின் உற்பத்திவிவரம், காமனை எரித்தல், அசுரருடைய மாய்கை, அந்தகன் வதை, விஷ்ணுவின் அவதாரங்கள், சிற்பசாஸ்திரச் சிறப்பு, விக்கிரகநியமன சாஸ்திரம், நீதிநெறி, சிரார்த்தவிவரம், சாவித்திரி சத்தியவான் சரித்திரம் முதலானவைகளும் பிரபலமாக அறிவிக்கப்பெற்றிருக்கின்றன. இது பெயருக்குச் சைவபுராணமாகிலும், உண்மையில் ஓர் பொதுப்புராணம்.

## 17. கருடபுராணம்.

இஃது கருடகல்பத்தில் விஷ்ணுவானவர் கருடருடைய ஜனனத்தைப்பற்றி 15,000 சுலோகங்களில் சொன்னது. இப்போது 7,000 சுலோகங்கள்தா னிருக்கின்றன. இவைகள்

பிரம்மாவினால் தேவேந்திரனுக்கு உபதேசிக்கப்பட்டவைகளாம். இதில் சிருஷ்டி விஷயம், வாதங்களின் விஷயம், சிவன் சூரியன் விஷ்ணு ஆகியவர்களுடைய பூஜைகளைச் செய்யவேண்டிய விவரங்கள், சோதிடம், வைத்தியம், சாமுத்திரிகம், இரத்தின பரிக்ஷை, பிரேதகல்ப முதலியவைகள் விஸ்தாரமாகச் சொல்லப்பெற்றிருக்கின்றன.

## 18. பிரம்மாண்டபுராணம்.

இந்த பிரம்ம பீஜத்தைப்பற்றியும், இனிவரும் கல்பத்தைப்பற்றியும் பிரம்மாவானவர் 1,22,000 சுலோகங்களில் சொன்ன கல்பகமான கிரந்தம். இப்போது இதில் 124 அத்தியாயங்கள்கொண்ட 18,000 சுலோகங்கள் மாத்திரம் இருக்கின்றன. இதில் அகஸ்தியர் காஞ்சிபுரத்தில் ஹயக்கிரீவாவதாரமாக இருக்கும் விஷ்ணுபராசக்தியின் பூஜையைப்பிரபலமாக்கியதைபபற்றியும்;லலிதாதேவியின் மஹத்துவம்,பண்டாசூரன்வதை,சக்திபூஜையைச் செய்யும்விதங்கள் இவைகளைப் பற்றியும்; ஸ்காந்த வாயுபுராணங்களில் சொல்லியிருக்கிற சங்கதிகள் ஆகியவைகளும் சாங்கோபாங்கமாகச் சொல்லப்பெற்றிருக்கின்றன.

இப்பதினெண் புராணங்களில் மச்ச கூர்மாதி சில புராணங்கள் தாமச கிரந்தங்களென்றும், விஷ்ணு பாகவதாதி புராணங்கள் சாத்மீக மானவைகளென்றும், பிரம்மாண்டம் பவிஷ்யத்தியாதி புராணங்கள் இராஜசமானவைகளென்றும் சில வைணவர்களுடைய அபிப்பிராயம்.

உப புராணங்களில் முக்கியமானவை:—சனற்குமாரம், நாரசிங்கம், நாரதீயம், சிவதருமம், தூருவாசம், காபிலம், மானவம், அவுசனம், வாருணம், காளிகம், சாம்பேசம், நந்திகேச்சுரம், சவுரம்,பராசரம், ஆதித்யம், மஹேசுவரம், தேவிபாகவதம், வாசிஷ்டலிங்கம் என்பவைகளே. இவற்றிற் சிறந்தவை: சிவபுராணம், காளிகபுராணம் என்பவைகளாம். பிறகு கணக்கற்ற ஸ்தலாதி புராணங்களும் எழுதப்பட்டன. இந்தப் புராணங்களினால் அநேக புத்தர்கள் இந்துமதத்தைத் தழுவினும், பாமரராயிருந்த பெரும்பான்மையோர் பவுத்தராகவே யிருந்தமையால், அவர்களைத் தந்திரமாக இந்துமதத்திற் சேர்க்க, தாந்திரிக ஆகமாதி கிரந்தங்களை யுண்டாக்கி, அவற்றின் உதவியினால் விக்கிரகாராதனையும், அவற்றிற்கு நித்திய

நைமித்திகாதி பூஜைகளையும், இரதோற்சவாதி வேடிக்கை விநோதங்களையும் செய்வித்து, அப்பாமரர் பெரும்பாலாரை இந்துமதத்தைத் தழுவும்படி (பிராம்மண மதஸ்தர்கள்) செய்வித்தார்கள். இந்த விக்கிரகாராதனமும், விண்பக்தி சடங்குகளும் இந்துக்களுடைய பூர்வ வேதாந்த பிரம்மஞானத்திற்குத் தாழ்ந்தபடியாக இருக்கினும், அக்காலத்தில் அநேக இந்து ஸ்திரீ புருஷர்கள் சுலபமாக ஈசுவர பக்தியைப் பெற்றதோடு, விக்கிரகாராதனைக்கு இன்றியமையாத கோயில் கோபுராதி கட்டடங்களினால் சிற்பஞானத்தையும், விக்கிரக பூஜையாதிகளினால் சங்கீதஞான முதலியவற்றையும் பெற்றார்கள். ஆகவே இந்த 5-வது படியாகிய புராணனுஷ்டான காலத்தில் இந்துவேத வாக்கியங்கள் சுலபபாஷையில் எழுதப்பெற்றும், மூடருக்கு விக்கிரகாராதனை நியமிக்கப்பட்டும், அவைகளினால் அவர்கள் சுலபவழியாகிய ஈசுவரபக்தியையும், சிற்பசாஸ்திரம், சங்கீதாதி சாஸ்திரம் ஆகியவற்றின் ஞானத்தையும் பெற்றார்கள்.

## 6-வது, இந்துமத ஞானோதயத்தின் ஆறுவது படி.

### ஆகமங்கள்.

நமது நாட்டு ஸம்ஸ்கிருத கிரந்தங்களைப்பற்றி விசாரிக்கையில், புராணங்களுக்குப் பிறகு பிரசித்தியானவை ஆகம தந்திரங்களாம். அவை: இந்துதாந்திரம், புத்ததாந்திரம் என இருவகைப்படும். இந்து தாந்த்ரிர கிரந்தங்கள் சிவபெருமான் ஸ்ரீ பார்வதி தேவியை நோக்கி, சிருஷ்டியாதி விஷயங்களை சல்லாபனையாய்க் கூறியதாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. புத்ததாந்திரத்தில் புத்தர் தமதுசீடர்களை நோக்கிப் போதித்ததாம். சதாசிவப் பெருமானு லருளப்பெற்றவைஆகமம், யாமளம், தாந்திரீகம ஆகியகிரந்தங்களாம். இவற்றுள் ஆகமங்களில் சிருஷ்டி ஸ்திதி லயாதி விஷயங்களும், தேவபூஜை செய்யும் விவரங்களும், சடங்குகளைச் செய்யும் விவரங்களும், ஆறுவித தாந்திரீக சாதன விவரங்களும், நான்குவித தியானங்களும் பிரபலமாகச் சொல்லப்பெற்றிருக்கின்றன.

இத்தென்னிந்தியாவில் வைணவ ஆகமம், சைவ ஆகமம் என இருவகைப்படும். வைஷ்ணவாகமங்கள் பாஞ்சராத்திரம், வைகானசம் என இரண்டு. சோமகாசுரன் வேதங்களைச் சமுத்

திர நடுவிற் கொண்டுபோய் மறைத்தபோது, விஷ்ணு தன்னுடைய பூசார்த்தமாகப் பூசாவிதியைச் சாண்டில்லிய விருஷிக்கு ஐந்து இராத்திரியில் உபதேசித்தமையால் பாஞ்சராத்திரமெனப் பெயரைப் பெற்றதாம்.

வைகானசம்: அறவறமுதலிய ஒழுக்கங்களும், யோக ஞான சித்திகளுங் கூறுவதாம்.

சைவாகமங்கள்: காமிகமுதல் வாதுளமீறாகிய இருபத்தெட்டுமாம். இவை சதாசிவமூர்த்தியினது ஈசான முகத்தினின்றும் தோன்றினவாம். தத்துவ சொரூபமாகிய விக்கிரகங்கள், ஆலயங்கள், பூசைகள் என்னுமிவற்றினுண்மைப் பொருள்கள் அவ்வாகமங்களா லுணர்த்தப்படும். இவ்வாகமங்கள் மந்திரமெனவும், தந்திரமெனவும், சித்தாந்தமெனவும் பெயர் பெறும். ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு கோடியாக இருபத்தெட்டுக்கோடிகிரந்தங்களுடையனவாம். இவைஞான பாதம், யோகபாதம், கிரியாபாதம், சரியாபாதம் என்று தனித்தனி நான்கு பாதங்கள் உடையனவா யிருக்கின்றன. இவற்றுள் ஞானபாதம், பதிபசுபாசம் என்னும் திரிபதார்த்தங்களின் ஸ்வரூபத்தையும், யோகபாதம: பிராணாயாம முதலிய அங்கங்களையுடைய சிவயோகத்தையும், கிரியாபாதம்: மந்திரங்களின் உத்தாரணம், சந்தியாவந்தனம், பூசை, ஜெபம், ஓமம் என்பனவற்றையும்; சமய விசேஷ நிருவாண ஆசாரியாபிஷேகங்களையும், சரியாபாதம்: பிராயச்சித்தம், சிரார்த்தம், சிவலிங்கவிலக்கண முதலியவைகளையும் உபதேசிக்கின்றன. ஆகமம் என்பது பரமாப்தரினின்றும் வந்தது எனப் பொருள்படும். இவ்வாகமங்களுக்கு வழிநூல் நரசிங்க முதல் விசுவகன்மம் ஈறாகிய உபாகமங்கள் இருநூற்றேழுமாம். மூலாகமங்கள் இருபத்தெட்டும் வேதம்போல் சிவனாலருளிச்செய்யப்பட்டமையின் சைவர்க்கு இரண்டும் முதனூல்களாம். அவ்வாகமங்களின்படி அநுஷ்டித்து வருபவர் சிலரேயாம்.

## 7-வது, இந்துமத ஞானோதயத்தின் ஏழாவது படி.

### தாந்திரீக கிரந்தங்கள்.

ஆகமங்களையடுத்த யாமளத்திலும் சிருஷ்டியாதி எட்டு விஷயங்களைப்பற்றிச் சொல்லப்பெற்றிருக்கிறதன்றியில்,

டாமரா என்னும் வேறொரு கிரந்தமும் சிவனுலியற்றப்பெற்ற தாகக் கேள்வி. ஆக இந்த ஆகம, யாமள, டாமர, தாந்திரிக கிரந்தங்களாகிய நான்கும் இந்து புராணங்களைப்போ லிருக்கினும், மேற்சொல்லிய நான்கும் புராணங்கள் எழுதப்பட்டதற்கு வெகுகாலமான பிறகே எழுதப்பெற்றவைகளாகவும், அதிக சிர் சடங்குஆகியவைகளைச் செய்வதற்கு எழுதப்பெற்றவைகளாகவும் இருக்கின்றன. இதுவிஷயமாக மகாநிருவாணதந்திரத்தில் சொல்லியிருப்பது யாதெனில், கலியுகத்தில் வேதபுராணங்களின் சக்தி குறைவுபட்டுப் போகுமாகையால் அக்குறை நிவர்த்தியாக ஆகம தாந்திரங்க ளுண்டாக்கப் பெற்றனவாம். தாந்திரங்களுக்கு குப்தவித்தை என்றும் பெயர். அதாவது, இந்த ரகசியமான கிரந்தங்களைத் தக்க சிடர்களுக்குமாத்திரம் போதிக்கவேண்டுமென குலார்ணவம், மஹாநிர்வாணதந்திரங்களிற் போதிப்பதால், இத்தாந்திர கிரந்தங்களைச் சாதாரண ஜனங்களறிவது கஷ்டசாத்தியம். இவை வங்காளநாட்டில் தான் ஏராளமாக இருக்கின்றன.

ஆகமதத்துவ விலாச கிரந்தத்தில் அடியிற்கண்ட தாந்திரிக கிரந்தங்களைப்பற்றி எழுதப்பெற்றிருக்கிறது. அவை யாவன:—

(1) சுவதந்திர தந்திரம்.
(2) பேதகாரிதந்திரம்.
(3) உத்திர தந்திரம்.
(4) நீலதந்திரம்.
(5) வீரதந்திரம்
(6) குமார தந்திரம்.
(7) காளிதந்திரம்.
(8) நாராயண தந்திரம்.
(9) தாரணிதந்திரம்.
(10) வாலதந்திரம்.
(11) சமயாசார தந்திரம்.
(12) பயிரவிதந்திரம்.
(13) பயிரவதந்திரம்.
(14) திரிபுரதந்திரம்.
(15) வாமகேசுவர தந்திரம்.
(16) குக்குட்டேஸ்வர திதந்திரம்.
(17) மாந்திரிகதந்திரம்.
(18) சனத்குமார தந்திரம்.
(19) விசுதேஸ்வர தந்திரம்.
(20) சன்மோகன தந்திரம்.
(21) கௌத்தம்மிய தந்திரம்.
(22) விரஹதகௌம்மிய தந்திரம்.
(23) பூதாபைரவதந்திரம்.
(24) சாமண்டி தந்திரம்.
(25) பிங்கலதந்திரம்.
(26) வராஹிதந்திரம்.
(27) முண்டமாலதந்திரம்.
(28) ஹோகிரிதந்திரம்.
(29) மாலினிவிஜயதந்திரம்.
(30) ஸ்காந்தபைரவதந்திரம்.
(31) மஹாதந்திரம்.
(32) சத்திதந்திரம்.
(33) சிந்தாமணிதந்திரம்.

(34) முன்மத்தபைரவி [தந்திரம்.
(35) திரைரோக்கியதந்திரம்.
(36) விஸ்வாசரதந்திரம்.
(37) தந்தராஅமிர்ததந்திரம்.
(38) மஹாபேதகாரிதந்திரம்
(39) விரவியதந்திரம்.
(40) தோடவதந்திரம்.
(41) மாலனிதந்திரம்.
(42) லலிதார்தந்திரம்.
(43) திரசக்திதந்திரம்.
(44) ராஜராஜேஜஸ்வரிதந்திரம்
(45) மஹாமோஹஸ்வர [தந்திரம்.
(46) காவகசதந்திரம்.
(47) காந்தக தந்திரம்.
(48) தைலோக்கியமோஹன [தந்திரம்.
(49) அம்ச பரமேஸ்வர [தந்திரம்.
(50) அம்ச மகேஸ்வர [தந்திரம்.
(51) காமதேனுதந்திரம்.
(52) வர்ணவிலாசதந்திரம்.
(53) மாயாதந்திரம்.
(54) மந்திரராஜாதந்திரம்.
(55) குவிஜகதந்திரம்.
(56) விஜ்ஞலலதிகதந்திரம்.
(57) லிங்க காமதந்திரம்.
(58) காலோத்திரதந்திரம்.
(59) பிரம்மஜமாலதந்திரம்.
(60) ஆதிஜமாலதந்திரம்.
(61) உத்திரஜமாலதந்திரம்.
(62) விரஹத்ஜமாலதந்திரம்.
(63) சித்தஜமாலதந்திரம்.
(64) கல்பஆஸ்திரதந்திரம்.

இவைகளன்றியும் பின்வருகிற தந்திர கிரந்தங்களும் அதில் எழுதப்பட்டிருக்கின்றன. அவையாவன:—

(1) மச்சசுத்தம்.
(2) குல சுத்தம்.
(3) காமராஜம்.
(4) சிவாகமம.
(5) உதசரம்.
(6) குடாதீச்சரம்.
(7) வீரபத்ரோதிஸம்லம்.
(8) பூததாமரம்.
(9) தாமரம்.
(10) யக்சாசாமரம்.
(11) குலசர்வேஸ்வரம்.
(12) கலிகுலசர்வேஸ்வரம்.
(13) காலசூடாமணி.
(14) திவ்வியம்.
(15) காலாசரம்.
(16) குலார்ணவம்.
(17) குலார்மிதம்.
(18) குலாவழி.
(19) கலிகுலார்த்தமம்.
(20) குலப்பிரகாசம்.
(21) வாசிஸ்டம்.
(22) சுத்தசரஸ்வதி.
(23) யாதினிஹிருதயம்.
(24) காளிஹிருதயம்.
(25) மந்திரிகார்நவம்.
(26) யோகினிஞ்சாலகுருகம்
(27) லக்ஷ்மிகுலார்ணவம்.
(28) தாரா ணவம்.
(29) சந்திரபீதம்.
(30) மேருதந்திரம்.
(31) சதுஸ்துதி.
(32) தத்வபோதம்.

டாமரா என்னும் வேறொரு கிரந்தமும் சிவனுலியற்றப்பெற்ற தாகக் கேள்வி. ஆக இந்த ஆகம, யாமள, டாமர, தாந்திரிக கிரந்தங்களாகிய நான்கும் இந்து புராணங்களைப்போ லிருக்கினும், மேற்சொல்லிய நான்கும் புராணங்கள் எழுதப்பட்டதற்கு வெகுகாலமான பிறகே எழுதப்பெற்றவைகளாகவும், அதிக சிர் சடங்குஆகியவைகளைச் செய்வதற்கு எழுதப்பெற்றவைகளாகவும் இருக்கின்றன. இதுவிஷயமாக மகாநிருவாணதந்திரத்தில்சொல்லியிருப்பது யாதெனில், கலியுகத்தில்வேதபுராணங்களின் சக்தி குறைவுபட்டுப் போகுமாகையால் அக்குறை நிவர்த்தியாக ஆகம தாந்திரங்க ளுண்டாக்கப் பெற்றனவாம். தாந்திரங்களுக்கு குப்தவித்தை என்றும் பெயர். அதாவது, இந்த ரகசியமான கிரந்தங்களைத் தக்க சிடர்களுக்குமாத்திரம் போதிக்கவேண்டுமென குலார்ணவம், மஹாநிர்வாணதந்திரங்களிற் போதிப்பதால், இத்தாந்திர கிரந்தங்களைச் சாதாரண ஜனங்களறிவது கஷ்டசாத்தியம். இவை வங்காளநாட்டில் தான் ஏராளமாக இருக்கின்றன.

ஆகமதத்துவ விலாச கிரந்தத்தில் அடியிற்கண்ட தாந்திரிக கிரந்தங்களைப்பற்றி எழுதப்பெற்றிருக்கிறது. அவை யாவன:—

(1) சுவதந்திர தந்திரம்.
(2) பேதகாரி தந்திரம்.
(3) உத்திர தந்திரம்.
(4) நீல தந்திரம்.
(5) வீர தந்திரம்.
(6) குமார தந்திரம்.
(7) காளி தந்திரம்.
(8) நாராயண தந்திரம்.
(9) தாரணி தந்திரம்.
(10) வால தந்திரம்.
(11) சமயாசார தந்திரம்.
(12) பயிரவி தந்திரம்.
(13) பயிரவ தந்திரம்.
(14) திரிபுர தந்திரம்.
(15) வாமகேசுவர தந்திரம்.
(16) குக்குட்டீஸ்வரி தந்திரம்.
(17) மாந்திரிக தந்திரம்.
(18) சனத்குமார தந்திரம்.
(19) விசுதேஸ்வர தந்திரம்.
(20) சன்மோகன தந்திரம்.
(21) கௌத்தம்மிய தந்திரம்.
(22) விரஹத்கௌம்மிய தந்திரம்.
(23) பூதாபைரவ தந்திரம்.
(24) சாமண்டி தந்திரம்.
(25) பிங்கல தந்திரம்.
(26) வராஹி தந்திரம்.
(27) முண்டமால தந்திரம்.
(28) ஹோகிரி தந்திரம்.
(29) மாலினிவிஜய தந்திரம்.
(30) ஸ்காந்தபைரவ தந்திரம்.
(31) மஹா தந்திரம்.
(32) சத்தி தந்திரம்.
(33) சிந்தாமணி தந்திரம்.

(34) முன்மத்தபைரவி தந்திரம்.
(35) திரைரோக்கியதந்திரம்.
(36) விஸ்வாசரதந்திரம்.
(37) தந்தராஅமிர்ததந்திரம்.
(38) மஹாபேதகாரிதந்திரம்
(39) விரவியதந்திரம்.
(40) தோடவதந்திரம்.
(41) மாலனிதந்திரம்.
(42) லலிதாதந்திரம்.
(43) திரசக்திதந்திரம்.
(44) ராஜராஜேஸ்வரிதந்திரம்
(45) மஹாமோஹஸ்வர தந்திரம்.
(46) காவகசதந்திரம்.
(47) காந்தக தந்திரம்.
(48) த்ரைலோக்கியமோஹன தந்திரம்.
(49) அம்ச பரமேஸ்வர தந்திரம்.
(50) அம்ச மகேஸ்வர தந்திரம்.
(51) காமதேனுதந்திரம்.
(52) வர்ணவிலாசதந்திரம்.
(53) மாயாதந்திரம்.
(54) மந்திரராஜாதந்திரம்.
(55) குவிஜகதந்திரம்.
(56) விஜ்ஞலலதிகதந்திரம்.
(57) லிங்க காமதந்திரம்.
(58) காலோத்திரதந்திரம்.
(59) பிரம்மஜமாலதந்திரம்.
(60) ஆதிஜமாலதந்திரம்.
(61) உத்திரஜமாலதந்திரம்.
(62) விரஹத்ஜமாலதந்திரம்.
(63) சிந்தஜமாலதந்திரம்.
(64) கல்பஆஸ்திரதந்திரம்.

இவைகளன்றியும் பின்வருகிற தந்திர கிரந்தங்களும் அதில் எழுதப்பட்டிருக்கின்றன. அவையாவன:—

(1) மச்சசுத்தம்.
(2) குல சுத்தம்.
(3) காமராஜம்.
(4) சிவாகமம.
(5) உதசரம்.
(6) குடாதீச்சரம்.
(7) வீரபத்ரோதிஸம்லம்.
(8) பூததாமரம்.
(9) தாமரம்.
(10) யக்சாசாமரம்.
(11) குலசர்வேஸ்வரம்.
(12) கலிககுலசர்வேஸ்வரம்.
(13) காலசூடாமணி.
(14) திவ்வியம்.
(15) காலாசரம்.
(16) குலார்ணவம்.
(17) குலார்பிதம்.
(18) குலாவழி.
(19) கலிகுலார்த்தமம்.
(20) குலப்பிரகாசம்.
(21) வாசிஸ்டம்.
(22) சுத்தசரஸ்வதி.
(23) யாதினிஹிருதயம்.
(24) காளிஹிருதயம்.
(25) மத்திரிகார்நவம்.
(26) யோகினிஞ்சாலகுருகம்
(27) லக்ஷ்மிகுலார்ணவம்.
(28) தாரா ணவம்.
(29) சந்திரபீதம்.
(30) மேருதந்திரம்.
(31) சதுஸ்துதி.
(32) தத்வபோதம்.

(33) மஹோக்கிரவம்.
(34) சிவக்கந்தசாரசம்பரவம்
(35) தாரபிரதீபம். [யம்.
(36) சங்கச்சேதசந்த்ரோத
(37) சத்லிங்கசதத்வகம்.
(38) லக்ஷநிர்ணயம்.
(39) திரிபுரார்நவம்.
(40) விஷ்ணுதர்மோத்தரம்.
(41) மந்த்ரதர்ப்பணம்.
(42) வைஷ்ணவாமிர்தம்.
(43) மானுஷஉல்லாசம்.
(44) பூஜாப்ரதீபம்.
(45) பக்திமஞ்சரி.
(46) புவனேஸ்வரி.
(47) பாரிசாதம்.
(48) பிரயாகசாரம்.
(49) காமரத்தினம்.
(50) கிரயாசாரம்.
(51) ஆகமதீபகம்.
(52) பாவசூடாமணி.
(53) தந்திரசூடாமணி.
(54) விரஹத்திரிகர்மம்.
(55) ஸ்திரிகர்மம்.
(56) சித்தாந்தசேகரம்.
(57) கணேஷவிமர்சனி.
(58) மந்திரமுக்தாவளி.
(59) தத்வகௌமுதி.
(60) தந்திரகௌமுதி.
(61) மந்த்ரதந்த்ரபிரகாசிகை
(62) ராமரக்ஷாசந்திரிகை
(63) சாரதிலகம்.
(64) ஜனார்நவம்.
(65) சாரசமுச்சயம்.
(66) கல்பதர்ம்மம்.
(67) ஞாநமாலை.
(68) புருஷஆக்ஷர்ண [சந்திரிகை.
(69) ஆகமோத்திரம்.
(70) தத்துவசாகரம்.
(71) சாரசம்பிரகம்.
(72) தேவபிரகாசினி.
(73) தந்திரார்நவம்.
(74) கிராமதீபிகா.
(75) தாராரகஸ்யம்.
(76) சியாமரகஸியம்.
(77) தந்திராத்நம்.
(78) தந்திரப்ரதீபம்.
(79) தாராவிலாசம்.
(80) விஸ்வாமித்திரம்.
(81) பிரபஞ்சசாரம்.
(82) தந்திரசாரம்.
(83) ரத்தினவளி.

இவைகளன்றியும் இன்னும் சில தாந்திரகிரந்தங்களும் அதில் எழுதப்பட்டிருக்கின்றன.

அடியிற்கண்ட தந்திரகிரந்தங்களின் சுலோகங்களைப் பற்றி வராஹிததந்திரகிரந்தத்தில் பின்வருகிறபடி எழுதப்பட்டிருக்கிறது. அவையாவன:—

| கிரந்தங்களின் பெயர். | சுலோகங்களின் கணக்கு. | கிரந்தங்களின் பெயர். | சுலோகங்களின் கணக்கு. |
|---|---|---|---|
| 1. முக்திகதந்திரம். | 6050 | 4. பிரபஞ்சதந்திரம். (2) | 60270 |
| 2. சாரதாதந்திரம். | 16025 | 5. ஷை (3) | 5310 |
| 3. பிரபஞ்சதந்திரம். | 12300 | 6. கபிலதந்திரம். | 6080 |

| கிரந்தங்களின் பெயர். | சுலோகங்களின் கணக்கு. | கிரந்தங்களின் பெயர். | சுலோகங்களின் கணக்கு. |
|---|---|---|---|
| 7. யோகதந்திரம். | 133311 | 31. தந்திரராஜ்யம். | 9090 |
| 8. கல்பதந்திரம். | 5090 | 32. அரிகோரி. | 22020 |
| 9. கபிஞ்சலம். | 280120 | 33. ஷை 2-வது | 12000 |
| 10. அமிர்தசுத்தி. | 5005 | 34. தந்திரநிர்ணயம். | 28 |
| 11. வீராகமம். | 6606 | 35. குவிஜகத் (1) | 10007 |
| 12. சித்தசுவாமவர்ணம். | 5006 | 36. ஷை (2) | 6000 |
| 13. யோகதாமரம். | 23533 | 37. ஷை (3) | 33000 |
| 14. சிவதாமரம். | 11007 | 38. காத்யாணிகம். | 24200 |
| 15. துர்க்கதாமரம். | 11503 | 39. பிரதியங்கிரம். | 8800 |
| 16. சாரஸ்வத்தி. | 9905 | 40. மஹாலக்ஷ்மி. | 5505 |
| 17. பிரமம்தாமரம். | 7105 | 41. தேவிதந்திரம். | 12000 |
| 18. காந்தர்வதாமரம். | 60060 | 42. திருபுரார்ணம். | 8806 |
| 19. அந்தியமாலே. | 35300 | 43. சரஸ்வதி. | 2205 |
| 20. பிரம்மயாமளம். | 22100 | 44. அத்தபாதமாலே. | 22915 |
| 21. விஷ்ணுயாமளம். | 24020 | 45. யோகினி. | 22532 |
| 22. ருத்ரயாமளம். | 64065 | 46. ஷை (2) | 6303 |
| 23. கணேஸயாமளம். | 10323 | 47. வாரகிதம். | 520 |
| 24. ஆதித்தமாலே. | 12000 | 48. காலிகம். | 6525 |
| 25. நீலபதிகை. | 5000 | 49. நாராயணி. | 50203 |
| 26. யோகார்ணம். | 18307 | 50. விருதரிதி. | 4490 |
| 27. மாயதந்திரம். | 11000 | 51. ஷை (2) | 3000 |
| 28. தக்ஷிணாமூர்த்தி. | 5550 | 52. ஷை (3) | 330 |
| 29. காலகிதாந்திரம். | 11013 | 53. வாமஸ்கேஸ்வரம். | 25 |
| 30. காமேஸ்வரம். | 3000 | 54. மிருத்யுஞ்சயதந்திரம். | 13220 |

இவைகளன்றியில் ஜயமுனி, வசிஷ்டர், கபிலர், நாரதர், காரகர் முதலானவர்கள் இயற்றிய உபதாந்திரிக கிரந்தங்கள் அநேகமுண்டு. இவையாவும் வங்கநாட்டில் அநுஷ்டானத்திலிருக்கின்றன. இவை ஜனசமூக நன்மையைக் கருதி நியமிக்கப் பெற்றாலும், இவற்றால் சக்திபூஜை முதலானவைகளைச் செய்து சீர்கெட்டுப்போவதைக் கண்டே ஸ்ரீ சைதந்நிய சுவாமிகளும், ஸ்ரீ ராஜாராம மோஹனரும் பரிசுத்தமான பக்திமார்க்கத்தைப் பரிபாலிக்கப் பிரயத்தனப்பட்டார்கள்.

மேற்காட்டிய புராணங்களும், ஆகமதந்திரங்களும் மூடஜனங்களுக்குத் தக்கபடி தர்மார்த்த காமமோக்ஷங்களைப் போதிக்கத்தக்க வன்மையற்றிருப்பதைக் கருதி அதற்காக இதிகாசங்களை எழுதினார்கள். அப்படிப்பட்ட இதிகாசங்கள் பலவிருக்கினும், அவற்றிற் சிறந்தவை ஸ்ரீமத் இராமாயணமும், மஹாபாரதமுமேயாம். அவற்றின் கருத்துக்களாவன:—

## 7-வது, இந்துமத ஞானோதயத்தின் ஏழாவது படி.

## ஸ்ரீ வால்மீகி ராமாயண சாரசங்கிரகம்.

ஸ்ரீ வால்மீகர் இயற்றிய இராமாயணம் ஏழுகாண்டங்களுள்ளதாயும், 12,000 சுலோகங்களுள்ளதாயு மிருக்கிறது. இக் காண்டங்களுள்:—

1-வது, பாலகாண்டம்:—பிரம்மாவினால் வால்மீகர் தூண்டப்பெற்று இராமாயணத்தை இயற்றியதைப்பற்றியும், கோசலநாட்டின் அரசனாகிய தசரதனைப்பற்றியும், அவன் ஆண்டநாட்டின்சிறப்பைப்பற்றியும், அவன்புத்திரசந்தானத்துக்காக அசுவமேதயாகஞ்செய்ததைப்பற்றியும், இராக்ஷதர்களுடைய கஷ்டங்களைச் சகிக்கமுடியாமல் தேவர்கள் பிரம்மாவைப் பிரார்த்தித்ததைப்பற்றியும், அவ்விராக்ஷதர்களை ஸம்ஹாரம்செய்ய விஷ்ணுபகவான் அவதரித்து வருவதாகவாக்குத்தத்தம்செய்ததைப்பற்றியும், தசரதனுடைய மூன்றுமனைவிகளாகிய கவுஸல்லியா சுமித்திரா கைகேயிஎன்பவர்கள் உண்டதேவாமிர்தத்தினால் விஷ்ணுவின் அம்சமே ஸ்ரீராமர் லக்ஷ்மணன் பரதன் சத்ருக்கன் என்ற நான்கு குமாரர்களாக ஜனித்ததைப்பற்றியும், ஸ்ரீராமர் வாலிபராயிருக்கும்போதே விசுவாமித்திரர் வந்து, தமது ஆச்சிரமத்தைச்சுற்றி ஹிம்ஸிக்குமிராக்ஷதர்களைக் கண்டிக்கக் கூட்டிக்கொண்டு போனதைப்பற்றியும், அவ்வாறு அவருடன் சென்ற ஸ்ரீராம லக்ஷ்மணர்கள் இராக்ஷதர்களை அடித்துத் துரத்தியதைப்பற்றியும், இச்சங்கதியைக் கேள்வியுற்ற ஜநகர் தம்மிடமிருக்கும் சிவன் வில்லை வளைப்பவருக்குத் தமது குமாரத்தியாகிய சீதையை விவாஹம் செய்து கொடுப்பதாகச் சொல்லியதைப் பற்றியும், சொன்னபடி இராஜசபையைக் கூட்டி ஷை சிவன் வில்லைக் கொண்டுவந்து வைக்க, அதை ஸ்ரீராமர் எடுத்து வளைத்துச் சீதையை விவாகம் செய்ய, ஜநகர் தமது இளைய குமாரத்தியை லக்ஷ்மணனுக்கும், சஹோதரர் குமாரத்திகளைப் பரதனுக்கும், சத்ருக்கனுக்கும் கம்பீரமாக விவாஹம் செய்வித்த விதத்தைப்பற்றியும், அப்படி விவாஹமானவர்கள் அயோத்திக்குப்போக, பரதன்: அசுவபதி என்னும் தன் தாய்வகைப் பாட்டனாரிடம் சத்துருக்கனோடுபோனதைப்பற்றியும்சொல்லப்பெற்றிருக்கின்றது.

2-வது, அயோத்தியாகாண்டம்:—தசரதர் ஸ்ரீராமருக்குப் பட்டாபிஷேகம் செய்ய யோசித்ததைப்பற்றியும்,

அதைக்கருதித்தப்பரதனுக்குப் பட்டங்கட்டவேண்டுமென்று
கைகேயிக்கு மந்தாரையென்பவள் சொல்லிக்கொடுத்துக் கலகம்
செய்வித்ததைப்பற்றியும், கைகேயி கேட்டுக்கொண்ட இர
ண்டு வரங்களின்படி ஸ்ரீராமரைப் பதினான்கு வருஷங்களுக்கு
வனவாசம் செய்வித்துத் தனதுகுமாரன் பரதனுக்கு மகுடா
பிஷேகம் செய்விக்கவேண்டுமென வற்புறுத்தியதைப்பற்றி
யும், அதற்குத் தசரதன் மிகுந்த சங்கடத்தோ டொத்துக்
கொண்டு ஸ்ரீராமரை வனவாசமனுப்ப, அவரோடு சீதா லக்ஷ்
மணர்களும் போனதைப்பற்றியும், பிறகு ஸ்ரீராம லக்ஷ்
மணர்கள் சித்திரகூடத்தில் வந்து தங்கியதைப்பற்றியும், தச
ரதர் புத்திரசோகத்தால் பரமபத மடைந்ததைப்பற்றியும்,
இப்படி இறந்ததசரதருக்குக் கருமங்களைச் செய்வித்துப் பட்
டாபிஷேகத்துக்காகப் பரதனைத் தருவிக்க, அப்பரதன் அங்கீ
கரியாமல், அப்பட்டம் ஸ்ரீராமருக்கே தரவேண்டுமெனக்
கருதி ஒரு சேனையோடு ஸ்ரீராமர் இருக்கும் இடத்துக்கேகிப்
பாரத்துவாசரிடம் விருந்துண்டதைப்பற்றியும், ஸ்ரீராமரைப்
பட்டாபிஷேகம் செய்துகொள்ளும்படி பரதன்வேண்ட, ஸ்ரீ
ராமர் பிதுர்வாக்கியத்தைப் பரிபாலனம்செய்யவேண்டியிருப்
பதால், பரதனையே பட்டாபிஷேகம் செய்துகொள்ளும்படி
சொன்னதைப்பற்றியும், அதன்மேல் பரதன் ஸ்ரீராமருடைய
பாதுகைகளைப் பெற்றுக்கொண்டு அவைகளுக்குப் பட்டம்
கட்டித் தான் பிரதிநிதியாக அயோத்தியில் ஆண்டுவந்த விப
ரத்தைப்பற்றியும், பின்னும் சிலசங்கதிகளைப்பற்றியும் சொல்
லப்பட்டிருக்கின்றது.

**3-வது, ஆரணியகாண்டம்:**—ஸ்ரீராமர் தண்டகாரணியத்
தை நாடிப்போகையில், பஞ்சவடியிற்றங்கி, கருடனுடைய
புத்திரன் சடாயு சீதையைக்காப்பதாகச் சொன்னதைப்பற்றி
யும், அங்கு இராவணன் தங்கை சூர்ப்பனகை ஸ்ரீராமரைக்
கண்டு மோகித்துப் பிறகு லக்ஷ்மணரிடம் போக, அவர் அவ
ளுடைய மூக்கு, காதுகளை அறுத்து அவமானப்படுத்தியதைப்
பற்றியும், அதன்மேல் அவள் தன்சகோதரர்களான இராக்ஷ
தர்களைச் சண்டைக்கழைத்துவர, அவர்கள் சண்டை செய்து
தோல்வியடைந்ததைப்பற்றியும், பிறகு சூர்ப்பநகை இரா
வணனிடம்போய்ச் சீதையின் அழகைவர்ணித்துத் தனக்கு
நேரிட்ட அவமானத்தைச் சொல்லியதைப்பற்றியும், இராவ
ணன் சந்நியாசிவேஷம் பூண்டுவந்துமாறுவேடம்பூண்ட மாரீ
சன் என்னு மானின்பின் ஸ்ரீராமர் போனதருணத்தில் சீதா

தேவியை எடுத்து ஆகாயமார்க்கமாக இலங்கைக்குக் கொண்டு போனதைப்பற்றியும், அப்படிக் கொண்டுபோனதை ஜடாயு கண்டு சொன்னதைப்பற்றியும், பிறகு கவந்தனைக் கொன்றதனால் அவன் ஆவிவந்து ஸ்ரீராமரிடம் சுக்கிரீவனுடைய உதவியை நாடும்படி சொன்னதைப்பற்றியும் சொல்லப்பட் டிருக்கின்றது.

4-வது. கிஷ்கிந்தாகாண்டம்:—ஸ்ரீராமலக்ஷ்மணர் வரும்போது சுக்கிரீவன் மலையபருவதத்தில் மறைந்து அவர்களின்னவரென்று அறிந்துவர ஹனுமானை அனுப்பியதைப் பற்றியும், ஹனுமான் போய் ஸ்ரீராமலக்ஷ்மணர்களை அழைத்து வந்து சுக்கிரீவனுக்குச் சிநேகிதம் செய்வித்ததில், அச் சுக்கிரீவன் சீதையை இராக்ஷதன் கொண்டுபோனதாகச் சொன்னதைப்பற்றியும், சுக்கிரீவனுக்கும் வாலிக்கும் இருந்த சண்டை சச்சரவுகளைக் கேட்ட ஸ்ரீராமர் வாலியைக்கொன்று சுக்கிரீவனுக்குப் பட்டங்கட்ட, அவ்வாலியின் மனைவி தாரையும், மகன் அங்கதனும் ஸ்ரீராமரிடம் அடைக்கலம் புகுந்ததைப்பற்றியும், பிறகு சீதையைத் தேடச் சுக்கிரீவனுடைய தூதர்களை நாலாபக்கங்களிற் போகச் செய்ததில், ஹனுமானும் அங்கதனும் சீதை இலங்கையில் இருப்பதாகச் சடாயுவின் தமயனால் சங்கதி சொல்லக்கேட்டு, ஹனுமான் இலங்கைக்குப்போனதைப்பற்றியும் சொல்லப்பட்டிருக்கின்றது.

5-வது, சுந்தரகாண்டம்:—ஹனுமான் கடலைத்தாண்டி இலங்கைக்குப் போனதைப்பற்றியும், அப்போது இராவணன்வந்து சீதையைத் தன்னோடுசேரும்படிபயப்படுத்திய பிறகு, ஹனுமான்சீதையைக்கண்டு கணையாழிமோதிரத்தைக் கொடுத்துப் பேசியதைப்பற்றியும், சீதையும் தனது அருமையான சூடாமணியை ஸ்ரீராமருக்குக் கொடுத்தனுப்பியதைப்பற்றியும், பிறகு ஹனுமான் அசோகவனத்தைக் கெடுக்க, அவனை இராக்ஷதர்கள் பிடித்து அவன் வாலில் நெருப்பிட்டு வருத்தியதைப்பற்றியும், அநந்தரம் ஹனுமான் இலங்கையைவிட்டு கிஷ்கிந்தைக்கு வந்து ஸ்ரீராமரிடம் சீதையைக் கண்ட சங்கதிகளைச் சொல்ல, ஸ்ரீராமர் ஏவலால் வானரசேனைகள் இந்தியாவுக்கும் இலங்கைக்கும் மத்தியிலுள்ள கடலில் சேதுபந்தன பாலங்கட்டி யுத்தத்திற்குப் போனதைப்பற்றியும் சொல்லப்பட் டிருக்கின்றது.

6-வது, உயுத்தகாண்டம்:—இராவணன் சீதையைப் பயப்படுத்த ஸ்ரீராமருடையபொய்த்தலையைக் காட்டியதைப் பற்றியும், இராமராவணாதிகளுக்கு நடந்த பயங்கரமான பல சண்டைகளைப்பற்றியும், இராமலக்ஷ்மணர்கள் பாணங்களால் இராவணன் சேனைகள் பட்ட கஷ்டங்களைப்பற்றியும், இராவணனுடைய வீரர்கள் கொல்லப்பட்ட பிறகு, இராவணனே யுத்தத்திற்கு வந்து சுக்கிரீவன் ஹனுமான் லக்ஷ்மணர் முதலானவர்களைப் பாணங்களால் தாக்கியடித்ததைப்பற்றியும், கும்பகர்ணன் யுத்தத்திற்கு வந்து ஸ்ரீராமரால் கொல்லப்பட்டதைப்பற்றியும், பிறகு ஸ்ரீராமரும் இராவணனும் ஏழு பகல் ஏழு இரவு செய்த சண்டையில் இராவணன் கொல்லப்பட்டதைப்பற்றியும், ஸ்ரீராமர் இலங்காபுரியை விபீஷணருக்குக் கொடுத்துச் சீதையை அழைத்துகொண்டு அயோத்தியாபுரிக்குப் போய்ப் பட்டாபிஷேகம் செய்துகொண்டதைப்பற்றியும் சொல்லப்பட்டிருக்கின்றது.

7-வது, உத்தரகாண்டம் :— ஸ்ரீராமர் அயோத்தியாபுரிக்கு அரசராகிய பிறகு, சீதையானவள் தனது பதிவிரதா தன்மையை அவருக்கு ஐயமற விளக்கியிருந்தும், ஊரிலுள்ள ஜனங்கள் ஏளனமாகப் பேசியதைக் கருதி, கருப்பவதியாயிருந்த சீதையை அந்த ஸ்ரீராமர் ஸ்ரீவால்மீகர் ஆச்சிரமத்துக்குப்போய் இருக்கும்படி வனவாசத்துக்கு அனுப்பியதைப் பற்றியும், அங்குச் சீதை குசன் லவன் என்னும் இரண்டு குமாரர்களைப் பெற, அவர்களுக்கு ஸ்ரீவால்மீகர் இராமாயணத்தைப் பாடம் செய்வித்ததைப்பற்றியும், பிறகு ஸ்ரீராமர் அசுவமேதயாகம் செய்தபோது, அங்கு குசன் லவன் என்பவர்கள் போய் இராமாயணத்தை ஸ்ரீராமர்முன் பாடி அரங்கேற்றியதைப்பற்றியும், இதைக் கேட்ட ஸ்ரீராமர் அவ்விருபாலர்களைத் தமதுமக்களென்று அங்கீகரித்துக்கொண்டு, சீதையைத் தருவித்து அவள் பதிவிரதாதர்மத்தை ஸ்தாபிக்க ஜனங்களுடைய திருப்திக்காகவும் மறுபடியும் சத்தியம் செய்யும்படி கேட்க, சீதையும் செய்து பூமிக்குள் பிரவேசித்ததைப்பற்றியும், பிறகு ஸ்ரீராம லக்ஷ்மணரிடம் தூர்வாசர் வந்து சபிக்க, அச்சாபத்தினால் லக்ஷ்மணர் பரமபத மடைந்ததைப்பற்றியும், அநந்தரம் ஸ்ரீராமர் பரதர் சத்துருக்கர் ஆகியவர்கள் சரயூநதியிலிறங்கிப் பரலோகம்போக, அங்கு பிரம்மாதிதேவர்கள் வந்து அவர்களை அழைக்க, அவர்களு

க்கு மஹத்துவமுண்டாகும்படி செய்தது சொல்லப்பட்டிருக்கின்றது.

ஸ்ரீராமாயணத்திற்குப் பிறகு சிறந்த இதிகாசம் வியாசராலியற்றப்பட்ட பாரதமேயாம். அது:—2,20,000 வரிகளாயும் 1,10,000 சுலோகங்களாம், 18 பருவங்களாயும் அமைந்தது. மேற்கண்ட 1 பருவங்களில் முதலாவதாகிய

ஆதிபருவம்:—ஹஸ்திநாபுரத்தில் பரதன் குமாரனாகிய ஹஸ்தின் என்பவன் அரசாண்டகாலத்தில் அவனுக்குக் குரு என்றும், சந்தனு என்றும் இரண்டு சந்ததிகளுண்டானதைப்பற்றியும், அப்படி யுண்டான சந்தனுவின் இரண்டு குமாரர்களில் முதற்குமாரன் மரணமடைய, மற்றவன் சந்ததியற்று இரண்டு மனைவிகளை விட்டுப்போனதைப்பற்றியும், அப்படிச் சந்ததியற்றதனால் சந்திரவமிசம் நசித்துப்போகுமென்று அஞ்சி, அந்தச் சந்தனுவின் மனைவி தன் மருமக்களான விதந்துக்களை வியாசர் புணர்ந்து சந்ததி யுண்டாக்கும்படிச் செய்ததைப்பற்றியும், அதற்கிசைந்த வியாசர் அம்பிகா என்பவளோடு சேரவந்தபோது, அவர் கோரரூபமாயிருந்ததைக் கண்டு அவள் பயந்து தன் கண்களை மூடிக்கொண்டுசேர்ந்ததனால், அவள் வயிற்றில் பிறவிக்குருடனாய்த் திருதராஷ்டிரன் பிறந்ததைப்பற்றியும், இளையவளாகிய அம்பாலிகை யென்பவள் திறந்த கண்களோடு வியாசரைக் கண்டு கூடியபோது அவள் தேகம் பயத்தினால் வெளுத்ததனால் அவள் வயிற்றில் பாண்டு என்பவர் பிறந்ததைப்பற்றியும், அந்தச் சந்ததி போதுமானதா யிராமையால் வியாசரை மறுபடியும் அம்பாலிகா என்பவளோடு சேரும்படி யனுப்ப, அவள் வியாசருடைய கோர ரூபத்திற்குப் பயந்து தனது தாதியை அவருடன் சேரும்படி யனுப்ப, அவளும் அப்படியே சேர்ந்து விதுரனைப் பெற்றதைப்பற்றியும், திருதராஷ்டிரன் பிறவிக்குருடனாகையாலும், விதுரன் தாசியாகிய சூத்திர ஸ்திரியின் வயிற்றில் பிறந்தமையாலும், பாண்டுவுக்கே பட்டாபிஷேகம் செய்வித்ததில், அப்பாண்டுவும் பாலியனாக இருந்தமையால், அவனுக்குப் பிரதிநிதியாக பீஷ்மரே இராஜ்ஜிய பரிபாலனம் செய்துவந்ததைப்பற்றியும், பிறகு சுபாலனுடைய குமாரத்தி காந்தாரி என்பவள் நூறு பிள்ளைகளைப் பெற வரம்பெற்றிருந்ததால், அவளைத் திருதராஷ்டிரனுக்கும், குந்தி மத்திரி என்னும் இரண்டு மங்

கையர்களைப் பாண்டுவுக்கு விவாஹம் செய்வித்ததைப் பற்றியும், இப்படி விவாஹமானவர்களுக்குள் திருதராஷ்டிரனுக்குத் துரியோதனாதி நூறுகுமாரர்களும், ஒருபெண்ணும்; பாண்டுவுக்குப் பிள்ளைகள் பிறவாமையால், தேவதா வரப்பிரசாதிகளாகக் குந்திவயிற்றில் தருமன், பீமன், அர்ச்சுனன் என்பவர்களும், மத்திரிவயிற்றில் நகுல சகாதேவர்களும் பிறந்ததைப் பற்றியும், பாண்டுராஜன் இறந்த பிறகு தருமருக்குப் பட்டாபிஷேகம் செய்விக்க, அதனால் துரியோதனாதிகளுக்கும் பாண்டவர்களுக்கும் மனஸ்தாபங்களுண்டாகி, பாண்டவர் வதிந்துவந்த வீட்டில் துரியோதனாதியர் நெருப்பு வைத்துச் சாம்பலாக்க அதன்மேல் பாண்டவர்கள் வெளியேறிச் சென்றதைப்பற்றியும், அப்படிப்போனபோது துருபதராஜன் தன் குமாரத்தியின சுவயம்வரத்திற்கு விளம்பரஞ் செய்விக்க, அச்சங்கதியைக் கேட்ட அர்ஜ்ஜுனன் போய் வில்வித்தையில் தன் வல்லமையைக் காட்டி ஏனையோரை ஜயித்து துரோபதைக்கு மாலைசூட்டிக் கொண்டுவந்து அவளை ஐவரும் பனிவியாகக்கொண்டு வாழ்ந்துவந்ததைப்பற்றியும், பிறகு திருதராஷ்டிரன் பாண்டவர்களை நாட்டிற் கழைப்பித்து இராஜ்ஜியத்தைப் பங்கிட்டுத் துரியோதனாதியருக்கு ஹஸ்தினாபுரத்தையும் பாண்டவர் பங்குக்கு ஓர் பெருங் காட்டையும் கொடுக்க, பாண்டவர்க ளதைப்பெற்று அங்கு இந்திரபிரஸ்தம் என்னும் பெயரால் ஒரு சிங்கார நகரத்தை ஸ்தாபித்ததைப்பற்றியும் சொல்லப்பெற்றிருக்கின்றது.

2-வது, சபாபருவம்:—பாண்டவர் புது நகரத்திலிருந்து அரசுபுரிந்து இராஜசூயயாகஞ் செய்யப் பிரயத்தனப்பட, துரியோதனாதியருக்குப் பொறாமையுண்டாகிப்பாண்டவரை ஹஸ்தினாபுரத்திற்கு அழைப்பித்துத் தந்திரமாகச் சூதாடச் செய்வித்ததைப் பற்றியும், அதனால் பாண்டவர் சகலத்தையும் தோற்கும்படி செய்வித்துக் கடைசியாக அவர்களை நாடு நகரங்களைவிட்டு மான்தோல்களைப் பூண்டு பன்னிரண்டு வருஷகாலம் வனசஞ்சாரம் செய்யும்படி செய்வித்ததைப் பற்றியும் சொல்லப்பெற்றிருக்கின்றது.

3-வது, ஆரணியபருவம்:—இப்படி வனவாசம் செய்யப்போன பாண்டவர்கள் காமியக வனத்திற்றங்கியபோது அர்ஜ்ஜுனன் பெருந்தவசுக்காக இமாலயம்போனதைப்பற்றியும், தருமர் தமக்குச் சம்பவித்த கஷ்டத்தைப்பற்றிச் சிந்திக்கை

யில், ஒரு ரிஷியானவர் வந்து நளமகாராஜன் சரித்திரத்தைச் சொன்னதைப்பற்றியும், ஜெயித்ரதன் துரௌபதையைக் கொண்டுபோனதனு லுண்டாகிய வருத்தத்தை நீக்கும்பொருட்டுச் சீதையின் சரித்திரத்தைச் சொன்னதைப் பற்றியும் விவரித்தெழுதப்பெற் றிருக்கின்றது.

4-வது, விராடபருவம்:—பாண்டவர்கள் பன்னிரண்டு வருஷம் வனத்தில் தவம் செய்தபிறகு அஞ்ஞாதவாசமாக ஒருவருஷம் விராடபுரத்திற்குப் போய் அந்த அரசனிடம் தருமர் கங்கபட்டராய்ச் சடங்குகளைச் செய்யவும், வீமன் பரிசாரகம்செய்யவும், நகுலன் குதிரைகளைக்காக்கவும், சகாதேவன் கால்நடைகளைக் காக்கவும், அர்ஜ்ஜுனன் பேடியாகி அந்தப்புரத்தை அடைந்து இராஜன் குமாரத்திக்கு நடனம் கற்பிக்கவும், துரோபதை பணிவிடைக்காரியாகவும் அமர்ந்து வேலைசெய்துவந்ததைப்பற்றியும், விராடன் மைத்துனன் கீசகனென்பவன் துரௌபதையைக் கெடுக்கப் பிரயத்தனப்பட்டதைப் பீமன் அறிந்து அக்கீசகனையும் உபகீசகர்களையும் கொன்றதைப்பற்றியும், விராடனுக்கு விரோதமாக அனுப்பப்பட்ட திரிகர்த்தன், விராடனை ஜெயித்துப் புகழைப் பெற்றதையும், இப்படித் தமது கருமத்தைச் செய்து முடித்துத்தாம் இன்னவரென்று விராடனுக்குத் தெரியச்செய்து அவன் குமாரத்தி உத்தரையை அர்ஜ்ஜுனன் குமாரன் அபிமன்யுவுக்கு விவாகம் செய்வித்ததும் சொல்லப்பெற் றிருக்கின்றது.

5-வது, உத்தியோகபருவம்:—பாண்டவர்கள் தாம் இழந்த இராஜ்ஜியத்தையடைய விராடனது உதவியைப்பெற்றதைப்பற்றியும், அர்ஜ்ஜுனனும் துரியோதனனும் துவாரகைக்குப்போய் ஸ்ரீ கிருஷ்ணருடைய உதவியை நாட, அவர் துரியோதனனுக்குத் தமது சேனாபலத்தைக் கொடுப்பதாகவும், அர்ஜ்ஜுனனுக்குத் தாம் சாரதியாக இருப்பதாகவும் சொன்னதைப்பற்றியும், பாண்டவர்கள் தமது இராஜ்ஜியத்தைத் தரும்படி துரியோதனனுக்கு உலூகனைத் தூது அனுப்ப, அவன் தந்தை சஞ்சயனை யனுப்ப இவற்றால் காரியசித்தி பெறாததைப்பற்றியும், இவ்விஷயத்தில் பாண்டவர்கள் ஸ்ரீ கிருஷ்ணரைத் தூது அனுப்ப, அப்போதும் காரியசித்தி பெறாமையால், தருமர் தமது ஏழு அக்ரோணி சேனைகளைத்

திரட்டிக்கொண்டு சண்டைக்குப்போனதைப்பற்றியும் சொல்லப்பெற்றிருக்கின்றது.

6-வது, பீஷ்ம பருவம்:—பாண்டவருக்கும் துரியோதனாதிகளுக்கும் பாட்டனாகிய பீஷ்மர் துரியோதனன் பக்கம் சேர்ந்து சண்டை செய்ததைப்பற்றியும், அப்போது திருதராஷ்டிரன் யுத்த விவரத்தைப் பார்க்க விரும்பி வியாசரால் நேத்திர ஒளியைப் பெற்றுச் சஞ்சயனுடைய இரதத்தில் ஏற, அந்தச் சஞ்சயன் அவனுக்கு ஏழுகடல்களின் சிறப்பையும் கிரஹணாதிகளின் விவரத்தையும் சொன்னதைப்பற்றியும், அர்ஜ்ஜுனன் தன் ரதசாரதியாகிய ஸ்ரீ கிருஷ்ணரிடம் பகவத்கீதையைக் கேட்டதைப்பற்றியும், பிறகு பத்துநாள் நடந்த பிரபலமானசண்டையில் பீஷ்மர் அர்ஜ்ஜுனனுடைய பாணத்தால் அடிபட்டுக் கீழே விழுந்து சிரசு தரையிற்றங்க அர்ஜ்ஜுனன் மூன்று பாணங்களைக் கொடுத்ததைப்பற்றியும், பீஷ்மர் இராஜ தருமத்தைச் சொன்னதைப்பற்றியும் சொல்லப்பெற்றிருக்கின்றது.

7-வது, துரோணபருவம்:— துரியோதனாதிகளுக்கும் பாண்டவர்களுக்கும் உபாத்தியாராகவிருந்த துரோணர் பீஷ்மருக்குப் பதிலாகத் தளகர்த்தராக நியமிக்கப்பட்டதைப் பற்றியும், துரோணர் செய்த பயங்கர சண்டையினால் பாண்டவர்கள் பயந்து ஸ்ரீ கிருஷ்ணரிடம் சொல்ல, அவர் அந்த துரோணர் சண்டை செய்யாதிருக்கக் கருதி, அவர் குமாரன் அஸ்வத்தாமன் இறந்துவிட்டான் என்று பொய்யுரைக்கும் படி சொல்ல, அக்கருத்துக்கு அர்ஜ்ஜுனன் இசையாதிருக்க, தருமர் அங்கீகரித்ததைப்பற்றியும், பீமன் அஸ்வத்தாமா என்னும் ஒரு மதயானையைக் கொன்றுவிட்டு, துரோணரிடம் போய் அஸ்வத்தாமனைக் கொன்றுவிட்டதாகச் சொன்னதைப்பற்றியும், துரோணர் அவ் வார்த்தையை நம்பாமல் தருமரைக் கேட்க, அவர் அஸ்வத்தாமனை (யானையை)க் கொன்றது நிஜமென்று தந்திரமாகச் சொன்னதைப்பற்றியும், பிறகு துரோணர் புத்திர சோகத்தினால் யுத்தகளத்தைவிட்டு ஓங்கார பிரணவத்தை உச்சரித்துக்கொண்டு வைகுண்டம்போனதைப்பற்றியும், கடைசியில் ஸ்ரீநாராயணர் மஹாதேவர் பூஜை செய்ததைப்பற்றியும் சொல்லப்பெற்றிருக்கின்றது.

8-வது, கர்ணபருவம்:—குந்திதேவி விவாஹமாவதற்கு முன் சூரியன் வரத்தினால் பெற்ற கர்ணன் துரியோதனாதியருக்குத் தளகர்த்தனாகி வந்ததைப்பற்றியும், பொய் பேசுவதைப்பற்றி அர்ஜ்ஜுனனுக்கும் தருமருக்கும் சர்ச்சை யுண்டானபோது, ஸ்ரீ கிருஷ்ணர்: விவாக விஷயத்திலும், ஸ்திரீயைச் சேரும் விஷயத்திலும், பிராணன்போகும் தருணத்திலும், தன்சொத்து முழுதும்போகுங் காலத்திலும், பிராம்மணனைப் பாதுகாக்கும் விஷயத்திலும் பொய்சொல்லுவதனால் பாதகமில்லை என்று சொன்னதைப்பற்றியும், துரோபதையை அவமானப்படுத்திய துச்சாதனனைப பீமன் கொன்று அவன் இரத்தத்தைப் பானம் செய்ததைப்பற்றியும், அர்ஜ்ஜுனனுக்கும்கர்ணனுக்கும் நடந்தபயங்கர சண்டையைப்பற்றியும், அச்சண்டையில் அர்ஜ்ஜுனன் காயம் பட்டதைப்பற்றியும், கர்ணன் தனது புண்ணியங்களை ஸ்ரீகிருஷ்ணருக்குத் தத்தம செய்ததைப் பற்றியும், கர்ணனுடைய இரதத்தின் சக்கரம் நிலத்திற் புதைந்துபோக அதைத் தூக்கிவிடுந் தருணத்தில் ஜுனனுடைய பாணம்பட்டு அந்தக கர்ணன் இறந்து விட்டதைப்பற்றியும் சொல்லப்பெற் றிருக்கின்றது.

9-வது, சல்லியபருவம்:— சல்லியராஜன் துரியோதனாதிகள் சேனைக்குத் தலைவனாகித் தருமனோடு பயங்கரமான சண்டை செய்ததைப்பற்றியும்,குருகுலச்சேனையில் துரியோதனன் அசுவத்தாமன் கிருதவர்மன் கிருபன் தவிர மற்ற சேனைகளெல்லாம் மாண்டுபோனதைப்பற்றியும், பாண்டவர்கள் சேனையிலும் பெரும்பாலார் பரமபத மடைந்ததைப் பற்றியும், துரியோதனன் பயந்து சிவந்த பஞ்சக ஏரிக்கரையோரத்தில் மறைந்துகொண்டதைப்பற்றியும்,அசுவத்தாமன் முதலானவர் சண்டைக்குவரும்படி கேட்டும் வராமல் கடைசியாகத் தருமனோடு சண்டை செய்யவந்து, பீமன் அத்துரியோதனனுடைய இரண்டு தொடைகளையு முறித்துவிட விழுந்து இறந்ததைப் பற்றியும் சொல்லப்பெற் றிருக்கின்றது.

10-வது, சவுத்திகபருவம்:— துரியோதனன் இறந்த பிறகு அசுவத்தாமனும் அவனிரண்டு கூட்டாளிகளும் ஓடி ஓர் வனத்தில் மறைந்துகொண்டதைப்பற்றியும், பிறகு அசுவத்தாமன் இராத்திரி காலத்தில் பாண்டவர்கள் தூங்கிக் கொண்டிருந்த கொட்டகைக்குப்போய் அவர்களின் புத்திரர்

களைக்கொன்றதைப்பற்றியும், பஞ்சபாண்டவர்களும் துரோபதையும்கிருஷ்ணரும் வேறுகொட்டகையில் இருந்தமையால் தப்பிக்கொண்டதைப்பற்றியும், விடிந்தபிறகு ஐவரும அசுவத்தாமனைக்கொல்லத் துரத்திக்கொண்டுபோக, துரோபதையினால் தடுக்கப்பட்டு, அவன் சிரசிற்குப் பதில் கிரீடத்தைப் பிடுங்கிக்கொண்டு வந்ததைப்பற்றியும் சொல்லப்பெற்றிருக்கின்றது.

11-வது, ஸ்திரீ பருவம்:—திருதராஷ்டிரன் துரியோதனாதி குமாரர்கள் இறந்து விட்டதைப்பற்றி விசனப்படும்போது, சஞ்சயனும் வியாசரும் அவன் பிள்ளைகளுடைய துஷ்டத்தனங்களைப்பற்றிச் சொன்னதைப்பற்றியும், பிறகு கூரிய இரும்பு உடுப்பைத் தரித்த அந்தத் திருதராஷ்டிரன் பீமனை ஆலிங்கனஞ் செய்ததைப்பற்றியும், பிறகு பாண்டவர்களுக்குச் சமாதானமாகிக் கருமகாரியங்களைச் செய்வித்ததைப் பற்றியுஞ் சொல்லப்பெற்றிருக்கின்றது.

12-வது, சாந்தி பருவம்:—தருமன் தனது பந்துமித்திரர்கள் மடிந்துவிட்டதனால் இராஜ்ஜியத்தைவிட்டு வனசஞ்சரியாகப்போகப் பிரயத்தனப்பட்டதைப்பற்றியும்,பிறகு தருமனுங் கிருஷ்ணரும் குருக்ஷேத்திரத்தில் குற்றுயிராகக் கிடந்த பீஷ்மரைக் காணப்போனதில் அவர் அவ்விருவருக்கும் இராஜதருமம், தரித்திரகாலத்தில் க்ஷமை, மோக்ஷமடையும் விதி ஆகியவைகளைச் சொன்னதைப்பற்றியும் சொல்லப்பெற்றிருக்கின்றது.

13-வது, அநுசாசனிக பருவம்:—தருமன் பீஷ்மர் சொன்ன தருமங்களில் திருப்தியடையாமல், பின்னும் சில தருமங்களைச் சொல்லும்படி கேட்டதைப்பற்றியும், பீஷ்மர் அதற்கிணங்கி, ஸ்திரீகளைப்பற்றிய தருமங்களையும், பசுக்களைப் பாதுகாப்பதனாலாகும் பயன்களையும், பொன்னைத்தருமமாகக் கொடுக்கும் பலனையும், விஷ்ணுஸஹஸ்ர நாமஸ்மரணஞ் செய்வதனால் உண்டாகும் பலனையும், பிறகு ஸ்ரீ கிருஷ்ணரே பரப்ரஹ்மமெனக்கொண்டு பீஷ்மர் ஸ்துதித்துப் பரமபத மடைந்ததைப்பற்றியுஞ் சொல்லப்பெற்றிருக்கின்றது.

14-வது, அசுவமேதபருவம்:—பீஷ்மர் பரமபத மடைந்த பிறகு தருமர் அசுவமேதயாகஞ் செய்ய விருப்பங்

கொண்டதைப்பற்றியும், ஸ்ரீகிருஷ்ணர் அர்ஜ்ஜுனனுக்கு அநுகீதையை உபதேசித்ததைப்பற்றியும், யாகத்துக்குவேண்டிய திரவியத்துக்காக சிவகுரு வீரரை வணங்கியதைப்பற்றியும், அசுவமேதகுதிரை ஒரு வருஷகாலம் சஞ்சாரம் செய்த பிறகு யாகஞ் செய்ததைப்பற்றியும் சொல்லப்பெற்றிருக்கின்றது.

15-வது, ஆசிரமவாசபருவம்:—குருவமிசத்தாரும் பாண்டவர்களும் பதினைந்துவருஷ காலங்கள் அன்னியோன்னியமாக வாழ்ந்து வந்ததைப்பற்றியும், திருதராஷ்டிரன் காந்தாரி குந்தி முதலானவர்கள் வியாச ஆச்சிரமத்திற்கு தவம் செய்து ஆகாயம் அப்பு ஆகாரம் செய்து காலங்கழிக்கச்சே அவ்வனம் நெருப்புப்பிடித்து எரிந்தபோது அம் மூவரும் பஷ்பமாகி விட்டதைப்பற்றியும் சொல்லப் பெற்றிருக்கின்றது.

16-வது, முசல பருவம்:—துவாரகையிலிருந்த யாதவர்கள் பிரபாசனுடைய விருந்துக்குப்போய் அளவுக்கு மிஞ்சி குடித்து ஒருவருக்கொருவர் சண்டை சச்சரவு செய்து கொண்டதைப் பற்றியும், அப்போது கிருஷ்ணருடைய இரத சாரதியும் கொல்லப்பட்டதனால் ஸ்ரீ கிருஷ்ணர் ஓர் புல்லைப் பிடுங்கி அது நெருப்பாகப் பிரகாசிக்க எதிரில்வந்த எவரையும் கொன்றதைப்பற்றியும், அந்தச் சண்டையில் பிரத்யும்னனும், அனிருத்தனும் கொல்லப்பட்டதனால் ஸ்ரீ கிருஷ்ணர் கோபங்கொண்டு யாதவர் எல்லாரையும் கொன்றுவிட்டுத் தன் தந்தையிடம்போய்த் தனது மனைவிமார்களை அர்ஜ்ஜுனன் வருகிறவரையில் பாதுகாக்கும்படி சொல்லி, ஓர் வனத்துக்குப் போக, அங்கு ஜான் என்ற வேடன் ஸ்ரீ கிருஷ்ணரை மான் என நம்பிக்கொன்றுவிட, ஸ்ரீ கிருஷ்ணர் பரமபதமடைந்ததைப்பற்றியும், பிறகு அர்ஜ்ஜுனன் வந்து ஸ்ரீ கிருஷ்ணரோடு உடன்கட்டை ஏறியவர்கள்போக மற்றவர்களை அழைத்துக்கொண்டுப்போகையில், கடல் பொங்கியெழுந்து துவாரகையை மூடிக்கொண்டதைப்பற்றியும் சொல்லப்பெற்றிருக்கின்றது.

17-வது, மஹாபிரஸ்தானிக பருவம்:— இப்படி யாதவர் மடிந்த சங்கதி தருமருக்குத் தெரியவரவே, விசனப்பட்டு ஹஸ்தினபுரத்திற்கும், இந்திரபிரஸ்தத்திற்கும் தம்

சந்ததிகளான அரசர்களை நியமித்துவிட்டு, துரோபதை மற்ற நான்கு சகோதரர் ஆகியவர்களோடு மரவுரி தரித்து வைகுண்டம் போனதைப்பற்றியும், அப்படிப் போகும் போது இயமன் ஒரு நாய்வேஷம் பூண்டுக் கூடவேவர, வழியில் துரோபதை இறந்ததைப்பற்றியும், பிறகு தனக்கு மிஞ்சின ஞானவானில்லை என்று எண்ணிய சகாதேவனும், தன்னைவிட அழகுள்ளவர் உலகில் இல்லை என்று எண்ணங்கொண்ட நகுலனும், தனக்கு மீறிய வீரனில்லை என்று எண்ணிய அர்ஜ்ஜுனனும், தன்னைவிடச் சாப்பாட்டு இராமன் உலகில் இல்லையென்று எண்ணிய பீமனும், ஒவ்வொருவராக இறந்துவிட்ட சங்கதிகளைப்பற்றியும், பிற்பாடு தருமனோடு வந்த நாய் எமதருமராஜனாக மாற, அதன்மேல் தருமன் வைகுண்டமடைந்ததைப் பற்றியும் சொல்லப்பெற்றிருக்கின்றன.

18-வது, சுவர்க்காரோஹண பருவம்:—துரியோதனன் வைகுண்டத்திலிருப்பதைக்கண்டு தருமன் ஆச்சரியப்பட்டதைப்பற்றியும், துரியோதனனுடைய சகோதரர்களைப் பார்க்க விரும்ப, நரகத்திலிருந்த அவர்களைக் காண்பித்ததைப் பற்றியும், அவ்வாறு விரும்பித் தருமன் நரகத்தைக் கண்டதற்குக் காரணம்; துரோணருடைய மகன் இறந்தான் என்று சொன்ன பொய்யே என்பதைப்பற்றியும், பிறகு துரோபதை ஸ்ரீகாரபெற 16,000 கோபிகைமார் அப்ஸர ஸ்திரீகளானதைப்பற்றியும், ஜனமேஜயன் யாகம்செய்து முடித்துப் பிராம்மணர்களுக்குப் பூரிதக்ஷிணைகளைக் கொடுத்ததைப் பற்றியும் சொல்லப்பெற்றிருக்கின்றன.

ஹரிவம்ஸம்:— ஹரிவமிசம் என்பது விஷ்ணுவின் வமிசத்தைப்பற்றி 16,374 சுலோகங்களில் சொல்லப்பட்ட கிரந்தம். அதில், ஹரிவம்ச பர்வம, விஷ்ணு பருவம், பவுஷிய பருவம் என மூன்று பருவங்களுண்டு. அவைகளுள் முதலாவது ஹரிவம்சபருவத்தில், உலக சிருஷ்டியைப்பற்றியும், மநு, மநுவந்திரர், சூரியர், சந்திரர் ஆகியவரின் வமிசத்தாருடைய உற்பத்தி விவரங்களைப்பற்றியும், வாசுதேவருடைய வபூ மனைவிகளில் ரோஹணிக்குப் பலராமரும், தேவகிக்குக் கிருஷ்ணரும் பிறந்து பல விநோதங்களை நடத்தியதைப் பற்றியும்; விஷ்ணுபருவத்தில் பாகவதம் பத்தாவது ஸ்கந்தத்திலும், விஷ்ணுபுராணம் 5-வது ஸ்கந்தத்திலும் கூறி

யுள்ளபடி ஸ்ரீ கிருஷ்ணருடைய சரித்திரத்தைப்பற்றியும், பவுஷியபருவத்தில்: உலகத்தின் கலிகால ஸ்திதியைப்பற்றியும், விஷ்ணுவின் உந்தியில் ஜனிக்கும் புஷ்பத்தில் பிரம்மாதியர் பிறப்பதைப்பற்றியும், தசாவதாரங்களைப் பற்றியும் சொல்லப்பெற்றிருக்கின்றன.

இந்த நான்காவது படியாகிய இதிகாசத்தின் காலத்தில் இந்துக்கள் தருமாதருமங்களின் தராதரங்களையும், இராஜ தருமாதி விஷயங்களையும் அறிந்து உலகத்தில் உயர்ந்தோராக வாழ்ந்து வந்தார்கள்.

## 8-வது, இந்துமத ஞானோதயத்தின் எட்டாவதுபடி.

மேற்கூறிய புராண இதிகாசங்களிற் கண்ட சங்கதிகளையும் ஜனங்கள் அறிந்துய்யச் சக்தியற்றுத் தத்தளிக்கும் கஷ்டமானது நீங்கவும், அவர்கள் சர்வேசுவரனுடைய சமரச ஞானத்தை யறிந்துய்யவும், சைவ வைணவ பக்தசிரோமணிகள் ஜனித்து அவற்றைச் சீர்ப்படுத்தினார்கள்.

## இந்துக்களுடைய புராண (பொது) தேவர்கள் தேவதைகளுடைய விவரம்.

பிற்காலத்தில் வேதமூர்த்திகளான ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் சகல சமயங்களையும் ஆராய்ந்து, அவைகளுள் ஆபாசமான சமயங்களை யகற்றி, ஷண்மதமாகும் ஆறுசமயங்களை யங்கீகரித்தார். அவையாவன:—சைவம், வைணவம், சௌரம், சாக்தேயம், காணுபத்தியம், கௌமாரம் என்பவைகளே. இந்த ஆறுசமயங்களுக்கும் சுருதி, ஸ்மிருதி, புராண, இதிகாசாதிகளில் பிரமாணங்களிருக்கினும், பிரணவ சொரூபமாகிய ஓம் என்பது=அ-உ-ம் என்று மூன்றாய் முத்தொழிலைப்பற்றியதென்றும், ம்-பிரம்மா=சிருஷ்டி, அ-விஷ்ணு=திதி, உ-சிவன்=சங்காரம் ஆகுமென்றும், ஆகவே படைப்புக்குக் காரணமாகிய பிரம்மாவையும், இரக்ஷிப்புக்குக் காரணமாகிய விஷ்ணுவையும், அழிப்பதற்குக் காரணமாகிய ருத்திரனையும், புராண இதிகாசங்களில் சிறந்த உபமான உபமேய வர்ணனைகளோடு விளம்புகிறபடி பிரம்மம், வைணவம், சைவமென்னும் மூன்று மதங்களே முதலில் முக்கியமாகக் கொண்டாடப்பட்டு வந்தன. கடைசியாகப் பிரபஞ்சத்தில் சிருஷ்டியான பிறகு இரக்ஷிக்கவும் அழிக்கவும்

சக்தியையுடைய சைவ வைணவ மதங்களிரண்டே இந்து தேசத்தின் பெரும்பாகத்தில் பரவி இன்றளவும் ஊர்ஜிதமாக உஜ்ஜீவித்து வருகின்றன.

## திரிமூர்த்திகள்.

(க) பிரம்மதேவனென்பவன் பொன்னிறமும், புருஷ ரூபமும், நான்கு முகமும், (ஒரு கையில் சக்கிரமும், ஒருகையில் அக்கினியும், இரண்டுகைகளில் வேதங்களுமாக) நான்கு கைகளுமுடையவனாய், சரஸ்வதியை மனைவியாகவும், அன்னப்பக்ஷியை வாகனமாகவுங் கொண்டவனென்று புராணங்களில் விநோதமாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றான். இவன், சிவபெருமானிடத்திற் பொய் சொன்னதற்காகத் தனக்குப் பூலோகத்தில் பூஜையும் கோயில்களும் இல்லாமற்போகச் சபிக்கப்பட்டமையால் இன்றளவும் இவனுக்குக் கோயில்களும் பூஜைகளுமில்லை.

## சைவமதமும், சைவமதஸ்தர்களும்.

(உ) சிவனை வணங்கும் மதத்திற்குச் சைவமென்று பெயர். இந்தச் சைவத்தில் ஊர்த்தசைவம் அநாதிசைவம், ஆதிசைவம், மஹாசைவம், பேதசைவம், அபேதசைவம், அந்தரசைவம், குணசைவம், நிர்க்குண சைவம், அத்துவாசைவம், யோகசைவம், ஞானசைவம், அணுச்சைவம், கிரியாசைவம், நாலுபாதச்சைவம், சுத்தசைவம் என்னும் பதினாறுவிதங்களாக விருப்பினும்; வைரவம், வாமம், காளாமுகம், மாவிருதம், பாசுபதம், சைவம் என ஆறு உட்சமயங்களுமுண்டு.

சிவபெருமான்: சுயம்புவாகையால் சாம்பமூர்த்தியென்றும், சம்ஹாரத்திற்குக் கர்த்தராகையால் சங்கரனென்றும், மஹாதேவனென்றும் பல பெயர்களால் சொல்லப்பட்டாலும், சுருதிகளில் செப்பிய அக்கினி, சூரியாதிகளுக்குப் பிரதிநிதியாகும் ருத்திரமூர்த்தியாகையால், இவர்: சிவப்புநிறமும், ஐந்துசிரமும், முக்கண்ணும், கைகளில் மான் மழுவும், பிரம்ம கபாலமும், உடுக்கையு முடையவரென்றும், சிரசில் கங்கையையும் மூன்றாம்பிறைச் சந்திரனையும் தரித்தவரென்றும், திருநீறணிந்த திருமேனியையுடையவரென்றும் புராணங்கள் கூறுகின்றன. சில புராணங்களில் ஒரு காரணத்தைப்பற்றி இவரை இலிங்கரூபமாக வைத்து வணங்கும்படி சொல்லி

யிருப்பதால், பெரும்பான்மையான கோயில்களில் இலிங்கங் களே வைத்து வணங்கப்பட்டு வருகின்றன. இவருடைய இருப்பிடம் கைலாயம்; வாகனம் விருஷபம், இவரது மனைவிக்குப் பார்வதி, பவானி, கங்கை, சுந்தரி, நாராயணி, துர்க்கை, காளி என்று பலபெயர்கள் உண்டு.

## சிவன் புத்திரர்கள்.

விநாயகர்:—இவர் சிவபெருமானுக்கும் துர்க்கைக்கும் யானை முகத்தோடும் உற்பவித்தவர். எத்தேவராலும் எப் படையாலும் தான் சாகக்கூடாதென்று வரப்பெற்றிருந்த கஜமுகாசுரனை இவர் எதிர்த்துப் போர்புரிந்து வலது கொம் பையொடித்து ஏவ, அவன் பெருச்சாளி ரூபமாக வந்தபடி யால், அப் பெருச்சாளியை வாகனமாகக் கொண்டார். இவர் பிறந்தபோது சநிமுதலானவர்கள் வந்து பார்த்ததனால் இவரு க்குசிரசு சாம்பலாகிவிடவே, பிரம்மாவின் உத்திரவின்படி சநி பகவான் யானைத்தலையைக் கொண்டுவந்து ஒட்டியதாகச் சிலர் சொல்லுகிறார்கள். ஆயினும், இவர் சுபாசுப காரியங்களில் முதலில் வணங்கப்பட்டு வருகிறார். இவருக்கு விக்நேஸ்வரன், கஜமுகன், ஐங்கரன், கணபதி, லம்போதரன் எனப் பல நாமங் களுண்டு. இவர் மனைவி வல்லபையாம்.

சுப்பிரமணியர்:—இவர்: தேவர்களை இம்சைசெய்த சூர பத்மாசுரனைக் கொல்லச் சிவபிரானின் மூன்றாவதாகிய அக்கி னிக் கண்ணில் ஜனித்து, மேற்படி கொடியவனை வேலாயுதத் தினாலிருபிளப்பாகவெட்ட, அவற்றி லொருபிளப்பு சேவலாக வும், ஒன்று மயிலாகவு மானபடியால், மயிலை வாகனமாகவும், சேவலைக் கொடியாகவுங் கொண்டார். இவர் ஆறுசிரசும், பன் னிருகையும், பொன்னிறமும், வள்ளி தெய்வயானையை மனைவி களாகவும் பெற்றவர். தமிழ்ப்பாஷைக்குக் காரணரென்றுஞ் சிலர் சொல்லுவார்கள். இவர் சிவபிரானுக்கும் அகஸ்தியருக் கும் அருணகிரிநாதருக்கும் பிரணவம் உபதேசித்தவர். இவ ருக்கு ஆறுமுகன், கந்தன், சண்முகன், குகன், முருகன், வேள், என அநேக நாமங்களுண்டு.

வயிரவன் :— இவர் தேவர்களுடையவும், பிரம்மாவி னுடையவும் அகந்தையை யடக்க அரனது சுவாசத்தில் ஜனித்தவர். இவரது வாகனம் சுனகம்.

வீரபத்திரன்:—தக்கனுடைய யாகத்தை யழிக்கச் சிவபெருமான் விநாயகரையும், சுப்பிரமணியரையும், வயிரவனையும் அனுப்ப, அவர்கள் அசட்டையா யிருந்தமையால் சிவபெருமானின் உக்கிர பார்வையிலிருந்து வீரபத்திரர் பிறந்து அந்த யாகத்தை அழித்தனர். (மற்றச் சங்கதிகளை விரிக்கில் பெருகுமென்று விடுத்தனம்.)

## சிவஸ்தலங்கள்.

ஆயிரத்துக்கதிகமான சிவஸ்தலங்களிருக்கினும் விசேஷமானவை:—கயிலை, காசி, சோமநாதம், காஞ்சி, திருவண்ணாமலை, திருக்காளத்தி, திருவாலங்காடு, திருவொற்றியூர், திருமயிலை, திருவான்மியூர், விருத்தாசலம், தில்லை, மதுரை, திருச்சிராப்பள்ளி, இராமேஸ்வரம், கும்பகோணம், திருவாவடுதுறை, திருக்கடவூர், திருக்கண்டியூர், திருப்பறியலூர், திருக்குறுக்கை, திருவதிகை, திருவிற்குடி, திருக்கோவலூர், திருவழுவூர், திருப்பெருந்துறை, திருமுருகன்பூண்டி, அவிநாசி, பவானி, பேரூர், செங்கோடு முதலியவைகளே.

## சைவாகம தத்துவங்கள்.

இந்த சைவமதத்தில்: காமிகம், யோகசம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகச்சிரம், அஞ்சுமான், சுப்பிரபேதம், விசயம், நிச்சுவாசம், சுவாயம்பவம், ஆக்கினேயம், வீரம், இரௌரம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிம்பம், புரோற்கீதம், இலளிதம், சித்தம், சந்தானம், சர்வோக்தம், பரமேசுரம், கிரணம், வாதுளம் என்னும் இருபத்தெட்டு சிவாகமங்கள் இருப்பதன்றி; சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம், சத்தி, சிவம் ஆகிய ஐந்து சிவதத்துவங்களுமுண்டு.

இந்தச் சிவமதஸ்தர்கள் சிவனை: சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரத்துக்குக் காரணகர்த்தாவென்று கொண்டாடுகிறார்கள். மேலும் சிவபூஜை இயல்பை, சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு வகுப்புகளாகவும்; சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுஜ்ஜியம் என்னும் நான்கு பதவிகளாகவும் வகுத்திருக்கிறார்கள்.

இந்தச் சிவமதத்தில் பிறந்துவளர்ந்த வேதமூர்த்தியாகிய ஸ்ரீ சங்கராசாரியரால் சைவமதம் ஒருகாலத்தில் பிரபலமான

ஸ்திதியிலிருந்தது. ஆனால், ஸ்ரீசங்கராசாரியர் கடைசிகாலத்தில் அத்வைதமதத்தை ஸ்தாபித்துத் தாமுமதைத் தழுவினர்.

## ஸ்ரீ வேதமூர்த்திகள் சங்கராசாரிய சுவாமிகள் சரித்திரம்.

ஸ்ரீ சங்கராசாரியசுவாமிகள் விக்கிரமாதித்திய, 95 - ல் அதாவது கி-பி-500 - வருஷங்களுக்குமுன் மலையாளதேசத்தில் நம்பூரி பிராமணர் குடும்பத்தில் பிறந்து, தகப்பனுருதவியால் வேதம் முதலானவைகளைக் கற்றுத் தெளிந்து, பன்னிரண்டாம் வயதில் தந்தையை யிழந்துவிட்டபடியால், இவருக்கு விவாஹஞ் செய்யத் தாயார் விரும்பி யிருக்கும்போது, இவர் அதில் இஷ்டமில்லாமல் சந்நியாச ஆச்சிரமத்தை யனுசரித்தார். இப்படி யனுசரித்ததற்குக் காரணம்: ஒருநாள் தானும் தன் தாயாரும் ஓராற்றைக் கடக்கும்போது முதலையால் பிடிபட்டதனால் அந்த அபாயத்தை நீக்க இந்தச் சந்நியாசத்தை யனுசரித்ததாகச் சிலர் சொல்லுகின்றார்கள். இவர் காஞ்சீபுரத்தில் இப்போது ஏகாம்பரேஸ்வரர் என்று பெயர்பெற்றிருக்கும் லிங்கத்தையும், கோயிலையும், திருப்பதியில் இப்போது விஷ்ணு ஸ்தலமாயிருக்கும் கோவிலின் இலிங்கத்தையும் ஸ்தாபித்து, அநேக சிஷர்களோடு விந்தியமலையைக் கடந்து, காசி, காஸ்மீர முதலான இடங்களுக்குப் போய் வந்ததாகவும், மண்டன பண்டிதர் என்பவருடைய மனைவியோடு மதனசாஸ்திரத்தைப்பற்றித் தர்க்கஞ் செய்து ஜெயித்து அவர்களைச் சிஷ்யர்களாக்கிக்கொண்டதாகவும்; பிறகு மஹிம, லஹிம, மந்திர தந்திரங்களினால் கூடுவிட்டுக் கூடுபாய்ந்து அநேக அற்புதமான காரியங்களைச் செய்து கொண்டும் வந்தாராம். இவர் இயற்றிய காமாக்ஷிசதகம், சவுந்தரியலஹரி, சஹஸ்ரநாமபாஷ்யம் என்னும் கிரந்தங்கள் சிறந்தவைகளாயினும், இவருடைய சங்கரவிஜயமென்னும் கிரந்தமானது மிகவும் சிறந்ததாகச் சகலராலும் கொண்டாடப்பட்டு வருகின்றது. இதில் அவர் புத்த சமணமதஸ்தர்களிடஞ் செய்த தருக்கங்க ளடங்கியிருக்கின்றன. இவர் சிவமதஸ்தராயினும், சிலசமயங்களில் பஜகோவிந்தம் என்று விஷ்ணுவை ஸ்துதிசெய்து வந்ததாகவும் தெரிகிறது. பிறகு வியாசருடைய வேதாந்தமாகிய பிரம்ம சூத்திரங்களை யாதாரமாகக் கொண்டு அத்வைதமாகும் ஸ்மார்த்தர்

மதத்தை ஸ்தாபித்தார். ஆனதுபற்றியே, பகவத்கீதை முதலானவைகளுக்கு இவர் பாஷ்யஞ் செய்யும்போது "காணப்படும் பிரபஞ்சம் பொய்யென்றும், நிற்குணமாகிய ஆத்மா ஒன்றே மெய்யென்றும், அஹம்பிரம்மம் (நானே கடவுள்) என்றும் சொல்வதாகிய பலவிதமான கோட்பாடுகளோடு எழுதிவிட்டார். (இவரது அத்வைத சித்தாந்தத்தைச் சரியாக அறிய விரும்புவோர் என்னாலியற்றப்பட்ட ஆரியர்மத சித்தாந்தத்தை பார்க்கலாம்.) இவர் கடைசியாக இந்தப் பிரபஞ்சத்திற் கெல்லாம் சிறந்த சந்நியாசியாகவும்,சாஸ்திரியாகவும், தத்வசிகாமணியாகவும், வியக்கத்தக்க வித்வானாகவும், கருதத்தக்க கவியாகவும், மதிக்கத்தக்க மந்திரவாதியாகவும், ஆசரியிக்கத்தக்க ஆசாரியபீடமாகவு மிருந்தார். இவருக்குச் சுமார் 30-வது வயதில் மூலவியாதி கண்டபடியால் இவருத்தரவின்படி இவருடைய சிஷ்யர்கள் இவரைப் பூரணபரிசுத்தமாக்க பஸ்பஞ் செய்துவிட்டார்கள். இவரிருப்பிடத்திற்கு சிருங்ககிரிமடமென்று பெயர். அது துங்கபத்திர நதிக்கரையிலிருக்கும் பெதுநூர் ஜில்லாவைச்சார்ந்த ஓர் சிங்காரவனத்திலிருக்கிறது. அதற்கு அநந்தலக்ஷ திரவியம் வருமானமுண்டு.

இவருடைய பாஷ்யங்கள் மிகவும் சிரேஷ்டமானவைகளாகையால் இங்கிலாந்து, இத்தலி, ஜெர்மனி அமெரிகா முதலான தேசங்களின் படிப்பாளிகள் வியந்து படித்து வருகிறார்கள். இவருக்குப் பிற்பாடு, இவரது பட்டத்தைப் பெற்றவர்கள் இவரைப்போல் பூரணபடிப்பாளிகளல்லர். சாதாரண சமயாசாரிகளைப்போலவே யிருக்கிறார்களேயன்றிஜனோபகாரமான நூல்களையியற்றிப் பொதுநலத்திற்குப் பாடுபடுவது அபூர்வமாகிவிட்டது. இப்படியிருக்க, தென்தேசத்தில் சமீபகாலத்துக்கு முன்பு ஸ்ரீ அப்பையதீக்ஷதரென்னும் ஒரு சிறந்த சைவசித்தாந்தி தோன்றினார். அவர் சரித்திரத்தை இதனடியிற் காண்க.

## மஹாவித்வசிம்மமணியாகிய ஸ்ரீ அப்பைய தீக்ஷதர் சரித்திரம்.

இவர் காஞ்சிபுரத்திற்கு அருகில் கி. பி. 1600 வருஷங்களுக்குமுன் நாராயணதீக்ஷதர் மனைவி வயிற்றிற் பிறந்தவர். சிறுவயதிலேயே சுருதி, ஸ்மிருதி, புராண, இதிகாசாதிகளைக் கற்றுத் தெளிந்து பென்னுகொண்ட சமஸ்தானத்தில் வெங்

கடராயரிடம் ஆச்ரியம் பெற்றார். இவர் சைவசித்தாந்தத்தைப் பலவிதத்திலும் பிரபலமாக்கி, சிவோச்சாரண சந்திரிகா, காளிதாசரியற்றிய குவலயானந்தம் எனும் நூலுக்கு உரை, சிவதத்வவிவேகம், சிவமணிதீபிகை, அதுரபானம முதலான அனேக கிரந்தங்களை எழுதினதன்றியில், பிரபோத சந்திரோதயம் என்னும் விநோதமான கிரந்தத்தையும் எழுதினார். பிறகு தட்சண தேசயாத்திரை செய்தும், அநேக இராஜாக்களை வசமாக்கிக்கொண்டும் காசியாத்திரை செய்ய யோசித்திருக்கையில், சிதம்பரத்திலிருக்கும் பிராமணர்கள் இவரைச் சிதம்பரத்திலேயே இருக்கவேண்டுமென்று வருந்தி வேண்டினமையால், இவர் ஆயுள்பரியந்தம் அவ்விடமே யிருந்தனர். இவர் இறக்கும்போது வயது 90. இவரது இரண்டு மனைவிகளும் பதினொரு பிள்ளைகளைப் பெற்றார்கள். இவருடைய பிரபோதசந்திரோதயத்தினால் இவரும் சங்கரரைப்போலவே ஸ்வரூப அத்வைதியென்றே சொல்லவேண்டி யிருக்கிறது. இவருக்குப் பிற்பாடு போதுமான படிப்பும் சக்தியுமுள்ள பக்திமான்கள தோன்றிய சங்கதி விவரமாகத் தெரியவில்லை. ஆயினும், பம்பாயிக்கடுத்த கலியாணிபுரத்திலிருந்த சின்ன பெத்த பசுவரென்பவர்கள் வீரசைவர்களாகி ஜாதிபேதத்தையும், பிராமணப் பெருமைகளையும் நீக்கப் பாடுபட்டார்கள. அவர்களிற் சிறந்தவர் அல்லமாப்பிரபு.

## ஸ்ரீ நீலகண்ட சிவாசாரியர் சரித்திரம்.

இவர் ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் காலத்தவரென்று தெரியவருகிறது. இவர் கோகர்ணத்திற் பிறந்த தெலுங்கர். சைவ ஆகமாதி சாஸ்திரங்களைக் கற்றுத் தெளிந்தவராகி ஸ்ரீ வியாசருடைய பிரம்மசூத்திரங்களுக்கு சைவபரமாக பாஷ்யம் செய்தவர். இவர் செய்த பாஷ்யத்திற்கு நீலகண்ட பாஷ்யம் என்று பெயர். இவருடைய பாஷ்யத்திற்கு ஸ்ரீ ஹரதத்தாசாரியர் 'சமர்த்தனம்' என்ற வியாக்கியானம்செய்தனர். இந்நீலகண்டர் சுவேதாசாரியருடைய சீடராகிய.

## ஸ்ரீ ஹரதத்தாசாரியர் சரித்திரம்.

இவர் கஞ்சனூரிலே மதுசூதனாசாரியருடைய புதல்வர். இவர் முதலில் வைணவராக இருந்து பிறகு சைவசமயநூல்களைக் கற்றுத் தெளிந்து சைவரானார். இவர் பழுக்கக் காய்ச்சிய இரும்புப் பீடத்திலேறி சிவபரத்துவத்தைச் சாதித்த

வர். சதுர்வேததாற்பரிய முதலான கிரந்தங்களை இயற்றிய வருமிவரே.

## தென்தேசத்தில் சில விசேஷ சைவசமய சித்தாந்திகள்.

### சந்தானாசாரியர்கள்.

1. மெய்கண்டதேவர், 2. உமாபதி சிவாசாரியார்.
3. அருணந்திதேவர், 4. மறைஞானசம்பந்தர்.

### திருவிசைப்பா அருளினவர்கள்.

1. திருமாளிகைத்தேவர், 2. சேந்தனார், 3. கருவூர்த்தேவர்,
4. பூந்துருத்திநம்பிகாடநம்பி, 5. கண்டராதித்தர்,
6. வேணாட்டடிகள், 7. திருவாலியமுதனார், 8. புருடோத்தமநம்பி,
9. சேதிராயர்.

### நம்பியாண்டார் நம்பி சரித்திரம்.

இவர் சோழநாட்டில் திருநாரையூரில் ஆதிசைவப் பிராம்மணகுலத்திலவதரித்து, மறைமுதல் பலகலைகள் பயின்று வருநாளில் அவ்வூர்ப் பொல்லாப்பிள்ளையாரைத் தினம் ஆராதிக்கிற தன் பிதா ஓரூர்க்குச் செல்ல, இவரன்போடு திருமஞ்சன முதலானவை செய்து நிவேதனத்தை முன்வைத்து, "பிள்ளையாரே! அமுது செய்யும்" என, அவர் கொள்ளாதிருப்பக் கண்டு, தன் தலையை மோதப் புகுங்கால் "நம்பி பொறு" என்று சொல்லி நிவேதனமெல்லாம் அருந்த, நம்பியார் உவந்து "ஐயனே! நேரமானதால் பள்ளிக்கேகில் தேசிகளடிப்பாராதலின் பாடம் நீரே ஓதிவையும்" என, அப்படியே ஓதவுணர்ந் திப்படிப் பலநாளுஞ் செய்துவருவதை அனபாய சோழமகாராஜ னறிந்து, மூவர் திருமுறைகள் செழித்த விடம் இந்த நம்பியாரால் றெரிந்துகொண்டு அவற்றை யெடுப்பவும், நம்பியாரும் மூன்று திருத்தொண்டருடைய சரிதையைத் திருவந்தாதியாகப் பாடியருளி நெடுநாள் வாழ்ந்திருந்து சிவபதமடைந்தனர்.

## சேக்கிழார் சுவாமிகள் சரித்திரம்.

தொண்டைநாட்டிலே, குன்றத்தூரிலே, வேளாளகுல சேக்கிழார் வம்சத்தில் அவதரித்து, அருள்மொழித் தேவர் எனத் திருநாமங்கொண்டு, பலகலைக ளோதியுணர்ந்து, சிவ பக்தி அடியார் பக்தியிற் பயின்றபின், அனபாய சோழ மகா ராஜனுக்கு முதன் மந்திரியாகி வாழுநாளில், அந்தச் சோழன் சமண மதத்தர் பாடிய சீவகசிந்தாமணியை மெய்யென்று விரும்பியிருக்க, சேக்கிழார் அவரை நோக்கி, இக்கதை மறுமைக் காகாது, இம்மை மறுமைப் பயனைத் தருங்கதை திருத்தொ ண்டர் திவ்யசரிதையென்றும், அதை ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமி கள் 11-திருப்பாடல்களாகவும், நம்பியாண்டார் நம்பி திருவந் தாதியாகவும் செய்திருக்கிறார்களென்றும் சொல்ல, அரசன் கேட்டுளமகிழ்ந்து அந்தத் திருத்தொண்டர் சரிதையை உலக த்தா ருய்யும்படி விரித்துப் புராணமாகச் செய்துகொடுக்க வேண்டுமென்று விளம்ப, உடனே சேக்கிழார் சிதம்பரஞ் சென்று நடேசரை வணங்கி அன்போடு துதிப்ப "உல கெலாம்" என்று யாவருமறிய அசரீரி பிறக்க, அதையே முதலடியாகக்கொண்டு திருத்தொண்டர் புராணமென்கிற பெரியபுராணத்தைத் திருவாய்மலர்ந்தருளி, சோழர் பாண் டியர் முதல் அநேக மடாதிபதிகள் முன்பாகத் தாமே பிரசங் கித்து அரங்கேற்றியபின்பு, சந்நியாசியாகி, சிவனடியார்தம் முடன் அருந்தவத்திலிருந்து அம்பலவாணன் அடிநிழ லெய்தினர்.

## திருக்கூட்ட அடியார்கள்.

1. தில்லைவாழந்தணர், 2. பொய்யடிமையில்லாதபுலவர், 3. பத்தராய்ப்பணிவார், 4. பரமனையேபாடுவார், 5. சித்தத்தைச் சிவன்பாலேவைத்தார், 6. திருவாரூர்ப்பிறந்தார், 7. முப்பொ ழுதுந் திருமேனி தீண்டுவார், 8. முழுநீறு பூசிய முனிவர், 9. அப்பாலும் அடிச்சார்ந்தார்.

## சைவசமய குரவர்கள்.

(1) திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள், (2) திரு நாவுக்கரசு சுவாமிகள், (3) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள், (4) ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள்.

## அறுபத்துமூன்று நாயன்மார்கள்.

(1) திருநீலகண்டநாயனார், (2) இயற்பகைநாயனார், (3) இளையான்குடிமாறநாயனார், (4) மெய்ப்பொருநாயனார், (5) விறன்மிண்டநாயனார், (6) அமர்நீதிநாயனார், (7) எறிபத்தநாயனார், (8) ஏனாதிநாயனார், (9) கண்ணப்பநாயனார், (10) குங்கிலியக்கலயநாயனார், (11) மானக்கஞ்சாரநாயனார், (12) அரிவாட்டாயநாயனார், (13) ஆனாயநாயனார், (14) மூர்த்திநாயனார், (15) முருகநாயனார், (16) உருத்திரபசுபதிநாயனார், (17) திருநாளைப்போவார்நாயனார், (18) திருக்குறிப்புத்தொண்டநாயனார், (19) சண்டேசுரநாயனார், (20) திருநாவுக்கரசுசுவாமிகள், (21) குலச்சிறைநாயனார், (22) பெருமிழலைக்குரும்பநாயனார், (23) காரைக்காலம்மையார், (24) அப்பூதிநாயனார், (25) திருநீலநக்கநாயனார், (26) நமிநந்தியடிகள்நாயனார், (27) திருஞானசம்பந்த சுவாமிகள், (28) ஏயர்கோன் கலிக்காமநாயனார், (29) திருமூலநாயனார், (30) தண்டியடிகள்நாயனார், (31) மூர்க்கநாயனார், (32) சோமாசிமாறநாயனார், (33) சாக்கியநாயனார், (34) சிறப்புலிநாயனார், (35) சிறுத்தொண்டநாயனார், (36) சேரமான்பெருமாநாயனார், (37) கணநாதநாயனார், (38) கூற்றுவநாயனார், (39) புகழ்ச்சோழநாயனார், (40) நரசிங்கமுனையரையநாயனார், (41) அதிபத்தநாயனார், (42) கலிக்கம்பநாயனார், (43) கலியநாயனார், (44) சத்திநாயனார், (45) ஐயடிகள்காடவர்கோனாயனார், (46) கணம்புல்லநாயனார், (47) காரிநாயனார், (48) நின்றசீர் நெடுமாறநாயனார், (49) வாயிலார் நாயனார், (50) முனையடுவார்நாயனார், (51) கழற்சிங்கநாயனார், (52) இடங்கழிநாயனார், 53. செருத்துணைநாயனார், (54) புகழ்த்துணைநாயனார், (55) கோட்புலிநாயனார், (56) பூசலார்நாயனார், (57) மங்கையர்க்கரசியார், (58) நேசநாயனார், (59) கோச்செங்கட்சோழநாயனார், (60) திருநீலகண்டயாழ்ப்பாணர், (61) சடையநாயனார், (62) இசைஞானியார், (63) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் என்பவர்களாம்.

இவ்வறுபத்துமூன்று நாயன்மார்களில் பல வருணத்தாருமுண்டு. அவர்களுள் சைவசமயகுரவர் நால்வர். அவர்களுடைய சரித்திரத்தை இதனடியில் சுருக்கமாகத் தெரிவிப்பாம்.

## திருநாவுக்கரசு சுவாமிகள் சரித்திரம்.

இவர் திருமுனைப்பாடிநாட்டில் சிறந்த திருவாமூரில் வேளாளர் குலத்தாராகிய புகழனார் மனைவி மாதினியார் வயிற்றில் ஜனித்து மருள்நீக்கியாரெனப் பெயர் பெற்று கலைகள் பயின்றுவந்தார். இவருக்கு முன்பிறந்த திலக வதியாரென்னும் ஓர் சகோதரியுண்டு. அந்தம்மை, தாய் தந்தையர் மரித்ததனாலும், தான்விரும்பிய கணவன் கிடை யாமையாலும் கன்னிகா மடத்தைச் சார்ந்து, சிவபக்தியில் மூழ்கி, திருவதிகைவீரட்டானத்தை யடைந்து, சிவபெரு மானுக்குப் பிரீதியான காரியங்களைச் செய்துகொண்டு வந்த னர். இங்ஙனமிருக்க இவர்தம்பியாகிய மருள்நீக்கியார்ஜனோப காரமாகத்தருமசத்திரங்கள் முதலானவற்றைச்செய்துவரும் போது,அருகமதஸ்தர்களாகிய சமணர்களுடைய கோட்பாடு பிரபலமாகப் பரவிவருவதைத்தெரிந்து, அந்த அருகமத சித் தாந்தத்தையறிந்து அம்மதத்தையே சார்ந்துகொண்டார்.இவ ரது கல்வி, ஞானம்,நடை முதலியவற்றைக்கண்டு அருகமதஸ் தர்கள், இவருக்குத் தருமசேனர் எனப்பெயரிட்டு,குருவாகக் கொண்டு வணங்கினார்கள். இவர், அம்மதத்திலிருந்து பௌத் தம் முதலிய பலமதங்களை வென்று விளங்கினார். இங்ஙன மிருக்க, ஆங்குத் திலகவதியார் வேண்டுகோளால் சிவாஞ்ஞை யின்படி இந்தத் தருமசேனருக்குச் சூலைநோய் கண்டு மிக வருந்த,அவ்வியாதியை நீக்கச் சமணர்களுடைய மந்திர தந்திர மருந்துகளினால் முடியாமையைப்பற்றிச் சிந்தித்துப் பின் சதாசிவபக்தியில் மூழ்கியிருக்கும் தமது தமக்கையார்திலகவதி யம்மையிடம் சென்றனர். அந்த அம்மையார் அன்புடன் தம் பியை நோக்கி, "நீ சிவமதத்தைச் சார்ந்து சிவபெருமானைத் துதிப்பாயானால் வியாதி நீங்கும்" என்று செப்பியபடியே, அவரும் கோயிலுக்குச் சென்று வணங்கிப் பதிகம் பாடவும் வியாதி நீங்கிவிட்டதன்றியில், "திருநாவுக்கரசு" என அசரீரி பிறந்தது. அன்றுமுதல் சைவராகி அச்சிறப்புப்பெயர் பூண்டு அநேக அடியார்களோடு பரமனையே துதித்துக்கொண் டிருந்தனர். இப்படி இவர் சைவமதத்தை யவலம்பித்ததைப் பற்றிச் சமணர்கள் அரசனைக்கொண்டு அவரை நீற்றறையில் வைத்தும், நஞ்சமுதூட்டியும், யானையைக்கொண்டு மிதிப்பிக் கத்தூண்டியும், இவ்விதம் பலவகையில் இம்சித்தும் இறவா ததனால், அவரைக் கருங்கல்லோடு சேர்த்துக் கட்டிக்கடலில் விட, அதுவே தெப்பமாக, அதன் மூலமாய்த் திருப்பாதிரிப்

புலியூரடைந்து சுவாமிதரிசனஞ் செய்து பதிகமோதி பல திவ்ய ஸ்தலங்களுக்கேகி, ஆங்காங்கே பல திருப்பாடல்களை பாடி, திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளால் அப்பர் எனத் திருநாமம் பெற்று, அப்பூதிநாயனாருடைய மகனை அரவந் தீண்ட அவ்விஷத்தை நீக்கி, ஐயாற்றில் ஸ்ரீ கயிலாயதரிசனங் கண்டு மகிழ்ந்து, பின்னர் அநேக சிவஸ்தலங்களைத் தரிசித்துத் திருத்தாண்டகம், திருநேரிசை, திருக்குறுந்தொகை, திருவிருத்தம் முதலிய 307-பதிகங்கள் திருவாய்மலர்ந்து சைவ சமயத்தை விருத்தியாக்கி, பிரம்மசாரியாக எண்பத்தொரு வயதிருந்து, திருப்பூம்புகலூரைச் சேர்ந்து, திருப்பணிசெய்து, திருத்தாண்டகமோதி, சிவானந்த வடிவமாய்ப் பரமன் திருவடிநீழலி லமர்ந்தனர். இவர் திருநட்சத்திரம்: சித்திரை சதயம்.

## ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் சரித்திரம்.

இவர் திருநாவலூரில் பிராம்மணகுலத்தில் சடையனார் மனைவி இசைஞானியார் வயிற்றில் உற்பவித்து, சகல கலைகளையுங் கற்றுத் தெளிந்து திருமணப்பருவமெய்தி, புத்தூர்சடங்கவி சிவாசாரியார் பெண்ணை விவாஹஞ் செய்துகொள்ள எத்தனப்படும்போது, சிவபிரான் விருத்த பிராம்மணரைப்போல் வந்து ஓலைகாட்டித் தடுத்தாட்கொண்டபின், சிவபிரானால் வன்றொண்டர் எனப் பெயர்பெற்று, திருவாரூரில் பரவை நாச்சியாரை மணம்புரிந்து, விறல்மிண்டநாயனார் திறல்கண்டு, திருத்தொண்டத்தொகை அருளி, திருப்புகலூரில் செங்கல் லைப்பொன்னாகச்செய்துவிருத்தாசலத்தில்முத்தாநதியிலிட்ட பொருளைத் திருவாரூர்த் திருக்குளத்திலெடுத்து, திருவொற்றியூரில் சங்கிலிநாச்சியாரை விவாஹஞ்செய்து பிரமாணந்தவருதலால் இருகண்ணும் மறைய, ஓர் கோல்கொண்டு திருகாஞ்சிபுரத்துக்கேகி ஏகம்பரநாதரால் ஓர் கண்பெற்று, மற்றொரு கண்ணைத் திருவாரூரில் பெற்றுச் சுவாமி தரிசனஞ்செய்து பதிகமோதி, சேர சோழ பாண்டிய நாடுகளிற் சென்று, பல சிவஸ்தலங்களைப் பணிந்து, திவ்யமான பதிகங்களைப் பாடி சைவசமயத்தை விருத்தியாக்கினார். இவர் கடைசியாய் அவநாசியில் முதலையால் பிடிபட்ட பிள்ளைக்குப் பிராணன் கொடுத்ததன்றியில், அநேக அற்புதங்களைச் செய்து, பதினெட்டாம வயதில் வெள்ளையானையின்மீதேறி சேரமான்பெருமான் நாயனாரோடு திருக்கயிலையைச் சார்ந்தார்.

## திருஞானசம்பந்த சுவாமிகள் சரித்திரம்.

இவர் சீர்காழி நாட்டில் பிராம்மணகுலத்தில் சிவபாதவிதயர் மனைவி பகவதியார் வயிற்றில் திருவவதாரஞ்செய்தவர். மூன்று வயதான காலத்தில் தகப்பனார் இவரை ஒரு குளக்கரையில் நிறுத்தி ஸ்நானஞ் செய்யும்போது இவ ரழுதகைப்பற்றிப் பார்வதிதேவியாரால் ஞானப்பால் கொடுக்கப்பெற் றுண்டவராம். பிறகு திவ்விய ஸ்தலங்களுக்குச் சென்று திருப்பதிகங்களைப் பாடிப் பொற்றாளம் பெற்றும் (சிதம்பரத்துக்குப் போனபோது) முத்துச்சிவிகை முத்துக்குடை பொற்சின்னம் முதலான விருதுகளைப் பெற்றும், ஓரரசன் மகளுடைய குமரகண்டவலியை நீக்கியும், தந்தைக்காக வளர்கிழிபெற்றும், வணிகனை அரவு தீண்ட அவ்விடத்தைத் தீர்த்தும், பாண்டியன் மனைவி மங்கையர்க்கரசியார் வேண்டுகோளின்படி மதுரைமாநகர் வந்து அருகமதஸ்தனாகிய பாண்டியனுடைய வெப்புங் கூனும் நீக்கியும், அந்த அரசனையும் பாண்டிய நாட்டிலுள்ளாரையுஞ் சிவபக்தர்களாக்கியும், நெருப்பிலிட்ட ஏடு வேகாமலிருக்க எடுத்தும், ஆற்றிலிட்ட வேடு எதிர்வந்தணையவுமெடுத்தும்,அருகர் சமணர் முதலானவர்களுடைய மதங்களைத் தருக்கங்களால் கண்டித்தும், அவர்களைக் கழுவேற்றினார். பிறகு திருமயிலையில் பாம்பினாற் கடிக்கப்பட் டிறந்து சாம்பலான ஒரு பெண்ணையும் பிழைப்பித்து அநேக அற்புதங்களைச் செய்துவந்தார். கடைசியாக 16-ம் வயதில் திருமணஞ் செய்யப்பெற்று,பெற்றோர் உற்றோர் இன்னும் அநேக திருத்தொண்டர் புடை சூழ்ந்துவர கோயிலுட் சென்று, ஆங்குத் தோன்றிய சோதியிற் கலந்தனர்.

## ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் சரித்திரம்.

இவர் ஸ்ரீ மதுரைமாநகர் வைகை நதிக்கரையிலுள்ள திருவாதவூரில ஆமாத்திய பிராம்மணகுலத்தில் அவதரித்து, பதினாறு வயதுக்குள் சகல கலைகளையும் ஓதியுணர்ந்திருந்தலை அரிமர்த்தன பாண்டியன் கேள்வியுற்று அவரை அழைப்பித்துத் தனக்கு முதன்மந்திரியாக இருக்கும்படி செய்ய, விமரிசையாய் இராச்சியத்தைப் பரிபாலித்து வரும்போது, மெய்ம்மைப்பொருள்விவேகமும்,பொய்ம்மைப்பொருள்விவேகமும் மனதிற்றோன்ற, பதிதன்னையும் பசுவென்னையு நல்கும் போதக்குரு வருவதெப்போதெனச் சிந்தித்திருக்கு நாளில், அந்த

ராஜனுடைய சேனைக்குக் குதிரைகள் வேண்டியதனால் மந்திரியாகிய இவரிடம் பொருள் கொடுத்து வேலையந்துறையில் வந்திறங்கும் நல்ல புரவிகளை வாங்கி வரும்படி யனுப்ப, இவர் சேனை சூழத் திருப்பெருந்துறை வழியாகச் செல்லும்போது அங்கு குருந்தமரத்தின்கீழ்ச் சிவபெருமான் பிராமணராகவிருந்து சிவாகம தத்துவங்களைப் போதித்தருள, இவர் கொண்டுபோன பொருள்களையெல்லாம் சிவபெருமான் கோயில்களைக் கட்டிப் புதுப்பிப்பதில் செலவிட்டு விட்டார். இராஜன் குதிரைகளெங்கேயென்று கேட்க, மந்திரியாராகிய இவர் சிவபெருமானைத் துதித்தார். உடனே சிவபெருமான் நரிகளைக் குதிரைகளாக்கிக் குதிரைக்காரனாகத் தான் தோன்றி அரசனுக்கு ஒப்புவித்துவிட்டுப் போயினர். சிலநாட் சென்றபிறகு அப்பரிகளெல்லாம் நரிகளாகி ஊரைப் பாழ்படுத்திக் காடுகளுக் கேகிவிட்டபடியால், இராஜன் மறுபடியும் மந்திரியை வருத்த, சிவாஞ்ஞையால் வைகையாற்றில் பிரவாகம் வந்து நாட்டை நாசமாக்கிவிட்டது. பிறகு இவர் பாடும் பாசுரங்கள் மாணிக்கம்போல் பிரகாசித்ததால் திருவருளால் மாணிக்கவாசகர் என்ற சிறப்புப்பெயர் பெற்று அநேக சிவஸ்தலங்களுக் கேகி, திவ்யமான திருப்பதிகங்களைப் பாடி, சிதம்பரத்தில் சந்நியாசியாகக் காலங்கழித்தார். ஈழதேசமென்கிற யாழ்ப்பாண தேசத்தில் அப்போது குடிகொண்டிருந்த புத்தர்களை வாதில் வென்று, அவர்கள் அரசனுடைய ஊமைப்பெண்ணைப் பேசவைத்து, அவ்வரசன் முதலானவர்களைச் சைவர்களாக்கி, சைவமதத்தை ஸ்தாபித்தார். இவர் வேதசிக்ஷாமணி என்ற பாடலைப் பாடினதாகச் சிலர் சொன்னாலும் இவருடைய திருவாசகம் என்னும் நூல் பலவிதத்திலுஞ் சிறந்தது. இவர் 32-ம் வயதில் சிதம்பரத்தில் சிவனருளாம் சோதியிற் கலந்தனர்.

இதுநிற்க, சமீபகாலத்துக்கு முன்பு பத்திரகிரியார், திருப்புகழ்பாடிய அருணகிரிநாதர் முதலான அநேக சிவபக்தர்கள் எழுந்தருளினாலும், சோழநாட்டில் வேளாளர்குலத்தில் கேடிலியப்பப்பிள்ளையின் மனைவியார் திருவயிற்றில் திரிசிரபுரத்துத் தாயுமானேஸ்வரர் அருளால் அவதாரஞ்செய்து தாயுமானவர் என்று திருநாமம்பூண்டு, நற்குண நற்செய்கைகளோடு கல்விப்பயிற்சியிலே சிறந்து, தத்துவப் பொருளையே விரும்பி, மௌனதேசிகரால் உபதேசம்பெற்று, தினந்தோறும் தக்ஷிணாமூர்த்தி சந்நிதியிலே நிஷ்டை செய்துகொண்டு

வந்த மகா பக்த சிரோமணியாக இருந்தார். இவருடைய திருப்பாடல்களுக்குச் சமானமானவைகளை வேறு மதஸ்தரிடம் காண்பதருமையே.

மேற்சொல்லிய மஹாத்மாக்களாலும் ஏனையோராலும் ஸ்தாபிக்கப்பட்ட சைவசித்தாந்த சாஸ்திரங்கள் பதினான்கு. அவையாவன:—

திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞானபோதம், சிவஞானசித்தியார், இருபா இருபஃது, உண்மைவிளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறி விளக்கம், சங்கற்பநிராகரணம் என்பவைகளே.

அகப்பேய், பாம்பாட்டிச்சித்தர் முதலான 18-சித்தர்களும் சைவமதத்தைச்சார்ந்தவர்களென்று சொல்லுவார்கள். ஆனால், அவர்களில் பெரும்பான்மையோர் வைத்திய வாகடாதிகளில் காலங்கழித்து அத்வைதமதத்தை யவலம்பித்தவர்களாகத் தோற்றுகிறது.

## 1. பட்டணத்துப் பிள்ளையார்.

இவர் காவிரிப்பூம்பட்டணத்திற் பிறந்த வணிகர். இவருடைய ஆதிப்பெயர் திருவேங்கடசெட்டியார் என்பதாம். ஒரு அதிதியாகிய சன்னியாசி எழுதிக்கொடுத்த ஓலை நறுக்கினால் ஞானம்பெற்றுச் சந்நியாசியாகி, சில சிவஸ்தலங்களைத் தரிசித்து, கவிகளைப்பாடித் துதித்தார். உடற்கூற்று முதலான கிரந்தங்களை இயற்றியவர் இவரே. இவரதுகாலம். கி. பி. 16-ம் நூற்றாண்டெனத்தெரிகிறது. இவருடைய ஆப்தர் பத்திரகிரியாராம்.

## 2. பத்திரகிரியார்.

இவர் ஒரு அரசர் எனக்கேள்வி. ஆனால் இவர் பிறந்த இடம் காலம் தெரியவில்லை. இவர் பட்டணத்துப்பிள்ளையால் உபதேசம்பெற்று ஞானவானாகி 332 உருக்கமான கண்ணிகளைப் பாடினார்.

## 3. அருணகிரிநாதர்.

இவர் பிறந்த இடமும் காலமும் சரியாகத்தெரியவில்லை. ஆயினும், திருவண்ணாமலைக்கோயிலைத் தமதுவாஸஸ்தானமாகக்

கொண்டு, ஆறுமுகன் என்னும் சுந்தரைக்கருதி கந்தரநுபூதி, கந்தரலங்காரம், கந்தரந்தாதி, வேதவிருத்தம், திருவகுப்பு, திருப்புகழ் முதலான கிரந்தங்களை யியற்றி ஸ்ரீ வில்லிபுத்தூராழ்வாரை வென்றவர்.

## 4. இராமலிங்க சுவாமிகள்.

இவர் மருதூரில் காருணீகர் வகுப்பில் இராமயபிள்ளை மனைவியார் சின்னம்மை வயற்றில் கி. பி. 1823-ம் ௵ அக்டோபர் ௴ 5-ம் தேதி பிறந்து காலமுதிர கல்விகற்றுத் தெளிந்து சிலகாலம் இல்லறவாசியாக விருந்து, பிறகு துறவியாகி, ஆறு திருமுறைகளையும் அநேக சில்லரைக் கவிகளையுமியற்றி, சிதம்பரத்தை யடுத்த வடலூரில் ஞானசபையை ஸ்தாபித்து, கலியுகாப்தம் 4978-ம் ௵ தை ௴ 19-ம் தேதி பரமபதி யடைந்தார். இவருடைய கவிகள் மிக்க உருக்கமும் இனிமையுமானவை.

## 5. ஆறுமுக நாவலர்.

இவர் யாழ்ப்பாணம் நல்லூரில் வேளாளஜாதியில் கி. பி. 1822-ம் ௵ மார்கழிமாதம் கந்தப்பிள்ளை மனைவி சிவகாமியாரால் பெறப்பெற்றவர். சிறுவயதில் தமிழ் இங்கிலீஷ் கற்று, கனம் பெர்சிவல் அவர்களுக்கு முன்ஷியாகி, பிறகு வண்ணார்பண்ணை, புலோலி, சிதம்பர முதலான இடங்களில் சைவசமய பாடசாலைகளை ஸ்தாபித்தும், சொந்தத்தில் அச்சியந்திரசாலையை ஸ்தாபித்தும், இலக்கண இலக்கிய சைவ கிரந்தங்கள் சுமார் அறுபதுவரையில் சீர்திருத்தி அச்சிட்டு உலகிற்கு உதவினர்.

பொதுவாகச் சைவ சித்தாந்திகளின் கருத்தென்னவெனில், நீலகண்டசிவாசாரியார் கருத்தைத்தழுவி, ஈஸ்வரன் பதி என்றும், ஆத்மாக்கள் பசு என்றும், ஆத்மாக்கள் பாசத்தைப் பொருந்தியிருப்பவை யென்றும், பந்தகாலத்திலும் முத்திகாலத்திலும் ஈஸ்வரன் ஆத்மாக்களோடு வேறறக் கலந்து நிற்கிறனென்றும், ஆத்மாக்கள் பாசத்தினின்றும் நீங்கி முத்தியை யடையுமென்பதே. சைவமதம் தென்தேசத்தில் இவ்வளவு சிறப்புப்பெற்றுப் பிரகாசிக்கையில், வடநாடுகளில் காசி முதலான சிலவிடங்களைத் தவிர மற்ற இடங்களில், சில சந்நியாசிகள் யாத்திரச் சிவவேடந் தரித்து அநுஷ்டிக்கிறார்

கள். ஆயினும், தக்ஷணநாட்டில் வீரசைவமும் பிரபலஸ்திதியில் இருக்கிறதென்று சொல்லலாம். அவர்களை ஜங்கமர் அல்லது வீரசைவர்கள் என்று சொல்லப்பட்டு வருவது பிரசித்தம்.

## வீரசைவம்.

இந்த வீரசைவமதத்திற்கு முக்கியர் பசுவர். அவர் ஸ்ரீசைலத்தின் மேற்கே இருக்கும் இங்குலீசுவர பார்வதி அக்கிரகாரத்தில் வசிந்த மாதிகராயர், மாதலரசி என்னும் பிராம்மணர்களுக்கு நந்தியே அவதாரமாகப் பிறந்தவர். அப்போது கலியாணபுரத்திற்கு அரசனாயிருந்த விஜ்ஜலராஜனிடம் தண்டநாயகமந்திரியாக இருந்து, அவருடைய புத்திரி கங்காம்மாளை விவாகம்செய்து, சங்கமேசுவரத்துக்குப்போய், சுவாமியினால் அருள் பெற்றிருக்க, குலாசார விதிப்படி பூணூல் தரிக்காமல், உருத்திராக்ஷம் விபூதி இலிங்கம் இவற்றைத் தரித்தார். பிறகு, தன் மாமனார் தண்டநாயகர் இறந்தபிறகு, இராஜமந்திர வேலையை வகித்துவருநாளில், சர்க்கார் பணத்தையெடுத்து சிவதருமம் செய்ததாகச் சிலர் சாக்ஷி சொல்ல, இராஜன் வந்து கஜானாவைச்சோதிக்கத் தொகை குறையாதிருக்கக்கண்டு ஆச்சரியப்பட்டு, அவரைக்கொண்டாடினான். பிறகு இவர் அநேக அற்புதங்களைச்செய்து வந்தாராம். இவருடைய அதிக ரூபலாவண்ணியமுள்ள தங்கையாகிய பத்மாவதியை விஜ்ஜலராஜன் விவாஹம் செய்துகொண்டதாக டாக்டர் ஆபோர்ட்டு சாஸ்திரி எழுதியிருந்தாலும், அந்த பத்மாவதியின் குமாரன் சின்ன பசுவர் அம்மதத்தை அதிக பிரபலமாக்கினதாகப் பசுவ புராணம் கூறுகின்றது. அவர் காலத்தில் ஜயினர்களும் தோற்கப்பட்டார்களாம். அப்போது மச்சய்ய, பொம்மதேவய்ய, கின்னரா கன்னதான பொம்மதேவ, காகய்ய, மசாய்ய, கோலகில பொம்மதேவ, கேசிராகய என்பவர்கள் முக்கிய சீடர்களாம். ஒருநாள் மஹாதேவலமச்சயா என்பவர், ஒரு சிசுவைக்கொன்ற குற்றத்திற்குத் தண்டிக்கும்படி மந்திரிக்கு விஜ்ஜலராஜன் கட்டளையிட, அதற்கு மந்திரி சம்மதிக்காதிருக்க, ஜகதேவியின் உத்திரவுப்படி மல்லயா, பொம்மயா என்பவர்கள் ஒருவிருஷபத்தோடு ராஜசபைக்குப்போய் இராஜனைக் கொன்றுவிட்டார்களாம். பிறகு பசுவர் சங்கமேசுவரருக்குள் அடக்கமாகிவிட்டாராம். இலிங்கமதஸ்தர்களுக்குள்

ஜாதிபேதம் கிடையாது. இப்போது மைசூர், கனரா, தெலுங்கரு, கலியாணி முதலான விடங்களில் ஏராளமாக இருக்கிறார்கள்.

## வடதேசங்களிலுள்ள சில சைவ மதஸ்தர்களின் பிரிவுகள்.

**தசாணமி கண்டி சைவர்கள்:**—இவர்கள் ஆதி சங்கராசாரியாருடைய வேதாந்த சித்தாந்தத்தைச் சார்ந்தவர்கள். காசி முதலான விடங்களில் ஏராளமாக இருக்கிறார்கள். இவர்களிற் சிலர் தலைமயிர் மீசை தாடிகளைச்சிறைத்துக்கொண்டும், கையில் ஒரு தண்டத்தைப் பிடித்துக்கொண்டும், இடுப்பில் காவி வேஷ்டியைத்தரித்துக்கொண்டும், பசித்தபோது பிராம்மணர் வீடுகளில் பிச்சையெடுத்து உண்டும், ஓம் நமச்சிவாயா என்று சிவனைத் தியானித்துக்கொண்டு மிருப்பார்கள். முற்காலங்களில் பிராம்மணர் மாத்திரம் இந்த ஆசாரத்தை அனுஷ்டித்து வந்தார்கள். இப்போது சூத்திரர்களும் அனுஷ்டித்து உலக வியவகாரங்களை நடத்தி வருகிறார்கள். இவர்களில் சிலர் அத்திரி அனுசூயாவின் குமாரராகிய தத்தாத்திரேயரைக் குருவாகக்கொண்டு யோகாப்பியாசத்தையும், மந்திர தந்திரங்களையும் அனுஷ்டித்து வருகிறார்கள். இவர்களுள் தசாமி என்ற பத்துவகை சந்நியாச தண்டிகளுண்டு.

**யோகசைவர்கள்:**—இவர்கள் பதஞ்சலி முனிவருடைய யோகவிதிகளை அனுசரித்து, சிவனோடு சாதா சேர்ந்திருக்க பிரவிர்த்தித்தவர்கள். இவர்கள் கோரக்பூரிலும், துவாரகையிலும், ஹரித்துவாரத்திலும், நேபாளத்தைச் சார்ந்த சம்புநாதர், பசுபதிநாதர் கோயில்களிலும் அநேகர் இருக்கிறார்கள். இவர்களுக்குக் கோரக்கநாதரும், மச்சேந்திரநாதரும் முக்கிய குருமார்கள். நேபாளத்தில் யோகசைவத்தை ஸ்தாபித்த மச்சேந்திரநாதர் ஹிதப்பிரதீபிகை முதலான யோக சாஸ்திரங்களை இயற்றினார். கோரக்கநாதர்: கோரகசதகப், கல்பம், சஹஸ்ரநாம முதலான கிரந்தங்களை இயற்றினார். விக்கிரமாதித்தனுடைய சகோதிரனாகிய பர்த்ருஹரி இந்த கோரக்கருடைய சீடராம். இந்த யோகிகளுக்குக் காசியில் நாதர் சந்திக்கருகில் சிறந்த மடமிருக்கிறது. மச்சேந்திரநாதர் வகுப்பைச்சார்ந்த சிலரும், பர்த்ருஹரியைச் சார்ந்த

சிலரும் சார்ந்தாவை மீட்டிப் பாடிப் பிச்சையெடுப்பது முண்டு. இவர்களிற் சிலரைக் காணபத்தியர் என்பார்கள்.

பரமஹம்ச சைவர்கள்:—வைதண்டபுரிதண்டியா ரிய ற்றிய துவாதச மஹாவாக்கியத்தின்படி சந்நியாசிகளில் குட் சிரர் பாஹூதேகர், ஹம்சர், பரமஹம்சர் என நான்கு வகுப்பா ருண்டு. அவர்களில் மானுபிமானம் விட்டும், அன்னவஸ்திரங் களை விட்டும், சுகதுக்கங்களைக் கருதாமல் சதா சிவத்தியானத் தில் மவுனயோகிகளாக இருப்பவர்களுக்குப் பரமஹம்சர் என்று பெயர். இவர்களில் அநேகர் நேபாளம், காஷ்மீர், ஹிமாலய முதலான விடங்களி லிருக்கிறார்கள்.

அகோர சைவர்கள்:—இவர்கள் சிவபெருமானுடைய துர்க்காதேவியை வணங்கிக்கொண்டும், ஜடைகளையும், மரவுரி களையும், விபூதிகளையும் தரித்தும், சில சமயங்களில் மனுஷ னுடைய கபால ஓட்டை எடுத்துக்கொண்டும், தேகத்தில் மலத்தையும், இரத்தத்தையும் தடவிக்கொண்டும் பிச்சை யெடுத்துப் பிழைப்பவர்கள். இவர்கள் மதுமாமிசத்தைச் சாதாரணமாக உண்டு துஷ்கிருத்தியங்களைச் செய்வார்கள்.

ஊர்த்தபகாரி, ஆகாசமுகி, நாகி சைவர்கள்:—இவர்களில் ஊர்த்வ பாஹூக்கள் தமது இரண்டு கைகளை எப்போ தும் தலைக்குமேல் தூக்கிக்கொண்டே தபசு செய்பவர்கள். ஆகாசமுகிகள் தமது முகத்தை எப்போதும் ஆகாயத்தை ஏறிட்டுப் பார்த்துக்கொண்டும், நகீசுகள் தமது நகங்களை ஏராளமாக வளர்த்துக்கொண்டும் சிவனைத் தியானிப்பார்கள். இம்மூவரும் விபூதி, காவி வஸ்திரங்களைத் தரித்துப் பிச்சை யெடுத்து உண்பார்கள்.

கூடார சைவர்கள்:—இவர்கள் வெங்கலத்தில் செய்த கிண்கிரியை ஒரு கையிலும், ஒரு கையில் சந்தனக் கட்டைகள் புகைந்தெரியும் பாத்திரமும், தேகத்தில் திருநீறும், காவித் துணி, குல்லாவையும் போட்டுக்கொண்டு, சிவனைப் பாடிப் பிச்சையெடுத்துக் காலம் கழிப்பார்கள்.

ருகார, சுகார, உகார சைவர்கள் :—இவர்களில் ருகாரி கள் காதுகளில் கல கடுக்கன்களை மாட்டிக்கொண்டு திருநீறு தரித்தும், சதா அலக் அலக் என்று திரிவார்கள். சுகாரிகள் மூன்றடி நீளமுள்ள தடியையும், காதுகளில் உருத்திராக்ஷ கடுக்கன்களையும், காவிவேஷ்டி, விபூதிகளைத் தரித்தும்,

தோள்களில் சாளித்தாணிக் துண்டுகளை முடித்தும் சிவனை தியானித்துத் திரிபவர்கள். உகாரிகள் மேற்சொன்ன இரண்டு வகுப்புகளைச் சாராமல் மது மாமிசத்தை உண்பார்கள்.

காரலிங்க சைவர்கள்:—இவர்கள் காமத்தை வென்றவர் கள் என்று உலகத்தார் மெச்சும்படி தமது ஆண்குறிகளில் வளையத்தையும், இரும்புச் சங்கிலியையும் மாட்டிக் கட்டிக் கொண்டு சிவனைத் தியானிப்பதாக நடிப்பார்கள்.

சந்நியாசி சைவர்கள் :—இவர்கள் தலைமயிரை நீண்ட ஜடைகளாக வளர்த்தியும், விபூதி, ருத்திராட்சம், காவித் துணிகளை உடுத்திக்கொண்டும் சிவனைத் தியானிப்பவர்கள். இவர்களில் அவதூதர்கள் என்றும், அலக்நாமிகளென்ற சில உண்மையான விரக்தர்களுமுண்டு.

நாக சைவர்கள்:—இவர்கள் தேகமுழுதும் விபூதி தரித் தும், துணி மணி யற்றுத் திகம்பரிகளாகத் திரிபவர்கள். பந் தல்கண்டு இவர்களுக்கு முக்கிய ஸ்தானம். இராஜேந்திரகிரி யின் சீடராகிய ஹிமவத்பகுதார் இந்த சைவத்தைச் சார்ந்த வர். இச்சைவர்கள் பெரும்பாலும் கத்தி கட்டாரிகளைக் கொண்டு ஜனங்களை வழிமறித்துப் பொருள் பறித்து உண் டும், ஹரித்துவாரத்தில் கூடும் மஹாமேலாவில் ஆயிரங்கணக் காக வந்து வைணவ சந்நியாசிகளோடு சச்சரவு செய்வதோடு அதிக பெருமையைப் பாராட்டும் சைவர்கள் இவர்களே.

## சைவ ஸ்மார்த்த மடங்கள்.

சைவர்களுக்குக் காஞ்சீபுரமடமும், திருவண்ணாமலை மடமும், திருவாவடுதுறை மடமும், தருமபுரமடமும், திருப் பனந்தாள் மடமும், வெள்ளாளமடமும், மதுரை மடமும், திருநெல்வேலி மடமும்; ஸ்மார்த்தர்களுக்கு சிருங்கேரி மடம், கும்பகோண சங்கராசாரியார் மடம் ஆகியவைகளுமுண்டு.

## 9-வது, இந்துமத ஞானோதயத்தின் ஒன்பதாவது படி.

## விஷ்ணு மதம் அல்லது வைணவர் சமயம்.

விஷ்ணுவை வணங்கும் மதத்திற்கு வைணவமென்று பெயர். இந்தவைணவமதத்தில் யாதவம், மாயாதவம், இரணிய கர்ப்பம், இராமாநுஜீயம், பாஸ்கரம், தத்துவவாதம் என்னும்

ஆறு உட்சமயங்களும், பாஞ்சராத்திரம், வைகாநசம் என்னும் இரண்டு ஆகமங்களுமுண்டு. இவைகளைப்பற்றி விவரமாகப் பின்னாற் சொல்லுவோம். இம்மதஸ்தர்கள் வணங்குந் தெய்வமாகிய,

விஷ்ணு—எங்கும் நிறைந்தவரென்றும், இரக்ஷகரென்றும், யாவையும் படைத்துக் காத்தருபவரென்றும், வேத சுருதிகளில் காணும் நாராயணர், பதுமநாபன், நரஹரி, இராமர், அரங்கர், கிருஷ்ணர் என்று சொல்லும் புருஷனை வழங்குவார்கள். இவர்: சுருதிகளிற் செப்பிய நாரம்—ஜலத்திற்குப் பிரதிநிதி யாகையால், நீலவருணமும்; சங்கு, சக்கிரம், கதை, கட்கங்களைக் கொண்ட நான்கு கைகளையும், மஞ்சள் வஸ்திர வுடையையும், கருட வாகனத்தையும், வைகுண்ட இருப்பிடத்தையும் உடையவராகப் புராணங்களில் வர்ணிக்கப்பட்டிருக்கிறார்.

இவருடைய மனைவிக்கு இலட்சுமி, இராதா, ருக்குமணி, சத்தியபாமா, சீதை என்னும் பலபெயர்கள் வழங்கப்படும்.

## புத்திரர்கள்.

மன்மதன்—இவரை மோகன், காமன் என்ற பல பெயர்களாலும் புகழுவார்கள். இவர் சிவபெருமானுடைய குமாரத்தியாகிய இரதியை விவாஹம் செய்துகொண்டு அநிருத்தன் என்னும் புத்திரனைப் பெற்றதாகவும், பிறகு தேவர்களுடைய வேண்டுகோளால் நிஷ்டையிலிருந்த சிவபெருமான் மீது புஷ்பபாணங்களை யேவ அவருக்குக் கோபம் பிறந்து நெற்றிக்கண்ணாற் பார்த்து பஸ்பமாக்கிவிட்டதாகவும், பின்னும் பலவிதமாகவுஞ் சொல்லுவார்கள். குசன், லவன் ஆகிய இவ்விருவரும் இராமாவதார மெடுத்தபோது சீதையின் வயிற்றில் ஜனித்தவர்கள். மற்ற புத்திரர்களைச் சொல்லில் விரியுமென்று விடுத்தனம்.

## வைணவ ஆகமங்கள்.

(1) பாஞ்சராத்திரம், (2) வைகாநஸம் முதலான கிரந்தங்களில் விஷ்ணுபிரானுடைய பெருமை பிரதிஷ்டைகளைப் பற்றிப் பிரபலமாகப் பிரஸ்தாபிக்கப்பட் டிருந்தாலும், சிவபிரானைப் பார்க்கிலும் விஷ்ணுபிரான் பலவித அவதாரங்களை

எடுத்ததாகச் சொல்லப்பெற்றிருக்கிறது. விஷ்ணுவின் விசேஷமான பத்து அவதாரங்களை யிதனடியில் தெரிவிக்கிறோம்.

(1) மச்சாவதாரம்:—முன்னொரு கற்பமுடிவில் பிரம்மாவானவர் நித்திரை செய்யும்போது ஜலப்பிரளயத்தினால் பூமி பாதாளத்தில் அமிழ, ஹயகிரீவன் என்கிற அசுரன் வேதங்களைத் திருடிக்கொண்டுபோய்க் கடலில்மறைய, விஷ்ணுவானவர் நூறுலட்சயோஜனை நீண்ட மச்சாவதாரம் (அதாவது புருஷமுகமும் மீன் தேகமும் எடுத்து) அவ்வசுரனைச் சங்கரித்து வேதங்களை யெடுத்துவந்தார் என்று ஒரு வகுப்பார் சொல்லுவார்கள். சிலரோவெனில், மநுவானவர் கற்பத்தின் முடிவில் ஜலப்பிரளயத்தில் மூழ்கிச் சாகாதிருக்கும்படி செய்ய இந்த அவதார மெடுத்ததாகச் சொல்லுவார்கள்.

(2) கூர்மாவதாரம்:—முன்னொருகால் தேவர்களும் அசுரர்களும் மந்தரகிரி பருவதத்தை மத்தாகவும், வாசுகியென்னும் பாம்பைக் கயிறாகவுங்கொண்டு பாற்கடலைக் கடையும்போது, மந்தரமலை தாழ்ந்துவிட்டபடியால், அதைச் சரிப்படுத்தும்படி தேவர்கள் வேண்டிக்கொள்ள விஷ்ணுவானவர் ஆமை வடிவமாகி யாதரித்தா ரென்பார்கள்.

(3) வராகவதாரம்:—ஒருகாலத்தில் ஹிரணியகேசனென்னும் அசுரன் தேவர்களுக்கு வருத்தங்களை யுண்டாக்கி, பூமியைப் பாய்போற் சுருட்டிக்கொண்டுபோய்க் கடலில் ஒளித்துவிட்டமையால் விஷ்ணுவானவர் பன்றி யவதாரமாகி அவனைக்கொன்று தேவர்களுடைய கஷ்டத்தை நீக்கினாராம்.

(4) நரசிங்காவதாரம்:—ஹிரணியகசியபனென்னும் அசுரன் தபசுசெய்து பிரம்மாவினிடம் பெற்ற வரப்பிரசாதத்தினால் மூன்று லோகங்களையும் வென்று ஒப்புயர்வற்றவனாகத் தேவர்களை ஹிம்ஸித்து அப்புவியில் அரியின் பெயரை யனுஷ்டிக்காதவண்ணம் அரசு செய்கையில், அவன் மனைவி லீலாவதி வயிற்றில் ஜனித்த பிரகலாதர் என்பவர் விஷ்ணு பக்தராய் நாராயணாவென்று பஜித்ததற்கு அந்தப் பக்தனுக்கு அந்த அசுரன் அநேக இம்சைகளைச் செய்தும் அவன் இறவாமையினால், நீ பஜிக்கும் அரி இக்கற்றூணி லிருப்பனோ என, அச்சமயத்தில் விஷ்ணு: நரசிங்காவதாரமாக வந்து அவ்வசுரனைக் கொன்று தேவர் ரிஷிகள் ஆகியோருடைய கஷ்டங்

களை நீக்கினாராம். மேற்சொன்ன நான்கு அவதாரங்களுக்குத் தாய் தந்தை யில்லை. சத்யயுகத்தி லெடுக்கப்பட்டனவாம்.

(5) வாமனாவதாரம்:—திரேதாயுகத்தில் மாவலி யென்னும் அசுரன் தவப்பயனால் மூவுலகங்களையும் பெற்று அல்லோலகல்லோலமாக ஆண்டுவருகையில், விஷ்ணுவானவர் ஒரு குள்ள பிராமணராக அவதரித்து, அந்த மாவலியிடஞ் சென்று மூன்றடி நிலம் பிச்சை கேட்க, அவனுங் கொடுக்கச் சம்மதித்த அளவில், பூமி மத்திய பாதாளத்தை ஈரடியாக அளந்து, மற்றொரு அடிக்கு அவன் தலைமீது பாதத்தை வைத்து மிதித்து அவனைச் சொர்க்கலோகத்திற் சேர்த்தாராம்.

(6) பரசுராமாவதாரம்:—மேற்படியுகத்தில் க்ஷத்திரியர்கள் பிராமணர்களை வருத்தியதால், அவர்களை 21-வம்சம் வரையில் விருத்தியாக்காமற் றடுக்க, பிரம்மகுல பிருகுவம்ச ஜமதக்னியாருடைய மனைவி ரேணுகை வயிற்றிலிருந்து அவதாரமெடுத்தாராம். பரசு=கோடாலி.

(7) இராமாவதாரம்:—திரேதாயுகத்தின் முடிவில் இராவணாதி ராக்ஷதர்கள் செய்யும் அக்கிரமங்களை யடக்க, அயோத்தி தசரத சக்கிரவர்த்தி மனைவி கௌசல்யாதேவிக்கு சுதனாக அவதாரஞ் செய்தாராம். இவருக்குத் தம்பிமார்கள் இலக்ஷ்மணர், பரதர், சத்துருக்கர்.

(8) கிஷ்ணாவதாரம்:—துவாபரயுகத்தின் முடிவில் கம்சன் செய்யுங் கொடுங்கோன்மையை யடக்க வசுதேவ, தேவகி யென்பவர்களுக்கு எட்டாவது பிள்ளையாக அவதரித்து அவனைக் கொன்றதுமன்றி, பாண்டவர்க்குச் சகாயஞ்செய்து பூமி பாரந் தீர்த்தருளினாராம்.

(9) புத்தாவதாரம்:—கலியுகத்தில் காசிமாநகரி லாண்டிவோதத்தனை சிவபக்தி, ஜாதி, குலம், தேவபக்திகளினின்று நீக்க விஷ்ணுவானவர் அவதாரஞ் செய்ததாகச் சொன்னாலும் பின்னும் பலர் பலவிதமாகச் சொல்லுவார்கள்.

(10) கல்கியவதாரம்:—இனிமேல் துஷ்டர்களைக் கண்டிக்க, புருஷமுகமுங் குதிரை தேகமு மாகக்கையிற் கடகத்தை யேந்தி அவதாரஞ் செய்வாராம்.

இப்படி மஹாவிஷ்ணுவானவர் எடுத்த பல அவதாரங்களில் தசாவதாரங்கள் சிறந்தவைகளாகச் சொல்லப்பட்டாலும், இராமாவதாரம் கிருஷ்ணாவதாரங்களே சகலராலுஞ் சிறந்தவைகளாகக் கொண்டாடப்பட்டு வருகின்றன. இவ்விரண்டு அவதாரங்களைப்பற்றி பாகவதம், பாரதம், இராமாயணாதி கிரந்தங்களில் வியாசர், பராசரர் வால்மீகி முதலான மஹாத்துமாக்களாற் பலவிதமாகப் புகழப்பட்டிருக்கின்றன.

இதுநிற்க, கலியுகம் ஆரம்பிக்கவே, முற்கூறிய வியாச பராசராதி மஹாத்துமாக்களைப் போன்றவர்கள் அவதரிக்காவிட்டாலும் ஆழ்வார் ஆசாரியர் என்ற அநேக சிறந்த பக்திமான்களும், புத்திமான்களும் ஜனித்து வைணவத்தைப் பலவிதமாகப் பிரகாசிக்கச் செய்தார்கள். அவ்விதம் பக்தி மார்க்கத்தை ஸ்தாபித்தவர்கள் இந்துதேசமெங்கும் பரவிப் பலவகுப்பினராஞர்கள். அவ்வகுப்பினர்களில், நிம்பார்க்கார், மாத்துவாசாரிகள், வல்லபாசாரிகள், இராமாநுஜர்கள், இராமநந்தர்கள், சைதன்னியர்களென ஆறு வகுப்பினர்களே சிறந்தவர்கள். இவ்வகுப்பாரி லொரு வகுப்பினராகிய இராமாநுஜ கோஷ்டியார், இந்தத் தக்ஷிணதேசத்தில் முதலில் ஸ்தாபிக்கப்பட்ட பிரபலமான பக்திமான்களாஞர்கள். இந்த வைஷ்ணவ பக்திமார்க்கத்தைத் தென்தேசத்தில் ஸ்தாபித்தவர்களுக்கு ஆழ்வார்களென்றும், ஆசாரியர்களென்றுஞ் சொல்லப்படும். இவர்கள வேதத்தின் கருத்தைத் திராவிட வேதமென்று தமிழில் பல்லாயிரம் பாசுரங்களாகப் பாடியிருக்கின்றனர். இவர்களுக்குள் பல வருணத்தார்களிருப்பதால், பக்திமான்களுக்குள் முற்காலத்தில் ஜாதிபேதம் பாராட்டப்படவில்லையென்று தோன்றுகிறது இதற்கு திருஷ்டாந்தமாக: மேல்கோட்டை முதலான விடங்களில் பறையர் சக்கிலியர் முதலாகிய கீழ்ஜாதியார்கள் கர்ப்பக்கிரகம் கல்யாண தீர்த்தம் முதலான பரிசுத்தவிடங்களில்போய் ஸ்வாமியைத் தொழுதுவருவது பிரத்தியட்சம். விஷ்ணுபக்தியிற் சிறந்த மஹான்களுக்கே ஆழ்வார் ஆசார்யர்களென்று பெயர்.

## ஆழ்வார்கள்.

(1) பொய்கை ஆழ்வார்:— துவாபரயுகம் 8,62,902-ல் சித்தார்த்திரிஸ ஐப்பசி மீ பிறந்தவர். இவர் ஆழ்வார்களில்

முதன்மையானவராகவும், விஷ்ணுவின் ஆயுதமாகிய சங்கே அவதாரமாகக் காஞ்சிபுரத்தில் ஒருதடாகத் தாமரையிலிருந்து எழுந்தருளினதாகவும், வேதங்களின் கருத்துக்களைத் திருமுறையாகச் செய்ததாகவும் சொல்லுகிறார்கள்.

(2) பூதத்தாழ்வார்:—இவர் முற்கூறிய ஆழ்வார் பிறந்த மறுதினம் தொண்டைமண்டலத்தில் திருக்கடன்மல்லையில் விஷ்ணுவின் முத்திரைக்கோலே யவதாரமாக ஜனித்து, திருமுறையைச் சார்ந்த நூறு பாடல்களையும், வேறு சில செய்யுள்களையுஞ் செய்தாராம்.

(3) பேயாழ்வார்:—இவர் முற்கூறிய ஆழ்வாருதித்தமறு நாள் சென்னைமாநகருக்கடுத்த மைலாப்பூரில், விஷ்ணுவின் ஆபரணமே யவதாரமாக வந்து, திருமுறையைச் சார்ந்த நூறு பாடல்களைப் பாடினாராம்.

(4) திருமழிசை ஆழ்வார்:—இவர் திருமழிசை யென்னுமிடத்தில் முதலாழ்வார்கள் ஜனித்த யுகவுரு தைமாதம் பார்க்கவர் மனைவி வயிற்றில் விஷ்ணுவின் சக்கரமே யவதாரமாக அவதரித்து, திருவாளனென்னும் வேடனால் பிரம்புப் புற்றிலிருந்தெடுத்து வளர்க்கப்பட்டு, கற்றுத் தெளிந்து பல சமயங்களைத் தழுவின பின்பு வைணவராகி 4,700வரு வாழ்ந்து நான்முகனந்தாதி, சந்தவிருத்தம் இயற்றிய தன்றியில், அடுத்த திவ்ய ஸ்தலங்களின்பேரி லநேக பாசுரங்களைப் பாடினார்.

(5) நம்மாழ்வார்:—கலியுகம் பிறந்த 43-ம் நாளில் பிரமாதிவரு வைகாசிமீ சுக்கிரவாரத்தில் தென்னாட்டிற் சிறந்த திருக்குருகூரில் காரியென்பவர் மனைவியுடைய நங்கையின் வயிற்றில் சேனைமுதலியாரே நம்மாழ்வாராக அவதரித்து, திருவாய்மொழி,திருவிருத்தம்,திருவந்தாதிமுதலான திவ்யப் பிரபந்தங்களை யருளி விஷ்ணுவோடு வைகுண்டத்தைச் சார்ந்தார்.

(6) மதுரகவியாழ்வார்:—துவாபரயுகம் 8,63,879-ல் ஈஸ்வரவரு சித்திரைமீ ஒரு புரசூட பிராமணருடைய மனைவி வயிற்றில் பிறந்து, திவ்விய தேசங்களைச் சேவித்து, கண்ணிநுண் சிறுத்தாம்பு முதலான கிரந்தங்களையியற்றி நம்மாழ்வார் வைபவத்தை விருத்தியாக்கினார்.

(7) குலசேகராழ்வார்:—மலையாள தேசமாகிய கேரள தேசத்தில் வஞ்சிவேந்தன் மனைவி வயிற்றில் கலியுகம் பிறந்த 28-ல் பராபவஞ்டு மாசிமீ வெள்ளிக்கிழமைய தினம் விஷ்ணுவின் ஆபரணமே யவதாரமாக வந்து, பக்தியினால் பாம்புக் குடத்தில் கைவிட்டும், ஸ்ரீரங்கம் முதலான திவ்ய க்ஷேத்திரங்களைச் சேவித்தும், உபயகவியெனப் பெயர்பெற்றும், அநேக ஸம்ஸ்கிருத திராவிட கிரந்தங்களையும் இயற்றினார்.

(8) பெரியாழ்வார்:—ஸ்ரீ வில்லிபுத்தூரில் முகுந்தாசாரியர் மனைவி பதுமைவயிற்றில் கலியுகம் 47-வதான குரோதனவருடம் ஆனிமாதம் கருடபகவானே யவதாரமாக ஜனித்து, அநேகம் குளம் குட்டை நந்தவனங்களை யுண்டாக்கி, அவற்றிலுண்டாகும் புஷ்பங்களைக் கொய்து மாலைகளாகக் கட்டிப் பெருமாளுக்குச் சாத்திவரும்போது, பாண்டியநாட்டார் உண்மையான மதத்தை ஸ்தாபிக்கப் பொற்கிழியைக் கட்டிச் சகல மதஸ்தர்களையுந் தருவித்து மேற்படி கிழியை யறுக்கச் சொல்ல, சமணர் சாக்கியர் சைவர் ஆகியவர்களால் முடியாமல் பெரியாழ்வார் அதைத் தமது பக்திபலத்தினால் அறுபட்டு விழச்செய்து, விசிஷ்டாத்வைதத்தை ஸ்தாபித்தார். பிறகு பல்லாண்டு முதலான 473-பாமாலைகளையுஞ் செய்தருளினார்.

(9) ஆண்டாள்:—இந்த அம்மையார் கலியுகம் 97-க்கு மேல் நளவருடம் ஆடிமாதம் பெரியாழ்வாருடைய நந்தவனத்திலிருக்குந் துளசிச்செடியின்கீழ் இலக்குமி அம்சமே பெண்ணுருவாக ஜனித்து ஷை பெரியாழ்வாரால் வளர்க்கப்பட்டுவரும்போது, ஷை ஆழ்வார் தொடுத்துவைத்த பூமாலைகளை இந்த அம்மையார் முதலில் தன் கூந்தலிற் சூடி யழகு பார்த்துப் பிறகு பெருமாளுக்கு அனுப்புகையில், அம்மாலைகளில் மயிர் முதலானவைகளிருக்கக்கண்டு அர்ச்சகர் ஆழ்வார் முதலானவர்களும் விசனப்படும்போது,விஷ்ணு மேற்படியார் சொப்பனத்திற்போய், சூடிக்கொடுத்த புஷ்பங்களே தமக்கு உவப்பானவைகளென்று சொல்ல, அவர்கள் மகிழ்ந்து அந்த அமமையாரை ஸ்ரீரங்கருக்கு விவாஹஞ் செய்து வைத்தார்கள். இந்த அம்மையாருக்கு நாச்சியார், கோதை, சூடிக்கொடுத்தாள் என்னும் பெயர்களுமுண்டு. திருப்பாவை முதலான நூல்களை இயற்றியவர் இந்தம்மையே.

(10) தொண்டரடிப்பொடியாழ்வார்:— திருமண்டங்குடியென்னும் நகரத்தில் கலியுகம் 289-ல்,பிரபவவருடம் மார்கழி மாதம் செவ்வாய்க்கிழமை ஜனித்து, பருவம் வந்தபோது கல்வியைக் கற்று விவாஹஞ் செய்துகொண்டார். பிறகு விஷ்ணுபக்தியினால் உலக ஆடம்பரங்களை வெறுத்து, திருமாலை, திருப்பள்ளியெழுச்சி முதலிய கிரந்தங்களை யியற்றி அழகிய மணவாளனோடு சேர்ந்தார்.

(11) திருப்பாணாழ்வார்:—கலியுகம் 342-ல் தர்மதிவருடம் கார்த்திகைமாதம் புதன்கிழமை உறையூருக் கருகிலிருக்குஞ் செஞ்சாலிப் பயிரினிடமாக நெற்கதிரில் ஜனித்துப் பாணரால் வளர்க்கப்பட்டார். இவர் வீணை வாசிப்பதில் வல்லவராகையால் விஷ்ணுபிரான் மகிழ்ந்து இவர் ஜாதிக்குறைவைப் பாராட்டாமல் சிறந்த பக்தராக்கிக்கொண்டார். இவர் அமலனாதியென்னும் பாசுரங்களைப் பாடியருளினார்.

(12) திருமங்கையாழ்வார்:— திருவாலிக்கடுத்த திருக்குறையிலூரில் கலியுகாதி 397-ல், நளவருடம் கார்த்திகைமீ வியாழக்கிழமை ஸ்ரீசாரங்காம்ஸமே உருவாக ஜனித்து, பலவித வில் வித்தைகளைக் கற்று, குமுதவல்லியென்னும் தேவகன்னிகையை இச்சித்து, அக்கன்னிகையின் விஷயமாக சைவ மதத்தை விட்டொழித்து வைணவராகி அந்தக் கன்னிகையை விவாஹஞ் செய்துகொண்டார். பிறகு அந்தக் கன்னிகையின் இஷ்டப்படி சேர சோழ பாண்டிய இராச்சியங்களில் கொள்ளை யடித்துக் கிடைத்த பொருளால் வைணவ சத் கைங்கரியங்களைச் செய்துகொண்டு வருகையில், ஒருநாள் மஹாவிஷ்ணுவே பரிசோதனைக்குவந்து வேடம்பூண்டு நிற்க, அவர்காலிலிருந்த மோதிரத்தை வாயாற்கவ்விக் கடித்திழுக்க ஞானம் உண்டாகி, அநேக திவ்ய தேசங்களைத் தரிசித்துத் திவ்ய கவிகளைப்பாடி ஸ்ரீரங்கத்தில் கோபுரமதில்களைக் கட்டி யானந்தமடைந்தார்.

## தென்தேசத்தின் வைணவபாகவதர் அல்லது ஸ்ரீ வைணவாசாரியர்கள் சரிதம்.

(1) பெரியபெருமாள்,(2) பெரியபிராட்டியார், (3) சேனை முதலியார், (4) நம்மாழ்வார் இந்நால்வரும் தம்தம் அடிகளாலே

ஆச்ரயித்தவர்களாம். ஸ்ரீ மதுரகவிகள் நம்மாழ்வார் திருவடிகளில் ஆச்ரயித்தார்.

## 5. ஸ்ரீமந் நாதமுனிகள்.

இவர் கலி 3648-ல் சோபகிருது வருஷம் ஆனிமீ சுக்கில திரையோதசி, புதன்கிழமை, ஈசுவர பட்டாழ்வாருக்கு வீர நாராயணபுரத்தில் ஜனித்தும், கல்வி கற்றும், வங்கீபுரத்தாச்சியார் குமாரத்தி அரவிந்தத்தை மணந்தும், பல திவ்வியதேசங்களை சேவித்தும், திவ்வியப் பிரபந்த காலக்ஷேபத்தைப் பிரபலப்படுத்தியும், தமது 340-வது வயதில் பரமபதமடைந்தார். இவருடைய முக்கியமான சீடர்கள்: மணக்கால்நம்பி, திருவல்லிக்கேணி, பாண்பெருமாளரையர், சொட்டைநம்பிச் செண்டலங்காரர், புண்டரீகதாசர், உலகுபெருமாள், நங்கை முதலான பத்துப் பெயர்களாம். வைணவ ஆழ்வார்களுக்குப் பிறகு அவர்களின் பெருமையைப் பிரபலப்படுத்தியவர்களில் முக்கியர் இவரேயாம்.

## 6. ஆளவந்தார் (யமுநாசாரியர்).

இவர் வீரநாராயணபுரத்திலிருந்த ஸ்ரீ நாதமுனிகளின் குமாரராகிய ஈசுவரமுனிகளுக்கு கலி 4117-ல் தாது வருஷம் ஆடிமீ பவுர்ணமி, புதன்கிழமை பிறந்து, கல்வி கேள்விகளிற் சிறந்தவராகி, அத்தேச அரசன் புரோஹிதரான ஆக்கியாழ்வானைக் கல்வியினால் ஜயித்து, அந்த அரசன் மனைவியால் ஆளவந்தார் என்ற பெயரையும், அரசனால் இராஜ்ஜியத்தில் அரைபாகமும் பெற்று வாழும் நாளில், மணக்கால்நம்பியால் ஞானோபதேசம் பெற்று, விஷ்ணுமதத்தைப் பிரபலமாக்கி, தமது 120-வது வயதில் பரமபதமடைந்தார். இவர் ஆத்மசித்திஸம், வித்சித்தி, ஈசுவரசித்தி, ஆகமபிரமாணியம், புருஷவிலக்ஷணம், சதுசுலோகி, கீதார்த்தசங்கிரகம், ஸ்தோத்திரரத்தினம், தமிழ் ஞானவாசிஷ்டம், மாயவதாகண்டன முதலான பிரபந்தங்களை இயற்றியவர். இவருடைய முக்கியமான சிஷ்யர்கள்: பெரியநம்பி, திருக்கோட்டியூர்நம்பி, பெரிய திருமலைநம்பி, மாறனேர்நம்பி, திருக்கச்சிநம்பி, ஆளவந்தாழ்வான், திருமலையாண்டான், வானமாமலையாண்டான், தெய்வாரியாண்டான், ஈசாண்டான், திருக்குருகூர் கூரப்பன், மோகூர்நின்றான், தெய்வப்பெருமாள், குருகூர்தாசர், திருமா

லிருஞ்சோலைதாசர், திருவரங்கத்தம்மையன் ஆகிய பதினறு பெயர்களாம்.

தென்தேசத்தின் வைணவர்களில் சிறந்தவர்கள் அநேகர் இருக்கினும் இவர்களிற் சிறந்தவர் : ஸ்ரீ ராமனுஜாசாரியர் ஆகையால், அவருடைய சரித்திரத்தை மாத்திரம் இங்கு எழுதுகிறோம்.

## 7. ஸ்ரீ இராமாநுஜாசாரியார் சரித்திரம்.

பௌத்தர்ஜயினர்சாக்தேயர்களாலும், ஸ்ரீசங்கரருடைய ஸ்வரூப அத்வைத மதஸ்தர்களாலும், இத்தேசத்துக் குடிகள் மயங்கித் தத்தளித்துத் தவிக்கும்போது, அவர்களுக்குச் சமரசஞான சுலபசித்தாந்தத்தை ஸ்தாபித்து,நிம்மதியல்லது சாந்தமான வாழ்வைக்கொடுக்க எந்த அவதாரபுருஷர் ஜனிப்பரோ என்று ஏக்கங்கொண்டிருக்குங் காலத்தில், ஸ்ரீ இராமாநுஜாசாரியார் சென்னையம்பதிக்குச் சுமார் 26 - மைல் தூரத்திலுள்ள ஸ்ரீ பெரும்பூதூரில் (கி. பி. ஒன்பதாம் நூற்ருண்டில் அல்லது) கலியுகம் 4118 ஆகிய பிங்கள வருஷம், சித்திரைமாதம், சுக்கிலவாரத்தில், பிராமண குலத்தாராகிய ஸ்ரீ ஆசூரிகேசவாசாரியார் மனைவி பூதேவியாருடைய வயிற்றில் அவதரித்து, காஞ்சீபுரத்திற் கல்வியைக் கற்று,வைணவ சமயத்தை உலகப்பிரசித்தம் செய்யப் பிரவேசித்தார். இவர் அழகுள்ளவரும் ஆஜாநுபாவருமாயிருந்தார். பல தேசங்களைப் பார்த்தவர். இவர் பெருமையை யறிந்த அக்காலத்துச் சிறந்த வித்வானகிய யாமுனசாரியார் என்னும் ஆளவந்தாருடைய முக்கிய கருத்தை நிறைவேற்ற முதலில் திரிசிரபுரத்துக்கடுத்த ஸ்ரீரங்கத்திற்குச்சென்று அரங்கநாதரைச் சேவித்துச் சில கிரந்தங்களைச்செய்தார். பிறகு திவ்ய தேசங்களுக்குச் சென்று, பெருமாள் தரிசனம்செய்துகொண்டு,அக்காலத்தில் நாட்டில் மலிந்திருந்த மாயாவாதஸ்வரூப அத்வைதத்தினல் மயங்கித் தவிக்கும் ஜனங்களைச் சீர்திருத்தியதோடு, சமணர், சாக்கியர், பௌத்தர் முதலான சமயத்தாரோடு வாதஞ்செய்து வெற்றிபெற்றும், அக்காலத்துச் சைவர்களிலநேகரை வைஷ்ணவராக்கினர். திருப்பதி ஸ்தலத்தை வைணவஸ்தலமாகச் சிறப்பித்தும், மறுபடியும் ஸ்ரீரங்கத்துக்

குத் திரும்பிவந்தபோது வைணவர்களுக்கும் சைவர்களுக்கும் உக்கிரமான வாதங்கள் நடந்துவந்தன. அக்காலத்திலிருந்த கரிகாலசோழனும், அவனுக்குப்பின் வந்த கிருமிகண்டசோழனும் சைவசமயத்தாராகையால். அவர்களுடைய இராஜ்யத்திலிருந்த வைணவர்கள் எல்லாரையு மிரட்டிச் சிவபெருமானுக்குப் பரத்துவமுண்டெனக் கையெழுத்துப் போடச்சொல்ல, அவர்க ளுட்படாமையால், இராமாநுஜரைப் பிடித்துவரும்படி சேனைகளை யனுப்பினார்கள். ஆனால், அவர் தமது சீடர்களுடைய உதவியினால் அகப்படாமல், கணவாயேறி மைசூரில் ஜைநர் வேளாள சமையராஜனாகிய விட்டல தேவராஜாவின் ஆதினமானார். அங்கு அந்தராஜாவின் புத்திரிக்குக் கண்டிருந்த வியாதிகளை நீக்கியும், பிடித்திருந்த பிரம்மராக்ஷதனை யோட்டியும், அவ்வரசனை வசமாக்கி அவரை வைணவ சமயத்தை யனுஷ்டிக்கச் செய்தும், விஷ்ணுவரதனென்ற பெயரையுமிட்டார். மேலும் யாதவகிரிஎன்னும் மேல்கோட்டையில் அரசனால் கட்டப்பட்ட கோயிலில் பன்னிரண்டுவருஷமிருந்து, பிறகு இவருடைய விரோதிகளாகிய சோழராஜர்கள் இறந்த சங்கதி தெரிந்து, ஸ்ரீரங்கத்துக்கேவந்து தமது ஆயுள்காலம்வரையில் வைணவத்தை விருத்தியாக்குவதிலேயே விடாமுயற்சிகளைச் செய்துவந்தார். இவர் விவாஹஞ் செய்துகொண்டு இல்லறத்தைச் சார்ந்தவராகச் சிலநாள் கழித்தும், தமது மனைவியார் தமதிஷ்டப்படி நடவாமையால் சந்நியாசத்தைத்தழுவினர். இவர்பெரியநம்பி, யாதவபிரகாசர், திருக்கச்சிநம்பி முதலானவர்களால் கற்றுத்தெளிந்து, பகவத்போதாயினர், திரிமிடாசாரியார், டங்காசாரியார், குஹதேவர், ஆசாரியபாருசி, ஆசாரியகுபவத்தி, நாதமுனிகள், யாமுனாசாரியார் ஆகியவர்களுடைய கிரந்தங்களினால் விசிஷ்டாத்துவைத சித்தாந்தத்தை யறிந்தும், பிறகு திருக்கோட்டியூர்நம்பிகளிடம் பலவித கஷ்டங்களுக்குட்பட்டு சரமசுலோகார்த்தாதி இரகஸியாதி தத்துவங்களையும் கற்றுத்தெளிந்தும், ஸ்ரீசம்பிரதாயமென்னும் கோட்பாட்டை கி. பி. 1150-ம்வரு ஸ்தாபித்தார். பார்க்கவ புராணத்தின்படி இவர் ஆதிசேஷனை யவதாரமாகவந்தாரென்று சொன்னாலும், கனரா தேசத்தில் இவர் சரித்திரம் திவ்விய சரித்திரமாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. ஸ்ரீரங்கம் முதலான திவ்வியஸ்தலங்களி லிப்போது நடக்கும் நித்திய நைமித்திய உற்சவங்களை இவரே கர்த்தராகவிருந்து நிய

மித்தார். நானே பிரம்மமென்ற ஸ்வரூப அத்வைத சித்தாந்தத்தைக் கண்டித்து, விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தை ஸ்தாபித்து, வியாசர் பிரம்மசூத்திரங்களுக்கு ஸ்ரீ பாஷ்யம் முதலான கிரந்தங்களை எழுதினார். இந்த விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தைப்பற்றி எனது ஆஸ்திகமத சித்தாந்த நூலில் விவரமாகச் சொல்லப்பட்டிருப்பதால் வாசித்துப்பார்த்தால் தெரியவரும். இராமாநுஜர் காலத்தில் பிராமண ஜாதிகுலங் கட்டுப்பாடுகள் பலவிருந்தாலும், விஷ்ணுவை வணங்கும் வைணவர்களுக்குள் ஜாதி பேதத்தை நீக்கி, மேல்கோட்டையில் சக்கிலியர், பறையர் முதலானவர்கள் அபேதமாகக் கோயிலுக்குள் நுழைந்து வணங்கிவரவும், திருமந்திராதி இரகசியங்களை சகல ஜாதியாரும் அறியும்படி பகிரங்கப்படுத்தியும், சகலரும் சமரசமாக சர்வசுவாமியை வணங்கச் சுதந்திரமுண்டென ஜாதி பேதத்தைக் கண்டித்தார். இவர் இளையாழ்வார், எதிராஜர், எம்பெருமானார், உடையவர் என்ற பல பெயர்களால் புகழப்படுகின்றார். இவர் வைணவத்தைப் பரவச்செய்ய ஹிமஸ்சேதுவரையிலுள்ள திவ்விய தேசங்களுக்குப்போய், வித்வான்களோடு வாதஞ்செய்து ஜயித்தும், அவர்களை வைணவர்களாக்கியும்காஸ்மீரதேசத்தில்ஸ்ரீசாரதா பீடமேறி ஸ்ரீ பாஷியகாரர் என்னும் பெயரைப்பெற்றும், டில்லி பாதுஷாவினிடம் செல்வப்பெருமாளைப் பெற்றும், அநேக புது திவ்விய ஸ்தலங்களை ஸ்தாபித்தும், ஸ்ரீ வியாச சூத்திரங்களுக்கு ஸ்ரீ பாஷ்யம், வேதாந்ததீபம், வேதாந்த சாரம், வேதாந்த சங்கிரகம், கீதாபாஷ்யம், கத்தியத்திரயம், நித்தியகிரந்தம் முதலான அநேக கிரந்தங்களை இயற்றியருளினார். பிறகு தமது சமரசமான வைணவ சித்தாந்தத்தை உலகில் பிரபலமாக்கும்படி 74 - சிம்ஹாசனாதிபதிகளென்னும் ஆசாரிய புருஷர்களை நியமித்தார். அவர்கள் யாவர்களென்னில்:—

## எழுபத்துநான்கு சிம்ஹாசனாதிபதிகள்.

(1) ஆளவந்தார் குமாரர் சொட்டை நம்பி.
(2) பெரியநம்பி குமாரர் புண்டரீகாக்ஷன்.
(3) திருக்கோட்டியூர் நம்பி குமாரர்தேகக்காழ்வான்
(4) சுந்தரத்தாளுடையார்.
(5) திருக்குருகைப்பிரான்.
(6) திருமலைநம்பி.
(7) கூரத்தாழ்வான்.
(8) ஷையார்குமாரர் பராசர பட்டர்.

(9) சீராமபிள்ளை.
(10) முதலியாண்டான்.
(11) நடாதூராழ்வான்.
(12) எங்களாழ்வான்.
(13) நடுவிலாழ்வான்.
(14) கோமடத்தாழ்வான்.
(15) திருக்கோயிலாழ்வான்.
(16) திருமோகூராழ்வான்.
(17) பிள்ளையாழ்வான்.
(18) அநந்தாழ்வான்.
(19) மிளகாழ்வான்.
(20) நெய்யுண்டாழ்வான்.
(21) சேட்டலூர் சிறியாழ்வான்.
(22) வேதாந்தியாழ்வான்.
(23) கோயிலாழ்வான்.
(24) உக்கலாழ்வான்.
(25) அரணபுரத்தாழ்வான்.
(26) எம்பார்.
(27) கிடாம்பியாச்சான்.
(28) சிறியயாச்சான்.
(29) கோங்கிலாச்சான்.
(30) ஈச்சம்பாடியாச்சான்.
(31) திருமலைநல்லான்.
(32) வங்கீபுரத்தாச்சான்.
(33) திருக்கண்ணபுரத்தாச்சான்.
(34) சிறிய கோவிந்தப் பெருமாள்.
(35) கிடாம்பிப்பெருமாள்
(36) அம்மங்கிப்பெருமாள்.
(37) ஆகுரிப்பெருமாள்.
(38) பிள்ளையப்பன.
(39) வங்கிபுரத்துநம்பி.
(40) முடும்பைநம்பி.
(41) பராங்குசநம்பி.
(42) திருக்குடுங்குறிநம்பி.
(43) தொண்டனூர்நம்பி.
(44) அருணபுரத்துநம்பி.
(45) மருதூர்நம்பி.
(46) மழையூர்நம்பி.
(47) வடுகநம்பி.
(48) குரவிநம்பி.
(49) கந்தாடையாண்டான்.
(50) கோமாசியாண்டான்.
(51) ஜயராண்டான்.
(52) ஈசாண்டான்.
(53) பெரியாண்டான்.
(54) சிறியாண்டான்.
(55) அம்மங்கியாண்டான்.
(56) ஆளவந்தாராண்டான்.
(57) உக்கலம்மாள்.
(58) பருத்திக்கொல்லையம்மாள்.
(59) வைத்தமணுதியார்.
(60) தேவராஜபட்டர்.
(61) பிள்ளையுறைந்த உடையார்.
(62) திருவாய்மொழியரையர்
(63) நறையூரரையர்.
(64) இராசேந்திரபெருமாள்.
(65) அதிகாரிபிள்ளை.
(66) திருநகரிபிள்ளை.
(67) ஆரக்காட்டுப்பிள்ளான்
(68) குமாண்டூர்பிள்ளான்.
(69) அநந்தகோமயாதி.
(70) காஞ்சிசோமயாஜி.
(71) அலங்காரவேங்கடன்.
(72) காஞ்சிசிறியாண்டான்.
(73) இளையவல்லி.
(74) மாருதியாண்டான் என்பவர்களாம்.

இவர்களன்றியில்,

## ஜீயர்கள்.

ஸ்ரீரங்கநாராயணஜீயர், ஈச்சம்பாடிஜீயர், கோவிந்தஜீயர், சட்டைபள்ளிஜீயர், திருமழிசைஜீயர், திருவெள்ளரைஜீயர், திருப்புட்குழிஜீயர், ஆட்கொண்டவல்லிஜீயர், திருமாலிருஞ் சோலைஜீயர் முதலான ஜீயர்களும், 700 நம்பி குருந்தேவ பரமேகாந்திகளும், 12000 தாயமுனி முதலான கைங்கரிய பர்களும், திருவரங்கமாயோன் காவலதிகாரிகளும், பிள்ளை யுறங்காவல்லி முதலான தாசர்களும், திருவனந்தபுரத்தம்மை முதலானவர்களும் இவ்வுடையவருடைய காரியங்களைச் செய் துவந்தனர். இப்படி சமரச உத்தாரணம் செய்துவந்த இந்த உத்தமர் தமது 120-ம் வயதில் சகாப்தம் 1059-ஆ பிங் களவருஷம் மாசிமாதம் சுக்கிலதசமி திருவாதிரைதினம்பரம பதமடைந்தார்.

## மணவாளமாமுனிகள்.

இவர் கலியுகாதி 4472-வது வருஷம் சாதாரணஆ ஐப்பசிமீ சுக்லபக்ஷம் சதுர்த்தசி வியாழக்கிழமைய தினம் ஜனித்து சிக்கில்கெடாரமென்கிற கிராமத்தில் வளர்ந்துவர், தகப்பனார் இவருடைய அழகைக்கண்டு அழகியமணவாள னென்றுபெயரிட்டு, சம்ஸ்கிருதம்தமிழ்ஆகியஇருபாஷைகளை யும்வழுவரக் கற்றுத்தெளிந்து, 32-இலக்கணங்களைத்தெரிந்த வரென்ற பெயரையும் புகழையும் பெற்றார். பிறகு செஞ்சிக் குப் போய் அங்கு மகமதியர் பயத்துக்காக மறைத்துவைத் திருந்த ஸ்ரீ ரங்கநாதர் உற்சவ விக்கிரகத்தை மறுபடியும் ஸ்ரீ ரங்கத்துக்கே கொண்டுவந்து சேர்த்தார். பிறகு உடையவ ருடைய திருவடிகளைப் பெற்று, யதிராஜவிம்ஸதி என்னும் கிரந்தத்தை இயற்றினார். அதனால் திந்திரபிரணவர் என்ற பெயருமுண்டாயிற்று. அப்போது இவருக்கு முக்கிய சிநே கிதராயிருந்தவர் திருவாய்மொழிப்பிள்ளை என்பவர். அந்த திருவாய்மொழிப்பிள்ளை திருமொழி வியாக்கியானம், ஸ்ரீ வசனபூஷண வியாக்கியானம், வியாப்தி அநுசந்தானம் முத லான கிரந்தங்களை இயற்றி வைகாசிமாதம் வைகுண்ட மடைந்தார். பிறகு பெரியஜீயரென்னும் அழகிய மணவாள மாமுனிகள் அநேக திவ்விய தேசங்களைத் தரிசித்தும், அநேக ரை வைணவ சமயத்தைத் தழுவும்படிசெய்தும், சில வை ணவ ஆசாரியமடங்களை ஸ்தாபித்தும் வந்ததன்றியில் அநேக கிரந்தங்களையும் இயற்றினார். அவற்றுள் இரகசிய த்ரய வியாக்

கியானம், தத்துவத்ரய வியாக்கியானம், ஸ்ரீ வசனபூஷண வியாக்கியானம், ஆசாரிய ஹிருதய வியாக்கியானம், பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானம், நூற்றந்தாதியுரை, ஞானசாகர வியாக்கியானம், பிரமேயசார வியாக்கியானம், ஏழுபாட்டு வியாக்கியானம், கீதாதாத்பரியதீபம், தத்வத்ரயத்திற்குப்பிரமாணத்திரட்டு, மூப்பத்தாறுபிரப்படிக்குப் பிரமாணத்திரட்டு, உபதேசரத்நமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, யதிராஜவிம்சதி, இயல்சாற்று, ஆர்த்திப்ரபந்தம், தனிக்கவி, விடுதிசுலோகங்கள் முதலானவை சிறந்தவையாம். அப்போது இவரைச் சூழ்ந்திருந்த வானமாமலைஜீயர், கோயில் கந்தாடையண்ணன், எறும்பியப்பன், திருமலையெம்பெருமானர்ஜீயர், பட்டர்பிரான்ஜீயர், அப்பிள்ளை, அப்பிள்ளான், பிரதிவாதிபயங்கரயன்னன் ஆகிய எண்மரும் அஷ்டகஜங்களாவர். இவர் உடையவராகிய ஸ்ரீராமாநுஜருக்குப் பிரதிநிதியைப்போல் அவதரித்து, அவர் கருத்தை வெளியாக்கி, தமது 73-வது வயதாகிய உருத்ரோத்காரிஞு மாசிமீ கிருஷ்ண பக்ஷம் துவாதசி திருவோணத்தில் பரமபத மடைந்தார். வைணவ தென்கலை வகுப்பாருக்குள் இவர் சிரேஷ்டராவர்.

இவ்விதம் தக்ஷணதேசத்தில் வைணவ மதத்தைப் பன்னிரெண்டாழ்வார்களும் 12-ஆசாரியர்களும் ஜனித்து, தமது கல்விகேள்விகளினால் பிரபலப்படுத்திய பிறகு, அம்மதத்தைப் பின்னும் பிரகாசமாக்கப் பல புத்திமான்கள் ஜனித்தாலும், அவர்களில் சிரேஷ்டரும் ஸம்ஸ்கிருதம் தமிழ் பாஷைகளில் மஹா பண்டித சிகாமணியும் சர்வ சுதந்திரரென்றும் பெயரைப்பெற்ற வேதந்ததேசிகரேயாம்.

## வேதாந்தாசாரியர்.

இவர் காஞ்சிபுரத்தில் கலி 4371ஞு - சுக்கில வருஷம் கன்யாமீ தசமி புதன்கிழமை கி. பி. 1600 வருஷத்திற் பிறந்து, வேதசுருதியாதி கருத்துக்களைக்கொண்டு வைணவத்தை வடகலை சம்பிரதாயமாக ஸ்தாபித்து, பல திவ்யதேசங்களுக்குப்போய் வைணவத்தைப் பரிபாலித்து, அநேக தர்க்க தத்துவ கிரந்தங்களை யியற்றினர். அவருடைய கிரந்தங்களில் வியாசராலியற்றப்பட்ட வேதாந்த சாஸ்திரங்களுக்கும், பகவத்கீதைக்கும் சிறந்த பாஷ்யங்களையும் சங்கல்ப சூரியோதயமென்னும் தத்துவ நாடகத்தையும், பரமபததரிசனம் வைராக்கியபஞ்சகம் முதலான அநேக சிறந்தகிரந்தங்களையு

மியற்றி, அநேக திவ்வியதேசங்களைத் தரிசித்து,கடைசியாகத் தமதுமனைவியைப்பெற்றோர்வீட்டுக்கனுப்பிவிட்டுத்தாம்சந்நியாசி ஆச்சிரமத்தை யனுசரித்து,நூற்றுவதுவயதாகியசவுமிய நாமஹு பரமபதமடைந்தார். இவரியற்றிய 121 கிரந்தங்களில் : 32 ஸ்தோத்திரங்கள், 3 காவியங்கள், 28 அனுஷ்டான சாஸ்திரங்கள்,32 இரகசியங்கள,24 சம்பிரதாய பிரபந்தங்கள், 1 பகவத் விஷயமான கிரந்தமாம். இவருக்கு வரதர் என்னும்சீடரொருவரிருந்தார்.காஞ்சிபுரத்தில்16-ம்நூற்றுண்டில் பிறந்த வெங்கிடாசாரியர் என்னும் மகாகவி, சங்கல்ப சூரியோதயம் முதலானவைகளுக்குப் பொருள் எழுதினார்.

இந்த வேதாந்ததேசிகருக்கு முன்னும் பின்னும் சில வைணவர்கள் ஜனித்தாலும், அவர்களில் பெரும்பாலார் கேவலம் கவிவாணர்களேயொழிய வைணவ மகோத்தாரர்களென்று சொல்லப்பொருந்தார். அவர்களில் முக்கியமான சில வித்வான்கள் யாவர்களெனில்:—

## வில்லிபுத்தூராழ்வார்.

இவர் கி. பி. 600-வருஷங்களுக்குமுன் ஸ்ரீ வில்லிபுத்தூரில் ஜனித்து, சேரபூபதியின் விருப்பப்படி பாரதத்தை 4351-கவிகளில் சிறப்பாகபபாடிய புலவர்பெருமான். இவர் குமாரர் மருந்தருவார் அதற்குப் பாயிரம் பாடினார். அருணகிரிநாதரோடு வாதாடியவர் இந்த வில்லிபுத்தூராழ்வாராம்.

## பிள்ளைப்பெருமாள் ஐயங்கார்.

இவர் கி. பி. 15-சகாப்தத்திலிருந்தவர். 108-வைணவ ஸ்தலங்களின் பெருமைகளை 138-பதிகங்கள், திருவேங்கடமாலை, ஊசற்றிருநாமம் முதலான கிரந்தங்களை இயற்றினார்.

## வேணுகோபாலய்யங்கார்.

இவர் திருவனந்தபுரத்தார். பாகவதத்தைத் தமிழ்க் கவிகளாகவும் வசனமாகவும் இயற்றினார்.

## ஸ்ரீநிவாச ஐயங்கார்.

இவர் செங்கலபேட்டையில் கி. பி. 18-ம் ஆண்டில் வதிந்து, பாகவதத்தை வசனமாக்கியும், விஷ்ணுபுராணத்தைச் சங்கிரகமாகவும் பிரபலப்படுத்தினார்.

## நல்லாப்பிள்ளை.

இவர் சுமார் 200-வருஷங்களுக்கு முன்னிருந்து (கி. பி. 1732—1744) பாரதத்தைப் பாடி புகழ்பெற்றார்.

## கம்பர்.

இவர் ஸ்ரீநாதமுனி காலத்தவர். தினம் ஒன்றுக்கு 700-கவிகளாக ஒருபக்ஷத்தில் 12000-கவிகளில் விருத்தப்பாடல்களாக இராமாயணத்தைப் பாடி அரங்கேற்றினார்.

## அருணாசலக்கவிராயர்.

இவர், தரங்கம்பாடியில் கி. பி. 1712-ம் வருஷம் பிறந்து இராமாயணத்தை இராகதாளங்களோடமைத்து, கீர்த்தனை நாடகமாகப் பாடியவர்.

இவர்களன்றியில் தாசவர்க்கங்களில் இராமதாசு, புரந்தரதாசு, விடல்தாசு, பெத்ததாசு, மூவகோபாலர், தியாகயர் என்றுதிபெயர்களால் பல பாகவதர்கள் ஜனித்து, வைணவத்தைச் சிறப்பித்தாலும், அவர்களிற் சிறந்தவர் சுமார் 50-வருஷங்களுக்குமுன் திருச்சிராப்பள்ளியி லிருந்து குடும்ப சமேதராக ஹரிபஜனைசெய்து அநேக கீர்த்தனைகளை இயற்றிய ஸ்ரீ பராங்குசதாசரேயாம்.

---

## மாத்துவாசாரியர்கள்.

## மாத்துவ வைணவமத சித்தாந்திகளின்·மதம்.

வைணவத்தைச் சார்ந்த மற்றோர் வகுப்பாருக்கு மாத்துவாசாரியாருடைய மதஸ்தர்கள் அல்லது தத்துவாதிகளென்று பெயராம். இந்த மதவகுப்பார், வடதேசத்தைப் பார்க்கிலும் மத்திய தக்ஷண இந்தியாவில் அதிகம். இந்த மதஸ்தர்கள் இராமானுஜ கோஷ்டியாரைப் போலன்றி, கோபிசந்தனத்தால் ஊர்த்வ புண்டரத்தைத் தரித்தும், அந்தப் புண்டரத்தின் மத்தியில் கருந்திலதத்தை யணிந்தும், விஷ்ணுவின் சங்கு சக்கர வடிவமான முத்திரைகளை முகம், கைகள், உடல் முதலான இடங்களில் தரித்துமிருப்பர். இவர்கள் விஷ்ணு

வைப் பிரதானமான பகவானாகத் தொழுதாலும், ஆஞ்சநேய ராகும் அனுமார் பூஜையையும் விசேஷமாகச் செய்கிறார்கள். வைணவத்தைச் சார்ந்த மற்ற வகுப்பாரைப்பார்க்கிலும், இவர்களிடத்தில் ஆசாரம்,சுத்தம் முதலானவைக ளதிகமான படியால் பிராமணரைத் தவிர ஏனையோ ரிம்மதத்தைத்தழுவு தல் அபூர்வம். இவர்கள் : ஜீவாத்மா, பரமாத்மா, வேறு வேறான வஸ்துக்களென்னும் (அத்வைதத்திற்கு விரோத மான) துவைதசித்தாந்திகளாவர். பெரும்பான்மையோர் தத்துவ சாஸ்திரிகளாயினும் ஜயமுனி கர்மங்களாகிய பூர்வ மீமாம்ஸத்தைத் தழுவி வருகிறார்கள். இந்த மதவகுப்பிற்குக் காரணகர்த்தர் மாத்துவாசாரியர்.

## மாத்துவாசாரியர் சரித்திரம்.

நானே பிரம்மம் என்னும் சங்கரருடைய அத்வைத சித்தாந்தத்தைக் கண்டித்து ஜீவாத்மாவும், பரமாத்மாவும், வேறு வேறான வஸ்துக்களென்னுந் துவைத சித்தாந்தத்தை ஸ்தாபித்தவர் மாத்துவாசாரியரே. இவர் வாயுவின் 3-வது அவதாரமென்றும், புருஷசூக்தப்படி இவருடைய பிராணன் பாவனரென்றும், ருக்குவேதம் 1-11-1-ல் பார்க்க முதலவ தாரம் அநுமாராகவும், துவாபரயுகத்தில் பீமசேனராகவும், கலியுகத்தில் மாத்துவாசாரியராகவும் அவதரித்தவராம். (பக வத்கீதை 4-7-8, விஷ்ணுபுராணம் 5-10-11-ல்) இவருடைய முதற்பெயர் வாசுதேவாச்சாரியர். இவர் சந்நியாசத்தைப் பெற்ற பிறகு மாத்துவாசாரியர் அநந்ததீர்த்தாசாரியர் என் றிரு பெயர்களைப்பெற்றார். இவர் சவுத்கனராஎன்னும் துளுவ தேசமாகிய உடுப்பிப் பட்டணத்தில் கி. பி. 1119, கலியுகம் 4220, சாலிவாகனம 1040, விளம்பிஸூ ஆஷாடபஹுல மாதம் 4-ம் தேதியில் மாதியகேஹ பாதர் என்பவருக்குக் குமாரராய் அவதரித்தார்.

இவர் பாலியத்தில் அதியற்புதங்களைச் செய்து சந்நியா சம் பெற விருப்பங்கொள்ள, பெற்றோர் விருப்ப மில்லாதிரு க்க, பிறகு தமக்கு ஒரு தம்பியர் ஜனித்தபிறகு 9-ம் வயதில் அச்சுதப்பிரகாச சுவாமிகளிடம் சந்நியாசம் பெற்றார். பிறகு தாமும், பெற்றோரும், கங்காஸ்நானஞ் செய்யவிரும்பி அச் சுதப் பிரகாசருடைய உதவியால் அநந்தேசுவரானோடு கூடி ஒரு தடாகமுண்டாக்கி, கங்கையை வரும்படி செய்து ஸ்நா

னஞ்செய்ய, அது மாத்துவசரோஹரம் என்னும் பெயரால் இப்போது மிருக்கிறது. அங்கு 12-வருடத்திற் கொருதடவை கங்கை வருகின்றதாம். பிறகு அச்சுதப்பிரகாசர் இறந்துபோக, மாத்துவாசாரியர் தமது 17-ம் வயதில் ஸ்ரீ வியாசபகவானுடைய இருப்பிடமாகிய இமயமலைக்கருகிலிருக்கும் பதரிகாச்சிரமத்துக்குப்போக, ஸ்ரீ வியாசர் அழைத்துக்கொண்டுபோய் ஞானோபதேசஞ் செய்து 8-சாளக்கிராமங்களையுங் கொடுத்து உடுப்பிக்குப் போகும்படி அனுப்பினர். அதில் 6-சாளக்கிராமங்களை சுப்பிரமணியர் கோவிலிலும், உடுப்பியில் 1-ம், மத்தியஸ்தலத்தில் 1-ம் வைத்தார். பிறகு துவாரகையிலிருந்து நாவிகாயாத்திரை செய்யும்போது களிமண்ணுகிய கோப்பிசந்தனத்தில் அகப்பட்ட ஸ்ரீ கிருஷ்ண விக்கிரஹத்தை எடுத்து உடுப்பியில் கோவில்கட்டி பிரதிஷ்டை செய்தும், உடுப்பியில் 8-மடங்களையும், மற்ற பாகங்களில் அநேக மடங்களையும் ஸ்தாபித்தார்.

பிறகு துவைத சித்தாந்தத்தை அனுசரிக்கும்படி 137 பெரிய கிரந்தங்களை இயற்றி அனுஷ்டிக்கும்படி செய்தார். இவைகளில் ரிக்பாஷ்யம், தசோபநிஷத் பாஷ்யம், கீதாபாஷ்யம், பிரம்மசூத்திர பாஷ்யம், பாரததாத்பரியநிர்ணயம், பாகவததாத்பரிய நிர்ணயம், கிருஷ்ணாமிர்த மஹாத்மியம், தந்திரசாரம், ஹிது வேதாந்தம என்பவைகளே. துவைத மதத்தைப்பரவச்செய்துவிட்டு மறுபடியும் பதரிகாச்சிரமத்துக்குப் போய் நாளதுவரையில் வரவில்லையாம். இவர் 2-ம் தரம் பதரிகாச்சிரமத்துக்கு சாலிவாகனம் 1120, பிங்களவருஷ மாசி மாதம் சுக்கிலபக்ஷம் 9-ம் தேதிக்குச் சரியான கி. பி. 1198-பிப்ரவரி மாதம் போனபடியால் அப்போது அவருக்கு வயது 79. இவர் ஸ்தாபித்த மாத்துவமதத்தின் ஆதிகாரணமாவது:—ஆதியில் பரமாத்மாவே அம்சரூபமாகி அதிலிருந்து சதுர்முகப்பிரம்மாவும், அவரிலிருந்து சனகாதி தேவர்களும், அவரிலிருந்து துருவாசரிஷியும், அவரிலிருந்து ஸ்ரீஞானஷனிதி, கருடவாஹன், கைவல்ய தீர்த்தர், கியானச தீர்த்தர், சத்தியப்பிரகியர், பிராகியர், அச்சுதப்பிரகாசர் இவரிடமிருந்து மாத்துவாசாரியர் துவைதத்தைக் கற்பிக்க அவதரித்தார்.

## மாத்துவமதத்தின் சித்தாந்தம்.

விஷ்ணு ஒருவரே கடவுளென்றும், உலக சிருஷ்டியின் காரணமாக அவர் பல அவதாரங்கள் எடுத்தாரென்றும், இவ

ருடைய அதிகாரத்துக்குட்பட்ட அநேக செல்லரைத் தேவர்களுண்டென்றும், விஷ்ணு சத்தியம் ஞானம் அநந்தமானவரென்றும், அவியகத் காரணத்தினால் அசத்து என்றும், நிர்நாமனென்றும், நிர்க்குணர் நிரியாணரென்றும், நிரூபரென்றும், மூலப்பிரகிருதியிலிருந்து சகலத்தையும் சிருஷ்டித்தாரென்றும், இந்த சிருஷ்டியின் விமர்சனை பத்துவிதமென்றும், அதாவது 1-மஹத்து முதலிய ஜனித்து, 2-அதிலிருந்து அகங்காரமும், அதைச்சார்ந்த வியபகாரம் தேஜசு புத்திராதிகள் உட்பிரிவுகளென்றும்,இதிலிருந்து3-வது தன்மாத்திரைகளான ஆகாயம், வாயு, தேயு, அப்பு, பிருதிவி உண்டாகி, 4-வது இந்திரியங்களும், 5-வது தேவர்களும், 6-வது அவித்தை யல்லது அஞ்ஞானமும், அது தாமச, மோஹ, மஹாமோஹ, தமசிர, அண்டதமசிர என்னும் பிரகிருதி சர்க்கமும், 7-வது ஸ்தாவர வஸ்துக்களும், 8-வது திரியக்கிரோதாங்களும், 9-வது ஆர்வக்கிரோதங்களும் மனுஷ சிருஷ்டியும் இந்த மூன்றும்வியாசிறதசர்ஹமும்,10-வது விஷ்ணுவின் பலவித பெருமை பிரதாபங்களும், பிரம்மகல்பகாலத்தில் படைக்கப்பட்டதாம். இப்படிப்பட்ட பிரமகல்பங்கள் அநந்தமாம். எப்படியெனில், 4,32,000 மனுஷருஷ கூடியது கலியுகம், 8,64,000 மனுஷருஷ கூடியது துவாபரயுகம், 12,96,000 மனிதருஷ திரேதாயுகம், 17,28,000 மனித ருஷ கூடியது கிரேதாயுகம், ஆக 4,32,0000 ருஷ கூடியது மகாயுகம். இப்படி 71 - மகாயுகம் ஒரு மனுவந்தரம், அல்லது ஒரு மனுவின் காலம். அப்படி 14-மனுவந்தரங்களுண்டு. இப்படி ஒரு மனுவின் சந்தியினால் ஆயிரம் மஹாயுகங்களென்றும், இதுதான் ஒரு கற்பம் அல்லது பிர்மாவின் ஒருநாளென்றும், இப்படி 360-இரவு பகல் சேர்ந்த நாள்கள் பிர்மாவுக்கு ஒருவருஷமாம். இப்படி 100 ருஷ பிர்மாவின் ஆயுசு அல்லது மகாகல்பம் அதாவது 3,11,040,000000000 மனித வருஷங்கள் என்றும், இப்பூமி படைக்கப்பட்டு இப்படிப்பட்ட நாள்களில் பாதி கழிந்துவிட்டது. இப்போது 2-வது பாகம் ஆரம்பித்திருக்கிறது. அதாவது,இப்போது பிர்மாவுக்கு 51-வருடம், 6-மனுக்களும் ஆண்டார்களாம். இப்போது ஆளும் 7-வது மனுவுக்கு வைவசுபத மனுவென்று பெயராம்.

## இந்தியாவின் மத்தியநாட்டினுடைய வைணவமதம்.

தக்ஷண தேசத்தின் வைணவம் இப்படி துவிதமத சித்தாந்த ரீதியாக போதிக்கப்பெற்று வருகையில், இந்தியாவின் மத்தியநாட்டு ஜனங்கள் பெரும்பாலும் இல்லற வாழ்க்கையில் அதிக பற்றுள்ளவர்களாக இருந்தமையால் அவர்களுக் கேற்ற வைணவத்தைப் போதிக்க ஸ்ரீ வல்லபாசாரியர் அவதரித்தார். அவர் சரித்திர சித்தாந்தமாவது:—

## வல்லபாசாரியார் மதம்.

இந்த வல்லபாசாரியார் யாரெனில், ஸ்ரீ விஷ்ணுசுவாமி சம்பிரதாயகரான லக்ஷ்மணபட்டரென்னும் தெலுங்காள் தேசத்து பிராமணருடைய குமாரராக கி. பி.1479ஆம் ஜனித்தவர். இவர் சம்பகாரணியம் என்னும்காசிப்பட்டணத்துக்குச் சமீபமான ஒருவனத்தில் ஜனித்தவர். இவர் தந்தைகாசிப்பட்டணத்திலுண்டான மதக்கலகத்தினல் சம்சாரத்தை இட்டுக்கொண்டு ஒரு வனத்தின் மூலமாக ஓடும்போது, கர்ப்பம் தரித்த எட்டாவது மாதத்தில் பிறந்துவிட்டபடியால் இந்தச்சிசுவை ஒருமரத்தடியில் போட்டுவிட்டுப்போய் சிலநாள்கள் கழித்து வந்து பார்த்தபொழுது, சிசுவுக்கு யாதொரு அபாயமுமில்லாதிருக்க எடுத்துக்கொண்டு வந்து வளர்த்து கோகுலத்துக்கு வந்து நாராயணபட்டரிடம் வேதம் ஓதவிட, அவர் நான்குமாதங்களில் சகல சாஸ்திரங்களையும் கற்றுத்தெளிந்து வரும்போது, அவர் தகப்பனர் இறந்துபோக 11-ம் வயதிலே மதாசாரியர் வேலைசெய்யப் புறப்பட்டார்.

முதலில் தக்ஷணதேசத்தை நாடிவந்து தம் மதத்தைப் போதித்து,தாமோதரதாஸ் என்பவரைத்தமது முக்கிய சீடனுக்கொண்டு தனது தாயார் தேசமாகிய விஜயநகரத்திற்குவர, அங்கே அநேக ஸமஸ்தான வித்துவான்களை ஜயித்து, அத்தேசத்து இராஜனுகிய கிருஷ்ணதேவரையும் தன் மதத்தில் சேர்த்துசீடனுக்கொண்டு,உஜ்ஜயின், காசி,ஹரித்துவாரம்,அலகபாத்து முதலான இடங்களுக்குப்போய்,தமதுமதத்தைப் பிரசங்கித்து அநேகரைத் தமதுமதத்தில்சேர்த்துக்கொண்டு வந்தார். இவருக்குபிரம்மசாரிஆச்ரமத்தில் விருப்பமில்லாமையால், காசிப்பட்டணத்தில் கலியாணஞ் செய்துகொண்டு இரண்டு குமாரர்களுக்குத் தந்தையானர். இவர் குமாரர்களில்

கி. பி. 1511-ளு கோபிநாதரும், 1516-ளு விட்டலநாதரும் பிறந்தார்கள். 1520-ளு வல்லபாசாரியார் கோவர்த்தனத்தில் ஸ்ரீநாதருடைய கோயிலைக்கட்டி பிருந்தாவனத்துக்கு வர, சாக்ஷாத் ஸ்ரீ கிருஷ்ணரே பிரத்தியக்ஷ தரிசனம் கொடுத்து, தம்மைபாலகிருஷ்ணராகவும்பாலகோபாலராகவும் பாவித்துக் கோயிலைக் கட்டி வணங்க உத்திரவளித்தார். இவர் கட்டிய இந்தக் கோயிலும் இப்போது இவரது சந்ததியார்களால் பரிபாலிக்கப்பட்டு வருகிறது. கடைசியாக காசி க்ஷேத்திரத்தில் போய் குடியிருந்துகொண்டு பகவத்கீதைக்கு சுபோதினி என்னும் வியாக்கியான கிரந்தத்தை எழுதி அங்கேயே 1531ளு பரமபதமடைந்தார்.

இவருக்குப் பிறகு இவரது இரண்டாவது குமாரராகிய விட்டல்நாதர் அந்தப் பட்டத்தை யடைந்து தக்ஷண மேற்கு தேசங்களுக்குப்போய் போதிக்க, 256 விசேஷ சீடர்கள் சேர்ந்தார்கள். இவர்களுடைய சரித்திரம் துசம்வின விரதம் என்னும் கிரந்தத்தில் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. இந்த விட்டல்நாதர் கடைசியாக கி. பி. 1565ளு கோகுலத்துக்குக் குடிவந்து தமது எழுபதாவது வயதில் கோவர்த்தனத்துக்குப்போய் பரமபதமடைந்தார். இவருக்கு இரண்டு மனைவிகள். இவர்களுக்கு கிரிதரர், கோவிந்தர், பாலகிருஷ்ணர், கோகுலநாதர், இரகுநாதர், மாதவநாதர் என்ற ஏழு குமாரர்கள் பிறந்து, நான்காவது குமாரராகிய கோகுலநாதர் பிரபலராகி பரமளித்தார். இவரது கடைசி சந்ததி இப்போது பம்பாயில் கோஷாயி பட்டமுடையவரா யிருக்கிறார்.

இந்த வல்லபாசாரிமத கோஷாயிகள் மற்ற இந்து மதாதிபதிகளைப்போல பிரம்மசாரி, சந்யாசி ஆச்ரமங்களைத் தழுவாமல், இல்லறத்தாராய் உலக சுகங்களை முற்றுமுடிய அநுபவித்தாலொழிய, மனது விரக்தி தசையை யடையமாட்டாதென்று சொல்லி இராஜபோகங்களை யனுபவித்து வருகிறார்கள். இவர்களைச் சார்ந்த சிலர் கவுரவ கர்வத்தினாலும் காமவெறியினாலும் விகாரமான காரியங்களைச் செய்யத் தலைப்படவே, வைணவமதத்துக்கே கெடுதிவரச் சம்பவித்ததன்றியில், இத்தியாதிகளைக் கண்ட ஜயபூர் மகாராஜா தனது அரண்மனையிலிருந்த கோகுலசந்திரமன் என்னும் விஷ்ணு விக்கிரஹத்தை எடுத்துவிடும்படியாயும், தனது ஸமஸ்தானத்தில் வைணவ மதக்குறிகளை வைத்துக்கொண்டு வருவோர்மீது

அருளைகொண்டு சைவ மதத்தை யனுசரிக்கக் கட்டாயப்படுத்தினாராம்.

## இந்த மதத்தின் கருத்து.

ஒரு சரவண சுக்லபக்ஷமி 11-ம் தேதி நடுஇராத்திரி ஸ்ரீ கிருஷ்ணர் இம்மதாசாரியருக்குசித்தாந்த ரஹசியத்தைநேராக் வந்து போதித்ததாகவும், அந்த இரகசியத்தின் கருத்து:— உடல், பொருள், ஆவியாகிய அவைகளையும், ஸ்ரீ பகவானுக்குச் சமர்ப்பித்துவிட்டு, பிரம்மசம்பந்தமென்றும் ஜீவனும் பரமனும் ஒன்றாகிறனென்றும், அப்போது தேகத்தாலும் ஆத்மாவினாலும் செய்த சஞ்சித பிராரப்த ஆகாமியாதி கர்மங்களனைத்தும் மற்றும் எல்லாவித பாவங்களும் அற்றுப் போகுமென்றும் ஷை இரகசியத்தில் சொல்லியிருப்பதாகவும் சொல்லுகிறார்கள் இந்தச் சித்தாந்தத்தையே அனைவரும் தழுவி நடக்க வேண்டுமென்று அந்த மதத்தைச் சார்ந்தோர் சிறு குழந்தைகளாக விருக்கும்போதே அவர் கழுத்தில் துளசிமணிகள் மாலையைப்போட்டு ஸ்ரீ கிருஷ்ண சரணம் மாம என்றுதி அஷ்டாக்ஷர மந்திரத்தைப் போதித்து விடுகிறார்கள். இந்த சித்தாந்தத்தினால் ஒரு மனுஷன் தனது உடல், பொருள், ஆவி அவைகளாலுண்டாகும் நன்மை தீமை முதலான சர்வ தர்மங்களை ஸ்ரீ கிருஷ்ணருக்குச் சமர்ப்பித்து, கேவலம் சேவகர்களாக வேண்டுமென்றும், அப்படிப்பட்ட சேவகர்களில் சிறந்தவர் ஸ்ரீ வல்லபாசாரியென்றும், அவர் ஈசுவரனுக்கும், ஜனங்களுக்கும் மத்தியஸ்தராகவிருந்து ஜன்ம சாபலியமாக்க சக்தியுடையவராக நியமிக்கப்பட்டிருக்கிறார் என்றும், ஆகவே ஆசாரியர் ஸ்ரீ கிருஷ்ணரிலும் சிறந்தவரென்றும், ஸ்ரீ கிருஷ்ணருக்குக் கோபம் உண்டாகும்படி நடந்தாலும் ஆசாரியர் சமாதானப்படுத்திவிடுவாரென்றும், ஆசாரியர் கோபமடைந்தால் அதை நீக்க யாவராலும் முடியாதென்றும் பின்னும் பலவிதமாகச் சொலலப்பட்டிருக்கிறதன்றியில் இந்த வல்லபாசாரியரும் இவரது சந்ததிகளும் சீடர்களும், ஸ்ரீ சாக்ஷாத் தேவ சம்பந்திகளுக்கும் பிரபஞ்சத்தில் பிரதிநிதிகளென்று இவருக்குத் திருப்திகரமாக நடந்தால் பரத்தில் ஜீவனும் பரமனும் ஒன்றாகுமென்றும், ஆகவே இந்த மதாசாரியர்களுக்கு எவர் சந்தோஷமுண்டாகும்படி பண்டு பலாதி திரவியங்களை மனமுவந்து தத்தம்செய்கிறார்களோ அவர்கள் சிரேஷ்டர்களென்றும், இந்த கோஷாயிகள் செய்யும் இப்படிப்பட்ட விபசாரங்கள் பாபகிருத்தியங்களாகக் கொள்ளக்கூடா

தென்றும்,சவராசிஸிரதாதி நூல்களில் கண்டிருக்கிறதாம்.இக் தியாதி இரகசியகிரந்தங்களை இந்த மதஸ்தர்களுடைய சிடர்க ளன்றி ஏனையோர் வாசிக்க இடங்கொடுப்பதில்லை. அளிகிரியி லிருந்த ஒரு மஹான் கிரிபிரசாத் அச்சுக்கூடத்தில் இந்த மத விஷயமான இரண்டொரு புத்தகங்களைப் பதிப்பித்திருக்கிற தாகக் கேள்வி.அப்புத்தகங்கள் நக்மகு அகப்படவில்லை.விடல நாதருடைய குமாரரின் ஆறும் சந்ததியாகிய கோஷாய் புருஷோத்தமலாலவர்கள் இப்போது கோகிலத்துக்குச் சொந்தக்காரராய், நவநீதப்பிரியர் கோயிலுக்குத் தலைவராக இருக்கிறார். இவர் மகா உத்தமர். இவருக்கு இராஜாதாகூர் என்ற பட்டமும் வருஷம் 900-ரூபாய் சாஸ்வித வரும்படி யும் இந்திய மகாராஜரால் விடப்பட்ட அநேக மாணியங்களை யும் யனுபவித்துக்கொண் டிருக்கிறார்.

இந்த வல்லபாசாரிகளுடைய கோயில்களில் பிரதிதின மும் எட்டு தடவை பூஜைகள் நடந்து வருகின்றன. அவை யெவையெனில்:—(1) காலையில் மங்களசேவை,அதாவது:— இராத்திரியெல்லாம் தூங்கின சுவாமி படுக்கையைவிட்டு எழு ந்து சுத்தி ஸ்நானம் ஆடை ஆபரணம் அலங்காரம்செய்து வணங்குதல்.

(2) சிங்கார சேவை, அதாவது:—ஏழு அல்லது எட்டு மணிக்கு, கிருஷ்ணசுவாமிக்குத் தைலக் காப்பிட்டு அபிஷே கம் செய்து பலவித வஸ்திரார்பரணங்களோடு சிங்காரித்து சிங் காதனத்தின்மீது வைத்து வணங்கள். பிறகு முக்கால் மணி நேரம் கழிந்த பிறகு,

(3) குவாலா என்று சுவாமி பசுக் கன்றுகளை மேய்க்க இடையரோடு பர்ஜ—வனம் போதல். பிறகு மத்தியானம்,

(4) இராஜபோக சேவை, அதாவது, மாடுகளை மேய் த்துக் களைத்துவந்த ஸ்ரீ கிருஷ்ணருக்கு சகலவித போஜனங் களை வைத்துப் பூஜைசெய்து,அந்த உபயம் செய்தவர்களுக்கு போஜனமிட்டு மரியாதை செய்தல். மத்தியானம் மூன்று மணிக்குச் சாப்பிட்ட மயக்கத்தால் சற்றுப்படுத்து இளைப்பா றும் சேவையாகிய,

(5) உத்தபான் சேவை செய்தல். சாயரக்ஷையில் சிர மத்திலிருக்கும் கிருஷ்ணரை அழைக்கும்விதமாக அலங்கரி த்து பூஜித்தலாம்.

(6) போக் என்ற உல்லாச உலாத்தல், மாலையில் சிற்றுண்டிவைத்து பூஜிப்பதேயாம்.

(7) சந்தியா மாலையிற் பகல் வேஷங்களைக் கழற்றி இராத்திரிக்கேற்ற உடைகளைத் தரித்துப் பூஜிப்பதாம்.

(8) சயனம் தூங்கல், கிருஷ்ண விக்கிரஹத்தைப் படுக்கவைத்தும், பக்கத்தில் தாம்பூலாதிகளை வைத்தும் பூஜிப்பதாம். ஆக எட்டுவித பூஜைகளும் சேவைகளும் கோஷாயிகள் செய்துவருகிறார்கள். மேலும், பிரதி வாரங்களிலும் மாதங்களிலும் பலவித 6-உற்சவங்கள் விமரிசையாகக்கொண்டாடப்பட்டு வருகிறதன்றியில், ஆசிரேஷ பவுர்ணமி தினத்தில் விவசாய பலனையறிய ஒருவருஷ உற்சவம் கொண்டாடி வருகின்றனர்.

இந்த வல்லபாசாரிய மதஸ்தர்களுக்கு மூன்றுவித கிரந்தங்கள் விசேஷமாக இருக்கின்றன. அவைகளில், வல்லபாசாரி சுவாமிகளால் செய்யப்பட்ட சமஸ்கிருத கிரந்தங்கள் இரண்டுவகுப்புகளாம். அதாவது, பகவத்கீதாடீகாசுபோதினி, வியாச சூத்திர பாஷ்யம், ஜயமுனி சூத்திர பாஷ்யம், தத்துவ தீப நிபந்தனம் என்னும் நான்கும் முதல் வகுப்பைச் சார்ந்தவைகளென்றும்; சித்தாந்த பாஷ்யம், சித்தாந்த முக்தாவளி, புஷ்ட்டி பிரவாஹ மரியாதை, அந்தக்கரண பிரபோதா, ஜீவரத்தனம், விவேகதைரியாஸ்வபம், கிருஷ்ணாசரியம், பக்திவர்த்தனி, ஜாலபேதம், சந்யாச நிர்ணயம், நிரோத லக்ஷணம், சேவபலம், பாலபோதம், சதுர்சுலோகி, பஞ்சசுலோகி, யமுனாஷ்டகம், புருஷோத்தம சஹஸ்ர நாமம் முதலான 17-கிரந்தங்கள் இரண்டாவது வகுப்பென்றும்,

2-வது—ஸ்ரீ வல்லபாசாரி சுவாமிகளுடைய பிரதம சீடர்களால் செய்யப்பட்ட. சமஸ்கிருத கிரந்தங்களில் அக்கினி குமாரர் சர்வோத்தம ஸ்தோத்திரத்தையும், விட்டல நாதர் இரத்தன விமானத்தையும், கோகுலநாதர் பக்தி சித்தாந்த விவர்த்தியையும், விட்டலநாதர் வல்லபாஸ்தகத்தையும் கிருஷ்ண பிரேமாமிர்தத்தையும், கோகுலநாதர் சிக்ஷா பத்திரத்தையும், கோகுலாஷ்டகத்தையும் பிரேமாமிர்தத்தையும், ஹரிதாசரால் ஸ்ரீ வல்லப பவாஸதகத்தையும் பின்னும் சிலரால் மதுராஸ்தகத்தையும், சரிணாஸ்தகத்தையும் நாமவளி ஆசரணையையும், நாமவளி ரோகாயியையும், சித்தாந்த

பவனத்தையும், விரோதலக்ஷணத்தையும், ஸ்ரீ நகரராச மண்டலத்தையும், சரணோபதேசத்தையும், இரஜசிந்துவையும், கல்ப தரும நூலையும், மாலா பிரசங்கத்தையும், சித்த பிரபோதத்தையும் பரம சீடர்களுடைய சிரேஷ்ட கிரந்தங்களென்றும்,

3-வது—மத்திய காலத்தில் பிரஜ பாஷையில் எழுதப்பட்ட நிஜவிருத்தம், சவுராசி விருத்தம், துசோபவன விருத்தம், துவாதச குன்ருச பவித்திர மண்டலம், புராணமசி,நித்தியசேவ பிரகாசம், கோகுலநாதர் செய்த இராசலவனம், வசனமிர்தம், பிரஜம விலாசம், வனஜாத்திரா, வல்லபகியான டோலா, நித்தியபதம், ஸ்ரீ கோவர்த்தன நாத்ஜீகா பிரசாத்தியா, கோஷாயன்ஜி பிரசாத்தியா, லீலாபாவனம், சுவரூப பாவனம், குருசேவா, சேவ பிரகாரியா, மூலபுருஷ தாயர் மார வைஷ்ணவ பக்ஷி லக்ஷண, சவுராசி சிக்ஷா, உத்சவபாதம், யமுனைஜிபாதம் முதலான கிரந்தங்கள் மூன்றுதரமான கிரந்தங்களென்றும் அநேகசீடர்கள் அநேக ஸ்திரீ புருஷர்கள் கொண்டாடிவருகிறார்கள்.

வல்லபாசாரிகள்:—இந்தமதவகுப்பை ஸ்தாபித்த வல்லபாசாரியார் கி.பி. 1479ஆம் சம்பரா ஆரணியத்தில் கிருஷ்ணமூர்த்தியே யவதாரமாக ஜனித்து 12-வயதுக்குள் ஆகம வேத புராண இதிகாசங்களைக்கற்று, வேதாந்தசாஸ்திரங்களுக்கு வியாக்கியானங்களை எழுதிய ஸ்ரீ விஷ்ணுஸ்வாமியாம். அவர் பிராம்மணரை மாத்திரம் முதலில் சீடராகக்கொண்டு சந்யாச ஆச்ரமங்களை அநுஷ்டிக்கும்படி கற்பித்தார். அவருக்குப் பிறகு அந்த ஸ்தானத்திற்கு ஞானதேவரும், பிறகு நாமதேவரும், பிறகு திரிலோசன தேவரும், பிறகு வல்லபாசாரியரும் வந்ததாக சரித்திரம் முறையிடுகின்றது. இந்த வல்லபர் திரிலிங்க பிராமணரான லக்ஷ்மணபட்டருடைய குமாரர். பதினைந்காம் நூற்றுண்டாரம்பத்தில் யமுனை நதிக்கரையிலுள்ள கோகுலத்தில் வதிந்து பிறகு இந்தியாவின் பல திவ்வியஸ்தலங்களுக்குப் போய்வந்ததாக ஒரு சரித்திரத்தில் தெரிவிக்கப்பெற்றிருக்கிறது. மற்றொரு சரித்திரப் புத்தகத்தில் பின்வருகிறபடி சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது, இந்தமதாதிபதி விஜயநகரத்துக்குச் சென்று கிருஷ்ணதேவ மகாராஜனிடமிருந்த ஸ்மார்த்தசைவர்களுடன் வாதித்து ஜயசீலராகியும், வைஷ்ணவாசாரியாராக நியமிக்கப்பட்டும், 9-

வருஷகாலமாக அநேக திவ்விய தேசங்களுக்குச் சென்றும், உஜ்ஜயினி பட்டணத்திற்கு வந்து சிபராநதி தீரத்தில் தபோவனமாக்கி, அங்குச் சில வருஷங்களிருந்தும், பிறகு மதுரை சானூர் பிருந்தாவனம் முதலான இடங்களுக்குப் போய், பிருந்தாவனத்தில் ஸ்ரீகிருஷ்ணர் பாலகோபாலராக தரிசனங் கொடுத்தாராம். அதன் பிறகு அங்கு வைணவத்தை விருத்தியாக்கியும், கடைசியாகக் காசிப்பட்டணத்தில் வந்திருந்து 18-கிரந்தங்களையுஞ் செய்தார். இவைகளில் பாகவதத்தின் தசமஸ்கந்தத்துக்கு பாகவதடீகாசுபோதினி, லீலாரகசியம், ஏகாந்தரகசியம் முதலிய 8-கிரந்தங்களை இயற்றினார். இவர் சுத்த அத்துவைதமாகும் வேதாந்த சித்தாந்தத்தையே நம்பி அதைப் பரவச்செய்தார். இவர் காசிக்கடுத்தகங்கையில் ஹநுமந்தகட்டத்தில் சந்தியாவந்தனஞ் செய்யும்போது விஷ்ணுவின் உத்திரவினால் வைகுண்டத்துக்கு எழுந்தருளினார். இவருக்கு 48-சீடர்களிருந்தார்கள். இவருடைய துவிதிய புத்திரராகிய விடலநாதர் பிதாவின் பட்டத்தைப் பெற்றார். இந்த விடலநாதர் கோகுல பிருந்தாவனத்தில் இருந்தபடியால் இவரை கோஷாம்ஜியென்று சொல்வதுமுண்டு. பம்பாய், குச்சி, கட்டியவார், மால்வா முதலான இடங்களிலுள்ள பானியர் வர்த்தகர்கள் இந்த மதத்தைச் சார்ந்தபடியால் இந்த மதாதிபதியும் நாளாவட்டத்தில் வைஷ்ணவ மகாராஜா என்ற பட்டத்தைப் பெற்றார். இந்த மதத்தை புஷ்டிமார்க்கமென்று சொல்வதுமுண்டு. அதாவது:—ஒரு சந்தி உபவாசங்களை நீக்கித் திருப்திகரமாக உண்டு உடுத்து உலகரக்ஷகனாகிய கிருஷ்ணமூர்த்தியையும், அவர் மனைவிகளாகிய இராதா முதலான கோபிகளையும் வணங்குவார்கள். சிலவேளைகளில் மதாசாரியர்களே கோபிகா ஸ்திரீகளைப்போல ஸ்திரீவேடம் பூண்டு கிருஷ்ண பிரீதியான பூஜையைச் செய்வார்கள். இந்த மதாசாரிகள் கிருஷ்ணனுக்குப் பிரதிநிதிகளாக எண்ணப்பட்டு, சிஷ்யர்கள் மதாசாரியர்களுடைய பாதங்களில் விழுந்து வணங்கியும், கர்ணாமிர்தமாகிய அவர்கள் பாதத்தைக் கழுவிய ஜலத்தைத் தீர்த்தமாகக்கொண்டும், இத்யாதிகளைக் கண்டித்து வைணவத்தைப் பரிசுத்தமாக்க, கி. பி. 1780-ஹு சுவாமி நாராயணர் என்றவர் அயோத்திக்கடுத்த சபாநகரத்தில் விஷ்ணுவின் அவதாரமாக ஜனித்து, சகல சாஸ்திரங்களைக் கற்றுத் தெளிந்து கூர்ஜரதேசத்தில் பிரம்மசாரியாக வதிந்து, வல்லபாசாரியாருடைய மதத்தைப்பரிசுத்தமாக்கி, தமது

நாற்பத்தொன்பதாவது வயதில் பரமபதமடைந்தார். வல்லபாசாரியாருக்குப் பிறகு அவர் குமாரர் விட்டலநாதரும், அவருடைய ஏழு குமாரர்களாகிய கிரிதரநாதர், கோவிந்தராயர், பாலகிருஷ்ணர், கோகுலநாதர், ரகுநாதர், யாதுநாதர் ஞானசாயர் ஆகியவர்கள் பட்டத்துக்கு வந்தார்கள். இப்போதிருப்பவர் ஸ்ரீ நாததேவராம். இவருடைய சிஷ்யர்கள் 20,0,000 ஜனங்களுக்கதிகமாக குஜராத்து முதலானவிடங்களிலிருக்கிறார்கள்.

## மஹாராஷ்டிர நாட்டின் வைணவர்கள்.

கூர்ஜரம் முதலான நாடுகளில் ஸ்ரீ வல்லபாசாரியாருடைய வைஷ்ணவ சித்தாந்தம் பிரபலப்பட்டுவருகையில், மஹாராஷ்டிர நாட்டில் ஸ்ரீதுக்காராம்தாசர் முதலான மஹான்கள் அவதரித்து வைணவத்தைப் பிரபலமாக்கினார்கள். அவர்களில் ஸ்ரீ துக்காராம்தாச சுவாமிகள் சரித்திரசங்கிரகம் வருமாறு:—

மஹாராஷ்டிர நாட்டில் தேக்கு என்ற ஊரில் சூத்திர செட்டிசாதியிற்பிறந்த விசுவம்பரர் என்னும் மஹாவைஷ்ணவ பக்தர் ஒருவர் இருந்தார். அவருக்கு போலோபாவா என்ற ஓர் உத்தமகுமாரர்பிறந்து கனக்காய் என்னும்மாதை மணம் புரிந்ததனால் தமது பிதாமாதாக்களைப்போல ஸ்ரீ பாண்டுரங்க விட்டலநாதரை சதாபஜனை செய்துவந்ததினால் அவர்களுக்கு துக்காராம் என்ற உத்தமோத்தம புத்திரர் அவதரித்தார். துக்காராம் என்றால் வர்த்தகப் பொருள்களைச் சரியாக நிறுத்துத்தூக்குவோர் என்று பொருள். இவர்வாலிபராயிருந்தபோது கல்வி கற்பிக்கப்பட்டு, பிறகு தம் மூதோர்களுடைய வழக்கத்தின்படி சோளம்,மிளகாய் முதலான சரக்குகளைப் பொதிமாடுகளின்மீது போட்டுக்கொண்டு தூரதேசங்களுக்குக் கொண்டுபோய் வர்த்தகம் செய்துவரும்படி தம் பிதா கொடுக்க, துக்காராம் ஸ்ரீ ஹரிபஜனையை வழியிற் செய்துகொண்டு, பொதிமாடுகளை ஓட்டிக்கொண்டுபோய், அதன்மேலுள்ள சரக்குகளையெல்லாம் ஏழைகளுக்கு இனமாகக் கொடுத்து வெறும்கையாக விடுவந்துசேர, பிதா கண்டு வைது, இவருக்குப் புத்திவரும்பொருட்டு மகாபுத்திசாலியாகிய ஜிவாய் என்னும் மாதை விவாஹம் செய்து வைத்தார்கள். அம்மாது சிரோன்மணி துக்காராமரைச் சேர்ந்து மஹாதேவன், காசி,

கங்கை, பாஹிதி என்றுதி புத்திரன் புத்திரிகளைப் பெற்று வாழும்நாளில், துக்காராமர் குடும்ப செலவிற்கு வேண்டிய பொருளை ஈட்டாமல், சதா ஹரிபஜனை செய்துவருவதைக் கண்ட ஜிஜாய் அவரைக் கண்டித்துத் திட்டித்தூஷிக்க, துக்காராமர் வெறுப்படைந்து, ஒருசோளக்காட்டில் காவலாளியாய் அமர்ந்தார். அமர்ந்தாலுமென்ன? இவர்சோளக்கதிர்களைப்பல பட்சிகளும் பூச்சிகளும் உண்ணும்படி விட்டுவிட்டு, ஹரிபஜனையைச் செய்துகொண்டிருந்ததினால் தோட்டக்காரன் வந்து பார்த்து, இவரைக் கண்டிக்க, அதைவிட்டு ஒரு கரும்புத் தோட்டத்துக்குப் போக, இவருடைய பக்திரசத்தை யறிந்த அத்தோட்டக்காரன் சிலகரும்புகளைக் கொடுக்க, அவைகளில் பெரும்பான்மையானவைகளை ஏழைகளுக்குத் தானமாகக் கொடுத்துவிட்டு இரண்டொரு கரும்புகளை மாத்திரம் தன் மனைவியிடம் கொண்டுவந்து கொடுக்க, அந்தம்மை வாங்கிக் கொஞ்சம் கரும்புதானா வீட்டிற்குக் கொண்டுவருகிறது என்றகோபத்தினால் கரும்பைக்கொண்டு துக்காராமரைப் பல தரம் தலையிலும் முதுகிலும் அடிக்க, பரமபாகவதராகிய துக்காராம் அதைப்பற்றிக் கோபிக்காமலும் விசனப்படாமலும் வருந்தாமலும், மனைவியின் முகத்தைக் குளிரநோக்கி அரிபஜனை செய்துவிட்டு, போபாநாதமலை பாண்டாரமலைகளுக்குப் போய் ஏழுநாள்கள் இரவும் பகலும் ஹரிபஜனை செய்து கொண்டு, அங்கிருந்து அமதாபாத்துக்குச் சென்று அங்கும் ஹரிபஜனைசெய்து அநேக சீடர்களைச் சேர்த்துக்கொண்டும், பிறகு புனபட்டணத்துக்குப்போய் ஓர் மடத்தில் ஹரிபஜனை செய்ய, அப்போது அவ்விடத்து அரசனாகிய சிவாஜிமஹாராஜா வந்து கேட்க, அந்த ராஜாவைப் பார்த்து உலகவாழ்வும் இராஜ்ஜியபரிபாலனமும் சதமல்லவென்று உருக்கமான சில கீர்த்தனங்களைப் பாட, சிவாஜிகேட்டு மதிமயங்கி தாசருக்கு அடிமையாகி, இனி என் சமஸ்தானத்தையும், சம்சாரத்தையும் விட்டொழித்து, தாசானுதாசனாகி விடுவேனென்று சபதம் கூறவே, அருகிலிருந்த மந்திரிமார்கள் ஜிஜாயின் சகாயத்தினால் துக்காராமரைத் தூண்ட, அவர் மறுநாள் சிவாஜியைப் பார்த்து இல்லறத்திலிருந்துகொண்டே பாண்டுரங்கன் பதவியைப் பெறலாமென்று சில உருக்கமான கீர்த்தனைகளைப்பாட, சிவாஜி சம்சாரத்தையும் சமஸ்தானத்தையும் மறுபடியும் கைகொண்டாராம்.

இப்படி அற்புதமான அபங்க ஹரி கீர்த்தனைகளைப்பாடி அநேகரை பிரமாநந்தத்தை அடையும்படி செய்து வரவே, பொறாமைகொண்ட சில பிராமணர்கள் இந்ததாசர் பிறப்பில் சூத்திரனும், தொழிலில்செட்டியுமாகிய இவர், பிராமணர்மாத்திரம் படிக்கவும் ஸ்மரிக்கவும்கூடிய ஹரிநாம வார்த்தைகளைச் சேர்த்து கீர்த்தனைகளாகவும், வேறு கவிகளாகவும் பாடலாமாவென்று கண்டித்து, அந்நூல்களையெல்லாம் எடுத்து ஆற்றிலே போட்டுவிட, துக்காராம் கண்டு விசனப்பட்டு ஹரி பஜனைசெய்ய, ஆற்றில் போடப்பட்ட கிரந்தங்கள் வெள்ளத்தில் அடித்துக்கொண்டு போகாமல், அங்கேயே மிதந்துகிடக்கையில், மேற்படி ஹரிபஜனையினால் துக்காராமருடைய சமரச ஞானத்தையும் அவதாரத்தன்மையையும் கண்டு அந்த அந்தணர்கள் அவரைக்கொண்டாடி சீடர்களாகிவிட்டார்கள். அப்படி ஆனதற்குக் காரணம்-துக்காராமர் உண்மையான ஈசுவர பக்தியும் சமரசஞானமும் சகோதரவாஞ்சையும் உடையவராக இருந்ததன்றியில், ஜாதி ஆசாரம் வீணான கர்மாநுஷ்டானங்களை விட்டொழித்து, இல்லறத்திலிருந்து உண்மையான பக்திமார்க்கத்தினாலேயே பரமபதமடையலாமென்று போதித்துவந்ததேயாம். இம்மஹானை மஹாராஷ்டிர நாட்டில் ஓர் அற்புத அவதார புருஷராகவும், சமரசஞானியாகவும், இணையற்ற பாண்டுரங்கர் பஜனை செய்வோராகவும், பொந்தியோடு பரமபதம் அடைந்தவராகவும் இன்றும் கொண்டாடி வருகிறார்கள். இவருடைய அபங்க கீர்த்தனைகள் பக்திரசமெல்லாம் திரண்டமைந்தவைகளாக இருப்பதால், இத்துக்காராமரே தென்னாட்டு தியாகராயராக வந்தவதரித்துத் தெலுங்கு கிருதிகளைப் பாடியதாகச் சொல்வாருமுண்டு. இப்பரமபாகவதர் சகாப்தம் 1571-ம் விரோதிஷூ பங்குனிமீ திங்கட்கிழமை பரமபதமடைந்தனராம்.

## மஹாராஷ்டிரநாட்டு பக்தர்களிற் சிறந்த ஸ்ரீ ராமதாசருடைய சரித்திரம்.

ஸ்ரீ துக்காராம்தாசரைப்போல சாதாரண ஜனங்களாலும், அறிவுள்ள அந்தணர்களாலும், அரசர்களாலும், கொண்டாடப்பெற்றவர்களில் ஸ்ரீராமதாசர் சிறந்தவர். இவர் மஹாராஷ்டிரநாட்டைச் சார்ந்த டாங்கூர் என்னுமிடத்தில் ஜனித்த பிராம்மணகுலதிலகர். இவர் சிறுவயதாயிருக்கும்போதே மஹாவிஷ்ணு பக்தியில் பற்றுள்ளவராகி, சதாகாலமும் மூக்

கியமாக ஏகாதசி துவாதசி தினங்களில் ஹரிநாமபஜனைகளைச் செய்துகொண்டிருந்து,தமக்குப் பக்குவ வயதுவரவே தமது ஊருக்கு நூற்றைம்பது கோசம் தூரத்திலிருக்கும் துவாரகைக்கு ஹரிபஜனையோடு நடந்துகொண்டுபோய் அவ்விடத்திய கிருஷ்ணமூர்த்தியை சேவித்து, மறுபடியும் திரும்பி தன் ஊருக்குவருவது வழக்கம். இவ்விதம் பிரதிதினமும் செய்து வருகையில், வயதுமுதிர்ந்து பிணி பிடித்ததினால்,இனி துவாரகைக்குப்போக சக்தியில்லையென்று வருந்துகையில், மகாவிஷ்ணுவே டாங்கூரில் அவர் வீட்டிற்கே வந்து சதா அவருக்குத் தரிசனம் கொடுத்துவந்ததாக ஒரு சரித்திரம் முறையிடுகின்றது.

இந்த மஹான் ஒருகால் புனா பட்டணத்துக்கு வந்து பஜனை செய்துகொண் டிருக்கையில், சிவாஜிராஜா தாசருடைய உண்மையான பக்தி வைராக்கியத்தைக் கண்டு வியந்து கொண்டாடிவந்தார். அந்த சிவாஜி மஹாராஜா அடுத்தநாள் மகம்மதியரிடத்தில் செய்த பயங்கர போரினாலும் உலகவாழ்வின் க்ஷணபங்குரமான கஷ்டங்களைக்கருதி வெறுப்படைந்து ஸ்ரீராமதாசரிடம் வந்து "ஓ சுவாமி! எனது ராஜாங்க அதிகாரத்தையும், எனது இடம்பொருள்களையும் தாங்கள் இனமாக எடுத்துக்கொண்டு, என்னை ஒரு உண்மையான ஹரிபக்தனாகச் செய்யவேண்டும்"என்றுவேண்ட, தாசர்கேட்டு, "ஓ சிவாஜி! நான் பிராமணனானபடியால் இராஜ்ஜிய பரிபாலனம் செய்யத் தக்கவனல்லன். நீ க்ஷத்திரியனானபடியால் அரசாட்சி செய்யத்தக்கவன். நீயே உன் மனம் புத்தி சித்தங்களை சதா சர்வேசுவரனுக்குத் தத்தம்செய்துவிட்டு, அவ்வீசனுக்குப்பிரதிநிதியாக அரசு செய்யக்கடவாய். எனக்குவேண்டுமானால் இப்போது மகம்மதியரால் துன்பப்படும் தேசங்களை ஜயித்துக் கொடுத்தால்பெற்றுக்கொள்ளுகிறேன்"என்றுசொன்னாராம். இதனால் இப்பரமபாகவதர் பரதுக்கம் சகியாதவரென்றும் சுதேசிகளிடத்திலும் பொதுஜன சமூஹத்தாரிடத்திலும் பூரண அன்புடையவரென்றும் பிரத்தியக்ஷமாகிறது. இந்த ஸ்ரீராமதாசர் சிவாஜிக்கு பிரதமகுருவாக இருந்து மஹாராஷ்டிர நாட்டிலிருக்கும் சகலரையும்ஒரேசாதியாராக்கி, மகம்மதியரைத் தாக்கி, இந்துக்களுக்குச் சுதந்தர சுகவாழ்வை உண்டாக்கஅந்த சிவாஜிக்குப் போதித்தவராம். மஹாராஷ்டிரநாட்டில்இப்படிப்பட்டமஹான்கள்சென்ற500-வருஷங்களுக்குள்

சுமார் 200-பாகவதர்கள் அவதரித்து அந்நாட்டை அலங்கரித்தார்கள். அவர்களில் அநேகர்: பிராம்மணர், சூத்திரர், மஹார் என்ற கீழ்ஜாதி சக்கிலியர், மகமதியர் முதலான பல ஜாதியார்களாம். அவர்கள் தென்தேசத்து சைவ அறுபத்துமூன்று நாயன்மார்களைப் போன்றவர்கள். அவர்களில் முக்கியமாவார் யாவரெனில்:—

## மஹாராஷ்டிர நாட்டின் ஞானிகள் சாதுக்கள்.

1. புண்டலீகர்.
2. ஜயதேவர்.
3. துளசிதாசர்.
4. நாமதேவர்.
5. ஞானதேவர்.
6. கூர்மதாசர்.
7. ராகாகும்பார்.
8. கோராகும்பார்.
9. பரிசாபாகவதர்.
10. ஜகமித்திரர்.
11. ஜோகபரமானந்தர்.
12. நரஹரிபக்தர்.
13. ஜனாபாயி.
14. மச்சேந்திரநாதர்.
15. கோபிசந்தராஜன்.
16. சாங்கதேவர்.
17. சோகாமேளர்.
18. பத்மநாபவேதியர்.
19. ரோகிதாஸர்.
20. பிம்பாஜிபக்தர்.
21. நரசிம்மமேதா.
22. பிரமசாரி.
23. சூரதாசர்.
24. சேனாபிகர்.
25. சாத்வீகராஜன்.
26. கருமாபாயி.
27. ஜயவந்தபக்தர்.
28. சுரதாசர்.
29. ரசிகமுராரிபக்தர்.
30. மீராபாயி.
31. தாசிகான்ஹோபாத்ரா.
32. தாமாஜிபண்டிதர்.
33. மிருத்யுஞ்சயபக்தர்.
34. பானுதாசர்.
35. ஏகநாதசுவாமிகள்.
36. மாண்கோஜிபோதலே.
37. பகிரம்பட்டர்.
38. கணேசநாதர்.
39. கேசவசுவாமி.
40. கோமாயியம்மாள்.
41. லதீப்ஷாபக்தர்.
42. சந்தோபாபக்தர்.
43. நீளோபாபக்தர்.
44. உத்தவசித்கனர்.
45. நாபாஜிபக்தர்.
46. நானக்தாஸர்.
47. பிரேமாபாயி
48. சிளாபாயி.
49. சமர்த்த ராமதாச சுவாமிகள்
50. மண்டலீகராஜன்
51. பிளாபாயி.
52. ராமாபாயி.
53. ராமராஜர்.
54. ஒகருசாவ்கார்.
55. ஹரிஅனந்தவைஷ்ணவர்.
56. ராமசந்திரபட்டர்.
57. சுஹக்ஷாபக்தர்.
58. பன்னஹாசிரசபுத்திரர்.

59. ஜயமல்லராஜர்.
60. ஸ்ரீதரபண்டிதர்.
61. ஹரிபாலதாசர்.
62. ஜம்புதாஸர்.
63. தனுசாடர்.
64. சுகாநந்தர்.
65. மாதவதாஸர்.
66 ஹரிவியாசர்.
67. திரிபுரதாசர்.
68. லாடுபாதா.
69. திரிலோசனதாசர்.
70. சஜ்ஜனகசாருகர்.
71. அங்கதபூபதி.
72. குணவதிபாயி.
73. குபராபாயி.
74. கிரிதரலால்
75. பலக்புகார்.
76. ஷேக்பரிந்தாசர்.
77 சக்குபாயி
78. குபாகும்பார்.
79. கமலாகரர்.
....................

இன்னும் பலர் உளர். விரிக்கின் பெருகுமெனவிடுத்தோம். மஹிபதி கவியின்படி மேற்கண்ட மாஹான்களில் சிவாஜிமஹாராஜருக்கு ஸ்ரீ இராமதாசர் முக்கியகுருவாக இருந்து வந்தார். ஸ்ரீ துக்காராமதாசர் முக்கிய அபிமானபோதகர். இவர்களன்றியில் சிஞ்சுவாடி மொரியபந்து, நிகாடி இரகுநாதசுவாமி,விட்டலராவ்,வாமனஜோஷி, நிம்பஜிபாவா,போடலிபாவா, ஜயராம சாமி, பரமாநந்தபாவ, சங்கமேசுவரர் முதலானவர்கள் சிவாஜிக்கு ஞானத் துணைவர்களாம்.முகுந்தராஜர் பல்லாலர்காரர் 12-வது நூற்றாண்டில் பகவத்கீதையை முதல்முதல் மஹாராஷ்டிர பாஷையில் மொழிபெயர்த்து, சகலஜாதியாரும்,மதஸ்தர்களும் படித்துப்பேராநந்தமடையச் செய்தார்.16-ம் நூற்றாண்டில் ஐரோபாகண்டத்தில்மதவிஷய சீர்திருத்தம் செய்யப்பட்டதைப்போலவே இந்தியாவில் சங்கதேவ், தியானதேவ், நிவர்த்திதேவ், சோபானதேவ், முக்தாபாய், காளிபாய்,அகாபாய், வேணுபாய், துக்காரம், நாமதேவ், ஏகநாத், இராமதாசர்,ஷேக்மகம்மது,சாங்பஹமணி, தாமாஜி, உத்தமர், பானுதாஸ், கூர்மதாஸ், போடிலிபாவா, சாந்தோபாவா, கேசவசுவாமி,ஜெயராமசுவாமி,நரசிம்மசரஸ்வதி, அரங்கநாதசுவாமி, சொக்கமேளர், குயவர்களான நரஹரிசேனர், சாவதியமாலி, பஹிராமபத்தர்,கநேஷநாதர்,ஜனார்த்தனபந்து, மூடிபந்து முதலானவர்கள் இந்துமதத்தைச் சமரசமாக சீர்திருத்தினார்கள். தியானதேவின் சகோதரி முக்தாபாய் சந்நியாசியான பிறகு பந்துக்களால் சாதியிலிருந்து தள்ளப்பட்டாள். மாலோபந்து சக்கிலிச்சி ஜாதியான மாஹார்பெண்ணை விவாகம் செய்துகொண்டார். ஜயராமருடைய குருவாகிய

சுமார் 200-பாகவதர்கள் அவதரித்து அந்நாட்டை அலங்கரித்தார்கள். அவர்களில் அநேகர்: பிராம்மணர், சூத்திரர், மஹார் என்ற கீழ்ஜாதி சக்கிலியர், மகமதியர் முதலான பல ஜாதியார்களாம். அவர்கள் தென்தேசத்து சைவ அறுபத்துமூன்று நாயன்மார்களைப் போன்றவர்கள். அவர்களில் முக்கியமாவார் யாவரெனில்: —

## மஹாராஷ்டிர நாட்டின் ஞானிகள் சாதுக்கள்.

1. புண்டலீகர்.
2. ஜயதேவர்.
3. துளசிதாசர்.
4. நாமதேவர்.
5. ஞானதேவர்.
6. கூர்மதாசர்.
7. ராகாகும்பார்.
8. கோராகும்பார்.
9. பரிசாபாகவதர்.
10. ஜகமித்திரர்.
11. ஜோகபரமானந்தர்.
12. நரஹரிபக்தர்.
13. ஜனுபாயி.
14. மச்சேந்திரநாதர்.
15. கோபிசந்தராஜன்.
16. சாங்கதேவர்.
17. சோகாமேளர்.
18. பத்மநாபவேதியர்.
19. ரோகிதாஸர்.
20. பிம்பாஜிபக்தர்.
21. நரசிம்மமேதா.
22. பிரமசாரி.
23. சூரதாசர்.
24. சேனுநாபிகர்.
25. சாத்விகராஜன்.
26. கருமாபாயி.
27. ஜயவந்தபக்தர்,
28. சுரதாசர்.
29. ரசிகமுராரிபக்தர்.
30. மீராபாயி.
31. தாசிகான்ஹேபாத்ரா.
32. தாமாஜிபண்டிதர்.
33. மிருத்யுஞ்சயபக்தர்.
34. பானுதாசர்.
35. ஏகநாதசுவாமிகள்.
36. மாண்கோஜிபோதலே.
37. பகிரம்பட்டர்.
38. கணேசநாதர்.
39. கேசவசுவாமி.
40. கோமாயியம்மாள்.
41. லதீப்ஷாபக்தர்.
42. சந்தோபாபக்தர்.
43. நீளோபாபக்தர்.
44. உத்தவசித்கனர்.
45. நாபாஜிபக்தர்.
46. நானக்தாஸர்.
47. பிரேமாபாயி
48. சிளாபாயி.
49. சமர்த்த ராமதாச சுவாமிகள்
50. மண்டலீகராஜன்
51. பிளாபாயி.
52. ராமாபாயி.
53. ராமராஜர்.
54. ஒகருசாவ்கார்.
55. ஹரி அனந்தவைஷ்ணவர்.
56. ராமசந்திரபட்டர்.
57. சுஹக்ஷாபக்தர்.
58. பன்னஹாசிரசபுத்திரர்.

59. ஜயமல்லராஜர்.
60. ஸ்ரீதரபண்டிதர்.
61. ஹரிபாலதாசர்.
62. ஜம்புதாஸர்.
63. தனுசாடர்.
64. சுகானந்தர்.
65. மாதவதாஸர்.
66 ஹரிவியாசர்.
67. திரிபுரதாசர்.
68. லாடுபாதா.
69. திரிலோசனதாசர்.
70. சஜ்ஜனகசாருகர்.
71. அங்கதபூபதி.
72. குணவதிபாயி.
73. குபராபாயி.
74. கிரிதரலால்
75. பலக்புகார்.
76. ஷேக்பரிந்தாசர்.
77 சக்குபாயி
78. குபாகும்பார்.
79. கமலாகரர்.
......................

இன்னும் பலர் உளர். விரிக்கின் பெருகுமெனவிடுத்தோம். மஹிபதி கவியின்படி மேற்கண்ட மாஹான்களில் சிவாஜிமஹாராஜருக்கு ஸ்ரீ இராமதாசர் முக்கியகுருவாக இருந்து வந்தார். ஸ்ரீ துக்காராமதாசர் முக்கிய அபிமானபோதகர். இவர்களன்றியில் சிஞ்சுவாடி மொரியபந்து, நிகாடி இரகுநாதசுவாமி,விட்டலராவ்,வாமனஜோஷி, நிம்பஜிபாவா,போடலிபாவா, ஜயராம சாமி, பரமாநந்தபாவ, சங்கமேசுவரர் முதலானவர்கள் சிவாஜிக்கு ஞானத் துணைவர்களாம்.முகுந்தராஜர் பல்லாலர்காரர் 12-வது நூற்றாண்டில் பகவத்கீதையை முதல்முதல் மஹாராஷ்டிர பாஷையில் மொழிபெயர்த்து, சகலஜாதியாரும்,மதஸ்தர்களும் படித்துப்பேராநந்தமடையச் செய்தார்.16-ம் நூற்றாண்டில் ஐரோபாகண்டத்தில்மதவிஷய சீர்திருத்தம் செய்யப்பட்டதைப்போலவே இந்தியாவில் சங்கதேவ், தியானதேவ், நிவர்த்திதேவ், சோபானதேவ், முக்தாபாய், காளிபாய்,அகாபாய், வேணுபாய், துக்காரம், நாமதேவ், ஏகநாத், இராமதாசர்,ஷேக்மகம்மது,சாந்பஹமணி, தாமாஜி, உத்தமர், பானுதாஸ், கூர்மதாஸ், போடிலிபாவா, சாந்தோபாவா, கேசவசுவாமி,ஜெயராமசுவாமி,நரசிம்மசரஸ்வதி, அரங்கநாதசுவாமி, சொக்கமேளர், குயவர்களான நரஹரிசேனர், சாவதியமாலி, பஹிராமபத்தர், கநேஷநாதர்,ஜனார்த்தனபந்து, மூடிபந்து முதலானவர்கள் இந்துமதத்தைச் சமரசமாக சீர்திருத்தினார்கள். தியானதேவின் சகோதரி முக்தாபாய் சந்நியாசியான பிறகு பந்துக்களால் சாதியிலிருந்து தள்ளப்பட்டாள். மாலோபந்து சக்கிலிச்சி ஜாதியான மாஹார்பெண்ணை விவாகம் செய்துகொண்டார். ஜயராமருடைய குருவாகிய

கிருஷ்ணதாஸ் ஒரு நாசுவப்பெண்ணை விவாகம் செய்துகொண்டார். ஏகநாதர் ஒரு மாஹர்ஜாதி ஏழைக்கு அன்னமிட்டதால் ஜாதியிலிருந்து நீக்கிவிடப்பட்டார். நாமதேவர் பண்டரிபூரில் பிராமண விருந்து செய்தபோது தியானதேவர் ஆவிரூபமாக வந்து உண்டாராம். சொக்கமேளரை பண்டரிபுர கோயிலில் புகாதபடி பிராம்மணர் தடுத்துவிட்டார்கள்.

ஏகநாதர், துக்காராம், நாமதேவ், போடிலிபாவா, சொக்கமேளர், டாமாதிபந்து, பானுதாஸ், தியானதேவ் இவர்கள் இல்லறத்திலிருந்து பக்தர்களாகிமுக்திபெற்றனர். இந்தமஹான்களுடைய போதனையாவது:—சகலஜாதியாரும் சாந்தம் சத்திய முதலாகிய குணங்களை யுடையவராகி, சர்வேசுவரனை சதா தியானித்து, தம்தம் சுபாஷைகளில் பாடியாடி யாநத்தித்து இகபரசுகமடைய வேண்டுமென்பதும், இல்லறமே சித்திதருமென்பதும், பெண்களும் பக்த சிரோன்மணிகளாகி முத்தி பெறலா மென்பதுமேயாம்.

## சாக்தமதம்.

சாக்தமதஸ்தர் சத்தியே பிரம்மமென்றும் அச்சத்தியினிடத்திலிருந்து பிரம்மா, விஷ்ணு, உருத்திரன், மயேச்சுரன், சதாசிவனென்கிற பஞ்சகர்த்தாக்களும், சிற்சத்தி-பராசத்தி-இச்சாசத்தி - ஞானசத்தி - கிரியாசத்தியென்கிற பஞ்சசக்திகளும் உண்டானார்களென்றும், இவர்களாலே ஜகத்காரியம் உண்டாயிற்றென்றும், சத்திக்குமேலே வேறொரு ஈஸ்வரனில்லை யென்றுங் கூறுவர். வல்லபாசாரி மதமானது சக்திமதத்திலிருந்து உற்பத்தியானதாக சிலர் எண்ணுகிறார்கள். அது பிசகு. சக்திமதத்தின் கோட்பாடு பலவிதத்திலும், வித்தியாசப்பட்டிருக்கிறதானமையால் அந்த சக்தி மதத்தின் விவரத்தை இதனடியிற் காட்டுகிறோம். இந்த மதம் கபிலருடையகோட்பாட்டை யனுசரித்துண்டானதாகத் தோன்றுகிறது. இருக்குவேதத்தில்: பிரமசிருஷ்டி காலத்தில் ப்ரம்மத்தைவிட வேறு வஸ்துவின்மையால், சிருஷ்டியாதி காரியங்களுக்குத் துணையாகவேண்டுமென்றெண்ணி, தன் சுவாசத்தினால் சக்தியாகிய பிரகிருதியை முதலில் படைத்ததாகவும்; சாமவேதத்தில்: சிருஷ்டி காலத்தில், ப்ரம்மத்தைவிட வேறு ஒருவருமில்லாமையால் சக்தியைப் படைத்து அதன் மூலமாக சிருஷ்டியாதி கிருத்தியங்களைச் செய்வித்தமையால்,

அந்த சக்தியையே பிரம்மமாகக்கொண்டு வணங்கி வருவதாகச் சிலர் எண்ணுகிறார்கள். ஆயினும், புராணங்கள் பிரபலமான காலத்தில், இம்மதமும் பிரபலமாகத் தலைப்பட்டது. பிர்மகைவர்த்தபுராணம் பிருகிருதிகாண்டத்தில் இந்த சக்தி பூஜையைப்பற்றி விசேஷமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. எப்படியெனில், பிர்ம்மாவானவர் சிருஷ்டிகாலத்தில் தமது வலதுபாகம் புருஷரூபமாகவும், இடதுபாகம் ஸ்திரிரூபமாகவும், அதாவது பிரகிருதியாகவும் மாற்றம் பெற்றதாகவும், வேறோரிடத்தில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் உலகசிருஷ்டி காலத்தில் தம்மைத்தவிரவேறுயாருமில்லாமையால் மூலப்பிரகிருதியைச் சிருஷ்டித்ததாகவும், அம்மூலப்பிரகிருதியே துர்க்கை, சக்தி, மாயை, லக்ஷ்மி, இராதா, சரஸ்வதி என்னும் ஐந்து ரூபங்களை எடுத்து, அதாவது மூலப்பிரகிருதியானது அம்ஸரூபணி, கலாரூபணி, காலம்ஸரூபணி என்றாதி நாமரூபங்களையும்; கங்கை, துளசி, மானசா, சாஷ்டி, தேவசேனை, மங்கல சந்திக, காளியென்றாதி நாமரூபங்களையும்; சுவாஹா, ஸ்வதா்மதக்ஷிணாஸ்வஸ்தி, புஷ்டி, துஷ்டி என்றாதிகளையும்; திருதி, பிரிதிஷ்டை, அதர்ம, மிருத்தியூ, திதி, அதிதி முதலான குணரூபங்களையும் பெற்றிருப்பதாலும், ஷை சக்திக்குத் தற்கால பிரகிருதிகளாக இருக்கும் ஸ்திரீகளை பூஜிக்கவேண்டும் என்றும், ஸ்திரீகளை நிந்திப்பவன் அதோகதி யடைவான் என்றும், பிராம்மண ஸ்திரிகளுக்கு ஆடையாபரணங்கள் கொடுத்து வணங்கினால், சாக்ஷாத் சக்தியையே வணங்கியதற்குச் சமமென்றும், ஸ்காந்தம், கல்கிபுராணம் இவற்றில் சொல்லப்பட்டிருப்பினும், ஐந்தாவது வேதமென்றெண்ணும் தாந்திர சாஸ்திரங்களில் இம்மதத்தைப்பற்றி,பத்ததிரீதியாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

சியாமரகசியம், ருதிரயமலம், மந்திரம் ஹோதிதி, சாரதிலகம், காலிகதந்திரம், குலசூடாமணி, குலார்ணவம் முதலான தந்திரசாஸ்திரங்கள் சாக்தேயருடைய முக்கிய மதகிரந்தங்களாம். இந்த தந்திர சாஸ்திரங்களின் உதவியைக்கொண்டு இச்சித்தாந்தத்தைத் தழுவி வருபவர் இப்போது வங்காளம் அதைச்சார்ந்த கீழ்நாடுகளில் அநேகர் இருக்கிறார்கள். அவர்களில் தக்ஷிணாசாரிகள், வாமாசாரிகளென்னும், வலங்கையார், இடங்கையார் என்னும் இருவகுப்பார்களிருக்கிறார்கள்.

## சாக்தேயமத விவாதம்.

### தக்ஷணர்களுடைய சக்திமதம்.

இந்த சக்திபூஜையை பகிரங்கமாகச் செய்து வருபவருக்கு வலங்கையார் அல்லது தக்ஷணாசாரிகளென்று பெயர். இவர்கள் ஆட்டுக்குட்டிகளைக் கொன்று, அல்லது இரத்தத்தைக்கொண்டு தூர்க்கைக்கு பூசை செய்கிறார்கள். வாமாசாரிகள் என்னும் இடங்கையார் தூர்க்கைக்கு தானியம், பால், சர்க்கரை, பழங்கள் இவற்றைவைத்து வணங்குகிறார்கள். இவர்கள் வங்காளத்தில் தூர்கபூஜை என்றபெயரால் பிரபலமாகக்கொண்டாடி வந்தாலும், மிர்சாபூருக்கடுத்த விந்தியவாசனி என்னும் இடத்திலும், நாகர்கோட்டையை யடுத்த ஜுவாலமுகி என்னும் இடத்திலும் அநேகசாக்தேயர் இருக்கிறார்கள். வாமாசாரிகள் என்பவர்கள் துர்க்கா, காளி, லக்ஷ்மி, சரஸ்வதி என்பவர்களை சக்திசொரூபமாகக்கொண்டு மாம்ஸம், மச்சம், மதியம், மைதுனம், முத்திரை என்னும் ஐந்தும் மமகாரங்களைக்கொண்டு பூசிப்பார்கள். இவர்களிற் சிலர் நடுராத்திரியிற் சுடுகாட்டுக்குப் போய், புதைத்திருக்கும் பிரேதங்களை யெடுத்து வைத்துக் கொண்டு அதனை மதுமாமிசாதிகளால் பூசிப்பார்கள். சிலர், ஸ்திரீகளை நிருவாணமாக நிறுத்தி மர்மஸ்தானத்துக்குச் சந்தன குங்கும புஸ்பாதிகளுமிட்டு மதுமாமிச பூசைசெய்து வருவார்கள். இப்பூசைக்கு ஸ்ரீசக்கிரம் அல்லது பூரணபிக்ஷை என்று பெயர். இவ்வகுப்பில் பிராமணர்களும் சிலருண்டு. இவர்கள், நெற்றியில் அர்த்த சக்கிரவடிவாகக் குங்குமாதி திலதத்தையும், கழுத்தில் ருத்திராக்ஷ மாலையையும், பூஜாகாலத்தில் சிவப்புப்பட்டு வஸ்திரங்களையும் சிவப்பு, புஷ்பமாலைகளையும் தரிப்பார்கள்.

### காசிலியர் மதம்.

இம்மதஸ்தர்கள் பார்வைக்கு சாக்தேயர்கள்போல நடக்கினும், இவர்கள் நடவடிக்கைகள் வேறு. அதாவது இவர்கள் லக்ஷ்மியே சக்தியென்றும், அத்தேவிக்கு மதுமாமிசமிட்டு பூசிப்பதோடு, தம் கோஷ்டியைச் சார்ந்த ஸ்திரிகளுடைய இரவிக்கைகளைக் கழற்றி மஞ்சள்நீர் நிறைந்த தொட்டியிற்போட்டு, அந்த இரவிக்கைத் துணி எந்த மனுஷனுக்குக் கிட்டுகிறதோ அந்தமனுஷன் அந்தஇரவிக்கைக்குச்சொந்தக்காரியான ஸ்திரீ

யோடு சேர்வானும். இதற்கு இரவிகலுபூஜை என்று பெயர். இம்மதஸ்தர்கள் இப்போது அபூர்வம்.

## காராரிகள் மதம்.

இவர்கள் காளிகாதேவியை காபிலக்ஷ, ஆரோரகாந்தி, சாமுண்டி, சின்னமஸ்தகி என்றுதி பெயர்களால் வணங்கிக் கூரிய ஆயுதங்களைக்கொண்டு தேகத்தின் பலபாகங்களில் குத்திக்கொண்டு வணங்குபவர்கள். இவர்கள் ஒருகால் நரபலிகளையும் செய்து வந்தார்களாம். இவர்களும் இப்போது அபூர்வம்.

## வங்கநாட்டு வைணவசித்தாந்திகள்.

வங்கநாட்டில் சக்திமதமானது பிரபலமாகி அந்நாட்டின் குடிகள் காமக்குரோதாதிகளில் மூழ்கித் தத்தளிப்பவர்களுக்குப் பரிசுத்த பக்திமார்க்கத்தைப் போதித்து இகபரசுகமடையும்படி ஸ்ரீ சைதன்னிய மஹாநுபாவர் அவதரித்தார். அவர் சரித்திரமாவது:—

## சைதன்னியர் சரித்திரமும் மதமும்.

சைதன்னியரானவர் கி. பி. 1485-ஞ கிரஹண விடுதலை காலத்தில் வங்கதேசத்தைச் சார்ந்த நதியா மாகாணத்தில் பிறந்தார். இவர் பாட்டனாராகிய உபேந்திரமிசார் என்பவர் மகா பக்திமானாக சிலெட்டு டிஸ்டிரிக்ட்டில் குடியிருந்தார். இவர் தந்தையாகிய ஜகநாதமிசிரரும் மகாபக்திமானாகி பாகீரதி நதிக்கரையாகிய நத்தாவில் தங்கி தபசுசெய்தார். இந்த சைதன்னியருடைய தாயாராகிய சசிதேவியார் வயிற்றில் விஸ்வரூபரென்னும் சகோதிரரும் பிறந்துசிறுவயதிலேயேவைணவ சந்நியாசியாகிவிட்டார்.சைதன்னியர் ஸமஸ்க்ருத பாஷையில் பூரணபண்டிதராகி, பாகவதம், பகவத்கீதை முதலான கிரந்தங்களை முக்கிய பாராயண கிரந்தங்களாகக்கொண்டு சிறந்த வைணவமதாசாரியராகி, அப்போது வங்கதேசத்தில் மலிந்திருந்த தாந்திரிக சாக்தேய மதஸ்தர்களைக் கண்டித்து, ஜாதிபேதத்தை நீக்கி, பிரபல வித்துவானாகவும் பிரகாசித்து கயா க்ஷேத்திரத்துக்குப்போய், தமது தந்தைக்குப் பிண்டசிராார்த்தத்தைச் செய்தார். அப்போது நித்தியாநந்தர் என்னும் ஒரு பக்தர் ஆசாரியராக வைணவத்தை அவருக்குப் போதிக்க இந்த குருவே இவருக்குச் சீடராகிவிட்டார். பிறகு ஸ்ரீவல்

லபாசாரியாருடைய குமாரத்தியாகிய லக்ஷ்மிதேவியை விவாஹம் செய்துகொண்டார். இந்தமனைவி சீக்கிரம் இறந்துபோக, விஷ்ணுபிரியை என்னும் வேறொரு பெண்ணை விவாஹம் செய்துகொண்டார். அப்படி விவாஹம் செய்துகொண்டாலும், தமது 24-வது வயதில் சுந்தசந்நியாசத்தை அநுசரித்து மனைவியையும் மாதாவையும் மற்றுமுள்ள சகல உலக சுகங்களையும் தொலைத்துவிட்டு, முதல்முதல் (Guori) கவுரி என்னும் இடத்தில் வைணவசமரச ஞானத்தைப் போதிக்க, அங்கு இரண்டு மகமதியர்கள் இவர் உபதேசத்தில் நம்பி சீடரானார்கள். அவர்களுக்கு சநத்ர், ரூபர் என்று பெயர். பிறகு சாந்திபூர், பூரிமுதலான விடங்களைக் தரிசித்து, அங்கு சார்வபவுமன் என்னும் சிறந்த பட்டாசாரியை சீடனாக்கிக் கொண்டு, தக்ஷணதேசயாத்திரைசெய்து இராமேசுவரத்தைத் தரிசித்தார். பிறகு காசி, மதுரை முதலான திவ்விய ஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டு ஜாதிபேதமற்ற சமரச மதாசாரியரானார். ஸ்ரீ மதுரா பிருந்தாவனத்துக்கு வந்து, பிறகு ஜகநாதம் வரையிலுள்ள சகல புண்ணிய ஸ்தலங்களையும் தரிசித்து தமது 30-வதுவயதில் நலாசெலா என்னும் இடத்தில் ஸ்ரீசச்சிதாநந்தமான விஷ்ணுவை சதா தியானித்து அங்கம்பரவசமாக ஆடிப்பாடி காலங்கழித்து வருநாளில், கி. பி. 1527-ஞ் தமது 43-வது வயதில் கண்களுக் ககப்படாமல் மறைந்தார். இவர் எந்த ஜலத்தைக்கண்டபோதிலும் யமுனாநதியாகவும், எந்த வஸ்துவைக் கண்டபோதிலும் ஸ்ரீ கிருஷ்ணரைப்போலவும் பாவித்திருந்தபடியால், ஓர் பூரணசந்திர பிரகாசமுள்ள ராத்திரியில் சில்கா ஏரிக்கரையின்மேல்பாடிக்கொண்டுபோகையில் அந்த ஏரியின் ஜலம் சந்திரபிரகாசத்தினால் யமுனாநதிபோல் தோன்றவும், அதில் பிரகாசிக்கும் சந்திர பிம்பத்தின் பிரதிபிம்பம் ஸ்ரீ கிருஷ்ணரைப்போல நடிக்கத் தோன்றவும், ஓடிப்போய்க் கட்டித்தாவ அப்படியேவிழுந்து பரமபதமடைந்து, மறுநாள் மீன் பிடிப்பவர் வலையிலகப்பட்டு, மேலே கொண்டுவர, உடனே எழுந்து ஹரிபோலோ! ஹரிபோலோ! என்றுசொல்லிக்கொண்டு மறைந்துவிட்டாராம். இவருடைய சீடராகிய ஸ்ரீ கிருஷ்ணதாசர் சைதன்னியர் சரித்திராமிர்தம் என்னும் பெயரால் வங்கபாஷையில் ஒரு சிறந்த கிரந்தமெழுதியிருக்கிறார். இந்த சைதன்னியருடைய சகாயர்களான அத்வைதாநந்தரும், நித்தியாநந்தரும் வங்கதேசத்தில் மஹாபிரபுக்களாகி தமது மதத்தை ஸ்தாபிக்க பிரவர்த்திக்க மற்று

ஆறு கோஷாயிகளும் பிருந்தாவனத்துப்போய்த் தங்கி தமது சித்தாந்தத்தைப் போதித்து வந்தார்கள்.

இவர்கள் சதா ஸ்ரீகிருஷ்ணநாமத்தைப் படணம்செய்து கொண்டும், நெற்றியில் இரண்டு வெள்ளைக்கோடுகளோடும் கையில் 108-துளசிமணிகள் கோர்த்த ஜபமாலையை வைத்துக் கொண்டும், கேவலம் பக்தியினாலேயே பரமபத மடையலா மென்று சொல்லுகிறார்கள். இப்போது பிருந்தாவனத்தில் ரூபர், சநந்தனன் என்பவர்கள்தான் முக்கிய குருமார்களாகக் கொண்டாடப்பட்டு வருகின்றனர். காசிப்பட்டணத்திலும் சக்திமதத்தினால்குடிகள் சிக்கித்தத்தளிக்கும்போது அவர்களுக்கு உண்மையான விஷ்ணுபக்தியைப் போதிக்க ஸ்ரீ ராமாநந்தர், கபீர்தாசர், நிம்பாதித்தர் முதலானவர்கள் ஜனித்தார்கள். அவர்கள் சரித்திரங்களாவன:—

## இராமாநந்தர் மதம்.

இந்த மதவகுப்பை ஸ்தாபித்த இராமாநந்தரென்பவர் கி. பி. 14-ம் நூற்றாண்டில் காசிப்பட்டணத்தில் பிரபலமான விஷ்ணுபக்தர். இவர் இராமாநுஜருடைய சீடரானபடியால் இவர் மதமும் ஏறக்குறைய இராமாநுஜ சித்தாந்தமென்றே சொல்லலாம். இந்த மதஸ்தர்கள் கோபிசந்தனத்தில் தென் கலை நாமத்தைப் பூண்டு ஸ்ரீராமரையும் சீதையையும் வணங்கி வருகிறார்கள். இவர்களுடைய விசேஷமான கிரந்தம் பக்தி பாலை என்னப்படும். இந்த மதஸ்தர்கள் கங்கை நதிக்கரையிலும், முக்கியமாக ஆகிராதேசத்தைச் சுற்றிலும் ஏராளமாக இருக்கிறார்கள். இந்த மதத்தைச் சார்ந்த பைராகிகளுக்குள் ஜாதிபேதங் கிடையாது. இந்த மதாசாரியாருக்கு 12-சிஷர்க ளிருந்தார்கள். அவர்களிற் சிறந்தவர் கபீர்தாஸ் என்பவர். இவர் இராமரை விஷ்ணுவாக வணங்கி வந்தாலும், விக்கிரகாராதனையையும் ஜாதி பேதத்தையும் நீக்க முயற்சி செய்தும், உலக ஆடம்பரங்களை விட்டொழித்து உத்தமனாகும் விஷ்ணுவை யடைதலே சிறந்த பாக்கியமென்றும் பிரசங்கித்தார். இவருடைய சரித்திரத்தைப் பலவிதமாகப் புகழுவார்கள்.

## கபீர்தாசர் சரித்திரம்.

கங்கைநதிதீரத்திலிருக்கும் காசிப்பட்டணத்தில் மகா வைணவபக்தராகிய தமால்மோமி என்னும் மகம்மதியன் மக்

வில்லாக்குறைவால் வாடி விஷ்ணுவைத் துதித்து, தாம் நெய்யும் துணியின் நூலை கங்கையிற் கழுவப்போகையில் ஒரு கிளிஞ்சியில் ஒரு குழந்தை யகப்பட, அதை எடுத்துக்கொண்டு வந்து மனைவியிடம்கொடுக்க, நாளொருவண்ணமாக வளர்ந்து, கபிர் என்று பெயரிட்டு நெசவு வேலையைக் கற்றுக்கொடுத்து, நெய்த துணிகளை விற்றுவரும்படி செய்ய, கபீரானவர் துணிகளை ஏழைகளுக்கு இனமாகக் கொடுத்துவர, மாதா திட்டி புத்திவரும்படி ஒருபெண்ணை விவாகம்செய்ய, அவள் வயற்றில் கமால்தாசரென்று ஒருவாலிபன் பிறந்து, ஏழாவது வயதில் துவாரகைக்குப் போய் வந்து சாதுபோஷணையால் பிராணனைத் தத்தம் செய்து மறுபடியும் உயிரைப்பெற்றாராம். மற்றொருநாள் ஏராளமான சாதுக்கள் கபீர் வீட்டிற்கு உண்டிக்குவர, கையில் பொருள் இல்லாமல் வருந்தி ஒரு வர்த்தகனை துளசிதாசனை உதவி கேட்க, அவன் உன் மனைவியை ஒரு ராத்திரி என்னோடு ரமிக்க அனுப்பினால் உதவிசெய்வேனென்று சொல்ல, தாசர் சம்மதித்து தமது மனைவியை அலங்கரித்து அன்று ராத்திரி ஷை துளசிதாசன் வீட்டிற்கு அழைத்துக்கொண்டுபோய் விட்டுவர, மகாவிஷ்ணுவே அந்நகர அதிகாரியாக வேடம்போட்டுவந்து, அவளைக் கபீர் வீட்டுக்குக் கொண்டுபோய் விட்டுவரச்செய்து மறைந்ததாகவும், அன்றுமுதல் அந்தத் துளசிதாசரும், கபீர்தாசரும் பூரண பக்திபெற்றார்களாம்.

## பாஸ்கரமதம்.

இந்த வகுப்பாரை நிம்பார்க்கரென்றும், நிமாண்டிகரென்றுஞ் சொல்வதுண்டு. இந்த மதவகுப்பு கி. பி. 12-ம் நூற்றாண்டில் புகழ்பெற்ற விஷ்ணுபக்தராகவிருந்த நிம்மார்க்கர் அல்லது நிம்பாதித்தியரால் ஸ்தாபிக்கப்பட்டது. இவருக்கு நிம்பாதித்தர் என்னும் பெயர் வந்ததற்குக் காரணம்:- ஒருநாள் இவர் ஒரு ஜயின சந்நியாசியிடம் சமயசர்ச்சை செய்தபோது, மாலைப்பொழுதாகவே அந்த சந்நியாசிக்குப் பிரசாதமளிக்கக் கூப்பிட்டபோது, சூரியாஸ்தமன மாகிவிட்டபடியால், ஜயினர் சாப்பிடேன் என்று சொல்லிவிட்டார். இக்கஷ்டத்தை நீக்க, நிம்மார்க்கர் சூரியனைத் தியானம் செய்து, சாப்பாடு தயாராகிறவரையில் அஸ்தமனமாகாமல் ஒரு நிம்ப என்னும் வேப்பமரத்தின் நிழலில் இருக்கப் பிரார்த்திக்க, அபிரபாகரரும் அப்படியே அந்த நிம்ப மர நிழலில்

நிற்க, அந்த ஜபினசந்நியாசி சாப்பிட்டாராம்; ஆகையால் சூரியனைத் தமது பக்திவிசேஷத்தினால் நிம்பமர நிழலில் நிற்கச் செய்வித்ததனால் அவருக்கு நிம்பாதித்தர் என்று பெயருண்டாகியதாம். இந்த நிம்பாதித்தருக்குள் கிரஹஸ்தர்களென்றும், விரக்தர்களென்றும் இருவகுப்பாருண்டு. நிம்பார்க்கருடைய இரண்டு சீடர்களாகிய கேசவபட்டர், ஹரிவியாசர் என்பவர்களில் ஹரிவியாசரிடம் நிம்பார்க்கருடைய திண்டு திவிரசுக விருக்கின்றனவாம். அக்குடும்பத்தார் யமுனை நதிக்கரையில் மதுராபுரியைச் சேர்ந்த துரவக்ஷேத்திரத்திலிருக்கிறார்கள். அவர்கள் அங்குசேர்ந்து 1400-ஆறு ஆகிரதாகச் சொல்லுகிறார்கள். இப்போது மதுராபுரி வங்காளத்தில் அநேகரிருக்கிறார்கள்.

வடக்கே மதுரை பிருந்தாவனங்களில் வல்லபாசாரியார் மதத்தின் குறைவுகளை நீக்க ஸ்ரீராதாவல்லபர், ஹரி நாராயணர், இரங்காசாரியர்கள் இவர்கள் அவதரித்தார்கள். இவர்கள் சரித்திரங்களாவன:—

## ஸ்ரீராதா வல்லபர் சரித்திரம்.

சம்வச்சரம் 1559ஆறு சஹான்பூர் ஜில்லா தேவவனம் என்னும் இடத்தில் வியாசர் என்னும் கவர பிராமணர் குழவியில்லாக் குறைவால் தவித்துக்கொண்டிருந்ததோடுகூட டில்லி சக்கிரவர்த்தியினிடம் உத்தியோகமமர்ந்து ஆக்ரா வழியாகப்போகும்போது அவருடைய மனைவியாகிய தாராதேவியின் வயிற்றில் கர்ப்பம் தரித்து ஸ்ரீ மதுரைக்கடுத்த வனம் என்னும் கிராமத்தில் ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அதற்கு ஹரிவம்சர் என்று பெயரிட்டு வளர்த்துவந்து, ருக்மணி என்னும் ஒரு பெண்ணைக் கொண்டு விவாஹம் செய்துவைக்க, அந்த ருக்மணி வயிற்றில் இரண்டு ஆண் பிள்ளைகளும் ஒரு பெண் பிள்ளையும் பிறந்து, மூத்த குமாரராகிய மோஹனசந்திரர் மகவில்லாமல் மரணமடைய, இளைய குமாரருடைய சந்ததி கோபிநாதர் என்பவர் இப்போது தேவவனத்திலிருக்கிறார். இந்த ஹரிவம்சர் தனது குமாரத்திக்கு விவாகம் செய்வித்தவுடனே சந்யாசத்தை யனுசரித்துப் பிருந்தாவனத்தை நாடி வருகையில், வழியில் ஒரு விருத்த பிராமணர் சந்தித்து, தனது இரண்டு குமாரத்திகளையும் விவாகம் செய்துகொள்ள வேண்டுமென்றும், அப்படிச் செய்துகொ

ள்ள அருள்வாக்குக் கிடைத்ததென்றும் சொல்லி இராதா வல்லபர்என்ற பெயரால் ஒருகிருஷ்ண விக்கிரகத்தைக் கொடுத்துப் பூஜைசெய்யும்படி உத்திரவளிக்க, அவரும் சம்மதித்து அந்தப்படியே இரண்டு பிராமண குமாரத்திகளையும் விவாகம் செய்துகொண்டு ஸ்ரீ ராதாவல்லபர் கோயிலைப் பிருந்தாவனத்தில் கட்டி, ஸ்ரீராதாவே முக்கிய பிராண தேவதையாகக்கொண்டு பல இனிய கீத கிரந்தங்களை இயற்றினர். இவர் ஆதியில் துவைத சித்தாந்தத்திலும், பிறகு நிம்பார்க்க சித்தாந்தத்திலும் பிரியமுடையவராகவிருந்து, அநந்தரம் ஸ்ரீராதா வல்லபரென்னும் காமசாந்தத்தில் பிரியப்பட்டார். ஆகவே இவர் இராதாசுதாநிதி என்றாதி சிங்காரகவிகளைப்பாடி ஆநந்த நடனமாடினூர். இவர் பாட்டுகளை பக்திமாலா என்னும் கிரந்தத்தில் பார்க்கலாம். அந்தப்பாட்டுகள் யாவும் சிங்கார அலங்கார நூல்களையனுசரித்துப் பாடப்பட்டிருக்கினும் காயவிகாரமான கவிகள் என்பதற்குச் சந்தேகமில்லை. இவரது பிரதம சிடர் வியாசஜி என்பவருக்கு அநேக மகிமைகளைக் காட்டினூர். இவரது சமாதியும் இப்போது பிருந்தாவனத்திலிருக்கிறது.

இந்த இராதாவல்லபருடைய இரண்டாவது சிடர் துருவதாஸ் என்று பெயர்பெற்றவர். இவர் (1) ஜீவதசை, (2) வேதகானம், (3) மனசிக்ஷா, (4) பிருந்தாவன சத்து, (5) பத்திநாமாவளி, (6) பிரஹுதபிமாள புராணம், (7) கியால் உலாசம், (8) சித்தாந்த விசாரம், (9) பிரிதி சோவனி, (10) ஆநந்த சதகம், (11) பஜனசதகம், (12) பஜன சத்து, (13) ஸ்ரீரங்க சதகம், (14) மனோ சிங்காரம், (15) ஹித சிங்காரம், (16) சபாமண்டலம், (17) இராஜ முக்தாவளி, (18) பஜன குண்டலம், (19) இராச பிரயாவளி, (20) இராச இரத்னுவளி, (21) பிரேமாவளி, (22) ஸ்நிரீ பிரிய ஜிகநாமவளி, (23) இரஹஸிய மஞ்சரி, (24) சுகமஞ்சரி, (25) இரதிமஞ்சரி, (26) நேமஹ மஞ்சரி, (27) வனவிஹாரம், (28) இராவிஹாரம், (29) இரங்க உலாசம், (30) இரங்க விஹாரம், (31) இரங்க விநோதம், (32) ஆநந்தரசம், (33) இரஹஸ்யலதம், (34) ஆநந்தலதம், (35) அநுராகலதம், (36) பிரேமலதம், (37) இராகநந்தம், ஜலகலதியானம், (38) நிருக்த விலாசம், (39) தனலீல, மன லீல, (40) விரஜலீலா என்றாதி கவிகிரந்தங்களை யியற்றியிருக்கின்றனர்.

இவைகளன்றியில் தாமோதிரதாசரால் வல்லபராசிக பானி, குருபிரதாபம் என்னும் கிரந்தங்களும், தாமோதிர சுவாமியால் ஹரிநாம மஹிமா என்னும் கிரந்தமும், ஹித வல்லபரால், ஸ்ரீரூபலால் ஜிகஸ்தா என்னும் கிரந்தமும், பிருந் தாவன தாசரால் ஹரிநாமபலி, ஸ்ரீலால்ஜிபாதி என்ற கிரந்த மும் விசேஷமான கிரந்தங்களாகக்கொண்டு பிருந்தாவனத்தி லும் ஸ்ரீமதுரையிலும் சகலராலும் படிக்கப்பட்டு வருகின் றன.

## சுவாமி ஹரிதாசருடைய சரித்திரம்.

இந்த சுவாமி ஹரிதாசருடைய சித்தாந்தத்தைச் சார் ந்த வைணவர்களும் பிருந்தாவனத்தில் அநேகர் இருக்கின்ற னர். இங்கே இவர்களுடைய முக்கியமான கோயிலுக்கு பியார்ஜி என்று சொல்லப்பட்ட பிரம்மாண்ட மந்திரமிருக் கிறது. இது சமீப காலத்துக்கு முன் 70,000 ரூபாய் செலவு செய்து ரிபேர் செய்யப்பட்டிருக்கிறது. இந்த வைணவர்கள் சந்ததியார் 500 பெயர்கள் பெண்சாதி பிள்ளைகளோடு வாழ் ந்து வருகிறார்கள்.

ஸ்ரீமதுராபுரிக்குச் சமீபத்தில் கோல் என்னும் கிராமத் தில் பிரம்திகா என்னும்பெயருடையசநந்தபிராம்மணர் அந்த கிராமத்தில் கிரிதரன் என்னும் பெயரால் ஸ்ரீ கிருஷ்ணரை வைத்து வணங்கிவரும்போது,பிருந்தாவனத்துக்கடுத்த இரா ஜமா கிராமத்தில் கங்காதரன்என்னும் பிராமணருடைய குமா ரத்தியை விவாகம் செய்துகொள்ள, சம்வச்சரம் 1441-ஆ ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அதற்கு ஸ்ரீ ஹரிதாசன் என்று பெயரிடப்பட்டது. அந்த குழந்தை சிறு பிராயத்தி லேயேவிஷ்ணுபக்தியில் ஈடுபட்டதாகிப்பெற்றோர்களுடைய இஷ்டப்பிரகாரம்கிரஹஸ்தாசிரமத்தைத்தழுவாமல்சந்நியாசி யாகி பிருந்தாவனத்துக்கும் யமுனைக்கும் மத்தியிலிருக்கும் மானசசரோவரத்தில் தபசுசெய்துகொண்டு காலம் போக்கிப் பிறகு நிதவனத்துக்கு வர, அவர் தாய்மாமனாராகிய விட் டல பூபாலர் பிரதமசீடரானார். இந்த ஹரிதாசருடைய மகத் துவம் நாலாபக்கத்தில் பரவ டில்லியிலிருந்த தயால்தாஸ் என் பவருக்கு ஒரு மஹான் கொடுத்திருந்த தங்கம் செய்யும் கல்லை எங்கேயோ போக்கடித்துவிட்ட விசனத்தினால் இவ ரிடம் வந்து முறையிட, இவர் அந்த தயாலதாசரைக் கூப் பிட்டு யமுனையிலிருக்கும் மணலில் ஒரு பிடி மணலை யெடுக்

கும்படி செய்ய, அவர் அப்படியே எடுத்துப்பார்க்க ஒவ்வொரு மணலும் தாம் முன் போக்கடித்த தங்கம் செய்யும் கற்களாக விருக்கக்கண்டு ஆச்சரியப்பட்டு, இவருக்குச் சீடரானார். இந்த ஹரிதாசரிடத்தில் ஒரு சாலக்கிராமம் இருப்பதினால்தான் இப்படி தங்கமாகிறதென்று எண்ணிய சில திருடர்கள் ஷை சாலக்கிராமத்தை எடுத்துக்கொண்டுபோய் அது பிரயோஜனத்தைக் கொடாமையால் ஒருபுதரில் எறிந்துவிட்டார்கள். இது சங்கதியை ஹரிதாசர் ஞானதிருஷ்டியினால் அறிந்து அதை அவ்விடத்திலே யிருக்கும்படி செய்து, பிரதினம் ஒன்றுக்குக் கோயில் பூஜைகளும் குரங்குகள் முதலானவைகளுக்கு ஆகாரமும்வாங்க ஒரு பொன்காசு பிறக்கொண்டு வரும்படி செய்தார்.

ஒருநாள் தமது சீடர் 2000-ரூபாய்க்கு அத்தர் வாங்கி வந்து சுவாமிக்கு அபிஷேகம் செய்விக்கவேண்டுமென்றிருக்க, இந்த ஹரிதாசர் அதையெல்லாம் மண்ணில் கொட்டிவிட்டாராம். சீடர் கண்டு வியாகூலப்பட அவரைக் கூட்டிக்கொண்டு போய்த் தமது கோயிலில் நிறுத்த அங்கு அந்த கோயில்முழுதும் அத்தர்மயமாக விருக்கக்கண்டு ஆச்சரியப்பட்டார். இப்படி இவர் செய்த மகிமைகள் அநந்தமாகையால் டில்லி சக்கிரவர்த்திகளும் இவரைத் தரிசித்ததாகத் தோன்றுகின்றது.

இவர் சம்சாரம் 1537ஞு பரமபதமடைய இவர் பிரதம சீடரும் மாமனுமாகிய விட்டல் பூபாலர் இந்த மஹந்து பட்டத்தை யடைந்தார். பிறகு பிஹாரிதாசர் மஹந்து பட்டத்தை யடைந்தார். பிறகு நகரிதாஸ், சரசுதாஸ், நாவல்தாஸ், நரஹரதாஸ், ரசிக்தால்லலிதகிஷோரி முதலானவர்கள் வரிசையாக மஹந்து பட்டங்களைப் பெற்றூர்கள். இந்த ஹரிதாசருடைய மதம் சைதன்னியருடைய பக்தி வைணவ மதமாகவிருக்கினும், அதைவிட தத்துவஞானவிசாரணையும் சர்வதர்ம பரித்தியாகம் செய்து சுத்த சந்நியாச மடையும்படியான மதமாகவிருக்கிறது. இவர்களுடைய முக்கியமத கிரந்தங்களாகிய சாதாரணசித்தாந்தம், இரசிகபதம் என்னும் நூல்களைப்படிப் போருக்கு தேகேந்திரியங்களின் உணர்ச்சியைப்பற்றியும், நாசரஹிதமான நாமங்களையடையவேண்டியதுமாகியஞானம் சவிஸ்தாரமாகவும் உருக்கமாகவும்சொல்லப்பட்டிருக்கின்றன, ஆனல் இப்போதிருக்கும் இந்தமதஸ்தர்களில் சிலர் காமவிகாரத்திலும்,உலகசிற்றின்பங்களிலும் பிரவேசித்துவிட்டார்கள்,

இவர்கள் விக்கிரகங்களைக் கும்பிடுவதில்லை. இவர்கள் கோயில்களில் மதாசாரியருடைய புத்தகங்களை மாத்திரம் வைத்து வணங்கி வருவதாகத் தோன்றுகின்றது. அந்தப் புத்தகங்களாவையெனில், (1) இரசம், (2) பிரகாசம், (3) சத்ருதம், (4) கலசம், (5) சாந்தம், (6) கீர்த்தனம்; (7) குலசம், (8) கேலபதம், (9) பிரகர்ம இல்லாயிதுலாம், (10) சாகரசிங்காரம், (11) பாரிசிங்காரம், (12) சித்திபாஷா, (13) மாபத்துசாகர், (14) கியாமத்நாமா என்பவைகளே. இந்த கிரந்தங்களின் ஆதாரத்தைக்கொண்டே வியாமசாரம், ஞானிசாரம் என்ற சிறந்த நூல்களை ஹதராஸ் நாட்டின் தாகூர் தயராமவர்களுடைய வேண்டுகோளின்படி அவரது குருபகதேவர் என்பவர் இயற்றியிருக்கின்றார். இவைகளில் வேதாந்தத்தின் கருத்துக்களும் கொரானின் கருத்துக்களும் அடங்கியிருக்கின்றன. இந்த மதத்தாரைச் சிலர் நாஸ்திகரென்றும், சிலர் அத்வைதிகளென்றும், சிலர் சார்வாகர்களென்றும், சிலர் உலகாயிதர்களென்றும், சிலர் பரிசுத்த வைணவர்களென்றும், சிலர் சமரசவேதிகளென்றும் சொல்லிவருகிறார்கள். பிருந்தாவனத்தில் பிரபலமாகவிருக்கும் பற்பலவிதமான வைணவ மதாசாரியர்களுடைய சரித்திரங்களையும், அவர்களுடைய சித்தாந்தங்களையும் சுருக்கமாகச்சொன்னோம். இனி இந்த மதஸ்தர்களால் கொண்டாடப்படும் தேவர்களையும் அவர்களுடைய கோயில்களையும்பற்றிச் சொல்லுவோம்.

## ஸ்ரீ கோவர்த்தனம் அரங்காசாரியாருடைய சரித்திரம்.

இவருடைய சரியான சரித்திரத்தை யறியப் பலவிதமாகப் பிரயத்தினப்பட்டும் தகுந்த ஆதாரங்கள் கிடைக்கவில்லை. ஆயினும், அவரது காலத்தில் அநுபவத்தால் கண்டறிந்த சில சங்கதிகளைக் கேட்ட சில கனவான்களால் நமக்குத் தெரியவந்த சங்கதியாவது:—

இந்த ஸ்ரீரங்காசாரியானவர் ஸ்ரீ காஞ்சீபுரத்துக்கடுத்த ஒரு சிறு கிராமத்தில் ஜனித்து சிறு பிராயமாக விருந்தபோதே பெற்றோர்களை இழந்துவிட்டபடியால்; தமயனுடைய சம்ரக்ஷணையி லிருந்ததாகவும், இந்த சம்ரக்ஷணையிலிருந்தபோது ஒருநாள் யாதோ ஒரு பதார்த்தத்திநிமித்தம்

தமக்கும் தமது தமையனார் மனைவிக்கும் விரோதமுண்டாக, அந்தம்மாளிடம் இருக்க மனதற்றவராய் ஒன்டி வழியாகப் புறப்பட்டு ஸ்ரீ காசிக்கு வந்துவிட்டதாகவும், அங்கு ஒரு எதீந்திரர் இவரைத் தமது சீடனாகக்கொண்டு ஸம்ஸ்கிருத பாஷையைப் போதித்து வந்ததாகவும், அப்போது கோவர்த்தனத்திலிருந்த ஒரு எதீந்திரருக்கு ஒரு சீடர்வேண்டியிருந்து முன்சொன்ன காசிக்ஷேத்திர சந்நியாசி யவர்களுக்கு தெரிவிக்க, அவர் இந்த ஸ்ரீரங்காசாரியை சிபார்சுசெய்து கோவர்த்தனகிரிக்கு அனுப்ப, இவரும் பிரியத்தோடு வந்து கோவர்த்தன எதீந்திரருக்குத் தொண்டுசெய்து சில பல நூல்களைக் கற்றுக்கொண்டு வரவே, அந்த எதீந்திரருக்கு அசாத்திய மான வியாதி சம்பவித்தபடியால்,அவர் தமது சந்நியாசமடத்தையும்,ஆச்சிரமத்தையும் இந்த ஸ்ரீரங்காசாரியருக்குக் கொடுத்துவிட்டுப்பரமபதமடைந்தார்.அன்றுமுதல் இந்த ஸ்ரீரங்காசாரியருக்கு கோவர்த்தனம் (ரங்கஜீ) ஸ்ரீரங்காசாரியார் என்று பெயரிடப்பட்டு ஸ்ரீராமாநுஜருடைய ஸ்ரீ சம்பிரதாயத்தை வடதேசத்தாருக்குப் போதித்தும், ஜயப்பூர் சைவபண்டிதர் வைணவமதத்தைத் தூஷித்து எழுதிய எட்டுக் கேள்விகளுக்கும் விடையாக "துர்ஜனகாரி பஞ்சானனம்" என்னும் ஸம்ஸ்கிருத கிரந்தத்தை எழுதினார். இந்த புத்தகத்தின் கருத்துக்கள் ஜயப்பூர் மகாராஜருக்குப் போதுமான திருப்தியைக் கொடாமையால், "சஜ்ஜனமனோரஞ்சனம்" என்னும் கிரந்தத்தை சில பண்டிதர்களைக்கொண்டு எழுதி வெளிவிட்டார். அதன்மேல் ஸ்ரீரங்காசாரியர் "வியாமோஹ விதாவனம்" என்னும் கிரந்தத்தை எழுதி அதில் வைணவமதத்தை மேன்மைப் படுத்திப் பல ஆதாரங்களைக் காட்டிப் பிரசுரம் செய்தார்.

இப்படி சத்காலக்ஷேபம் செய்துவரவே, ஸ்ரீ மதுராபுரியில் மஹா கோடீசுவரரான ஸ்ரீ லக்ஷ்மீசந்து சேட்டவர்களுடைய சகோதரர்களும், சமணமதஸ்தர்களுமாகவிருந்த ஸ்ரீகோவிந்ததாஸ், ஸ்ரீராதாகிருஷ்ண சேட்டவர்கள் வைணவமதத்தின் ஸ்ரீஸம்பரதாயத்தில் பிரியமுடையவர்களாகி இந்த ஸ்ரீரங்காசாரி சுவாமிகளின் சீடர்களானார்கள். அவர்களுக்கு ஸ்ரீ ஸம்பிரதாயத்தைத் தக்கபடி போதித்து ஞானவான்களாகப் பிரகாசிக்க, அவர்கள் பிருந்தாவனத்தில் ஸ்ரீ ஸம்பிரதாயத்தைத் தழுவிய கோயிலைக் கட்டுவிக்கப் பிரியபட,இந்த

ஸ்ரீரங்காசாரிசுவாமிகள் அந்த சிரேஷ்ட சீடர்களை தக்ஷண தேசத்துக்குக் கூட்டிக்கொண்டுவந்து இவ்விடங்களிலிருக்கும் சில சிறந்த கோயில்களைக் காட்ட, அவர்கள் ஸ்ரீரங்கக்ஷேத்திரத்தின்படி பிளானையும் வேலைக்காரர்களையும் தயார் செய்துகொண்டுபோய் கி. பி. 1845௵ கடைக்கால் போட்டு கி. பி. 1851௵த்துக்குள்ளாக 45-லக்ஷம் ரூபாய்க்கு அதிகமாகச் செலவிட்டு பிரம்மாண்டமான கோயில் கட்டி வைத்தார்கள். இப்படி இந்த ஸ்ரீ ரங்காசாரியர் தனவான்களான தமது சீடர்களைக்கொண்டு அநேக கோயில் கோபுரங்களையும் ஆவி கூப உத்தியாவனங்களையும் தயார்செய்தாலும், சந்நியாச ஆச்சிரமத்தை யனுசரித்த இவரை கிரஹஸ்தாச்சிரமத்திலிருக்கவேண்டுமென்று சீடர்கள் விரும்ப, ஸ்ரீரங்காசாரியரும் தக்ஷணதேசத்தில் தமது பந்துக்களில் ஒரு பெண்ணை விவாஹம் செய்துகொள்ள, அந்த மனைவியார் வயிற்றில் ஓர் ஆண் குழந்தை பிறந்து, அப் பிள்ளைக்குப் பாட்டனார் பெயராகிய ஸ்ரீநிவாசாசாரியர் என்று நாமம் சாற்றப்பட்டு ஸம்ஸ்கிருத பாஷையைப் போதிக்கப்பிரயத்தனப்பட, அவருக்குக்கல்வியில் கருத்தில்லாமையால் கலியாணம் செய்விக்கப்பட்டது. அப்படிச் செய்வித்த கலியாண மனைவி வயிற்றில் ஒரு ஆண் குழந்தை பிறந்தது. ஆனால் கல்வியை விரும்பாத இந்த ஸ்ரீநிவாசாரியார் தனது தகப்பனுருடைய யோக்கியதைக்கும், தனது ஜாதி யோக்கியதைக்கும் பயப்படாமல், பட்டப்பகல் படாடோபஞ்செய்து டம்பாகாரமாகத் திரவியத்தையெல்லாம் வாரி வீண்செலவு செய்து பிதா மாதாக்களுடைய பெயரையும் பங்கப்படுத்தப் பிரயத்தனப்பட்டதால், பிதாவாகிய ஸ்ரீரங்காசாரியானவர் நொந்து இனி தமது சீடர்களால் கட்டிவைத்த கோயில்முதலான கட்டிடங்களையும், தானிய திரவியங்களையும் தொலைத்து விடுவானென்று பயந்து, கி. பி. 1868௵ இந்தக் கோயிலையும், இதைச் சார்ந்த லக்ஷக்கணக்கான சொத்துக்களையும் தமக்குப் பிற்பாடு ஆறுபேர்களடங்கிய கமிட்டியாரால் பரிபாலனம் செய்விக்க வேண்டுமென்றும், தமது குமாரருக்குச் சாப்பாட்டுச் சிலவுக்கு மாத்திரம் கொடுக்க வேண்டுமென்றும், மற்றும் மத விஷயமான ஆசாரிய கைங்கர்யங்களைச் செய்ய தக்ஷண தேசத்திலிருந்து நூதனமான ஆசாரிய புருஷரைத் தருவித்து வைத்துக்கொண்டு நடத்தவேண்டுமென்றும், 2000 ரூபாய் சாபாகாகிதத்தில் எழுதிக் கொடுத்துவிட, இது விஷயமாகப்

பிதாவுக்கும் புத்திரருக்கும் பல சச்சரவுகள் நடக்க, இந்த வியாகூலத்தினாலேயே ஸ்ரீரங்காசாரியர் 1875வரு மார்ச்சுமீ 26உ பரமபதமடைந்தார்.

இவர் பரமபதமடைந்த பிறகு இவர் குமாரர் ஸ்ரீநிவாசாசாரியார் இந்தக்கோயில் முதலான சொத்துக்கள் தமக்குச் சேரவேண்டுமென்று வாதாடிக்கொண்டிருந்து சில வருஷங்களுக்குள்ளாக அவரும் பரமபத மடைந்துவிட்டார். இப்போது சுமார் 36-வயதுடைய இவர் குமாரர் இருக்கிறார். அவரது போஷணைக்கும் படிப்புக்கும் சேட்டவர்கள் மாதம் சுமார் 300-ரூபாய் வரையில் கொடுத்து கவுரவப்படுத்தி வருகிறார். இந்த சேட்டவர்கள் கோயிலும் சுற்றுப்பக்கங்களிலும் சுமார் 100-ஸ்ரீவைணவ பிராம்மணர்கள் தென்தேசத்திலிருந்து போய் ஸ்ரீ ராமாநுஜருடைய சம்பிரதாயப்படிக்கு நித்திய நைமித்திகாதி விஷயங்களைத் தென்தேசத்து வைணவர் ஸ்தலங்களில் செய்யும் பத்திகளின்படி செய்து ஸ்ரீராமாநுஜருடைய சித்தாந்தத்தைச் சிறப்பித்து வருகிறார்கள்.

## வடதேசத்திலுள்ள சில வைணவர்கள்.

இந்துதேசத்தின் வட நாடுகளில் அநேக சில்லரை வைஷ்ணவ சிந்தாந்திகளிருக்கின்றனர். அவர்களில் முக்கியமான சில வைணவர்களாவன:—

### காகி வைணவர்கள்.

இவர்கள் இராமாநந்தருடைய சீடராகிய கிருஷ்ணதாசருடைய சீடாகிலி என்பவரால் ஸ்தாபிக்கப்பட்ட வைஷ்ணவர்கள். இவர்கள் தலை மயிரை ஜடைகளாகப் பின்னிக்கொண்டும், காவி வேஷ்டியையும், விபூதியையும் களிமண்ணையும் தரித்துக்கொண்டும், ஸ்ரீராமரையும் சீதையையும் வணங்கி வரப்பட்ட ஒருவித பைராகிகளாவர். இவர்கள் இப்பொழுது அயோத்தியாவைச் சார்ந்த ஹநுமான் கிராமத்திலும், பரகபாத்து ஜெயபூரிலு மிருக்கிறார்கள். இவர்களுடைய குருவின் சமாதி ஜயப்பூரி லிருப்பதால் அதை ஒரு விசேஷ ஸ்தலமாக மதிக்கிறார்கள்.

## மாலுக்தாசி வைஷ்ணவர்கள்.

இவர்களும் இராமாநந்த வைஷ்ணவர்களிலிருந்து உண்டான ஒரு கிளையாரென்று சொல்லலாம். இவர்கள் ஸ்ரீராமரைப்பற்றி சதா ஜபம் செய்வதே சித்தாந்தமாகக்கொண்டிருப்பவர்கள். இந்த சித்தாந்தத்துக்குத் தலைவரான மாலுக்தாசி என்பவர் இராமாநந்தருடைய முக்கிய சீடர்களாகிய இராமாநந்தர், ஆசாநந்தர், கிருஷ்ணதாசர் கீலி என்பவர்களைப்போல ஆக்பர்சக்கிரவர்த்தி காலத்தில் அதாவது சுமார் 300 வருஷங்களுக்கு முன் இருந்தவர். சிலர் இவர்களை அரங்கசீப் காலத்தவர் என்று சொல்லுகிறார்கள். இவர் நெற்றிகளில் சிகப்பு நாமந்தரித்தும், பாகவதத்தையும் பகவத்கீதையையும் முக்கிய கிரந்தங்களாகக்கொண்டும், அநேகர் இல்லறத்தார்களாக இருக்கின்றனர். இந்த சித்தாந்தியார் பிறந்த காராமணிக்கப்பூரில் அவருடைய பந்துமித்ராதிகள் இருக்கிறார்களாம். அவருக்குப் பிறகு அதாவது: (1) மாலுக்தாசர், (2) இராமசந்நியாசி, (3) கிருஷ்ணசந்நியாசி, (4) தர்கூர்தாஸ், (5) கோபால்தாஸ், (6) குஞ்சுபிஹாரி, (7) இராமசாஹாய, (8) சீயபிரசாத், (9) கங்காபிரசாத் என்ற தற்கால மஹந்து ஆசாரியபட்டத்துக்கு வந்தார். காராவிலுள்ள மடத்தில் மாலுக்தாசர் உபயோகித்த சிங்காசன பீடம் இன்னும் இருக்கின்றதாம். இவர்களுக்கு இப்போது அலகபாத்து, காசி, பிருந்தாவனம், அயோத்தியா, இலக்ஷ்மணபுரி என்னும் இடங்களில் மடங்களிருக்கினும், மாலுகர் பரமபதமடைந்த ஜகந்நாதமடம் சிறந்ததாகக்கொண்டாடி வருகிறார்கள்.

## தாதுபந்திகள்.

இவர்கள் இராமாநந்தருடைய சீடர்களாகிய (1) கபீர், (2) கமலா, (3) ஜமாஸ், (4) விமலர், (5) புத்தர், (6) தாது என்பவர்கள் கபீர்தாசரைச் சார்ந்தவர்கள். இவர்கள் ஸ்ரீராம நாமத்தை சதாஜபிப்பவர்களாகையால், இவர்களுக்குக் கோயில்களும் விக்கிரக பூஜைகளும் கிடையா.

இம்மதாதிபதியாகிய தாது என்பவர் பருத்தியைச் சுத்தி செய்பவர். இவர் ஆமதாபாத்தில் பிறந்து ஆஜமீருக் கரிகிலிருக்கும் சாம்பூருக்குப் போயும், பிறகு கலியாணப்பூர் நாராயணத்தூர் முதலானவிடங்களுக்குப் போயும், ஜயபூருக்கு 20-

மைல் தூரத்திலிருக்கும் நாராயணப்பூரில் கொஞ்சகாலம் கண்ணுக்குத் தெரியாமலிருந்தார். இவர் ஆக்பர் காலத்தில் (1600-ல்) இருந்தவராம். இம்மதஸ்தர்களுக்கு விசேஷவைணவ குறிப்புக ளில்லாவிடினும், நான்கு மூலைகளுள்ள குல்லாய்களைத் தரிக்கிறார்கள். இவர்களுக்குள் விரக்தர்களென்றும், நாகர்களென்றும், விஸ்தாரதாரிகளென்றும் மூன்று வகுப்பார்களுண்டு. இவர்களன்றியில், தம்பாஸ் என்னும் 52 உட்பிரிவார்களா யிருக்கிறார்கள். இவர்கள் குழந்தைகள் பிறந்தவுடனே முகத்தில் முத்திரை சூடுபோடுவதோடு, இறந்தவர்களைப் பக்ஷி மிருகங்களுள்ள வனாந்தரங்களில் போட்டுவிடுகிறார்கள். மார்வார் ஆஜ்மீரின் அநேக தாது பந்துக்களும், ஜயபூரில் நாகர்களு மிருக்கிறார்களாம். நாராயணிபூரிலிருக்கும் ஒரு மலையின் மேல் தாதுவானவர் பரமபத மடைந்தபடியால் அதை ஒரு விசேஷ ஸ்தலமாகக்கொண்டு பிரதி வருஷமும் உற்சவம் நடத்தி வருகிறார்கள். சாம்பூரிலிருக்கும் கோஷ்டியார் மீசை தாடிகளை வைக்காமல் சதா சாஸ்திரங்களைப்படித்துக்கொண்டி ருக்கிறார்கள்.

## இராயதாசி வைணவர்கள்.

இராமாநந்தருடைய சீடர்களில் இராயதாசி என்றொருவர் இருந்தார். அவர் ஒருநாள் தமது சீடனாகிய ஓர் பிரம்மசாரி பிச்சை யெடுத்துக்கொண்டு வந்து பூஜை செய்த தானியத்தில் மிருகத்தின் தோல் சருமாதி முதலான துண்டுகளிருக்கக் கண்டு, அவற்றால் தமது பக்தி குன்றியதாகக் கருதி தபசு செய்ய, அன்போடு கொடுக்கும் எப்பொருளும் எம்பெருமானுக்கு இங்கிதமென்ற அருள் வாக்கைக் கேட்டு அன்றுமுதல் சத்தியமும் பக்தியுமான சார்மா என்பவர்களைத் தமது சீடர்களாகக் கொண்டார். அப்படி சீடர்களானவர்களில் சித்தூர் இராணியாரும் இப்படிப்பட்ட ஓர் சார்மாவை ஆசாரியராகக் கொண்டு ஞானோபதேசம் செய்துகொண்டார். இதனால் சமஸ்தானத்தில் கலவரமுண்டாகி, அந்த அம்மைக்கு ஒரு பிராம்மணனைக் கொண்டு பிராயச்சித்தம் செய்விக்க, அந்த பிராம்மணரும் அந்தம்மையின் குருவாகிய சார்மாவுக்குச் சீடனாகிவிட்டபடியால், அச்சரமாவையே அநேகர் வணங்கி அவர் சித்தாந்தத்தில் சேர்ந்து சதா இராமபஜனையைச் செய்துவருகிறார்கள்.

## சேனுபந்தி வைணவர்கள்.

இராமாநந்தருடைய மூன்றுவது சிடராகிய சேனு என்பவர்மகாவிஷ்ணுவின்பக்தசிரோமணியாகஇருந்தார். ஒருநாள் அந்த சேனர், ஜாதியில் நாசுவரானபடியால் தாம் மாமூலாக பந்தகர் இராஜாவுக்கு க்ஷவரம் செய்யப்போகாமல், வைணவ கோஷ்டியாருடன் பஜனைசெய்துகொண்டே இருந்துவிட்டார். அந்த இராஜனுக்கு சேனு என்னும் க்ஷவரகன் காலக்கிரமமாக வராமையால் கோபமதிகரித்து அதட்டிக்கொண்டிருக்கையில், மஹாவிஷ்ணுவே அந்தச் சேனு என்னும் நாசுவனைப் போல் அவதாரமெடுத்துக்கொண்டு போய், அந்த இராஜனுக்குத் திருப்திகரமாக க்ஷவரம் செய்து முடிந்த உடனே, அபூர்வமான வாசனை உண்டாகியது. இராஜன் ஆச்சரியங்கொண்டு பார்க்கையில், விஷ்ணுவாகிய அந்த நாசுவன் மறைந்துவிட, பழைய நாசுவனுகிய சேனுஎன்பவன்வந்தான். இராஜன் பார்த்து இந்த வாசனை எப்படி வந்ததென்று கேட்க, அவன் சொல்ல வகையற்றுத் தவிக்க, முதல் வந்த நாசுவன் சாக்ஷாத் விஷ்ணுவே தன்பக்தனுக்காக வந்து க்ஷவரம் செய்தாரென்று தெரிந்து, பக்த சிரேஷ்டனுகிய சேனன் காலில் விழுந்து வணங்கி சிடனுகி விட்டான். அன்றுமுதல் அந்த இராஜ குடும்பத்தாருக்கும் அவர்களைச் சேர்ந்தவர்களுக்கும் சேனுபந்திகளென்று பெயருண்டாகியது.

## மீராபாய் வைணவர்கள்.

இந்த வைணவர்களை வல்லபாசாரியருடைய வகுப்பைச் சார்ந்தவர்களென்று சிலர் எண்ணினுலும், இவர்கள் வேறு வகை வைணவர்களே. ஆக்பர் பாதுஷா காலத்தில் மேர்தா என்னும் இராஜனுடைய குமாரத்தி மீராபாய் என்னும் பெண்ணை உதயபூர் ராணு என்னும் அரசன் விவாகம்செய்து தனது நகருக்குஅழைத்துக்கொண்டுபோனுன். இந்தஅம்மை சிறுபிராயமுதல் மகாவிஷ்ணு பக்தியுடையவராக இருந்தமையால், தனது மாமியார் துர்காதேவி பூஜையை செய்யும்படி சொல்லிக் கண்டிக்க, இந்த மீராபாய் அம்மை அதற்குச் சம்மதிக்காமல் கிருஷ்ணபூஜையைச் செய்ய, தனது மாமி மாமன் புருஷனுக்கும் தனக்கும் பிரமாதமான சண்டை சச்சரவுகளுண்டாகி வர, புருஷன் வீட்டார் இந்தம்மையைக் கொல்ல பாஷாணத்தைக் கொடுத்ததில், அது யாது பிரயோஜனப்படாமலிருக்கக் கண்டு அந்தம்மையின் இஷ்டப்படி விட்டுவிட,

அந்தம்மை பிருந்தாவனம் துவாரகைக்குப் போய்த் தமது இஷ்ட தேவனாகிய ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியைப் பலவித சிறந்த கவிகளால் பாடித் துதித்து, அவருக்கு ஐக்கியமாகி விட்டாராம். இப்போது உதயபூரில் மீராபாய் அம்மாளுடையவும், அவர் இஷ்டதேவதை இரானுகூரருடையவும் கோயில்களிருக்கின்றன. அநேகர் போய் வணங்கி வருகிறார்கள்.

## இராதாவல்லபி வைணவர்கள்.

இவர்கள் பிரம்மகைவர்த்த புராணத்திற் கூறியபடி பரப்பிரம்மத்தின் வலதுபாகம் கிருஷ்ணராகவும், இடதுபாகம் இராதாவாகவும் அவதரித்து வந்தபடியால் இராதாவை சர்வ சக்தியுடைய தேவதையாகக்கொண்டு வணங்கி வருகிறார்கள். இந்த சித்தாந்தத்தை ஸ்தாபித்தவர் ஹரிவானசர் என்னும் ஒரு யோகீஸ்வரர் பிருந்தாவனத்திலிருக்கும் ஒருமடத்தை ஸ்தாபித்தார். அதில் 1822-ம்௵ ஐம்பது விட்டுக்கார கோஷாய்களாக இருந்தார்கள். இராதாசுதி முதலான அநேக கிரந்தங்களைப் பாடியிருக்கிறார்கள்.

## சுகீபாவ வைணவர்கள்.

இவர்கள் முன்சொன்ன இராதா வல்லபர்களுடைய சித்தாந்த முடையவர்களாக இருக்கினும், ஸ்ரீகிருஷ்ணரிடம் பூரண சுகமடையக்கருதி புருஷர்களெல்லோரும் மீசை முதலானவைகளை க்ஷவரம்செய்து பெண் வேடங்களைத் தரித்து இராதா என்ற பெயரை வகித்து சதா கிருஷ்ணரைப் பாடியாடி ஆனந்தப்படுகிறார்கள். இவர்கள் காசி வங்காளம் ஜெயபூரி லதிகமா யிருக்கிறார்கள்.

## சாரணதாசி வைணவர்கள்.

டில்லியில் இரண்டாவது அலிங்கா அரசாண்ட காலத்தில் நுசார் ஜாதிவர்த்தகராகிய சாரணதாசு என்பவர் பரப்பிரம்மமே கிருஷ்ணாவதாரமாக வந்தவரென்றும், அவரை மனம் புத்தி சித்த சுத்தியாக வணங்குவதே சிரேஷ்டமென்றும், அவரை விட்டு சாலிக்கிராமம் துளசி முதலானவைகளை வணங்குவது மூடத்தனமென்றும், நீதி பரிசுத்த எண்ணம் கொண்டிருக்க வேண்டுமென்றும் போதித்தார். இவ்வகுப்பார்களில் வைதீகமாயுள்ளவர்கள் மஞ்சள் துணிகளைத் தரித்து, கோபி சந்தனக்கோட்டை நெற்றியில் தரிப்பார்கள்.

மஞ்சள் வருணமான குல்லாய் அல்லது உருமால்களைத் தரிப்பார்கள். இவர்களுக்கு பாகவதமும், கீதையும் சிரேஷ்ட கிரந்தங்களாயினும், சாரணதாசு என்பவர் சந்தேகசாகரம், தர்மநிருபதி என்றுதி கிரந்தங்களை இயற்றினார். இந்த சாரணதாசு இறந்தபிறகு இவர் சகோதரி சரஹாஜீபாயம்மாள் குருவாக நியமிக்கப்பட்டார். அந்தம்பாள மஹா வித்வசிரோன்மணியாகையால் சரஹாஜிபகாகீதை முதலான கிரந்தங்களை இயற்றினார். இப்போது டில்லியில் ஐந்தாறு மடங்களும், மேவாபில் சில மடங்களும் மடாதிபதிகளு மிருந்தாலும், சாரணதாசு சமாதி டில்லியில் இருப்பதால், அதை விசேஷ மடமாகக் கொண்டு சில குடும்பத்தார்கள் வதிந்து வருகிறார்கள்.

## ஹரிச்சந்திர வைணவர்கள்.

இவர்கள் இழிகுலத்தார்கள். ஹரிச்சந்திரன் பறையனுக்கு அடிமையாகிப் பிறகு பக்தனானபடியால் அவரையே பரமகுருவாகக் கொண்டு விஷ்ணுவை வணங்கி வரும் ஒரு ஜாடிமாலிக் கூட்டத்தாராம்.

## சாதனபந்தி வைணவர்கள்.

இவர்கள் கசாப்புக்காரர்கள். இதன் தலைவரான சாதனன் என்பவன் பிராணிகளை வதைக்காமல் பிறரால் வதைக்கப்பட்ட மாமிசத்தை விற்றுவருகையில், ஒரு சந்நியாசியால் சாலிக்கிராமத்தைப்பெற்று பயபக்தியாக பஜனைசெய்து வருகையில், ஒரு பிராம்மணஸ்திரீ இவர்மேல் காமமுற்றுவர, இவர் அவளைத்தடுக்க, அவள் தன் புருஷனைக்கொன்று உடன்கட்டை ஏறினாள். அன்றுமுதல் அனேக சாதனரைச் சேர்ந்து ஸ்ரீ விஷ்ணுவை வணங்கி வருகிறார்கள்.

## மாதோ வைணவர்கள்.

இவர்கள் சைதன்னியருடைய மதசித்தாந்திகளாகத் தோன்றுகின்றனர். இந்த மதாதிபதியாகிய மாதவர், காதகம் என்னும் நகரிற் பிறந்தவர். மஹாவைணவபக்தர்கள். இவர்கள் சதா சாரந்தா என்னும் வாத்திய கருவியால் ஹரிபஜனை செய்துகொண் டிருப்பார்கள்.

## பிராணநாத வைணவர்கள்.

தாமிபக்தர்களென்ற இந்த வைணவர்கள் அரங்கசீபு
காலத்தில் பிராணநாதரென்னும் ஒரு க்ஷத்திரிய மஹாராஜால்
ஸ்தாபிக்கப்பெற்றது. இவர் பந்தல்கண்டு இராஜாவின் சீட
ரானபடியால், இம்மதஸ்தர் இப்போது பந்தல்கண்டில் அதிக
மாயிருக்கிறார்கள். இவர்கள் இந்துக்களுடைய வேதங்களில்
காணும் சிறந்த பிரமாணங்களையும், மகமது குரானில் காணும்
சிறந்த பிரமாணங்களையுங் கைக்கொண்டு, ஜாதிபேதமற்று
ஏகேசுவரவாதிகளாக இருக்கின்றனர்.

## சாது வைணவர்கள்.

இவர்கள் கி. பி. 1658ம்-ஆல ஜோகிதாசருடைய சீட
ராகிய வீரவாஹனரால் ஸ்தாபிக்கப்பட்ட சித்தாந்தத்தைச்
சார்ந்தவர்கள். இவர்கள் டில்லி, டுவாப், பர்காபாத்து முத
லானவிடங்களில் ஏராளமாக இருக்கிறார்கள். இவர்கள் இந்து
மதங்களிலிருக்கும் உத்தம பிரமாணங்களைப் பொறுக்கி அத
ற்கு ஆதி உபதேசமென்று பெயரிட்டு அதிற் சொல்லியபடி
விஷ்ணுவே ஏகபரமாத்மாவென்றும்; சத்தியம், பரிசுத்தம்,
தருமமே உத்தம கைங்கிரியங்களென்று நம்பும் நீதிவான்க
ளாயும், ஏகேசுவர பக்திமான்களாயு மிருக்கிறார்கள்.

## சதநாம வைணவர்கள்.

இவர்கள் 1761-ஆல் அயோத்தியாவில்ஜனித்த ஜகஜீவ
மஹாதாசருடைய சித்தாந்திகள். இவர்கள் ஸ்ரீ கிருஷ்ண
ராமாவதாரங்களை நம்பியும், பார்வதி சிவனை நம்பியும் பக்தி
செய்பவர்கள். இம்மதாசாரியர் ஞானப்பிரகாசிகை முதலான
கிரந்தங்களை இயற்றி லக்ஷ்மணபுரிக்குச் சமீபமாயுள்ள கத்
வா என்னுமிடத்தில் சமாதியடைந்தபடியால் அவ்விடத்தில்
அம்மதஸ்தர் அநேக ரிருக்கிறார்கள்.

## சிவநாராயண வைணவர்கள்.

இவர்கள் மகம்மதுஷா அரசாண்டகாலத்தில் அதாவது
1735-ஆல்காஜிபூரில்பிரசித்திபெற்றசிவநாராயணரென்னும்
இராஜபுத்திரருடைய சித்தாந்தத்தைத் தழுவிவருபவர்கள்.
இவர்கள் விஷ்ணுவே ஏகபரமாத்மாவென்று வணங்கி, சத்தி

யம் சாந்தம் பரிசுத்த நடவடிக்கைகளை அநுஷ்டிக்கக் கட்டாயப்படுத்துகிறவர்கள். இவர்களுக்குக் கோயில்கள் கிடையா. இம்மதத்தில் எவரும் சேரலாம். இம்மதாதிபதி சாந்திவிலாசம், சாந்தோபதேசம், சாந்தசுந்தகராதி ஆகிய கிரந்தங்களை இயற்றினார்.

## திரிதண்டி வைணவர்கள்.

இவர்கள் இராமாநுஜ சித்தாந்தப்படி மனம், அகங்காரம், சித்தம் என்னும் மூன்று விஷயங்களை மூன்று கோல்களாகக் கொண்டு அவைகளைக் காவித்துணியில்கட்டி கையில்வைத்துக் கொண்டு சதா ஹரித்தியானம் செய்கிறவர்கள். இவர்களன்றியில் ஜோகிகள், பைராகிகள், சந்நியாசிகள் என்றுதி பல பெயர்களால் சில்லரை வைணவ மதஸ்தர்கள் அநேகரிருக்கிறார்கள்.

## வைணவக் குறிகள்.

திருமன், திருச்சூர்ணம், திருத்துளபமணிமாலை, திருக்காஞ்சிபட்டஞ்சு சோமன், திருப்பூநூல் முதலானவைகளைத் தரித்தலும், திருப்புற்கூடை ஸ்ரீபாதரேணுமுதலானவைகளை வைத்திருத்தலுமாம்.

## வைணவசமயத்தாருடைய மடங்கள்.

அகோபிலமடம், பரகாலமடம், வானமாமலைமடம், வியாசாச்சாரியமடம், சத்தியபூரணமடம், உத்திராதிமடம், சுமதீந்தரமடம், முளிபாகல்மடம் என்பவைகளே. இவற்றுள் பின்சொன்ன நான்கும் மாத்வாச்சாரியர்கள் வகுப்பைச் சார்ந்தவை.

வைணவ திவ்வியஸ்தலங்கள் பலவிருக்கினும் ஸ்ரீரங்கம், திருப்பதி, காஞ்சி, ஸ்ரீவில்லிபுத்தூர், திருஎவ்வுளூர், திருவல்லிக்கேணி, திருவைகுண்டம், நைமிசாரண்யம், பதரிகாச்சிரமம், பத்ராசலம் முதலானவைகளே சிறப்புற்றவை.

---

## சைவர் வைணவரின்

## சாமானிய தேவர்கள் ஸ்தலங்கள் முதலியன.

## திக்குப்பாலகர்.

இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்பவர்கள்.

## அஷ்டாதச கணங்கள்.

அமரர், சித்தர், அசுரர், தைத்தியர், கருடர், கின்னரர், நிருதர், கிம்புருடர், கந்தருவர், இயக்கர், விஞ்சையர், பூதர், பைசாசர், அந்தரர், முனிவர், உரகர், ஆகாயவாசிகள், போக பூமியர் ஆம்.

## நவக்கிரகங்கள்.

சூரியன், சந்திரன், அங்காரகன், புதன், வியாழன், வெள்ளி, சனி, ராகு, கேது.

## நக்ஷத்திரங்கள்.

அச்சுவனி, பரணி, கார்த்திகை, உரோகணி, மிருகசீரிடம், திருவாதிரை, புநர்பூசம், பூசம், ஆயிலியம், மகம், பூரம், உத்திரம், அத்தம், சித்திரை, சுவாதி, விசாகம், அனுடம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம், திருவோணம்,அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி ஆக உஎ.

## யோகங்கள்.

விஷ்கம்பம், பிரீதி, ஆயுஷ்மான், சௌபாக்கியம், சோபனம், அதிகண்டம், சுகர்மம், திருதி, சூலம், கண்டம், விருத்தி, துருவம், வியாகாதம், அரிஷணம், வச்சிரம், சித்தி, விதிபாதம், வரியான், பரீகம், சிவம், சித்தம், சாத்தியம், சுபம், சுப்பிரம், பிரமம், ஐந்திரம், வைதிருதி ஆக உஎ.

## கரணங்கள்.

பவ, பாலவ, கவுலவ, தைதுலே, கரசை, வனசை, பத்திரவா, சகுனி, சதுர்ப்பாத, நாகவா, கிமித்துக்கின, ஆக கக.

## இராசிகள்.

மேடம், இடபம், மிதுனம், கர்க்கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் ஆக கஉ.

## தேவர்கள்.

பிரம்மா, விஷ்ணு, உருத்திரன், மயேச்சுரன், சதாசிவன் ஆகிய ஐவரும் பஞ்சகருத்தாக்கள்.

## தேவதைகள்.

பார்வதி, இலக்ஷ்மி, கங்கை, யமுனை, காவிரி, சரச்சுவதி ஆகியவர்களே.

## சத்திகள்.

சிற்சத்தி, பராசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி, ஆ ரு.

## கன்னிகள்.

(1) அகலிகை - கௌதமருடைய மனைவி, (2) துரோபதை-பாண்டவருடைய காதலி, (3) சீதை-ஸ்ரீராமருடைய நாயகி, (4) தாரை-பிரகஸ்பதியின் தாரம், (5) மண்டோதரி-இராவணனுடைய பாரியை.

## சிரஞ்சீவியர்.

அஸ்வத்தாமன், அநுமான், மாபலி, வியாசன், கிருபாசாரியன், பரசுராமன், விபீஷணன்.

## முனிவர்கள்.

அத்திரி, ஆங்கிரசன், கௌதமன், சமதக்கினி, பரத்துவாசன், வசிட்டன், விசுவாமித்திரன்; அன்றியும்,

அகத்தியன், ஆங்கிரசன், கௌதமன், காசிபன், புலத்தியன், மார்க்கண்டன், வசிட்டன்; அன்றியும்,

அகஸ்தியன், அத்திரி, ஆங்கிரசன், இரணியவன் மாமுனி, உரோமமாமுனி, ஏரண்டமாமுனி, கலைக்கோட்டுமுனி, காசிபன், கௌதமன், சத்தகூன்முனி, சச்சிதானந்தன்,

சமதக்கினி, சனகன், சனற்குமாரன், சுகன், ததிமகாமுனி, துருவாசன், நாரதன், பதஞ்சலி, பரத்துவாசன், பராசரன், பற்மமாமுனி, பிருகுமாமுனி, பிருகிமாமுனி, புலத்தியன், மார்க்கண்டன், வசிஷ்டன், வான்மீகன், விஸ்வாமித்திரன், வியாக்கிரபாதன், வியாசன் ஆகியவர்கள்.

## பஞ்சபாண்டவர்.

தருமன், வீமன், அருச்சுனன், நகுலன், சகாதேவன்.

## வைணவர் தேவஸ்தானங்கள்.

வைணவருடைய 108-ஸ்தலங்களிற் முக்கியமானவை:- வைணவருடைய ஸ்ரீரங்கம், துவாரகை, பதரிகாச்சிரமம், இராமேஸ்வரம் முதலானவைகளே.

## விசேஷ தீர்த்தங்கள்.

நாராயணம், புஷ்கரம், பிந்து, பம்மா, மானஸ முதலானவைகளே.

## தீவுகள்.

ஜம்பு, சாகம், புசை, பிரபஞ்சம், இலவம், கோமேதகம், புஷ்கரமாம்.

## சிரார்த்தஞ் செய்யும் ஸ்தலங்கள்.

காசி, கயா, பிரயாகை முதலானவைகளே.

## விசேஷமான யாத்திரை ஸ்தலங்கள்.

காசி, மதுரை, ஹரிதுவாரம், அயோத்தியா, துவாரகா, அவந்திக, காஞ்சி, திருவண்ணாமலை முதலானவைகளே.

சைவருடைய

பாடல்பெற்ற விசேஷ ஸ்தலங்கள்.

# சிவஸ்தலப்பெயர்க் காரணவிளக்கம்.



மெய்ஞ்ஞானியர்களாகிய பெரியோர் மூவர், யாவர்க்கும் மேலாகிய பரம்பொருளாகும் பரமசிவத்தின் பெருமையை திவ்விய செய்யுள் ரூபமாகும் தோத்திர வகையாற் பாராட்டியுள்ளார். அத்தோத்திரப்பாமாலையைத் தேவாரம் என்பது தேவனாகிய பரமசிவத்துக்கு ஆரம்போல் விளங்குவதாதலின் தேவாரம் என்னும் பெயர் அத்தோத்திரப்பாமாலைக்கு எய்தியது. தேவாரம் பாடிய பெரியோர் மூவர் என்று சொன்னோம். அவர் அப்பர், சம்பந்தர், சுந்தரர் என்னும் திருநாமம் வாய்ந்தவர்கள். அவர்கள் சிவஸ்தலங்கள்தோறும் சென்று ஆங்காங்கு வீற்றிருக்கும் சிவபெருமான்மீது திருப்பதிகங்கள் பாடும் நியமம் பூண்டவர்கள். பலவித அற்புதச் செயல்களும் செய்து காட்டியுள்ளவர்கள். அவர்கள் சரித்திரம் பெரியபுராணம் என்னும் நூலகத்துக் காணப்படும். தேவாரப் பதிகங்கள் எழுதப்பட்டிருந்த ஓலைப் புத்தகங்கள் செல்லேறிச் சிதைவுபட்டமையால் அருமையான பல பதிகங்கள் இறந்துபட்டன. தேவாரப் பதிகமுற்ற ஸ்தலங்கள்-274. தேவாரப்பதிகங்களின் தொகை-797. இத்தலங்களின் பெயர்க்காரணத்தை ஆராயுமிடத்து உயர்திணைப் பகுதியைச் சார்ந்த தேவர் முதலியோரே அன்றி அஃறிணைச் சிற்றுயிர்களாம் ஈ, எறும்பு முதலியனவும் பரமசிவத்தைப் பூசித்து முத்தியடைந்தன என்னும் விஷயம் தெளிவுற விளங்குகின்றது.

| எண். | பூசித்துப் பேறுபெற்றவரும் பெற்றவையும். | ஸ்தலப்பெயர். | ஸ்தல விசேஷம். |
|---|---|---|---|
| 1 | கணபதி. | கணபதீச்சுரம், திருச்செங்காட்டாங்குடி. | கஜமுகாசுரனைக் கொன்றபழி நீங்கும்பொருட்டு கணபதி பரமசிவனைப் பூசித்த ஸ்தலம். |
| 2 | முருகபிரான். | கீழ்வேளூர், புள்ளிருக்குவேளூர், சேய்கிழயார், திருமுருகன்பூண்டி. | புள்ளிருக்குவேளூர் என்பது வைத்தீஸ்வரர்கோயில்; சூரசம்ஹாரம் செய்ய வழிநடக்கும் சேய் பாசறைக்கு நல்ல இடமெனத் தங்கித் தந்தையைப் பூசித்த ஊர் சேய்நல்லூர். |
| 3 | பார்வதி. | கச்சி கேதாரம், சத்திமுத்தம், மயிலாடுதுறை, மைலாப்பூர். | சத்தி சிவத்துக்கு முத்தந்தந்த ஸ்தலம். சத்திமுத்தம் மயில் வடிவமேற்று பார்வதி பூசித்த ஸ்தலங்கள்:— மயிலாடுதுறை, மாயூரம், மயிலாப்பூர். |
| 4 | வைரவர். | வடுகூர். | வடுகனாகிய வைரவர் பூசித்த ஸ்தலம். |
| 5 | திருமால். | திருமாற்பேறு, சக்கரப்பள்ளி, தலைச்சங்காடு, வலம்புரம், மாணிகுழி. | (i) திருமால் பூசித்துச் சக்கரம்பெற்ற ஸ்தலங்கள்:- திருமாற்பேறு, சக்கரப்பள்ளி.<br>(ii) சங்கம்பெற்ற ஸ்தலங்கள்:- தலைச்சங்காடு, வலம்புறம்.<br>(iii) மாணிவடிவாக வாமனாவதாரம் இருந்தபோது பூசித்த ஸ்தலம்—மாணிகுழி. |
| 6 | இலக்குமி. | திருவாரூர் (கமலை), திருநின்றியூர். | அழியாத திருமங்கிலியம்பெற இலக்குமி பூசித்த ஸ்தலம்-திருவாரூர். |

| | | | |
|---|---|---|---|
| 7 | பிரமன். | பிரமபுரம், கஞ்சனூர், காஞ்சி. | பிரமபுரம் என்பது சீகாழி. |
| 8 | இந்திரன். | இந்திரநீலபருப்பதம், கண்ணார் கோயில். | “இந்திரன் தொழுநீல பர்ப்பதம்” என்பது தேவாரம். தேவேந்திரன் சாபம் நீங்கப்பெற்று ஆயிரங் கண்பெற்ற ஸ்தலம்-கண்ணார்கோயில். |
| 9 | சூரியன். | பரிதிநியமம். | பரிதி (சூரியன்), நியமம் (கோயில்) சூரியன் பூசித்த ஆலயம். |
| 10 | அக்கினி. | கொள்ளிக்காடு, வன்னியூர். | வன்னி—அக்கினி. |
| 11 | இயமன். | தருமபுரம். | தருமன்—இயமன். |
| 12 | காளி. | காழி. | “நம் காளியேத்து மழகளூர்” என்பது இம்பர் மாகாளத்துத் தேவாரம். |
| 13 | மாகாளர். | இரும்பைமாகாளம். | |
| 14 | தெய்வ கன்னியர். | பட்டீச்சுரம், பெண்ணாகடம். | காமதேனுவின் புத்திரிகள் நால்வரில் பட்டி யென்பவள் பூசித்தபடியால் பட்டீச்சுரம் என்னும் பெயர் வந்தது. பெண்+ஆ+கடம்=பெண் தேவகன்னியர். |
| 15 | வேதம். | புள்ளிருக்குவேளூர், மறைக்காடு, வேதிகுடி. | இருக்கு—வேதம். மறை—வேதம். |
| 16 | அகத்தியர். | அகத்தியான்பள்ளி. | |
| 17 | மகாகாளருஷி. | அம்பர்மாகாளம். | |
| 18 | வால்மீகர். | திருவான்மியூர். | |
| 19 | வியாக்ரபாத ருஷி-புலி உருவமுள்ளவர். | பெரும்பற்றப்புலியூர், திருப்பாதிரிப்புலியூர், ஓமாம்புலியூர், எருக்கத்தம்புலியூர், பெரும்புலியூர். | பெரும்பற்றப்புலியூர் என்பது சிதம்பரம். |

| எண். | பூசித்துப் பேறுபெற்றவரும் பெற்றவையும். | ஸ்தலப்பெயர். | ஸ்தல விசேஷம். |
|---|---|---|---|
| 20 | பதஞ்சலி, ஆதிசேஷன் - பரம்பு ரூபமுள்ளவர். | திருநாகேச்சுரம், நாகப்பட்டினம், கும்பகோணம், நாகேசுவரசுவாமிகோயில், திருப்பாம்புபுரம். | * திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம் என்பது இதுவே. |
| 21 | பிருகுமுனிவர். | திருஆடானை. | சாபத்தால் ஆட்டுத்தலையும் ஆனையின் உடலும் அடைந்த பிருகுமுனிவர் பூசைசெய்து சாபம் நீங்கப்பெற்றார். |
| 22 | அசுரர். | இடும்பாவனம். ஓணகாந்தன்தளி, திரிசிராப்பள்ளி.<br>† திருவக்கரை.<br>† † வெஞ்சமாக்கூடல். | * இடும்பன் பூசித்த ஸ்தலம். ஓணன் காந்தன் என்னும் இரண்டு அசுரர்கள் பூசித்த ஸ்தலம். திருசிரன் என்னும் அசுரன் பூசித்த ஸ்தலம்.<br>† வக்கராசுரன் பூசித்த ஸ்தலம்.<br>† † வெஞ்சன் என்னும் அசுரன் பூசித்த ஸ்தலம். |
| 23 | இராமர். | இராமனதீச்சுரம்.<br>* இராமேசுரம். | * ராவண சம்ஹார தோஷம் நீங்கப்பூசித்த ஸ்தலம். |
| 24 | விஜயன். | விஜயமங்கை. | "பாண்டுவின் மகன் பார்த்தன் பணிசெய்துவேண்டு நலவரங்கள் விஜயமங்கை" என்பது அப்பர் தேவாரம். |
| 25 | நளன். | திருநள்ளாறு. | நளச்சக்கரவர்த்தி பூசித்து கலிதோஷம் நீங்கப்பெற்ற ஸ்தலம். "நளன் கெழுவி நாளும் வழிபாடு செய் நள்ளாறே" (தேவாரம்). |

| | | | |
|---|---|---|---|
| 26 | ஆனை. | திருஆனைக்கா, சீகாளத்தி, கோட்டாறு, பெண்ணாகடம். வெண்காடு. | |
| 27 | பசு. | ஆமாத்தூர், ஆவூர், பெண்ணாகடம், கருவூர், ஆனிலை. | |
| 28 | குரங்கு. | குரங்குக்கா * குரங்கணி முட்டம், தென்‖குரங்காடுதுறை வடகுரங்காடுதுறை. | அனுமார் பூசித்த ஸ்தலம். குரங்கு-வாலி. குரங்கு—சுக்ரீவன். குரங்கு—வாலி. |
| 29 | கழுகு. | கழுக்குன்றம், புள்ளிருக்குவேளூர். | "கழுகுதொழு வேதகிரி" திருப்புகழ். "சம்பாதி சடாயு, புள்ளினூர் பணி புள்ளிருக்குவேளூர்" [தேவாரம். |
| 30 | நாரை. | நாரையூர். | |
| 31 | காகம். | குரங்கணின்முட்டம். | முட்டம்—காக்கை. |
| 32 | பாம்பு. | காளத்தி, பாதாளீச்சரம். | காளம்—பாம்பு. பாம்பு உருவமுள்ள தனஞ்செயரிஷி பூசித்த ஸ்தலம். |
| 33 | அணில். | குரங்கணின்முட்டம். | |
| 34 | சிலந்தி. | சீகாளத்தி. | சீ—சிலந்தி. |
| 35 | ஈ. | ஈங்கோய்மலை. | அகத்தியமுனிவர் ஈ ரூபமாகச்சென்று சுவாமியைத் தரிசித்த ஸ்தலம். |
| 36 | எறும்பு. | எறும்பியூர். திருவெறும்பூர். | தேவர்கள் எறும்பு ரூபம் எடுத்து பூசித்த ஸ்தலம். |

| எண். | பூசித்துப் பேறுபெற்றவரும் பெற்றவையும். | ஸ்தலப்பெயர். | ஸ்தல விசேஷம். |
|---|---|---|---|
| 20 | பதஞ்சலி, ஆதிசேஷன்-பரம்புரூபமுள்ளவர். | திருநாகேச்சுரம், நாகப்பட்டினம், கும்பகோணம், நாகேசுவரசுவாமிகோயில், திருப்பாம்புரம். | * திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம் என்பது இதுவே. |
| 21 | பிருகுமுனிவர். | திருஆடானை. | சாபத்தால் ஆட்டுத்தலையும் ஆனையின் உடலும் அடைந்த பிருகுமுனிவர் பூசைசெய்து சாபம் நீங்கப்பெற்றார். |
| 22 | அசுரர். | இடும்பாவனம். ஓணகாந்தன்தளி, திரிசிராப்பள்ளி.<br>† திருவக்கரை.<br>† † வெஞ்சமாக்கூடல். | * இடும்பன் பூசித்த ஸ்தலம். ஓணன் காந்தன் என்னும் இரண்டு அசுரர்கள் பூசித்த ஸ்தலம். திருசிரன் என்னும் அசுரன் பூசித்த ஸ்தலம்.<br>† வக்கராசுரன் பூசித்த ஸ்தலம்.<br>† † வெஞ்சன் என்னும் அசுரன் பூசித்த ஸ்தலம். |
| 23 | இராமர். | இராமனதீச்சுரம்.<br>* இராமேசுரம். | * ராவண சம்ஹார தோஷம் நீங்கப்பூசித்த ஸ்தலம். |
| 24 | விஜயன். | விஜயமங்கை. | "பாண்டுவின் மகன் பார்த்தன் பணிசெய்துவேண்டு நலவரங்கள் விஜயமங்கை" என்பது அப்பர் தேவாரம். |
| 25 | நளன். | திருநள்ளாறு. | நளச்சக்கரவர்த்தி பூசித்து கலிதோஷம் நீங்கப்பெற்ற ஸ்தலம். "நளன் கெழுவி நாளும் வழிபாடு செய் நள்ளாறே" (தேவாரம்). |

| | | | |
|---|---|---|---|
| 26 | ஆனை. | திருஆனைக்கா, சீகாளத்தி, கோட்டாறு, பெண்ணாகடம். வெண்காடு. | |
| 27 | பசு. | ஆமாத்தூர், ஆவூர், பெண்ணாகடம், கருவூர், ஆணிலை. | |
| 28 | குரங்கு. | குரங்குக்கா * குரங்கணி முட்டம், தென்‖குரங்காடுதுறை வடகுரங்காடுதுறை. | அனுமார் பூசித்த ஸ்தலம். குரங்கு-வாலி. குரங்கு—சுக்ரீவன். குரங்கு—வாலி. |
| 29 | கழுகு. | கழுக்குன்றம், புள்ளிருக்குவேளூர். | "கழுகுதொழு வேதகிரி" திருப்புகழ். "சம்பாதி சடாயு, புள்ளினார் பணி புள்ளிருக்குவேளூர்" [தேவாரம். |
| 30 | நாரை. | நாரையூர். | |
| 31 | காகம். | குரங்கணின்முட்டம். | முட்டம்—காக்கை. |
| 32 | பாம்பு. | காளத்தி, பாதாளிச்சரம். | காளம்—பாம்பு. பாம்பு உருவமுள்ள தனஞ்செயரிஷி பூசித்த ஸ்தலம். |
| 33 | அணில். | குரங்கணின்முட்டம். | |
| 34 | சிலந்தி. | சீகாளத்தி. | சீ—சிலந்தி. |
| 35 | ஈ. | ஈங்கோய்மலை. | அகத்தியமுனிவர் ஈ ரூபமாகச்சென்று சுவாமியைத் தரிசித்த ஸ்தலம். |
| 36 | எறும்பு. | எறும்பியூர். திருவெறும்பூர். | தேவர்கள் எரும்பு ரூபம் எடுத்து பூசித்த ஸ்தலம். |

## புண்ணிய நதிகள்.

கங்கை, யமுனை, பாகீரதி, மந்தாகினி, கிருஷ்ணை.

## கடல்கள்.

உப்புநீர்க்கடல், பாற்கடல், தயிர்க்கடல், நெய்க்கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், தேன்கடல், நன்னீர்க்கடல், ஆக 7.

## கண்டங்கள்.

அரிகண்டம், எமகண்டம், கிம்புருகண்டம், பாரதகண்டம், கேதுமாகண்டம், இரணியகண்டம், சிரமியகண்டம், கேதுமால்கண்டம், குருவருடம்.

## பருவதங்கள்.

உத்தரத்தில்: மஹம்மேரு, மந்தரம், விபுலம், சுபாசுபம்; தக்ஷிணத்தில்: நிஷதம், நீலம், ஏமகூடம், இமயம், கந்தமாதன முதலியவைகளாம்.

## உலகங்கள்.

பூ, புவர், சுவர், மகா, ஜன, தப, சத்திய மென்னும் 7-மேல் உலகங்களும்; அதல, விதல, சுதல, தராதல, மகாதல, இரசாதல, பாதாளம் என்ற 7-கீழ் உலகங்களுமாம்.

## நவவருஷங்கள்.

பாரத, கிம்புருட, ஹரி, இரமியகம், இரணியதம், குரு, பதிராஸவாம், கேதுமால வருஷங்களே.

## விசேஷபண்டிகை நாள்கள்.

வருஷப்பிறப்பு, யுகாதி, விநாயகசதுர்த்தி, சரஸ்வதி பூஜை, கருடபஞ்சமி, கந்தர்சஷ்டி, இரதசப்தமி, கோகுலாஷ்டமி, ஸ்ரீராமநவமி, விஜயதசமி, வைகுண்ட யேகாதசி, அநந்தவிருதம், வியாசபுண்ணியம், ஆடி அமாவாசை, தை அமாவாசை, தீபாவளி, சிவராத்திரி, ஹோலி, மகரசங்கராந்தி, கார்த்திகபவுர்ணமி, ஆருத்திராதரிசனம், மாமாங்கதரிசனம், பங்குனி உத்தரம், அறுபத்திமூன்றுநாயன்மார், ஆழ்வாராசாரியர்கள் திருநக்ஷத்திரங்கள், துர்க்கபூஜை, கொலுவு முதலியவைகளாம்.

## தேசங்கள்.

அங்கம், அருணம், அவந்தி, ஆந்திரம், இலாடம், யவனம், ஒட்டியம், கருசம், கலிங்கம், கன்னடம், கன்னடம், காசம், காஸ்மீரம், காம்போஜம், காந்தாரம், கிராடம், குருகு, குடகம், குந்தளம், குரு, குலிந்தம், கூர்ஜ்ஜரம், கேகயம், கேரளம், கொங்கணம், கொல்லம், கோசலம், சகம், சவ்விரம், சாலவம், சிங்களம், சிந்து, சீனம், சூரசேனம், சோழம், சோனகம், திராவிடம், துளுவம், தெங்கணம், நிடதம், நேபாளம், பாஞ்சாலம், பப்பரம், பல்லவம், பாண்டியம், புலிந்தம், போடம், மகதம், மச்சம், மராடம், மலையாளம், மாளவம், யுகந்தரம், வங்கம், வங்காளம், விதர்ப்பம், ஆக ருசு.

## சக்கிரவர்த்திகள்.

அரிச்சந்திரன், நளன், முசுகுந்தன், புருகுற்சன், புரூரவன், கார்த்தவீரியன் என்பவர்களாம்.

## விசேஷ பக்ஷிகள்.

கருடன், அன்னம், மயில், அசுணம், சடாயு முதலானவைகளாம்.

## விசேஷ மரங்கள்.

துளசி, வில்வம், உருத்திராக்ஷம், அசோகம் முதலியவைகளே.

## விசேஷ மிருகங்கள்.

காமதேனு, குரங்கு, நரி, நாய், யானை, சிங்கம், விருஷபம், பசு முதலியவைகளே.

## தென்தேசத்து தக்கால சில்லரைத் தெய்வங்கள்.

குட்டிச்சாத்தான், கருப்பண்ணன், கடம்பன், இடும்பன், மொண்டிக்கருப்பன், சண்டிக்கருப்பன், மதுரைவீரன், முனீசுவரன், மொட்டையாண்டி, நயனர், இருளண்ணன், மருளண்ணன், அண்ணன்மார், மன்னார்சாமி, ஐயனர், காளி, கூளி, காட்டேரி, கன்னியம்மாள், பொன்னியம்மாள், நாரி, மாரி, பிடாரி, அங்காளம்மாள், கொங்காளம்மாள், கோனியம்மாள், சின்னயி, பெரியாயி முதலியனவாம்.

## தத்கால ஜாதி வகுப்புகள்.

மனுதர்மசாஸ்திரத்தில் ஆரியவர்த்தமென்னும் பரதகண்டத்தின் பிரஜைகளைப் பிராம்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரரென்ற நான்கு வருணத்தார்களாக வகுத்திருந்தாலும், பிற்காலத்துப் பிரஜைகள் பற்பல தொழில்களினாலும், வேறு ஜாதிஸ்திரீகள் சம்பந்தங்களினாலும், காலதேசவர்த்தமானங்களினாலும் கணக்கற்ற ஜாதிகளானார்கள். அந்த ஜாதிகளின் விசேஷமான சிலபிரிவுகளைக் காட்டுகிறோம்.

## பிராமணர்கள்.

ஸ்மார்த்தபிராமணர், வடகலையார், தென்கலையார், திராவிட வடமாள், திராவிடசோளதேசாள், திராவிடதேசாள், அர்ச்சகாசாரர், ஆரியஸ்தாள், மகிமன், காளியர், முக்காளியர், சாவியர், பரதமசாங்கியர், தெலுங்கர், தெலுங்காணியர், வெலநாட்டிவாரு, முறிகிநாட்டிவாரு, நியோகி, ஆராத்தியர், தேசஸ்தன், கருநாடகர், வேபாரி, நம்பூரி, திராவிட வைஷ்ணவாள், ஆந்திர திராவிட வைஷ்ணவாள், கோவிந்தப்பிராமணர், மச்சதேசஸ்தாள், இந்துஸ்தானி, ஜைநர், புத்தர், சமணர், சூயன், வடமன், சாங்கேதி, குஜராத்தி, நம்பியார், திரிபூர்ணிகாள், ஆபத்தம்பியாள், காத்தியாயனாள், பாந்தியாயனாள், ஆரியர், பநிதாள், லிங்கிகள், காஞ்ஜி, இப்படிப் பலவகுப்பார்களிருந்தாலும், வங்காளத்தில் பேனர்ஜீ, மூகர்ஜி, செட்டர்ஜீ, கார்க்கூலி, கோஷாலா, கஞ்சலாலா என்பவர்கள் பிராமணர்களாயிருக்கிறார்கள். எப்படிப்பட்ட பிராமணனும், பிருகு, அங்கிரஸர், அத்திரி, விஸ்வாமித்திரர், கௌசிகர், வசிஷ்டர், அகஸ்தியர் என்ற ஏழு ரிஷிகளின் கோத்திரங்களாலும்; ரிக்வேத, யஜுர்வேத, சதுர்வேத சாகைகளாலும் வகுக்கப்பட்டிருக்கிறார்கள்.

## க்ஷத்திரியர்கள்.

இராஜபுத்திரர்க்குள் ஜாட்ஸ் என்ற தாழ்ந்த வகுப்பாருண்டு. அவர்களுள் விவசாயம் செய்யப்பட்டவர்களுக்கு, குஜாரிகள், கும்பிகள் அல்லது கர்மிகள் என்றும்; வர்த்தகம் செய்யப்பட்டவர்களுக்கு பனியர், காத்திரிகளென்றும், மத்தியமேற்கு மாகாணங்களில் பரவியிருக்கப்பட்டவர்களு

க்கு குஜராத்திகள், இராஸமோதாகிகள், பஞ்சாரிகள், பண்டாரவாரிகள் என்று சொல்லப்படும்.

## வைசியர்கள்.

வடதேசத்தி லிருக்கும் வைஸியர்களில் கோஸாய், கோஷ், மித்ரா, டே, தத்தா, காற், பாலித், தாஸசென், ஸிங், குஹார் என்னும் வகுப்பார் பெங்காள முதலான விடங்களில் பரவியிருக்கிறார்கள். மேலும் வடக்கில் சாரங்கள், கதாக்கு, ஸ்வர்னகரால், ராதகிராஸ், லோஹார்ஸ், சுதார்ஸ், டண்டீஸ், கான்க்கவாப், காஜீராஸ், டெல்லீஸ், கும்பர், டோபிமாலீஸ், லோனாரி, ஆல்வேஸ், ரங்காலி, அஜாம், அஜீர், கஹா, மல்லர், பதீ, கமார், மிட்டார், குலி என்னும் பெயரால் பலதொழிலாளர்கள் இருக்கிறார்கள். மராட்டியரையும்நாய்க்கர்களையும்க்ஷத்திரியர்களாகவும், வேளாளர் பூவைசியர்களென்றும், வாணியர் கோமுட்டிகளை தனவைசியர்களென்றும், பசுகாக்கும் இடையர்களை கோவைசியர்களென்றுஞ் சொல்லப்படும், வேளாளரில் தொண்டைமண்டலத்தார், பொன்னேரியார், பூந்தமல்லியார், காரைக்காட்டார், செங்குந்தர்கள், என்றுதி வகுப்புகளுண்டு. கவரைகளில் காஜுலு, பெரிகெ, தேவர், வெலமா என்ற வகுப்புகளுண்டு. மேலும் கன்னடியர், கவுண்டர், பள்ளி, படையாச்சி, அகமுடியாள், மறவர், குரும்பர், குறவர், ஒக்கிலியர், சாணார், மலையாளிகள், படுகர், பறையர், குயவர், வண்ணார், கம்மாளர், கொத்துக்காரர், சேடர், பட்டுநூல்காரர், அரச பள்ளியார், நட்டுவர், நாசுவர், மேளக்காரர் என்னும் பலபெயர்களாலும் தொழில்களாலும் பலஜாதியார் விசேஷமாக இருக்கிறார்கள்.

## இந்துமத சீர்திருத்த சமயங்கள்.

அதாவது இந்துமத வேதபுராணங்களின் கட்டுக்கதைகளையும் வீண் பூஜைச் சடங்குகளையும் விட்டொழித்து சுவதசித்தஞானத்தினால் உண்மையான பரம்பொருளையும் பரிசுத்தத்தையும் நாடப்பட்ட மதமாம். இந்த வகுப்பில் பவுத்தம், ஜைனம், சீகம், பிரம்மம், ஆரியம் முதலானதோடு சார்ந்தவை. அவைகளில் புத்தமதம், ஆதிகாலத்தில்அந்தணர் கொட்டத்தை யடக்க ஸ்தாபித்த புராதன பரிசுத்தமதமாகையால் அதன் சரித்திரத்தை இதனடியிற் காணலாம்.

## புத்தமதம்.

புத்தமதம், இந்து (பிராமண) மதத்திலிருந்து ஜனித்த ஒரு பெருங்கிளைமதமாம் கி. மு. 700 வருஷங்களுக்குமுன் நிலவள நீர்வளத்தில் நிகரற்று விளங்காநின்ற அயோத்தியாவின் கிழக்குத்திசையில் மகிமைபெற்றமகதம் (கபிலவஸ்து) என்று ஒரு பட்டணத்தில், ஆதிசூரியவம்சக் கடையரசரில் ஒருவர்(வீரவாகுமகாராஜா) தருமராஜா பரிபாலனஞ் செய்து வந்தார். அவருக்கு மாயாதேவி என்று அழகுமிகுந்த மனைவியிருந்தனர். அவர்வயிற்றில் சித்தாரத்தி யென்ற ஒரு ஆண்குழந்தை ஜனித்தது. இவர் சகல தேஜஸ்ஸோடுகூடி அழகிலும் வில்வித்தையிலும், புத்தியிலும் சிறந்தவர். இவர் பிறந்த 7-ம் நாளில் இவர் தாயார் பரமபத பிராப்தியடைந்தபடியால் சிறியதாயாரால் வளர்க்கப்பட்டு வந்தார். இவர்தான் பிற்காலங்களில், கவுதமர், சக்கியமுனி, புத்தர் என்ற புகழ்பெற்ற பெயரைப்பெற்று பிரகாசித்தவர்.

இவரைப்பற்றி இலங்கை சாசனமொன்றுல் பின்வருகிறபடி சொல்லப்பட்டிருக்கிறது.

சித்தார்த்த என்பது இவரது சொந்தப்பெயர். கவுதமரென்பது இவரது குடும்பப்பெயர். இவர் தகப்பனுருடைய பெயர் சுத்தோதனனும், தாயார்பெயர் மாயாதேவியாம். இவர் ஆண்ட ஜனங்கள் ஆரியரைச்சார்ந்த சாக்கியராம். ஆண்டதேசம் கபிலவஸ்து. காசிக்கு 100 மைமில் தூரத்திலும், இமயமலைக்கு 40 மயில் தூரத்திலும், இப்போது கோனுவென்று சொல்லும் ரோஹிணி நதியின் மேற்கட்டப்பட்டது. இவர் கி. மு. 623-ல் ஜனித்தவர். இவர் சுகமாகவாழ 3-5-9 மாடி அடுக்குகளுள்ள 3-பெரிய அரண்மனைகளையும், மாரிகாலம் வசந்தகாலங்களுக்குத் தக்கபடி கட்டி உத்தியாவனங்களையும் நியமித்து தேவலோக வீடாகச் செய்வித்திருந்தார். இவருடைய 16-ம் வயதில் சுப்பிரபுத்தராஜன் குமாரத்தியாகிய சோதரா என்னும் அழகிய பெண்ணை விவாகஞ்செய்து சுகப்படச்செய்தார். இவ்விருவருக்கும் ரஹூலா என்னும் குமாரன் பிறந்தான். இங்ஙனமிருக்க, ஒருநாள் இவ்வுலகவின்பங்களையெல்லாம் விட்டு உலகத்தாரடையுங் கஷ்டங்கள் வருதற்குக்காரணம் இன்னதென்றும், அதைத்தடுக்கும் விதத்தையும் அறிய விரும்பிச் சகலசுகங்களையும் விட்டொழித்தார்.

அப்போது இவருக்கு வயது-29. ஒருநாள் தமது உத்தியானவனத்தில் நான்குவித தேவர்கள் வந்து தரிசனங்கொடுத்தார்கள். இவர்களில் ஒரு வியாதியஸ்தன், விருத்தன், கெட்டுப்போன பிணம், ஒரு யோகியாகத் தோன்றினர். இந்தக் காட்சியை (Channa) சென்ன என்னும் சேடரும் பார்த்தார். இவருடைய ஜோதிஷர் இவர் புத்தராவார் என்று சொன்னதினால் இவரை வெளியிற் போகாவண்ணம் மூடிவைத்திருந்தார்கள். அங்ஙனமிருக்க, ஒருநாள் நடுராத்திரியில் எழுந்து மனைவியின் முகத்தையும், மகனையும் பார்த்துவிட்டுத் தம்முடைய கண்டகா என்னும் வெள்ளைக் குதிரையின்மேல் ஏறிச் சென்னன் என்னும் சேஷனுடுபோகவே, கேட்டுக்கதவுகளும் தேவராருளால் திறக்கப்பட்டுப்போய் கபிலவஸ்துக்கருகிலிருக்கும் அநுமோந்தியின் கரையிற்போய்த் தலைமயிரைச் சிரைத்துக்கொண்டு, தாம் பூண்டிருந்த ஆபரணங்களைத் தமது பிதாவிடம் கொடுக்கும்படி சென்னனிடம் கொடுத்தனுப்பிவிட்டு, மகததேசத்தின் பிரதானபட்டணமாகிய இராஜகிரஹத்துக்குப்போய் (Uravela) யுருவெலா வனத்திலிருக்கும் தபசிகளிடம் ஞானமடையப்போனார்.

அவ்விடத்தில் சலப்பிராம்மண யோகிகள் தேககஷ்டமான கர்மங்களைச் செய்வதைக் கண்டு, தாமும் செய்தும் ஞானம் வராமையால் புத்தகயாவென்னும் வனத்துக்குப் போய்ப் பல வருடங்கள் புத்தியை ஒரே நிலையில் வைத்துத் தியானித்தார். அப்போது இவருடன் (Kondaniya) கொண்டானியா, (Bhaddaji) பத்தாஜி, (Wappa) வாப்பா, (Mahanama) மஹாநாமா, (Assarabaji) அசரபாஜி என்னும் சிநேகிதர்களும் கண்ணை மூடிக்கொண்டு ஜபஞ் செய்தார்கள். பிரதிதினமும் பட்டினியாகக் கொஞ்சம் கொஞ்சமாகச் சாப்பிட்டுப் பிறகு ஆகாரத்தையே விட்டுவிட்டார். ஒருநாள் களைதட்டி விழ, கேவலம் பட்டினியினால் ஞானம் வராதென்று கண்டு நாகமரத்தடியில் (Nagaroo) படுத்திருந்தார். எழுந்து நிரஞ்சாரா (Niranjara) நதியில் குளித்து அங்கு பிரபுவின் மகன் கொடுத்த சாதத்தை வாங்கிச் சாப்பிட்டார். பிறகு அந்த மாலைப்பொழுதில் அசோகமரத்தடியிற்போய் அதன் கீழ்முகமாய் உட்கார்ந்து ஞானத்தை யடைகிறவரையில் போகேன் என்று தியானிக்க, அன்று இராத்திரி ஞானோதயமாகி பூர்வ ஜனன ஸ்திதியையும் தற்கால ஸ்திதியை

## புத்தமதம்.

புத்தமதம், இந்து (பிராமண) மதத்திலிருந்து ஜனித்த ஒரு பெருங்கிளைமதமாம் கி. மு. 700 வருஷங்களுக்குமுன் நிலவள நீர்வளத்தில் நிகரற்று விளங்காநின்ற அயோத்தியாவின் கிழக்குத்திசையில் மகிமைபெற்றமகதம் (கபிலவஸ்து) என்று ஒரு பட்டணத்தில், ஆதிசூரியவம்சக் கடையரசரில் ஒருவர்(வீரவாகுமகாராஜா) தருமராஜா பரிபாலனஞ் செய்து வந்தார். அவருக்கு மாயாதேவி என்று அழகுமிகுந்த மனைவியிருந்தனர். அவர்வயிற்றில் சித்தாரத்தி யென்ற ஒரு ஆண் குழந்தை ஜனித்தது. இவர் சகல தேஜஸ்ஸோடுகூடி அழகிலும் வில்வித்தையிலும், புத்தியிலும் சிறந்தவர். இவர் பிறந்த 7-ம் நாளில் இவர் தாயார் பரமபத பிராப்தியடைந்தபடியால் சிறியதாயாரால் வளர்க்கப்பட்டு வந்தார். இவர்தான் பிற்காலங்களில், கவுதமர், சக்கியமுனி, புத்தர் என்ற புகழ்பெற்ற பெயரைப்பெற்று பிரகாசித்தவர்.

இவரைப்பற்றி இலங்கை சாசனமொன்றால் பின்வருகிறபடி சொல்லப்பட்டிருக்கிறது.

சித்தார்த்த என்பது இவரது சொந்தப்பெயர். கவுதமரென்பது இவரது குடும்பப்பெயர். இவர் தகப்பனுருடைய பெயர் சுத்தோதனனும், தாயார்பெயர் மாயாதேவியாம். இவர் ஆண்ட ஜனங்கள் ஆரியரைச்சார்ந்த சாக்கியராம். ஆண்டதேசம் கபிலவஸ்து. காசிக்கு 100 மையில் தூரத்திலும், இமயமலைக்கு 40 மயில் தூரத்திலும், இப்போது கோனுவென்று சொல்லும் ரோஹிணி நதியின் மேற்கட்டப்பட்டது. இவர் கி. மு. 623-ல் ஜனித்தனர். இவர் சுகமாகவாழ 3-5-9 மாடி அடுக்குகளுள்ள 3-பெரிய அரண்மனைகளையும், மாரிகாலம் வசந்தகாலங்களுக்குத் தக்கபடி கட்டி உத்தியாவனங்களையும் நியமித்து தேவலோக வீடாகச் செய்வித்திருந்தார். இவருடைய 16-ம் வயதில் சுப்பிரபுத்தராஜன் குமாரத்தியாகிய சோதரா என்னும் அழகிய பெண்ணை விவாகஞ்செய்து சுகப்படச்செய்தார். இவ்விருவருக்கும் ரஹூலா என்னும் குமாரன் பிறந்தான். இங்ஙனமிருக்க, ஒருநாள் இவ்வுலகவின்பங்களையெல்லாம் விட்டு உலகத்தாரடையும் கஷ்டங்கள் வருதற்குக்காரணம் இன்னதென்றும், அதைத்தடுக்கும் விதத்தையும் அறிய விரும்பிச் சகலசுகங்களையும் விட்டொழித்தார்.

அப்போது இவருக்கு வயது-29. ஒருநாள் தமது உத்தியானவனத்தில் நான்குவித தேவர்கள் வந்து தரிசனங்கொடுத்தார்கள். இவர்களில் ஒரு வியாதியஸ்தன், விருத்தன், கெட்டுப்போன பிணம், ஒரு யோகியாகத் தோன்றினர். இந்தக் காட்சியை (Channa) சென்ன என்னும் சேடரும் பார்த்தார். இவருடைய ஜோதிஷர் இவர் புத்தராவார் என்று சொன்னதினால் இவரை வெளியிற் போகாவண்ணம் மூடிவைத்திருந்தார்கள். அங்ஙனமிருக்க, ஒருநாள் நடுராத்திரியில் எழுந்து மனைவியின் முகத்தையும், மகனையும் பார்த்துவிட்டுத் தம்முடைய கண்டகா என்னும் வெள்ளைக் குதிரையின்மேல் ஏறிச் சென்னன் என்னும் சேஷனுடனே போகவே, கேட்டுக்கதவுகளும் தேவராருளால் திறக்கப்பட்டுப்போய் கபிலவஸ்துக்கருகிலிருக்கும் அநுமோந்தியின் கரையிற்போய்த் தலைமயிரைச் சிரைத்துக்கொண்டு, தாம் பூண்டிருந்த ஆபரணங்களைத் தமது பிதாவிடம் கொடுக்கும்படி சென்னனிடம் கொடுத்தனுப்பிவிட்டு, மகததேசத்தின் பிரதானபட்டணமாகிய இராஜகிரஹத்துக்குப்போய் (Uravela) யுருவெலா வனத்திலிருக்கும் தபசிகளிடம் ஞானமடையப்போனார்.

அவ்விடத்தில் சலப்பிராம்மண யோகிகள் தேககஷ்டமான கர்மங்களைச் செய்வதைக் கண்டு, தாமும் செய்தும் ஞானம் வராமையால் புத்தகயாவென்னும் வனத்துக்குப் போய்ப் பல வருடங்கள் புத்தியை ஒரே நிலையில் வைத்துத் தியானித்தார். அப்போது இவருடன் (Kondaniya) கொண்டானியா, (Bhaddaji) பத்தாஜி, (Wappa) வாப்பா, (Mahanama) மஹாநாமா, (Assarabaji) அசரபாஜி என்னும் சிநேகிதர்களும் கண்ணை மூடிக்கொண்டு ஜபஞ் செய்தார்கள். பிரதிதினமும் பட்டினியாகக் கொஞ்சம் கொஞ்சமாகச் சாப்பிட்டுப் பிறகு ஆகாரத்தையே விட்டுவிட்டார். ஒருநாள் களைதட்டி விழ, கேவலம் பட்டினியினால் ஞானம் வராதென்று கண்டு நகமரத்தடியில் (Nagaroo) படுத்திருந்தார். எழுந்து நிரஞ்சாரா (Niranjara) நதியில் குளித்து அங்கு பிரபுவின் மகன் கொடுத்த சாதத்தை வாங்கிச் சாப்பிட்டார். பிறகு அந்த மாலைப்பொழுதில் அசோகமரத்தடியிற்போய் அதன் கிழ்முகமாய் உட்கார்ந்து ஞானத்தை யடைகிறவரையில் போகேன் என்று தியானிக்க, அன்று இராத்திரி ஞானோதயமாகி பூர்வ ஜனன ஸ்திதியையும் தற்கால ஸ்திதியை

யும், பிற்கால ஸ்திதியையும் மனிதர்களுக்குண்டாகும் கஷ்டங்களையும், அவைகளைவிட்டு நீங்கும் வழியையும் கண்டறிந்து சகல இந்திரிய சுகங்களையும் விட்டுவிட்டார். அவர் அறிந்த ஞானமெல்லாங்கூடி அஞ்ஞானத்தைவிட்டு மெஞ்ஞானத்தை யடைந்ததேயாம்.

புத்தன் என்பதற்கு அறிவு உள்ளவன் என்று பொருளாம். இவர் சிறு பிராயத்திலேயே இந்துவேத மநுநீதிகளைப் பூரணமாகக் கற்றபின் ஷை பிரமாண (இந்து) மதஸ்தர்களில், சிலர்: சமாதானம், சத்தியம், ஒரேகுலம், முதலானவைகளுக்கு விரோதமாக நடப்பதையும், மதுபானம் மாமிசபோஜனம், மிதமிஞ்சிய மாதர்போகம் செய்வதையுங்கண்டு பூலோகத்தில் பூரண சமாதானத்தை ஸ்தாபிக்கக் கருதினர். அப்போது அவருக்கு 29-ம் வயது. சிங்காரமான வனங்களுக்குச் சென்று ஒரு அசோகமரத்தடியில் கையில் ஜபமாலையுடன் உட்கார்ந்து, கிழக்குத்திசை நோக்கி 7-8 நாள் விடாமல் ஜபஞ் செய்துவந்தார். பிறகு காசி கயா முதலான திவ்ய ஸ்தலங்களுக்கேகி, தம் மதத்தைப் பகிரங்கமாகப் பிரசங்கஞ் செய்து அநேகரை தம்கோட்பாட்டுக்குட்படுத்தினர். அநேக வியாதியஸ்தர்களை வைத்தியஞ்செய்து காப்பாற்றினர். ஆனால் இவர் யாதொரு கிரந்தத்தையும் எழுதவில்லை.

இவ்விதம் பரோபகாரமாக உழைத்துவந்த இவர் தமது 80-ம் வயதில் (கி. மு. 543-ம் வருஷத்தில்) இறந்தார். இவருடையபிரேதத்தை மிகச்சிறப்பாக அடக்கஞ்செய்தார்களாம். பலவிடங்களில்ஞாபகச்சின்னமாகப்பலவிதசமாதிகள் கட்டப்பட்டன. இம்மதாதிபதி இறந்தபிறகு இவருடைய சீடர்களாகிய உபாலே, ஆநந்தர், கசியபர் என்ற மூவருங்கூடி (ஏழு மாதகாலத்திற்குள்ளாக) இப் புத்தமதத்தின் பிரமாணங்களை கிரந்தங்களாக்கி, பலவிடங்களில் பிரசங்கஞ்செய்து வந்தார்கள். சிலநாள் சென்றபிறகு இரண்டாவது கூட்டங்கூடி ஷை பிரமாணங்களில் சிலவற்றைச் சீர்திருத்தினர்கள். பிறகு கி. மு. 220-ம் வருஷத்தில் அரசாண்ட புத்தசமய இராஜாவாகிய அசோகன் காலத்தில் மூன்றாவது கூட்டங்கூடி முன்னிலும் மதிகமாகச் சீர்திருத்தினார்கள். இத்யாதி சங்கதிகள் ஷை மதச்சரித்திர கிரந்தமாகிய "மேவானசம்" என்றதில் விவரமாக எழுதப்பட்டிருக்கின்றன.

அக்காலத்தில் கசியபர், மத்தியமர் என்ற இரண்டு சமய உபதேசிகள் இமயமலை, நேபாளம், திபேத்து முதலான தேசங்களிற் சென்று பிரசங்கஞ் செய்தார்கள். ஆனால் ஆதி புத்தர் இறந்து 1200 வருடங்களுக்குப்பிறகு ஓர் சீனதேசத்துப் பிரயாணி ஷை புத்தர் உட்கார்ந்து தவஞ் செய்துகொண்டிருந்த அசோகமரவனத்தைப் பார்வையிட்டு ஷை மதத்தை நாடித் தன்தேசமாகிய சீன இராஜ்யத்தில் இம்மதத்தைப் பரவச்செய்ததாகச் சிலசாஸ்திரிகள்சொல்லுகிறார்கள். நாளாவட்டத்தில் பல தேசங்களில் வியாபித்தது, தக்ஷிண இந்தியாவுக்கும் இலங்கைத் தீவுக்கும் பரவிற்று. இம்மதஸ்தரில் அநேகர் சிற்பிசாஸ்திரிகளானபடியால், விசித்திரமும் விசாலமுமான அநேக தேவாலயங்களுண்டாக்கினார்கள். இந்து தேசத்தில் 100-அடி உயரமான "சானசீடோப்" என்பது விசேஷ ஆலயம். பம்பாய் பிரதேசத்தில் 900-க்கு அதிகமான உயரமான கோயில்களுமுண்டு. இதன்றியில் கற்களில் குடைந்தெடுத்த அநேக குகைகளும், ஜபகூடங்களும், திபேத்து தேசத்தில் 4,000-லாமாக்கள் (சந்நியாசிகள்) தங்கும்படியான ஒரு ஆலயமும் அநேக கன்னிகாமடங்களும், இலங்கைத் தீவில் அநேகசிறந்த கோயில்களுமுண்டு.

கி. மு. 311-ம் வருடத்தில் 2-அங்குலம் நீளமான புத்தருடைய பல்லும், சில எலும்புகளும் இலங்கைத் தீவிற்குக் கொண்டுபோகப்பட்டு அவிடத்தில் 6-அடுக்கு அறைகளுள்ள வெள்ளிப் பெட்டியி லடக்கஞ்செய்து மிகச் சிரேஷ்டமாகக் கொண்டாடுகிறார்கள். இவர்களுடைய பாஷையின் பெயர் பலெய் என்று சொல்லப்படும். இச் சமயத்தாருக்கு அநேக கிரந்தங்களுண்டு. அவற்றில் பெரும் பான்மையானவை தத்துவ நூல்களும் தார்க்கிக கிரந்தங்களுமே. இவர்களுடைய கொள்கையாவது:—

முதற்காரணக்கடவுள் ஒருவர் இல்லையென்றும், ஆத்மா இல்லையென்றும், இவ் விசித்திரமான உலகமும் அதிலுள்ள ஸ்தாவர சங்கமாதிப் பொருள்களும் ஒருவராலும் சிருஷ்டிக்கப்படாமல், தாமாகத் தோன்றியதென்றும், புண்ணியத்தினாலும், புத்தியினாலும் பூரணம்பெற்ற ஒவ்வொருவரும், காடாந்தகார அஞ்ஞானமாகிய உலகப் பற்றுகளைவிட்டு, மற்றும் தம்மினத்தாரிலும் மேன்மையைப் பெறுவதால் புத்திமான்கள்தான் தேவராவார்களென்றும்; இப்படியே ஆதிபுத்

யும், பிற்கால ஸ்திதியையும் மனிதர்களுக்குண்டாகும் கஷ்டங்களையும், அவைகளைவிட்டு நீங்கும் வழியையும் கண்டறிந்து சகல இந்திரிய சுகங்களையும் விட்டுவிட்டார். அவர் அறிந்த ஞானமெல்லாங்கூடி அஞ்ஞானத்தைவிட்டு மெஞ்ஞானத்தை யடைந்ததேயாம்.

புத்தன் என்பதற்கு அறிவு உள்ளவன் என்று பொருளாம். இவர் சிறு பிராயத்திலேயே இந்துவேத மநுநீதிகளைப் பூரணமாகக் கற்றபின் ஷை பிரமாண (இந்து) மதஸ்தர்களில், சிலர்: சமாதானம், சத்திரியம், ஒரேகுலம், முதலானவைகளுக்கு விரோதமாக நடப்பதையும், மதுபானம் மாமிசபோஜனம், மிதமிஞ்சிய மாதர்போகம் செய்வதையுங்கண்டு பூலோகத்தில் பூரண சமாதானத்தை ஸ்தாபிக்கக் கருதினார். அப்போது அவருக்கு 29-ம் வயது. சிங்காரமான வனங்களுக்குச் சென்று ஒரு அசோகமரத்தடியில் கையில் ஜபமாலையுடன் உட்கார்ந்து, கிழக்குத்திசை நோக்கி 7-8 நாள் விடாமல் ஜபஞ் செய்துவந்தார். பிறகு காசி கயா முதலான திவ்ய ஸ்தலங்களுக்கேகி, தம் மதத்தைப் பகிரங்கமாகப் பிரசங்கஞ் செய்து அநேகரை தம்கோட்பாட்டுக்குட்படுத்தினார். அநேக வியாதியஸ்தர்களை வைத்தியஞ்செய்து காப்பாற்றினார். ஆனலிவர் யாதொரு கிரந்தத்தையும் எழுதவில்லை.

இவ்விதம் பரோபகாரமாக உழைத்துவந்த இவர் தமது 80-ம் வயதில் (கி. மு. 543-ம் வருஷத்தில்) இறந்தார். இவருடையபிரேதத்தை மிகச்சிறப்பாக அடக்கஞ்செய்தார்களாம். பலவிடங்களில்ஞாபகச்சின்னமாகப்பலவிதசமாதிகள் கட்டப்பட்டன. இம்மதாதிபதி இறந்தபிறகு இவருடைய சீடர்களாகிய உபாலே, ஆநந்தர், கசியபர் என்ற மூவருங் கூடி (ஏழு மாதகாலத்திற்குள்ளாக) இப் புத்தமதத்தின் பிரமாணங்களை கிரந்தங்களாக்கி, பலவிடங்களில் பிரசங்கஞ்செய்து வந்தார்கள். சிலநாள் சென்றபிறகு இரண்டாவது கூட்டங்கூடி ஷை பிரமாணங்களில் சிலவற்றைச் சீர்திருத்தினார்கள். பிறகு கி. மு. 220-ம் வருஷத்தில் அரசாண்ட புத்தசமய இராஜாவாகிய அசோகன் காலத்தில் மூன்றாவது கூட்டங்கூடி முன்னிலும் மதிகமாகச் சீர்திருத்தினார்கள். இத்யாதி சங்கதிகள் ஷை மதச்சரித்திர கிரந்தமாகிய "மேவானசம்" என்றதில் விவரமாக எழுதப்பட்டிருக்கின்றன.

அக்காலத்தில் கசியபர், மத்தியமர் என்ற இரண்டு சமய உபதேசிகள் இமயமலை, நேபாளம், திபேத்து முதலான தேசங்களிற் சென்று பிரசங்கஞ் செய்தார்கள். ஆனால் ஆதி புத்தர் இறந்து 1200 வருடங்களுக்குப்பிறகு ஓர் சீனதேசத்துப் பிரயாணி ஷை புத்தர் உட்கார்ந்து தவஞ் செய்துகொண்டிருந்த அசோகமரவனத்தைப் பார்வையிட்டு ஷை மதத்தை நாடித் தன்தேசமாகிய சீன இராஜ்யத்தில் இம்மதத்தைப் பரவச்செய்ததாகச் சிலசாஸ்திரிகள்சொல்லுகிறார்கள். நாளாவட்டத்தில் பல தேசங்களில் வியாபித்து, தக்ஷிண இந்தியாவுக்கும் இலங்கைத் தீவுக்கும் பரவிற்று. இம்மதஸ்தரில் அநேகர் சிற்பசாஸ்திரிகளானபடியால், விசித்திரமும் விசாலமுமான அநேக தேவாலயங்களுண்டாக்கினார்கள். இந்து தேசத்தில் 106-அடி உயரமான "சானகீடோப்" என்பது விசேஷ ஆலயம். பம்பாய் பிரதேசத்தில் 900-க்கு அதிகமான உயரமான கோயில்களுமுண்டு. இதன்றியில் கற்களில் குடைந்தெடுத்த அநேக குகைகளும், ஜபகூடங்களும், திபேத்து தேசத்தில் 4,000-லாமாக்கள் (சந்நியாசிகள்) தங்கும்படியான ஒரு ஆலயமும் அநேக கன்னிகாமடங்களும், இலங்கைத் தீவில் அநேகசிறந்த கோயில்களுமுண்டு.

கி. மு. 311-ம் வருடத்தில் 2-அங்குலம் நீளமான புத்தருடைய பல்லும், சில எலும்புகளும் இலங்கைத் தீவிற்குக் கொண்டுபோகப்பட்டு அவிடத்தில் 6-அடுக்கு அறைகளுள்ள வெள்ளிப் பெட்டியி லடக்கஞ்செய்து மிகச் சிரேஷ்டமாகக் கொண்டாடுகிறார்கள். இவர்களுடைய பாஷையின் பெயர் பலெய் என்று சொல்லப்படும். இச் சமயத்தாருக்கு அநேக கிரந்தங்களுண்டு. அவற்றில் பெரும் பான்மையானவை தத்துவ நூல்களும் தார்க்கீக கிரந்தங்களுமே. இவர்களுடைய கொள்கையாவது:—

முதற்காரணக்கடவுள் ஒருவர் இல்லையென்றும், ஆத்மா இல்லையென்றும், இவ் விசித்திரமான உலகமும் அதிலுள்ள ஸ்தாவர சங்கமாதிப் பொருள்களும் ஒருவராலும் சிருஷ்டிக்கப்படாமல், தாமாகத் தோன்றியதென்றும், புண்ணியத்தினாலும், புத்தியினாலும் பூரணம்பெற்ற ஒவ்வொருவரும், காடாந்தகார அஞ்ஞானமாகிய உலகப் பற்றுகளைவிட்டு, மற்றும் தம்மினத்தாரிலும் மேன்மையைப் பெறுவதால் புத்திமான்கள்தான் தேவராவார்களென்றும்; இப்படியே ஆதிபுத்

தருமாஞ ரென்றும், இப்படி சர்வபரிபூர்ண ஞானமடைந்
தோரே, நிர்வாணம் (ஒன்றுமில்லை) என்கிற மோக்ஷத்தைத்
யடைவார்களென்றும், இப்படிப்பட்ட பதவியை யடைந்த
தேவர்கள் ஒரு கற்பகாலத்திற்கு ஐவரென்றும், அவர்களில்
புத்தர் நாலாவது தேவனென்றும், அவருக்குப் பிறகு 35
புத்தர்கள் ஜனித்ததாகவும், ஷை தேவர்களில் ஒவ்வொருவ
ரும் நாலாயிரம் வருடம் ஆளுகை செய்கிறரென்றும், கி. பி.
1840-வது வருடங்கள் வரையில் புத்தர் 2382 வருடங்கள்
ஆண்டாரென்றும், 26 மோக்ஷப் பதவிகளும் 136 நரகங்களு
முண்டென்றும், ஜாதிபேதங் கூடாதென்றும்; பொய், களவு,
விபசாரம், மதுபானம், கொலைமுதலிய பஞ்சமா பாதகங்கள்
சுத்தமாகக் கூடாதென்றும், மத்தியானத்திற்குமேல் பல
மான சாப்பாடுண்ணல், தாசிகள் முதலான கூத்துகளைப் பார்
த்தல், விலையுயர்ந்த அழகு ஆடையாபரணங்களைத் தரித்தல்
வாசனை திரவியங்களை வழங்கல், மதயயித்தியம், மதயுத்தம்,
பரஸ்திரீகமனம், ஒன்றுக் கதிகமான மனைவி, ஜீவவதை முத
லானவைகள் கூடாதென்றும், வாலிபர்கள் சூரியோதயத்திற்
குப் பின் தூங்குதலும், சோம்பலும், துஷ்ட ஸ்நேகமும்,
அதிகக்குடியும், விபசாரமும், பழிவாங்கலும், துர்ப்போதனை
யும், பேராசையும், இராத்திரி சஞ்சாரமும் ஆகிய இவைமுத
லியவைகளை அநுசரிக்கக் கூடாதென்றும், சகலரும் சத்தி
யம், கருணை, அடக்கம், நம்பிக்கை, தீர்மானம், புத்தி, முத
லானவைகளைக் கைக்கொள்ள வேண்டுமென்றும், தரும
சத்திரங்கள், சாலைகள் முதலானவைகளை உண்டாக்கி, பெரி
யவர்களுக்கும் பெற்றோர்களுக்கும், பெண்களுக்கும், பிரியத்
தையும், பக்தியையுங் காட்டவேண்டுமென்றும், உலகத்தி
லுள்ள சகல ஜனங்களையும், ஜீவாதிகளையும் சமாதானம்,
சந்தோஷம், மரியாதை முதலானவைகளால் பிரியப்படுத்த
வேண்டுமென்றும், இச்சமய குருக்கள் சந்நியாசிகளாகை
யால் சிரோக்ஷவரஞ் செய்துகொண்டும்; இடுப்பில் மஞ்சள்
வஸ்திரந் தரித்தும், கையில் ஜபமாலையுடன் கிழக்கு, மேற்கு,
வடக்கு, தெற்கு, வானம், பூமியாகிய ஆறிடங்களை வணங்கி
யும், பிறகு கோயிலில் வைக்கப்பட்ட ஆதிபுத்த விக்கிரகத்
தைப் பூசைசெய்து பிச்சை எடுத்துக்கொண்டு காலங்கழிக்க
வேண்டுமென்றும் சொல்லுகிறார்கள்.

இம்மதஸ்தருக்குள் ஒரேதடவை மதயுத்தம் நடந்ததாகத் தோற்றுகின்றது. ஆனால் இப்புத்தமதம் 800 வருஷ காலமாக இந்துதேசத்தில் இராஜகிய மதமாகவிருந்தது. பிறகு இந்துபுராணாதிகள் எழுதப்பட்டன. இம்மதஸ்தர், இந்து தேசத்தில் அபூர்வமாகவும், சீனா, திபேத்து, தார்த்தாரி, பர்மா, ஜாவா, ஜப்பான், சீயம், அனம், நேபாளம், ஆசாம், மத்திய ஆசியா, இலங்கைத்தீவு, முதலான தேசங்களில் (36,90,00,000, பெயர்) இருக்கிறார்கள்.

## பூர்ணசந்திரோதயம்.

### பௌத்தமத விஷயமாக ஸ்ரீ நோரேத்திரநாத் ஸேனர் எழுதியது.

1. சென்ற வைகாசிமீ பௌர்ணமையுடன் கௌதம புத்தர் நிர்வாணம் பெற்று 2499-வருஷங்கள் ஆயின. வருகிற வருஷத்துடன் 2500-வருஷங்களாகின்றன.

2. புத்தரின் அஸ்தி ஒரு தங்கக் கலசத்தில் வைக்கப்பெற்று இந்தியாவின் மேற்கு எல்லை நகரான புருஷபுரம் என்ற பெஷாவரில் பூமியின்கீழ்ப் புதைக்கப்பட்டு, (Archaeological Department) பூர்வீகச் சின்னங்களை ஆராய்ச்சிசெய்யும் டிபார்ட்டுமெண்டாரால் கண்டுபிடிக்கப்பட்டு வெளியேற்றப்பட்டு இந்திய கவர்னர்ஜனரல் கனம் பொருந்திய மிண்டோ அவர்களால் பர்மா தேசத்தில் முக்கியமான பட்டணமாகிய மண்டேலே என்னும் நகரத்தில் பந்தோபஸ்தாய் இருக்கும்படியாக அவ்வூரிலுள்ள பௌத்த சந்நியாசிகளிடம் ஒப்புவிக்கப்பட்டிருக்கிறது.

3. பௌத்த பிச்சுக்கள்: கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடிக்குமுன் சீனாதேசம் மூலமாக வட அமெரிக்கா தேசம் சென்று மெக்ஸிகோ முதலான இடங்களில் பௌத்த மதத்தை பரவச்செய்தார்களென்று தெரியவருகிறது. மெக்ஸிகோவில் சில பட்டணங்களின்பேர்கள் பௌத்தமதம் சம்பந்தப்பட்டவைகளாக இருக்கின்றன காடிமாலா என்பது கௌதம ஆலயம் என்பதின் மருவாகவும், ஸகோமான் என்றது சக்கியமுனியன் என்பதின் மருவாகவும், சகபுராஸ என்றது சகயபுர என்றதின் மருவாகவும் இருக்கின்றமையை ஊகிக்கலாம். மெக்ஸிகோவின் ஜனங்களுடைய குருக்களை

"லேமாஸ" என்று சொல்லுகிறார்கள். மெக்ஸிகோவில் பூர்விக கோவில்கள் கட்டிடங்கள் முதலானவைகளின் இடிந்து தகர்ந்துபோனவைகளைத் தோண்டி யெடுத்துப்பார்க்கிறதில் சில இந்துமத விக்கிரகங்களும் அகப்பட்டனவாம். அவற்றில் கணபதி விக்கிரகம் முக்கியமானது.

4. கி. பி. 836-ம் வருஷத்தில் இந்தியா தேசத்தினின்றும் பூதிசேனன் என்ற ஒருபிராமண பௌத்தன் சீனாவுக்கும் ஜப்பானுக்கும் போனான். சீன தேசத்தில் அப்போது இருந்த சக்கரவர்த்தி அவனை அன்பு ஆதரவுடன் நடத்தினார். சீனாவிலேயே இருந்து இறந்தான். அவனுடைய சமாதியை இன்னும் சீனதேசத்தில் காணலாம். இந்த பூதிசேனனால் சமஸ்கிருதத்தை அனுசரித்து 5 அக்ஷரமுள்ளதாக ஜப்பான் பாஷையின் நெடுங்கணக்கு ஏற்படுத்தப்பட்டது. பௌத்த மத சம்பந்தமான சமஸ்கிருத புஸ்தகங்கள் ஏராளமானவை சீனபாஷையில் மொழிபெயர்க்கப்பட் டிருக்கின்றன. அதனால் அநேக சம்ஸ்கிருதவார்த்தைகள் சைனபாஷையில் கலந்திருக்கின்றன. பௌத்தமதம் சீனாவுக்குப் போனகாலத்தில் அநேக இந்துக்கள் சீனாவுக்குப் போயிருக்கிறார்கள் என்று தெரியவருகிறது.

5. பௌத்தமதம் உலகமெங்கும் பரவி ஆரம்பித்திருக்கிறது. ஐரோப்பா கண்டத்திலும், அமெரிகா கண்டத்திலும் ஒவ்வொரு முக்கியமான நாடுகளில், ஓர் ஓர் பௌத்த சபை ஏற்பட்டுள்ளது. பௌத்தமதத்தின் கிரந்தங்களில் அதிகமாகப் பலி என்ற ஸம்ஸ்கிருதத்தினின்று திரிந்த பிராகிருத பாஷைகள் உள்ளன. அவற்றுள் பெரும்பான்மையானவைகள் ஆங்கில பாஷையில் மொழிபெயர்க்கப்பட்டு வருகின்றன.

6. வருகிற 1911-ம் வருஷத்தில், உலகிலுள்ள பௌத்தர்களின் மஹாசபை கூடப்போகிறது.

7. மைத்திரேய புத்தர் என்பவர் இனி அவதாரமாவாராம்.

## ஜைநசமயம்.

ஆர்கதம் அல்லது அருகனை வணங்கும் சமயத்துக்கு ஜைநசமயமென்று பெயர். இது சற்றேறக்குறைய புத்த சமயத்தைப்போலவே யிருக்கிறது. ஆனால் சுத்த நாஸ்திக மத

மல்ல. இதில் சுவேதாம்பரிகள், திகம்பரிகளென இருவகுப்பார்களிருக்கிறார்கள். இவ்விருவகுப்பாரும் விக்கிரகங்களுக்கு உடைதரிப்பித்தல் முதலிய சிலவிஷயங்களில் வித்தியாசப்பட்டாலும் ஜைநவேதாகம அங்கங்களை ஒரேவிதமாக நம்பி அனுசரிக்கிறார்கள்.

ஜைநர்கள்:—இந்த உலகமானது அநாதியாய் நிலைபெற்றிருக்கிறதென்றும், எப்போதும் அழியாத நிலைமையையுடையதென்றும், கடவுள்முதல் யாவராலும் படைக்கப்பட்டதல்லவென்றுஞ் சொல்லுவதன்றியில், இந்த உலகங் கீழுலகம், நடு உலகம், மேலுலகமென மூன்று வகுப்புகளாக விருக்கிறதென்றுஞ் சொல்லுகிறார்கள். மேலும் இந்த உலகத்தின் அடியில் அதோகதி என்ற உலகமும், அதற்குமேல் ஏழு நரகலோகங்களும், அவற்றிற்குமேல் பத்துப்பவணலோகங்களு முண்டென்றும், இவற்றிற்குமேல் இந்தமண்ணுலக மிருக்கிறதென்றும், இதற்குமேல், சோதி, வியந்தரலோகங்களுண்டென்றும், இவற்றிற்குமேல் பதினாறு தேவலோகங்களுண்டென்றும், அதற்குமேல் அகமிந்திரலோக முண்டென்றும், அதன்பேரில் அனுதிசித்த பரமேஷ்டியாகும் பராபரவஸ்துவிருக்கும் மோக்ஷலோக மிருக்கிறதென்றுஞ் சொல்லுகிறார்கள்.

ஜைநர்கள்:—காலமநித்தியமாகையால், அழியாமலிருக்குமியல்பினை யுடையதாகி உச்சற்பிணி, அவசற்பிணியென இருவகைப்படுமென்றும், இவற்றில் வளருங்காலமாகிய உச்சற்பிணிகாலம் நன்னற்காலம், நற்காலம், நற்றீக்காலம், தீ நற்காலம், தீக்காலம், என்று சொல்லப்பட்ட ஆறுவகை தீத்தீகாலமாம். இந்த உச்சற்பிணிகாலம் தீத்தீக்காலந்தொடங்கி நடக்குமாம். இந்தக்காலத்தில் மனிதருக்கு ஆயுளும் சரீர சவுக்கியமும் விர்த்தியாகுமாம். குறையுங்காலமாகிய அவசற்பிணிகாலத்தில் நன்னற்காலந்தொடங்கி நடக்கிறபடியால் இந்தக்காலத்தில் மனிதருக்கு ஆயுளுஞ் சரீரசவுக்கியமுங் குறையுமாம். இப்பொழுது நடந்து வருகிறகாலம், அவசற்பிணிகாலமும், அஞ்சாங்காலமுமாகிய தீக்காலமாம். இந்த உச்சற்பிணி, அவசற்பிணி யிரண்டும் ஒருதரம் நடந்து முடிந்தவிடத்து ஒருயுகமென்று சொல்லுகிறார்கள். நிகழ்ந்த உச்சற்பிணி காலத்தில் 14-மநுக்கள் தோன்றி, சூரிய சந்திராதிகள் விகசிதமானதாகவும், பதினான்காம் மநுவின் பெயர் நாபிமகாரா

ஜாவெறுன்ம், இந்த மநுவின் காலத்தில் உலகத்தாருக்கு விஞ்ஞான மேலிட்டதாகவும், ஆகவே இவர்தான் பிரம்மா வென்றும், இவர் மனைவிக்கு மருதேவியம்மையென்றும், இவர் காலத்தில் விருஷபதீர்த்தங்க ரவதரித்தாரென்றும், இவருக்குப் பிறகு அஜித, சாம்பவா, அபிநந்தன, சுமதி, பத்ம பிரபி, சுபிரசவ, சந்திரப்பிரபு, புஷ்பதந்த, சீதலா, சிரேய ஙஸா, வசுபூஜிய, விமல, அநந்த, தர்ம, சாந்தி, குந்து, அரா, மாலி, மாணிஸ்விருத, நாமி, நமி, பார்ஸ்வா, வர்த்தமானஸ்வாமி என்னும் இருபத்து மூன்று தீர்த்தங்காரர்கள் அல்லது ஜைந ஸ்வாமிகள் அவதரித்திருந்ததாகவும், இப்போது நடக்கும் அவசற்பிணி காலத்தில் நிர்வாண, சாகர, மாஹன்தா, விமல பிரபு, சிர்த்தார, சுதந்த அமலப்பிரபு, உதார, அங்கிர, சுமதி, சிந்து, குசுமஞ்சரி, சிவகங்க, உத்ஸாஹ, கியானேஸ்வரர், பர மேஸ்வரர், விமலேஸ்வரர், எசோதர, குருஸதா, ஞானமூர்த்தி, சித்தாமதி, சிரிபாதர, அதிரிகதா, சாந்தி என்னும் இருபத்துநான்கு ஜைநதீர்த்தங்காரர்கள் அவதரித்திருப்பதாகவும்; மஹாபத்ம, சரதேவ, சுபார்ஸ்வ, சுவயம்பிரபு, சதாத்ம புத்தி, தேவபுத்தா, குலபுத்திர, உதனகா, குருஸ்த, ஜயகீர்த்தி, மானஸவிரத, ஹரா, நிபன்பா, நிஸ்ஸாவிப, விமிலக, நிர்மல, சித்திரகுப்தா, சமாதிகுப்தா, சுவயம்பு, அநுவந்திக, ஜெய, விமல, தேவபல, அநந்தவீரியா என்னும் இருபத்து நான்கு தீர்த்தங்காரர்க ளினியவதரிப்பார்களென்றுஞ் சொல்லுகிறார்கள். மேலும் இந்த அவசற்பிணி காலத்தின் முதல் தீர்த்தங்காரர்—84, 00, 000 வருஷங்கள் வாழ்ந்து வந்ததாகவும், இவருக்குப்பின் அவதரித்தவர்கள் சற்று குறைந்தகால மிருந்ததாகவும், இப்படியே தாழத்தாழ காலங்குறைவு படுமென்றுஞ் சொல்லுகிறார்கள். விசுவதீர்த்தங்கரர் அல்லது பரஸ்வநாதர் இந்த ஜைந சமயத்தை ஸ்தாபித்தவராயிருக்க வேண்டுமென்று மானியர் வில்லியம்ஸ் சொல்லுகிறார். இதே நாலாங்காலத்தில் 12-சக்கரவர்த்திகளும், 9-பலதேவ புருஷர்களும், 9-வாசுதேவர்களும், 9-பிரதிவாசுதேவர்களும், ஆக 63-தேவபுருடர்களிருந்து வாழ்ந்து வந்ததாகச் சொல்லுகிறார்கள். இவர்களில் தீர்த்தங்காரர்கள் பிறந்தபோதே மூன்று ஞானங்களை யுடையவர்களாயும், குரு உபதேசமற்றவர்களாயும், தேவர்களாலே செய்யப்பட்ட ஐந்து கல்லியாணங்களை யுடையவர்களாயும், மோக்ஷசுகத்தைக் கொடுப்பவர்களாயும், சகல ஞானமுமுடையவர்களாயும், பின்னும் பலவிதமாகப்

புகழ்ந்து அவர்களுக்குப் பிரதிநிதிகளாகப் பிரதிமைகளைச் செய்து பூஜைசெய்துகொண்டு வருகிறார்கள்.

இம்மதஸ்தர்களுக்கு 12-வேதங்களும், அநேக இலக்கிய இலக்கணாதி கிரந்தங்களுமுண்டு. ஆனால், இவர்களுடைய வேதங்களும், பிராமண மதஸ்தரைப்போலவே புத்தகங்களிலே எழுதாமல் உபதேச மூலமாயிருந்தபடியால் வேதங்களைக் காண்பது அபூர்வம். ஆயினும், வேதங்களின் கருத்துக்களைச் சம்ஸ்கிருத பாஷையிலும், வேறு பாஷைகளிலும், மகாபுராணம், திரிலோகசாரம், கோமட்சாரம், பதார்த்தசாரம், இரத்னகரண்டகம், தருமபரிட்சை, சிந்தாமணி, சூடாமணி, மேருமந்திரபுராணம், நீலகேசிவாதம், அமரம், சாகடாயனம், நயச்சக்கரம், சத்தபங்கி, தவளம், விஜயதவளம், மகாதவளம், சுபோதினி முதலான கிரந்தங்களி லெழுதியிருக்கிறார்கள். மேலும் தமிழில்: சிந்தாமணி, சூடாமணி, நீலகேசிவாதம், மணிமேகலை, நாலடி, குறள், நிகண்டு, நன்னூல், மேருமந்திரபுராணம் முதலான அநேக உபயோகமான கிரந்தங்களைச் செய்தார்கள். இந்த மதஸ்தர்கள் தமிழ்ப்பாஷையைப் பலவிதத்திலும் விருத்தியாக்கினார்கள். திருக்குறளைப் பாடிய திருவள்ளுவரையும ஜைநரென்று சிலர் சொல்லுகிறார்கள்.

ஜைநர்களுடைய பிரதானமான கடவுளுக்கு அருகதேவனென்றும், இந்தத்தேவன் தன்னைப்போலவே வேதம்,உலகம், காலம், உயிர்கள், கர்மம் இவை என்றென்றைக்கும் அநாதியாகவிருக்கின்றனவென் றறிவித்தவரென்றும், ஆதியந்தமற்றவரென்றும், கர்மங்கள் 148-ம் ஒழித்தவரென்றும், அசோகமரத்தின்கீழ் அமர்ந்து மூன்று தருமசக்கர முடையவரென்றும், நான்கு முகங்களுடையவரென்றும், ஒன்றிலிருந்தொன்றையுண்டாக்குவதும் ஒன்றை ரக்ஷிப்பதுமான செய்கையில்லாதவரென்றும், பின்னும் பலவிதமாகப் புகழ்ந்து வருகிறார்கள்.

அப்படிப்பட்ட தேவனை ஜைநர்கள் வணங்கினாலும், சிலர் பிராம்மண மதஸ்தர்களுடைய பிரம்மா, சிவன், விஷ்ணு, கணேசன் முதலான தேவர்களையும் அவர்கள் தேவிகளையும் அருகதேவனுடைய பிரதான பக்தர்களென்றும், சிறு தேவர்களென்றும் நம்பி வணங்கி வருகிறார்கள். சிலர் ஜாதிபேதத்தையும் பாராட்டி வருகிறார்கள். இந்தப் பூமியில் மூன்று குறைந்த ஒன்பதுகோடி முனிவர்க ளிருப்பதாகச் சொல்லு

கிறார்கள். மேலும் மாநஷீக ஆத்மாவானது, நித்தியசித்த மான், முக்திமான், பந்தாத்மான் என்னும் மூன்றுவகையாக விருக்கிறதென்றும், சரியான அறிவும், சரியான ஞானமும், சரியான நடவடிக்கையும் பெற்றவிடத்து மோக்ஷசுகத்தை யடையுமென்றுஞ் சொல்லுகிறார்கள். ஆனால், இல்லறத் தாருக்கும், ஸ்திரீகளுக்கும், விலங்குகளுக்கும், தேவர்களுக் கும், நரகர்களுக்கும் மோக்ஷங் கிடையாதாம். கடைசியாக ஐந்தாம் காலத்திலும், ஆறுங்காலத்திலும் எவருக்கும் மோ க்ஷங் கிடையாதாம்.

## ஜைநர் ஆசார விரதங்கள்.

பொய் சொல்லாதிருத்தலையும், பிறர்பொருளை யிச்சியா திருத்தலையும், கொலைசெய்யாதிருத்தலையும், பரஸ்திரீகளையிச் சியா திருத்தலையும், கள் சாராயங் குடியாதிருத்தலையும், வீடு, உடுப்பு, காடு, மாடு, தன தானியங்களை யதிகமாக விரும்பா திருத்தலையும், மகா விரதங்களெனக் கொண்டாடுகிறார்கள். இராத்திரிகாலங்களில் சாப்பிட்டால் விளக்கில்பிராணிகள்விழு ந்துச் சாகுமென சாயரக்ஷையிலேயே சாப்பிடுவார்கள். ஜல த்தில் பிராணிக ளிருப்பதால் வடிக்கட்டிக் குடிப்பார்கள். சந் நியாச குருமார்கள் நடக்கும்போது பிராணிகளை மிதித்துக் கொல்லாதிருக்க மயிலிறகுகளால் கூட்டிக்கொண்டு நடப்பார் கள். தலைமயிரில் பேன் முதலானவைகளைச் சேரவிடாதபடி மயிரைச் சிரைத்து விடுவார்கள். வேஷ்டியில் சீலைப்பேன் பிடியாதபடி, கடுக்காய் ஜலத்தில் அதைத் துவைப்பார்கள். பொதுவாக ஜைநர்கள் அத்தி, ஆலம், அரசம், இலந்தை, புட லம், சுரை முதலான காய்களையும்; வெங்காயம், வெள்ளைப் பூண்டு, கஞ்சா, அபினி, பெருங்காயம், முள்ளங்கி, மச்சமாமி சம் முதலானவைகளையும் உண்ணமாட்டார்கள்.

இப்போது ஜைநர்கள் மேற்கு இந்தியாவில் விசேஷமாய் இருப்பதாகச் சொன்னாலும், திருநறுங்கொண்டை, தீபங் கொடி, காஞ்சிபுரம், இராஜமகேந்திரம், ஸ்ரீரங்கப்பட்டணம், இரத்தினகிரி, காசி, கயா, டில்லி, பாட்ணா, கொல்லாபுரம், உஜ்ஜினி, சம்பாபுரி, பெங்காளம் முதலான விடங்களில் அதிக மாக விருக்கிறார்கள்.

டில்லி, கொல்லாபுரம், பெரியகுளம் முதலான விடங்க ளில் ஜைநர் மடங்களும், மடாதிபதிகளும், சந்நியாசிகளும்,

ஏராளமாக விருக்கிருர்கள். மேலும் அவர்களுக்குப் பல்லக்கு முதலான பிருதுகளும், மண்டலம் மயிர்பிஞ்சு முதலானவைகளு மிருக்கின்றன.

இந்தியாவில் பவுத்தம், ஜயின மதங்கள் பிரபலமாகவே அவைகளைப் பார்த்து அநேக சில்லரை மதங்கள் உற்பத்தியாயின. அவைகளில் விசேஷமான சில சில்லரை மதங்களாவன:—

## கவுரவமதம்.

சூரியனே சிருஷ்டிகர்த்தாவென்றும், காலைப்பொழுதில் அவரைப் பிரமாவென்றும், மத்தியானத்தில் ருத்திரனென்றும், மாலையில் விஷ்ணுவென்றும் கருதி, வணங்கி வரப்பட்டவர்களுக்குக் கவுரவமதஸ்தர்கள் என்றுபெயர். இம்மதஸ்தர்கள் சூரியனைத் தரிசிக்காமல் உண்ணமாட்டார்கள்.

## சாந்திரமதம்.

சாந்திரமதஸ்தர்கள் சந்திரனே பிரமம் என்றும், அதற்குமேல் ஒரு ஈசுவரனில்லை யென்றுங் கூறுவர்.

## நவக்கிரஹமதம்.

நவக்கிரகமதஸ்தர்கள் நவக்கிரகங்களுக்கு மேலான ஈஸ்வரனொருவனில்லையென்றும், நவக்கிரகங்கள் ஆத்மாக்களுடைய புண்ணிய பாவங்களுக்கு ஈடாகி, சுகதுக்கங்களையும், ஜனன மரணங்களையும் கொடுக்கின்றனவென்றுங் கூறுவர்.

## ஹிரணியகர்ப்பவாதிகள் மதம்.

ஹிரணியகர்ப்பவாதிகள். ஹிரணியகருப்பனென்னும் பிரம்மனே சிருஷ்டிகர்த்தாவென்று வணங்குபவர்களேயாம். இவர்களில் அநேகர் இப்போது ஆஜ்மீரைச்சார்ந்த பொக்கூரிலும் துவாரகையைச்சார்ந்த பெட்டேரிலும் இருக்கிறார்கள்.

## காணுபத்தியர் மதம்.

மஹா கணபதியே சிருஷ்டி கர்த்தரென்றும், அவரை ஹரித்திர கணபதி, துண்டிராஜர், உச்சிசிஷ்ட கணேசர், நவநீத கணபதி, சுவர்ண கணபதி, சந்தான கணபதி என்றுதி

பெயர்களால் வணங்கி வருபவர்களே காணபத்திய மதஸ்தர்களாம்.

## காபாலிக மதம்.

காபாலிகர் நிர்வாணிகளாகி, சுடுகாட்டுச் சாம்பலை எடுத்துத் தேகமெல்லாம் பூசிக்கொண்டும், வலது கையில் கத்தி கடாரியையும், இடது கையில் மனிதனுடைய மண்டை ஓட்டையும் ஏந்திக்கொண்டு பைரவா! பைரவா! என்று பாடிக்கொண்டும், மதுமாமிசங்களை யுண்டு மங்கையர் போகமே முத்தி என்றும் சொல்லித் திரிபவராம். இவர்களில் பிராமண காபாலிகரும் சூத்திர காபாலிகரும் உளர்.

## லோகாயதமதம்.

இவ்வுலக சுகமே சிறந்த சுகமென்றும், இவ்வுலகத்தை விட்டு மேலுலகங்களிற்போய் அனுபவிக்கும் சுகம் சொற்பனம்போலென்றும், சுவாமியேது ஜீவியேது என்றும், நரக சொற்கம் கிடையாதென்றும் சாதிப்பவர்களே லோகாயுதராம்.

## சாக்கியர் மதம்.

இவர்கள் ஒருவித புத்தர்கள். இவர்களில் ஒருவர் சிவத்துவேஷத்தால் நித்தியம் ஒரு கல்லையெடுத்து சிவலிங்கத்தை யடித்துவர சிவஞானம் பெற்றவரென்று சொல்வாருமுண்டு. இவர்களன்றியில் சவுகாதகர்கள் க்ஷாபநாகர்கள் என்றுதி அநேக பெயர்களால் மதத்துவேஷிகள் கிளம்பித் தம் தம் மனோபீஷ்டப்படி தர்க்கித்து வாதாடி இத்தேசத்தின் உண்மையான மதம் தலைநீட்டாதபடி கண்டித்து வந்தார்கள். அப்படிப்பட்ட மதங்கள் அநேகம் மறைந்துவிட்டன.

## சார்வாகமதம்.

இந்த மதத்தை ஸ்தாபித்தவரின்னாரென்று விவரமாகத் தெரியவில்லை. ஆயினும் மகாபாரதத்தைச் சார்ந்த சாந்திபருவத்தில் (1410-வது சுலோகம்) ஒருகதையில் சார்வாகன் என்னும் இராக்ஷசன் பிராமண பரதேசிவேடம்பூண்டு யுதிஷ்டிர மகாராஜன் ஜெயசீலராக அஸ்தினபுரத்துக்குப் போகும்போது சமயவிஷயமான பரிகாச வார்த்தைகளையும் தூஷணைகளையுஞ் செய்ததாகவும், அவனை இராக்ஷசனென்று கண்டுபிடித்துக்கொல்லுவித்ததாகவும்சொல்லியிருப்பதால், அந்த ராக்ஷ

சனே யிந்தச் சார்வாக மதாதிபதியா யிருக்கவேண்டுமென்று எண்ணவேண்டியிருக்கிறது. இந்தச் சார்வாகமதத்தைப்பற்றி மாத்துவாசாரியரா லியற்றப்பட்ட சர்வதரிசன சங்கிரகமென்னும் கிரந்தத்தில் விசேஷமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தச் சார்வாகமதத்தை உலகாயுதமென்றும்,பிரஹஸ்பதி கோட்பாடென்றுஞ் சொல்லுவதுமுண்டு. இவர்கள் பிரஹஸ்பதி சூத்திரங்களையே யாதாரமாகக்கொண்டு பிரத்தியக்ஷ பிரமாணத்தைத் தவிர மற்றப்பிரமாணங்களை நம்புகிறதில்லை. மேலும் பிருதிவி (மண்), அப்பு(சலம்),தேயு(அக்கினி),வாயு (காற்று) என்ற நான்கு பூதங்கள் மாத்திர முண்டென்றும், ஆகாயமென்னும் பூதமில்லையென்றும், ஆத்மாவென்னும் ஒரு வஸ்துவே கிடையாதென்றும், பூதங்கள்கூடிச் சேர்வதால் பிராணனுண்டாகிறதென்றும், இப்படியாதல் இயற்கையென்றும், மற்றப்படி ஆத்மா, கடவுள், விண்ணுலகம், மோக்ஷம் முதலானவைகளுண்டென்று நம்புவது மூடத்தனமென்றும், கண்டதே காக்ஷி கொண்டதே கோலம், ஸ்திரீபோகம், சந்தோஷபிழைப்பே சுகமென்றும், வறுமை பிணி துக்கமென்றும், இறப்பே முக்தியென்றும், இறந்தபிறகு பூதங்களாலாகிய தேகம், அதே பூதங்களாக மாறிவிடுகிறபடியால் ஒன்றுமில்லையென்றுஞ் சொல்லுகிறார்கள்.

## பஞ்சபூதாத்துமவாதிகள் மதம்.

பஞ்சபூதாத்தும வாதிகள் பஞ்சபூதங்களுக்கு மேல் ஒரு ஈஸ்வர னில்லையென்றும், இப்பஞ்சபூதங்களின் பரிணாமிப்புக்களாலே தேகாதிபிரபஞ்சங்க ளுண்டாகின்றன வென்றுங் கூறுவர்.

## இந்திரியாத்துமவாதிகள் மதம்.

இந்திரியாத்தும வாதிகள் மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் பஞ்சேந்திரியங்களுக்குமேல் ஈஸ்வரனொருவனில்லையென்றும், ஆத்துமாவொன்றில்லை யென்றும், இந்திரிய சுகமே மோக்ஷமென்றும் கூறுவர்.

## அந்தக்கரணாத்துமவாதிகள் மதம்.

அந்தக்கரணாத்தும வாதிகள் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்கின்ற அந்தக்கரணங்களுக்குமேல் ஈஸ்வர

ஞெருவ னில்லையென்றும், ஆத்துமாவொன்றில்லையென்றுங் கூறுவர்.

## பிராணாத்துமவாதிகள் மதம்.

பிராணாத்துமவாதிகள் பிராணவாயுக்குமேல் ஈஸ்வரஞெருவ னில்லையென்றும், ஆத்மாவொன்றில்லை யென்றுங் கூறுவர்.

## சூனியவாதிகள் மதம்.

சூனியவாதிகள்: ஈஸ்வரஞெருவனிருந்தால் காணப்படமாட்டாஞ? காணப்படாமையால் ஈஸ்வரனில்லை என்றும், சகலமும் சூனியத்திலிருந்து உற்பத்தியாகி கடைசியில் யாவும் சூனியமாகி விடுகிறதென்றும் சாதிப்பவர்களாம்.

## சிவசமவாதிகள் மதம்.

சிவசமவாதிகள் : முக்தியடைந்த ஆத்மா ஈஸ்வரனுக் குண்டாகிய குணங்களெல்லாம் பெற்று ஈஸ்வரனுக்குச் சமானமா யிருக்குமென்று கூறுவர்.

---

## அச்சுமருவாதிகள் மதம்.

அச்சுமருவாதிகள் : ஆத்துமாக்கள் ஜனனத்தை யடையும்போது முன் ஆணுயிருந்தது ஆணுகவும், முன் பெண்ணுயிருந்தது பெண்ணுகவும் பிறக்கு மென்றும், சிவபூசையின் பயனுல் பிறவி யொழிந்து, சிவசந்நிதியிலே அச்சு மாறுமலே யிருக்குமென்றும் சொல்வார்கள்.

## கௌமார மதஸ்தர்.

சுப்பிரமணியரே பிரம்மமென்றும், அவர்க்குமேல் ஒரு ஈஸ்வர னில்லையென்றும், அவராலேயே சகல சகத்காரியமும் உண்டாகின்றனவென்றுஞ் சொல்லுகின்ருர்கள்.

## வைரவ மதஸ்தர்.

வைரவனே பிரம்மமென்றும், அவனுக்குமேல் வேருெரு ஈஸ்வர னில்லையென்றுங் கூறுவர்.

---

இவைகளன்றியில் மாவிரதம், கிரீடா பிரம்மவாதிமதம், பாஞ்சாராத்திரமதம், பாசுபதாதி அநேக சில்லரை மதங்கள்

ஜனித்து மறைந்தன. அவைகளின் சரித்திரங்கள் சரியாக அகப்படவில்லை. பிறகு இந்துதேசத்தின்மீது படையெடுத்து வந்தவர்களாகிய மகமதியர், கிறிஸ்தவர்களின் மதங்கள் சில விடங்களிற் பரவின. அவைகளைப்பற்றி வேறு மார்க்கத்திற் சொல்லுவோமாகையால், இப்போது இந்துமதத்திலிருந் துண்டான வேறு இரண்டு மதங்களைப்பற்றிச் சொல்லுகிறோம்.

இப்படி உற்பத்தியான நவீனமதங்கள் இந்து வேத விரோதமானதாயும், நீதி சுவாமி கதியற்ற நிரீசுவர மதங்களாயுமிருந்தபடியாலும் நாளாவட்டத்தில் மறைந்துவிட்டன. அப்படி மறையவே பரிசுத்தமான ஆஸ்திகமதம் மறுபடியும் பிரகாசிக்கக் காலம் வந்தது. அவைகளிற் சிறந்தது:—

பதினாறுவது நூற்றாண்டின் துவக்கத்தில் இந்தியாவின் மீது மகமதியர் படை எடுத்துவந்து இந்துக்களையும் அவர்கள் மதத்தையும் தாக்கி வருத்தியபடியால் இருஜாதியாருக்கும் சமரசவாழ்வு வுண்டாக்க, நானக்கு அவதரித்தார். அவர் சரித்திரமாவது:—

## சீக்கியர் மதம்.

பாபு நானக்கு அல்லது நானக் ஷா என்கிற சாதுவாகிய ஒரு இந்து பக்திமான் அவதரித்தார். அவர் இந்து மதத்திலும், மகம்மது மதத்திலும் உள்ள சத்தியங்களைத் திரட்டிப் போதனை செய்துவந்தார். அந்த மதஸ்தருக்கு சீக்கரென்று சொல்லப்படும். சீக்கரென்பது சாதுக்களான சீடர்கள் என்று பொருள்படும். இந்த மதஸ்தர்கள் குருமாரைச் சிரேஷ்டமாகக் கொண்டாடி வருகிறவர்கள். இவர்களுடைய குருமார்களில் பத்தாவது குருவாகிய குருகோவிந்து என்பவருடைய காலத்தில் ஔரங்கசீபு என்கிற சக்கிரவர்த்தி மதவிஷயமாக அதிக தொந்திரவு செய்துவந்தபடியால், இவர்களும் சாந்தகுணத்தைவிட்டு,சிக்கர் என்கிற பெயருக்குப் பதிலாக சிங்குகள் என்னும் இராசபுத்திரருடைய பட்டத்தைத் தரித்துக்கொண்டும், மேற்படி குருகோவிந்தைத் தலைவராக வைத்துச் சண்டைசெய்தும், மொகலாய இராச்சியம் அழிந்துபோகுங் காலத்தில் அநேகநாடுகளை வசப்படுத்திக் கொண்டார்கள். இவர்கள் இரஞ்சீதுசிங்கு ஆண்டகாலத்தில் மிகுந்த வல்லமையுடைவர்களானார்கள். அக்காலத்திலவர்கள் லாகோர்

இராஜ்ஜியத்தை ஸ்தாபித்து, காஸ்மீர் இராஜ்ஜியத்தையும் வென்று அதைத்தங்கள் இராஜ்ஜியத்தோடு சேர்த்துக்கொண்டார்கள். கி. பி. 1835ஆம் இரஞ்சித்சிங்கு இறந்துபோக, அவருடைய இரண்டு குமாரர்களும் பட்டத்துக்குவர, அவ்விருவரும் இரண்டு மூன்று மாதத்தில் கொலை செய்யப்பட்டபடியால், கடைசி குமாரராகிய துலிப்சிங்கு என்பவர் பட்டமடைந்தார். அவர் காலத்தில் சீக்கர் இங்கிலீஷ்காரருடனும் சண்டைசெய்யத் தலைப்பட்டார்கள். இந்த சீக்கருக்கு இவ்வளவு வீரபராக்கிரமத்தை ஊட்டிய குருகோவிந்த என்பவர் கி. பி. 1708ஆம் பரமபதமடைந்தார். இவர்தான் சீக்கருக்குக் கடைசி குருவென்றும், அதிக சிறப்புற்றவ ரென்றுங் கொண்டாடி வருகிறார்கள். இந்தச் சீக்கருடைய மதநூலுக்குக் கிரந்தம் என்று சொல்லப்படும். இந்தக் கிரந்தத்தி லடங்கிய சங்கதிகள் பலகுருமார்களால் எழுதப்பட்ட வைதீக நீதி பிரமாணங்களாக விருக்கின்றன. இந்த மதஸ்தருக்குள் ஜாதி பேதங் கிடையா. சகல ஜாதியாரும் இந்த மதத்தை யனுசரிக்கலாமென்று சொல்லுகிறார்கள். இந்த மதஸ்தர்களுக்கு லாகோர்முதலான விடங்களில் பெரிய கோயில்க ளிருக்கின்றன.

## நானக்கு என்பவர் சரித்திரம்.

சாலிவாகன சகாப்தம் 1391-ம் வருடத்தில் பாஞ்சால தேசத்தில் லாகூர் நகரத்துக்கடுத்த பட்டிமண்டலத்தில் விபாசாநதி தீரத்தில் இப்போது இராயபுரமென்று வழங்கிவரும் தல்வண்டி என்னும் கிராமத்தில் நானக்கு ஜனித்தார். இவர் ஸிக்கு மதத்தை நிலைநாட்டினவர்களில் முதல்வர். இவர் பிதாவின் பெயர் கல்லுபெத்தி. இந்த கல்லு என்பவர் க்ஷத்திரிய குலத்தில் பெத்தி என்னும் வம்சத்தி லுதித்தவர். இவருக்கு ஓர் பெண்ணும், ஓர் ஆணும் பிறந்தார்கள். இவ்விருவரில் புத்திரன் பெயர் நானக். புத்திரி பெயர் நாஞ்சி. இந் நாஞ்சி என்னும் புதல்வியை ஜயராமனுக்கு விவாகம் செய்வித்தார். ஜயராமன் அக்காலத்தில் டில்லி சக்கரவர்த்தியாயிருந்த இப்ராஹீம்லோடியின் உறவினரான தௌலத்கான் லோடியவர்களின் தானியக்களஞ்சியத்துக்கு எஜமானனாகஇருந்தார். நானக்கு என்பவருக்கு சாலிவாகன சகாப்தம் 1411-ம் ஆண்டில் விவாகம்செய்விக்கப்பட்டது. காலக்கிரமத்தில் இவருக்கு இருபுத்திரர்கள் பிறந்தார்கள். இவர்களில் மூத்தவன் பெயர்

ஸ்ரீசந்தா, இளையவன்பெயர் இலட்சுமிதாஸ். ஸ்ரீசந்து விரக்தி அடைந்து இகலோக சௌக்கியங்களை விட்டுப் பரலோக சாம்பிராஜ்யத்தை விரும்பி ஈஸ்வரத்தியானத்தில் ஊக்கமடைந்து தபஸ் ஸமாதியில் நிலைபெற்றார். இவருக்குப்பிறந்த தர்மசந்து என்னும் புத்திரன் உதாசினர் என்னுமோர் மதத்தினர்க்கு மூலபுருஷனானன். இவரினத்தோரின்னும் அத்தேசத்தில் நானக்கென்னும் பெயரால் விளங்குகின்றனர். லட்சுமிதாஸ் என்பவன் உலக வியாபாரங்களில் மிக ஊக்கமுடையவனாயிருந்ததால் புத்தகத்தில் வரையத்தக்க தர்மகாரியங்களவரேதேனும் செய்ததாய்ப் புலப்படவில்லை. இனி வம்ஸவிஷயத்தை நிறுத்தி நானக்கு அவர்களின் சரித்திரத்தைக் கவனிப்போம். நானக் கவர்களுக்கு இளமையிலேயே ஈஸ்வர பக்தியும், மதாபிமானமும் மேலிட்டது. இவ்விரண்டும் நாள்தோறும் பெருகிவருகையில், தமது புதல்வன் இல்லறத்தைத் துறந்து விடுவனோ என்னும் பீதி தகப்பனுக்குண்டாய், அவனைப் பக்தி வைராக்கியங்களினின்றும் திருப்பப் பௌத்தரின்பிதா செய்த வண்ணம் தன் புத்திரனுக்கு எப்புரத்திலும் போகம் முதலிய காமங்களை யூட்டும் காரியங்களை இடைவிடாது செய்வித்தனர். ஆயினும் எச்செயலினாலும் தமது புத்திரன் மனம் திரும்பாம லிருப்பதைக் கண்டு விசனமடைந்து, மண், பெண், பொன்னாசைகளை யடைந்தாலொழிய பக்திவைராக்கியங்கள் வேராறாதெனக்கருதி நானக்கை அழைத்துக் கொஞ்சம் பொருள் அளித்து, இதைக்கொண்டு லாபத்துக்கு உப்புவர்த்தகம் அயலூருக்குப் போய்ச் செய்யும்படி வேண்டினார். நானக்கும் அதற்கிசைந்து தகப்பன் கொடுத்த பணத்தை வைத்துக்கொண்டு பாலசிந்து என்னுமோர் சேவகனை யழைத்துக்கொண்டு பரதேசம்சென்றார். பிரயாணம்செய்கையில் பாதிவழியில் சில துஷ்டர்களைக்கண்டு அவர்களுடன் மதசம்மந்தமான சிலவிஷயங்களைப் பிரஸ்தாபிக்கத்தொடங்கினார். இதைக்கேட்ட அவர்களிலொருவன் மூன்றுநாட்களாக அன்னமின்றி உபவாசம் செய்கிற நாங்கள் இந்த இனிப்பற்ற விஷயத்திலேதேனும் சொல்ல வல்லமையில்லாமலிருக்கிறோமென்று நாகரீக மில்லாத த்வனியோடு மறுமொழி யுரைத்தான். அதைக் கேட்ட நானக்கு மிகவும் மனமிரங்கி, அருள்மிகுந்து, அவர்களைச் சகோதரர்களாகப்பாவித்து அன்புபாராட்டித் தன்சேவகனைப் பார்த்து "என்பிதா நான் திரவியம் தேடவேண்டி லாபத்துக்கு உப்புவியாபாரம் செய்யென்று என்னை அனுப்பினார்.

இகலோகலாபமோ இமைப்பொழுதில் நசிக்கத்தக்கதும் அற்ப விலைக்கும் கிடைக்கத்தக்கதுமா யிருக்கிறது; மேலும், அது சதமில்லாததாகும். கொடிய பசியினால் மெய்வருந்தும் இம் மானிடரைத் தீயநெறியினின்று விடுவிப்பதாலடையும் லாபமோ சாஸ்வதமானதும் விலையற்றதுமாதலால் நம்முடைய பொருள் இவ்விஷயத்திலேயே உபயோகிக்கப்படத்தக்கது. மானிடஜன்மமெடுத்தவன் செய்யத்தக்க தர்மங்களிலிதைவிட மேலானது மற்றொன்று கிடையாது. மேலும், பக்தி விசுவாசங்களை அறிவிக்க இதுவுமொரு கருவியாகும். அதைக் கேவலம் சுயநலத்திலும் காமபோகங்களிலும் துர்விநியோகம் பண்ணாமல் ஏழைகளின் பசியைத் தீர்ப்பதிலும் தாய் தந்தையர்களை இழந்து திக்கற்ற குழந்தைகளைப் பாதுகாப்பதிலும், கடவுளைத் தரிசிப்பதிலும் ஊக்கமுள்ளவர்களுக்குச் சகாயம் செய்வதிலும் உபயோகிப்பது சிலாக்கியமன்றோ என்றார். இவ்வித இதமான வார்த்தைகளைக்கேட்ட சேவகன்பாலசிந்து, ஐயா! தங்களுடைய கருத்துக்கள் மிகவும் உன்னதமானவையே. அவைகளை முடிப்பதில் கொஞ்சமேனும் தாமதிக்கலாகாது என்றுவிண்ணப்பம் செய்தான். நானக்குஅதைக் கேட்டவுடன் பசியாயிருந்த அக்கொடியோருக்குத் தன்னிடமிருந்த திரவியமெல்லா மளித்தார். அப்பணத்தைப் பெற்றுக்கொண்டவர்கள் கடைத்தெருவுக்குச் சென்று உணவுபதார்த்தங்களைச் சேகரித்துத் தங்கள் பசியைத் தீர்த்துக்கொண்டார்கள். பிறகு நானக்கு அவர்களுடன் கலந்து சமய தர்மங்களைக் குறித்தும் கடவுள் எவருக்கு மொருவனெயென்னும் விஷயத்தைப்பற்றியும் வாதித்து, அவர்களின் வாதத்திறமைக்கு மிகக்களிப்புண்டு அவர்களைத் தக்க மரியாதையுடன் அனுப்பி வீட்டுக்குத்திரும்பினார். வீடுசேரவே தகப்பனார் “மகனே! என்ன வியாபாரம் செய்தாய்?” என்று வினவினார். “பிதாவே! அத்திரவியத்தைப் பசியால் வருந்தின தரித்திரர்களுக்கு அன்னதானமளித்து விசேஷ லாபமடைந்தேன்” என்றார். இச்சொல்லைக்கேட்ட பிதா கடுஞ்சினங்கொண்டு நானக்கைப் பலவிதத்தில் தண்டிக்க முயன்றார். இதை மிகச் சாந்தத்துடனும் வணக்கத்துடனும் ஏற்றுக்கொண்டு நானக் பாராட்டின பிதுர்பக்திக்கு உலகத்தாரெல்லாரும் ஆச்சரியப்பட்டு வந்தார்கள். இச்சமாசாரம் அத்தேசத்தரசனான பள்ளான ராயர் அறிந்து நானக் தகப்பனை வரவழைத்து இங்ஙனம் வதைப்பதற்குக் காரணம் யாதெனவிசாரித்து, அவனது மொழி

களால் நானக்கு பகவத் பக்தன் எனத் துணிந்து, அவரை இம்சிக்க வேண்டாமென்று தகப்பனைத் தடுத்து, அப்புண்ணிய புருஷனிடத்தில் பக்தி விஸ்வாஸங்களுடையவனாயிருந்தார். அதுமுதல் பிதா நானக்கை அன்புடன் ஆதரித்துவந்தார். ஆயினும் அவரை மதாபிமானத்தினின்று விலக்கத்தக்க முயற்சிகள் செய்வதை மாத்திரம் விட்டாரல்லர். இங்ஙனம் சிலகாலம் சென்றபின் சுல்தான்புரத்தில் தௌலத்கான் லோடியவர்களின் தானியக்களஞ்சியத்தின் முக்கிய உத்தியோகஸ்தனாக இருந்த தன் மைத்துனர் ஜயராமனுக்குச் சகாய உத்தியோகஸ்தனாக நானக் நியமிக்கப்பட்டார். அவ்வுத்தியோகத்தைச் சேர்ந்த வேலைகளை நிறைவேற்றுவதில் எல்லோருடைய கௌரவத்துக்கும் நானக் பாத்திரராய்க் குற்றமொன்றுமில்லாமல் சரிவர நிறைவேற்றினதால் எல்லோராலும்மிகமதிக்கப்பட்டார். நானக்கும்அவர்களிடத்தில் சிநேகபாவத்துட னிருந்தார். இவ்விதமாய் உலகவியாபாரங்களில் கைகள் வேலைசெய்யினும் நானக் மனது மாத்திரம் எப்போதும் தர்மசிந்தையிலிருந்து விலகினதன்று. அவர் இருதயமும் மனமும் எக்காலமும் ஈஸ்வரதியானத்தைத் நோக்கியே இருந்தது. சிலகாலம் இவ்வண்ணம் கழிந்தபின் ஓர் நாள் காலையில் நானக்கு ஈஸ்வரதியானம் செய்துகொண் டிருக்கையில் அவ்விடத்துக்குத் திடகாத்திரமும், தேஜோமயமான வடிவமுமுடைய ஓர் மகம்மதிய பகீர் (சன்னியாசி) பிரஸன்னமாய் நானக்கைப் பெயரிட்டழைத்து "நீ ஏன் தியானம் செய்கிறாய்? பாவத்தினின்றும் துக்கத்தினின்றும் மீண்டு நித்யானந்தத்தை அடைய விருப்பமுண்டானால் இவ்வியாபாரத்தைவிட்டு மாயாவாதிகளும் அஞ்ஞானஇருளும், பாவக்கடலும் துஷ்டக் கூட்டமுமான இவ்வுலகத்தை விட்டுவா!" என்னும் கம்பீரத்தொனியுட னுரைத்துச் சென்றார். இவ்வுபதேசம் செவியில் படவே, நானக்கு திடுக்கிட்டு, நடுநடுங்கி, மெய்மறந்து மூர்ச்சையடைந்தனர். சிறிது நேரத்தில் மூர்ச்சை தெளிந்தெழுந்து அக்கணமே உத்தியோகத்தினின்று விடுதலையாகித் தன் பொருள் முழுமையும் ஏழைகளுக்குத் தானம்செய்து "ஸோகம்" "ஸோகம்" என்று ஜபித்துக்கொண்டு ஓர் தடாகக்கரையை அடைந்தார். இப்படித்திடீரென்று வேலையைவிட்டுச் சந்நியாசியாகி விட்டதால் தௌலத்கான் லோடியவர்களின் தானியக்களஞ்சியத்தை இவர் ஏதோ நஷ்டப்படுத்தி இருக்கக்கூடுமென்று ஓர் துர்வதந்தியுண்டாய், லோடி

யவர்கள் நானக்கை அழைப்பித்துக் கணக்கை ஒப்பிவைக்கும்
படி கேட்க, உடனே ஜயராமன் வசம் சுவாதீனம்செய்த தஸ்தா
வேசுகளை யழைப்பித்து எந்தெந்த சரக்கின்விபரம் எந்தெந்த
புத்தகத்தில் பதிப்பிக்கப்பட்டதோ அந்தந்தக் கணக்குகளைக்
கொண்டு சரக்குகளின் வரவு செலவுகளை வெகுகிரமமாய்க்
காண்பித்தார். முடிவில் லோடியவர்களே நானக்கு அவர்களின்
சம்பளவிஷயத்தில் கொஞ்சம் பாக்கி இருப்பதாய்க் கணக்
கால் காணப்பட்டது. இச்சங்கதியைக் கேள்வியுற்று, முதலில்
நிர்ஹேதுவாய்க் கலகங்கள்செய்த மூடர்களே, இது நானக்கின்
பகிமை என்று விளம்பரம்செய்ய முயன்றார்கள். பிறகு நான
க்கு அக்குளக்கரையிலேயே தபஸ்செய்துகொண்டிருக்கை
யில், தான் கிரகித்த ஸத்தியமான மததர்மங்களைத் தன் சகோ
தரர்கள் யாவருக்கும் தெரிவித்து அவர்களுக்கு மோக்ஷ சாத
னத்தை அறிக்கைசெய்யவேண்டுமென்னும் தர்மகுணம் உதி
க்கத் தேசசஞ்சாரம்செய்யஆரம்பித்தார். தான் எங்குச்சென்
றாலும் தன் மாசற்ற பகவத்பக்தி தன்னுயிர்போல் மன்னுயி
ரென்றெண்ணி, இத்தகையகுணங்களால்சகலதேசத்தாரையும்
சகல ஜாதியாரையும் வசமாக்கி, அவர்களின் சித்தத்துக் கேற்
குமாறு மதபோதனை செய்துவந்தனர். அக்காலத்திலேயே
மசம்மதியர் சிலர் அவரால் யோகவித்தையை அறிந்துகொண்
டார்கள். அவர்செய்த தேசயாத்திரையைக்குறித்தும் மதசம்
பந்தமாகச் செய்த உபந்நியாஸங்களைக்குறித்தும், வெகு விரி
வாய் பாயிசரு என்னும் பாஞ்சாலதேசத்து நூலாசிரியர்
"இரத்னாவளி" என்னும் நூலை இயற்றி வெளியிட்டார். நானக்
குடன் பாலசிந்துவென்னும் சேவகனும், மூர்த்தன் என்
னும் சங்கீதப்பாடகனும் கொஞ்சங்காலம் தேசசஞ்சாரம்
செய்ததாய்ச் சிலர் கூறுகிறார்கள். பாலசிந்து சிலநாள் அவ்
வாறிருந்து மீண்டும் சுதேசத்துக்குப்போய் நானக்கின் வரலா
ற்றைப் பிரசங்கித்துவந்தார். நானக்கின் சரித்திரம் எழுதின
வர்களில் சிலர் அவர் அற்புத காரியங்களைச் செய்ததாய்க்
கூறுவர்; ஆயினும், நானக்கு அப்போதைக்கப்போது செய்து
வந்த உபந்நியாஸங்களில் அவ்வித அற்புத காரியங்களைப்பற்றி
அவைகள் கேவலம் மாயோமாயங்களென்று பகிரங்கமாய்க்
கண்டித்து வந்ததால் நானக்கு அவைகளைச் செய்தவரல்ல
வென்று தாட்சண்ணியமின்றி சொல்லக்கூடும். பிறகு பீகார்
என்று இப்போது வழங்கிவரும் சிவநாவமென்னும் தேசத்
தில் யாத்திரைசெய்யும் காலத்தில் அத்தேசத்தரசன் அவரு

டைய மனோபாவத்தை யறியவிரும்பி ஷட்ரசோபேதமான போஜனத்தோடு பட்சணங்களோடும், நவரத்தினங்களிழைத்த ஆபரணங்களோடும், சிங்காரரசம் பெருகும்படியான காம மூட்டத்தக்க ரூபலாவண்யமுள்ள மாதர்களை யேகாந்தத்தில் அவர்முன் நிற்கச்செய்தார். அவைகளில் ஒன்றையாயினும் அவர் விரும்பாமல் பிரபஞ்ச சம்பந்தமான விஷயங்களை முன்விட அதிகமாய் வெறுத்து மோகாவேசத்தை யூட்டும் இவ்வுலகம் சதமல்லவென்றும், பரலோகமே சதமென்றும் அவ்வரசனுக்குப் பலமுறை யுரைத்தார். முடிவில் அவ்வரசன் அவரால் ஞானோபதேசம் பெற்றுப் பல தத்துவார்த்தங்களை அறிந்தார். இம்மூலமாய் நானக் கவ்வூரில் இரண்டுவருடங்கள், ஐந்துமாதகால மிருக்க நேரிட்டது. அக்காலத்தில் "உயிர் விலங்கு" என்னுமோர் நூலை இயற்றி, அதைக் கொண்டு தன் மததர்மங்களை யாவருக்கும் வெளியிட்டார். இந்நூலே ஆதிநூலின் முதற்பாகமென்று ஸிக்குகள் சொல்வர். நானக் இந்துதேசத்திலுள்ள எல்லா முக்கிய பட்டணங்களுக்கும், புண்ணிய க்ஷேத்திரங்களுக்கும் சென்று, சாஹச உதாரகுணங்களோடும், உத்சாகத்துடனும், எங்கும் நிறைந்த பகவான் யாவருக்கும் ஒருவனே என்று எதிரற்றவராய்ப் போதிக்கத் தொடங்கினார். முடிவில் தன்மதம் எங்கும் பரவுமாறு மக்கா, மதீனா முதலிய விடங்களுக்கும் சென்றனர். அவ்விடத்தில் மௌல்வீர்களோடு அவர் செய்த வாதத்தைக்குறித்து அவர் சரித்திரம் எழுதினவர்கள் விரிவாய் வர்ணித்து எழுதியுள்ளார்; மேலும், பிரஜைகளின் மனதுக்கு யாது குறைவும் நேரிடாதவண்ணம் மிகவும் அற்புதமாய் உபந்நியாஸம் செய்யும் அவரது கல்விப்பயிற்சிக்கு எல்லா ஜாதியாரும் ஆச்சரியப்பட்டார்கள். மானிடரெல்லோரும் ஸகோதரப்பிரீதி, பரஸ்பர உபகாரபுத்தி இவை கட்டாயம் இருக்கவேண்டுமென்று அவர் போதித்து வந்த தர்மங்களில் ஜனங்களுக்கு அவரிடத்தில் பக்தி விஸ்வாசங்களுதித்தன. அக்காரணத்தால் உலகத்தோருக்குக் களிப்பை உண்டாக்குபவராய்த் தன் மததர்மங்களை எளிதில் பிரவசனம் செய்யலாயினார். ஒன்றான ஜகத் பிதாவினால் சிருஷ்டிக்கப்பட்டுக் காப்பாற்றப்படுகிற மானிடஜாதியா ரெல்லோரும் ஒருவருக்கொருவர் சகோதரருக்கு ஒப்பெனச் சாட்டிவந்த அவருடைய மனோபந்நியாஸத்தில் ஆயிரத்திலோர் பங்காகிய ஓர் அம்ஸத்தில் மகம்மது ஒற்றுமைப்பட்டு வந்ததால், மக்கா மதினாவிலிருக்

கும் மகம்மதியரும் இவரிடம் பக்தியுள்ளவர்களாய் இவரை "நானக்ஷா" என்று சிறப்புப்பெயரால் வழங்கிவந்தார்கள். மேலுமிவர் பலமுறை பொறுமை என்பதே எனக்குப் பெருந்த சத்துரு; இந்துக்களுக்கும் இஸ்லாம்களுக்கும் ஒருமை உண்டாக்குவதே என் கருத்து; இந்துக்களும் மகமதியரும் கடவுள் ஒருவரே என்ற நம்பிக்கைமட்டும் கொண்டவர்களேயொழிய அநுஷ்டானம் நடப்பவர்களாக மாத்திரம் காணோம்; இவ்வித அறிவின்மை இவ்விருவரிலும் சமமாகவே காணப்படும்" என்று பகிரங்கமாய்க் கூறுவார். பிரசங்கங்களில் வாதிக்கத்தக்க அம்சங்களைப்பற்றி நானக்கு தன் கருத்தை வெளியிடுகையில் பட்சபாதமின்றியும், நியாயமாயும், நிஷ்கபடமாயும், அபிமானமின்றியும் சொல்லிவந்தார். ஆதலால் எவருக்கும் இவரிடத்தில் மதிப்புண்டாகி வந்தது. ஓர் சமயம் இவர் யவன இராச்சியத்தில் பிரயாணம் செய்கையில், அவ்விடத்துச் சக்கிரவர்த்தியாயிருந்த பேபர்ஷா அவர்களின் பேட்டி கிடைத்தது. அப்பிரபு நானக்கு மதசித்தாந்தங்களையும், நல்ல எண்ணங்களையும் கேள்வியுற்றுக் களிப்படைந்து அவருக்கு வெகுமதி கொடுமெனத் திவானவர்களுக்குக் கட்டளையிட்டார். அதுகேட்டு நானக்கு "யாரால் சகலமும் சிருஷ்டிக்கப்பட்டுப் பாதுகாக்கப் படுகிறதோ? யாரால் இந்தச்சித்திரவிசித்திரங்கள் உண்டாக்கப்பட்டனவோ? எவன் ஒப்பற்றவனாய் விளங்குகின்றானோ? அவ்வண்ணமுடையவனை நான் திரிகரண சுத்தியாய் நம்பினேன்; அவனாலேயே ஆத்மானந்தமும், வெகுமதியும்பெற எதிர்பார்க்கிறேனேயல்லது, நசிக்கத் தக்க இம்மாயா சம்பந்தமான காயத்தைக் குறித்துப் புலன்களை யடக்காமல் சஞ்சல மனதோடு தவிக்கும் மானிடர் பரிசைப் பெறமாட்டேன்" என்று மறுமொழி செய்தனர். பிறகு நானக்கு தன் சுவதேசம் சென்று இந்துக்களுக்கு ஸ்வமதசித்தாந்தத்தை உபந்நியசிக்கத் தொடங்கினார். சர்வமதங்களின் எல்லையான அவருடைய மததர்மங்கள் இந்துக்களில் பலருக்கு இஷ்டமாயிராமல், அவர்கள் அவருக்கு எதிர்க்கட்சியாய் ஏற்பட்டு, பலவிதமாய்த் தூஷித்தார்கள். அத்தூஷணைகளை இலட்சியம் செய்யாமல், "யாவருக்கும் முதல்வனும், ஒப்பற்ற பிரபுவாயுமுள்ள அக்கடவுள் என்னைத் தூஷியான்" என்று சொல்லித் தன் காரியத்தைத் தன்னிஷ்டப்படி நிறைவேற்றமுயன்றார். அவ்விரோதிகளில் வஞ்சகரான சிலர் நானக்கிடம் சென்று "எங்கள் உபாஸனபலத்

தால் நாங்கள் மானிடரை மிருகங்களாகவும், மிருகங்களை மானிடராகவும் செய்யவல்லோம்" என்று இறுமாப்புப்பாராட்டி, "நீ என்ன மகிமை காண்பிக்கவல்லவன்?" என எதிர்த்து வினவினார்கள். அவர்களுக்கு "உங்கள் கண்களுக்கு இன்பம் தரும் காரியங்களேதாயினும் செய்ய வல்லவனல்லன்; பரிசுத்தம் அன்பு நீங்கலாக எதும் என்னிடம் கிடையாது. இவ்வுலகம் சதமல்லாதது; நிலையற்றது; இதைப்படைத்த பரப்பிரம்மம் ஒன்றே நிலைபெற்றது" என்று நானக் மறுமொழி யுரைத்தார். இம்மொழிகளைச் செவியுற்ற யாவரும் அவருடைய கபடமின்மைக்கும், அசையாப்பக்திக்கும் ஆச்சரியமடைந்து அவர்தாள் வணங்கிச் சென்றார்கள். பிறகு நானக் மூல்தான் தேசத்துக்கேகி அவ்விடம் தவம்புரிந்துகொண்டிருக்க மகான்களுடன் கூடி "கங்கையானது முடிவில் கடலைச் சேருமாப் போல் உங்களுடன் கூடியிருக்க பாக்கியம் எனக்குக் கிடைத்தது" என்று வெகு வணக்கமான இனிய சொற்களால் அவர்களை மனமிரங்கச்செய்து, அவர்களால் விசேஷ தர்மங்களை அறிந்து அவர்களிடம் செலவு பெற்றுக்கொண்டு கீர்த்திபுரத்துக்குச் சென்று, அப்புண்ணிய பூமியில் சுகமாய்த் தேகத்தை விட்டுக் காலதர்மமடைந்தார். அவர் உடல் ஐராவதி நதிக்கரையில் தகனம் செய்யப்பட்டது. அது முதற்காரணத்தால் கீர்த்திபுரம் பொருளுக்குத் தக்க பெயருடையதாயிற்று. பிறகு நானக்கவர்களின் சீடர்கள் நானக்பெயரால் ஓர் ஆலயம் நிர்மாணம் செய்து, அதில் அவருடைய பழைய வஸ்திரங்களை வைத்தார்கள். அவைகளைப் பார்க்கும் பொருட்டே வருஷாவருஷம் "சீக்" மதஸ்தர்கள் அந்த க்ஷேத்திரத்துக்கு யாத்திரை செய்வார்கள். பகவானிடத்தில் அளவற்ற பக்தி, மானிட ஜாதியின்கண் ஸகோதர வாஞ்சை, ஏராளமான பூததயை உள்ளவர் எவராயினும், தேச கால பேதங்கள் எவ்வாறாயினும், சர்வஜன ரஞ்சகராய் விளங்குவாரென்பதற்கு இத்திவ்விய சரித்திரம் ஓர் இலக்ஷியமாய் ஒப்பிடத்தக்கது.

## சீக்கியர்க்குள் இருக்கும் உட்பிரிவுகள்.

### (1) உதாசினர்கள்.

அந்த சீக்கியருள் சிறந்தவர்கள் உதாசினர்களாம். அதாவது அவர்கள் உலக சுகத்தை விட்டவர்களாம். அவர்கள் நானக்கு குரு கோவிந்தருடைய கிரந்தங்களையும், கபீர், மீராபாய், சூரதாசு கீர்த்தனைகளைப் பாடிக்கொண்டும், சிலர் வே

தாந்த விஷயங்களைப்பற்றி தர்க்கித்துக்கொண்டும், காசி முதலான பட்டணங்களில் மாலையில் தேவஜெபஞ் செய்துகொண்டும், பக்தர்களுக்கு மிட்டாய் முதலானவைகளை வாங்கிக் கொடுத்துக்கொண்டும் இருக்கிறார்கள். அவர்கள் நானக்குடைய பேராகிய தர்மசந்துவின் சீடர்கள். அவர்களுக்கு ஹரியும் அல்லாவும் ஒன்றேயாம்.

## (2) கஞ்சபகஷி சீக்கியர்.

இவர்கள் நானக் குருவின் மற்றோர் பேராருடைய சித்தாந்தத்தைச் சேர்ந்தவர்கள். இவர்களும் பொதுவான பக்திமான்களேயாம்.

## (3) இராமராயிகள்.

இவர்கள் நானக்கு சந்ததியாகிய ஹரிராயர் குமாரர் இராமராயருடைய சீடர்கள். இவர்கள் இராஜ்ஜிய விஷயத்தில் பிரவேசித்து 1660ஞு பிரபலராக இருந்தவர்கள்.

## (4) ருதிரசாஹிகள்.

இவர்கள் குரு கோவிந்தருடைய தந்தையாகிய திபாக பகதூர் சித்தாந்தத்தைச் சார்ந்தவர்கள். இவர்கள் நெற்றியில் கருங்கோட்டைத் திலகமாக வைத்துக்கொண்டும், கையில் இரண்டுமுழக் கருமரத்துண்டுகளைக்கொண்டும் பிச்சையெடுத்துண்பார்கள். இவர்களில் அநேகர் துஷ்டர்களாம்.

## (5) கோவிந்த சாஹிகள்.

இவர்கள் குரு கோவிந்தருடைய நேரான சீடர்கள். இவர்கள் நீலவர்ணத் துணிகளைத் தரித்துக்கொண்டும், தாடி மீசைகளை வளர்த்துக்கொண்டும், ஜாதி பேதமற்றும், மாமிச போஜனஞ்செய்யும் உயுத்த வீரர்கள். பெரும்பான்மையான சீக்கர் இவர்களே.

## (6) நிர்மலர்.

இவர்கள் உதாசினரைவிட மதப்பற்றுள்ளவர்கள். சதா வேதாந்த விசாரணை செய்துகொண்டு ஏகாந்த ஸ்தானத்தில் இருந்து ஹரித்தியானத்தி லிருப்பவர்கள்.

## (7) நாகர்கள்.

இவர்கள் நிர்மலரைப்போ லிருக்கினும், துணிமணிக ளற்றுத் திகம்பரிகளாக இருக்கிறார்கள்.

லாஹோர், பஞ்சாபுக்கு அருகிலிருக்கும் அமிர்தசரோவரம் என்னும் நகரத்தில் இம்மதஸ்தர்களுக்கு ஒரு சிறந்த கோவிலும் தடாகமு மிருக்கிறது. அந்தக் கோயிலில் சீக்கியருடைய கிரந்தங்களையும், கொடிகளையும் வைத்து வணங்குவதன்றியில், சிக்கிய மாணுக்கருக்குக் கல்சா கல்விச்சாலையையும் ஸ்தாபித்திருக்கிறார்கள். இப்போது அவர்களுடைய விவாஹ விஷயமாக ஒருசட்டத்தையும் நியமித்துத் தரவேண்டுமென்று இங்கிலீஷ் கவர்மெண்டாரைக் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். பொதுவாக சீக்கியர் மஹா பக்திமான்களும், உயுத்த வீரர்களென்றுஞ் சொல்லலாம்.

இந்துக்களுடைய வேதங்களில் விக்கிரகாராதனை வீண் பக்தி, ஜாதிபேதம் போதிக்காமையால், சகலரும் சகோதர வாஞ்சையுடன் வாழ ஸ்ரீராமமோஹனராயர் பிரம்ம ஸமாஜத்தை ஸ்தாபித்தார். அவர் சரித்திரமாவது:—

## பிரம்ம சமாஜம்.

பரப்பிரம்மத்தையே உபாசனையின் மூலமாக அறிந்து ஆநந்தப்படும் பக்தி மார்க்கத்துக்கு பிரம்மசமயம் அல்லது பிரம்மசமாஜமென்று பெயர் சொல்லப்படும். இந்தமதத்தை ஆரம்பித்தவரின்பெயர் இராஜா இராமமோஹன ராயபஹதூரென்பவர்.

## இராமமோஹனராயர் சரித்திரம்.

இவர் கி. பி. 1774ஸு பர்த்தவான் ஜில்லாவைச் சார்ந்த இராதாநகூர் என்னு மிடத்திற் பிராமண ஜாதியில் பிறந்து, பெற்றோர்களுடைய உதவியால் கல்விகற்றுப் பிரதிதினங் காலையில் பகவத்கீதையை வாசித்து வந்தார். இவருடைய தகப்பனார் கி.பி.1803ஸு இறந்துவிட்டபடியால் சதா மதவிஷயமான கிரந்தங்களைப் படித்துவந்தார். அப்போது வங்கநாட்டில் விக்கிரகாராதனையும், சக்தி, சஹகமநம், ஜாதிபேதம், ஆசாராதிகள் விசேஷமாகப் பிரபலமாகி, சத்தியமார்க்கமாகிய சர்வ சுவாமியை யறிந்துய்யும் பூர்வ இந்துமதம் பாழ்த்துப்

பேசுகிறதெனக்கண்டு, விக்கிரக நிவாரணமென்னும் ஒரு
கிரந்தத்தை வெளியாக்கினார். அப்போது இவருக்கு வயது
16. பிறகு பார்சி, அரபி, கிரேக், இபுரூ, லத்தின், சமஸ்கிரு
தம், இங்கிலீஷ் முதலான அநேக பாஷைகளைக் கற்றுத் தெளி
ந்து திபேத்து தேசத்துக்குப்போய், புத்தசமய நூல்களையுங்
கற்றறிந்தார். இந்தப் புத்த சமயமும் ஓர்வித நாஸ்திகமதமாக
விருந்தபடியால், தமது பெரியோர்களுடைய பூர்வ இந்துசம
யத்தில் பிரம்மசமயமே சிறந்ததெனக்கண்டு கி. பி. 1830௵
ஜனவரிமீ வங்கதேசத்தைச் சேர்ந்த கல்கத்தாவில் பிரம்ம
ஸமாஜமென்னும் பெயரால் ஒருசபையை ஸ்தாபித்தார். இப்
படி ஸ்தாபிக்கவே, அநேக இந்துக்கள் தருக்கஞ்செய்ய வந்
தார்கள். அப்படிப்பட்டவர்களுக்கெல்லாம், இவர், சுருதி
ஸ்மிருதி புராணாதிகளைக்கொண்டு பிரம்ம சமயமே பூர்வ இந்
துக்களுடைய சமயமென்றும், விக்கிராராதனை, ஜாதிபேதம்
முதலானவைகள் வேதவிரோதமும், பிரபஞ்ச பிரஜைகளின்
சமூக சுகவாழ்க்கைக்குப் பொருந்தாதென்றும் ஸ்தாபித்தார்.
இதற்கென்றே வேத உபநிஷத்துக்களைப் பல பாஷைகளில்
மொழிபெயர்த்துப் பிரசுரமாக்கினார். இவர் பிரபஞ்சத்திலிரு
க்கும் பிரபலமான மதநூல்களிற் காணும் சத்வாக்கியங்களை
யெல்லாங் கவுரவ பிரமாணங்களாகப் பாராட்டுபவராகை
யால் பைபில் என்னும் கிறிஸ்து வேதநூலில் ஏசுநாதருடைய
சிறந்த போதனைகளையெல்லாந் திரட்டி ஒரு புத்தகமாகப் பதி
ப்பித்தார். அப்படிப் பதிப்பித்ததில் ஏசுவானவர் கடவுளல்ல
வென்றும், ஒரு மதாசாரியாரென்றுந் தோன்றியதால், அநேக
கிறிஸ்துமத பாதிரிகள் ஏசுநாதரைத் தேவனென்றே தருக்க
மாட வந்தார்கள. அப்படி தருக்கமாட வந்தவர்களுக்கு அவர்
கள்வேதநூலைக்கொண்டே யறிவித்தும், கனம் ஆடம்என்னும்
பாதிரியாரை ஏகேஸ்வர சமயமாகும் பிரம்ம சமயத்தை யனு
சரிக்கச் செய்வித்தார். இதுவிஷயமாகக் கிறிஸ்தவர்களுடன்
செய்த தருக்கங்களைப் பல புத்தகங்களாகப் பதிப்பிக்கப்பட்
டிருக்கின்றன. பிறகு இராஜரீய காரியமாகவும், வைதீக விஷய
மாகவும் கி. பி. 1831௵ ஏப்ரல்மீ 8உ இங்கிலாந்தென்
னும் சீமைக்குப் போனார். இவருடைய அற்புதமான கல்வி
யறிவையும், யோக்கியதையையுங் கண்ட அரசர் முதல் அநேக
இங்கிலீஷ்காரர்கள், இவரை வெகு மரியாதையாகவும், பிரிய
மாகவும் வரவழைத்து அன்புபாராட்டி வரச்சே, தேகசவுக்
கியங் குறைந்து கி. பி. 1883௵ செப்டம்பர்மீ 27உ தமது

60-வது வயதில் பரமபதத்தை யடைந்தார். இவருடைய பிரேதத்தை பிரிஸ்டல் நகரத்தில் அரனொல்டஸ் எனனும் நந்தவனத்தி லடக்கஞ் செய்யப்பட்டது. பிறகு இந்த ராஜாவினுடைய தோழராகிய துவாரகநாத டாகரவர்கள் அவரது ஞாபகச் சின்னமாக பெரியசமாதியைக் கட்டி வைப்பித்தார். இந்த இராமமோஹன ராயருடைய பூர்வமதம் வைஷ்ணவ மானபடியால், இவர் தாயார் முதலானவர்கள் ஜகநாதபுரத்தில் வந்து காலங்கழித்தார்கள். இவர் இறந்து சிலகாலம் பிரம்ம ஸமாஜம் மங்கியிருந்தது.

இப்படி யிருந்தபோதிலும், கல்கத்தாவில் கோடீஸ்வர ராகவிருந்த பாபு துவாரகநாத டாகரவர்களுடைய குமாரராகிய மஹரிஷி தேவேந்திரநாத டாகரவர்கள் இந்தப்பிரம்ம ஸமாஜத்தைச் சார்ந்து பிரபலமாக்கினார்.

## மஹரிஷி தேவேந்திரநாதடாகர் சரித்திரம்.

இவர் கி. பி. 1818௵ பிராமணஜாதியும், பிரபலமான கோடீஸ்வரருமாகியபாபுதுவாரகநாத டாகூரவர்களுக்குப்பிறந்தகுமாரர். இவர் செல்வத்திற் சிறந்தவருடையபுத்திரராகையால், சிறுவயதிற் சிற்றின்பத்தில் மூழ்கியிருக்க, ஒருநாள் வேத உபநிஷத்தின் பொருளடங்கிய வோர்துண்டுக் கடிதமகப்பட்டு அதை வாசித்ததில், பிரம்மகியானம் பெற்று அன்றுமுதல் வேதசுருதிகளை யறிய விருப்பங்கொண்டார். 1839௵ இவருடைய 25-வது வயதில் பிரம்ம சபையைச் சார்ந்தும் 1842௵ அக்டோபர்௴ தத்துவபோதினி சபை யென்னும் பெயரால் ஒரு சங்கத்தை ஸ்தாபித்தும், பிரதி வாரமும் கூட்டங்கூடி பிரம்மஸ்தோத்திரங்களைச் செய்தும், தத்துவ சாஸ்திர விசாரணைகளையுஞ் செய்தும் வந்தார். மேலும் வாலிபருக்கு வைதீக பாடசாலைகளை ஸ்தாபித்தார். 1843௵ தத்துவபோதினி சபையின் மாதாந்தர கூட்டங்களை பிரம்மஸமாஜத்தோடு சேர்த்து வேதாந்த விசாரணையைச்செய்து வந்ததன்றியில், வேதாந்த விஷயங்களைப்பற்றித் தத்துவபோதினி பத்திரிகையை ஸ்தாபித்து, தமது கொள்கைகளை யுலகப் பிரசித்தஞ் செய்வித்தும், வேத உபநிஷத்துக்களையும், இராமமோஹன ராயருடைய வேறு கிரந்தங்களையும் பதிப்பித்தும் வந்தனர். இபபடிக்கெல்லாஞ் செய்துவந்த போது, 1843௵ பிரம்ம சமயத்தை யவலம்பிப்பவர்கள்

சில பிரமாணங்களுக்குக் கட்டுப்பட்டு நடக்கவேண்டுமென்று
கட்டாயப்படுத்தினர். இப்படி, பிரம்மசமயக் கட்டுப்பாட்டிற்
குட்பட்டவர்கள் 1847 ம் வருஷத்தில் 797 பெயர்களிருந்தார்
கள். இக்காலத்தில் பண்டித ராமச்சந்திர வித்யாபாகிஷ்யர் பிர
தான ஆசாரியராகவிருந்தார். பிரம்ம சமயத்தார் வேதங்களை
பிரதான ஆதாரமாகக் கொண்டபடியாலும், வை வேதங்
களில் ஸ்வரூப அத்வைதக் கருத்துக ளிருப்பதாலும், இந்த
பிரம்மசமயத்தை யநேகர், வேதாந்தமார்க்கமென்று எண்ணி
யிருந்தார்கள். ஆனாலுபற்றியே 1845ஸு வேதங்களின் உண்
மையான கருத்துகளைக் கண்டெடுத்தறிந்து சேகரஞ்செய்து
வரும்படி அதிக பொருள் செலவுசெய்து நான்கு பண்டிதர்
களை பனாரஸ் என்னும் காசிப்பட்டணத்துக்கு அனுப்பினர்
கள். அந்நான்கு பண்டிதர்களும் போய் (4) வேதங்களை வாசி
த்துவந்து வேதங்களில், பலவிதக் கோட்பாடுகளுஞ் சித்தாந்
தங்களு மிருக்கிறதாகவும், அவைகளைச் சமரசப்படுத்தல்
அசாத்தியமென்றும் அறிவித்தார்கள்.

அதன்பேரில் பிரம்மசமயத்துக்கு,சுவதசித்த ஞானமே
சிறந்த பிரமாணமென்றும்,வேதம் முதலானவைகளில் அநேக
சிறந்த பிரமாணங்க ளிருப்பதால் அவைகளை யறிந்து அநுஷ்
டிக்கலா மென்றும் தேவேந்திரநாதடாகரவர்கள் 1805ஸு
பிரம்மதரும கிரந்தத்தைப் பிரசுரமாக்கினர். பிறகு 1859ஸு
தத்துவபோதினி சபையும் அதைச்சார்ந்த சொத்து முதலா
னவைகளும் பிரம்ம ஸமாஜத்தைச் சார்ந்துவிட்டன. மேலும்
பிரமோபாசிகள், குடும்ப தருமங்களை யெல்லாம் பிரம்மசம
யச் சார்பாக நடாத்திவந்தார்கள். தேவேந்திரநாத டாகரவர்
கள், 1861ஸு-ம் தமதுகுமாரத்தியின் விவாகம் முதலானவை
களைப் பிரம்ம ஸமயச் சார்பாக நடப்பித்தாலும், பூநூலை
யும் ஜாதிமேன்மையையும் விட்டாரில்லை. ஆகவே, இதைச்
சார்ந்த அநேக வாலிப பிரம்மோபாஸிகளுக்கு அருவை யுண்
டாகி வைஸமாஜத்தைவிட்டுப் பிரிந்துபோய் வேறொரு ஸமா
ஜத்தை ஸ்தாபித்துக்கொண்டார்கள். இந்தத் தேவேந்திர
நாதருடைய சபையார்க்குத்தான் ஆதிசமாஜமென்றுபெயர்.
இதன் பிரதான ஆசாரியராகிய மகரிஷி தேவேந்திரநாத
டாகரவர்கள் உலக வாடம்பரங்களை விட்டொழித்து ஹிமா
சலத்தில் பிரம்மயோகியாகக் காலங்கழித்தார். 1905ஸு-ம்
ஜனவரிமீ 19-ம் தேதி இரவு 1-55ல்பரமபதமடைந்தார். இவ

ரது தேக தகனகாலத்தில் ஆயிரங்கணக்கான பிரபுக்கள் போயிருந்ததோடு, ஸ்ரீ தர்பங்க மகாராசா சபை கூட்டிப் பேசிப் புகழ்ந்தார்கள். இந்த ஆதிசமாஜத்தைச் சார்ந்த இராஜ நாராயணபோஸ் முதலானவர்கள் அதை நடாத்திவருகிறார்கள். அந்த ஸ்ரீ நாராயண போசவர்களும் பரமபதமடைந்துவிட மஹரிஷியவர்களுடைய சிரேஷ்ட குமாரரும் பின்சன் டிஸ்டிரிக்டு ஜட்ஜியவர்களுமாகிய ஸ்ரீ சத்தியாநந்த தாகூர் சமாஜத்தை நடத்திவருகிறார்கள்.

ஆனல் ஷை சமாஜத்தை விட்டுப்பிரிந்த வாலிபபிரமோபாசிகளுக்கு பாபுகேசவ சந்திரசேனர் தலைவராயிருந்தார்.

## பாபு கேசவ சந்திரசேனர் சரித்திரம்.

இவர் கி. பி. 1838ஹு நவம்பர்மீ 19உ பிறந்த வைத்தியஜாதியார். இவரது பாட்டனாராகிய இராமகோமலசேனர், சிறந்த ஸமஸ்கிருத பண்டிதரும், வைணவமதஸ்தருமாயிருந்தார். கேசவசந்திரரும், சிறு வயதிலே வங்க இங்கிலீஷ் முதலான பாஷைகளைக் கல்கத்தா கலாசாலையில் கற்றுவரச்சே விக்கிரகாராதனத்திலும், ஜாதி பேதாதிகளிலும் வெறுப்புண்டாகி, யாதொரு கொள்கையுமற்றவராகவிருக்க, ஒரு பிரம்மசமாஜ புத்தகமகப்பட்டு அதனல், தமது 20-வது வயதில் (1858ஹு) பிரம்ம ஸமாஜத்தைச் சார்ந்து, அச்சமய விஷயமாக அநேக உபந்நியாசங்களைச் செய்துவந்தார். இவருடைய தாயார் முதலானவர்கள் இவரது நூதன நடக்கைகளைக் கண்டிக்கையில் இவர் தனது வாலிப சம்சாரத்துடன் புறப்பட்டு வந்து தேவேந்திர நாதடாகூரவர்களிடஞ் சேர்ந்தார். அவரும் இவர்களை யதிகப்பிரியத்துடன் பரிபாலித்தும்; கேசவருடைய பக்தி சக்தி சாமார்த்தியங்களைக்கண்டு வியந்தும் 1862ஹு ஒரு ஆசாரியராக நியமித்தார். இந்தக் கேசவரும் 5-வருடகாலமாக அவருடன் கூடிவாழ்ந்து வந்தாலும் பிராமணஜாதியின் பெருமையையும், பூணுநூலையும் நீக்கவேண்டுமெனக் கட்டாயப்படுத்திய தன்றியில், 1864ஹு, வேறு வேறு ஜாதியான இருவருக்குக் கலியாணத்தைச் செய்து வைத்தார். இதனல் தேவேந்திர நாதருக்கும், அவர் சிநேகிதர்களுக்கும், இந்த வாலிபரின்பேரில் சந்தேகங்களுண்டாகி இவர் சுதந்தரங்களை நீக்க விருப்பங்கொண்டார்கள். ஆகவே 1865ஹு அக்டோபர்மீ சில வாலிபப் பிரமோபாஸிகள்

பிரிந்துபோய்விட்டார்கள். கடைசியாக 1866ஹ நவம்பர்மீ
கேசவசந்திரசேனர் வாலிப பிராமோபாசிகளைத் திரட்டியும்
இந்திய ஸமாஜமென்றுபெயரிட்டும், பிரார்த்தனைக்காக பிரம்ம
மந்திரத்தைக் கட்டிவைப்பித்தும், அநேக சமாசார பத்திரி
கைகளின்மூலமாகவும், பிரசங்கங்கள்மூலமாகவும் பிரம்மமதத்
தைப் பரவச்செய்தார். இந்தச் சபையாருக்குத்தான் இந்
திய ஸமாஜத்தாரென்று பெயர். இந்த கேசவசந்திரசேனர்
தான் சென்னை, பம்பாய், பஞ்சாப், அலகபாத்து முத
லான தேசங்களிற்போய் பிரபலமான பிரசங்கங்களைச் செ
ய்து பிரம்மஸமாஜங்களை ஸ்தாபித்தார். 1870ஹ இங்கிலாந்
துக்குப்போய்ப் பலவிடங்களிலும் பிரசங்கங்களைச் செய்து
பெருமைபெற்றும் அவ்விடத்திலும் பிரம்ம சமயத்தை
ஸ்தாபித்தார். இதுநிற்க, இந்தப் பிரம்மோபாஸிகள் ஜாதி
பேதமற்று பல ஜாதியாரோடு கொள்ளவும் கொடுக்கவும் சம்
பந்தஞ் செய்துவந்ததில் இந்து தர்ம சாஸ்திரப்படி வேறு
ஜாதியையும், மதத்தையுஞ் சார்ந்து வருபவருக்கு பிதுரார்ச்
சித சொத்து முதலானவைகள் சுவதந்திர மாவதற்குத் தடங்
கலா யிருந்ததைப்பற்றி, இவர்கள் இங்லீசு துரைத்தனத்தா
ரிடம் முறையிட்டு 1872ஹ மார்ச்சுமீ 19உ ஒரு சட்டத்
தைப் பிறப்பித்துக்கொண்டார்கள். இந்தச் சட்டத்தில் எந்த
ஜாதியாராகிலும் 14-வயதுக்கு மேற்பட்ட பெண்ணும்,
18-வயதுக்கு மேற்பட்ட புருஷனும் யாதொரு மதத்தை
யற்று சர்க்காரில் ரிஜிஸ்தர்செய்வித்து விவாகஞ் செய்து
கொள்ளலாமென்று சொல்லியிருக்கிறது. இந்த ஆக்டு ஜாரி
யாகவே, அநேக விநோதமான கலியாணங்கள் நடந்ததன்றி
யில், பிரம்ம சமாஜங்களும் பாலிகா பாடசாலைகளும், சீர்
திருத்துஞ் சபைகளும் தேசமெங்கும் பரவிவிட்டன. இப்
படியிருக்க 1878-ஹ 16-வயதுள்ள குச்சுபேகார் தேசத்து
மகாராஜனுக்கும், 13-வயதுள்ள கேசவசந்திரசேனருடைய
குமாரத்திக்கும் விவாஹஞ்செய்யச் சம்பவித்தபடியால், கேசவ
ருடைய சிஷ்யர்கள் ஆக்ஷேபித்தார்கள். ஆனால் சில சந்தர்ப்
பங்களைக் கருதி விவாஹத்தை முடித்துவிட்டார்கள். ஆகவே
சிலர் மனவருத்தத்துடன் கேசவரைவிட்டுப் பிரிந்து சாதா
ரண ஸமாஜமென்னும் பெயரால் ஒரு சபை சேர்ந்து பெரிய
மந்திரத்தைக் கட்டிவைப்பித்துக்கொண்டதன்றியில், அதன்
ஆசாரியர்களாகிய பண்டிதர் சிவநாத சாஸ்திரியார், விஜய
கிருஷ்ணசுவாமி முதலானவர்கள் கூடிப் பல தேசங்களுக்குச்

சென்று பிரசங்கஞ்செய்து பிரம்மமதத்தைப் பரவச்செய்து வருகிறார்கள். இந்த சாதாரண சமாஜத்திற்கு ஒரு தலைவரும் பாரிஷ்டரும், சிறந்த பக்திமானும் தேசாபிமானியுமாகிய ஸ்ரீ ஆநந்த மோஹனபோஸ் 1847௵ பிறந்து 1906௵ ஆகஸ்டுமீ 20-ம் தேதி மாலை 6-மணிக்குப் பரமபதமடைந்தார்.

ஆனால் கேசவசந்திரசேனரும், அவரது உதவியாகிய பிரதாபசந்திர மசூம்தாரரும், பிரம்ம ஸமாஜத்தைச் சகல ஜாதியாருக்கும், சகலதேசத்தாருக்கும், சகலமதஸ்தர்களுக்கும் பொதுவானதென்றும், இது தேவநியமானமாகவந்த "நவவிதானம்" என்று பலதேசங்களிலும் போய்ப் பிரசங்கஞ் செய்து வந்து ஸ்ரீ கேசவசந்திரர் தமது 44-வது வயதாகிய 1884௵ ஜனவரிமீ 8ல் பரமபதமடைய, ஸ்ரீபிரதாபசந்திரர் தமது 65-வது வயதில் 1905௵ மேமீ 7-ம் தேதி பரமபதமடைந்தார். இவருடைய பிரசங்கங்களை அமெரிகா ஆங்கிலேய நாட்டார் வியந்துகொண்டாடி வருகிறார்கள். கல்கத்தாவில் ஏகேசுவர மதபோதகராகிய கனம் டால் (Mr. Dall) பாதிரியாரும், சீமையில் காலெட் துரைசானியும் பிரம்ம ஸமாஜத்தில் விருப்பங்கொண்டு அநேக கிரந்தங்களைப் பதிப்பித்துவருகிறார்கள்.

இப்போது பெங்காளம், பம்பாய், அலஹாபாத்து, கயா, காசி, பஞ்சாப், சிம்லா, பத்னா, பெங்களூர், சென்னை, மங்களூர், இராஜமகேந்திரம் கோயமுத்தூர், முதலான 200 ஸ்தலங்களில் பிரம்மஸமாஜங்கள் ஸ்தாபிக்கப்பட்டு, பிரம்ம பிரார்த்தனைகளையும், உபந்நியாசங்களையுஞ் செய்துவருகிறார்கள். தெலுங்குதேசத் திலகமாகிய சென்னையம்பதியில் 1864௵ வேதஸமாஜமென்னும் பெயரால் ஒரு சபை ஸ்தாபிக்கப்பட்டது. அதன் கர்த்தர்களான ஸ்ரீமத் இராஜகோபாலாசாரியார், சுப்பராயலு செட்டியார், ஸ்ரீதர நாயகர், காசிவிஸ்வநாத முதலியார், புச்சயபந்துலு, ஜெயராமபிள்ளை, இரங்கநாதநாயுடு, பொன்னுசாமிபிள்ளை முதலானவர்கள் இந்த ஸமாஜ விஷயமாக உழைத்து வந்தார்கள்.

பெங்களூர் பட்டாள ஸமாஜத்துக்கு ஒரு பிரம்மமந்திரத்தையும், பாலிகாபாடசாலையையும் சுபேதார் மேஜர் அப்பாவுபிள்ளை பகதூர் கட்டி வைப்பித்தார். கண்டோன்

மென்டு ஸமாஜத்துக்காக இராப்பஹாதூர் நாராயணசாமி முதலியார் ஒரு புது பிரம்ம மந்திரத்தைக் கட்டி வெகுமதியாகக் கொடுத்தார். கோயமுத்தூர் பிரம்ம சமாஜத்திற்காக சே. ப. நரசிம்மலு நாயடு சுமார் 5000 ரூபாய் விலையுள்ள பிரம்ம மந்திரத்தைச் சில சிநேகிதர்கள் உதவியால் கொடுத்ததன்றியில் அநேக கிரந்தங்களைப் பதிப்பித்துக் கொடுத்திருக்கிறார்.

## பிரம்மஸமாஜத்தின் கருத்து.

இந்துதேசத்தில் நாளாவட்டத்தில் நவீனமாக வந்து நுழைந்த மதாவேச கக்ஷி வைஷம்மியத்தையும், காடாந்தகாரமாகிய அஞ்ஞானத்தையும் நீக்கி, ஒருமைப்பாடென்னும் ஒப்பற்ற காப்பைப் பயிற்சிசெய்து பல்லுயிராரும் பரஸ்பர க்ஷேமத்துடன் பேரானந்தப்பெருங்கடவுளைப்பக்தியால்கொண்டாடி அத்யாத்மிக விருத்தியையும், ஜனசமூஹத்தின் சகோதர வாஞ்சையையும் விருத்தியாக்குவதேயாம்.

இதை விவரமாக அறியவிரும்புவோர் எம்மாற் பதிப்பிக்கலான வேதாந்தசூரியோதய மென்னும் நூலைப்பார்க்கலாம்.

---

## ஆரியசமாஜம்.

ஆரியருடைய வேதங்களையே பிரமாணங்களாகக் கொண்டு பரம்பொருளை வணங்கும் மதஸ்தர்களுக்கு ஆரிய ஸமாஜத்தாரென்று பெயர். இந்த ஸமாஜத்தின் காரணகர்த்தர் ஸ்வாமிதயாநந்த சரஸ்வதி யென்பவரே.

இதுவரையில் இந்துவேதங்களுக்குப் பொருள் செய்தவர்கள் சரியாகச் செய்யவில்லை யென்றும், வேதத்தில் விக்கிராராதனை, ஜாதிபேதம், சொல்லப்படவில்லை யென்றும் கூறி ஆரியசமாஜத்தைஸ்தாபித்தஸ்ரீதயானந்தர்சரித்திரமாவது:—

## தயாநந்தஸரஸ்வதி ஸ்வாமிகளுடைய சரித்திரம்

இவர் சம்வச்சராதி 1881௵ மூர்விராஜ சந்ததியும், பிராமண உதிசியகுலத்தில் ஜனித்து, சிறுபிராயத்திலேயே காயத்திரி, யஜுர்வேதங்களைக் கற்றுவந்தார். இவர் பெற்றவருக்குச் செல்வப் பிள்ளையானபடியால், அதிக செல்வாக்குடன் வளர்த்து வரப்பட்டார். இவரது தகப்பனார் சைவமதஸ்தரானபடியால் சிவராத்திரி உற்சவகாலத்தில் ஒரு சிவ

பெருமான் கோயிலுக்கு இவரை அழைத்துப்போனார். அந்த ராத்திரியில் கோயிலின் குருக்கள் சரியாகப் பூஜை செய்யாமல் தூங்கிவிட்டபடியால், எலிகள் வந்து பிருதுவிலிங்கமென்னும் சிவபெருமானாகிய லிங்கத்தின்மீதிலேறி ஆபரண புஷ்ப திலகாதிகளைக் கடித்திழுத்தும், அருகிலிருந்த பதார்த்தங்களைக் கடித்துண்டும் போனதை இவர் பார்த்து, "இதென்ன? சிவபெருமான்பேரில் எலிகள் வந்து அக்கிரமங்களையும், அசங்கியங்களையும் செய்யலாமா?" என்ற கேள்விக்குட்பட்டு, தீராச் சந்தேகியாகித் தனது தகப்பனாரிடஞ் சொல்ல, அவர் முன்னும் பின்னும் பார்த்து, "இந்த விக்கிரகம் சிவபெருமானுக்குப் பிரதிநிதியாகிய பொம்மையே யல்லாமல் சிவபெருமானல்ல," என்று சொன்னார். அன்றுமுதல் இவருக்கு விக்கிரகாராதனையிற் சந்தேகமும் சங்கடமும் ஜனித்து விஷய விசாரணை செய்துவந்தார். பிறகு வேதாதி தத்துவ கிரந்தங்களைக் கற்றுவரும்போது, இவருக்குப் பெற்றோர் 18-ம் வயதில் கலியாணஞ் செய்யப் பிரியப்பட்டார்கள். இவருக்கு பிரம்மச்சாரியாக விருப்பதே சிரேஷ்டமெனத் தோன்றியபடியால், பலவிதத்திலும் விவாகத்தைத் தடுத்தும் முடியாமையால், யாருக்குந் தெரியாமல் இராத்திரிகாலங்களிலேயே வேறு திவ்யதேசங்களுக்குப்போய், அநேக மஹாத்துமாக்களைத் தரிசித்து யோகவித்தியாதிகளைக் கற்றுத் தெளிந்து சிறந்த ராஜயோகியானார். பிறகு தேசோபகாரமாக அநேக வேத பாஷ்யாதி கிரந்தங்களை யெழுதிப் பதிப்பித்தார். அநேக தேசங்களுக்குப்போய் விக்கிரகாராதனையை விட்டொழிக்க வேண்டுமெனப் பிரசங்கஞ்செய்து அநேகரைச் சீடர்களாக்கி, ஆரிய ஸமாஜத்தை ஸ்தாபித்தார். இவர் அத்வைத சித்தாந்தத்தை யனுசரிப்பவராகிலும்; ஸ்தூல, ஆத்மதேகங்களுக்கு வேறு பரமாத்மாவிருக்கிறதென்று சொல்லுகிறார். இவருடைய யோகவித்தையிற் பிரியப்பட்டு அமெரிகா தேசத்து ஆல்காட்துரையும், ருஷியாதேசத்து பிளாவட்ஸ்கி துரைசானியும் சீடர்களாகி, இந்துதேசத்துக்கு வந்தார்கள். ஆனால் தயாநந்தர் ஈசுவர னொருவனுண்டென்னும் ஆஸ்திக மதவாதியாயும்; ஆல்காட், பிளாவிட்ஸ்கியென்பவர்கள் புத்தமதமாகிய ஒருவித நாஸ்திக மதவாதிகளாயு மிருந்தபடியால், வைதிக விஷயமாகக் கலகஞ் ஜனித்து, முன்னவர் ஆரிய ஸமாஜிகளாயும், பின்னவர் தியாஸபிஸ்டிகளாயும் பிரிந்து விட்டார்கள். பஞ்சாப் என்னும் லாகோரில் ஆரிய ஸமாஜம் பிரபலமாயிருக்

கிறது. அவர்கள் அநேக சமாசார பத்திரிகைகளையும் கிரந்தங்களையும் பதிப்பித்து வருகிறார்கள். அவர்கள் பிரம்மசாரிகளுக்குக் "குருகுலவாசம்" என்னும் தரும பாடசாலையையும், வெளிகீசர்களுக்கு A. D. தயாநந்த ஆங்கில பாடசாலையையும் ஸ்தாபித்து ஸ்ரீ ஹம்ஸராஜர், ஸ்ரீ லஜபுத்ராய் முதலானவர்கள் சமாஜத்திற்கு சிரத்தையுடன் உழைத்து வருகிறார்கள்.

## தியாசபி மதம்.

இந்துமதத்திற் சொல்லப்பட்ட யோகம் மந்திரம் தந்திரம் யாவும் உண்மையென்று சொல்லும் தியாசபி மதமாவது:—

1880ல் கர்நல் ஆல்காட் என்ற ஒரு அமெரிகா கண்டத்தாரும், மாடம் பிளாவட்ஸ்கி என்னும் உருஷியா தேசத்து மாதும் இந்தியா பம்பாயிக்கு வந்து, இத்தேசத்து பூர்வ யோகம், மந்திர தந்திர முதலானவைகள் உண்மையெனச் சாதித்து, அநேக மஹிமைகளைச் செய்துவந்து, சென்னையம்பதியில் வசித்துவந்தார்கள். இவர்கள் 1875ல் அமெரிகா கண்டத்தைச் சார்ந்த நியூயார்க் பட்டணத்தில் ஸ்தாபிக்கப்பட்ட தியாஸபி சங்கத்தைச் சார்ந்தவர்கள் இந்தமதாதிபதிகள் இருவரும் புத்தசமயத்தாராக விருந்தும், பிராமணர் முதலானவர்கள், இவர்களுடைய கோட்பாட்டை யனுசரிக்க, இந்துதேசத்தின் பலவிடங்களில் சபைகளை ஸ்தாபித்தார்கள். இவர்கள் கிறிஸ்துமதஸ்தர்களுக்கு ஒருவித விரோதிகள். ஜன சமூக சகோதர வாஞ்சையை விருத்தியாக்க விரும்புகிறார்களேயொழிய, ஸ்வாமி பக்தியில் அவ்வளவு பற்றுள்ளவர்களாயிருப்பதாகத் தோற்றவில்லை. இதை மந்திர தந்திர மதமென்று சொல்லலாம். இவர்களுடைய மாதாந்த சஞ்சிகைக்கு தியாசபிஸ்டு என்று பெயர். இந்த மதத்துக்கு முக்கியஸ்தர்களாயிருந்த மேடம் பிளாவட்ஸ்கி என்னும் அம்மாள் சுமார் 10-வருஷங்களுக்கு முன் இறந்துபோனதினாலும், கர்னல் ஆல்காட்டு என்பவர் 1907-ல் சென்னையில் இறந்துவிட்டபடியாலும், ஸ்ரீமதி அன்னிபிசண்டம்மாள் தலைவியாக நியமிக்கப்பட்டார். இந்தம்மை ஒருகால் நாஸ்திகவாதியானதினால், தன்புருஷனையும் பிள்ளைகளையும் விட்டுப் பிரிந்து பிராட்லாவோடு சேர்ந்து நாஸ்திக மதத்தைப் பிரபலமாக்கி வந்தவர், பிறகு பிளாவட்ஸ்கி யம்மைக்குச் சீடராகி, தியாசபி சபையைச் சார்ந்தார். இடையில் தாம் அனுஷ்டித்த

நாஸ்திகமதத்தைவிட்டு ஆஸ்திக மதத்தை அநுசரித்துப் பகவத்கீதையைச் சிறந்த கிரந்தமாகக்கொண்டும், ஸ்ரீ கிருஷ்ணருடைய சரித்திரத்தைப் பிரபலமாகப் பிரசங்கித்தும் வருகிறார். இப்போது பனாரீஸ் என்னும் காசிப்பட்டணத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் சென்ட்றல் இந்து காலேஜுக்கு பிராணதாரமாயிருக்கிறார். இச்சபையில் நீதிபதி ஸ்ரீ சுப்பிரமணியம் ஐயரவர்களும், மதுரை நாராயணய்யர் அவர்களும், ஸ்ரீ சதாசிவ ஐயரவர்களும் முக்கிய மெம்பர்களாக இருக்கிறார்கள்.

---

## தேவஸமாஜம்.

இம்மதத்தை ஸ்தாபித்தவர் பஞ்சாபைச்சார்ந்த லாகோர் ஸ்ரீ சிவநாராயணர் அல்லது சத்தியாநந்த அக்கினி ஹோத்திரி. இவர் பல வருஷங்களாகப் பிரம்ம ஸமாஜத்தின் தலைவராக இருந்து உழைத்துவந்தவர். இம்மதகோட்பாடாவது—உண்மையான அநுதாபத்தோடு கூடிய பிரார்த்தனைகளால் சகல பாவங்களும் இந்த உலகத்திலேயே நீங்கிவிடுகிறதென்றும், சர்வேசுவரனைச் சதா நம்பி உலகவாழ்க்கைக்குச் சத்காரியங்களைச் செய்வதனாலேயே மோக்ஷசுகம் அடையலாமென்பதுமேயாம்.

---

## புது இந்து சமயம்

அல்லது

## ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சருடையவும், ஸ்ரீ விவேகாநந்தருடையவும் மதம்.

ஆரியர் நாட்டிலே இதுவரையில் உற்பத்தியான ஆஸ்திக மதத்தின் பல வகுப்புகளின் விவரங்கள் அன்றியில், இப்போது பின்னும் சில மதங்கள் உற்பத்தியாகிக் கொண்டே வருகின்றன. அவைகளிற் சிறந்தது ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸருடைய மதமேயாம்.

## ஸ்ரீராமகிருஷ்ணருடைய விவரம்.

இவர் வங்கநாட்டைச்சார்ந்த ஹூக்ளிஜில்லாவில்ஜநாபாத்துக்கு அடுத்த கமார்க்கப்பூரில் 1835௵ ஜனித்த குடிராம் சத்திர்ஜி என்னும் பிராம்மண புரோகிதருடைய குமாரர்.

சிறு பிராயத்தில் பிதாவை இழந்துவிட்டபடியால், இவர் தமயனாகிய இராமகுமாரருடைய சம்ரக்ஷணையிலிருந்து, ஜீவனோபாயத்தைக்கருதி கல்கத்தாவுக்குக் குடிவந்தார். இராமகிருஷ்ணருக்குக் கல்வியில் பிரியமில்லாமையினால், கல்கத்தாவுக்கடுத்த தக்கஷேனேரஸ்வரம் என்னும் இடத்தில் இராணி ரக்ஷ்மினியார் கட்டிய காளி கோயிலில் பூஜாரியாக அமர்ந்தார். இந்த பூஜாரி வேலையை வகிக்கத் தமக்கிஷ்ட மில்லாதிருந்தும், தமது தமயனுடைய கட்டாயத்தினால் வகித்து, காளி பக்தராகி, சதா காளி தாயே என்று ஸ்பரித்துவந்தார். பிறகு தாதபுரி என்னும் ஒரு வேதாந்தியால் வேதாந்த சித்தாந்த பிரவர்த்தகராகி யோகாநந்தரானார். இவர் எப்போதும் எங்கும் பரப்பிரம்மத்தை மாதாவாகப் பாவித்துச் சமரசராக இருந்தபடியால், தாம் நடக்கும் வழியிலிருக்கும் கிறிஸ்து கோயிலைக் கண்டாலும், மகமதியர் மசூதியைக் கண்டாலும் காளிமாதாவாகப் பாவித்து வணங்கி வந்தமையால், இவரது சமரசத்தன்மையை அறிந்த ஸ்ரீகேசவசந்திரசேனர், ஸ்ரீ பிரதாபசந்திர முஜூம்தாரர், ஸ்ரீ சிவநாதசாஸ்திரியார், ஸ்ரீ விவேகாநந்தர் முதலானவர்கள் இவரிடம் அன்புற்று அடிக்கடி கண்டு களித்து வந்தார்கள். இந்த மஹான் 1886௵ ஆகஸ்டு௴ 16-ம் தேதி காலை ஒரு மணிக்குக் கல்கத்தாவுக்கு இரண்டு மைல் தூரத்திலுள்ள காஜிப்பூரில் பரமபதமடைந்தார். அவருடைய சீடர்கள் பதினெட்டுப் பெயர்களில், ஸ்ரீ விவேகாநந்தர் முக்கிய சீடராகி அவருடைய பெருமையைப் பிரதிஷ்டையாக்கினார்.

## ஸ்ரீ விவேகாநந்தர்.

இவர் 1863௵ கல்கத்தாவில் காயஸ்த குடும்பத்தில் பிறந்து, 1884௵ பி. ஏ. பரீக்ஷையில் தேர்ந்து, பிரம்ம சமாஜத்தைச் சார்ந்தவர். அப்போது அவருடைய பெயர் நரேந்திர நாததத். இவர் ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சருடைய சீடரானபிறகு மற்றச் சீடர்களைப்போல் ஒரு சந்நியாசியாகி இராமநாதபுரம் ஸ்ரீ சேதுபதிராஜா அவர்களுடைய

திரவிய சகாயத்தினால் அமெரிகா சிக்காகோ சமயசங்கத்திற்கு 1893௵ போய், இந்து மதத்தைப்பற்றிப் பிரபல பிரசங்கங்கள் செய்து சிறந்தவரான தன்றியில், 1896௵ இங்கிலாந்துக்குப் போய் வேதாந்த விஷயமாகப் பிரசங்கம் செய்தும், 1899௵ மறுபடியும் இங்கிலாந்துக்கும், அமெரிகா, செண்டு பிரான்சிஸ்கோ இடங்களில் உபந்நியாசங்கள் செய்தும், அங்கு வேதாந்த சபையை ஸ்தாபித்தனர். பிறகு 1900௵ இந்தியாவுக்கு வந்து பல விடங்களிற் பிரசங்கித்து, கர்ம, பக்தி, இராஜயோகாதி கிரந்தங்களைப் பதிப்பித்தும், 1902௵ கல்கத்தாவுக்கடுத்த பேலூர் மடத்தில் பரமபத மடைந்தார். இவருடையவும் ஸ்ரீ ராமகிருஷ்ணருடையவும் சீடர்களான ஸ்ரீ அபேதாநந்தர், பாபாபாரதி முதலானவர்களும் நடிவதி என்னும் அமெரிகா மாதும் அவர்களுடைய சித்தாந்தத்தைப் பிரசங்கித்துவருகிறார்கள், ஸ்ரீவிவேகாநந்தர் சென்னையில் வந்து பிரசங்கங்கள் செய்ததில், சென்னை வாசிகளான ஸ்ரீ டாக்டர் நஞ்சுண்டராவ் ஸ்ரீ ராஜம் ஐயர் முதலான சில பக்திமான்கள் அவரைத் தழுவி, பிரம்மவாதின், அவேகண்டு இந்தியாமுதலான பத்திரிகைகளைப் பிரசுரம் செய்தார்கள். ஆயினும் ஸ்ரீ விவேகாநந்தருடைய சித்தாந்தம் ஸ்வரூப அத்வைத மாகையால் அநேகர் அக்கருத்தை அனுசரிக்கிறார்கள் இல்லை.

## ஸ்ரீ பிரேமாநந்த பாரதி.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சருடைய சீடர்களன்றியில் கல்கத்தாவில் ஒரு பெரிய குடும்பத்தைச் சார்ந்த வாலிபர் ஸ்ரீ பிரேமாநந்த பாரதியென்னும்பெயரால் ஸ்ரீசைதன்னியருடைய சித்தாந்தத்தைத் தழுவி, ஸ்ரீகிருஷ்ணபக்தராகி, சென்னை முதலான விடங்களிலும், அமெரிக்காவிலும் பல பிரசங்கங்களைச் செய்து அநேகரைச் சீடராக்கி, அமெரிகாவில் ஸ்ரீ கிருஷ்ண சுவாமி கோவிலைக் கட்டிக்கொண்டு வருகிறார். இத்தியாதிகளால் ஆஸ்திகமதவிருக்ஷத்தின் கிளைகள் கிளை கிளை கிளம்பித் துளிர்த்து, பூ, காய், கனிகளைக் கொடுத்து உலகத்தாரை

இகபரசுகம் அடையச்செய்து வருகிறதென்பது திண்ணம் திண்ணம்.

இனி சீனதேசத்து மதத்தையும், எகிப்த்து தேசத்து மதத்தையும், யூதமதத்தையும், கிறிஸ்து மதத்தையும், மகம்மது மதத்தையும், பாரஸீக மதத்தையும், ஸ்காந்திநேவியன் மதத்தையும், ரோமகர் மதத்தையும், கிரேக்கர் மதத்தையும் மற்றும் பல சில்லரை மதங்களின் கருத்துக்களைப்பற்றி அடுத்துவரும் மூன்றாவது பாகத்தில் சொல்லுவோம்.

——(o)——

வாழி கலிவிருத்தம்.

பரன்வாழி மறைவாழி பகர்கல்வி புயல்வாழி
தரைவாழி நீதியொடு சமயமும் பலவாழி
புரியிந்து சமயநூல் புகலுவோர் கேட்போர்வாழி
அரசி செங்கோலு மடியாவம் வாழிவாழி.

மதவிருக்ஷத்தின் இரண்டாம் பாகமாகிய
இந்துசமயம் முற்றிற்று.

ஓம்

பரப்பிரஹ்மணேநமஃ

---

மதவிருக்ஷத்தின் மூன்றாம் பாகமாகிய

# கிறிஸ்து மகமதாதி மதங்கள்.

இஃது

சீனா, எகிப்து, யுதேய, கிறிஸ்து, மகம்மது, பார்சி, ரோம,
கிரேக், ஸ்காந்திநேவியன், மெக்ஸிகோ, தார்த்தாரி,
ஜப்பான், பெருவியன், மிசிசிபி, கனடா, பைகோ,
மலாகா, போர்னியா, பிலபியன், ஜாமகா, இலங்கை,
மலாயா, லாப்லாந்து, பிலோராடின், காரபி,
கினியா, பெனின், காங்கோ, அரகான்,
காபிரி தேசமதங்களைப்பற்றி,

கோயமுத்தூர் கலாநிதியின் பத்திராதிபரும், ஆஸ்திகமதசித்தாந்தம், சாமுத்திரிகாலக்ஷணம், இந்து தர்க்கசாஸ்திரம், இந்துசமயம், யோகவித்தியா வினாவிடை, தக்ஷண இந்திய சரித்திரம், பலிஜவாரு புராணம், பிரம்மசமய சரித்திரம் முதலான கிரந்தங்களின் கர்த்தராகிய

சேலம், பகடால

நரசிம்மலு நாயடு அவர்கள்

கோயமுத்தூர் பிரம்மோபாசனா சாலையிலும்,
வேறுவிடங்களிலும் செய்த
உபந்நியாசங்களின் சாரசங்கிரகம்.

ஓம்.
பரப்பிரஹ்மணேநம:.

# கிறிஸ்து மகமதாதி மதங்கள்

## சீனதேசத்து மதம்.

நமது இந்துதேசத்திற்கு வடகிழக்கில் 50,00,000 மைல் விஸ்தீரணமும், 50,00,000,00 கோடி ஜனங்கள் வசிக்கப்பட்டதுமாகிய சீனராஜ்யமென்ற ஓர்பெரிய தேசமுண்டு. அதில் ஓவாங்கோ, யாங்ஸிக்யாங்கு என்ற நதிகளும்; பத்து மைல் விஸ்தீரணமுள்ள 200-வாய்க்கால்களும்; 1,800-அடி ஆழமுள்ள கிணறுகளுமிருப்பதால், விவசாயமாகாத ஒரு துண்டு நிலமாவது காணக்கிடையாது.

கிறிஸ்து பிறப்பதற்கு 2155-வருஷங்களுக்கு முன்பே பஞ்சாங்கமும், நிஜசரித்திரமும், அவர்களுக்குஉண்டு. தேயிலையைப் பதமாக்கும் விதமும்; சொக்காய்கள், அச்செழுத்து, வெடிமருந்து, திசையறியுங்கருவி, பீங்கான், கண்ணாடி முதலான சாதனங்களை ஐரோப்பா கண்டத்தார் அறிவதற்கு வெகு நூற்றாண்டுகளுக்கு முன்பே அந்தச் சீனர் அறிந்திருந்தார்கள். சித்திர சிற்பவேலைகளிலும் சிறந்தவர்கள். பகவானிடத்திலும், பெற்றோர் பெரியோரிடத்திலும், பூரண பக்தியை யுடையவர்கள்.

சுமார் 4,000-வருஷங்களுக்கு முன்பு, எப்படிப்பட்ட நடையுடை பாவனைகளை யனுசரித்தார்களோ அதையின்றளவும் கையாடி வருகின்றனர். துக்கம் சாவு முதலானவைகளுக்கு வெள்ளையுடுப்புகளைத் தரிக்கப்பட்டவர்கள். சீனர் இன்னஜாதி, இன்னவமிசத்தாரெனக் கண்டறிய அநேக சாஸ்திரிகளாலு முடியவில்லை. இந்து, ஆரபி, தார்த்தரி குடும்பத்தாரென்று சில சாஸ்திரிகள் சொன்னாலும், சீனர்கள் இந்து ஜாதியிலிருந்து ஒருகாலத்தில் அத்தேசத்திற்குக் குடிபோனவர்களென்று உல்சன் பண்டிதர் சொல்லியதாக (Tyster) டிஸ்டர் பண்டிதர் எழுதியிருக்கிறார்.

கிறிஸ்து பிறப்பதற்கு 200-வருஷங்களுக்கு முன்பு அன்னியதேசத்தார், சீனராச்சியத்தின்மேரில் படையெடுத்துவராதபடி 1,500-மைல் தூரத்திற்குச் சுமார் 20-அடி உயரமுள்ள ஒருபெரிய சுவர் கட்டப்பட்டது. அப்படியிருந்தும், பத்தாம் நூற்றாண்டில் ஜிங்கிஸ்கான் முதலான தார்த்தாரியர் படையெடுக்க ஜெயிக்கப்பட்டு இன்றளவும் தார்த்தாரி அரசர் வசத்திலிருக்கிறது. அவ்வரசனுக்குச் சக்ரவர்த்தியென்று பெயர். அவருக்கு உதவியாக 12-கவர்னர்களிருக்கினும், சகல தீர்மானங்களும் சக்கரவர்த்தியினாலன்றி முடியா. மேற்படி சக்கரவர்த்தி தேசாசார, மதாசாரப்படி ஆளவேண்டும். நாட்டில் பஞ்சம், வியாதி முதலானவைகளுண்டாகில் துரைத்தனத்தாரே உத்தரவாதிபாகவேண்டும். மூன்று வருடத்திற் கொருவிசை ஒவ்வொரு குறுநிலமன்னனும் தான்செய்த அல்லது எண்ணிய நிசகாரியங்களைச் சத்தியத்துடன் வெளியிடவேண்டும்.

சர்க்கார் உத்தியோகஸ்தர்களை மந்தரீனர்களென்று சொல்லுவார்கள். அவர்கள் சிறுபிராயமுதல் 45, 50 வருடங்கள் வரையில் சகல சாஸ்திரங்களையும் படித்து மூன்று பரிக்ஷைகளில் தேறியவர்களா யிருக்கவேண்டும். சீனர்கள் தங்கள் சக்கரவர்த்தியைத் தேவேந்திரனென்றும், தந்தையென்றும், தேவராஜனென்றும் புகழுகிறார்கள். கிறிஸ்து பிறப்பதற்கு 1,100 வருஷங்களுக்கு முன்பே பலவித நாணயங்களையும், புத்தகசாலைகளையு முடைத்தாயிருந்தனர். சீனர் நாமதேயங்களைத் தலை கீழாக எழுதுகிறார்கள். பொதுவாகச் சீனர்கள் பெற்றோருடைய கட்டளைகளின்படி நடப்பதிலும், பிறரிடத்தில் பொறுமை, ஈகை, பரஸ்பர க்ஷேம விருப்பங்களிலும் புகழ்ப்பெற்றவர்கள்.

## கான்பியூசியஸ் சரித்திரம்.

இந்தச் சீனாவில், லூ என்னும் பட்டணமுண்டு. கி. மு. 551ஹு (Confucus) கான்பியூசியஸ் என்ற மகிமையுற்ற மதாதிபதி ஜனித்தார். மூன்றாவது வருடத்தில் அவர் தந்தை யிறந்துபோக, 15-ம் வயதில் கல்வியில் பிரவேசித்தும், 19-ம் வயதில் மணஞ்செய்தும், 50-ம் வயதில் அரசாங்கத்தின் தொழிலிலமர்ந்தும், தமது மேன்மையான குணங்களினாலும் நடக்கைகளினாலும், மந்திரி வேலையைப் பெற்றார். பிறகு

பூலோகத்தின் பொய்வாழ்க்கையை எண்ணித் தேசாந்திரியாகி, மரங்களின் நிழலின் நின்று கடவுளின் பெருமைகளைப் பற்றியும், நீதிகளைப்பற்றியும், பிரசங்கஞ் செய்து வந்தார். சீக்கிரத்தில் 3,000 சிஷ்யர்களைத் தமது கோட்பாட்டிற் சேர்த்தார். அவர்களில் (Hweu) ஹூவி, (Txooloo) ஜூலூ, (Txee king) ட்ஜிகிங்கு என்ற மூன்று சிஷ்யர்களும் மகாநீதிவான்கள். இம்மதாதிபதி நமது இந்துதேசத்து மநுவானவர் செய்த மநுதரும சாஸ்திரத்தைப்போல அநேக வெனகாவிய தருமநூல்களைச் செய்தார். அவைகளில் (Yih king) இகிங்கு=வித்தியாபோதினி, (Shooking) சூகிங்கு=சரித்திரம், (She king) ஷிகிங்கு=விதிநூல், (Li ke king) லீகிங்கு=சடங்காதிவிதி, (Chin Tsun) சின்சன்=காலபோதினி முதலானவை முக்கியமானவைகள். இவர் இறந்த பிறகு இவருடைய சிஷ்யர்கள் (Lun tue Confucus) லன்டியூகானிபியூகஸ் என்றவர்கள் சல்லாபனையாதி கிரந்தங்களைப் பிரசுரஞ் செய்தார்கள். இவ்விதம் தேசோபகாரமாக உழைத்து வந்த இப்பாக்கியவான் தமது 75-ம் வயதில் பரமபதமடைந்தார்.

இவரது ஞாபகக்குறிகளாக 1,660 கோவில்கள் கட்டப்பட்ட தன்றியில், வருஷத்தில் இரண்டு விசை பண்டிகை கொண்டாடப்பட்டும், 70,000-ம் பிராணிகளைப்பலியுங்கொடுக்கப்பட்டும் வருகிறது. இவருக்குப் பிறகு 40,000 சந்ததிகள் ஜனித்ததாகச் சொல்லுகிறார்கள்.

## சீனருடைய பெரியமதம்.

சீனதேசத்திலிப்போது மூன்றுவிதமான மதங்களிருப்பினும், அவைகளில் பெரிதும், பிராதனமும் புகழும் பெற்றது கொஷி காண்பியூசியஸ் என்பவருடைய மதமே. இவருடைய கொள்கையாவது, ஒரே கடவுள் உண்டென்றும், அக்கடவுளை யடைதலே மாநுஷிக சிறப்பென்றும்; வானம், பூமி, மனுஷர் கூடி ஒரு திரியேகத்துவ மென்றும்; அம்முப்பொருளில் மனுஷர் சிரேஷ்டரானபடியால், பெரிய மனுஷர்களை வணங்கவேண்டுமென்றும், தாயும் தந்தையும் பிரத்யக்ஷ தேவர்களென்றும், அப்பெற்றோருக்கு மக்களிசைந்து நடந்தும், அப்பெரியோரிறந்தால் அவர்கட்காக மூன்று வருஷ காலம் வரையில் துக்கங்கொண்டாடியும், பிறகு வீட்டில் மாத்ரு பித்ரு மஹாலயமென ஒரு அறையைக் கட்டி யதில்

பிரதிதினமும், மக்களும் அவர் சந்ததியாரும் இறந்த அப் பெரியோரை நினைந்து தியானிக்கவேண்டுமென்றும், வாலிப ஸ்திரீகளை யடிமைகளாக்கி, விருத்தாப்பிய ஸ்திரீகளை மரியாதையோடு வணங்கவேண்டுமென்றும், ஜாதிபேதங் கூடாதென்றும், எல்லோரையும் சகோதரராகப் பாவிக்கவேண்டுமென்றும், இந்தச் சன்மாத்தில் பிள்ளைகளைப் பெற்றால், பிள்ளைகளால் ஜன்ம விமோசன மாகுமென்றும், சகலரும் சத்தியம், ஞானம், கருணை, நீதி, ஒழுக்கமென்னும் ஐந்து தருமங்களை யனுசரிக்க வேண்டுமென்றும் போதிப்பதேயாம்.

## டாயிஸ்மதம்.

இரண்டாவது:சைன மதாதிபதி காலத்தில் (Laotse) லை ட்ஸி என்ற ஒரு தத்துவசாஸ்திரி ஜனித்து (Taoism) டாயிஸம் என்ற மதத்தை ஸ்தாபித்தார். அம்மதக் கருத்தாவது-வானம், பூமி, நரர் முதலானவர்க ளுண்டாவதற்கு ஒரு பொருள் காரணமென்றும், அது அநாதி யென்றும், அதுமூன்று தரம் மனுஷாவதார மெடுத்ததென்றும், யாவரும் யோகநிஷ்டைகளைச் செய்து இச் சென்மத்தை யழிக்க வேண்டுமென்றும் போதித்தார். இச்சமயவாதிகள் வெகு சிலராக விருந்தும், அவர்கள் இரசாயன சாஸ்திரங்களைக் கற்று ஜனங்களை ஏமாற்றுகிறார்கள்; கி. மு. 1,034ளு ஜனித்த (Choo toze) சுடாஸ் என்ற ஞானியானவர் ஐடாஜட ப் பொருள்களைப் பற்றி அநேக கிரந்தங்களை எழுதினார்.

## புத்தமதம்.

மூன்றாவது: கி. மு. 66 வருஷத்தில் இந்துதேசத்திலிருந்துசேர்ந்த புத்தமதம் அதிக பிரபலமான ஸ்திதியிலிருக்கின்றது. அப்புத்தமதத்தை முன்னமே அறிவித்திருக்கின்றோமல்லவா? கி. பி. 1,280ளு சீரிய கிறிஸ்தவர்கள் இத்தேசத்திற்குப் போய் தமது மதப்பிரசங்கஞ் செய்துவந்ததாக Dr. பவர் சாஸ்திரியா ரபிப்பிராயப்படுகிறார். கி. பி. 1625-வருஷத்தில் ஒரு சாசனக்கல் அகப்பட்டது. அந்தக் கல் இப்போது பாரீஸ்தேச கண்காக்ஷிசாலையில் வைக்கப்பட்டிருக்கின்றது. அக்கல்லில் (Olopen) ஓலிபன் என்ற நீதிவான் காலத்திற்கு வெகுநாளுக்கு முன்பே கிறிஸ்து சமயம் சீனதேசத்தி லுண்டென எழுதியிருக்கின்றது.

கி. பி. 1833-ல் (Tae Ping) டேபிங்கு என்ற மதம் முதலில் சீனாவில் காண்டன் பட்டணத்தில் பரவிற்று. இது ஒருவித கிறிஸ்துசமயம். (Hung saw tsvew) ஹங்சாவிடியூ என்ற ஞானி ஒரு சிறுபுத்தகத்தைப் பிரசங்கஞ்செய்து வந்தார். 1850-ல் அந்த மதம் பிரபலஸ்திதிக்கு வந்தது. அந்த மதஸ்தர் ஒரு தெய்வத்தை ஆராதித்து, ஏசுவின் விசுவாசத்தைப் பாராட்டி ஸ்திரீகளுக்குக் கல்வியைப்போதித்து, அபினி முதலான லாகிரிவஸ்துக்களை புண்ணுமல் நீதிவழியை யனுசரித்து வருகிறார்கள். தற்கால சக்கரவர்த்தியும், பிரதான உத்தியோகஸ்தர்களும் இக்கொள்கையை யனுசரிப்பதாகக் கேள்வி.

## உலகசிருஷ்டியைப்பற்றிச் சீனர் கருத்து.

சிருஷ்டி—ஆதியில் சடப்பொருள் மாத்திரம் ஏகபிண்டமாக விருந்து, அது இரண்டாகப் பிரிந்து, ஆணும் பெண்ணுமாகி, சூக்ஷ்மதேகம் மேலும், ஸ்தூலதேகம் கீழுமாகத் தாய் தந்தைகளாகி அவற்றால் சகலத்தையு முண்டாக்கினதாகவும்; ஆகவே; வானத்திற்கும் பூமிக்கும் சம்பந்த முண்டென்றும், சகலமும் ஆணும் பெண்ணுமா மென்றும் சொல்லுகிறார்கள்.

---

## எகிப்து தேசத்தின் மதம்.

இந்து தேசத்திற்கு வடமேற்குத்திசையில் பாலைவனங்களால் பெயர் பெற்ற "ஆப்பிரிகா" என்ற பெரிய கண்டமுண்டு. அக்கண்டத்தின் வடகிழக்குப் பாகத்தில் நயில் நதியின் கரைமேல் ஏழுமைல் விஸ்தீரணமும், பூலோக நந்தவனமெனச் சொல்லத்தகும் பலவிதபுஷ்ப கந்தமூலாதிகளும், கி. மு. 3,000 வருடங்களுக்கு முன் கட்டப்பட்ட விசித்திர கட்டடங்களும், கி. மு. 1,000 வருடங்களுக்குமுன் கட்டப்பட்ட அநேக பெரிய கோயில்களும், கி. மு. 4,000 வருடங்களுக்கு முன் ஆளுந்திறமையையுடைய அரசர்களும், பூகோள, ககோள, சிற்பமுதலான சாஸ்திரங்களுக்குப் பிறப்பிடமெனப் புகழும் பெருமையும் பெற்ற (Egypt) எகிப்து என்ற ஒரு தேசமுண்டு.

அந்தத் தேசம் விஸ்தீரணத்திற் சிறியதேயாயினும், அதைச்சார்ந்த (Cairo) கெயிரோ, (Alexandria) அலக்ஸாந்திரியா பட்டணங்கள் உலக சரித்திர மறிந்தவை. ஐரோப்பா

முதலான இடங்களில் கீர்த்திபெற்ற (Pythagoras) பைதாகோரஸ், (Plato) பிலேட்டோ, (Herodotus) எரோடடஸ், (Moses) மோசே, இன்னு மநேக புருஷர்கள் அந்த எகிப்து தேசத்தில் வந்து கல்வியைக் கற்றார்கள். ஆனதுபற்றி அத்தேசத்தைப் பூலோக பாடசாலை என்று சொல்வாருமுண்டு.

அத்தேசத்தில் நயில் நதியின் மேற்குக் கரையில் கி. பி. 900 வருடங்களுக்கு முன் 800 அடி. அகலமும், அதிலும் அதிகமான நீளமுமுடைய (Pyramids) பிராமிட்ஸ் கோபுரங்கள் என்கிற விசித்திர விநோதமான கட்டடங்கள் கட்டப்பட்டன. அவைகளைக் கருங்கல்லுகளால் கட்டுவதற்கு (Arabia) அரேபியா முதலான தேசங்களில் ஏழுவருஷகாலங்களாகக் கற்களைத் தயார்செய்து 1,00,000 ஜனங்களைக் கொண்டு 50 வருஷகாலங்களாக இடைவிடாமல் கஷ்டப்பட்டார்கள். மேற்புறத்தில் பலவித சித்திர வேலைகளுடனும், உட்புறத்தில்அற்புதமான அகன்ற அறைகளையுமுடைய இந்தச் சிற்பவிநோதத்தைப் பூலோகத்திலிருக்கும் ஏழுபிரதான அற்புதங்களில் ஒன்றென எண்ணி அவற்றைப் பார்ப்பதற்கென்றே பூகோளத்தின் பல ஜனங்களும் வருவதுண்டு.

கி. மு. 3,800 வருஷங்களுக்கு முன்பே அத்தேசத்தார் கண்ணாடி செய்யும் வகையை அறிந்திருந்தார்கள். இவ்வளவு பெருமையைப்பெற்ற எகிப்து தேசத்தார், இன்னஜாதி, இன்ன குடும்பத்தாரென்று திட்டமாகத் தெரியவில்லை. சிலர் ஆபிரிகர் என, சிலர் ஆசிரியர் என, சிலர் இரண்டுங் கலப்பென, சாஸ்திரிகளின் கருத்துக்கள் வித்தியாசப்படுகின்றன. சிலர் நோவாவின் குமாரராகிய (Ham) ஹாம் என்பவருடைய சந்ததியாரென்கிறார்கள். இப்படி வித்தியாசப்படினும், ஜலப்பிரளயமாகி 430 வருஷங்களுக்குப்பிறகு விர்த்தியான ஜாதியாரென்று (Moses) மோசே முதலிய சில பெரியோர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள்.

கி. மு. 3,500 வருஷங்களுக்கு முன் (Menes) மெனஸ் என்ற இராஜகுடும்பத்தார் அரசு புரிய, அதுமுதல் (Mearis) மெரெஸ் என்ற அரசர்கள்வரையில் 5,366 அரசர்கள் ஆண்டார்கள். இவர்களில் (Hyksos) இக்சாஸ் பெயர்பெற்றவர். பிறகு பல ஜாதியார் ஆள ஆரம்பித்து, இப்போது மகம்மதியருடைய ஆளுகையி லிருக்கிறது.

அத்தேசத்தில் 77,00,000 ஜனங்களிருக்கிறார்கள். அவர்களுடையபாஷை இன்னதெனக்கண்டறிவது கஷ்டம், ஆனால், அப்பாஷையில் சமஸ்கிருதமும், அரபியுங் கலப்புண்டு. அவர்கள் ஜோதிஷ சாஸ்திரத்தில் மகாநிபுணர்க ளாகையால், சூரியாதி கிரகங்களை வெகு திட்ப நுட்பமாகக் கணிப்பார்கள். (Barthalomi Philadelpy) பார்த்தலோமி பிலடெல்பி என்றவர் அலெக்ஸாந்திரியா பட்டணத்தில் ஒரு விசேஷ கலாசாலையை ஸ்தாபித்து, அதில் 7,00,000 புத்தகங்களை வைத்து, யூதவேதமாகிய பழய ஏற்பாட்டை கிரேக்பாஷையில் முதல் முதல் மொழிபெயர்த்தார். அதற்கு (Septuagent) ஸெப்டிஜெண்டு என்று பெயர். அத்தேசத்தில் அநேக கிரந்தங்களிருக்கினும், அவற்றில் சிறந்தவை 42-புத்தகங்கள். அவைகள் ஐந்து வகுப்புகளாக வகுக்கப்பட்டிருக்கின்றன. முதல் வகுப்புக் கிரந்தங்களில் தெய்வ ஸ்தோத்திரங்களும் பாடல்களு மடங்கியிருக்கின்றன. மற்றவைகள் பலவிதமான சாஸ்திரங்களே. (Petour) பேடோர் என்பவர் செய்த (Sallier) சாலியர் என்ற கிரந்தத்தில் வேதாந்தப் பாட்டுக ளனேகமுண்டு. இத்தியாதி பூர்வீக கிரந்தங்களை அறிந்து உரோமர், கிரேக்கர், சீரியர், அராபியர், பலஸ்தீனுதேசத்தார்கள் அந்தத் தேசத்திற்குப் போய்க் கற்று, தம் தேசங்களுக்குக் கொண்டு போனதாகச் சொல்லுகிறார்கள். மோதிரமிட்டு மணஞ் செய்யும் வழக்கம், முதலில் எகிப்து தேசத்திலிருந்து பிறகு, பூலோகத்தில் பரவியதாகத் தோன்றுகிறது. கி. மு. 2,300 வருஷங்களுக்குமுன் எழுதப்பட்ட அநேக தத்துவசாஸ்திரங்களும் பழமொழி நூல்களுமுண்டு. அவைகளில் (Papyrus) பேபைரஸ் என்பது இந்த உலகத்திற்கே ஆதிபுத்தகமாம். கி. மு. 2,200 வருஷங்களுக்குமுன் (Amun) ஆமன் என்ற நீதிபோதனு மதநூல் மிகச் சிறந்ததாம்.

மதநூல்களைக் குருக்கள் தவிர ஏனையோர் வாசிக்கக் கூடாது. அக்குருக்கள் : சிற்பிகள், இராஜர்கள், சிப்பாய்இவர்கள்குடும்பங்களில் பிறந்தபுத்திமான்களாக இருக்கவேண்டும். மேலும் இல்லற தருமங்களைத் தழுவிக்கொண்டும், புலித்தோல்களை யுடையாகவும், இறகுகளைச் சிரோபூஷணமாகவும், வருடம் ஒன்றுக்கு 42 நாள் உபவாசமிருந்தும், ஆடு மாடுகளைப் பலிகொடுத்தும், கோயில் பூஜையைச் செய்துகொண்டுமிருப்பார்கள். மீன்கள், பக்ஷிகள், வெங்காயம், மஞ்சள், முதலானவைகளை யுண்ணமாட்டார்கள். பிரதிதினமும் பகல்

இரண்டு தரமும், இராத்திரி இரண்டு தரமும் ஸ்நானமும், மூன்று நாளுக்கு ஒருவிசை சர்வாங்க க்ஷவரமும் செய்து கொள்ளவேண்டும். இறந்தவர்களுக்குக் கருமாதிகாரியங்களைச் செய்தும், கோயில் மாடு முதலானவைகளைப் பாதுகாத்தும், சில சமயங்களில் சிற்பவேலை, சிப்பாய் வேலைகளையும் செய்ய வேண்டும். குருக்களுக்கு யாதொரு வரியுங்கிடையாது. வணக்கத்திற்குப் பாத்திரரென்றுஞ் சொல்லுகிறார்கள்.

எப்படிப்பட்ட எக்பதியர் திருடுதல், சிரித்தல், விபசரித்தல், பொய்சொல்லல், பரிசுத்த பிராணிகளை வதைத்தல், முதலானத் தீயசெயல்களைக் செய்யக்கூடாதென்றும்; ஒவ்வொருவரும் தெய்வபக்தி, பெற்றோர்பக்தி, பரோபகாரம், ஸ்திரீகளுக்குத் தக்க மரியாதை முதலானவைகளைச் செய்யவேண்டுமென்றும், ஆடு மாடுகளைத் தேவனுக்குப் பிரதிநிதிகளென்றும், ஸ்திரீகளும் தேவபூஜைகளைச் செய்யலாமென்றும் சொல்லுகிறார்கள்.

எகிப்து தேசத்தில் மூன்று விதமான மதங்கள் பிரபலமாக இருக்கின்றன. அம்மூன்றினுள் முதல் வகுப்பார் அத்வைத மதஸ்தர்களே.

அந்த அத்வைதிகள் (Ptha) பிதா என்ற ஆதிகாரணக் கடவுளொன்று உண்டென்றும், அக்கடவுளே சராசரப் பிரபஞ்சமென்றும், சகல பொருள்களுங் கடவுளே யென்றும், (Nak Pa Nakai) I am The I am—நானே நானென்றும், ஆத்மா அழிவற்றதென்றும், மறு ஜெனன முண்டென்றும், ஆன்மாவுந் தேகமும் ஒன்றேயென்றுஞ் சொல்லுகிறார்கள்.

2-வது வகுப்பார், மூன்று வகையான திரிமூர்த்திகளுண்டென்றும், அம்மூர்த்திகளில் (Amon) ஆமன் ஆட்டுத் தலைச்சாமி; (Ken) கென், (Num) நம், (Seti) செட்டி, (Phath) பிடா, (Net) நெட், (Ra) ரா, (Sois) சோயிஸ் என்ற எட்டுப் பெயரும், அதிக மேன்மையான தேவர்களென்றும், அத்தேவர்களில் சிருஷ்டி கர்த்தராகிய (Amon) ஆமன் என்ற கடவுள், மண்ணிலும், விண்ணிலுமுள்ள தேவர்களுக்கு அரசரென்றும் (Mut) மட், (Setie) செட்டி, (Neith) நீத் என்ற பின்னும் சில தேவதைகள் சேர்ந்து 12-அம்மன்மார்கள்

மனுஷருக்கேற்ற சிரசுகளையுடைய இரண்டாந்தரத் தேவர்க ளென்றும், அவர்களோடு சூரிய, சந்திரர்கள் சேர்ந்தவைக ளென்றும், அவைகளுக்கு உதயமே பிறப்பென்றும், அஸ்த மிப்பே இறப்பென்றும், மேலும் மூன்றாந்தரமான தேவர் கள் மேற்சொன்ன தேவர்களின் புத்திரர்க ளென்றும், சரி யை, கிரியை, யோகம் முதலானவைகளால் ஜென்மசாபல் லியமாகுமென்றுஞ் சொல்லுகிறார்கள்.

3-வது வகுப்பு மதஸ்தர்கள் புராணங்களை யனுசரி த்து, ஒய்வற்ற பூஜைகளையும், சடங்குகளையும், பிராயச்சித் தங்களையும், புதுக்கோயில் தருமங்களையும் செய்கிறார்கள். அவர் கள்மதமாவது (O'Siris) ஒசிரிஸ் (விருஷபரூபமான) அப்புத் தேவன் ஆதியில் வானத்தையும் பூமியையும் படைத்தும், பிறகு (Osis) ஒசிஸ்—பசுமுகத்தேவியைப் படைத்து அதைப் புணர்ந்து சகலமும் படைத்ததாகவும், (Typhan) டைபான் என்ற எமப்பேய்க் கடவுள் (Osiris) ஒசரிஸ் என்ற கட வுளைக் கொன்றதாகவும், நியாயத்தீர்ப்பு நாளில் 42-தேவர் கள் சபையிலுட்கார்ந்து அவர்களில் (Thath) தாத் என்ற கடவுளால் விசாரணை செய்துவருவதாகவும், ஆனதுபற்றி வருஷத்தில் பல பிராணிகளைப் பாவத்திற்காகப் பலி கொடு ப்பதன்றியில், செத்த பிணங்களை (Osiris) ஒசரிஸ் என்ற கடவுளுடைய கோயிலில் 70-நாள் வைத்தும், அக்கோயி லில் கட்டப்பட்ட பெரிய திராசில் ஒவ்வொருவருஞ் செய்த புண்ணிய பாவங்களை நிறுத்துப் பார்த்தும் பிறகு புதைப்பதாகவும், பிராயச்சித்தத்தினால் மோக்ஷமுண்டென் றுஞ் சொல்லுகிறார்கள்.

இம்மட்டோ, வருஷத்தில்பலநாள்களில் செய்யுஞ்சடங் குகளுக்குக் கணக்கேயில்லை. புதிய தானியங்களுக்கும், ஆற்றில் வரும்வெள்ளத்திற்குஞ்சடங்குகள்கொஞ்சமா; (Osiris) ஒசரிஸ் (Sathis) சாதிஸ் என்ற தேவர்களுக்குப் பண்டிகை செய்யும் போது 70,000-ஜனங்கள் படகுகளில் ஏறிச் சகல வாத்தியங் களுடன் நயில் நதியில் போகும் பண்டிகையே மிக விநோத மானது. கடைசியாக இவர்கள் ஆத்மாவும் தேகமும் ஒன்றே என்றுஞ் சாதிக்கிறார்கள்.

## யூதேய தேசத்தின் மதம்.

இந்த தேசத்திற்கு வடமேற்குப் பாகத்தில் 140-மைல் நீளமும், 40-மைல் அகலமும், (Jordon) யோர்தான் முதலான நதிகளாலும், (Jerusalem) எருசலேம் முதலான நகரங்களினாலும் சிறந்த பலஸ்தினுவென்ற ஒரு அழகிய தேசமுண்டு. அத்தேசத்தை நோவாவின்பேரரும், (Kam) காமென்பவருடைய குமாரருமாகிய (Canan) கானன் என்பவர் படையெடுத்து வந்து பிடித்து வெகுநாளாண்டு வந்தமையால், அதற்கு (Canan) கானன் தேசமென்றும் பெயர். அந்த இராஜாவானவர் அத்தேசத்தைப் பதினொரு பாகங்களாகப்பிரித்துத் தம் பதினொரு குமாரர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்தார். அப்பதினொரு குடும்பத்தார்களும் 700 வருஷம் தம் கையாக்ஷியில் வைத்திருந்தார்கள். கேனியர், கேனீசியர், கதமோனியர், எத்திரியர், பெரிசியர், அரபியர், எமோனியர், கானனியர், கிர்க்காசியர், எபூசியர் என பத்துக்குடும்பத்தார் நிற்க மற்றொரு குடும்பத்தாரை நீக்கிவிடப்பட்டது. (Moses) மோசேயின் காலத்தில், முன்னிலும் எழு குடும்பத்தாரை நீக்கிவிடப்பட்டது. பிறகு மோசே, யோசுவா என்றவர்களால், (Jacob) யாகோப்பின் பன்னிரண்டு சந்ததியாராகிய ரூபன், காத், மனசே, யூதா, சிமயோன், தாண், பெஞ்சமின், இப்ராஹீம், ஈசாஷர், சேபுலோன், நவுதலி, ஆசேர், என்பவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்கப்பட்டது. இப்படிப் பல குடும்பத்தாராண்டு வந்ததனால், அந்த பலஸ்தீனு தேசத்திற்குப் பரிசுத்ததேசம், இஸ்ரவேல் தேசம், யூதேயாதேசம், வாக்குத்தத்ததேசமென்ற பல பெயர்களுண்டு. அத்தேசத்தார், ஆதி (Aryans) ஆரியவமிசத்தின் கிளையாகிய (Semitic race) செமிடிக் ஜாதியைச்சார்ந்தவர்கள். இவர்கள், பூலோகத்தில் பலவிஷயங்களில் புகழ்பெற்றவர்கள். (Vasco-de-gama) வாஸ்கோடிகாமா என்பவருக்கு 2000-ம் வருஷங்களுக்கு முன் ஆபிரிகா கண்டத்தைச் சுற்றி நாவா யாத்திரை செய்தவர்கள். மேலும் பூலோகத்தாருக்கு வர்த்தக விஷயத்தைக் கற்பித்ததன்றியில் (Alphabet) முதல் எழுத்துக்களையும், (Bible) பைபில் புத்தகத்தையும், (Koran) கொரான் புத்தகத்தையும் கொடுத்தவர்கள். இவர்களுடைய பாஷையின்பெயர்(Hebrew) இபுரு. அதில் ஸம்ஸ்கிருதமும், கிரேக்கு பாஷையுங் கலப்பு. அது கிறிஸ்து பிறப்பதற்குமுன் ஐந்தாம் நூற்றாண்டில்

ஏற்பட்டதாக நினைக்கப்படுகிறது. ஆதியில் யூதர்கள் (Ilu) இலு, (Bell) பெல், (Set) செட் என்ற விக்கிரகங்களைப் பூஜைசெய்தும், விபசாரங்குரூரமான கிருத்தியங்களைச்செய்து வந்தும், பிறகு நாளாவட்டத்தில் சீர்திருத்தம் பெற்றதாகத் தோன்றுகின்றது.

## நோவாவின் சரித்திரம்.

நோவா (Noah) என்பவர் அந்தத் தேசத்தின் வமிசத்தாராகிய லோத்தின் குமாரர். இவர் ஆதாமின் எட்டாவது நீதிப்பிரசங்கி. இவர் மகா புண்ணியாத்மாவாகையால், உலக முடிவை முன்னதாகக் கடவுளருளா லறிந்துகொண்டு அதில் தப்பிப் பிழைக்க ஒரு பெரிய பெட்டியைச் செய்தார். திருவாக்கின்படி ஜலப்பிரளயமான பிறகு தம்மூன்று குமாரர்களால் புவனத்திலெங்கும் ஜனவிர்த்தியாயிற்றும். இவர் உ - மு. 1500ஸு பிறந்து 950ஸு உயிரோடிருந்து 2 06ஸு மரணமடைந்தார். இவர் நக்ஷத்திரவணக்கம், கொலை, விபசாரம், களவு, மாமிசத்தை இரத்தத்துடன் உண்ணல், துரைத்தன தூஷணை முதலானவை கூடாதென்றும், ஒரு தெய்வத்தை வணங்கவேண்டுமென்றது முதலிய கற்பனைகளைக் கொடுத்தார். உ - மு. 1656ஸு கார்த்திகை மாதம் 17உ ஜலப்பிரளய முண்டாயிற்றும். 1657ஸு கார்த்திகைமீ 27 - ம் தேதி நோவா என்பவர் பேழையினின்று ஆர்மேனியா தேசத்திற்கு வந்து வாசஞ்செய்தார். ஜலப்பிரளயத்தைப் பற்றிய விவரம் (Kenrick's Pt. History) கென்ரிக்ஸ் பீடிரிக் சரித்திற் பார்க்கவும்.

## ஆப்ரகாமின் சரித்திரம்.

ஆப்ரகாம் (Abraham=Ftaher of Nation) விக்கிரகவேலைகளைச் செய்துவந்த (Terah) டேரா என்பவருடைய குமாரர். இவர் (Shem) ஷெம் என்பவருக்கு 9-ம் சந்ததி. உ - மு. 2008ஸு பிறந்த அராபிவீரன் உ - மு. 2083ஸு காலதேயாதேசம் கொடுப்பதற்குக் கடவுளிடம் வாக்குத்தத்தம் பெற்றவராம். உ-மு-2084ஸு எகிப்து தேசத்திற்குப் போய் உ - மு. 2092ஸு நாலு இராஜர்களை வென்று, (Salem Prince) சேலம் இராஜனாகிய (Melchisetck) மெல்கிசெடக் என்பவரால் ஆசீர்வதிக்கப்பட்டார். இவருக்கு உ-மு. 2094ஸு இஸ்ரவேல் என்ற குமாரன் பிறந்தான். உ - மு.

2108ஞ் சேராள் வயிற்றில் ஈசாக்கு என்ற பிள்ளை பிறந்தது. உ-மு. 2803ஞ் மரணமடைந்தார். இவர் தேவனிடத்தில் பிரத்திபக்ஷமாக நின்று பேசினராம். இவர் போதனை எல்லாங்கூடி ஒரு தெய்வபக்தியே.

---

## தாவீதுடைய சரித்திரம்.

தாவீது (David = பிரியம்) உ - மு. 2909ஞ் பிறந்த பெத்லகேம் பட்டணத்தில் யூதகோத்திர ஈசாயி என்பவருடைய குமாரர். இவர் சிற்ப, சங்கீத, சாஹித்திய இராஜதந்திர, பிரயாண, பக்த நிபுணர். இவர் விரோதியாகிய (Saul) சால் என்பவரை ஜெயித்து நீதிராஜ்ஜிய பரிபாலனஞ் செய்து வந்தார். (Abner) அபினர் என்றவர் இவருடைய நேசர். மகா வைதீகரானபடியால் தேவாராதனை முதலானவைகளைக் காலக்கிரமமாகச் செய்துவந்தார். தம் விரோதிகளால் துன்பப்படும்போது தெய்வத்தைப் பலவித பாடல்களால் பாடிவருவார். இவர் செய்த நூல்கள் யாவும் இனியவைகளே. அவைகளில் சகோதர நேசத்தைப்பற்றியும், தேவ பிரதாபத்தைப் பற்றியுமே சொல்லி யிருந்தாலும், பகைவருக்குப் பக்ஷமும் க்ஷமிப்புங் கிடையாது. (P. cxxxiii,—xxii, Plxxxix,—xc; cii,—ciii,—civ—xci, —cxxi,— முதலானவைகளைப் பைபிலில்பார்க்க). அவர் 40-வருஷமாண்டு தம் 71-ம் பிராயமாகிய உ. மு. 2980-ம்ஞ் பரமபதமடைந்தார். அவருடைய காலத்தில் ஜனங்கள் சுகமாக வாழ்ந்துவந்தனர்.

## சாலமோன் சரித்திரம்.

சாலமோன் (Solomon—சமாதானம்) உ. மு. 2971ஞ் தாவீது ராஜாவின் மனைவியாகிய (Bathasabu) பாத்ஸபா என்பவளுடைய வயிற்றில் பிறந்தவர். அவருடைய தம்பியாகிய (Adouijah) அடோனஜா என்பவர் (Jeab) ஜாப் என்பவரோடுகூடிப் பட்டத்துக்காகச் சண்டைக்குவந்தமையால், அவ்விருவர்களையுங் கொன்று இராஜாங்கத்தைப் பெற்றார். இவர் காலத்தில் (Judah) ஜூடா (Isreal) இஸரீல் என்றவர்கள சுகப்பட்டார்கள். எகிப்து (Egypt) தேசராஜனோடு சமாதானஞ் செய்து அவருடைய குமாரத்தியை விவாகஞ்செய்தார். பிரதி தினம் அவருக்கு 30-படிமாவும், 10-கொழுத்த மாடுகளும்,

100 ஆடுகளும், அனேகமான கோழிகளும் சமைக்கப்படும். அவருக்கு 40,000 குதிரை லாயங்களும், 12,000 குதிரைக் காரர்களுமுண்டு. அவருடைய புத்தி சாமார்த்தியங்களைப் பற்றி அராபியர் பலவிதமாக வர்ணிப்பார்கள். இவர்தான் ஆபிரிக்கா (Africa), ஸ்பெயின் (Spain), இந்தியா (India) முதலான தேசங்களில் வர்த்தக வியாபாரஞ் செய்யத் தொடங்கினார். பால்மைரா (Palmyra), தாட்மோர் (Tadmor) நகரைக் கட்டினார். தமக்கொரு திவ்யமான அரண்மனையுங் கட்டிக்கொண்டார். கி. மு. 1005ஆ எருசலேம் (Jerusalem) என்றவிடத்தில் சிங்க விருஷப ஸ்தம்பங்களோடு விசித்திரமான கோயிலைக் கட்டுவித்தார். அக்கோயிலை கி. மு. 448-ல் (Nehemiah) நிகிமியாவென்பவர் இடித்துக் கட்டினார். பிறகு கி. மு. 17-ல் (Herod) எரோட் என்பவரால் மறுபடியும் இடித்துக் கட்டப்பட்டது. சாலமோன் சிற்றின்பப்பிரியர். முதலில் விக்கிரகபூஜை முதலானவைகளால் சீர்கெட்ட நிலையிலிருக்கினும், பிறகு சிறந்த தத்துவ சாஸ்திரியானார். திவ்யமான 3000 பழமொழிகளையும், 1005 திவ்ய சங்கீதப் பாட்டுகளையும், வேறு சிலவற்றையும் இயற்றினார்.

## அவரியற்றிய நூல்கள்.

மஹா நீதியுள்ளவைகள். (Ecclesiastes) எகிலிசியாஷ்டிஸ் இவருடைய காலத்திற்குப் பிறகு எழுதப்பட்டது. (Book of job) ஜாப்நூல் மேன்மையானது. ஆனால் தாம் பாவியல்லவென்றார். அவர்தத்துவசாஸ்திரம், நாஸ்திகமும் போதிக்கின்றது. இவர் 3029ஆ மரணமடைந்தார். கி மு. 260ஆ (Alexandria) அலெக்ஸாந்திரியாவில்பழைய பைபிலைக்கிரேக்க பாஷையில் திருப்பப்பட்டு, கிரேக்கு (Olimpic Jupitor) ஜூபிதர் மதமே ஏற்பட்டபோதிலும் கி. மு. 141ஆ (Jehova) யேகோவாமதமே ஏற்றமடைந்தது. இவர் நீதிமொழிகளையும் உன்னதப் பாட்டையும் எழுதினார்.

## மோசே என்பவரின் சரித்திரம்.

மோசே (Moses) என்பவர் உ-மு. 2433ஆ பிறந்து ஆச்சரியமாய்க் காக்கப்பட்டார். (Pharoah) பார்வோன் வீட்

டில் சிலநாள் படித்து அவர் குமாரத்தியின் வளர்ப்புப் புத்திரானுர். சிலகாலம் ஆடுகளை மேய்த்தார். பிறகு 40 வருகாலம் எகிப்து தேசத்திற்குப் போய் அத்தேசத்தாருடைய நூல்களைக் கற்றுத்தெளிந்தார். மனுதர்மசாஸ்திரப்படி அநேக நியாயப் பிரமாணங்களைச் செய்தருளினுர். இவர் ஏகேஸ்வர பக்தியுள்ளவர்.

இவர் இராஜ ஆளுகை யுக்தியைத் தன் மாமனுராகிய (Jethro) ஜெத்ரோ என்பவரிடம் கற்ருர். இஸ்ரவேல் ஜனங்களின் அடிமைத்தனத்தை நீக்கியதன்றியில் அவர்களை வனாந்தரத்தில் நடத்தினுர். மகாநீதியுள்ளவர். படிப்பாளி. பரமபக்தர். நமது இந்துதேச ஆதிமகாமநுவைப்போல, வைதிக லவுகீக சட்டதிட்டங்களை உண்டாக்கினுர். தம்தேசத்தாருக்கும், மதத்திற்கும் பிராணனைக்கொடுக்கத் துணிந்தவர். இவர் ஐந்து (நியாயப்பிரமாணங்கள்) ஆகமங்களை (Pentateuch) எழுதினுர். அவற்றில் இஸ்ரவேல்சாதியார் கானுன் தேசத்தில்சேருமட்டுமுள்ள 2553 வருஷங்களின் சரித்திரங்களெழுதப்பட்டிருக்கின்றன. முதலாவதற்கு ஆதி ஆகமமென்று (Genesis) பெயர். அதில் 2369 வருஷகாலங்களுக்குள் நடந்த சங்கதிகள் எழுதப்பட்டிருக்கின்றன. அதை உலகசிருஷ்டிப்பைப்பற்றியதும், ஜலப்பிரளயத்திற்கு முன்னும், பின்னும் ஆபிரகாம் முதல் யாகோப் வரையில் வந்த சங்கதிகளோடுகூடிய நான்கு பிரிவுகளாக்கலாம். 2-வது (Exodus) நடந்தவை என்ற 145 வருஷம் நடந்த சங்கதிகளடங்கியிருக்கின்றன. 3 வது (Leviticus) ஆசாரிய ஆகமம் என்றதில் சடங்குகள், பிராத்தனையாதிகளடக்கம். 4-வது (Numbers) கணக்காகமம். அதில் 38 வருஷகாலத்திய சங்கதிகளுள்ளன. 5-வது (Dewteronomy) பிரமாண உறுதிப்பாடு என்றதில், அவருடைய சரித்திரம் முதலானவைக ளடங்கியிருக்கின்றன. இதன்றியில் சில சங்கீதப்பாட்டுகளும் எழுதினுர். கடைசியாக மறுஜெனனத்தைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லை. மேலும் புண்ணியபாவங்களுக்கு இந்த உலகத்திலேயும் நன்மை தீமைகளுண்டாகுமென்றும் சொல்லியிருக்கிருர். இராஜ அநீதி, லஞ்சம் முதலானவைகள் கூடாதென்றும், தமக்கு மனதை யடக்கும் சக்தியும், வீரத்தனமு மில்லாவிட்டாலும், கேவல பரிசுத்த திடசித்தனுகவிருந்து ஆதியில் எப்பிரேய பாஷையில் கட

வுளுக்கு (Elohim - Strong one, Bethel) எல்லோஹீம் சர்வ வல்லவன் என்று பெயரைமாற்றி (Jehovah) யாகோவா (The I am God- நான் கடவுள்) என்ற பெயரிட்டார். ஒரு கடவுளும், அவருக்குத் தாழ்ந்த பல சில்லரை தேவர்களுமுண்டென்றும், குருக்கள் கோயில்களையும், சடங்காதி பலிகளையும் ஸ்தாபித்தார். (Midian) மிதியன் என்ற இடத்தில் எரிகிற முட்செடியில் காக்ஷிபெற்றதன்றியில் கடவுளிடம் நேராகப் பேசினாராம். மேலும் தம் 120-வது வயதில் தேவனிடம் உத்தரவுபெற்றபடி மரணமடைந்து தேவனுலடக்கம் செய்யப்பட்டாராம். இஸ்ரவேல் ஜனங்கள் இவரை வணங்காதிருப்பதற்கே இப்படி செய்யப்பட்டதென்றனும் சிலர் அபிப்பிராயத்தில் வித்தியாசப்படுகின்றனர்.

யூதர்கள் தங்கள் வேதத்திற்குப் பலவித உரைகளைச் செய்கின்றனர். பாரம்பரிய நியாயங்களுக்கு (Mishna) மிஷ்னுவும், விருத்தியுரையாகிய (Gemeras) ஜிமிராசும் பேருரையும் (Talmud) தால்மத்தும் கட்டுக்கதைகளாகிய (Cabala) கபலாவும், அவர்களுடைய கொள்கைகளைக் காட்டினும், 12-ம் நூற்றூண்டில் புகழ்பெற்ற (Maimonidas) மெய்மானிடஸ் என்றவர் சிலபிரமாணங்களை ஏற்படுத்தினர். அதாவது அசரீரிகடவுள் ஒருவருண்டென்றும், தீர்க்கதரிசிகள் வார்த்தைகளுண்மை என்றும், மோசேசபிரதான குருவென்றும், மேசாயா வருவாரென்றும், இறந்தவர் மறுபடியும் எழுந்திருப்பாரென்றும் விளம்புவதேயாம்.

### உலகசிருஷ்டி.

யூதமதஸ்தர் உலக சிருஷ்டிப்பாகி 6000-ம் வருஷங்களாகிற தென்கிறார்கள். ஆதியில் கடவுள் வானத்தையும் பூமியையும் படைத்தபிறகு பிரகாசம், இருட்டு, ஜலம், சூரியசந்திராதிகளையும் தாபரஜங்கமப் பொருள்களையும் படைத்துக் கடைசியில் தம் சாயலில் ஆதாம் என்ற ஆதி மனுஷனையும், ஏவாள் என்ற ஆதி மனுஷியையும் படைத்து, ஏழாவதுநாள் ஓய்வாக இருந்தாராகையால் அந்த ஓய்வுநாளாகிய சனிக்கிழ

யையதினங் கடவுளை வணங்கவேண்டுமென்றும், அந்த ஆதி மனுஷர்களாகிய ஆதாம் ஏவாள் என்பவர்கள், ஏதேன்தோட்டத்தில்தடுக்கப்பட்ட பழத்தை உண்டதனால்,பாவிகளாகவே, அவர்களுடைய பிள்ளைகளாகிய உலகத்தாரும் பாவிகளாகி விட்டதாகவும், அந்தப் பாவ மன்னிப்புக்காகக் கடவுளை வணங்கவேண்டுமென்றுஞ் சொல்லுகிறார்கள்.

யூதர்கள் மனஸ்தாபத்தினாலும், மேசேயின் நியாயப் பிரமாணங்களை யனுஷ்டிப்பதனாலும் பாவமன்னிப்புக் கிடைக்கும் என்கிறார்கள். யூதமார்க்கத்தாரில் கடவுளை நீதியோடு துதிப்போரென்றும், விருத்த சேதனத்தினாலும், பலியினாலும், ஞான ஸ்நானத்தினாலும் துதிப்போரென்றும் இரண்டு பிரிவுகளுண்டு. இப்போதோவென்றால், காராயத், சசிதீம், சோகாரி, சாமாரியர், சீர்பெற்ற யூதர்களென்று ஐந்து வகுப்பினராக இருக்கின்றனர். இந்த யூதமதத்திலிருந்துஉண்டானதுதான் கிறிஸ்து மதம். இந்த கிறிஸ்து மதத்திற்குச் சொந்தமாகிய புதிய ஏற்பாடுடன், யூதர் மதநூலாகிய பழைய ஏற்பாடுஞ் சேர்க்கப்பட்டதினால், யூதமதமும் மணம் பெற்றது. ஆகவே இனி கிறிஸ்துமதத்தைப்பற்றி விவகரிப்போம்.

## கிறிஸ்து மதம்.

இயேசுகிறிஸ்துவை விசுவாசித்து, அவரால் பாவமன்னிப்பை யடைந்து, அவர் மூலமாகப் பரமபிதாவை யடைய வேண்டுமென்னும் மதத்திற்குக் கிறிஸ்துமதமென்று பெயர். இந்த மதத்தை ஏற்படுத்தியவர் இயேசுகிறிஸ்து நாதரே.

## இயேசுகிறிஸ்துநாதருடைய சரித்திரம்.

இவர் உ - மு 4000ஆ டிசம்பர் மாதம் யோசேப்பு என்ற ஒரு புருஷருக்கு நியமிக்கப்பட்டிருந்த மரியாள் என்னுங் கன்னியின் வயிற்றில் முன் தீர்க்கதரிசிகள் திருவாக்கின் படி ஜனித்தார். இவர் இப்படி அற்புதமாகப் பிறந்ததற்கு, கடவுளிடமிருக்கும் காபிரியேல் என்னும் தேவதூதன் மரியாளுக்கு முன்வந்து தேவகட்டளையின்படிப் பரிசுத்த ஆவிவந்து

பரிசுத்தமான பிள்ளையைப்பிறப்பிக்குமெனச் சொன்னதாகப் பலர் கருத்து. மோசேயின் பிரமாணத்தின்படி இந்த இயேசு வானவர் பிறந்த எட்டாம்நாள் சுன்னத்தடைந்தும், இயேசுவென்ற நாமத்தைப் பெற்றும் நாற்பதாம்நாள் தேவாலயத்திற் பிரதிஷ்டை யாக்கப்பட்டார். இவர் அற்புத பிறவியானபடியால், தமது பன்னிரண்டாவது வயதிலேயே தேவாலய போதகர்களோடு வியக்கும்படி மதவிஷயமான தருக்கங்களைச் செய்து வந்தார். இவர் முப்பது வயதாகவே வெளியரங்கமாகப் பரம அபிஷேகம்பெற்று, இந்த உலகத்தின் அநித்திய வாழ்வைப்பற்றியும், மானுஷீக தருமத்தைப்பற்றியும், பாவ விமோசனத்தைப்பற்றியும், பகவான் விஷயத்தைப்பற்றியும் பகிரங்கமாகப் பிரசங்கஞ்செய்தும், பரிபூரண பரமபிதா பக்தியைப்பற்றிப் போதனை செய்தும், போதித்தபடி தாமும் குறைவின்றி நடந்துவரும்போது, இவருடைய பன்னிரண்டு சீஷர்கள் இவரது கோட்பாட்டை யனுசரித்து இவருக்கு உதவியாக நின்றார்கள். இவருடைய கோட்பாடானது பராபரவஸ்துவாகிய கடவுளைப் பூரண இருதயத்தோடும், பூரண பக்தியோடும், பூரணமனதோடும், பூரணசக்தியோடும் விசுவாசிப்பதும், நமது அயலாரை நம்மைப்போல் சிநேகிக்க வேண்டுமென்பதுமே யாகையால், அக்காலத்திலிருந்த அநேக அஞ்ஞான யூதர்களுக்கு இவர்பேரில் கோபமுண்டாகிப் பல விதமாக வருத்தப்படுத்தப்பட்டும், கடைசியாக யூதாஸ்காரியோத் என்னும் சீடனால் காட்டிக்கொடுக்கப்பட்டும், சிலுவையில் அறையப்பட்டுங் கொல்லப்பட்டார். அப்போது இவருக்கு வயது முப்பத்துமூன்று வருடம், மூன்றுமாதமாக விருந்தபோதிலும் பரமபக்தரும், பரமகிருபாளுவுமா யிருந்தபடியால் தம்மைச் சிலுவையில் அறையும்போதுகூடத் தம்மைக் கொல்லும் பாதகர்களின்மேல் பச்சாத்தாபத்தோடு,பகவானைப் பார்த்து "பிதாவே! அவர்களை மன்னியும்; ஏனெனில், தாங்கள் செய்கிறதின்னதென அவர்கள் அறியார்கள்" என்றும், "என் தேவனே! என் தேவனே! நீர் என்னைக் கைவிட்டது ஏன்?" என்றும் முறையிட்டார். பிறகு இறந்த மூன்றாம்நாள் உயிரோடெழுந்து, தமது சீடர்களுக்குப் புத்திமதிகளைச் சொல்லிப் போதித்து உலகமெங்குஞ் சென்றுசகல ஜனங்களுக்கும் சுவிசேஷத்தை உபதேசஞ் செய்யும்படி கட்டளையிட்டுப் பரலோகத்துக்குப் போனாராம். இவர் கலியாணஞ் செய்துகொள்ளாமல் உள்ளநாள் உள்ளவரையில் பிரம்மசாரி

யாகவிருந்து காலங் கழித்தார். (இவரது தகப்பனார் தச்சு வேலையைச் செய்துவந்தபடியினால் இவர் ஏழையாகவிருந்து, அநேக வியாதியஸ்தர்களுடைய வியாதிகளை நீக்கி அநேக அற்புதங்களைச் செய்துவந்தாராம்.) இவர் ஆதாம், மானுவேல், மேசயா என்ற பலபெயர்களால் புகழப்பட்டு வந்தாலும், இயேசுகிறிஸ்து என்னும் பெயரே பெரும்பான்மையோரால் கொண்டாடப்பட்டு வருகிறது. இயேசு அல்லது யோசுவாவென்பது எபிரேயபாஷையில் இரட்சிப்பவரென்று பொருள் ஆகும். கிறிஸ்து என்பது கிரேக் பாஷையில் அபிஷேகம் பண்ணப்பட்டவரென்று பொருளாம். சாதாரணமாக இவரைத் தேவ அவதாரமென்று சொல்லுகிறார்கள்.

## இயேசுகிறிஸ்துநாதரைப்பற்றி ஒரு சாஸ்திரியின் கருத்து.

இயேசுகிறிஸ்துநாதருடைய அங்கவர்ணனை:— யூதேயர் தேசத்தில் அபூர்வலக்ஷணமுள்ள ஒருவர் இருந்தார். இவருக்கு ஏசுகிறிஸ்து என்று பெயர். சீர்திருத்தமற்ற யூதர் இவரைத் தீர்க்கதரிசி என்று எண்ணினார்கள். இவர் அபிவிர்த்தி செய்யும் சமயக் கொள்கைகளை அங்கீகரித்தவர்களோ, இவர்தாம் அழிவற்ற தேவசுதன் என்று அர்ச்சித்தார்கள். இவரிடத்தில் விளங்கிய சக்திக்குச் சமானமில்லை; இவர் இறந்தவர்களை உயிரோடு எழுப்பினாராம்; வியாதியஸ்தருக்கு ஒரு வார்த்தை சொல்ல, அவர்கள்மேல் தொட, தக்ஷணமே எவ்வித வியாதியும் சொஸ்தப்பட்டது. இவர் நீண்டு சிறந்த சரீரமும், வசீகரமான தோற்றமும், கண்ணியமுமுடையவர். இவர் சிரசின் ரோமம் வளர்ந்து மடிந்து காதுவரையில் நீண்டு சுருண்டு தோளிற் படிந்திருந்தது. தலையில் தொடுத்திருந்த ரோமத்தைப் பார்த்தால், அது நசரேயர் சிரசின் அணிக்கு ஒப்பாகும். மழமழப்பாகிய இவர் நெற்றி அகன்றிருக்கும். இவர் கனனத்தில் முட்செவ்வந்திப் பூவைப் போலப் பொட்டுப்பொட்டாகச் சிவந்திருக்கும் மறுவொழிய வேறு மறுவில்லை. இவருடைய வாய், மூக்கு இவற்றின் அந்தத்தை என்னவென்று வர்ணிப்போம். தலைமயிர்க்கேற்க இவர் தாடியும் நெருங்கி வளர்ந்து கவையாகப் பிரிந்திருந்தது. கலக்கமின்றித் துலங்கித் தோன்றிய இவர் கண்ணைப் பார்க்குமிடத்தில் இவர் அடக்க முள்ளவரென்பது விளங்கும். இவர் குற்றஞ் செய்தவர்களை அதிகாரமுடையவர்

போலக் கண்டித்து, அவிவேகிகளுக்குச் சாந்தமாய்ப் புத்தி சொல்வார். இவர் மதுரவசனத்தைக் கேட்கும் எவர்கள் மனமும் உருகி வசப்படும். இவர் பெருந்தகைமைக்கேற்க வாக்கும் கிரியையும் யோக்கியமாயிருந்தன. இவர் முகத்தில் புன்னகை தோன்றக் கண்டதில்லை; பெரும்பாலும் கண்ணீர் விட்டழுவார். அழக்காண்பவர்கள் மனமுருகித் தாமுங் கண்ணீர் விடுவார்கள். பூலோகத்தில் இவரைப்போலச் சிறந்த ஒழுக்கமும் திவ்விய பரிபூரணமுமுடையவர்களில்லை.

இவர் உலகத்தாரை இரட்சிக்கிறதற்கு அனுப்பப்பட்டவராகையால் அப்போஸ்தலர் என்றுஞ் சொல்லுவதுமுண்டு. இவர் பிறந்தநாள் முதற்கொண்டுதான் 1911 - ஞ்மாகிய கிறிஸ்துசகாப்தம்வழங்கிவருகிறது. இவர் மகாபரிசுத்தாத்மாவாகையால், அநேகர் சீடர்களாகி, இவர் மதசித்தாந்தத்தையுலகத்தில் பிரசங்கஞ்செய்ய ஆரம்பித்தார்கள்.

இப்படிப்பட்ட சீடர்களில் பிரதானமானவர்கள் பன்னிரண்டு பெயர். அவர்களுக்கும் அப்போஸ்தலர்களென்றே பெயர். அவர்கள் யாரெனில்,

1-வது பேதுரு—(Peter) அல்லது சீமோன். இவர் கலிலேயா தேசத்தில் பெதுசயிதா என்னும் ஊரிலிருக்கும் யோனு என்பவருடைய புத்திரர். இவர் வாலிபராயிருக்கும்போது யூதமார்க்கத்தில் வெறுப்படைந்து கப்பர்நாகூமூரிலே ஒரு பெண்ணை விவாகம்செய்து, மீன் பிடிக்கிற ஜீவனம் பண்ணிவந்தார். அப்போது அந்திரேயா என்னும் தன் சகோதரனால் இயேசுநாதரிடம் கூட்டிக்கொண்டு போகப்பட்டார். இவரைப் பக்தி சன்மார்க்கத்திலே சிறந்தவரென்று இயேசுநாதரும் கொண்டாடினார். இவர் யூதேயா, சின்ன ஆசியா, பாபிலோன், ரோமாபுரி முதலானவிடங்களில் பிரசங்கஞ்செய்து பொந்து முதலானவிடங்களிலுள்ள கிறிஸ்தவர்களுக்கு நீதி விஷயமாகவும் மத விஷயமாகவும் நிருபங்களை யெழுதினார். இவருடைய மனைவியை விசுவாசத்தின் பேரில் கொன்றுலும் இவரையுந் தலைகீழாகச் சிலுவை மரத்திலறைந்து கொன்றார்கள்.

2 - வது அந்திரேயா (Andrew)—இவர் பேதுருவின் தம்பி. இவர் சித்தியாதேசத்தைச் சார்ந்த கிரேக்கு தேசத்தி

லிருக்கும் அகாயாதேசத்திற்போய்ப் பிரசங்கஞ்செய்து அநேகரைக் கிறிஸ்தவர்களாக்கி அகாயாதேசத்தின் அரசனையும் அவன் தம்பியையும் தமது மதத்தில் சேர்த்துக்கொண்டதற்காகச் சிலுவைமரத்திலறையப்பட்டுத் தைரியத்தோடு மரணமடைந்தார்.

3-வது யாக்கோப் (James)—இவர் எருசலேம் யூதேயாதேசத்தில் பிரசங்கஞ்செய்தவர். இவரைக்கொலைக்களத்திற்குக் கொண்டுபோகும்போது ஒருவர் அவரைப் பார்த்துத் தான் செய்த குற்றத்தை மன்னிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ள, இவரும் சம்மதித்து முத்தமிட, இருவரும் சிரச்சேதம் பண்ணப்பட்டார்களாம்.

4-வது யோவான் (John)—இவர் கலிலேயா நாட்டிலுள்ள பெதுசாய்தா ஊரில் மீன்பிடிக்கும் செபேதேயுவின் குமாரர். இவருடைய குணங்களைக்கண்டு இயேசுநாதரே தமது சீடராக்கிக்கொண்டார். இவர் 50 வருடம்வரையில் எருசலேம் நகரில் உபதேசஞ் செய்துவந்து இயேசுநாதருடைய தாயாகிய மரியம்மாள் இறந்தபிறகு சின்ன ஆசியாவுக்குப் போய் ஏழு பட்டணங்களில் சபைகளை உண்டாக்கி, தோமித்தியா என்னும் அரசரால் துரத்தப்பட்டு, இயேசுநாதர் தரிசனை பெற்று, தமது 100-வது வயதில் சமாதானத்தோடு இறந்தார். இவரும் மதவிஷயமாகச் சில நிருபங்களை எழுதினார்.

5-வது பிலிப்பு(Philip)-இவர் சீத்தியா என்னும் தார்த்தாரி தேசத்தில் நெடுநாளிருந்து பிரிகியா நாட்டைச்சார்ந்த இயேராபுரி பட்டணத்தில் கிறிஸ்து மதத்தைப்பற்றிப் பிரசங்கஞ் செய்யும்பொழுது அந்த ஊரார் இவரைத் தூக்கிற்போட்டார்கள்.

6 - வது பர்த்தோலேமியு—இவர் பார்சீகம் முதலான தேசங்களில் கிறிஸ்து மதத்தைப் பரவச்செய்ததாகத் தோன்றினும் இவர் சரித்திரம் விவரமாகத் தெரியவில்லை.

7 - வது தோமார் (Thomas)—இவர் ஏசுநாதர் உயிர்த்தெழுந்ததைப்பற்றி நம்பாமலிருந்தபடியால் ஏசுவானவர் இவருக்குப் பூரணசாக்ஷி கொடுத்தாராம். இவர் கி. பி. 82

ஷத்திலே இந்துதேசத்தில் வந்து கிறிஸ்து மதத்தைப் பிரசங்கம் பண்ணும்போது பிராமணராலே கொன்றுபோடப் பட்டாரென்று மலையாளத்திலுள்ள சிரியான் கிறிஸ்தவர்கள் சொல்லுகிறார்கள். இவர் இலங்கைத்தீவிலும், கொச்சி, கொல்லம் முதலான இடங்களிலும் போய்க் கிறிஸ்துமதத்தைப்பற்றிப் பிரசங்கஞ் செய்தாராம்.

8-வது மத்தேயு (Matthew)-இவருக்கு லேவி யென்றும் பெயருண்டு. இவர் பாக்றியா தேசத்திலிருந்து எத்தியோப்பியாவுக்குப்போய் விக்கிரகாராதனைக்காரரைவென்று இயேசுநாதர் இறந்து 15 வருடமானபோது எபிரேய பாஷையில் சுவிசேஷத்தை யெழுதினார். இந்த சுவிசேஷம் நான்கு வகுப்புகளாக வகுக்கப்பட்டு ஏசுநாதருடைய சரித்திரத்தை விவரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

9-வது யாக்கோபு (Jacop)-இவர் அலிபேயி என்பவருடைய குமாரர். இவர் இயேசுநாதருக்கு பந்துவாயும் மஹா நீதிமானும் பக்திமானும் இருந்து ஒருநாள் பராபரனைப் பார்த்துப் பிரார்த்தனை செய்கையில் ஒருவன்பெரியதடியினால் அடித்துக் கொன்றுபோட்டான். இவரும் மதவிஷயமாகச் சில நிருபங்களை எழுதினார்.

10-வது ததேயு—இவர் சரித்திரம் விவரமாகத் தெரியவில்லை.

11-வது சீமோன்—இவர் சரித்திரமும் விவரமாகத் தெரியவில்லை.

12-வது யூதா (Jude)—இவர் சின்ன யாக்கோபினுடைய சகோதரரும், அலிபேயு என்பவருடைய குமாரரும் இயேசுநாதருக்குப் பந்துவுமாயிருந்தார். இவர் யூதேயா, அரேபியா, சிரியா, மெசபதேமியா, பெரிசியா முதலான தேசங்களில் பிரசங்கஞ்செய்து வரும்போது பார்சுதேசத்தில் கொலை செய்யப்பட்டார்.

இந்த அபோஸ்தலர்கள் கி. பி. 52-ம் வருடத்திலே எருசலேம் பட்டணத்தில் ஓர் ஆலோசனை சங்கமாகக் கூடி ஓர் சமயாலோசனை சபையை ஸ்தாபித்து கிறிஸ்து மதத்தைப் பலவிதத்திலும் உலகத்தில் பரவச்செய்தார்கள்.

இவர்களுடைய நடவடிக்கைகளுக்கு ஆக்ட்ஸ் என்று பெயர். இந்த ஆகமம் கி. பி. 63-ம் வருடத்திலே லூக்கா என்பவராலே தேயோப்பிலு என்பவருக்கு யெழுதப்பட்ட நிருபங்களே. இவைகளன்றியில் அநேக விசுவாச பிரமாணங்களுண்டு. மேலும் அபோஸ்தலர்களுக்குதவியாகப் பலதேசங்களில்போய்ப் பிரசங்கஞ்செய்த சுவிசேஷகர் என்ற சிலபக்திமான்கள் இருந்தார்கள். அவர்களில் பிரதானமானவர்கள் மத்தேயு, மார்க்கு, லூக்கா, யோவான் என்பவர்களே. இவர்களில் இருவர் அப்போஸ்தலர்களே. இவர்கள் இயேசுநாதருடைய சரித்திரத்தையும், பாவிகளுடைய மீட்புக்கடுத்த சந்தோஷமான சங்கதிகளையும் எழுதிவைத்தார்கள். சுவிசேஷமென்றால் சந்தோஷமான சேதி என்று பொருள்.

## ஞானஸ்நானம் அல்லது கிறிஸ்து மார்க்கதீக்ஷை.

கிறிஸ்துநாதர் காலத்தில் சுன்னத்து செய்கிற வழக்கம் அதிக பிரபலமாயிருந்தது. கிறிஸ்துநாதர் அதைத் தடுத்து, ஞான ஸ்நானத்தைப் பிரபலமாக்கினார். ஞானஸ்நானமெனில் தண்ணீரினாலே புறம்பானஸ்நானமும், பரிசுத்த ஆவியினாலே உள்ளான ஸ்நானமும் உண்டாகிறதாம். இயேசுநாதர் பரலோகத்திற்குப் போவதற்கு முன்னமே தமது சிஷர்களை நோக்கிக் கட்டளையிட்டபடி இன்றளவும் நடந்துவருகிறது. பூர்வகாலத்தில் ஞானஸ்நானம் செய்யப்பட்டவர்களை ஒரு ஆற்றில் அல்லது குளத்திற் கொண்டுபோய்க் குளிப்பாட்டிக் குளித்துக் கரையில் வந்தபின்பேரில் பழய உடுப்புகளை நீக்கி வெண்மையான உடுப்புகளைக் கொடுத்துத் தேவாலயங்களுக்குக் கூட்டிக்கொண்டு போய்ப் பிரதிஷ்டை செய்வது வழக்கம். ஐரோப்பா முதலான தேசங்களில் குளிரதிகமானபடியால் குளிப்பாட்டும் வழக்கத்தைத் தவிர்த்துத் தலையில் மாத்திரம் தண்ணீரைத் தெளிக்கும் வழக்கம் பிரபலமாகிவிட்டது. ஞானஸ்நானத்தில் ஞானத் தாய் தகப்பன்மார் ஞானஸ்நானஞ் செய்துகொள்ளுகிறவர்களுக்குக் கிறிஸ்து மார்க்கத்தைப் போதித்து, கிறிஸ்தவர்களாக வளர்ப்போமென்று திருச்சபைக்கும் பராபரனுக்கும், வாக்குத் தத்தஞ் செய்து தரவேண்டும். மேலும் ஞானஸ்நானம் செய்துவைக்கிறவர்கள் கிறிஸ்துமத கண்காணிமாரும் அவர்களால் ஏற்படுத்துகிற குருக்கள்மாருமே தகுந்தவர்களாவார்.

## இராப்போஜனம் அல்லது நற்கருணை.

இயேசுநாதர் பரலோகத்திற்குப் போவதற்கு முன்பு அப்போஸ்தலர்களாகிய பக்திமான்களைக் கூட்டி இராத்திரியில் பரிசுத்த பந்தி உட்காரவைத்து ஞான போஜனத்தை யூட்டி வந்தார். பிறகு அவர் பரமண்டலத்துக்குப் போகும் போது தம்முடைய மாமிசத்தை அப்பமாகவும், தமது இரத்தத்தை இரசமாகவும் உண்ணக்கடவீரென்று தத்துவார்த்தமாகச் சொன்னதைக் கிறிஸ்தவர்கள் விசுவாசித்துத் தேவாலயங்களுக்கு அப்பத்தையும் இரசத்தையும் காணிக்கையாகக் கொடுத்து, அவ்விடம் குருமார்கள் தோத்திரம் பண்ணிக் கொடுக்க அந்த அப்பத்தையும் இரசத்தையும் உண்பார்கள். மீதியானதை வீட்டிலிருக்கும் வியாதியஸ்தர்களுக்குக் கொண்டுபோய்க் கொடுப்பார்களாம். இந்த அப்பத்தையும் இரசத்தையும் வாங்கி உண்ணைப்பட்டவர்கள் பரிசுத்தவான்களாயும் பக்திமான்களாயும் இருக்கவேண்டும். ஏனெனில், இயேசுவானவர் மஹா பரிசுத்தராக இருந்தபடியால் அவரை நினைத்து அவருடைய மாமிசமாகவும் இரத்தமாகவும் பாவித்து அப்பத்தையும் இரசத்தையும் சாப்பிட்டவர்கள் அவரைப்போலவே இருக்கவேண்டு மென்பதேயாம்.

## கிறிஸ்து சமயத்தின் பிரிவுகளும், உட்சமயங்களும்.

போர்காஸ் முதலான இராஜர்களுடைய காலத்தில் ரோமாபுரியிலேயும், கனிஸ்தாந்துபுரியிலேயும் இருந்த போதகர்களுடைய லௌகிக நடக்கைகளினாலே புறம்பான கிறிஸ்து சபை அல்லது மேற்குச்சபையென்றும், கிழக்குச்சபை யென்றும், பிறகுலூதர்காலத்தில் புரொடெஸ்டாண்டு சபை என்றும், ஆகமூன்றுசபைகள் கிறிஸ்துசமயத்திலுண்டாயின. மேலும் எபிஸ்கோபிலியன் (Episcopalian) என்ற பிஷப்புகளாலும், பிரெஸ்பிடேரியின் (Presbyterian) என்ற பெரியோர்களாலும் இன்டிபெண்டெண்ட்ஸ்(Independents)என்றசாதாரண ஜனங்களாலும் தேவாலய ஆளுகையை நடத்திவர மூன்றுவித கண்காணிகளையும் ஏற்படுத்தப்பட்டதன்றியில், அக்காலத்திலேயே கடவுளை வணங்கும் விஷயத்திலும் திரியேகத்துவர் (Trinitarians)என்றும், அரியான்கள்(Ariads)என்றும், ஏகீசுவரவாதிகள் (Uniterians) என்றும் வகுக்கப்பட்ட தன்றி

யின் பாவமன்னிப்பைப்பற்றி அர்மீனியர் (Arminian) என்றும் கால்வினிஸ்டுகள் (Calvinist's)என்றும், ஏகீஸ்வரவாதிகள் என்றும், பின்னும் மூன்றுவிதமாக வகுக்கப்பட்டார்கள். இப்போதோவெனில் கிறிஸ்து மார்க்கத்துக்குள் 250 - க்கு மேலான உட்சமயங்களுண்டு. அவைகளிற் பிரதானமானவைகளை இதனடியிற் காட்டுகின்றோம்.

## ரோமன் சபை.

## THE ROMAN CHURCH.

இந்தச் சபையாருக்குத்தலைமையானவர்போப்என்பவர். இவர் கட்டளையின்படி சர்வமும் நடத்தப்படவேண்டும். இந்த ரோமன் மதஸ்தர்களுக்கும் மற்ற சுவிசேஷ மார்க்கத்தாருக்கும் இருக்கிற பிரதான வித்தியாசங்கள் ஆறு.

1-வது, வேதத்தோடே அப்போ குறிப்பாய்ப் புஸ்தகங்களும் சேர்க்கப்படலாமென்றும், வேத வாக்கியங்களுக்குத் தங்கள் சுயபாஷைகளில் திருப்பப்பட்ட வேதாகமங்களை வாசிக்கக்கூடாதென்றும், ஆனால் குருக்களுடைய அனுமதியினால் வாசிக்கலாமென்றும், 2 - வது மறுபாஷையில் தேவாராதனை நடப்பிக்கிறதும், 3-வது மரித்தோர்களைக் குறித்து விண்ணப்பம் பண்ணுகிறதும், 4-வது குருவினிடத்தில் பாவ சங்கீர்த்தனம் பண்ணுகிறதும், 5-வது குருக்கள்மார் விவாகம் செய்யாமலிருக்கிறதும், 6-வது லௌகீக விஷயங்களுக்குள் குருக்கள்மார் பிரவேசிக்கிறதுமாம்.

மேலும் ரோமன் சபையாருக்குள் சில விசேஷகாரியங்கள் வழங்கி வருகின்றன. அதாவது போப் என்பவருடைய வார்த்தையை அருள்வாக்காகக் கொண்டாடுதலும், மரியம்மாள் முதலிய அர்ச்சியசிஷ்டர்களை வணங்குதலும், பிதா குமாரன் பரிசுத்த ஆவி முதலான பூஜைகளும், பாவமன்னிப்பு திருச்சபை கற்பனைகளின்படி ஞாயிற்றுக்கிழமைகளிலும் திருநாட்களிலேயும் முழுபூஜை காண்கிறதும் திருச்சபை கட்டளை நாள்களில் ஒருசந்தி உபவாசமாயிருத்தல், வருஷத்துக்கொருதரமாகிலும் பாவசங்கீர்த்தனம் பண்ணுதல், பாஸ்கு திருநாளிலேயும், நீறு தரிக்கிற நாள் துவக்கி இயேசுநாதர் மோக்ஷத்துக்குப் போன திருநாட்குள்ளாக நல்ல ஆயத்தத்துடன் நட்கருணை யுட்கொள்ளல், குருக்களை சம்ரக்ஷணை பண்ணல், விலக்கப்பட்ட நாள்களிலும் இணைய முறைகளி

லும் கலியாணஞ் செய்யாதிருத்தல், அர்ச்சிய சிஷ்ட பண்டங்களை வைத்து வணங்குதல், மற்றும் இந்துக்களைப்போல் ஜாதிபேதம் முதலானவைகளைப் பாராட்டி வருதலேயாம்.

## கிரேக்கு சபை.

## THE GREEK CHURCH.

பாபு என்ற பாப்பானவர் திருச்சபைக்குத் தலைவரல்லவென்றும், நற்கிரியையில் உபயோகப்படுத்தும் அப்பமும், திராக்ஷப்பழ ரசமும், கிறிஸ்து நாதருடைய சரீரமும், இரத்தமுமாகமாட்டாதென்றும், பரிஜனங்களுக்குப் பாத்திரத்திலிருக்கும் திராக்ஷப்பழரசத்தையும் கொடுக்கவேண்டுமென்றும், உத்தரிக்கிற ஸ்தலம் இல்லையென்றும், வேதபுஸ்தகத்தைத் தன்சுயபாஷையில் வாசித்துப் போதிக்கவேண்டுமென்றும், குருப்பட்டமுடையோர் பண்ணும் விவாகத்துக்குத் தடைபண்ணக் கூடாதென்றும், பாவநிவாரணத்தைக் கிரயத்துக்கு விற்பது கூடாதென்றும், பரிசுத்த ஆவியானவர் சுதனிடத்திலே யல்ல, சுதனைக்கொண்டு பிதாவினிடத்தில் நின்று புறப்படுகிறாரென்றும் சொல்லுவதேயாம்.

## புரொடெஸ்டாண்டு சபை.

## THE PROTESTANTS.

கி. பி. 1529 வருடத்திலே லூதருடைய கொள்கையை அனுசரித்தவர்களுக்கு ஆர்மேனியாதேசத்தில் இடப்பட்ட தாம். இது பொதுவாகப் பெரும்பான்மையான கிறிஸ்தவர்களுக்கும் வழங்கி வருவதுண்டு.

## லூதர் மதம்.

மார்ட்டின், லூதர் என்பவருடைய கொள்கையை யனுசரிப்பவர்களுக்கு லூதர் மதஸ்தர் என்று பெயர்.

## லூதருடைய சரித்திரம்.

லூதர் என்பவர் 1483-ம்வருடத்தில் சக்சோனி தேசத்தில் ஐஸ்லிபென் ஊரில் பிறந்தவர். இவர் தகப்பனார் கல்தச்சு வேலையைச் செய்பவரானபடியால் அதிக ஏழையாயிருந்தார். ஆகவே லூதருடைய ஜெபத்தை மெச்சிய ஓர் புண்ணியவதி அவருக்குஅன்னவஸ்திரங்கொடுத்துப்பாதுகாத்தாள். 1503-ம்

வருடத்திலே சாஸ்திரிபட்டம் பெற்றும், பிறகு உலகத்தை வெறுக்கச் சித்தமாகி 1505 வருடம் அகுஸ்தீனின் சந்நியாச மடத்திற்குப்போய் வேதாகமங்களைப்படித்தும், 1509-ம்வருஷத்திலே வேதாகம சாஸ்திர உபாத்தியாயராகியும் 1512-ம் வருஷத்திலே வேதசாஸ்திரப் பட்டத்தையும்பெற்றார். இப்படியிருக்க, 1517-ம் வருஷத்திலே சிங்கராயர் என்ற போப்பானவர் ஜனங்களை ஏமாற்றிப் பாவமன்னிப்பைக் கிரயத்துக்கு விற்றுவரச்சே இவர் அது அக்கிரமமென்று தடுத்தார். 1518-ம் வருஷத்திலே இவருக்குச் சிலர் உதவியாக வரவே, பாப்பு மார்க்கத்தைக் கண்டித்து எழுதினார். உடனே பாப்புகளுக்குக் கோபமுண்டாகி லூதரைப் பலவிதத்திலும் தர்க்கத்துக்கு அழைத்து சிக்ஷிக்கப் பிரயத்தனப்பட்டும் காரியமுடியாமையால் லூதர் மார்க்கத்தாரைப் பதிதரென்று மதப்பிரஷ்ட ஜாதிபிரஷ்டத்துவ ராக்கினார்கள். 1528-ம் வருஷத்தில் விடன்பர்க்குக்குப்போய் அலவங்கா பாஷையில் திருப்பப்பட்ட புதிய ஏற்பாட்டை அச்சில் பதிப்பித்தார். 1525-ம் வருஷத்திலே காத்தரீனை என்னும் கன்னிகையைக் கண்டு விவாகஞ் செய்துகொண்டார். 1546-ம் வருஷம் மாசிமாதம் 18-ம் தேதி இவர் பரமபதமடைந்தார். அப்போதிவருக்கு வயது-63.

## லூதரின் சபை.

### THE LUTHERAN GHURCH.

இவர்கள் வேதமே விசுவாசத்துக்கும், நடக்கைக்கும் உரிய பிரமாணமென்றும், கிரியைகளினாலன்றி விசுவாசத்தினாலேயே மனிதர்கள் நீதிமான்களாகிறார்களென்றும், விசுவாசித்து ரோமச் சபையில் அக்கிரமங்களென்று தங்களுக்குத் தோன்றுகின்றவைகளை நீக்கிவிடவேண்டுமென்றுஞ் சொல்வதன்றியில், ஈப்ஸ்கோபில், பிரசிபிடேரியன் சபைகளிலுள்ள சில ஞாயங்களை எடுத்துக்கொண்டு குருக்கள்மாரை நடத்துகிறதற்கு விசாரணைக்காரர்களை நியமிக்கிறார்கள். சபை விசாரணைக்காக அந்தந்தக் கிராமங்களில் பிரசிபிடேரிய சபையாரைப்போல் சங்கங்க ளுண்டாயிருக்கின்றன.

## பாப்டிஸ்டு சபையார்.

### THE BAPTISTS.

பிராயமுதிர்ந்தவர்களுக்குமாத்திரம் ஞானஸ்நானத்தைக் கொடுத்து, அதை விசேஷித்த கொள்கையாகக் கைக்கொண்டிருக்கிற சபையாருக்கு பாப்டிஸ்டுகள் என்று பெயர். அதாவது:—சிறு பிள்ளைகளுக்கு ஞானஸ்நானங் கூடாதென்பதே. இது விஷயத்தைத் தவிர மற்ற விஷயங்களிலெல்லாம் இண்டிபெண்டென்ஸ் சபையாரைப்போலிருக்கிறார்கள். இவர்களுக்குள் அனுபாப்டிஸ்டு (Anabaptists), ஏழுநாள் பாப்டிஸ்டு (7th day Baptists), விசேஷ சாதாரண பாப்டிஸ்டு (Particular and General Baptists), பீடோ பாப்டிஸ்டு (Paedo baptists) என்றுதி சில உட்பிரிவுகளுண்டு.

(Moravians) மொரேவியன்ஸ் — இவர்கள் சற்றேறக்குறைய லூதரன் சபையாரைப்போ லிருப்பார்கள். பூர்வத்திலிவர்கள் ஒருவர் கால்களை ஒருவர் கழுவியும், வெறுங்காலால் நடந்தும் வந்தார்கள். இவர்கள் உழைப்பை அதிகமாகவிரும்பி அஞ்ஞானிகளைக் கிறிஸ்தவ ராக்குதலே சிறந்த தொழிலெனக் கொண்டாடிவரப்பட்டவர்களாம்.

## வெஸ்லியின் சங்கம்.

### THE WESLEYAN SOCIETY.

இவர்கள் வெஸ்லி என்ற சாஸ்திரியின் கருத்தை யனுசரிப்பவர்கள். அன்றியும், (Arminius) ஆர்மினியஸ் என்பவர் போதித்த சில உபதேசங்களை ஏற்றுக்கொள்ளுகிறதினால், ஆர்மீனியன்ஸ் சபையாரென்றும், விசேஷ முறைமையின்படி நடக்கிறபடியால் மெதோடிஸ்டு சபையார் என்றும் சொல்லப்படுவார்கள்.

## வெஸ்லி என்பவர் சரித்திரம்.

ஜான் வெஸ்லி, சார்லெஸ் வெஸ்லி என்ற 2-பேர் ஆக்ஸ்போர்ட்டு கலாசாலையில் வாசித்து வரும்போது வாரத்திலிரண்டு மூன்று நாள் முறைமையான பிரார்த்தனைகளைச் செய்துவந்தும் ஷெ அண்ணன் தம்பிகள் இருவரும் அமெரிக்காவுக்கு மதவிஷயமாய்ப் போய்வந்தார்கள். அப்போது கிறிஸ்து மதத்தைப் பிரபலமாகக் கண்டவிடங்களினின்று

பிரசங்கஞ்செய்து வரவே சிலர் பிரியப்பட்டுத் தங்களுக்குச் சுவிசேஷத்தைவிசேஷமாகப் போதிக்கவேண்டுமென்றுகேட்டுக்கொண்டார்கள். அவர் 12 - 12 - ஜனங்களை அந்நியோந்நிய கூட்டமாகப் பிரித்தும், ஒவ்வொரு கூட்டத்துக்கும் ஒவ்வொரு தலைவனை யேற்படுத்தியும், வாரத்துக்கொருதரம் யாவருங்கூடிப் பேசித் தேற்றுதல் சொல்லி ஒருவருக்கொருவர் உதவிசெய்துகொள்ள சபைகள் ஸ்தாபிக்கப்பட்டன. பிறகு கிராமங்களிலும், பட்டணங்களிலும் சபைகள் ஸ்தாபிக்கப்பட்டன. இவர்கள் இப்படிச் செய்யவே அநேகர் இவர்களை விரோதித்து வருத்தியபடியால் இவர்கள் ஐரோப்பா, அமெரிகா முதலான விடங்களிற்போய்ச் சபைகளை ஸ்தாபித்தும் உலகமெங்கும் கிறிஸ்து மதத்தைப் பரவச்செய்ய ஆரம்பித்தார்கள்.

## ஒயிட்பீல்டிஸ்ட்ஸ்.

## THE WHITEFIELDISTS.

இவர்கள் சற்றேறக்குறைய மெதடிஸ்டுகளைப்போ லிருப்பார்கள். இவர்களுக்கு அன்டிங்டன் சீமாட்டி (Countess of Huntingdon) பலவிதத்திலும் உதவிசெய்தாள். இந்தச் சபையைச்சார்ந்தவர்களில் சிலர் சிறந்த படிப்பாளிகளும், இயேசுவைப்போல் சத்தியத்துக்கு உழைக்கப்பட்டவர்களுமாக இருந்தார்கள்.

## கால்வனிஸ்ட்ஸ்.

## THE CALVANISTS.

கால்வனிஸ்ட்ஸ் (Calvanists) இவர்கள் 16-ம் நூற்றாண்டிலே சீர்திருத்துவோனாகவிருந்த ஜான்கால்வின் என்பவர் கோட்பாட்டை யனுசரிப்பவர்கள். இவர்கள் ஆதியில் கடவுள் உலகத்தைப் படைத்தபோதே சகலருக்கும் நடக்கும் காரியங்களை முன்னமே நியமித்திருக்கிறாரென்றும், பின்னும் சிற்சில விஷயங்களைத் தழுவியிருந்தாலும், ரோமன் மதத்தைக் கண்டிக்கிறார்கள்.

## ஆண்ட்டிநோமியன்ஸ்.

## THE ANTINOMIANS.

இவர்கள் விசுவாசத்தினால் மாத்திரம் மோக்ஷத்தை அடையலாமென்றும், நற்காரியம் தீக்காரியங்களினால் சாதகம் பாதகம் கிடையாதென்றும் சொல்லுகிறார்கள்.

## பிரிசிபிடேரியன்ஸ்.

## THE PRESBYTERIANS.

இவர்கள், சபை முதலான காரியங்களைப் பெரியோர்களால் நடத்தப்படவேண்டுமென்று சொல்லுகிறார்கள்.

## யூனிடேரியன்ஸ்.

## THE UNITARIANS.

இவர்களில் நாலைந்து வகுப்புகளுண்டு.

இந்த (Arian Unitarians) அரியான் ஒருமித்தோர்
சபை, நான்காம் நூற்றாண்டிலே அலெக்ஸாண்டிரியாவில் குரு
வாயிருந்த அரீஸ் என்பவரால் ஸ்தாபிக்கப்பட்டது. இச்சபை
யார் தெய்வீக சுபாவத்தில் 3 விதமான புருஷர்கள் இல்லை
யென்றும், இயேசுகிறிஸ்துவின் ஆத்மாவானது ஆதியிலே
யிருந்த தென்றும், ஆகவே இயேசுவை வணங்கக்கூடாதென்,
றும், அவர் மரணமே பாவத்துக்குப் போதுமானதென்றும்
பிரதிமனுஷனும் தனது செய்கைகளுக்குத் தக்கபடி பலா
பலனை அனுபவிக்கிறானென்றுஞ் சொல்லுகிறார்கள்.

## சொசீனியன் யூனிடேரியன்ஸ்.

## THE SOCINIAN UNITARIANS.

சொஸினிய ஒருமித்தவர் மார்க்கத்தார்: இவர்கள் தஸ்
கினிதேசத்தில் பிறந்த பாஸ்டஸ் சொஸினியஸ் என்பவ
ருடைய கோட்பாட்டை யனுசரிப்பவர்கள். அதாவது:—
இயேசுநாதர் ஜோசப்புக்கும் மேரிக்கும் நியாயமாகப் பிறந்த
மனிதனென்றும், பரிசுத்த ஆவி என்பது வேறே ஒரு கட
வுள் அல்லவென்றும், பூர்வபாவம் கிடையாதென்றும், சகல
ரும் தங்களுடைய நடக்கைக்குத் தக்கபடிக்கு இகபர இன்
பங்களை யனுபவிக்கிறார்களென்றுஞ் சொல்லுகிறார்கள்.

## சாபிலியன் யூனிடேரியன்ஸ்.

## The Sabilian Unitarians.

இவர்கள் ஆப்பிரிக்காவில் பிஷப்பாகவிருந்த சாப்பிலியஸ் என்பவருடைய கோட்பாட்டை யனுசரிப்பவர்கள். இவர்கள் ஒரே கடவுள் உண்டென்றும் அந்தக் கடவுள் புருஷரூபமாக இருப்பதாகவும் சொல்லுகிறார்கள்.

## லண்டன் மிஷன் சபை.

## THE LONDON MISSION.

இந்தச் சபையார் சற்றேறக்குறைய இங்கிலாந்து சபையாரைப்போல நடவடிக்கைகளை நடத்தி வருகிறார்கள். இந்தச் சபையை 1795-வருடம் ஸ்தாபித்து, செங்கடலுக்கடுத்த தீவுகளுக்குப் போதகர்களை யனுப்பியதுமன்றியில் 1804-ம் வருடம் சீனதேசத்திற்கும் போதகர்களை யனுப்பினார்கள். இந்தியாவில் அநேகவிடங்களில் இந்தச் சபையாருக்கு மிஷன் ஸ்தானங்களுண்டு.

## ஸ்காட்ச் சபை.

## THE SCOTCH MISSION.

இந்தச் சபையார் அனுஷ்டானத்தில் புரோடெஸ்டாண்டுகளாக விருந்தாலும், தருமார்த்தமாகப் பாடசாலைகளை ஸ்தாபித்து அநேகருக்குக் கல்வியறிவையும், சுவிசேஷ ஞானத்தையும் ஊட்டுவதே சிறப்பானதாகக் கொண்டாடி வருகிறார்கள்.

## இங்கிலீஷ் இபிஸ்கோபல் சபை.

## THE ENGLISH EPISCOPAL CHURCH.

இபிஸ்கோபல் என்பது பிஷப்புகளை யடுத்ததென்று அருத்தமாம். அந்தச் சபையி லுபதேசம் பண்ணுதற்கு டீகன்ஸ் (Deacons) என்னப்பட்ட உதவிபோதகர்களும், பிரீஸ்ட்ஸ் (Priests) என்னப்பட்ட குருக்கள்மாரும், பிஷப்ஸ் (Bishops) என்னப்பட்ட கண்காணிகளு மிருக்கிறார்கள். உதவி போதகராவதற்கு 23 வயதாயும், குருவாவதற்கு 24 வயதாயும், கண்காணியாவதற்கு 30 வயதாயு மிருக்கவேண்டும். உதவிக்காரர் உபதேசம்பண்ணி ஞானஸ்நானமாத்திரங் கொடுப்பார்கள். குருக்கள்மார் இராப்போஜனத்தைப் பரிமாறுவார்கள். இப்படிப்பட்ட அநேகங் குருக்கள்மாருக்கு மேலாகப் பிஷப்புக்கள் கண்காணியாகவைக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் தங்களுக்குட்பட்டிருக்கிற கிளார்ஜி (Clergy) என்னப்பட்ட போதகர்களை விசாரணைசெய்து அவர்களுக்குண்டாகும் விகற்பங்களைத் தீர்த்து, சபைகளிலுள்ள வாலிபர்களை யுறுதிப்படுத்தி Confirmation செய்து போதகர்களை அபிஷேகம் பண்ணுகிறார்கள். இப்படிப்பட்ட கண்காணிகள் 26.

பேர்களிருக்கிறார்கள். அவர்களுக்கு ஒப்புவிக்கப்பட்ட திசைக்கு See அல்லது Diocese என்று பேர். அவர்களுக்கு மிகுந்த அதிகாரமும் அதிகமான சம்பளமுமுண்டு. கண்காணிகளுக்கு உதவிக்காரர் (Archdeacons) ஆர்ச்சுடீக்கன்மார் முதலியவர்கள் இங்கிலாந்துதேசத்தில் 60 பேரிருக்கிறார்கள். கண்காணிகளில் இரண்டு பெரிய கண்காணிகளிருக்கிறார்கள். (Arch Bishops) இவர்கள் பிஷப்புகளை யபிஷேகம் பண்ணித் தங்கள் திசைகளை விசாரணை செய்கிறார்கள்.

எல்லாக் குருக்கள்மார்களுக்குஞ் சபைகளுக்குந் தலைவராக ஒரு இராஜா ஏற்படுத்தப்பட்டிருக்கிறார். (Canons) கானன்ஸ் என்னப்பட்ட சபைப் பிரமாணங்களையும் விசுவாசப் பிரமாணங்களடங்கிய ௩௯-கட்டளைகளையும் (39 Articles) பிரமாணமாகக் கொண்டிருக்கிறார்கள். காமன் பிரேயர் (Common Prayer) என்னப்பட்ட ஜெபப்புத்தகத்தையும் ஏறக்குறைய 1570ளு ஏற்படுத்தினார்கள்.

## குவேக்கர்கள்.

## THE QVAKERS.

இந்தச் சபையார் ஜார்ஜ்பாக்ஸ் என்னும் பரிசுத்தவானுடைய கோட்பாட்டை யனுசரிப்பவர்கள். இந்த பாக்ஸ் என்பவர் பகிரங்கமாகப் பிரசங்கஞ்செய்து வருகையில் இவரைப் பிடித்துக்கொண்டுபோய் மாஜிஸ்திரேட்டுகளால் விசாரிக்கப்பட்டபோது அவர் அந்த மாஜிஸ்திரேட்டுகளை நோக்கிச் சுவிசேஷபோதகர்களைத் தண்டித்தால் தேவன் தண்டிப்பாரென்று பயமுறுத்தியபடியால் இவர்களுக்குக் குவேக்கர்களென்று பெயரிடப்பட்டது. அவர்கள் சபைகூடும்போது பிரார்த்தனை காலத்திலன்றி மற்றக் காலங்களிலெல்லாம் சபைக்கதவை மூடிக்கொள்வார்கள். உபதேசிகள் முழந்தாளில் நிற்க, மற்றவர்கள் எழுந்து நின்று மௌனத்தியானஞ் செய்வார்கள். வெளி ஆடம்பரங்களைப் பார்க்கிலும் உண்மையான பக்தியே சிறந்ததென்றும், ஜலத்தாலே செய்யும் ஞானஸ்நானம் சிறந்ததல்லவென்றும், பொய்ச்சத்தியம் செய்யக்கூடாதென்றும், சுவிசேஷ நூல்களை விற்கவும் வாங்கவும் கூடாதென்றும், உபதேசத்தொழிலை ஆணும் பெண்ணும் சமமாக நடத்தலாமென்றும், சகல நடவடிக்கைகளும் சபையாரின் சட்டப்பிரகாரம் நடத்தப்படவேண்டுமென்றும், சமாதானமே சிறந்ததென்றும் சொல்லுகிறார்கள்.

## பிரீமேஸொனெரி.

## THE FREEMASONARY.

இஃது மகா இரகசியமான சபை. இதைப்பற்றி விவரமாக விவரிக்கும் நூல் கிடையாதாயினும் எமக்குத் தெரிந்த மட்டும் விவரிப்போம். ஒருகாலத்தில் இந்த (Freemasonary) பிரிமேஸொனெரி சபை பூலோகத்தில் ஆதிமதமாக இருந்ததென்று சொல்வாருமுண்டு. பூலோகத்தில் பிரபலரான (Noah) நோவா என்பவருடைய பேரனாகிய (Mizarim) மிசிரெய்ம் என்பவரால் (Egypt) எகிப்து தேசத்தில் ஸ்தாபிக்கப்பட்டதென்று சிலரும், புகழ்பெற்ற (Solomon) சாலோமன் கோவிலில் (Pagans) விசுவாசமற்றவர்களுக்கு இரகசியமாக ஏற்படுத்தப்பட்டதென்று சிலரும் அபிப்பிராயப்படுகின்றனர். யூதருடைய தபரிநாகிலில்(Jewish Feast of Tabernacles) பண்டிகையிலிருந்து ஸ்தாபிக்கப்பட்டதென்று (Hales) ஏல்ஸ் என்பவர் சொல்லுகிறார். எப்படியானபோதிலும் இது இப்போதைய நூதன சபையென்று சொல்ல ஆதாரமுண்டு. இந்தச் சபையானது பதினேழாவது நூற்றாண்டின் கடைசியில் (England) இங்கிலாந்தில் ஸ்தாபிதமாயிற்று. யார்க்கு (Grand Lodge of York) தேச பெரிய ஆலயம் 926-வருடங்களுக்கு முன் இருந்ததாகவும், அந்த ஆலயச்சங்கத்தார் மத்தியகாலத்தில் பலவித கிளைச்சபைகளை ஸ்தாபிக்க முயன்றதாகவுந் தோன்றுகிறது. பன்னிரண்டாவது நூற்றாண்டில் ஸ்காத்திலாந்திலுள்ள (Scotland) கில்வினிங்கு (Killvinning) மாகாணத்தில் இந்தச் சமயவாதிகள் (Masons) தோன்றினும் 1725ஞ பிரான்சுதேச (French Lodge)த்தில் ஷை சமயவாதிகள் தோன்றுவதற்குமுன் அவர்களுற்பத்தி உண்மையாகத் தோன்றவில்லை.

1730ஞ ஐர்லாண்டிலும் (Ireland), 1737ஞ ஹாலண்டைச் சார்ந்த (Holland) எகுவிலும் (Hague), 1735ஞ ஜெர்மனி (Germany) தேசத்திலும் ஸ்தாபிக்கப்பட்டது. 1736 வருஷம் (Baron Rosslyn the Grand Master) பாரன் ரசலீன் என்ற சிரேஷ்ட ஆசாரியர் சந்ததியற்றவராக இறந்தமையால் ஸ்காத்திலாந்தின் அரசர் இரண்டாவது ஜேம்ஸ் (James the Second) என்பவருடைய ஆதரணையினால் இம்மதம் அந்தத் தேசத்தில் தகுந்த ஸ்திதிக்கு அஸ்திபாரமிடப்

பட்டது. இந்தச்சபை இக்காலத்திலும் ஆங்கிலேயரால் வியக்கத்தக்கது.

மத்தியகாலத்து போப்புகளிற் (Popes) சிலர் தங்களுடைய (Athletic Architecture) ஞானேந்திர சிற்பாலங்காரார்த்தம் இந்தச் சபையை விருத்திசெய்ய முயன்றும், 1738ளு இந்தச் சபை ஐரோப்பா கண்டமெல்லாம் பரவுதலைக் கண்டு அதைத் தடுக்கவும், அதை யனுசரிப்போரைத் தம்மதத்திலிருந்து நீக்கவும் (Pole Clement XII) பன்னிரண்டாவது கிலமெண்டு பாப்பானவர் (Popal bull) பாப்பல் தாக்கீது கொடுத்ததுமன்றியில், இந்தச் சபையார்களால் துவைத்தனத்தாருக்கும், (Bible Society) பைபில் சொஸைட்டிக்கும் தீங்குஉண்டாகுமென்றும், அநேக (Popes) பாப்புகளும் நாளதுவரையில் தடை செய்துவருகின்றனர். ஆனால் பாப்புகளின் (Popes) எண்ணம் இங்கிலாந்து தேசத்தில் மாத்திரஞ் சாயவில்லை; 1786 வருஷத்தில் இங்கிலாந்தில் (Great Queen's Street) பெரிய இராணியார் பாதையில் (Lincolus Inn fields) லின்கோலன்ஸின் புலத்தில் இச் சபையார்களின் விசித்திர விநோதமானஆலயம் கட்டப்பட்டது. அத்துடன் ஒரு தருமபாலிக ஆச்சிரமம் சேர்க்கப்பட்டிருக்கின்றது. இந்த ஆலயம் சில வருடங்களுக்குமுன்னர் முன்னிலும் விசாலமாகக்கட்டப்பட்டது. ஸ்டிராண்டு (Strand) பிக்கேடில்லி (Piccadily) என்றவிடங்களில் தருமான கட்டடங்கள் கட்டுவதற்குமுன் மிஷனெரி கூட்டத்தார் (The Bible and Missionary Societies) அந்த மதஸ்தருடைய ஆலயத்தில் கூட்டங்கூடிவந்தார்கள்.

இந்தச் சபையார் ஒருதெய்வத்தை நம்பியும், சகோதரவாஞ்சையை விருத்தியாக்கியும், பரிசுத்தத்தினாலும், சகோதரவாஞ்சையினாலும், இந்த மண்ணுலகத்தையே விண்ணுலகமாக்கப் பிரயத்தனப்படுகிறார்கள். இதில் இரகசியமான செய்கைகளும் ஜெபங்களும் குறிகளுமுண்டு.

## புதுமதச்சபை.
## THE NEW CHURCH.

இது 1787ளு லண்டன் பட்டணத்தில் சில குருமார்களாலும், மற்றப் பொது ஜனங்களாலும் ஸ்தாபிக்கப்பட்டது. இதன் கருத்து கிறிஸ்து மதத்தை ஆத்மஞானத்தால் உபதேசிக்க வேண்டுமென்பதாம்.

## இரிவிவருமதம்.

## EDWARD ERVING.

லண்டன் பட்டணத்தில் 1830ஆ புது ஏற்பாட்டையே முக்கியமாக நம்பி ஏசுநாதர் மறுபடியும் உலகில் வெகு சீக்கிரத்தில் வருவதாகப் போதிக்கிறவர்களுக்கு இரிவிங்கு மதம் என்று பெயர்.

## ஏசீவ்ஸவரமதம்.

## VCYSEY CHURCH,

சீமையில் சார்ல்ஸவாய்சி என்னும் ஓர் சிறந்தபடிப்பாளி பைபிலை நம்பாமலும், கிறிஸ்துவை நம்பாமலும் ஒரே கடவுளுண்டென்று போதிக்கும் மதத்திற்கு வாய்சி மதமென்று பெயர்.

## சுவீடன் பர்க்கியர்.

## THE SWEDEN BORGIANS.

இச்சபையார் ஸ்வேதன் தேசத்தில் 1288ஆ பிறந்த இம்மானுவேல் என்பவருடைய கோட்பாட்டை யனுசரிப்பவர்கள். இவர்கள் திரியேகத்துவமான கடவுளைப் புருஷாகாரமாக்கி வணங்கிவருகிறவர்கள். மேலும் விசுவாசத்தோடுகூட நல்லநடக்கைகள் இருக்கவேண்டுமென்றும், பிரதிமநுஷனும் பாவத்தினின்று குணப்பட சுவதந்திரமுடையவனென்றும், ஸ்தூலதேகம் இறந்தபிறகு சூக்ஷ்மதேகம் பராபரனைச் சாருமென்றும் சொல்லுகிறார்கள். இவர்களுடைய குருமார்கள் இங்கிலாந்து சபையாரைப்போல் உடுப்பார்கள். இப்பிரிவுகளன்றியில் பாக்ஸ்டேரியன்ஸ் (Baxterians) என்றும், நெசெசிடேரியன்ஸ் (Necessitarians) என்றும், டிஸ்ரக்டியனிட்ஸ் (Destructianists) என்றும், மில்லினேரியன்ஸ் (Millinarias) என்றும், ஹச்சின்சோனியன்ஸ் (Hutchinsonians) என்றும், மெடீரியலிஸ்ட்ஸ் (Materialists) என்றும், மிஸ்டிக்ஸ் (Mystics) என்றும், யூனிவர்சலிஸ்ட்ஸ் (Universalists) என்றும், சாண்டிமேனியன்ஸ் (Sandemanians) என்றும், டன்கர்ஸ் (Dunkers) என்றும், நாஸ்டிக்ஸ் (Gnostics) என்றும், நிகோலெய்தன்ஸ் (Nicholaithans) என்றும், கார்பொகிரேடியன்ஸ் (Carpocratians) என்றும், சிரின்தியன்ஸ் (Cerintheans) என்றும், ஸாபிலியன்ஸ் (Sabellians) என்றும், பாட்ரிபாசியன்ஸ் (Patripassi-

ans) என்றும், அந்த்ரோபோமோர்பைட்ஸ் (Anthropomorphites) என்றும், பியூரிடென்ஸ் (Puritans) என்றும், சபல்பசாரியன்ஸ் (Sabalpasarians) என்றும், டிசென்டர்ஸ் (Dissenters) என்றும், சபாடேரியன்ஸ் (Sabatarians) என்றும், செகூர்லிசிம் (Socurlism) என்றும், யுடிலிடேரியானிசிம் (Utilitarianism) என்றும், சொஷியாலிசிம் (Socialism) என்றும், நிஹிலிசிம் (Nihilism) என்றும், பாஸ்டிவிசிம் (Postivism) என்றும், பிரீதிங்கர்ஸ் (Freethinkers) என்றும், சகோதரர்கள் சபை (Brothers) என்றும், மார்மோன்ஸ் (Marmons) என்றும், ஷேகர்கள் (Shakers) என்றும் இன்னும் பல பிரிவுகளுண்டு. விரிக்கிற் பெருகுமென்று விடுத்தோம்.

## THE SALVATION ARMY.

## இரட்சணிய சேனை.

இப்போது இங்கிலாந்தில் சுமார் இருபது வருஷங்களுக்கு முன் சீமையில் ஜெனரல் பூத் என்பவர் பாவத்துக்குக்காரணமான சாத்தானை (பிசாசை)த் தாக்கி யடிக்கும் கிறிஸ்து ரக்ஷணியசேனை என்னும் ஒரு சபையை ஸ்தாபித்து அதில் கிறிஸ்துமத வைராக்கிய முள்ளவர்களைச் சேர்த்து நாடுநகரங்களிற் போய்ப் பிரசங்கங்கள்செய்துவருகிறார்கள். இப்போது இச் சபை சில பிரதான பட்டணங்களில் தவிர மற்ற இடங்களில் பிரகாசிக்கக்காணோம். ஐரோப்பா கண்டத்தில் பெரும்பாகமான தேசங்களிலும், அமெரிக்கா ஆப்பிரிகா கண்டங்களில் சீர்திருத்தமான தேசங்களிலும், ஆசியாகண்டத்தில் சில தேசங்களிலும், வெவ்வேறு தீவுகளிலும் மிஷனெரிகளால் அதிக பிரபலமாகப் பரவியிருப்பதால், இந்த மதம் இப்பூலோகத்தின் பெரிய மதங்களில் ஒன்றாகவிருக்கிறது. இச்சபையில் கானல் டக்கர் என்னும் சிவில் உத்தியோகஸ்தரும் சேர்ந்திருக்கின்றனர்.

இந்த கிறிஸ்து மதஸ்தர்களுடைய வேதமாகிய பைபில் என்னும் புத்தகம் இப்போது சுமார் 220 பாஷைகளில் தர்ஜமா செய்யப்பட்டிருக்கிறது. முக்கியமாக 1808ஞு சம்ஸ்கிருத பாஷையிலும், 1820ஞு குஜராத்தியிலும், 1807ஞு மகாராஷ்டிரத்திலும், 1715ஞு தமிழிலும், 1812ஞு தெலுங்கிலும், 1820ஞு கன்னடத்திலும், மலையாளத்திலும், 1771ஞு சிங்களத்திலும், 1816ஞு அரபி, பார்ஸியிலும், 1808ஞு இந்துஸ்தானி, பெங்காலியிலும்,

1816ஹு சீனு, பர்மா பாஷைகளிலும் மொழிபெயர்க்கப் பட்டது.

இம்மட்டோ, இந்த மதஸ்தர்கள் பின்னும் பலவித புஸ்தகங்களையும், பத்திரிகைகளையும் பதிப்பித்து வருகிறதன்றியில், பலவிடங்களில் பலவிதமான பாடசாலைகளையும், கைத்தொழிற்சாலைகளையும்ஸ்தாபித்துநன்மைசெய்துவருகிறார்கள்

## மகம்மது மார்க்கம்.

## THE MAHMADANISM.

மகம்மது என்பவரால் ஸ்தாபிக்கப்பட்டு அரேபியர், துர்க்கியர் முதலியவர்களால் கைக்கொள்ளப்பட்ட மார்க்கத்துக்கு மகம்மது சமயம் என்று பெயர். இதற்கு இஸ்லாம்மார்க்கமென்றும்சொல்வதுமுண்டு. இஸ்லாமென்னும் பதத்திற்கு பக்தி என்று அர்த்தமாம்; ஆகவே இவர்களுக்கு பக்தர்கள் என்று அர்த்தங்கொள்ளுகிற பன்மையைச்சேர்த்து முசல்மான் (பக்திக்கு வசப்படுகிறவன்) என்றுபேரிடப்பட்டிருக்கிறது.

## மகம்மது நபியின் சரித்திரம்.

இவர் கி-பி 570-ம் வருடத்திலே அரபிதேசத்திலுள்ள மக்கா பட்டணத்தில் ரபீயுல்அவல்மீ 12-ம் தேதி திங்கட்கிழமை இராத்திரி பிறந்தவர். அப்துல்லா என்பவர் இவர் தகப்பனார், ஆமீனு என்பவர் இவர் தாயார். இவர் குரஷிகாதியைச் சார்ந்தவராயும், தகப்பனார் விக்கிரகாராதனைக்காரராகவுமிருந்தாலும், மகம்மது கர்ப்பத்தில் ஆறுமாதமாக விருக்கும்போதே தகப்பனார் இறந்துபோனபடியால், அவருடைய பாட்டனாராகிய அப்துல் முத்தலிபு என்பவரிடஞ் சிலகாலமிருந்து பிறகு அபூதாலிபு என்னும் பெரிய தகப்பனாரால் வளர்க்கப்பட்டார். பிறகு கல்வி கேள்விகளில் தேர்ந்து தமது 25-வது வயதில் உத்தமியும் கோடீஸ்வரியுமாகிய கதீஜாபீ என்ற 40-வயதுள்ள விதந்து அம்மையிடம் உத்தியோகம் பெற்று, உண்மையுள்ளவராயும் உத்தமராயும் இருந்தபடியால், அந்தக் கதீஜாபீ அம்மை இவருடைய நற்குணங்களைக் கண்டு வியந்து இவரையே விவாகஞ் செய்துகொண்டனர். இதனால் மகம்மதானவர் ஒட்டகம் முதலான பெரிய வியாபாரங்களைச் செய்து மக்கா பட்டணத்தில் மகா பிரசித்தமாயிருந்தார்.

இவர் கூர்மையான புத்தியும், உறுதியும், ஊக்கமும் உடையவராயிருந்து வியாபாரம் பண்ணி ஒருநாள் ஹிரா என்ற மலையில் ஜபம் செய்யும்போது ஜிபிரியீல் என்னும் தேவதூதன் நேராக வந்து நபி அவர்களை நெருங்கி "நீர் உம்முடைய நாயகனுடைய நாமத்தைத் துதித்து நாயகனுடைய வாசகமாகிய குர்ஆனை ஆரம்பித்து ஓதும்" என்று சொல்ல, நபியானவர் "நான் படிக்கத் தெரிந்தவனல்லன்" என்று மூன்று தடவை மறுதலிக்க, அப்போது ஜிபிரியீல் தேவதூதன் தன் நெஞ்சை நபி அவர்களுடைய நெஞ்சுடனே சேர்த்து நெருக்க, அருட்பிரகாசத்தால் தேவஞானம் பெற்று பின்வரும் மொழியை முடிவாகும்வரையில் சொன்னார். ஆனதுபற்றியே தமது 40-ம் வயதாகிய கி-பி 610-ம் வருடத்தில் மகம்மது நபியானவர் தாம் அல்லாவினால் அனுப்பப்பட்ட நபி என்று அறியப்படுத்தப்பட்டாராம். அவருடைய வேதமாகிய குர்ஆன் பங்குபங்காகப் பலகாலங்களிற் ஜிப்ரயீல் தூதர் மூலமாக அல்லாவினால் வானத்திலிருந்து இறங்கினதாகச் சொல்லுகிறார்.

இவருடைய கோட்பாட்டை இவர் மனைவியாகிய கதீஜாபீ அம்மாளும், அபூபகர் என்பவரும், அலி என்பவரும், சாஹித் என்பவரும் ஏற்றுக்கொண்டு சிஷரானார்கள். பிறகு அநேகர் பின்பற்றத் தொடங்கினார்கள். இப்படியிருக்க, 622-ம் வருஷத்தில் மக்காவின் துரையானவர் அபூஜாஹில் என்பவரையும் அபூஹிக்கம் என்பவரையும் மகம்மது நபியையும் அவர் வேதக்காரரையும் பிடித்து வரும்படி கட்டளையிட, பத்துவருஷத்திற்குப் பிறகு அவர் மதீனா பட்டணத்திற்கு ஓடிப்போனார். அப்படி ஓடியதற்கு அரபிபாஷையில் ஹிஜ்ரிவென்று பெயர். இந்த ஹிஜீரா வருடம் முதல் மகம்மது மார்க்கத்தார் வருடக்கணக்கை எண்ணிவருகிறார்கள். மகம்மதானவர் மதீனாவில் அற்புதங்களைக் காட்டி மஸ்ஜித் என்ற ஓர் பெரிய பள்ளிவாசலைக் கட்டி அபூபக்கருடைய குமாரத்தியாகிய ஆயிஷாபீ என்ற பெண்ணை விவாகஞ் செய்துகொண்டார். இவருடைய 9-மனைவிகளில் இந்த ஆயிஷாபீ என்பவளே கல்வியில் தேர்ந்த கண்ணியஸ்திரியாகவும் பிரதான நாயகியாகவு மிருந்தார்.

கி-பி 627-ம்வருஷத்திலே இவர் 1400-பேரைக் கூட்டிக்கொண்டு மக்கா நகரத்திற்குப் போகப் பிரயாணப்பட்டு, கி-பி

629-வருஷத்தில் ரம்ஜான் மாதத்தில் மக்காநகரத்தைப்பிடித்துக் கொண்டு அதைச்சார்ந்த ஊர்களில் 4,000 ஆள்களேயும், 12,000 ஒட்டகங்களேயும் பிடித்தார். கி.பி. 632-வருஷம் ஜூன்மீ 8-ந் தேதியாகிய தமது 63-வது வயதில் காலேயில் கோயிலிலிருந்து வந்து காய்ச்சலினுல் ரபீஅலவுல்மீ 12-ம் தேதி திங்கட் கிழமை இறந்தார். அவருடைய பட்டத்திலே அவரது மாமனுகிய அபூபக்கர் நியமிக்கப்பட்டார். அவர் ஐந்து வருஷமிருந்தபிறகு உமர் 7-வருஷம் அரசு செய்தார். பிறகு உதுமான் 2-வருஷம் ஆண்டார். பிறகு அலி என்பவர் 7-வருஷம் ஆண்டார். இவர் காலத்தில்தான் மாவிய என்பவருக்கும் இவருக்கும் கலகமாகியது. ஆகவே பார்சுக்காரரோடு சேர்ந்தவர்களை ராப்ஸி-அகன்று போனவர்கள் என்றும், தங்களே சுன்னி இமாத்தாராகிய சபை என்றும் சொல்லுகிறுர்கள்.

## மகம்மது மதத்தர்களுடைய வேதமாகிய குர்ஆன்

குருஆன் என்றுல் வாசகமென்று பொருள். அல் குருஆன் - சிறப்பானவாசகம், அலி கிதாப் - சிறப்பான வேதம் என்று சொல்வதுமுண்டு. அது 114-சூராக்களாக வகுக்கப் பட்டிருக்கின்றது. ஒவ்வொரு சூராவும் ஆயத்து என்னப்பட்ட வாக்கியங்களாக வகுக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு சூராவின் தலேயிலே அதன்பேரும், அது அருளப்பட்ட இடமும், பிஸ்மில்லாஹி என்ற வாசகமும் எழுதப்பட்டிருக்கின்றன. பிஸ்மில்லாஹியென்றுல் மகா இரக்கமுள்ள அல்லாவின் நாமத்தில் என்று பொருள்படும். குர்ஆன் அரபி பாஷையில் வெகு அலங்காரமாயும், அற்புதமாயுமிருக்கின்றது. இதில் வைதீக விஷயங்களேப்பற்றியும், இலௌகீகத்துக்குரிய தருமங்களேப்பற்றியும், ஏவல் விலக்கலின் இயல்பும், வணக்கத்தின் இயல்பும், முன் நபிகளின் சரித்திரமும், உவமைகளும், ஞானபத்தியும், அதன் விபரங்களும், இராஜதண்டனே விதிக்கும் விதங்களும், பங்கு பாகம் செய்கிற ஒழுங்கும் விவாஹ ஒழுக்கமும், ஸ்திரீ புருஷர்கள் நடக்கவேண்டிய ஒழுங்குகளும் தருமமும் ஆக 9-அங்கங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

முன்பாகத்தில் ஞானவிஷயங்களாகிய பங்குபாகாதிகளே யும், பின்பாகத்தில் விக்கிரகாராதனேவிண்பக்தி விஷயங்களேயும் பற்றிக் கண்டித்திருக்கிறதென்று சொல்லியிருக்கிறது. அதா

வது, இப்போது குர்ஆனே பார்சி, மலாய, உருது, லத்தீன் இங்கிலீஷ் முதலான பாஷைகளில் ஒருவாறு மொழிபெயர்க்கப்பட்டிருப்பதன்றி மகம்மது நபி இறந்தபிறகு அபுபக்கர் என்பவர்குருஆனைச் சீர்திருத்தினூராம். குருஆனிலுள்ள இஸ்லாம் மார்க்கம் இரண்டு பிரதான வகுப்புகளாக வகுக்கப்பட்டிருக்கிறது. அதாவது:—

விசுவாசிக்கத்தக்கவைகளாகிய ஈமான் என்பவைகளும், நடக்கைக்குரிய தீன் என்பவைகளுமேயாம்.

பலபாகமாகவும் சூராக்களாகவும் ஆயித்துக்களாகவும் இருந்தவற்றை உதுமானுல் சேர்க்கப்பட்டது.

## 1 - வது.

1-வது. ஈமான் என்புவைகள் 6-வகைப்படும். அவையாவன:—அல்லாஹுதாலா ஒருவரிருக்கிரு ரென்பதையும், தேவதூதர்களிருக்கிருரென்பதையும், வேதமுண்டென்பதையும், நபிகள் உண்டென்பதையும், சரீரம் உயிர்த்தெழுதலேயும், நியாயத்தீர்ப்புநாள் உண்டென்பதையும், தக்தீர் என்ற கற்பனை சகலமும் நடக்கிறதென்பதையும் விசுவாசிப்பதேயாம். இவற்றின் விவரமாவன:—

1-வது: "லாயிலாஹ இல்லல்லாஹு மகம்மது ரசூலுல்லாஹி"—மெய்யான அல்லாவொழிய வேறு நாயன் இல்லை. மகம்மது அவர் உண்மைத் தூதராயிருக்கிருர் என்ற உறுதிப்பாடு மார்க்கத்திற்கு ஆதாரமாயிருக்கிறது.

2-வது: ஜீகபரீல், மிகாயில், இஸ்ராபீஹீல், இஸ்ராயீல் என்னும் தூதர்களும், இபிலீஸ் என்ற பிசாசும் இருப்பதாகவும், பிரதி மனிதனேடும் இரண்டு (காரம் என்பவர் வலதுபாகத்திலும் காதிபு என்பவர் இடதுபாகத்திலும் ஆக) தேவதூதர்களிருந்து நன்மைதீமைகளைத் தினந்தோறும் எழுதி வருவதாகவும் நம்புகிருர்கள்.

3-வது: தவுராத்து, ஷபூர், இஞ்சீல், குருஆன் ஆகிய நான்குவேதங்களிருப்பதாகச் சொல்லுகிருர்கள்.

4-வது: 24,000 நபிகளும், 313 முருசல்மார்களும், உருசில் அசிம் என்பவர்களும் இருப்பதாகவும் இவர்களில் ஆதாம்,

றுஷூ, இப்ரகாம், மூசா, ஈசா, மகம்மது என்னும் ஆறு பெயர்கள் இவர்கள் சிறந்தவர்கள் என்றும் சொல்லுகிறார்கள். இவர்களில் ஏவலைக்கொண்டு விலகலை புத்தியினலுணர்ந்து அறிவினல் விலகி நடப்பவர்கள் சிரேஷ்டமானவர்கள்.

5-வது: (1) மாவுவா, (2) குஹல்து, (3) அதன், (4) பிஹிதவுஸ், (5) எல்லியோன், (6) நாஇம், (7) நாகலோகங்களும், (8) மோக்ஷலோகங்களும்; சவிரா, ஹமா, சிஜ்ஜீன், ஹார்வியா, ஜஹீம், ஜஹன்னம், சம்வாரிர்ரி ஆக 7 நரகலோகங்களும் இருப்பதாகவும், புண்ணிய பாவங்கள் திராசியில் நிறுக்கப்படுமென்றும் சொல்லுகிறார்கள்.

6-வது: உலகத்தில் சகலமும் தக்தீர் என்ற விதிப்படி நடக்கிறதென்கிறார்கள். இதை விசுவாசிக்கிறவர்களில் தக்தீர் என்னும் விதிப்படியே சகலமும் நடக்கிறதென்று எண்ணுகிறவர்கள் கதரியா என்றும், சர்வமுயற்சியும் மனிதனல் நடப்பதென்று உறுதிகொள்ளுகிறவர்கள் ஜபரியா என்றும் ஆக இருவகுப்புகளுண்டு.

## 2-வது.

நடக்கைக்குரிய தீன் என்பவைகள் 4 வகைப்படும். அவையாவன: நிமாஸ் பண்ணுகிறதும், கடமையாகிய சக்காத்துகொடுக்கிறதும், உபவாசம் பண்ணுகிறதும், மக்காவுக்கு யாத்திரை போவதுமேயாம். இவைகளின் விபரமாவன:—

1-வது: பிரதிமனுஷனும் ஸ்நானம் பண்ணி நாள் 1-க்கு 5 தரம் மக்காவின் புறமாக கிபலாவைநோக்கி நிமாஸ்பண்ண வேண்டும். நிமாஸ் பண்ணுவோரில் சிலர் 100 மணிசேர்ந்த தஸ்பீ என்கிற செபமாலையை வைத்திருக்கிறார்கள்.

2-வது: சக்காத்துக்கடமையில் 2 விதம்: நியாயமானபடி நம்முடைய ஆஸ்தியில் 40-தில் ஒரு பாகம் அல்லாவுக்குப் பகுதியாக ஏழைகளுக்குக் கொடுப்பதும், உத்சாகமனத்தோடு தானதர்மஞ் செய்வதுமேயாம்.

3-வது: ரம்ஜான் மாதத்தில் குருஆன் இறங்கினபடியாலும், வேதக்கட்டளைப்படி அம்மாதத்தில், காலை 4-மணி முதல் மாலை சூரியாஸ்தமனம்வரையில் உமிழ்நீரும் விழுங்காமல் உபவாசம் பண்ணுதலாம்.

4-வது: இஸ்லாம் மார்க்கத்தார் தம் வாழ்நாட்களுக்குள்ளே ஒருவிசையாவது மக்காவுக்கு யாத்திரை செய்ய வேண்டுமென்றும் சொல்லுகிறார்கள். அவர்கள் மக்காவுக்குப் போகவரக் கூடிய சக்தியிருக்கவேண்டும். ஆனால் இந்த விதியானது வியாதியஸ்தர்கள் குழந்தைகள் விருத்தாப்பியர் துரஸ்திரி ஜனனஸ்திரி இவர்களுக்கு விலக்கம். இதில் ஒன்றை மனதார விட்டவனுக்கு இரண்டுமாதம் அதை தொடர்ச்சியாக நடத்தவேண்டியது. அதற்கும் ஏலாதவன் 60 ஏழைகளுக்கு அன்னதானம் செய்யவேண்டும்.

மகம்மது மார்க்கத்தார் தங்கள் பிள்ளைகளை 8-ம் நாள் தொடுத்துப் 12 வயதிற்குள் சுன்னத்து செய்கிறார்கள். வெள்ளிக்கிழமையே சிரேஷ்ட நாளானபடியால் வேதவிதிப்படி அத்தினத்தை தொழுதற்குரிய நாளாகவைத்துக்கொண்டிருக்கிறார்கள். மேலும் மகம்மது மார்க்கத்தார் சாராயம் முதலிய மதுபானங்களைக் குடிக்கக்கூடாதென்றும், பிஸ்மில்லாஹி பண்ணக் கூடாத பிராணியின் இறைச்சியைச் சாப்பிடக்கூடாதென்றும், யாவரும் ஜாதி பேதத்தைப் பாராட்டக்கூடாதென்றும்வேத விதியிருக்கிறது. இந்த மார்க்கத்தில் அநேக பிரிவுகளுண்டு. இவர்களுக்குள்ளே 73 கூட்டங்களாக ரியுமென்று மகம்மது நபி வாக்களித்தும் அவர்கள் சுன்னத் ஜமாத் என்னும் வகுப்புத் தவிர மற்றவர்கள் நரகம் சேர்வார்களென்று சொல்லுகிறார்கள். யாரும் பணத்துக்கு வட்டி வாங்கக்கூடாதென்றும் கொடுக்கக்கூடாதென்றும், சமய விஷயமாகச் சண்டை செய்பவருக்கு மோக்ஷமுண்டென்றும், மகம்மது நபியே சொன்னதும் தவிர குர்ஆனிலும் சொல்லியிருக்கிறது பிரதானமான பிரிவுகள் சியா சுன்னிஎன்ற இரண்டுவகுப்பார்களே.

மகம்மது நபிக்குப் பாத்திமா என்ற ஒரு குமாரத்தி பிறந்து அலி என்பவருக்கு விவாகஞ் செய்யப்பட்டனர். இவருக்கு கலீபா பட்டமாகி 5-ஆவும் ஆன பிறகு விஷத்தினால் இறந்துப்போக, உமர் என்பவர் 17 வரும் கலீபா பட்டம் பெற்றிருந்து, அவருக்குப் பிறகு ஒத்தமான் என்பவர் அப்பட்டத்தைப் பெற்றார். பிறகு அவர்கள் குமாரர்களாகிய அசேன், உசேன் என்பவர்கள் அப்பட்டம் பெற்ற அவர்களும் சதிசெய்யப்பட்டுச் கொல்லப்பட்டார்கள். இதனால் மகம்மது மதத்தார் இரண்டு பிரிவுகளாகி அலியை விசுவாசித்தவர்கள் சையத வகுப்பார் என்றும், அபூபக்கரைச் சார்ந்தவர்கள் சுன்னி வகுப்பாரென்றும் வகுக்கப்பட்டார்கள்.

சுன்னி மதஸ்தருக்குள்ளே சூஹ்பிகள் என்ற ஞானிகளுண்டு. சியா வகுப்பார்கள் குர்ஆனைத் தப்பர்த்தம்செய்து உபயோகப்படுத்திவருகிறார்களாம். சுன்னிகள் குருஆனமாத்திரமல்ல, மகம்மது நபிசொன்ன காரியங்களை எல்லாம் எழுதிக்கொண்டு பாரம்பரை நியாயங்களின்படி நடக்க வேண்டுமென்கிறார்கள்.

மகம்மது மதஸ்தருக்குள்ளே வஹாபிகளென்ற ஒரு வகுப்பாருண்டு. அவர்கள் குர்ஆனிலும் அதீசிலும் செப்பிய பிரகாரம் நடக்கவேண்டுமென்கிறார்கள். இப்போது நடக்கும் மொஹரம் பண்டிகையானது பெரும்பாலும் சையா வகுப்பாருக்குச் சொந்தம். அதாவது கர்பெலா என்ற இடத்தில் அலியென்பவருடைய குமாரர்களாகிய அசேன், உசேன் ஆகிய இவர்கள் சண்டைசெய்து மூன்று நாள் பரியந்தம் குடிப்பதற்கு ஜலங்கிடைக்காமல் அவஸ்தைப்பட்டு இறந்தார்கள். ஆகவே மொஹரம் பண்டிகையில் தருமார்த்தமாகத் தண்ணீர்ப்பந்தல் முதலானவைகளை வைத்தும் தானதருமங்களைச்செய்தும் தொழுதும் வருகிறார்கள். இப்போது இந்தமகம்மதுமதத்தில்937-வகுப்புகளிருக்கின்றனவாம் அவற்றுள் ஹிஜறத்ஹுத்தில் பிறந்ததுஷிய்யா, காதிஜி, பையானி, ஜப்தறிய்யா, கதுரிய்யா, முபாஹிப்யா, முதப்தபீன், ஜய்தியா, அறஷியா, பர்ஷியா, தாய்றிய்யா, கைபத்தியா, ஷம்காஷிய்யா, முஹப்பியா, நேச்சிரியா இவை முக்கிய வகுப்புகளாம்.

## பாரசீகமதம் அல்லது சௌராஷ்டிரமதம்.

### THE PARSIESM OR ZENDAVESTA.

நமது இந்துதேசத்திற்கு வடமேற்குப்பாகத்தில், அநேக சிறுமலைகளாலும், நானாவித பூண்டுகளாலும், விநோதமான பலவித பக்ஷிகளாலும், (Hafiz) எய்பிசு, (Sodi) சாடி என்ற கவிவாணர்களாலும், (Parsipolis) பிரசிபொலீசு என்ற இராஜகோரிகளாலும் பெருமைபெற்ற பாரசீகம் என்ற ஒருதேசமுண்டு. அதன் குடிகளுக்குப் பாரசிகரென்று பெயர். அவர்கள் இரானியன்சு, சாகினியன்சு வம்சத்தைச் சேர்ந்தவர்களென்று சிலர் அபிப்பிராயப்பட்டாலும், ஆரியவம்சத்தின் ஒருகிளை வம்சத்தாரென்று திட்டமாகச் சொல்லலாம். பொதுவாக சேமுடைய குமாரனாகிய ஏலாமின் சந்ததியாரெனச் சொல்வதுமுண்டு.

பாபிலோன், ஆசிரியா இராச்சியங்கள் அழிந்தபின் பாரசீக தேசமானது கொரேஸ் அல்லது கீரு என்ற அரசனால் ஆளப்பட்டு, 200-வருஷங்களுக்குப் பிறகு அலெக்சாந்தர் அரசன் படையெடுத்து வந்தபின்பு ஷை தேசம் தார்த்தாரியாரால் ஜெயிக்கப்பட்டு, கடைசியாக மகம்மதியர் வசமாகியது.

இப்பாரசீகருடைய மதத்தின் பெயர்: ஸெந்து மதம். இம்மதத்தை ஸ்தாபித்தவரின் பெயர்: ஜோராஸ்டர்.

## ஜோராஸ்டருடைய சரித்திரம்.

இவர் பாக்டெரியா, பால்கு என்ற நகரங்களில் 3,512 வருஷங்களுக்குமுன் ஜனித்தவரென்று சிலரும், கி. மு. 400 வருஷங்களுக்குமுன் ஜனித்ததாக (Plato) பிலேடோ சாஸ்திரியும், கி. மு. 1,300 வருஷங்களுக்குமுன் ஜனித்ததாக (Aristotle) அரிஸ்டாட்டில் சாஸ்திரியும் சொல்லுகிறார்கள். கடைசியாக கி. மு. 2,000 வருடங்களுக்குமுன் வாழ்ந்தவரென்றும், அபிரிகாம் என்பவருக்கு 2,000 வருஷங்களுக்கு முன் வாழ்ந்தவரென்றும், அநேகசாஸ்திரிகள் சொல்லுகிறார்கள். இம்மதாதிபதி சிறுபருவத்திலேதானே நமது இந்து வேதாதி ஜோதிஷநூல்களைக் கற்று (Zend) ஸெண்டு என்னும் பாஷையில் தன் கோட்பாடுகளைப் பரவச்செய்தார். ஜெண்டுபாஷையில் அநேக ஸம்ஸ்கிருத, அரபி, கிரீக்பாஷைகளும் கலப்பு. இம்மதாதிபதி இப்போது இறந்து 3,517 வருஷங்களாகிறதென்றுஞ் சொல்லுகிறார்கள்.

## ஜ ந் த வே த ம்.

இம்மதஸ்தருடைய வேதத்தின் பெயர் (Zendavasta) ஜந்தவேதம் என்பார்கள். இக்கிரந்தத்தில் 22-அதிகாரங்களும் (Chapters), (Fargards) பார்காட்ஸ் 27-ம், (Visperd) விஸ்பெர்ட் 70-ம், (Yacna) யாக்ஞ, (Vendidad) வெண்டிடாட்டு, (Yashts) யாஸ்ட்டு, (Nayash) நயாஷ், (Afrigans) ஆப்ரிகன்ஸ், (Cash) காஷ், (Sirozah) சிரோஷா, (Karadvasta) காரட்வஸ்டா என்ற பாகங்களும் அடங்கியிருக்கின்றன. மேற்குறித்தவைகளில் நமது இந்துவேதச் சங்கீதப் பாட்டுகளைப்போல் வானாதி நக்ஷத்திரங்களை நோக்கிப் பாவமன்னிப்புக்காகப் பிரார்த்தனை செய்யும் பாட்டுகளாகவே யிருக்கின்றன. ஆனால் ஷை மதத்தார்கள் விசேடமாக இப்போது வழங்குங்கிரந்தத்தின் பெயர்

(Bundehesch) பண்டிசுகி என்பதே. இம்மதநூல் 2,000 வருஷங்களுக்கு முன் எழுதப்பட்டிருக்க வேண்டுமென்று (Max Muller) மாக்சு மூல்லர் சாஸ்திரியார் அபிப்பிராயப்படுகிறார். இந்தக் கிரந்தத்தில் சிலவிடங்களில் அத்வைதமாகவும், சிலவிடங்களில் துவைதமாகவும் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆனால் ஆதியில் கோயில்கள் கிடையா. பெரும்பாலார் மலைகளில் தியானஞ்செய்து வந்தார்கள். பிறகு நாளாவட்டத்தில் பல வேறுபாடுக ளுண்டாயின.

இவர்களுடைய கொள்கையாவது: முதற்காரணப்பொருளாகிய கடவுள் ஒருவருண்டென்றும், அக்கடவுளுக்கு (Zerana Akeran) ஜெரான், அகிரான் அரூபி என்னும் பெயரென்றும், அவர் இந்த உலகத்தைப் படைத்து (Ahrima) அஹ்ரிமான்=அந்தகாரன் அதாவது அஞ்ஞானம், பொய், கொலை, களவு முதலான தீமைகளைச் செய்யும் உபதேவனைப்படைத்ததாகவும், அத்தேவன் செய்யும் அக்கிரமங்களை நீக்கிப் பரிசுத்தமாக்க (Ormuzd) ஆர்மஷ்ட் பிரபாகரன் என்ற உபக்கடவுளையும் படைத்ததாகவும், ஷை இரண்டு உபதேவர்களும் ஒருவருக்கொருவர் அதாவது, அஞ்ஞானத்திற்கும் ஞானத்திற்கும், இருட்டுக்கும் வெளிச்சத்திற்குமாக சுமார் 3,000 வருஷங்கள் சண்டைசெய்து கடைசியில் (Ormuzd) ஆர்மஷ்ட் பிரபாகரக்கடவுளே ஜெயித்ததாகவும்,ஆகவே, பூலோகத்து ஜனங்களில் ஷை கடவுளுக்கு உட்பட்டு பரிசுத்த ஹிருதயத்தோடு, சத்விஷயத்திற்காக அந்தகாரத்தை எதிர்த்துச் சண்டைசெய்து சுயாதீனம் பெற்றவர்களுக்கு மாத்திரம் மோக்ஷங் கிடைக்குமென்றும், இந்த உலகமே வானுலகமாமென்றும், இறந்தவர்கள் மூன்றும்நாள் கடவுளிடஞ்சேர்வார்களென்றும்,பிணங்களைக் கழுகுகாக்கைகளுக்கு இரையாக்குதல் புண்ணியமென்றும், (Mithra) மித்ரா என்பவர் தேவனுக்கும் மனிதருக்கும் மத்தியஸ்தரென்றும், (Fravashis) பிரவாஷிஸ் என்ற தேவதூதர்கள் உண்டென்றும், (Sosioch) ஸொசையா என்ற தீர்க்கதரிசி உலகத்தில் அவதரித்த பிறகு க்ஷேமங்கிடைக்குமென்றும், (Ormuzed) ஆர்மஸ்ட் கடவுளுக்கு இருப்பிடம் சூரியன், அக்கினி, நக்ஷத்திராதிகளானபடியால், அவைகளை வணங்கவேண்டுமென்றும், அந்தகாரத்திற்கு விரோதியாகிய நாயையும் வணங்கவேண்டுமென்றும், எல்லாரும் எண்ணத்திலும் நடக்கையிலும் பரிசுத்தமாகவும் சுவாதீனராகவு மிருக்கவேண்டுமென்றும்,

பொய் முதலான பாவங்களை நீக்கவேண்டுமென்றும், பொது நன்மைக்காகப் பிராணதத்தஞ் செய்யவேண்டு மென்றுஞ் சொல்லுகிறார்கள்.

## உலக சிருஷ்டியைப்பற்றி இம்மதஸ்தருடைய கருத்து.

ஆதியில் கடவுள் வானத்தையும், பிறகு பூமியையும், மலைகளையும், சூரியன் சந்திரன் நெருப்பு நக்ஷத்திராதிகளையும் படைத்ததாகவும், 12,000 வருஷங்களுக்குப் பின்பு கந்த மூலாதிகளையும் படைத்து, கேயோமாட்ஸ் என்ற ஆதிமனிதனுற்பத்தியாகியும், அவனைக் கொன்று புதைக்க, அவ்விடமிருந்து ஒரு விருக்ஷபம் ஜனித்ததாகவும், அதன் வயிற்றில் பத்துப்புருஷர்களும், பத்துப்பெண்களு முற்பத்தியானதாகவும், அவர்களில் மெஜிகியா, மெஜிகிஞ என்ற ஆதித் தாய் தந்தைகள் பிறந்து ஆட்டின்பாலைக் குடித்து அவர்களும் சயமாக், விசிகாக் என்ற அவர்களுடைய பிள்ளைகளும் பாவிகளானதாகவும், ஆகவே உலகத்தார் எல்லாரும் பாவிகளாகிவிட்டதாகவும், கடைசியில் ஒரு வால் நக்ஷத்திரத்தினுல் இந்த உலகமழியுமென்றும் சொல்லுகிறார்கள். கி. பி. 651-ம் வருஷத்தில் சாலினியருக்கும் மகமதியருக்கும் சண்டை தொடங்கியபோது, சில பார்சிகள் குஜிராத்து, சூரத்,பம்பாய் முதலான தேசங்களிற்போய்க் குடியேறினார்கள். இப்போது இந்துதேசத்தில் மூன்று லட்சம் பார்சிகளிருக்கிறார்கள். இவர்கள் வர்த்தகப் பிரபுக்கள். மிகவும் நல்லவர்கள். இவர்களில் ஸ்ரீ ஜமிஸ்டஜி, ஜீஜீபாய் என்றவர் மகா தருமராஜர். இவர் பம்பாய்ப் பிரதேசத்தில் அநேக தருமகாரியங்களைச் செய்திருக்கின்றனர். கடைசியாக இந்துக்களுடைய துஷ்டதேவதைகளெல்லாம் இவர்களுக்கு இஷ்டதேவதைகளாக இருக்கினும் சீனதேசத்தாருடைய மதத்திற்குச் சில விஷயங்களில் நேர்விரோதமான மதமாகவிருக்கிறது.

---

## கிரேக்க தேசத்தாருடைய மதங்கள்.
## RELIGIONS OF GREECE.

ஐரோப்பா கண்டத்தைச் சார்ந்த தென்கிழக்குப்பாகத்தில் விநோதமான மலைகளாலும் கடல்களாலுஞ் சிறந்த கிரேக்கு தேசமென்ற ஓர் சமஸ்தானமுண்டு. அத்தேசத்

தைச் சார்ந்த ஜனங்கள் இன்ன வகுப்பார், இன்ன ஜாதியா ரென்று திட்டமா யறியக்கூடவில்லை. ஆனால், இந்துதேசத் தைச் சார்ந்த ஆரியவமிசத்தாரில் ஒருவகுப்பார் கி. பி. 7-ம் நூற்றாண்டிலே (Hellenic) எலினிக் ஜாதியைச் சார்ந்து எகி ப்து தேசத்திற்கும், பிறகு பாக்திரியா தேசத்திற்கும் போய், அதிலிருந்து கி. பி. 4000-ல் கிரேக்கு தேசத்தில் குடியேறினதாக அநேகசாஸ்திரிகள் சொல்லுகிறார்கள். கிரே க்கபாஷையில் 11,633-வார்த்தைகளிருக்கின்றன. அவைகளில் 2000 வார்த்தைகள் சம்ஸ்கிருத வார்த்தைகளாயிருக்கின்றன. ஆகவே கிரேக்கர் பூர்வ ஆரிய வம்சத்தாரைச்சார்ந்த ஒருகிளை ஜாதியாராக இருக்கவேண்டு மென்பதற்குச் சந்தேகமே யில்லை. கிரேக்கர் ஒருகாலத்தில் இந்தப்பூலோகத்தார்வியக்கத் தக்க ஜாதியாரா யிருந்தார்கள். அக்காலத்தில் அவர்களில் அநேக சிற்பசாஸ்திரிகளும், தத்வசாஸ்திரிகளும், கவிவாணர் களும் இருந்தார்கள். இப்படிக்கெல்லாமிருந்தும், அத்தேசத் தாருடைய மதவிஷயத்தைப்பற்றி விவரமாக அறிவது அசா த்தியமா யிருக்கிறது. ஏனெனில், அத்தேசத்தாரின் மத த்தை விவரமாக அறிவிக்கத்தக்க மதவேதமே கிடையாது. மதாதிபதியுங் கிடையாது. ஆனால் (Homer) ஓமர் என்பவ ரும், (Hesiod) இசியாட் என்பவரும், கிரேக்கு மதாசாரங்க ளைப்பற்றிச் சொல்லியதைச் சுருக்கி இதனடியிலறிவிக்கிறோம்.

## கிரேக்கரின் தேவர்கள்.

முதலாவது, கிரேக்கு தேசத்தில் கவிவாணதேவர், சாஸ் திரதேவர், தத்துவஞான தேவர் என மூன்று பிரதான வகுப் புகளுண்டென்று சொல்லலாம். பொதுவாக கிரேக்கர்: ஜூபி டர் (Jupiter) என்னும் தேவன் மற்ற சில்லரைத் தேவர்க ளைப்பார்க்கிலும் சகலருக்கும் பொதுவானதென்றும், பெரிய தென்றும், இந்த உலகத்தையே கட்டியிழுத்த தேவனென் றும், இந்தத் தேவன் கிரேக் தேசத்துக்குச் சமீபத்திலிருக் கிற ஒலிம்பஸ் (Olympus) என்னும் மலைகளில் வாசஞ்செய்து வருகிறதாகவும் சொல்லுகிறார்கள்.

மேலும் கிரேக்கர் வானாதி பஞ்சபூதங்களை இந்துக்களைப் போலவே வணங்கி வருகிறதன்றியில், இன்னும் அநேகச் சில்லரை தேவர்களையும் வணங்கி வருகிறார்கள். அத்தேவர் களையும் மூன்று வகுப்புகளாக வகுத்துக்கொண்டிருக்கிறார் கள். அதாவது,

யுரானிஸ்ட்ஸ் (Uranids) என்றுதி முதல்வகுப்புத் தேவர்களையும், டிடான்ஸ் (Titans) என்ற இரண்டாவது வகுப்புத் தேவர்களையும், ஒலிம்பிதியின் மலையிலிருக்கும்படியான மூன்றும் வகுப்புத் தேவர்களையும் வணங்குவதேயாம்.

ஆதியில் சமஷ்டிரூபமான பூதங்களே கயா (Gaia) என்ற பூதேவியாக உற்பத்தியானதாகவும், அதிலிருந்து டார்டாராஸ் (Tartarus) என்னும் இருட்கடவுள் உண்டானதாகவும், பிறகு இரோஸ் (Eros) என்னும் அன்புக்கடவு ளுண்டானதாகவும், பிறகு ஈத்தர் (Ether) என்னும் நாட்கடவுள் உண்டானதாகவும், இவைகளிலிருந்து யுராஞேஸ் (Uranos) என்னும் மோக்ஷலோகங்க ளுண்டானதாகவும், பிறகு கயா (Gaia) கடவுளும் யுரானஸ் (Uranas) கடவுளும் புணர்ந்து கடல்களையும், கொயோஸ (Koeos), கிரியஸ் (Krios), ஐபெரியன் (Hyperion), லேபிடஸ் (Lapetus), தியா (Theia), ரியா (Rhea) என்றுதி தேவர்களை உற்பத்தியாக்கினதாகவும் சொல்லுகிறார்கள்.

ஒலிம்பியன் மலைகளிலிருந்த தேவர்களில் ஜீயஸ் (Zeus), போசிடன் (Poseidon), இயர் (Here), ஹெசிடா (Hestia), டெமிடர் (Demeter) என்ற தேவர்கள் கிரோனஸ் (Kronos) என்ற கடவுளின் பிள்ளைகளென்றும், அபோலோ (Appolo), ஆர்டிமிஸ் (Artemis), எபாஸ்டோஸ் (Hephaestos), அரீஸ் (Ares), ஹெர்மிஸ் (Hermes), அதனி (Athene) என்ற தேவர்கள் ஜியஸ் (Zeus) தேவருடைய பிள்ளைகளென்றுஞ் சொல்லுகிறார்கள்.

கிரேக்க தேசத்திற்குள் கடவுளைப் பூசிக்க பூஜாரிகள் அல்லது குருமார் என்ற தனியான ஒருஜாதியார் கிடையாது. புத்திமான்களும், உத்தியோகஸ்தர்களும் தேவர்களைப் பூஜிக்க சுவதந்திர முள்ளவர்கள். கிரேக்கர் நரஜீவன்களைப் பலியாகக் கொடாமல், ஆடுமாடுகளைக் கொன்று அவற்றின் இரத்தத்தை விக்கிரகங்களின்பேரில் பூசுவார்கள். சிலசமயங்களில் சந்தன புஷ்பாலங்காரஞ்செய்து கந்தமூலங் காய்கனிகளைக்கொண்டும் உரத்த சத்தமாகப் பிரார்த்தனை செய்வார்கள்.

## கிரேக்க கவிவாண தேவர்கள்.

கிரேக்க தேசத்தார் கவிபாடுவதில் மஹா சிறந்தவர்களானபடியால் இஸியடு (Hesiod), ஹோமர் (Homer), ஆகி

லஸ் (Achylus), சொபாகிலஸ் (Sophocls,) யுரிபிடஸ் (Euripides) என்னும் கவிவாணர்கள் அழகுள்ள புருஷர்களையும், ஸ்திரீகளையும், கந்தமூல கிரிமி கிரீடாதிகளையுந் தேவர்களாகப் பாவித்துக்கற்பனைகளோடுகவிபாடினார்கள். இவர்களையே கிரேக்க சிற்பசாஸ்திரிகள், ஜுபிடர் (Jupiter) இடி (இந்திர) தேவனாகவும், நெப்டியூன் (Neptune) சமுத்திர(வருண) தேவனாகவும், பியூபஸ் அபோலோவைச் சூரியபகவானாகவும், ஆர்ட்டிமிஸ் சந்திரபகவானாகவும் பாவித்து விநோதமான விக்கிரகங்களையும், பிரதிமைகளையும்செய்து வைத்தார்கள். டாரிக் (Doric) கோயிலில் ஜுபிடர் தேவாலயம் 68 அடி நீளமும், 95 அடி அகலமும், 230 அடி நீளமுமான விநோத கட்டடம். அதென்ஸ் மலைகளுக்குச் சமீபத்தில் 34 அடி உயரமும் 230 அடி நீளமும், 102 அடி அகலமுமான ஸ்படிக விக்கிரகங்கள் செய்து வைக்கப்பட்டிருக்கின்றன.

பெரும்பாலும் கிரேக்கர்: அழகும், அறிவும், சத்தியமுமுள்ள மனிதர்களெல்லோரும் தேவர்களென்றும், அத்தேவர்களெல்லோரும் பூமியிலேயே ஜனித்தவர்களென்றும், இகபோக சுகமே உண்மையானதென்றும் சொல்லுகிறார்கள்.

## கிரேக்க தத்துவஞான தேவர்கள்.

கிரேக்க தேசத்தில் கி. மு. 600-ம் வருடத்தில் சிறந்த தேல்சு(Thales)என்னும் ஞானியார் இந்தப் பிரபஞ்சம் யாவும் ஜலமயமா யிருப்பதால் ஜலமாகிய வருணனே கடவுளென்று சொன்னார். அனக்ஸிமென்ஸ் (Anaximens) என்பவர் காற்றாகிய வாயுபகவானைக் கடவுளென்று சாதித்தார். ஹிரிகிலிடஸ் (Heraclitus) என்பவர் அக்கினி பகவானையே கடவுளென்று சாதித்தார். பிதாகுரஸ் (Phythogoras) என்பவர் கடவுள் ஒருவர் என்று சொன்னார்.

ஜெனோபான்ஸ் (Xenophanes) என்பவர் கடவுள் ஒருவர் என்றும் எங்குமுள்ளவரென்றுஞ் சொன்னார்.

பாரமெண்டிஸ் (Prameuids) என்பவர் பரிசுத்தமான எண்ணமே கடவுளென்று சொன்னார்.

இம்பிடோகல்சு (Empedocles) என்பவர் ஜீவாத்மா பரமாத்மா வேறு வேறு வத்துக்களென்று சொன்னார்.

பிறகு கார்க்கியஸ் (Gorgias), அப்டிரெட் (Abdrite), புரோடகொராஸ் (Protagaroas), பிராடிகஸ் (Prodicus), கிரிடியாஸ் (Critias) முதலான தத்துவஞானிகள் அத்துவைதத்தைப் போதித்தார்கள்.

சாக்கிரிடீசு (Soacrates): இவர் பரமாத்மா,ஜீவாத்மாவை நம்பி சத்தியத்திற்காகப் பிராணனைக் கொடுத்தார்.

பிலேடோ (Plato): இவர் ஜீவாத்மா, பரமாத்மா வேறு வேறான வஸ்துக்களென்று சாதித்தார்.

அரிஸ்டாடில் (Aristotle) ஒரே கடவுளைப்பற்றிப்போதித்தாலும், அவர் ஆவி ரூபமான வஸ்துவென்றார்.

ஸ்டாய்கல் (Stoical) என்ற தத்துவஞானி பரமாத்துமாவே பிரபஞ்சமென்று சாதித்தார்.

கிரேக்கர் கோயில்களுக்குப் போகும்போது, ஸ்நானஞ்செய்து சுத்தியோடு போவார்கள். அவர்கள் ஆராதனை முதலானவைகளைப் பெரும்பாலும் இந்துக்களைப்போலவே செய்து வருகிறார்கள். இப்படியிருக்க கி. பி. 6-ம் நூற்றாண்டிலே பௌல் அபோஸ்தலர் கிறிஸ்து மதத்தை கிரேக்தேசத்தில் பரவச்செய்தார். அன்றுமுதல் கிறிஸ்துமதம் விருத்தியாகிவருகிறது.

---

## ரோமகர் மதம்.

## THE RILIGIONS OF ROME.

ஐரோப்பாகண்டத்தைச் சார்ந்த தென்கிழக்குப் பாகத்தில் இத்தாலியா என்ற ஒரு தேசமுண்டு. அதில் ரோமாபுரி என்னும் நாடு தொன்றுதொட்டுத் தொல்புவியிற் சிறந்தது. இந்த ராஜ்யத்தின் ஜனங்கள் இந்த ஜாதி, இந்த கோத்திரத்தாரென்று திட்டமாயறிந்து சொல்வது கஷ்டம். இவர்களைப் பூர்வ ஆரியவம்சத்திலிருந்து பிரிந்த கெல்டிக், சாபினிஸ், ஜர்மன், ஸ்லாவிக் முதலான வகுப்பாராக சாஸ்திரிகள் சொல்லுகிறார்கள்.

இந்த ரோமகர் ஒருகாலத்திற் கல்வி, நாகரீகம், செல்வம், சீர்பெற்று அநேக தேசங்களைக் கட்டி யாண்டு வந்தார்கள். ஆனால், இவர்கள் வேறு நாட்டாரைப் பார்த்து நடப்பவர்

களே யன்றித் தாமே சுபாவமாக யாதுஞ் செய்தவர்களாகக் காணப்படவில்லை.

இந்த ரோமகர் லத்தின் பாஷையைப் பேசப்பட்டவர்களாயும், கிரேக்க மதஸ்தர்களைப் பார்த்து, தமது மதங்களை ஸ்தாபித்துக்கொண்டவர்களாயும், பிராகிருதமானதாயும், இகலோக சுகத்துக்கேற்றதாயும், இராஜரீக சட்டதிட்டங்களுக் குட்பட்டதாயும் இருக்கிற வெளியாடம்பரமதஸ்தரென்றுஞ் சொல்லலாம்.

## ரோமகருடைய தேவர்கள்.

ஜானஸ் (Janus) என்னும் தேவன் சிருஷ்டி கர்த்தாவென்றும், பெரிய கடவுளென்றும், இவராலேதான் உலக வருஷம் ஆரம்பித்ததாகவும், அதாவது ஜனவரி என்னும் மாதமே அவர் ஜனித்ததற்கு உதாரணமா யிருப்பதால் அந்த மாதத்தில் மேற்படி தேவனுக்கு மிட்டாய் முதலான வஸ்துக்களைக்கொண்டு பூஜைசெய்கிறார்கள். இந்தத் தேவன் ஜானிகுலம் (Mount Janiculum)என்னும் மலையில்வாசஞ்செய்கிறார். இந்தத்தேவன் சிரசைப்போலவே நாணயங்களை முத்திரைசெய்து வழங்கிவருகிறார்கள்.

ஜூபிடர் (Jupiter): இந்தக் கடவுள் ஒலிம்பியன் மலைகளிலிருந்து மோக்ஷத்தைக் கொடுக்கப்பட்டவ ரென்றும், ரோமகருடைய பிரதான கடவுளென்றும், விண்ணவர் தேவனென்றும், இடி இடிப்பிக்கச் செய்கிறவரென்றும், இவரை இம்பிரேடர் (Imperator), விக்டர்(Victor),இன்விக்டஸ் (Invictus), ஸ்டேட்டர் (Stator), பிரியேடிட்டர் (Preadator), டிரிம்பாட்டர் (Triemphator), அர்லாஸ்பஸ்ட்ஸ் (Urlasbusts) என்றுகி பேர்களால் இந்தத் தேவனுக்கு 300-க்கு அதிகமான கோயில்களைக் கட்டி, பல பெயர்களாலே வணங்கிவருகிறார்கள். ரோமராஜ்ஜியத்தில், இடியினால் இறந்தவர்கள் பரிசுத்தராகிப் பரலோகத்தைச் சார்ந்தவர்களாகப் பாவிக்கப்படுகிறார்கள்.

ஜூன் (June) என்னும் தேவதை, விண்ணவர் கன்னிகையென்றும், இந்தத் தேவதையினாலே மாங்கிலிய தருமங்கள் காக்கப்பட்டுவருவதாகவும், ஜூன் மாதத்தில் உற்சவும் கொண்டாடுகிறார்கள்.

மினர்வா (Minerva) என்னும் தேவதை கல்வி அறிவை விளைவிக்கும் சரஸ்வதியென்றும், ஒவ்வொரு பாடசாலைகளி லும் வைத்து வணங்கிவருகிறார்கள்.

பொதுவாக ரோமஜாதியாருக்குப் படிப்பு நீதி முதலான வைகளை போதிக்கும் தேவர்களும், புராதனமும் மேன்மையு மான தேவர்களும், கிரேக்கு தேசத்தைச்சார்ந்த தேவர்களும் ஆக மூன்று வகுப்பான தேவர்களுண்டென்று சொல்லலாம். இவைகளன்றியில், சில்லரைத் தெய்வங்கள் பல உண்டு. அவைகள் எவையெனில்: சோல் (Sole) சூரியனையும், லூனு (Lune) சந்திரனையும், டெம்பஸ்டேட்ஸ் (Tempestates) புசல் காற்றையும், வால்கேனஸ் (Vulcanus) அக்கினிமலையையும் பிரகாசத்தையும், பாண்டஸ் (Fontus) ஊற்றையும், திவிஸ் பாட்டர் டிலிரினஸ் (Divus Pator Tilerinus) நதியையும், கோல் பர் (Coluber) பாம்பையும், நெப்டியூன்ஸ் (Neptunus) மேகத் தையும், போட்டியூன்சாலீகா முதலான வானுதி பஞ்சபூதங் களையும், வெஸ்டா (Vesta) வீட்டு தேவதையையும், (பெனு டிஸ் என்ட்லாரீஸ்) பிதுர் தேவதைகளாகிய மானுஷிக சம் பந்தங்களையும், மென்ஸ் (Mens) மனது, புடிசிடியா (Pudicitia) பதிவிரதம், பட்டாஸ் (Pictas) பக்தி, (பைடஸ்) விசுவாசம், விரிடஸ் (Vrtuia) பலம், ஸ்பெஸ் (Spes) நம்பிக்கை, பாலோ (Pallor) பயம், வால்பிடாஸ் (Voluptas) சந்தோஷம் முத லான மனோகத தேவர்களையும்; டெலஸ் (Tellus) பூமியையும், சாட்டர்ன்ஸ் (Saturns) விதைப்புக் காலத்தையும், ஓப்ஸ் (Ops) அறுப்புக்காலத்தையும், மார்ஸ் (Mars) யுத்த தேவனை யும், சில்வானஸ் (Silvanus) வனதேவதையையும், பானஸ் (Fanus) வேளாண்மையையும், டெர்மின்ஸ் (Termins) எல்லை யையும், செப்ரீர் (Saberer) புல்லையும், லிபர் (Liber) திராக்ஷ ரசத்தையும், போனுடி (Bena Dea) லக்ஷ்மியையும், மேகல மேட்டர் (Magla Mater) முதலான தொழில் தேவர்களையும் வணங்கிவருகிறார்கள்.

ரோமகர் திருவிழா உற்சவங்களைக் கொண்டாடுவதில் மிகவும் விருப்பமுள்ளவர்கள். வருஷம் 365 நாளும் விநோத மாகவும் வேடிக்கையாகவும் உற்சவங்களைக் கொண்டாடிவரு கிறார்கள்.

ஜனவரிமாதத்தில்: ஜானஸ், அக்னுலியா, கார்மெண்டியா, பெனிடா பண்டிகைகளையும்; பிப்ரவரி மாதத்தில்: ஜூனோ,

பானிவியா, லுப்பிவியா, பார்னிகேலிய பண்டிகைகளையும்; மார்ச்சு மாதத்தில்: மார்ஸ், வெஸ்டா, விதா, இக்குரியா, அன்னபர்ணு, லிபெர்லியா, மினர்வா பண்டிகைகளையும்; ஏப்ரல் மாதத்தில்: வென்ஸ், மகல்சியா, வினிவியா, ரபிகிலியா முதலான பண்டிகைகளையும்; மேமாதத்தில்: மொனேடேவா, விம்முரிலியா முதலானவைகளையும்; ஜூன் மாதத்தில்: கார்னு, பெலோனு, பிஸ்ட்டா, மாட்டெலியா முதலான பண்டிகைகளையும்; ஜூலை மாதத்தில்: பார்ச்சூனு, பாபில்பிகா, கேஸ்டர் முதலான பண்டிகைகளையும்; ஆகஷ்டு மாதத்தில்: பார்ச்சூனு, கஞ்சோலியா, ரதப்பிகானிசிவா முதலான பண்டிகைகளையும்; செப்டம்பர் மாதத்தில்: ஜூபிடர், ஜூனோ, மினர்வா பண்டிகைகளையும்; அக்டோபர் மாதத்தில்: மாண்டோலியா பண்டிகையையும்; டிசம்பர் மாதத்தில்: சாட்டர்னுலியா பண்டிகைகளையும் கொண்டாடி வருகிறார்கள்.

ரோமகர் காலிங்கிலஸ் பண்டிகையில் 1,60,000 பிராணிகளைப் பலிகொடுப்பதன்றியில்,இறந்த பெற்றோர்களைப் பிரதி தினமும் பக்தியோடு துதித்துப் பிரார்த்தனை செய்வார்கள். ரோமகர்: ஸிஸிரோ (Cicero) என்னும் தத்துவசாஸ்திரியினுடைய தர்மநூல்களையே சட்டதிட்டங்களாக வழங்கிவருகிறார்கள். மேலும் ரோமகர் சட்டதிட்டங்களின்படி சரியாய் நடக்கப்பட்டவர்கள். ஆகவே சரியாக நடக்கப்பட்ட மனிதர்களெல்லாரும் தேவர்களாகப் பாவிக்கப்பட்டு வருகிறார்கள்.

மேலும் ரோமகர் அநேக வாலிபஸ்திரீகளை கன்னிகர் மடங்களிற் சேர்த்துத் தேவர்களுக்கு ஆயுள் பரியந்தம் தொண்டுசெய்ய விடுவார்கள். அவர்களில் யாராவது விபசரித்தால் அவர்களை உயிரோடே புதைத்துவிடுவார்கள்.

அத்தேசத்திய தத்துவஞானிகளில் செனிகா (Ceneca) என்பவர் ஒரே தெய்வ முண்டென்று சொன்னார்.

இபிக்டிடஸ் (Epictetus) என்பவர் பல கடவுள்கள் உண்டென்றும் அவர்களில் ஜூபிடர் சிறந்தகடவுள் என்றும் சொன்னார்.

லூக்கிரிடஸ் (Lucretus) என்பவர் அன்பும் அழகுமே கடவுளென்று சொன்னார்.

ஆருலியஸ் (Aurelius), அண்டோனினஸ் (Amtoninus) என்பவரும் வேறு சிலரும் அத்வைதத்தை ஸ்தாபித்தார்கள்.

கி. பி. 190-ம்வருஷத்தில், ரோமன் மதத்தில் மாறுதல்கள் உண்டாயின. இப்போது ரோமராஜ்ஜியத்தில் 200-வருஷ காலங்களாக கிறிஸ்துமதம் பிரபலமாகி வருகிறது.

## THE RELIGIONS OF THE SCANDENAVIANS.

## ஸ்காந்திநேவியர் மதம்.

ஒருகாலத்தில் ஐரோப்பா கண்டத்தைச் சார்ந்த சுமார் 2200 சதுரமைல்களுள்ள நாடுகளில் வாசஞ்செய்துவந்த குடிகள் அனுசரித்த மதத்திற்கு ஸ்காந்திநேவியர் அல்லது டியூடனிக் மதமென்று பெயர். இந்த ஸ்காந்திநேவியரை இந்த ஜாதியார் இந்த கோத்திரத்தாரென்று திட்டமாய்ச் சொல்வது அசாத்தியமானபோதிலும் இவர்கள் பூர்வத்தில் ஆரியவம்சத்தின் ஒருவகுப்பார். இந்து ஐரோப்பிய குடும்பத்தாராகி ஐரோப்பா கண்டத்தின் மத்தியபாகத்தில் ஆடுமாடுகளை மேய்த்துக் கடைசியாக ஜர்மனர்களாகவும், டச்சுக்காரர்களாகவும், பிராஞ்சுக்காரர்களாகவும் ஆங்கிலோ சாக்சனர்களாகவும், பின்னும் பலவாறாக ஐரோப்பா கண்டத்தில் பலவிடங்களில் பரவினதன்றியில், கி. பி. 860-ல் ஐசிலாந்துக்கும், கி. பி. 982-ல் கிரீன்லாந்துக்கும் குடியேறினதன்றியில், கொலம்பஸ் என்பவர் அமெரிகா கண்டத்தைக் கண்டுபிடித்ததற்கு 500வருஷத்துக்கு முன்னமே இந்த ஸ்காந்திநேவியர் அமெரிகா கண்டத்தைக் கண்டு வந்தவர்களென்று சிலசாஸ்திரிகள் சொல்லுகிறார்கள்.

இந்த ஜாதியார் ஜர்மனி முதலான பாஷைகளிலிருந்து உற்பத்தியான நார்ஸ் (Norse) என்னும் பாஷையைப் பேசப்பட்ட யுத்தவீரர்கள். ஆகவே இவர்களுடைய தேவர்களும் யுத்தவீரர்களாயும், இகலோக சுகத்தை மாத்திரங் கொடுக்கிறவர்களாயும், சுகத்திற்கும் துக்கத்திற்கும்,இருட்டுக்கும் வெளிச்சத்திற்கும், குளிருக்கும் உஷ்ணத்திற்கும், இப்படி துவைதவிதமாகச் சண்டை செய்யப்பட்டவர்களாயிருக்கின்றனர்.

இவர்களுடைய முக்கியமான வேதநூல்களுக்கு எட்டாஸ் (Eddas), சாகாஸ் (Sagas) என்று பெயர். இவைகளில் முதல் எட்டாசில் கவிகளும் இரண்டாவது சாகாசில் வசன காவியங்களும் அடங்கியிருக்கின்றன. இவைகளோடு ஐசிலாந்தியர் 11-ம் நூற்றுண்டிலே பல கிரந்தங்களைச் சேர்த்தார்களாம். எட்டா என்பதற்குப் பாட்டியார் என்று அர்த்தமாம்.

இதன் முதல் எட்டாகிய வேலா (Vala) என்பவற்றின் மேன்மையைப்பற்றியும், ஹாவமால் (Haramal) என்பது ஸ்திரீ விரோதமான பழமொழிகளையும் கொண்டிருக்கின்றன.

## ஸ்காந்திநேவியர் சிருஷ்டியைப்பற்றிய கருத்து.

ஆதியில் அபிஸ் (Abyss) என்ற பிண்டமானது உத்தர தக்ஷிண உலகமாயிருந்ததாகவும், அதன்பேரில் வெனம் (Venom) என்னும் மழையானது பெய்து, தக்ஷணத்திலிருந்து வந்த காற்றினால் அந்தப் பிண்டம் கரைந்துபோனதாகவும், அப்படிக் கரைந்ததிலிருந்து இமிர் (Ymir) என்னும் இராக்ஷதன் பிறந்ததாகவும், அந்த இராக்ஷதனிலிருந்து ஒரு கொடியஜாதியார் ஜனித்ததாகவும், அதிலிருந்து மண்டான் (Mundan) என்னும் பசுவானது ஜனித்ததாகவும், அதிலிருந்து போர் (Bor), ஓடின் (Odin), விலா (Vila) முதலான தேவர்கள் பிறந்து அஷ்டி இமிர் (Ymir) என்ற இராக்ஷதனைக் கொன்றதாகவும், அந்த இராக்ஷதனுடைய உடலிலிருந்து வானமும் பூமியுமுண்டானதாகவுஞ் சொல்லுகிறார்கள்.

## ஸ்காந்திநேவியருடைய தேவர்கள்.

ஸ்காந்திநேவியருக்கு 12 விசேஷமான தேவர்களும், அநேக சில்லரைத் தேவர்களுமுண்டு. ஓடின் (Odin): இந்தத் தேவனை (ஆல்பாதர்) உலகபிதாவென்றும், சிருஷ்டிகரென்றும், ஆஸ்கா ட்றீ (Aska tree) ஆஸ்கா விருக்ஷத்தினடியில் உட்கார்ந்திருப்பாரென்றும், இந்தப் பூமியே இவருடைய மனைவியென்றும், இவருக்குத் தார் (Thor) என்ற ஒரு குமாரர் உண்டென்றும், இந்தத் தார் தேவனுக்கு பில்ஸ்கிர்னிர் (Bilskirnir) என்னுமிடத்திலே 540 ஆலயங்களிருக்கின்றனவென்றும், அவர் இரண்டு ஆட்டுக்கடாக்களால் கட்டியிழுக்கப்பட்ட இரதசாரதி என்றும், அவர் அபூர்வ சக்தியையுடையவரென்றும் சொல்லுகிறார்கள்.

ஓடின் தேவருடைய இரண்டாவது குமாரனுக்கு பால்டர் (Balder) என்று பெயர் சொல்லப்படும். இவர் மகா பரிசுத்தமும் படிப்பும் பிரசங்கிக்கும் சக்தியும் பிரிடாபிலிக் (Breidablik) வைகுண்டத்திலிருந்து மோக்ஷவிசாரணை செய்வாரென்றும்,

நாஜாட் (Njaud) என்னும் தேவன் அக்கினி தேவனென்றும், வாயுதேவனென்றும், வரங்கொடுக்குந் தேவனென்றும், இவர் சகாதி (Skadi) என்னும் இராக்ஷதன் மகளை விவாகஞ்செய்துகொண்டதாகவும், அவள் தன் புருஷனைத் தாயார் வீட்டுக்கு வரும்படி கூப்பிட்டதாகவும், அவளிஷ்டப்படி 9 நாள் அவள் வீட்டிலும் 3 நாள் புருஷன் வீட்டிலும் வந்து பிரே (Prey) என்கிற மகனையும், பிராய்ஜா (Froyja) என்கிற மகளையும்பெற்றதாகவும், அவர்களிருவரும் அதிக அழகுள்ளவர்களென்றும், பிரே என்னும் தேவன் மழைக்கும் வெளிச்சத்திற்கும் பழங்களுக்கும் அதிகாரியானபடியால் அறுப்புக்காலத்திலும் சமாதான காலத்திலும் அவரை வணங்கவேண்டுமென்றும், பிராய்ஜா என்பவள் விண்ணுலகத்தில் விரமாகாளியாய்நின்று ஜெயிப்பதாகவும் சொல்லுகிறார்கள்.

டயர் (Tyr): இந்தத் தேவன் யுத்தத்திற்கும், ஞானத்திற்கும் தலைவரென்றும் ஒரே கையுடைய கடவுளென்றும் சொல்லுகிறார்கள்.

ஆர் (Har): இத்தேவன் ஞானத்திற்கும், சாதுரியத்திற்கும் தலைவர். இத்தேவனுடைய மனைவியாகிய இடுனா (Idnna) என்பவள் ஒரு பெட்டியில் இரத்தைப்பழம் வைத்துக்கொண்டிருக்கிறாராம். விண்ணவர் விருத்தாப்பியமடைந்தபோது இவளிடம் ஓர் பழம் வாங்கிச் சாப்பிட்டால் வாலிபராகி விடுவார்களாம்.

எமிடால் (Hemidall): இவரை வெள்ளைத் தேவனென்றும் நவகன்னிகைகளின் மகனென்றும் ஒற்றைக் கொம்புள்ளவரென்றும், விண்ணுலகத்தாருக்கு வேலைக்காரனென்றும் சொல்லுகிறார்கள்.

விடார் (Vidar): இத்தேவர் பெரிய ஜோடுகளைப் போட்டுக்கொண்டு, கஷ்டகாலங்களில் உதவி செய்யப்பட்டவரென்றும், அல்லர் (Ullar) என்கிற தேவர் அம்பு பாணங்களை வைத்துச் சண்டை செய்யப்பட்டவரென்றும், பாசிடி (Foseti) என்னும் தேவர் வைகுண்டத்தின் உக்கிராணக்காரரென்றும், நியாயந் தீர்ப்பவரென்றும், பிரிக்கா (Frigga) சாகா (Saga) முதலான கன்னிகைகளும் அநேக சில்லரைத் தேவர்களு மிருக்கிறதாகச் சொல்லுகிறார்கள்.

ஸ்காந்திநேவியர் மதம் சற்றேறக்குறைய பாரசிக மதத்தைப்போல நன்மைக்கும் தீமைக்கும், சுகத்திற்கும் துக்கத்திற்கும், சண்டைசெய்யும் துவைத சித்தாந்தமா யிருந்தபோதிலும், பாரசிகர் மதம் இகபரசுகத்திற்கும், ஸ்காந்திநேவியர் மதம் இகலோக சுகத்திற்கு மாத்திரம் உதவிசெய்வதாக இருக்கின்றது. பொதுவாக ஸ்காந்திநேவியர் சுதந்தரம், சக்தி, சாமர்த்தியம், ஸ்திரீ சுதந்திரம் முதலானவைகளுக்குப் போராடுகிறவர்க ளானபடியால்; அவர்கள் தேவர்களும் போர்வீரரும், சக்திமான்களும், சுதந்தரவாளிகளுமாய் இருக்கிறார்கள். ஆகவே, ஒலிம்பஸ் மலைகளில் ஓடின் முதலான தேவர்கள் சண்டைகள் செய்ய பால்டிர் (Baldi.) என்னும் தேவன் இறந்துபோனதாகவும், அப்படி யிறந்ததற்காக உலகத்திலுள்ள பிராணிகளெல்லாம் அழுததாகவும், பிறகு தாரோ தேவன் இராக்ஷதருடன் சண்டைசெய்தும், மிட்கார்ட் (Midgard) என்கிற பாம்போடு சண்டைசெய்தும் தானும் செத்ததாகவும், பிறகு பூலோகம் நெருப்பாலெறிந்து புதிய உலகமுண்டாகியும், விடார் (Vidar), வாலி (Vali) என்கிற இரண்டு தேவர்கள் வருவதாகவும், ஷையார் புராணங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆதியில் கோயில்கள் இல்லை. பிறகு கட்டப்பட்டன. வருடத்தில் யுல் (Yul) என்னும் மூன்று பண்டிகைகளைக் கொண்டாடினாலும், சுவேதன் தேசத்தில் 9 வருஷத்திற்கு ஒருதரம் விசேஷமான பண்டிகை நடக்கிறது. அப்போது 9 நரஜீவன்களைப் பலி கொடுப்பார்கள். சில சமயங்களில் இராஜாக்களும் தமது இஷ்ட லாபத்தைக் கருதித் தமது புத்திரர்களைப் பலிகொடுப்பார்கள். மேலும் இந்தஜாதியாரில் யுத்தத்தில் யார் சாகிறார்களோ அவர்களும், அடித்து அல்லது குத்திக் கொல்லப்பட்டவர்களும் மோக்ஷத்தையடைவார்களாம். ஆனபடியால்வியாதியினால் முற்றுபிரா யிருக்கும்போது குத்திக் கொல்லும்படி கேட்டுக்கொள்வார்கள். பொதுவாக ஸ்காந்திநேவியர் மரியாதையையும் சத்தியத்தையும், சுதந்தரத்தையும், ஸ்திரீகளுடைய சுகத்தையும் பாராட்டப்பட்டவர்கள். ஆனதுபற்றியே இப்போது ஐரோப்பா கண்டத்தில் ஸ்திரீகளுக்கு இருக்கும் அந்தஸ்து அதிகாரம் சுதந்தரம் முதலான சிறப்புகள் இன்றளவும் ஊர்ஜிதப்பட் டிருக்கிறது. மேலும் பொதுஜன சமூகத்திற்காக இராஜாங்கமென்றும், பார்லிமெண்டு மந்திராலோசனை சபை என்றும், குடிகளால் தெரிந்தெடுக்கப்பட்ட

சபைகளை முதல்முதல் உலகத்திற்கு கற்பித்தவர்கள் இந்த ஸ்காந்திநேவியரே. இப்படிப்பட்ட ஜாதியார் நாளாவட்டத்தில் பற்பல சிறு ஜாதியார்களாகி ஐரோப்பா கண்டமெங்கும் பரவினார்கள். பிறகு கி.பி. 318-ல் பிறந்த யுல்பிலாஸ் (Ulphilas) என்பவர் கிறிஸ்து மதபோதகராகி ஸ்காந்திநேவியரைச் சார்ந்த ஜெர்மினியர், வண்டாளர், கோத்து, சாக்சன், லம்பார்டி, பர்கண்டியன், பிரான்சு முதலானவர்களுக்குக் கிறிஸ்து மதத்தைப் போதித்தார். கி. பி. 597-ம் வருஷத்தில் அகஸ்டியன் என்பவரால் ஆங்கிலேய சாக்சனியர் கிறிஸ்தவர்களானார்கள். கி. பி. 1000 வருஷத்தில் ஐசிலாந்திலும் கிறிஸ்துமதம் பிரவேசித்தது. பிறகு நாளாவட்டத்தில் ஸ்காந்திநேவியரில் பெருந்தொகையார் கிறிஸ்துமதஸ்தரானார்கள்.

---

## மெக்சிகோ தேசத்தார் மதம்.

## THE RELIGION OF THE MEXICONS.

மெக்ஸிகோதேசம் அமெரிக்கா கண்டத்திலிருக்கிறது. அதன் ஜனங்கள் முரட்டுத்தனமுள்ள காட்டுமனிதர்கள். இவர்களிற் சிலர் ஆதியில் சூரியனைப் பராபரவஸ்துவாக நம்பி வணங்கி வந்தார்கள். சிலர் பக்ஷிகளை வணங்கி வந்தார்கள். பிறகு மெச்ஸி (Mexi) என்னும் தருமசாஸ்திரி ஜனித்தபின் விட்ஸ்லிபுட்ஸ்லி (Vitzliputzli) என்னும் தேவன் ஆதியில் பக்ஷிரூபமாக ஜனித்து ஒரு சிறியமலையின்பேரில் வந்து உட்கார்ந்ததாகவும், அது உட்கார்ந்தவிடத்தில்தான் மெக்சிகோ (Meczico) என்னப்பட்ட பட்டணங் கட்டப்பட்டதாம். மேலும் டியாஸ் (Dios) என்னும் ஒரு பெரிய தேவன் இருக்கின்றதாம். அதன் விக்கிரகம் பயங்கர தோற்றமுள்ளதாக விருக்கிறது. அதற்கு உலகமே சிங்காசன மானபடியால் பெரிய கோளத்தின்மேல் சிறகுகளுள்ள சிரசோடும், கைகளில் பாம்புகளையும் ஆயுதங்களையும் பிடித்துக்கொண்டு உட்கார்ந்துகொண்டிருக்கும் பாவனையாகவும் பிரதிமைகள் செய்யப்பட்டிருக்கின்றன. ட்லாலோக் (Tlaloch) என்பது மெக்ஸிகருடைய அன்பும் அருமையுமுள்ள தேவன். டியோடல் (Teotl) என்னும் தேவன் சிருஷ்டி கர்த்தரென்றும், டோலோகன்ஹூகி (Tloquenhueque) என்பதை விசேஷ கடவுளாகக் கொண்டு டெஸ்குகோ (Tezcuco) என்னும் கவிராஜன் அதற்கு ஒன்பது அடுக்குள்ள கோபுரக்கோயிலைக் கட்டிவைத்தார். அத்

தேவனை இபால்னிமூன் (Ipalnemoon) சர்வ வல்லமையுள்ள
தேவனாகக்கொண்டு புஷ்பாதி தூபதீபங்களால் வணங்கி
வருகிறார்கள். சிலர் டாறுடேயூ (Tooratench) மெய்டிசிலி
(Melztile) இன்னும் சூரிய சந்திர தேவர்களையும் செண்டி
யோடில் (Centeotl) சோள்மாத் தேவதையையும், டெஸ்
கால் ஜோன்காட்டல் (Tezcalzoncatl) குடிக்கார சாமியையும்
வணங்கி வருகிறார்கள்.

டெஸ்கலிபுகா (Tescalipuca) என்பது பஞ்சத்தையும்
பெருநோய் முதலானவைகளையு முண்டாக்குந் தேவன்.
(Huitzilopochtle) ஹியூட்சிலேபட்சிலி என்னும் உயுத்தவீர
தேவன் எல்லாத்தேவர்களிலும் சிறந்ததாகக்கொண்டு மநுஷ
பலிகொடுத்து வணங்கிவருகிறார்கள். மேலும் மலை பிசாசுக
ளையும் ஆவிகளையும் நம்பி வணங்கிவருகிறார்கள்.

மெர்க்குரி (Mercury) என்பதைத் தனதானிய லக்ஷ்மி
யாக வழங்கி வணங்கி வருகிறார்கள்.

மேலும் இவர்கள் பூமியையுந் தேவனாக நம்பி வருஷத்
தில் பல நரபலிகளையுங் கொடுப்பார்கள். கோயில்களில் மனுஷ
ருடைய மண்டையோடுகளைத் தொங்கவிட் டிருப்பதன்
றிப் பலவித பாம்புகளையும் வளர்த்து வருகிறார்கள். பூஜாரி
கள் பிரதிதினம் ஸ்நானஞ்செய்து மிக பயபக்தியுடன் தொ
ழுது வருவார்கள். சில சமயங்களில் பத்துநாள் உபவாச
மிருப்பார்கள். இவர்களே டோபிட்ஜின் (Topitgin) என்று
சொல்லப்படுவார்கள். இவர்களுக்குப் பெருந்த மானியங்களு
ண்டு. இவர்கள் பொதுவாக வருஷத்தில் பலபண்டிகைகளைக்
கொண்டாடி ஆடியும் பாடியும் வந்தாலும், இகலோக சுகத்
தைப் பற்றியே பிரார்த்தனை செய்கிறார்கள். ஆனால் புனர்
ஜன்மத்தையும், தேவதண்டனையையும் நம்பிவருகிறார்கள்.
இந்த ஜாதியார் கலியாணஞ் செய்துகொள்ளும்போது மொட்
டையடித்துக்கொள்ளுவார்கள்; மேலும், கலியாணமான ஒரு
வருஷகாலம் வரையில் மணமகனும், மணமகளும் பேசுவ
தில்லை. பிறகு நாளாவட்டத்திற் பேசுவார்கள். மெக்ஸி
கோவில் இறந்துபோவோருக்குச் செய்யும் சடங்குகள் அனே
கம். அதாவது ஒருவன் இறந்தவுடனே அவன்கூட வைகு
ண்டம்போக ஒருகுடம் தண்ணீரையும் ஒரு குச்சுகாகிதங்களை
யும் கோடிதுணிகளையும் குருமார்கள் கொடுப்பதுடன் துணை
க்காக ஒரு நாயையும் கூடப்போட்டுப் புதைப்பார்கள். பெரிய

மனுஷர்களிறந்தால் அவருடைய மனைவிகளையும் வேலைக்காரர்களையும் கூடவே போட்டுச் சுட்டுவிடுதல் வழக்கம்.

## தார்த்தாரியர் மதம்.

## THE RELIGION OF THD TARTARS.

ஆசியாகண்டத்தின் வடக்குப் பாகமெல்லாம் பரவியிருக்கும் ஜனங்களுக்குத் தார்த்தாரியரென்று பெயர் சொல்லப்படும். இவர்கள் ஆதியில் சித்திய ஜாதியிலிருந்து பிரிந்தவர்கள். இந்தத் தார்த்தாரியரில் மங்கோலியர், காக்கேசியர், ஜார்ஜியர் என்றுதி பல வகுப்புகளுண்டு.

இந்த ஜாதியார் ஆதியில் மார்ஸ் (Mars) என்கிற ஒரு தேவனை விக்கிரகமாகச் செய்து அதற்குக் குதிரைகளைப் பலி கொடுத்து வந்தார்கள். பிறகு குதிரையை யடிக்குஞ் சவுக்கை (Whip) தெய்வமாக வணங்கி வந்தார்கள். மங்கோலிய தார்த்தாரியர் நிடிகே (Nitigay) என்கிற ஒரு கடவுளை சிருஷ்டிகர்த்தாவென்று வணங்கிவந்தாலும், டாலெய் லாமா (Dalai Lama) என்கிற சந்நியாச குருவுந் தேவனென்றும், அவருக்குக் கீழ் 20,000 சீடர்கள் லாசா (Lasa) என்னுமிடத்தில் இருப்பதாகவும், இவர்களில் ஹான்கிங்கு (Hanking) தேவ (Deva) என்பவர்கள் பிரதான சீடர்களும் உண்டென்று சொல்லுகிறார்கள். ஆனால் சாதாரண ஜனங்கள் மானிபா (Manipa) என்கிற ஒன்பதுசிரசுள்ள தேவனொருவன் உண்டென்றும், அது கிராமதேவதையென்றும் அதற்கு ஆடுகளை பலிகொடுத்து வணங்கி வருகிறார்கள்.

கடுசுடா (Katuchta) என்னுந்தேவன் பரிசுத்தத்தையுண்டாக்குங் கடவுளென்றும், புனர் ஜனனத்தைக் கொடுப்பதென்றுஞ் சொல்லுகிறார்கள். சிலரோவெனில் இந்தப் பூமியே தேவனென்றும், நடுராத்திரியில் எழுந்து பூமியில்விழுந்து புரளுவார்கள்.

ஜுகெக்னீஸ் (Gukagnies) என்னும்தார்த்தாரியர்: இறந்துபோனவர்களே தேவனென்று வணங்கி வருகிறார்கள். சிபேரியாவைச் சார்ந்த டாங்குசீஸ் (Tanguses)ஜாதியார் சஹமானன் (Sahamanan) என்கிற ஒரு சிருஷ்டிகர்த்தா உண்டென்றும், புராடீஸ் (Burates) ஜாதியார்: சூரியனையும் சந்திரனையும் சக்கேஷியன் (Cuccassian) பெரிய மனுஷர்களே தேவர்களென்

றும் வணங்கி வருகிறார்கள். இவர்கள் பலிகொடுக்கும் பிராணிகளைத் தலைகீழாகத் தூக்கி மரங்களில் தொங்கவிடுவார்கள். ஓபி நதிக்கரையி லுள்ளவர்கள். ஆஸ்டிக்ஸ் (Ostiacs) என்னும் ஒரு சிருஷ்டிகர்த்தா இருப்பதாக நம்பி வணங்கி வருகிறார்கள். தார்த்தாரியர் சொந்தத் தாய்மார்களோடு புணர்வது நியாயமென்று சொன்னாலும், 40 வயதுக்கு மேற்பட்டவர்களை மணஞ்செய்துகொள்வது அபூர்வம். தன் புருஷனையன்றி வேறொருவனுடன் புணரும் பெண்டுகளுடைய விபசாரத்தைக் கண்டறிவதற்காகக் கரடியின் மயிரைத் தொடும்படி ஸ்திரீகளை வருத்துவார்கள். விபசாரிகள் அது விஷத்தில் பயந்து தொடமாட்டார்கள். தொட்டால் புருஷனைவிட்டுப் பிரிந்து போகவேண்டும். உத்தம ஸ்திரீகளுடைய புருஷர்கள் இறந்தால் அவர்களுடைய ஞாபகச் சின்னமாக பெரிய பொம்மைகளைச் செய்து படுக்கையிற் போட்டுப் படுத்துக்கொள்ளுவார்கள். இறந்தவர்களை உடனே புதைக்காமல் மரத்திற் றொங்கவைத்துப் பலநாள் காய்ந்து எலும்புந் தோலுமாக வற்றிய பிறகு அதற்கு ஆபரணங்களைப் பூட்டிப் பூஜைசெய்து பிறகு புதைப்பார்கள்.

## ஜப்பான் தேசத்தாருடைய மதங்கள்.

## THE RELIGIONS OF THE JAPANESE.

சீனதேசத்துக் கடுத்த பசிபிக்கு சமுத்திரத்தி லிருக்கும் ஜப்பான் தேசத்தாருடைய மதம் சற்றேறக்குறைய இந்துக்களுடைய மதம்போலிருந்தாலும், அநேக வித்தியாசங்களுண்டு. பூர்வத்தில் சினிசிசு (Xenxis) என்கிற நாஸ்திக மத வகுப்பும், செடோரியஸ் (Xedorias), குயுக்சஸ் (Quexus) என்கிற மதவகுப்பும், ஜம்மாபோஸ் (Jammabos) என்கிற மதவகுப்பும் பிரபலமாயிருந்தன. இவர்களுடைய குருமார்கள் மகாபரிசுத்தவான்கள். குருமார்: நிகாசு (Neges) என்று அழைக்கப்படுவார்கள். இக்குருக்களுக்கு 6003 சீடர்களுண்டு. இவர்களுக்குச் சுமார் 2127 டிராஸ் (Tiros) என்கிற தங்கவர்ணக் கோயில்களுண்டு. ஒவ்வொரு கோயிலின் வாயிற்படியில் பேய்பூதத்தின் தலையைப்போல் பிரதிமைகள் செய்யப்பட்டிருக்கின்றன. ஆதியில் கடிதத்தில்வருண படங்களையெழுதி வணங்கிவந்தாலும் பிறகு விநோதமான விக்கிரகங்களைச் செய்யலானார்கள்.

அமிடாசு (Amidas) என்னும் தேவனே பராபரவஸ்து வென்றும், அது ஏழாயிரம் வருஷகாலமாக ஏழுதலைகளுடன் குதிரைமேல் நின்று ஆளுவதாகவும், அதற்கு நாமண்டா (Nananda) என்கிற பிரார்த்தனைகளைச் செய்து வருவதன்றி யில், சிலர் தங்கள் பிராணனையும் பலியாகக் கொடுப்பார்கள். வருடாந்திரத்தில் தங்க வருணமுள்ள பட்டுகளில் விநோத மாக உற்சவங் கொண்டாடுவார்கள்.

க்சாகா (Xaca) புத்தன் என்றும், ஞானியென்றும், இவர் இருபதினாயிரம் வருஷம் தவஞ்செய்து தேவனானதாகவும்,

ஜெபிசு (Jebis) தேவன் வர்த்தக வேளாண்மையை விருத்தியாக்குவதாகவும், இதை வர்த்தகர்களும் செம்படவர் களும் வணங்கிவருகிறார்கள்.

டகாகு (Daikoku) என்னுந் தேவன் தனதானியங்களை விருத்தியாக்குவதாகவும், டாசிடோகோ (Tasitoku) தேவன் நல்ல லாபத்தைக் கொடுப்பதாகவும், போட்டி (Fotei) தேவன் சந்தோஷத்தையும் சௌக்கியத்தையும் கொடுப்பதாகவும், கிவென் (Given) தேவன் வீட்டுத் தெய்வமாகவும், சுவா (Suva) என்பது வேட்டையாடுந் தேவனாகவும், பிட்சிமான் (Fatyaman) தேவன் பிசாசை யோட்டுவதாகவும் நம்பிப் பிரதி மைகளைச்செய்து வணங்கிவருகிறார்கள். ஜப்பானியர் சகுனம் பார்த்து ஒரே மனைவியை விவாகஞ் செய்துகொள்வார்கள். தேவர்கள் பவனிவரும்போது ஒவ்வொருவரும் ஒரு லாந்த ரைக் கொண்டுபோவார்கள். இறந்தவர்களைச் சுட்டபிறகு சாம் பலைப் புதைத்து சமாதிகட்டி அதற்குத் திரண்ட விளக்காக லாந்தர்களை வைப்பார்கள். இவர்களுடைய மனைவிகள் விபசாரி த்தால் கொலைசெய்து விடுவார்கள். புருஷர்களைப்போலவே ஸ்திரிகளும் கன்னிகைகளாகவிருந்து காலங்கழிப்பார்கள். இப் போது கிறிஸ்துமதம் ஒருவாறு பிரபலமாகவே (J. S. Mill Spencer) முதலான நாஸ்திகர்களுடைய கொள்கையும் பரவு கின்றது.

---

## சீயம் தேசத்து மதம்.

## THE RELIGIONS OF THE SIAMESE.

சீயம் தேசத்தின் மதம் சற்றேறக்குறைய பர்மா, சீனா, இந்து தேசத்தின் மதத்தைப்போ லிருக்கிறது. இவர்கள்

பராபரவஸ்துவாகிய தேவனை திருஸ்யாதிருஸ்யப் பொருளென்றுஞ் சொல்லுகிறார்கள்.

சோமன்கூடம் (Sonmon Codom) என்னுந் தேவன் புஷ்பத்தில் ஜனித்து சர்வ ஞானியாகி ஒரு விருக்ஷத்தின் அடியில் உட்கார்ந்து ஜெபஞ் செய்வதாகவும்,

தேவதத்தன் (Thavatat) என்னுந் தேவன் முன்சொன்ன சோமன் கூடத்தின் சகோதரனென்றும், இவ்விருவரும் பெரிய சண்டைகள் செய்து கடைசியில் ஷை சோமன் கூட தேவனே ஜெயித்ததாகவும், ஆகவே அதை சிரேஷ்ட தேவனாக வணங்கி வருகிறார்கள். அநேக அற்புதமான கோயில்களுண்டு. சில சமயங்களில் ஆட்டுக் குட்டிகளைக் கொன்று பூஜைசெய்து வருவார்கள்.

இவர்களுடைய குருமாருக்கு டாலபாயின்ஸ் (Talapoins) என்று பெயர் சொல்லப்படும். இவர்கள் சர்வாங்கக்ஷவரஞ் செய்துகொண்டு சந்நியாசிகளாக விருக்கிறார்கள். இவர்களுக்கு சன்கிரேடஸ் (Sancrates) என்கிற காரியகர்த்தர்களுண்டு. ஸ்திரீகளும் கன்னிகா மடத்தைச் சார்ந்து பரிசுத்தமாகக் காலங்கழிப்பார்கள். சீயம்தேசத்தார்பொதுவாகத் தருமவான்கள். செத்த பிணங்களை முதலில் சுட்டபிறகு சாம்பலையெடுத்துவைத்துச் சமாதியைக் கட்டுவார்கள். இறந்தவர்களுக்குக் கொள்ளிவைப்பதைச் சிரேஷ்டமாகக் கொண்டாடுகிறார்கள். இராஜகுடும்பத்தில் யாராவது இறந்தால் இராஜா வீட்டிலிருந்து சுடுகாடுவரையில் ஒரு கயிற்றைக் கட்டி அதன் மூலமாக இராஜா வீட்டிலிருந்து கொள்ளியைச் சுட்டுவிடுவார்கள்.

---

## பெருவியன் தேசத்தார் மதம்.

## THE RELIGIONS OF THE PERUVIANS.

இந்த ஜாதியாருடைய மதம் சற்றேறக்குறைய இந்து தேசத்தாருடைய மதத்தைத்தப்போலிருக்கிறது. இவர்கள் ஆடுமாடுகளைப் பலிகொடுத்து வருவதன்றியில், சில சமயங்களில் நரபலியுங் கொடுத்து வருகிறார்கள். கொஞ்சமாகப் பாவஞ் செய்தவர்கள் தங்கள் விரலையாவது, மூக்கையாவது, உதட்டையாவது அறுத்து இரத்தத்தை வடியவைப்பார்கள். மான்கோ கூபாக் (Monco Cupac) என்னுந் தருமசாஸ்திரி காலத்தில் இந்த ஜாதியார் சூரியனையும் சந்திரனையும் வணங்கி

வந்தார்கள். இந்தச் சூரியதேவனுக்கு: பச்சகாமிக்கு (Pachacamac) என்றும், அது சிருஷ்டிகர்த்தா என்றும், இந்தத் தேவன் இடியையும், மின்னலையும் தூதர்களாக நியமித்துக் கொண்டு துஷ்டர்களை சிக்ஷிப்பதாகவும் சொல்லுகிறார்கள்.

ஹன்கா (Hanca) என்னுந் தேவன் சிரஞ்சீவி கடவுளென்றும், ஆபசிடாஸ் (Apachitas) என்னுந் தேவன் கஷ்டத்தைக் கொடுக்கப்பட்ட தேவனென்றும், அதற்கு நரபலி கொடுத்தும் வருகிறார்கள். சந்திரன் பெண் தேவதையென்றும், அது சூரியன் மனைவியென்றும், சாஸ்கா (Chasca) தேவனைச் சுக்கிரபகவானென்றும் வணங்கி வருகிறார்கள். இவர்களுடைய கோயில்களில் ஐந்து அறைகளுண்டு. அவ்வைந்திலொன்றில் குருமார் வசிப்பார்கள். மேலும் அவர்கள் மூன்று தினத்திற் கொருதரம் புசிப்பார்கள். இவர்களுக்குக் கன்னிகா மடங்களுமுண்டு. இவர்கள் சொந்த சகோதரர்களையும், சகோதரிகளையும் விவாகஞ் செய்துகொள்வார்கள். இவர்கள் மறுஜனன முண்டென்று சொல்லுகிறார்கள்.

---

## நியூபவுந்துலாந்து, கனடா தேசத்தார் மதங்கள்.

## THE RELIGIONS OF NEW FOUNDLAND AND CANADA.

இவர்கள் யாவரும் ஆதியில் சூரியனை வணங்கி வந்தார்கள். பிறகு இவர்களில் சிலர், சதுர்தேவ தத்துவத்தை நம்பி வந்தார்கள். அதாவது:—பிதா, மாதா, குமாரன், சூரியன் என்கிற நான்கு பொருள்கள் சேர்ந்து ஒரு தேவனென்று சொல்லுகிறார்கள். ஓல்கானோஸ் ஓகி (Olkanosokee) என்பது சிருஷ்டிகர்த்தாவென்றும், இந்தேவன் ஆதியில் பூமியை அம்புபோட்டுப் பிளந்து அதிலிருந்து ஓர் ஆணையும் பெண்ணையும் பிறப்பித்ததாகவும், இவ்விருவரிலிருந்து பிரபஞ்சப் பிரஜா விருத்தியானதாகவுஞ் சொல்லுகிறார்கள். மேலும், கிச்சிமெயிடோ (Kitchimeitoie) என்னும் நல்ல வரங்களைக் கொடுக்குந் தேவனும், மாட்சிமாயிடோ (Matchimaitou) என்னுந் தேவன் கேடுகளை யுண்டாக்குந் தேவனென்றும், ஆட்டுக்குட்டிகளும் இராஜாக்களும் இறந்தபிறகு தேவர்களாவார்களென்றுஞ் சொல்லுகிறார்கள். யுத்தவீரர்கள் மாலையில் குதித்துக் கொண்டாடுவார்கள். இந்த ஜாதியார்கள் பல பெண்களை விவாகஞ் செய்துகொள்வார்கள். இறந்தவர்களைப் புதைத்தாலும், சிலகாலமான பிறகு எலும்புகளைக் கிண்டியெடுத்து

வணங்கி வருகிறார்கள். இவர்கள் ஏதாவது பெரிய நதியைக் கடக்க வேண்டியிருந்தால் முதலில் அந்த நதிக்கு வணங்கிப் பூஜை செய்து பிறகு பிரார்த்தனையோடு கடந்துபோவார்கள்.

---

## பைகோ தேசத்தார் மதம்.

## THE RELIGION OF THE PEGU.

பைகோதேசத்தாருக்கு ஐந்துவிதமான தேவர்களுண்டு. இவ்வைந்து தேவர்களிருந்து உலகத்தைப் பாதுகாத்து வருவதாகச் சொல்லுகிறார்கள். இவ்வைந்தில் நான்காவது தேவன் பிறந்து இப்போது 2200 வருஷங்களுக்குமுன் இறந்துபோனதாகவும், இனி சீக்கிரத்தில் ஐந்தாவது தேவனுஞ் சாகுமென்றுஞ் சொல்லுகிறார்கள். பிறகு உலகம் நெருப்பால் பஸ்பமாகிவிடுமென்கிறார்கள்.

பொதுவாக உலகத்திலுள்ள நன்மைகளுக் கெல்லாம் கடவுள் கர்த்தா என்றும், தீமைகளுக்கெல்லாம் பிசாசு கர்த்தவென்றுஞ் சொல்லுகிறார்கள்.

இவர்களுக்கு அநேக கோயில்களுண்டு. கோயில்களுக்கு வெரலாசு (Varollas) என்று சொல்லுவார்கள். ஒரு பெரிய கோயிலில் 1,20,000 தேவவிக்கிரகங்களிருக்கின்றன. இந்த ஜாதியார் கோயில்களில் தலைகுனிந்து வணங்குவார்கள். மேலும் வியாதிமுதலான இக்கட்டுகளுக்குப் பிரார்த்தனைகளைச்செய்துகொண்டு தருமசத்திரங்களைக் கட்டி வைப்பார்கள். சிலரோவெனில் வருடத்தில் மூன்றுமாதம் பிசாசு வாசத்துக்காக வீட்டு எஜமானன் வீட்டைவிட்டு வேறு இடத்தில் வாசஞ்செய்வான். இவர்கள் சந்திரமாசத்தை யனுசரித்துப் பிரதி சோமவாரமும் தொழும் நாளாக வைத்துக்கொண்டிருக்கிறார்கள். வருஷத்தில் ஸ்பான் கியாசி (Span Giache), ஸ்பான்கல்லு (Spancallna) பண்டிகைகளைக் கொண்டாடுவார்கள். இவர்களுடைய குருமார் ஒருவேளை மாத்திரம் உண்டு பரிசுத்தமாகக் காலங்கழிப்பார்கள். பொதுவாக இந்த ஜாதியார் துக்கத்தைக்காட்ட க்ஷவரஞ் செய்துகொள்வார்கள். இவர்களிற் சிலர் உண்ணும்போது மூன்று கவளத்தை நாய்க்குப் போடுவார்கள்.

---

## பிலிப்பியன் தீவு மதம்.

## THE RELIGION OF THE PHILLIPPINE ISLANDS &c.

இந்தத்தீவி லிருக்கப்பட்டவர்கள் சூரிய சந்திரர்களை வணங்கிவந்தாலும், இன்னு மனேக சில்லறைத் தேவர்களையும் தேவிகளையும் நம்பிக்கொண்டாடுவதன்றியில் ஒரு சிருஷ்டிகர்த்தா உண்டென்றும், அதற்குப் படாலா (Batala) என்றுஞ் சொல்லுவார்கள். ஆனால் சுற்றுப் பக்கங்களி லுள்ளவர்கள் இத்தேவனை அப்பா (Abba) என்று சொல்லி விநோதமான விக்கிரகங்களைச் செய்து வணங்கி வருகிறார்கள்.

---

## மலாக்கா தேசத்தார் மதம்.

## THE RELIGION OF THE MOLUCCA.

இந்தத் தீவாரில் பல வகுப்பாருண்டு. பெரும்பான்மையோர் மகம்மது மதத்தை யனுசரித்து வந்தாலும், ஆதி குடிகள் வாயுவே பராபர வஸ்துவென்றும், அதற்கு லானிடிச்சோ (Lanitcho) என்றுஞ் சொல்லுகிறார்கள். மேலும் நிடோ (Nito) என்று சொல்லப்பட்ட துஷ்ட தேவதைக ளிருப்பதாகவும், ஜாவான்ஜஸ் (Gawanges) என்கிற மந்திரதேவன் இருப்பதாகவும் நம்பிப் பல விக்கிரகங்களைச் செய்து வணங்கி வருடத்தில் பல பண்டிகைகளைக் கொண்டாடி வருகிறார்கள்.

---

## போர்னியோ, சுமத்திரா தீவுகளின் மதம்.

## THE RELIGIONS OF BORNEO AND SUMATRA.

இந்தத்தீவுகளில் உள்ளவர்களிற் சிலர் மஹமது மதத்தை அனுசரித்தாலும், அநேகர் சூரிய சந்திரர்களை வணங்கி வருவதன்றியில், பக்ஷிசகுனங்களை அதிகமாய்ப் பார்த்து வருகிறார்கள். வாலிபர்கள் கலியாணஞ்செய்ய வேண்டுமாகில் கலியாணப் பெண்ணுக்குப் பகையாளிகளுடைய தலைகளை வெட்டிச் சீராகக் கொடுக்கவேண்டும். அப்படிக் கிருந்தும் அவர்கள் இறந்த பிறகு தேகமும் ஆத்மாவும் நிர்வாணத்தை அடையுமென்றுஞ் சொல்லுகிறார்கள்.

---

## ஜாவா தேசத்தார் மதம்.
## THE RELIGION OF JAVA.

இதில் இந்து தத்வாதி மதவாதிகளும், மஹம்மது சமயத்தாரும், படேவியா (Batavian) முதலான இடங்களில் கிறிஸ்து சமயத்தாரும் இருக்கிறார்கள். ஆனால் பூர்வகுடிகள் சூரிய சந்திரர்களை வணங்கியும், ஒருவித சிருஷ்டி கர்த்தாவை நம்பியும் வந்தார்கள். நிகபேரியன்கள் சந்திரனையும் வேறு பிசாசுகளையும் வைத்து வணங்கி வருகிறார்கள்.

---

## இலங்கைத்தீவார் மதம்.
## THE RELIGION OF CEYLON.

இந்தத் தீவிலுள்ளவர்களில் சிங்களவர் என்னப்பட்டவர்கள் ஒரு சிருஷ்டிகர்த்தா உண்டென்றும், அவருக்கு உதவியாக நாவாயாத்திரை, வேளாண்மை முதலான சில்லரைக்காரியங்களைச் செய்வதற்காகச் சில்லரைத் தேவதைகளும், ஜாகா (Jaca) என்கிற பிசாசும் இருப்பதாக நம்பி வணங்கி வருகிறார்கள். மேலும் சிலர் நவக்கிரகங்களே தேவர்களென்றும் நம்பி வருவதன்றியில், இந்துதேசத்திலிருந்துபோன புத்த மதம் அதிக பிரபலமாயிருக்கிறது. புத்தருடைய பல்லானது இத்தீவுக்கு எப்படியோ கொண்டுபோகப்பட்டும், அதற்கு அற்புதமான கோயில்கள் கட்டப்பட்டும், வருஷத்தில் பலபண்டிகைகளையும் கொண்டாடிவருகிறார்கள். இந்தப் புத்தருடைய குருக்களுக்கு டெரும்வானீசு (Terumwanees) என்று சொல்வார்கள். இவர்கள் மகா படிப்பாளிகளும் பரிசுத்தவான்களுமா யிருக்கிறார்கள். இப்போது கிறிஸ்துமதம் சிலவிடங்களில் புகுந்துவருகிறது.

## மலாயதீவு மதம்.
## THE RELIGION OF MALDIVESE.

இந்தத்தீவின் பெரும்பான்மையோர் மஹம்மது மதஸ்தர்களாய் இருந்தபோதிலும், அநேகர் கப்பல் ஓட்டுவதற்குச் சாதகமாகிய வாயுதேவனையும், சமுத்திரத்தையும் தேவர்களாக நம்பி வணங்கிவருகிறார்கள். சில சமயங்களில் இவைகளுக்கு ஆடு கோழிகளை வெட்டிப் பூசை செய்வார்கள். காற்று மும்முரமாய் அடிக்கும்போது சமுத்திரத்தில் எச்சில்

துப்பினுல் பாவமென்று பயப்படுகிருர்கள். இப்படிக் கெல்லா மிருந்தும் மேலோர் ஒரு சிருஷ்டிகர்த்தா உண்டென்றும், அவர் சேனுதிபதியென்றும், அதற்கு டாவிடசு (Tavides) என்றும், மற்ற பஞ்சபூதியங்களையும் நம்பிவருகிருர்கள். வியாதிமுதலானவைகளெல்லாம் பிசாசினுல்வருகிறதாக நம்பி ஆடு கோழிகளை அவைகளுக்கு வெட்டிவருகிருர்கள்.

## லாப்லாந்தியர் மதம்.

## THE RELIGION OF LAPLANDERS.

லாப்லாந்தியர்: ஜூமாலா (Jumala) என்ற ஒரு சிருஷ்டி கர்த்தா இருப்பதாகவும்; அஜ்கா (Ajcka), ஸ்டோர்ஜன்கரா (Storjunkara), பெயுயி (Beywe) என்ற மும்மூர்த்திக ளிருப்பதாகவும், இவர்களுக்குதவியாக அநேக பிசாசுகளிருந்து உலக காரியங்களை நடத்துவதாகவும், அவைகளுக்கு மான், ஆடு, கோழி முதலானவைகளை வெட்டிப் பூசைசெய்து வணங்கி வருகிருர்கள். இவர்களில் யாராவது இறந்தால் அந்த வீட்டைவிட்டு ஆறுமாதம் ஓடிப்போவார்கள். முற்காலத்தில் செத்தவர்களைப் புதைத்துவந்தார்கள். இப்போது சிலர் இரும்புத் தகடுகளில் போட்டு பஸ்பமாக்கிவிடுவார்கள். இப்போது அங்கே கிறிஸ்துமதம் பிரபலமாகிவருகிறது.

## மிசிசிபி தேசத்தார் மதம்.

## THE RELIGION OF MISSISIPPI.

மிசிசிபி ஜனங்கள் சூரியனைச் சிருஷ்டி கர்த்தாவென்று நம்பி மநோபக்தி செய்துவருகிருர்கள். இவர்களிற் பெரும் பான்மையோர் இந்த உலகமும் வானுலகமும் ஆதியில் ஒரு ஸ்திரீயினுல் படைக்கப்பட்டதென்றும், அந்த ஸ்திரீயும் அவளுடைய குமாரனும் இருந்து உலகத்தைப் பரிபாலித்து வரும்போது, ஸ்திரீயானவள் பலஹீனத்தினுல்வானுலகத்திலிருந்துகீழேவிழும்போது ஒருஆமை தாங்கிக்கொண்டதாகவும் சொல்லுகிருர்கள். சுற்றுப்பக்கங்களிலுள்ள ஜனங்கள் ஒட்காம் (Otkom) என்ற பராபரவஸ்துவே ஆதிகர்த்தாவென்றும், அதற்குத் தாழ்ந்த சில்லரைத் தேவதைகளையும் ஆறுகளையும் தேவர்களாக நம்பிவருகிருர்கள், ஆற்றில் வெள்ளம் வரும்போது கரடித்தோல்களை மரியாதைக்காக மரங்களில் தொங்கப் போடுவார்கள். மிசிசிபியில், நாச்செஸ் (Natches) என்ற பெரிய கோயில்களைக் கட்டியிருக்கிருர்கள்.

## பிலோரிடியன் மதம்.

### THE RELIGION OF FLORIDANS.

இவர்கள் விக்கிரகாராதனையைச் செய்யப்பட்டவர்கள். இவர்கள் டாயா (Toia) என்ற பிசாசையும் வணங்கி, அநேக கோயில்களைக் கட்டியிருக்கிறார்கள். அந்தக் கோயில்களில் விக்கிரகங்களை வைத்து வணங்காமல் செத்த பிணங்களையும் சிறந்த சொத்துக்களையும் வைப்பதற்காக உபயோகப்படுத்தி வருகிறார்கள். இவர்களில் அபலசிட்சு (Apalacits) என்பவர்கள் சூரியனை வணங்கியும், அநேக பண்டிகைகளைக் கொண்டாடியும்வருகிறார்கள். இவர்களுடையகுருமாருக்கு ஜவுயன்ஸ் (Jouains) என்றுபெயராம். அவர்கள் சூரியனுக்குமுன் முழந்தாளில் இருந்து கும்பிட்டுச் சாம்பிராணிதீபாராதனையும், சூரியனைத்துதிக்கும் வானம்பாடி முதலான சிலபக்ஷிகளின் இறையாகிய தேனையும் வைத்து வணங்குகிறார்கள். பிலோரிடா ஜாதியார் தமது முதல் பிள்ளைகளைத் தேவனுக்கும் இராஜனுக்கும் பலிகொடுப்பார்கள். இந்த ஜாதியில் புருடனை இழந்தவர்கள் மூன்றுநாளைக்குச் சாப்பிடாமல் துக்கங்கொண்டாடியும், சிலர் இறந்த பிணங்களுக்குச் சுகந்த வாசனைகளைக் கட்டிப் பெட்டியி லடக்கஞ்செய்து மூன்று வருஷம் வைத்துப் பூசை செய்வார்கள். இப்படிக்கெல்லா மிருந்தும் மறுஜனன முண்டென்றும் மோக்ஷநரக முண்டென்றும் நம்பிவருகிறார்கள்.

## காரபிதீவார் மதம்.

### THE RELIGION OE CARIBEES.

காரபிதேசத்தார் நல்ல ஆவிகளும், தீய ஆவிகளும் உண்டென்றும், அவைகளுக்கு மபோயா (Maboia) என்றும்,பிரதி மனுஷனிடத்திலும் சிமென் (Chemen) என்ற ஆவி இருப்பதாகவும், ஆதியில் லூகோ (Looko) என்ற ஆதிமனுஷனால் சகல ஜீவகோடிகளும் உற்பத்தியானதாகவும், அந்த மனுஷன் இறந்தபிறகு வானத்திற்குப் போனதாகவும், வானம் படைக்கப்படாததென்றும் சொல்லுகிறார்கள். மேலுமிவர்கள் சிமன்ஸ் (Chemens) என்னும் கடவுள் சிரேஷ்ட தேவனென்றும், அதற்குப் பூசைகள் செய்தும்வருகிறார்கள். மாபோயாஎன்பது துஷ்டதேவதையானபடியால் அதைச் சிறிய விக்கிரக ரூபங்களாகச்செய்து வணங்கிவருகிறார்கள். இவர்களுடைய குருமார்கள் போயாஸ (Boias) என்று சொல்லப்

படுவர். அவர்கள் ரொட்டியும் தண்ணீரும் சாப்பிட்டுச் சிறு குடிசைகளில் காலம் கழிப்பார்கள். இத்தீவார் மனுஷருடைய தேகத்தில் பல ஆத்மாக்களிருப்பதாகவும், அந்தந்த ஆத்மா செய்த பாவத்தை அந்தந்த ஆத்மா மறுஜென்மத்தில் அனுபவிக்குமென்றும் நம்புகிறார்கள்.

## கினியா தேசத்தார் மதம்.
## THE RELIGION OF GUINEA.

கினியாதேசத்தார் நாகரிகமற்ற நிகிரோஜாதியார்கள். இவர்களுக்குப் படிப்புமில்லை; புத்தகங்களும் வேதங்களும் இதிகாசங்களும் சாஸ்திரிகளுங் கிடையா. இப்படிக்கெல்லாம் இருந்தும், இவர்களுக்குத் தேவபக்தியும் தேவஞானமு மிருக்கிறது. இந்த ஜாதியார்: பெட்சிஸ் (Fetiches) என்னும் தேவர்களிருப்பதாகவும், அத்தேவர்கள் தங்களைப்போலவே கருப்பு வருணமுள்ளவர்களாகவும், தீங்கையே பெரும்பாலும் செய்யப்பட்டவர்களாகவும், இடிவிழுந்த விடங்கள் பயங்கரவிடங்களாகவும் எண்ணி அவ்விடம் விக்கிரகங்களைச் செய்து வணங்கிவருகிறார்கள். இவர்களுடைய குருமாருக்கு மாசவுகி (Masoucki) என்று சொல்லுவார்கள். இவர்களுடைய துஷ்ட தேவர்கள் கருநாயைப்போல் அவதாரமெடுத்துவந்து அநேக தீங்குகளைச் செய்யும் என்றும் சொல்லுகிறார்கள். செவ்வாய்க்கிழமை இந்த ஜாதியாருக்குத் தொழுகை நாளாகையால் அந்தத் தினத்தில் விசேஷ நரபலியும், வேறு கோழி முதலானவைகளின் பலியும் கொடுப்பார்கள். இராஜாக்கள் சிங்காசனமேறிய வருட உற்சவங்களை மேன்மையாகக் கொண்டாடுவதன்றியில் இறந்தவர்களை ஸ்திரீகளே கொண்டுபோய் அடக்கஞ்செய்வது சிரேஷ்டமாகக் கொண்டாடப்பட்டு வருகிறது.

## பெனின், அட்ரா தேசத்தார் மதம்.
## THE RELIGION OF BENIN & ADRA.

இத்தேசத்தார்கள் துஷ்டதேவதைகளை நம்பி அவைகளுக்கு மிருகப்பிராணிகளையும், நரசீவன்களையும் பலிகொடுத்து வருகிறார்கள். ஆனால் சிருஷ்டிகர்த்தா ஒருவருண்டென்றும், அவர் சர்வநன்மைகளைப்பொருந்தியவரென்றும், ஆகவே அப்படிப்பட்டவரை வணங்க வேண்டியதில்லை யென்றும், இந்த உலகை வாழ்க்கையைக் கெடுக்கும் துஷ்டதேவதைகளாகிய பெட்சிஸ்(Fitiches) என்பவைகளைமாத்திரம் வணங்க

வேண்டுமென்றும், பிரதிமனுஷனும் செய்யும் பாவங்களைச்
சொல்லி மனஸ்தாபப்படவும், பாவத்துக்காகப் பிரார்த்தனை
செய்யவும், பிட்சேரி (Fitissere) என்னும் மத்தியஸ்தர்களிரு
க்கிறார்கள். இந்த ஜாதியாரில் ஸ்திரீகளும், பிள்ளைகளும் பக
வானை வணங்குவதில்லை. இக்தேசத்தார் யுத்தத்தி லிறந்தால்
மோக்ஷம் கிடைக்குமென்று எண்ணுகிறார்கள். ஆனதுபற்றி
யே இறந்த பிணங்களின் கைகளைப் பின்பக்கமாகக்கட்டி நிற்க
வைத்து வில்அம்பு இவைகளால் அலங்கரித்துப் பிறகு சமாதி
யில் வைப்பார்கள். பிரபுக்களும், இராஜாக்களும் இறந்தால்
வைகுண்டம் போக அவர்களுக்குத் துணைவராக நாலைந்து
வேலைக்காரர்களையும் கூடப்போட்டுப் புதைப்பார்கள்.

## காங்கோ அங்கோலா முதலானவர்களின் மதம்.

## THE RELION OF CONGO ANGOLU &c.

இந்த ஜாதியார்கள் தமது ராஜனை தேவனென்றும் அவ
னை சாம்பர் (Samber) பாங்கோ (Bango) என்றுதி பெயர்க
ளால் புகழ்ந்தும்வணங்கியும், அந்த ராஜனும் மற்றக் குடிகளுங்
கூடி மாக்கிசோ (Mokisso) சிகாக்கி (Checocke) என்ற இரு
வித விக்கிரகங்களைச் செய்து வணங்கிவருகிறார்கள். இவர்க
ளுக்கு கெங்கா காம்பரி (Ganga Gambery) என்னுந் தேவதை
நல்ல குறிகளைச் சொல்லும் ஔவையாரென்றும் நம்பியிருப்ப
தன்றியில் அநேக சில்லறை வீட்டுத் தேவர்களையும் வைத்து
வணங்கிவருகிறார்கள். மடாம்போ (Matambe) மாகாணத்
தில் மீராம்பா (Mireimba) என்ற பயங்கர மந்திர விக்கிரக மிரு
க்கிறது. அதை ஜயசிலர்கள் வணங்கிவருகிறார்கள். சிலர் புலி,
பாம்பு, ஆடு, மாடு இவைகளுக்கும் வணக்கஞ் செய்துவருகிறா
ர்கள். பொதுவாகக் காங்கோலியர் டியுஸ்கடா (Deuscata)
என்ற ஒரு சிருஷ்டி கர்த்தா உண்டென்றும், இவர்களுடைய
குருமாருக்குக் கங்காசு (Gangas) என்றும் சொல்லுகிறார்கள்.
இந்தக்குருமார் வியாதியஸ்தர்களைத் தரிசிக்கும்போது அவர்க
ளுடைய சுகத்துக்காக ஒரு இஷ்ட தேவதா விக்கிரகத்தை
வெகுமதியாகக்கொடுத்து வருவார்கள். அங்கோலியரும் ஒரு
சிருஷ்டி கர்த்தா உண்டென்றும், ஜாம்பன் பாங்கோவான்
(Zambanponyo) தேவனென்றும் மாக்கிசாசு (Mokissoo) என்
னும் சில்லறைத்தேவர்களை நம்பிவணங்கி, குயியம்பிரா (Quim-
baroa) என்ற மதகேளிக்கையாடுவார்கள். சிடோம்பி (Chitom-
be) என்ற தீர்க்கதரிசிகளையும், நெகாம்போ (Negambo) என்ற

குருமார்களையும், நிபிண்டி (Nebinde) என்ற பூதியக்கடவுளையும், வைத்தியராகிய நிகோனி (Necconi) செவிடை நீக்கும் நிகோடி (Negoti) குஷ்டத்தை நீக்கும் நிசாம்பி (Nesambi) முதலானவர்களை விசுவாசித்தும் வருகிறார்கள். காகேசியஜாதியார் (Qui sange) குசாங்கோவைக்கடவுளென்றும் நம்பி அதற்கு 12 அடி நீளமான விக்கிரகத்தைச் செய்து வணங்கி வருகிறார்கள்.

## அரகான் தேசத்தாருடைய மதம்.

## THE RELIGION OF ARACAN.

இந்த அரகான் தேசத்தார் பல தேவர்களை நம்பி வணங்கிவந்தாலும் அவர்களுடைய முக்கியமான தேவனை குவே புரேகிரே (Quiay Puragiay) என்றுசொல்லி மிகவும் விநோத விக்கிரகமாகச் செய்தும், வாகனங்களில் வைத்தும் பவனி செய்து கொண்டாடியும்வருகிறார்கள். அநேகர் பக்கசெடில் களைக்குத்திக்கொண்டு இரத்தத்தைச் சிதறவைப்பார்கள். இத்தேவனை பொரோ (Pora) என்னும்மலையில், பத்மாம்ஸ் விக்ரகரூபமாகச் செய்து வைக்கப்பட்டிருக்கிறது. இவர்கள் மழை பனி முதலானவைகளால் தேவர்களுக்கு ஜலதோஷம் பிடித்துக் கொள்ளுமென்று விநோதகோயில் குகைகளைக் கட்டியிருக்கிறார்கள்.

இவர்களுடைய குருமாருக்கு ரெனெயின்ஸ் (Raneins) என்று பெயர் சொல்லப்படும். அவர்கள் சர்வாங்க க்ஷவரஞ் செய்துகொண்டும், மஞ்சள் துணிகளைத் தரித்தும் சந்நியாசிகளாக இருந்தும் காலங்கழிப்பார்கள்.

இந்த அரகானியர் 4 மனைவிகளுக்கு அதிகமான ஸ்திரீகளை விவாகஞ் செய்துகொள்ளுவார்கள். இராஜாக்கள் பன்னிரண்டுக்கு அதிகமான பெண்களை விவாகஞ் செய்துகொள்வார்கள். இந்த ஜாதியாரும் ஒரு சிருஷ்டிகர்த்தாவையும், மருஜனனத்தையும் நம்பிவருகிறார்கள். இறந்த பிரேதங்களிலிருக்கும் ஆத்மாவை எமன்வந்து பிடித்துப்போகாதபடிக்கு பயங்கர கொட்டுமுழக்கங்களைச் செய்து வருகிறார்கள்.

## காபிரேரிகளுடைய மதம்.

## THE RELIGION OF CAFFRARIA.

ஆபிரிகாகண்டத்தின் தெற்குப்பாகத்தில்நன்னம்பிக்கை முனையின் சுற்றுப்பக்கங்களி லிருக்கும் ஜனங்களைக் காபிரிக ளென்று சொல்வார்கள். ஆபிரிகாகண்டத்தின் சிலபாகங்களில் மகம்மது சமயமும், பேகன்களென்னும் மூடபக்தியும் பிர பலமாகவிருக்கினும், பொதுவாகக் காப்பிரிகள் ஒரு சிருஷ்டி கர்த்தா உண்டென்றும்,அதற்கு குனியாடிக்கோசா(Gounia Ticqusa) என்ற பெயரிட்டும், பலவிதமான விக்கிரகங்களைச் செய்துவைத்தும், அவைகளுக்கு அநேகங்கோயில்களைக்கட்டி யும், சிலர் சந்திரனையும் வணங்கிவருவதன்றியில், சில மூடர்கள் ஆகாயத்தையும், சூரிய சந்திர நக்ஷத்திராதிகளை யும் அண்ணாந்து பார்த்துப்பிறகு கண்ணைமூடிக்கொண்டு துதி த்துக்கொண்டாடுவார்கள். மேலும் மேபக்கு (May Bug) என் னும் ஒருவித பூச்சியானது அவர்களுக்கு சுபக்ஷேமங்களைக் கொடுப்பதாகவெண்ணிப் பாதுகாத்து வருகிறார்கள். அவை களை யாரும் கொல்லாதபடி பராமரிப்பார்கள். அநேக ஆடு மாடுகளை வெட்டிப் பலிகொடுப்பார்கள். இவர்களுடைய குரு மார்கள் ஸ்பின்(Spin) என்று சொல்லப்படுவர். அவர்கள் வய திலும், ஞானத்திலும், முதிர்ந்த பரிசுத்தவான்களா யிருக் கிறார்கள்.

இவர்கள் தமது இஷ்டத்துக்கும், சக்திக்கும் தக்க மனைவி களை விவாகஞ் செய்துகொண்டுவருகிறார்கள். விபசாரிகளை உடனே கொலைசெய்துவிடுவார்கள். விதவைகள் புனர் விவா கஞ் செய்துகொள்ளப் போகும்போதெல்லாம் தமது முன் விரல்களை வெட்டிக்கொள்வார்கள். இப்படி ஆஸ்திகமதத்தின் கிளைகள் தினேதினே உற்பத்தியாகிவளர்ந்து,காய்த்து,பூத்து, பழம் பெற்று பல்லுயிராரை பாத்து காத்து வருகின்றது.

———(o)———

# முடிவுரை.

ஆஸ்திகமத சித்தாந்தச் சரித்திரமாகிய இந்த மகவிருக்ஷத்தை ஆதியோடந்தமாக வாசிப்பவருக்கு, ஆஸ்திகமானது இவ்வண்டத்தில் ஆதிமுதல் நாளதுவரையில் எத்தனையோ வகைகளான பெயர்களினாலும். பாஷைகளினாலும் ஆசார அநுஷ்டானங்களினாலும் பிரகாசித்துப் பிரபஞ்சத்தாருக்கு ஆறுதலையையும், ஆநந்தத்தையும் தந்துவருவது பிரதியக்ஷமாகும்.

அருள்வள்ளல் ஒன்றே யுள்ளவன் என்றும், அவனையடைந்து இகபரசுகத்தை யடையவேண்டுமென்றுஞ் சொல்லும் ஆஸ்திகமதமானது இவ்வளவுபேதங்களோடு பிரகாசிக்க வேண்டுவதென்னை யென்றும், சிலர் வினவலாம். இவ்வினாவிற்கு விடைசொல்ல வெகுதூரம் போகவேண்டியதில்லை. இதற்கு ஒரு சிறு உதாரணமே போதும். அதாவது கங்கைநதியானது ஹிமாசல பருவதத்தின்மீது கங்கோத்திரி என்னுமிடத்தில் ஓங்கார வடிவமுள்ள பளிங்குக் குகையிலிருந்து உற்பத்தியாகிப் பிறகு 13,800அடிகள் உயரத்திலிருந்து கீழே ஓடி வந்து,பரதவருஷமென்னும் இந்நாட்டில் விழுந்து பாய, அதன் வலது கரையில் யமுனையும், இடது கரையிற் குமதி, கோகிரா, குண்டகி முதலான உபநதிகள் வந்துசேரக் கங்கையானது பல்கிப் பெருகி அநேக நாடுநகரங்களைச் செழிப்பாக்கி, அநந்தகோடி கந்தமூல கிருமிகீடாதிகளைப் பாதுகாத்துக்கொண்டு அநேக கிளைநதிகளோடு சுமார் 1500 மைல்கள் வரையிலோடி, வங்காளக் கடலிற் பாய்வது அநேகருக்குத் தெரிந்த விஷயம். அந்தக் கங்கைநதி ஒன்றாக விருந்தும் காலதேச பேதத்தினால் பாகீரதி என்றாதி பற்பல பெயர்களையும், குணபேதங்களையும் பெற்றாலும், உண்மையில் ஒரே நதியேயல்லவா ? அதுபோலவே, ஆஸ்திகமதமானது பரமேசுவரனிடமிருந்து உற்பத்தியாகிப் பிரபஞ்ச சிருஷ்டி காலந்தொடங்கி ஒரு அமிர்தரச ஜீவநதியைப்போல் பிரபஞ்சத்தின் பலபாகங்களிலும், பலகாலங்களிலும், பலபெயர்களாலும் குணங்களினாலும் பிரகாசித்துப் பல்லுயிரனைத்துக்கும் இகபரசாதனங்களைக் கொடுத்து, அவர்களைப் பரமேசுவரனாகிய பேராநந்தப் பெருங்கடலில் சேரும்படி செய்துவருகின்றது. , பரமேசுவரனால் படைக்கப்பட்ட பஞ்சபூதங்களும்

பிராணிகளும் பொதுவிலக்ஷணத்தில் ஒன்றேயாகிலும், கால தேச வர்த்தமானாதி பேதங்களினால் வேறு வேறாகப் பிரகாசித்தல் பிரத்தியக்ஷம். பஞ்சபூதாதிகள் தேசகால பேதங்களால் வித்தியாசப்பட்டிருப்பனபோலவே பிராணிகோடிகளும் வேறுவேறு ரூபகுணாதிகளைப் பெற்றிருத்தல் பிரத்தியக்ஷம். பார்க்கும்படியான பாறைகளும், பருவதங்களும், பெருஞ்சமுத்திரங்களும், கடல்களும், நதிகளும், விருக்ஷங்களும் அவைகளுக்கு ஆதாரபூதமாக இருக்கும் மண்ணும் பொதுலக்ஷணங்களில் ஒன்றாகினும், அவற்றின் குணபேதங்கள் இடத்துக்கு இடம் பேதப்பட்டு நிற்றல் பிரத்தியக்ஷமல்லவா? அதேமாதிரியாகவே பிராணகோடிகளிற் சிறந்த மானவஜாதியார் பெயரில் ஒரே ஜாதியாராக இருக்கினும் அவர்களிற் சிலர்: ஆரியர், காக்கேஷியர், மலாயர், மங்கோலியர், தார்த்தாரியர், எஸ்குவி மாகஸ் முதலானவர்கள் மற்ற ஜாதி மானிடரைப் பார்க்கிலும், கண் காது மூக்கு முதலான உருப்புகளில் வேறு வேறு விதமானவைகளை உடையவர்களாகவும், குணங்களிலும் நடையுடை பாவனைகளிலும் வேறு வேறு விதமானவர்களாகவும்இருத்தல் பிரத்தியக்ஷம். ஆகவே, ஆஸ்திகமதமானது காலத்துக்கும் தேசத்துக்கும் வேறுவேறு விதமாகத் தோற்றவேண்டுவது சஹஜமேயல்லவா? இப்படியாதல் ஈசுவர நியமனம். இதைப்பற்றியன்றோ ஸ்ரீ தாயுமானசுவாமிகள் "தட்டாமனின்றதெது சமயகோடிகளெலாந் தந்தெய்வமென்தெய்வமென்றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவுநின்றதெது, வெங்கணும் பெருவழக்காய் யாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமா யென்றைக்கு முள்ளதெது" என்றும், "ஊரனந்தம் பெற்ற பேரனந்தஞ் சுற்று முறவனந்தம் வினையினால், உடலனந்தஞ்செயும் வினையனந்தங் கருத்தோவனந்தம் பெற்றபேர் சீரனந்தஞ்சொர்க்க நரகமுமனந்தநற்றெய்வமு மனந்தபேதந் திகழ்கின்றசமயமு மதனால் ஞானசிற்சத்தியாலுணர்ந்து" என்றும், "வேறுபடுஞ் சமயமெலாம் புகுந்துபார்க்கின், விளங்குபரம் பொருளேநின் விளையாட்டல்லால், மாறுபடுங் கருத்தில்லை முடிவில்மோன,வாரிதியில் நதித்திரள்போல் வயங்கிற்று" என்றும் சொல்லியிருக்கின்றனர்.

"தேருங்கால் தேவனொருவனே என்றுரைப்பர்
ஆருமறியா ரவர்பெருமை—ஒரும்
பொருள்முடிவு மித்தனையே எத்தவஞ் செய்தார்க்கும்
அருள்முடிவ தாழிய ரன்பால்."

என்றும் சித்தியாரிலும் சொல்லப்பட்டிருக்கின்றது. விண்ணுலகிற் காணும் நக்ஷத்திரங்கள் சாதாரணப் பார்வைக்கு ஒரே விதமானவைகளாக இருக்கினும், அவைகள் உருவத்திலும் ஒட்டத்திலும், குணத்திலும் வேறுவேறு விதமானவைகளாக இருக்கின்றன வல்லவோ? மண்ணுலகிற் காணும் மரமுதலான கந்தமூலங்கள் ஒரே வகுப்பைச் சார்ந்தவைகளாக இருக்கினும், அவற்றின் உருவம் குணமுதலானவைகள் வேறு வேறானவைகளல்லவோ. மனோஹரமான மாமரம் ஒன்றாக இருக்கினும் அதன் குணங்களைப்பற்றிப் புளிப்பு மாமரம், கொட்டை மாமரம், கட்டு மாமரம் என்றாதி பெயர்கள் வழங்குதல்போலவே, மண்டலத்திலுள்ள மநுஷர்கள் ஒரே ஜாதியாக இருந்தும் அவர்கள் ரூபலாவண்ணியங்களினாலும், குணபேதங்களினாலும் வித்தியாசப்பட்டிருக்கிறார்களல்லவோ? அதுபோலவே ஆஸ்திகமதம் ஒன்றாகிலும் அது கால பேதத்தினாலும், தேச பேதத்தினாலும் பாஷா பேதத்தினாலும், வேஷா பேதத்தினாலும் வேறுவேறு மதங்களாகத் தோன்றினும், உண்மையை உற்றுப்பார்ப்பவருக்கு அம்மதங்களின் முக்கிய கருத்துக்கள் எல்லாம் ஒரேவிதமான கருத்துகளாகவுமிருத்தல் கரதலாமலகம்போல் காணலாம். ஒரு மதத்தின் சிறந்தலட்சண மென்னவென்று ஆராய்வோமாகில், அம்மதத்திற் பிரதிபாதிக்கப்பட்ட பரம்பொருளின் இலக்ஷணத்தையும், அப்பரம்பொருளை அடையும் வழிகளையும், அப்படியடைவோருடைய இலக்ஷணங்களையும் விவரமாகச் சொல்வதேயாம். இச் சித்தாந்தத்தைக்கொண்டு இப்போது உலகத்தில் இருக்கும் பிரபல மதங்களினுடைய கருத்துக்களை ஆராய்வோமாகில், அவைகளெல்லாம் சற்றேறக்குறைய ஒரேவிதமானகருத்துக்களை உடையனவாகவேஇருத்தல் பிரத்தியக்ஷமாகும். உதாரணமாக: ஆரியநாட்டு ஆஸ்திகர்கள் வேத உபநிஷத்துக்களில் பரம்பொருளின் இலக்ஷணத்தைப்பற்றி எம்மதத்தாரும் சம்மதமென்று சொல்லும்படி ஸம்ஸ்கிருத பாஷையிற் புகழ்ந்திருத்தல் பிரத்தியக்ஷம். அவற்றிற்கிணங்க இத் தென்னாட்டு ஞானிகளுக்குள் நம்மாழ்வார்,

"உளன் எனில் உளன் அவன் உருவு இவ்வுருவுகள்
உளன் அலன் எனில் அவன் உருவும் இவ்வுருவுகள்
உளன் என இலன் என இவைகுணம் உடைமையின்
உளன் இருதகைமையோடு ஒழிவிலன் பரந்தே." என்றும்,

"திடவிசும் பெருவெளி நீர் நிலம் இவைமிசை
படர்பொருள் முழுவதுமாய் அவை அவைதோறும்
உடன்மிசை உயிரெனக்கரந்து எங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே." என்றும்,

திருமங்கையாழ்வார்.

"மின்னுருவாய் முன்னுருவில் வேதநான்காய்
விளக்கொளியாய் முளைத்தெழுந்த திங்கள்தானாய்
பின்னுருவாய் முன்னுருவிற் பிணிமூப்பில்லா
பிறப்பிலியா யிறப்பதற்கே யெண்ணாதெண்ணும்
பொன்னுருவாய் மணியுருவிற் பூதமைந்தாய்ப்
புனலுருவா யனலுருவிற் றிகழுஞ்சோதி
தன்னுருவா யென்னுருவில் நின்றவெந்தை
தளிர்புரையும் திருவடியென் றலைமேற் கொண்டேன்.",
என்றும்,

அப்பர் சுவாமிகள்.

"விறகிற்றீயினன்பாலிற்படு நெய்போல்
மறைய நின்றனன் மாமணிச் சோதியான்" என்றும்,

திருமூலர் திருமந்திரத்தில்

"சீவனுக்குள்ளே சிவமனம் பூத்தது" என்றும்,

"காலினில் உற்றும் கரும்பினிற் கட்டியும்
பாலினுள் நெய்யும் பழத்துள் இரதமும்
பூவினில் நாற்றமும் போலுளன் எம்மிறை
கனவலன் எங்கும் கலந்து நின்றானே." என்றும்,

"அன்புஞ் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே" என்றும்,

சொல்லி இருப்பதைப்போலவே, கிறிஸ்தவர்கள் ஒரே கடவுளுண்டென்றும், மகம்மதியரும் ஒரே கடவுளுண்டென்றும், சொல்லி வணங்கிவருவது பிரத்தியக்ஷமல்லவா? இம்மாதிரியாகவே அந்த ஒரே கடவுளை ஹிப்புருவில் எலோஹிம் (Elohim) என்றும், அசீரியர் அசூரி (Ashuri) என்றும், துருக்கியர் அல்லா (Allah) என்றும், ஆர்மோரியன் டோய்

என்றும், லத்தீனில் டயிஸ் (Dues) என்றும், செல்டிக், காலி கில் தின் (Din) என்றும், பிராஞ்சில் டியூ (Deou) என்றும், ஸ்பெயினில் டயோஸ் (Dios) என்றும், போர்த்துகிசில்டியான் (Dion) என்றும், இத்தாலியில் இட்டியோ (Idoio) என்றும், ஐரிஷில் தியா (Dya) என்றும், ஜெர்மனியில் காட்டு (Gott) என்றும், பெல்மிஷிலில் குட் (Good) என்றும், டச்சில் காட் (God) என்றும், டியூடோனிக்கில் குதா (Gutha) என்றும், நார்வேயில் கட்(Gud) என்றும்,பாளிஷில் பாக் (Bog) என்றும், லாப்லாந்தில் ஜப்மால் (Jubmal) என்றும், பினோனில் ஜுமால (Jumala) என்றும், இந்துஸ்தானியில் குதா (Khuda) என்றும், தார்த்தாரியில் மகாதால் (Magathal) என்றும், பெரிசியாவில் சோடா (Choda) என்றும்,ஜப்பானில் சின்காமி (SinKami) என்றும், மடகஸ்காவில் ஜான்ஹார் (Zanhar) என்றும், பெருவியாவில் புச்சோகாமா (Puchocoma) என்றும், ஹங்கேரியாவில் இஷ்டன் (Isten) என்றும், இப்படியே பூலோகத்தின் பல தேசத்தார்கள் பரமேசுரனுக்குப் பல பாஷைகளில் பல பெயர்களிட்டுப் பிரார்த்தித்து வருகிறார்கள். உலகத்தில் எத்தனை நாக்குகளுண்டோ அத்தனை மதங்களுண்டாகுமென்று தியோடா பார்க்கர் சொன்னதைப்போலவே, இப்போது உலகில் 3065 விதமான பாஷைகளும், 1008 விதமான மதங்களுமிருப்பதாகக்கணக்கிட்டிருக்கிறார்கள்.இனி எத்தனை விதமான பாஷைகளும் எத்தனை விதமான மதங்களுமுண்டாகுமோ தெரியவில்லை. இப்படிப் பரமேசுவரனை பல்லோர் பல பாஷைகளிற் பலபெயர்களிட்டு வணங்கினாலும், உற்றுப் பார்ப்பவருக்கு இப்பெயர்களெல்லாம் அந்த ஒரே பரமேசுவரனுடைய பல குணங்களைப்பற்றிப் பூசித்துப் புனைந்தப் பெயர்களேயாகும். அன்றியும் பரமேசுரனே பரமபிதாவென்றும், அவனால் படைக்கப்பெற்ற மானிடர் யாவரும் சாதிபேதம் சமயபேதமற்றுச் சகலரும் சகோதர வாஞ்சையுடன் சமரசமாக வாழவேண்டுமென்றும் பெரிய மதங்களெல்லாங் கோஷிக்கின்றன. அதற்குத் திருஷ்டாந்தமாக,

நம்மாழ்வார்.

"குலந்தாங்கு சாதிகணலிலுங் கீழிழிந்தெத்தனை
நலந்தானிலாத சண்டாளர் சண்டாளர்க் காளாகிலும்
வலந்தாங்குசக்கரத் தண்ணன் மணிவண்ணர்க்காளென்றுள்
கலந்தாரடியார் தம்மடியா ரெம்மடிகளே

## திருநாவுக்கரசு சுவாமிகள்.

"சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவரேனு
மங்குவா ரவர்செல்வ மதிப்போ மல்லோ
மாதேவர்க் கேகாந்த ரல்லாராகில்
அங்கமெல்லாங் குறைந்தழுகு தொழுநோயரா
யாவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகி
லவர்கண்டீர் யாம்வணங்குங் கடவுளாரே" என்றும்,

"ஈசனுக் கன்பில்லார் எவ்வுயிர்க்கும் அன்பில்லார்
தமக்கு மன்பில்லார்
பேசுவதென் னறிவில்லாப் பிணங்களை நாமிணங்கிற்
பிறப்பினிலு மிறப்பினிலும் பிணங்கிடுவர் விடுநீ
ஆசையொடும் அரனடியா ரடியாரை அடைந்திட்
டவர்கருமம் உன்கரும மாகச்செய்து
கூசிமொழிந் தருண்ஞானக் குறியினின்று கும்பிட்டுத்
தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே."

என்று சித்தியாரிலும் கூறியிருப்பதைப்போலவே கிறிஸ்து மகம்மதுமுதலானமதஸ்தர்களும் ஜாதிபேதத்தைக்கண்டித்து சகோதரவாஞ்சையைவிருத்தியாக்கிவருவதுபிரத்தியக்ஷமல்லவா? ஆகவே பிரபஞ்சத்திலுள்ள பெரியமதங்கள்எல்லாம்ஆஸ்திகமத சித்தாந்தத்தையே ஸ்தாபிக்கிறதென்பது திண்ணமேயாம். இவ்விதம் பிரபஞ்சத்திலுள்ள பெரியமதங்கள் எல்லாம் ஈசுவர பக்தியையும், சகோதர வாஞ்சையையும் விருத்தியாக்கி வருகின்றன எனில், இப்போது உலகில் மதவிஷயமாக அநேக சண்டை சச்சரவுகள் உண்டாகி மண்டைகள் உடைந்து மாடமாளிகை கூடகோபுரங்கள் எல்லாம் இடிக்கப்பட்டு, கோர்ட்டுக் கச்சேரிகளில் பெரும் வழக்குகள் நடக்கவேண்டிய காரணமென்னவென்று சிலர் வினவக்கூடும். இவ்வினவுக்கும் விடை சொல்ல வெகுதூரம் போகவேண்டுவதில்லை. இந்த உலகம் சிருஷ்டிக்கப்பெற்று எத்தனையோ ஆயிரம் வருஷங்களாகியும் இன்னும் பரிபக்குவ தசையை யடையவில்லை—என்றால், இந்த உலகத்தின் ஜனங்கள் எத்தனையோ வருஷ காலங்களாகப் பிறந்து படித்துப் பிரதிஷ்டை பெற்ற

வர்களாகினும், இன்னும் சிறு குழந்தைகளாகவே இருக்கின்றனர். அவர்கள் இவ்வுலகத்தினுடைய கேவலமான பதார்த்த குண தருமங்களையும் அறியாத பாலியர்களாகவே இருக்கின்றனர். கேவலம் சிசு பிரகிருதியிலிருப்பவர்களும், அபரிபூரணரும், பரதந்திரருமாகிய மானிடர்: பூரணரும், சுவதந்திரரும், அப்பிரமேயருமாகிய பரமேசுவரனுடைய குணபூஷணங்களையும், அவரால் படைக்கப்பட்ட ஜீவாத்துமாக்களின் விலக்ஷணங்களையும், அந்த ஜீவாத்துமாக்கள் அவனையடையும் வழிமுறைகளையும் தெள்ளத் தெளியத் தெரிந்துய்யும் சக்தியை இன்னும் யடையாமலிருப்பதனால்; யானையைக் கண்ட குருடர்களைப்போல் சண்டை சச்சரவுகளைச் செய்துகொண்டிருக்கின்றனர். பரமேசுவரனால் படைக்கப்பட்ட பிரதிமநுஷனும் அப்பரமேசுவரனைப்போல் நான்கு சிரேஷ்ட குணங்களையும் பிதா புத்திர சம்பந்தத்தைப்போல் பெற்றிருக்க வேண்டும். எப்படியெனில்,

மானுஷீக ஜீவனனது:—(1) பாலியம், (2) பிள்ளைப் பருவம், (3) வாலிபம், (4) முதுமை என்னும் பருவங்களிலிருந்து,

(1) உணர்ச்சி, (2) விசுவாசம், (3) நினைவு, (4) வலிமை என்பவை தோன்றி, அவைகளிலிருந்து,

(1) விருப்பம், (2) ஆத்மா, (3) மனம், (4) சிந்தனை அல்லது துணிபு என்பவை பிரபலமாகி, அவைகளிலிருந்து,

(1) அன்பு, (2) வணக்கம், (3) ஞானம், (4) சக்தி விருத்தியாகி, அவைகளிலிருந்து,

(1) நன்மை, (2) பரிசுத்தம், (3) சத்தியம், (4) நீதி முதலானவை தோன்றி, அவற்றிலிருந்து,

(1) தயை, (2) ஈசுவர பக்தி, (3) ஞானம், (4) தருமம் முதலான குணங்கள் உண்டாகில் மனுஷன் ஈசுவரனுடைய குமாரனாகப் பிதா புத்திர சம்பந்தத்தை யடையவேண்டும். இதுவே பிராணபடம் என்று பிரபல தத்துவ ஞானிகள் சொல்லியிருக்கிறார்கள்.

# LIFE

IN ITS

# FOUR CARDINALS.

———(o)———

I—INFANCY; II—CHILDHOOD; III—YOUTH;
IV—MATURITY;

DEVELOP

I—FEELING; II—FAITH; III—THOUGHT;
IV—STRENGTH;

Under God's inspiration and vitalization, in the

I—HEART; II—SOUL; III—MIND; IV—WILL.

THENCE GROW

I—LOVE; II—REVERENCE; III—KNOWLEDGE;
IV—POWER;

In their countless harmonies and combinations;
and lift us more and more into the

I—GOOD; II—HOLY; III—TRUE; IV—RIGHT;

or, all in one, into

I—MERCY; II—GODLINESS; III—WISDOM;
IV—JUSTICE;

SO MAKING

*MAN A CHILD OF GOD,*

Like Father, like Son.

SUCH IS THE NATURAL AND DIVINE

**Plan of Life.**

இப்படி பரமேசுவரன் மனுஷனுக்கு அருளிய இயற்கைக் குணங்களைச் செயற்கையால் விருத்தியாக்கிக் கொண்டாலொழிய மனுஷன் பூரண குணமுடையவன், அல்லது புருஷலக்ஷணம் பூரணமாகப் பெற்றவன் என்று சொல்லல் பொருந்தாது. அப்படிப் பொருந்தாமற்போகவே, மனுஷன் பரமேசுவரனுடைய குணபூஷணங்களையும், ஜீவாத்துமாவின் விலக்ஷ

ணங்களையும், அந்த ஜீவாத்துமாக்கள் பரமாத்துமாவை யடையும் விதங்களும் குறைவுபெற்று ஆஸ்திகமதம் பூரணம் பெறுதிருப்பது சஹஜமேயாம். இதற்கு திருஷ்டாந்தமாக: இப்போது பூலோகத்திலுள்ள சில பெரிய மதங்களின் குறைவு நிறைவுகளைப்பற்றித் தாரதம்மிய மறியும் தத்துவஞானிகள் (Comparative Theologists) கண்டறிந்த சமய தாரதம்மிய பரிக்ஷை இதனடியிற் காணலாம்.

## ஆஸ்திகமத சித்தாந்தம் என்னும் மதவிருக்ஷத்தின் சில பெரிய கிளைகளாகிய மதங்களின் தாரதம்மியங் காட்டும் சிட்டா.

1-வது: ஆரியர் அல்லது இந்து மதத்தில்—ஈசுவரபக்தி, ஆத்மஞானம், தத்துவஞானம், சத்தின்சத்தியம், மித்தை யதிகம், அத்வைதம், மாயை, கருமபலன் புனர்ஜனனம் சடங்குகள், பிதுர்பூஜை, தருமம், தானம், பரோபகாரம், ஜாதிபேதம், சமயபேதம் இவை அதிகமாகவும், நீதி, தைரியம், ஆண்மை, ஸமரசஞானம், சகோதரவாஞ்சை, சுருசுருப்பு, தேசாபிமானம் இவை குறைவுபட்டிருப்பனவாகவும்,

2-வது: எகிப்துதேசமதத்தில்—பூததத்துவம், சக்தி, விகற்பம், சடங்குகள் இவை அதிகமாகவும்; ஈசுவரஞானம், ஆத்துமஞானம், தத்துவஞானம், தருமம், தைரியம், மதாபிமானம், தேசாபிமானம் இவை குறைவுபட்டிருப்பனவாகவும்,

3-வது: சீனுதேசத்தின் மதத்தில்—புராதன வழக்கம், பெரியோர் பிதா மாதா பூஜை ஜனசமூஹ வாழ்வு, தற்பெருமை இவை அதிகமாகவும்; ஈசுவரபக்தி, ஆத்மஞானம், ஆண்மை, சமரசஞானம், நவநாகரீகம் இவை குறைவுபட்டிருப்பனவாகவும்,

4-வது: பவுத்தமதத்தில்—புத்திவிருத்தி, புருஷாகாரம், புனர்ஜனனம், இயற்கைஞானம், நீதி, தருமம், சமாதானம், பரோபகாரம், பச்சாதாபம் அதிகமாகவும்; ஈசுவரபக்தி,

ஆத்மஞானம், ஆண்மை, தேசாபிமானம் இவை குறைவுபட்டிருப்பனவாகவும்,

5-வது: யூதமதத்தில்—ஈசுவரபயம், நம்பிக்கை, பலிகள், சடங்குகள் இவை அதிகமாகவும்; ஆத்மஞானம், தத்துவஞானம், தயை, தருமம், தேசாபிமானம் இவை குறைவுபட்டிருப்பனவாகவும்,

6-வது: கிறிஸ்துமதத்தில்—ஈசுவரபக்தி, சமரசஞானம், சஹோதரவாஞ்சை, சுருசுருப்பு, சக்தி, நீதி, சடங்குகள், ஆண்மை, தேசாபிமானம் இவை அதிகமாகவும்; ஆத்மஞானம், தத்துவஞானம் இவை குறைவுபட்டிருப்பனவாகவும்,

7-வது: மகமது மார்க்கத்தில்—ஈசுவரபக்தி, அதிர்ஷ்டம், அடக்கம், சகோதரவாஞ்சை, தருமம், ஆண்மை, மதவைராக்கியம் இவை அதிகமாகவும்; ஆத்மஞானம், தத்துவஞானம், சடங்குகள் இவை குறைவுபட்டிருப்பனவாகவும்,

8-வது: ஜைந்துமதத்தில்—நியாயாநியாயம், சச்சரவு, சண்டை, சுதந்திரம், சடங்குகள் இவை அதிகமாகவும்; ஈசுவரஞானம், ஆத்மஞானம், தத்துவஞானம், தருமம், தயை இவை குறைவுபட்டிருப்பனவாகவும்,

9-வது: ஸ்காந்திநேவியர்மதத்தில்—சுதந்திரம், சண்டை, இயற்கைஞானம் இவை அதிகமாகவும்; ஈசுவரபக்தி, ஆத்மஞானம், தத்துவஞானம், தயை, தானம் இவை குறைவுபட்டிருப்பனவாகவும்,

10-வது: கிரேக்கர் ரோமகர் மதங்களில்—அழகு, ஆண்மை தோற்றம், மனுஷத்துவம், கிடாத்திரம், சிற்றின்பம் இவை அதிகமாகவும்; ஈசுவரபக்தி, ஆத்மஞானம், தத்துவஞானம், தருமம், தயை, நீதி இவை குறைவுபட்டிருப்பனவாகவும் கணித்து எழுதியிருக்கின்றன. இப்படிச் சொல்லிய சமயசரித்திர தாரதம்மிய சோதனைகளினால் பூலோகத்திலிருக்கும் எந்தப் பெரிய மதமும் இன்னமும் பூரணம்பெறுதிருத்தல் பிரத்தியக்ஷமாகும்.

இந்தச்சமயபரிக்ஷையினால் ஆஸ்திகமதத்திலிருந்து உண்டான சில பெரிய மதங்களில் ஈசுவரபக்திக் கேற்றபடி மற்ற அங்கங்கள் குறைந்து இருத்தல் பிரத்தியக்ஷமாகும். இப்படியாதற்குக் காரணம், அம்மதஸ்தர்கள் இன்னும் பரிபூரண

தசைக்கு வரவில்லையென்றே ஏற்படும். அப்படி ஏற்படவே அம்மதஸ்தர்கள் எமது மதம் பெரிது, உமது மதம் சிறிது என்று சொல்லிக்கொண்டு கடைசியில் சமயசண்டை சச்சரவுகள் செய்கின்றனர். இப்படி மதக்கலக்கங்களுண்டாவதற்கு முக்கிய காரணர்: அந்தந்த மதங்களின் குருமார்களும், ஆசாரியருமே யாவார்கள். எப்படியெனில்,

> "குசப்தஸ்யந்தகாரஸ்யாத்ருசப்தஸ்தந்நிரோதகஃ
> அந்தகாரவிரோதித்வாகுருரித்யாபிதியதே."

என்ற சுலோகத்திற் காணும் குரு சப்தமானது கு+ரு—என்னும் இரண்டு எழுத்துக்களில் கு=என்பது அந்தகாரம் அல்லது இருள்என்றும், ரு=என்பது பிரகாசம் அல்லது இருளை நீக்கும் சாதனம் என்றும் பொருளாகும். ஆகவே கு=காடாந்தகாரமானவிடத்தில், ரு=சூரியப் பிரகாசம் பட்டால் அவ்விருளற்றுப்போவதுபோலவே, கு=அந்தகாரத்திலும் அஞ்ஞானத்திலும் இருக்கும் சீடனுக்கு, ரு=சூரியனைப்போன்ற ஆசான் அந்த சீடனுடைய அந்தகாரத்தையும், அஞ்ஞானத்தையும் நீக்குவோன் என்று பொருளாகிறது. இதைக் கருதியே,

> "அம்பொ னரங்கர்க்கும் ஆவிக்கும் அந்தரங்க
> சம்பந்தங்காட்டித் தடைகாட்டி—இம்பர்
> திவமென்னும் வாழ்வுக்குச் சேர்ந்த நெறிகாட்டும்
> அவனன்றோ ஆசாரியன்." என்றும்,

> "ஞானநெறிக் கேற்றகுரு நண்ணறிய சித்திமுத்தி
> தானந்தருமம் தழைத்தகுரு—மானமொடு
> தாயெனவும் வந்தென்னைத் தந்தைகுரு வென்சிந்தை
> கோயிலென வாழுங் குரு." என்றும்,

> "தீங்கேது மில்லாத் தேசிகன்றன் சிந்தைக்குப்
> பாங்காக நேரே பரிவுடையோர்—ஓங்காரத்
> தேரின்மே லேறிச் செழுங்கதிரி னூடுபோய்ச்
> சேருவரே அந்தா மந்தான்." என்றும்,

தமிழ் நாட்டாரும் குரு லட்சணத்தைப்பற்றிச் சொல்லி இருப்பதால், இத்யாதி விலட்சணங்களை யுடையவர்களே உண்மையான குருமாரும், ஆசாரியருமாவார்கள். இந்தக் குருமார்களும் ஆசாரியர்களும் ஒரேகாலத்தில்தோன்றி, ஒரே தேசம், ஒரே வேஷம், ஒரே பாஷைக்காரர்களாக இருக்கில்,

ஒரு ஆசாரியரோடு வேறு மத ஆசாரியர்கள் கலந்து பொது நலத்தைப்பற்றிப்பேசித் தம் சீடர்களுக்குச் சத்கருமங்களைப் போதித்துச் சிறப்புற வாழச் செய்யலாம். அப்படிக்காகாமற் போகவே, உலக குருமார்களில் அநேகருக்குப் போதுமான கல்வியும், கேள்வியும், சமரசஞானமு மில்லாமையாலும், சிலர் சுயலாபத்தைக் கருதியவர்களாகியும், தம் சீடர்களுக்குச் சாமானிய தருமங்களைப் போதித்துச்சீர்திருத்தாமல், விசேஷ தருமங்களைப் போதித்து வருவதனால், சமய சச்சரவுகளும் சண்டைகளும் சம்பவிக்கின்றன.

சாமானிய தருமம் என்றால் ஈசுவரனுடைய ஆக்கினையாம். இதையே தேவ தருமம் (Divine Law) என்றும், இயற்கைப் பிரமாணம் (Natural Law) என்றும், முக்கிய தருமம் (Essentials) என்றும் சொல்லப்படும். இதுவே எல்லாக் காலத்தார்களுக்கும், எல்லாத் தேசத்தார்களுக்கும், எல்லா ஜாதியார்களுக்கும், எல்லா பாஷைக்காரர்களுக்கும், எல்லா மதஸ்தர்களுக்கும் பொதுவான தருமமாம். இது என்னமோவென்று மயங்க வேண்டியதில்லை. அருட்கடவுளானவர் மானவ ஜாதியாருக்கு இன்றியமையாத காற்று, ஒளி, ஆகாசம் முதலான பொருள்களை அபரிமிதமாகவும், பொதுவாகவும் படைத்து, அவைகளை அனைவரும் பிரயாசையின்றி அனுபவிக்கும்படி அமைத்தவாறே, மானிட இயல்புக்கு இன்றியமையாத கருவியாகிய சாமானிய தரும ஞானத்தைச் சகலரும் வெகு சுளுவில் அறிந்து அநுஷ்டிக்கும்படி அதை ஒருமிக்கத்திரட்டி "நன்மைசெய்" "தீமைவிடு" என்னும் இரண்டு வாக்கியங்களில் அடக்கி ஒவ்வொருவருடைய ஹிருதயத்திலும் பதித்து வைத்திருப்பது பகுத்தறிவுள்ளார்க்கு ஸ்பஷ்டமாகும். நன்மை என்றால் சத்தியம், சாந்தம், தயை, தருமம் கருணை, பச்சாதாபம், பரஸ்பர சிநேகம் முதலானவைகளாம். தீமை என்றால் பொய், பொறாமை, களவு, கொலை முதலானவைகளாம். இவ்வாக்கியங்கள் சிறியவைகளாக இருக்கினும், இவற்றி லடக்கமாக இருக்கும் பொருள்கள் அநந்தமாக இருக்கின்றன. இவற்றை நிறைவேற்ற யாவருக்கும் சாத்தியமோ என்று சந்தேகிக்க வேண்டாம். சத்தியம், சாந்தம், நியாயம், கருணை என்னும் நான்கையும் தவறாமல் காத்து அநுஷ்டிப்போமாகில், நாம் நமக்குரிய சாமானிய தருமங்களைச் செய்பவராகின்றோம். இந்தச் சாமானிய தருமத்தினால் விளையும் பயன் நாம் செல்லு

மிடமெங்கும் தொடர்ந்து வருகிறபடியால், இத்தருமத்தை யனுஷ்டித்தால் பிரபஞ்சமெங்கும் சமரசஞானமும், சகோதரவாஞ்சையும் உண்டாகும் என்பது திண்ணம்.

இனி விசேஷ தருமத்தைப்பற்றிச் சங்கிரமாகச் சொல்வோம். விசேஷ தருமமென்றால், அந்தந்த தேசத்திற்கும், காலத்திற்கும், ஜாதிக்கும் லோக வியவகாரார்த்தமாக ஏற்படுத்திக்கொண்ட சங்கேதங்களாம். இதையே ஸ்தல தருமம் (Local Laws) என்றும், ஜாதி தருமம் அல்லது வருணாச்சிரமாதி தருமங்கள் (National Laws) என்றும், முக்கியமற்ற தருமம் (Non-Essentials) என்றும் சொல்லப்படும்.

சிலர் இந்நாட்டிலிருக்கும் மிலேச்சரில் வேறானவரென்று காட்டக் குடுமியும் புண்டரமும், சூத்திரர்க்கும் துவிஜர்களுக்கும் பேதத்தைக் காட்ட பூணூலும், துவிஜர்களுக்குள் சைவர்களையும், சைவர்களினின்று வைணவர்களையும் பிரித்துக்காட்ட விபூதி ருத்திராக்ஷங்களும் ஊர்த்துவ புண்டரம் சங்கு சக்கிராங்கிதமும், துவைதிகளையும் விசிட்டாத்துவைதிகளையும் பிரித்துக் காட்ட கோபி சந்தனத்தையும், அங்காரகத்தையும், வெள்ளை நாமத்தையும், மஞ்சல் கோட்டையும், இன்னும் இவ்வாறே அளவற்ற வியவஸ்தைகள் ஏற்படுத்திக்கொண்டிருப்பதன்றியில், சர்வேசுரனுடைய ஸ்வரூபலக்ஷணங்களிலும் அநேக வியவஸ்தைகளை ஏற்படுத்திக்கொண்டிருக்கின்றனர். எப்படியெனில் — பரமேசுவரன் பரிபூரணன் என்றும், அப்பிரமேயனென்றும் பிரபஞ்சத்தின் பெரிய மதங்களெல்லாம் கோஷித்துக்கொண்டிருக்கின்றன. எப்படியெனில்,—

சுவேதாசுவதர உபநிஷத்து.

6-வது அத்தியாயம் 14-ம் வாக்கியத்தில்

நதத்ரஸூர்யோபாதி நசந்த்ரதாரகம்நேமா
வித்யுதோபாந்தி குதோயமக்நி:தமேவபாந்த
மநுபாதிஸர்வம்தஸ்யபாஸாஸர்வமிதம்விபாதி.

பொழிப்புரை.

பிரமத்தைச் சூரியபிம்பம் விளங்கச்செய்யமாட்டாது. சந்திர நக்ஷத்திரங்களாலுமாகாது. இந்த மின்னலும் விளங்கச்செய்யமாட்டாது. இந்தத் தீ எப்படி விளங்கச்செய்யும். தாமாக விளங்குகிற

அவரைப்பற்றிக்கொண்டே யாவும் விளங்குகின்றன. இவை யாவும் அவரது விளக்கத்தினலேயே விளங்குகின்றன என்று சொல்லி இருப்பதனல்

## கடவுள் அப்பிரமேயர்.

அதாவது அபாரமாகிய இந்த ப்ரஹ்மாண்டத்தைப் படைத்தவர் யாரோ அவரது அறிவுக்கு அளவில்லை, வல்லமைக்கு வரம்பில்லை, கருணைக்குக் கரையில்லை என்றால், அவரது இயற்கை, எல்லா நன்மையிலும் நிறைந்த தன்மையுடையது; அவருடைய எந்தப் பல விசித்திரசெயல்களை நாம் கண்டுகளித்து, அவருடைய எந்தெந்தக் கலியாண குணங்களை ஒருவாறு கிரகிக்கின்றோமோ, அவற்றில் எதினலும் அவரைப் பரிமித ஸ்வபாவ முடையவராகக் கொள்ளக்கூடவில்லை. ஆனல், அவர் அளவற்ற அறிவினையுடையவர், அபார சக்தியையுடையவர், பூரணத்தன்மை யுடையவர் என்னும் விஷயம் தர்க்கத்தினல் ஸ்தாபிக்கவேண்டியதன்று. இது மானவஜாதியின் ஆத்மப்பிரத்யயஸித்தமாகிய நிர்விவாதஸ்வப்ரத்யக்ஷ ஸத்தியம். உலக அமைப்பிலிருக்கிற நன்னோக்கத்திற்குக் காரணராகக் கடவுள் ஒருவருளர் என்றுயார் நம்புகிறார்களோ, அவர்கள் அவரைத் தம்மைவிடப் பூரணரென்று நம்பியே தீரவேண்டும்.

இவ்விஷயம் மானவஜாதியின் ஆத்மப்பிரத்யயஸித்தமான உண்மையாயினும், சிலர், நியாயத்தினல் நிரூபிக்கப்படாத விஷயத்தில், மனப்பூர்வமாய் நம்பிக்கை வைப்பதில்லை யாதலால், இதை ஒருவாறு நியாயபூர்வகமாக ஆராய்ச்சி செய்வது அநுபயோகமன்று. எந்த விஷயத்தைப் பூரணமாயறிய நமக்கு வல்லமையில்லையோ, அதை அபாரமென்று கொள்வது பெரும்பாலும் நமது தன்மையாகவிருக்கிறது. நாம்தேசகாலங்களின் ஆதி அந்தங்களை நிச்சயிக்கச் சக்தியற்றவர்களாகி அவற்றை எல்லையற்றவையென்று நம்புகிறோம். ஒரு அபரிமிதமான பெரிய வஸ்துவின் அளவை யறியக் கூடாமல், அதை அப்பிரமேயமென்று நினைக்க வேண்டியிருக்கின்றது. நாம் எந்தவஸ்துவின் எல்லையையாவது, அளவையாவது அறியாமல் அதைப் பரிமிதமானதென்று நிர்ணயிப்பதற்கு எவ்விதத்திலும் கூடவில்லை; ஆனல், தர்சந ஸ்மர்சநாதி இந்திரியங்களால் அறியக்கூடாத அளவினையுடைய சில வஸ்துக்களின் பரிமிதஸ்வபாவத்தை அறியவல்லோம், உண்மையே; இப்படி யறிவது அவற்றின் இயற்கை நமக்கு வேறு மூலங்க

ளால் தெரியவருவதைப் பற்றியேயன்றி வேறென்று. அதி விஸ்தாரமாகிய கடலின் அக்கரை நமது கண்ணுக்கெட்டாவிடினும் அது கரையுடையதென நம்புகிறோம். மிகுதியும் உயர்ந் திருக்கிறமலையின் உச்சியில் நாம் ஏறக்கூடாவிடினும், பூமியின் நிறையை நாம் நிறைகோலால் நிறுத்து முடியாவிடினும், இவற் றையெல்லாம் பரிமிதமானதென்றே நம்புகிறோம். ஏனெனில், சாதாரணமாகப் புலப்படாத இவற்றின் பரிமிதஸ்வரூபம் நம க்கு உபயார்த்தரங்களின் மூலமாகத் தெரியவருகின்றது. பூப்ர தக்ஷணம் செய்கிற மஹாநாவிகர்களால் நமக்குக் கடலின் எல்லை தெரிகின்றது. உயர்ந்த மலைகளின் உன்னதமும், ஏறிப் பாராமலே கணிதகோவிதர்களுடைய திறத்தாலறிகின்றனம். பூமியினது நிறையளவும் ஜடதத்வக்ஞர்களால் நிர்த்தேசிக் கப்படுகின்றது. ஆனால் சிருஷ்டிகர்த்தாவாகிய ஜகதீசுவரனது ஞான, சக்தி, கருணைகளுக்கு ஒரு விதத்திலும் அளவிடுவ தற்கு நாமெவ்வளவு தூரம் முட்டிப் பார்த்தபோதிலும் நம் மாலாகவில்லை. இதைப்பற்றியே நாமவரை அப்பிரமேயர் அல் லது பூரணர் என்று கொள்ளாதிருக்க நமக்குச் சக்தியேது?

நாம் சிருஷ்டிகாரியத்தை ஆலோசித்து, சிருஷ்டி கர்த்தா வின் ஞானம், அருள், வல்லமைகளை ஒருவாறு அறிந்து, அவ ற்றை முற்றுமறியச் சக்தியில்லாமல், அவரைப் பூரணரென்று நம்புகிறோம். மநுஷ்ய ஜாதி உண்டானது முதற்கொண்டு, மனி தர்கள் இயற்கையாகவே ஜகதீசுவரனது அஸ்தித்துவக்கியா னமுடையவர்களாய் அவரது ஞானத்தையும், கருணையை யும், சக்தியையும் கூடியவரையில் ஆலோசித்து வருகின்றனர். ஆனால், ஒரு காலத்திலும் அவர்கள் கடவுளினது ஸ்வரூபத்தை முற்றும் அறிந்ததில்லை. யார் எந்தக்காலத்தில் அவர் சம்பந்தமான எந்த விஷயமாகவாவது, அநுசந்தானம் செய்யச் சென்றபோதிலும், அவர்கள் பகவானது எல்லையைக் காணமுடியாமல் அவரைப் பூரணஸ்வரூபரென்று கீர்த்தனம் செய்கின்றனர். அறிஞரென்ன, அறிவிலிகளென்ன, நாகரீக முள்ளவர்களென்ன, நாகரீக மற்றவர்களென்ன, ஸாதுக்க ளென்ன, துஷ்டர்களென்ன அனைவரும் ஒருவாய்ப்பட் டாற்போல அவரை அளவற்ற ஞானமுடையவரென்றும், அநந்த சக்தி சம்பந்நரென்றும், அபாரகருணையுடையவ ரென்றும் கோஷிக்கின்றனர். நாகரீகமற்றதேசத்தவர்கள் எப் படி அவரைக் கருணைக்கடலென்று முறையிடுகின்றனரோ, அப்படியே பண்டித கணங்களும் கூறுகின்றன. இணையற்ற

ஞானிகளாய் இந்தத்தேசத்தில்ஆதிகாலத்தி லெழுந்தருளியிரு
ந்த ரிஷிகளாகிய மஹான்களும் கடவுளை முற்றும் அறியக்
கூடாதவர்களாகி, தமது தீனத்தன்மையையும் அவரது அப்
பிரமேய ஸ்வரூபத்தையும் கருதியே, அண்டபிண்ட சராசரங்
களைத் தேடித்திரிந்து பார்த்து தமது ஞானதிருஷ்டியினாலே

"நேதி, நேதி=இதுவன்று, இதுவன்று, யதோவாசோ
நிவர்த்தந்தே அப்ராப்யமநஸாஸஹ = அடையக் கூடாமல்
எதை விட்டு வாக்கு மநதுடன் திரும்புகின்றதோ, யஸ்ஸர்வ
ஜ்ஞः=யார் ஸர்வக்ஞனோ, ஏஷ ஸர்வேச்வர=இவன் சர்வேச்
வரன்."

என்பவை முதலிய அநேக சுருதிகளால் வாசாமகோ
சரமாய் வெளியிட்டிருக்கின்றனர். அவர்களது திவ்யோக்தி
களின் பொருளை நன்கறிவதும் மந்தமதிகளாகிய நம்மால்
கூடாமலிருக்கிறது. இப்போதிருக்கிற சர்வதேச பண்டிதர்
களும் கடவுளை, பரிமிதஸ்வரூபரென்று சொல்லக்கூடாத
வர்களாகவே யிருக்கின்றனர். அவர்கள், அவர் அப்பிரமேய
கல்யாணகுணங்களுடையவரென்னும் உண்மையை நிர்விவா
தமாய் அங்கீகரித்திருக்கின்றார்கள். எப்படிப் பக்ஷிகள் தன்
தன் சக்திக்குத் தக்கபடி ஆகாயத்தில் உயர்ந்து உயர்ந்து பற
ந்தபோதிலும், அவற்றில் ஒன்றும் ஆகாசத்தின் அளவை
எட்டமுடியாதோ, அப்படியே பண்டிதர்கள் அவரவரது சக்
திக்கும், பக்திக்கும் தக்கபடி பரமாத்மாவின் ஸ்வரூப தத்வ
த்தை அறிந்தபோதிலும் அதை ஒருபொழுதும் யாராவது
அளவுபடுத்தியறிவது அசம்பவம். மஹான்களாகிய பெரி
யோர்கள் அமோகமாய்த் திருவாய்மலர்ந்தருளிய திவ்ய சூக்தி
களில் ஒவ்வொன்றின் பொருளை ஆலோசித்தாலும், கடவு
ளின் அப்பிரமேயத்வம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விள
ங்குகின்றது. ககோளஞானம் (Astronomy), பூகோள
ஞானம் (Geography), ஜடதத்வஞானம் (Natural Philo-
sophy), ஆத்மதத்வஞானம் (Mental Philosophy), அங்
காதி பாதசாஸ்திரம் (Anatomy), காலவிருத்தாந்த சாஸ்தி
ரம் (Chronology), இரசாயன சாஸ்திரம் (Chemistry), ஜீவ
தத்துவசாஸ்திரம் (Biology), தாதுவர்க்க தத்துவ சாஸ்தி
ரம் (Mineralogy) முதலிய எந்த ஞானானுசந்தானம் செய்த
போதிலும், அவற்றிலெல்லாம் அவரது அளவற்றதன்மை
யே வெளிப்படுகின்றது. நாம் எந்த ஞானத்தைக் கற்க முய

ன்று அதிலும் ஆழ்ந்து பார்க்கின், அவரது அளவற்ற கருணைமுதலிய கல்யாண குணங்களையே கற்கவேண்டியிருக்கிறது. இதனால் வாஸ்தவமான கல்வி அவரது கல்யாண குணாநுபவம் செய்வதே என்று எளிதில் விளங்கும். நமது கல்வியால் நாம் சாமானியமாய் விஷயங்களைக் கற்பதில் உண்மையாக ஒரு மகாத்மியமுமில்லை. எப்பொழுது அதின் மூலமாய்க் கடவுளினது எந்த நன்னோக்கமாவது, சக்தி கவுசலமாவது எந்த அளவுக்குத் தெரியவருகின்றதோ, அப்பொழுது அந்த அளவுக்குத்தான் நமது கல்வி சிறப்படைகின்றது. இக்கருத்தைக்கொண்டே,

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின்."

என்று நாயனாரும் அருளினர். நாம் எவ்வளவு கல்வியினாலும் அவரை முற்று மறியக்கூடாதென்பது அபாதிதமான உண்மை. அகண்டமாகிய ஆகாசத்தில் அக்கினிகள்போல அந்தரத்தில் அமைந்து நியமனப்படி தன்தன் கதியில் சஞ்சரித்துக்கொண்டிருக்கின்ற கிரஹநக்ஷத்திராதி அண்டகோடிகளின் அளவு, கதி முதலியவற்றை அறிவிக்கின்ற ககோளஞானமும், அவரது சக்தியை அளவுபடுத்தக் கூடாததாகவிருக்கிறது. வஸ்து தத்துவஞானத்தின் மூலமாகவும், அவரது ஞானத்திற்கு எல்லை ஏற்படவில்லை. எதனாலும் அவரது கருணைக்குக் கரை காண்கிலம். நமது ஆராய்ச்சியின் அளவுகுத் தக்கபடி அவரைப்பற்றிய நமது ஞானம் அதிகப்படுகின்றதேயன்றி முற்றுப்பெறவில்லை.

ககனமார்க்கத்தில் விளங்கும் அவரது ஞானசக்தியாதிகள் எப்படி தூரவீக்ஷணி (Telescope) நிர்மாணம் செய்யப்படாதபோது அளவிடக்கூடாதவையாயிருந்தனவோ, அப்படித்தான் அந்த மஹாயந்திரம் உண்டான இக்காலத்திலுமிருக்கின்றன. ஆனால், பேதமென்னவெனின், அக்காலத்தைவிட இக்காலத்தில் இந்த அருமையான கருவியின் துணையால் கிரக உபக்கிரஹ தூமகேதாதி உத்பாத முதலியவற்றின் ஸங்க்யாதிகள் அதிகமாகத் தெரியவருதலின், அந்த அளவுக்குத் தக்கபடி அவரது கியாந சக்தி முதலியன அதிகமாகத் தெரியவந்ததென்பதேயன்றி முற்றும் தெரியவந்ததென்பதன்று. இவ்வாறே இந்த யந்திரம் இன்னும் சீர்படச் சீர்படக் ககோளமூலமாய்க் கடவுள் சம்பந்தமான ஞானம்

மேன்மேலும் விருத்தியாகுமேயன்றி முற்றுப்பெறாது. எப்படித் தூரவீக்ஷணி, நபோமண்டலத்திலுள்ள அநேகதாரகா ஜாலங்களின் மூலமாய் அண்ணலின் அப்பிரமேயஸ்வரூபத்தைத் தன்னாலியன்றமட்டும் விளக்குகின்றதோ, அப்படியே சூக்ஷ்மவீக்ஷணியும் (Microscope) நமக்கு அதிக சமீபமான இடங்களிலும் அதிவிசித்திரமாகிய கவுசலத்தோடுங்கூடிய எண்ணிறந்த படைப்பைக் காண்பித்து, அவரது அபரிச்சின்னத்தன்மையை ஓலமிடுகின்றது. எவ்வெவ்விடங்களை முன்னர் உயிர்களற்ற சூந்யப்ரதேசங்களாக எண்ணியிருந்தோமோ, அவ்வவ்விடங்களிலெல்லாம் கோடாகோடி ஜீவராசிகள் சுகமாக ஜீவித்துக்கொண்டிருப்பதை இப்போது இந்த யந்திரத்தின் மூலமாய்க் காண்கிறோம். நாம் அதி பரிசுத்தமானதென்றும், சிறிதும் கல்மஷமற்றதென்றும் நினைத்துப் பானம் செய்கிற ஜலத்தில் ஒரு பிந்துவையெடுத்து இந்தக் கருவியினால்பார்த்தால் அதில் விசித்ரவிசித்ரமாக எத்தனையோ பிராணிகள் சுகமாகவாழ்ந்திருத்தல் தென்படுகின்றன. மேலும் ஒவ்வோரிலை, பூ, காய், கனி முதலியவற்றில் இந்த யந்திரபலத்தால் லக்ஷக்கணக்காய் ஜந்து சமூகங்கள் இருத்தல் புலப்படுகின்றன.

மேற்குறித்த கருவியைக்கொண்டு கிரமப்படி யார் பார்த்தபோதிலும் இந்த விசித்திரமான படைப்புகளெல்லாம் அவர்களுக்குத் தெரியவரும். கண்ணாடியினால் புலப்படுகிற பொருள்களெல்லாம் பொய்யானால் இந்தக் கருவிகளினால் புலப்படுவனவும் அப்படியேயாகலாம். இந்த யந்திர சக்தியெல்லாம் அதிசூக்ஷ்மமான வஸ்துவையும், அதனதன் உருவத்திற்குத்தக்க அளவு திருஷ்டிகோசர மாக்குவதேயன்றி இல்லாததை இருப்பதாகக் காண்பிப்பதன்று. தூரவீக்ஷணியைப் பற்றி முன் குறிக்கப்பட்டதெல்லாம் இதற்குமொக்கும். ஜடதத்துவ வித்தையும் இப்படியே உபயோகமாகிறது. அநுபயோகிகளாக முன்பு எண்ணப்பட்டிருந்த அநேக இயற்கை செயற்கைப் பொருள்களிடத்திலும் இப்பொழுது இந்தக் கல்வியின் வியாபகத்தால் அற்புதமாகிய அநேக நற்குணங்கள் தோன்றி நம்மை ஆச்சரியத்தில் அமிழ்த்துகின்றன. முன்பு ஒரு நன்மையும் உடையனவாக நமக்குத் தோன்றாயிருந்த கொடிகள், செடிகள் முதலியவை அநேக உபகார சாதனங்களாயிருப்பது கந்தரூபதத்துவ நூலால் தெரியவந்து, கிருதக்ஞதா ஜலம் நம்முள்ளவர்களா[illegible]து அந்த நன்மை

களை உத்தேசித்துப் பெருநட்புடன் அவற்றைப் படைத்த
பேரறிவினையுடைய கடவுளினது பாதகமலங்களுக்குப் பாத்ர
மாகச் செல்லுகின்றது. எவற்றை நமக்குக் கெடுதி விளைவிப்ப
தாக முன் நினைத்தோமோ, அவை இப்பொழுது இவ்வாரா
ய்ச்சியினால் சஞ்சீவியைப்போலக் காணப்படுகின்றன. இவ்
வஸ்து தத்துவவிளக்கத்தால் சாமான்யப் பொருள்களும் நமக்
கெவ்வளவோ மகோபகாரமாகின்றன. எத்தனை கஷ்டங்களை
யும் துயரங்களையும் தவிர்த்துச் சுகத்தை உண்டாக்குகின்றன.
இவற்றிலெல்லாம் இந்தநற்குணங்களை அமைத்தவர் கடவுளே.
இந்தநன்மைகளை முன்னறியாதிருந்ததும், யாவுமறிந்தவர்போ
லிவற்றைத் தீமைகளாகப் பாவித்துப் பலவித குற்சித மதங்
களுக் கிடங்கொடுத்ததும் நமது மடமையேயன்றி வேறன்று.
சாதாரணமான பொருள்களாகிய நீர், நெருப்பு முதலியவை
புகைக்கப்பல்:புகைவண்டி முதலானவைகளைப்போன்றபரோப
காரமாகிய காரியங்களுக்கு உதவுமென்று முன்பு யாருக்குத்
தெரியும்? சாதாரண மண் முதலியவைகளில் குளோப்பு, லஸ்
டர்முதலிய மிகவும் ரம்யமானதும், அதிக விலைபெற்றதுமான
பொருள்களை அமைப்பதற்கு உபயோகமாகத்தக்க தன்மை
இருக்கிறதென்பதை யார் முன் அறிந்திருந்தார்? இதை எல்
லாம் அறிந்து அமைத்துவைத்தவர் கருணைக்கடலாகிய
வள்ளலொருவரே. மனிதனது ஞானம் விருத்தி அடைய
அடைய எவ்வளவு ஈச்வரனது ஞானநோக்கமும், பலசெய்
கையும், அருட்குறிப்பும் வெளிப்பட்டதோ, வெளிப்படுகின்
றதோ, வெளிப்படுமோ அதை அநேககோடி வருஷம் அநேக
கோடி நாவுடன் கோஷிக்கினும் அது நிறைவேறாது; மேலும்
எக்காலத்திலும் எவராலும் அவற்றை அளவுபடுத்தியறிய
முடியாது. ஆகையால் கடவுளினது அறிவு, வல்லமை, அருள்
இவைகளுக்கு அளவில்லையென்பது நிர்விவாதமாய்ச் சித்தாந்
தப்படுகிறது. அவரை அப்ரமேயரென்றும் பூரணரென்றும்
நிஸ்ஸந்தேகமாகச் சொல்லலாம். அவரை வேறுவிதமாகச்
சொல்ல நமக்குக் கதியில்லை. சொல்வதற்கு நியாயமுமிடங்
கொடாது. அவர் எப்பொழுதும் தனது மகிமையிலேயே பூரண
ராக விளங்கிக்கொண்டிருக்கிறார். மனிதன் ஒருகாலத்தில்
அறிவிலியாயும், மற்றொருகாலத்தில் அறிஞனாயும் இருப்
பதைப்போல அன்று அவரது தன்மை. அவர் எப்பொழுதும்
ஞானமுடையவர், எல்லா ஞானமுமுடையவர், அவர் ஆதிமத்
யாந்தரகிதர், அகண்டர், பூரணர், அவரது தன்மைக்கு விரு

த்தி க்ஷபங்களில்லை. அவர் அநிர்வாச்சியர், அப்ரமேயர். என்று ஸ்பஷ்டமாகிற தல்லவா?

இந்த உண்மையை அறிந்துய்யும் சக்தியற்ற சிலர் கடவுள் அநந்த கலியாண குணங்களை யுடையவரென்றும், சிலர் நிற்குணர் என்றும், நானே பிரம்மம் என்னைவிடவேறு பிரம்மமில்லை என்று சொல்வதனால் அத்வைத மதஸ்தர்களென்றும், சிலர் சேர்ந்தபோது சிலவிஷயங்களில் தவிர மற்றவிஷயங்களில் ஜீவாத்துமாவும் பரமாத்துமாவும் ஒன்றே என்றும், பரமாத்துமாவுக்குக் கரசரணாதி அவயவங்கள் உண்டாயிடென்றும் சொல்வதனால் விசிஷ்டாத்துவைதிகள் என்றும், சிலர் ஜீவாத்துமாவும் பரமாத்துமாவும் வேறுவேறான வஸ்துக்களென்றும், பரமாத்துமாவுக்குக் கரசரணாதி அவயவங்கள் இருக்கின்றன எனச் சொல்வதனால் துவைத மதஸ்தர்களென்றும், மேலும் சர்வேசுவரனைச் சிவன் என்றும், விபூதி ருத்திராக்ஷம் அணிந்து ஆசாரங்களில் பேதப்படுவதனால் இதற்குச் சைவம் என்றும், இந்தபரமேசுவரனையே விஷ்ணு என்றும், திருநாமம் துளசி நளிஞச்சை மாலைகளை அணிந்து ஆசாரங்களில் பேதப்படுவதனால் இதற்குவைணவமென்றும், அந்த வைணவர்களில் திருநாமத்திற்குப் பாதம் வைப்பதனாலும் சில ஆசாரங்களில் பேதப்படுவதனாலும் தென்கலையாரென்றும், திருநாமத்திற்குப் பாதம்வைக்காமலும் சிலஆசாரங்களில் பேதப்படுவதனாலும் வடகலையாரென்றும், சிலர் உண்ணும்போது இலையில் உப்பை முதலில் வைக்கவேண்டுமென்றும், சிலர் அன்னத்தை முதலில் வைக்கவேண்டுமென்றும், சிலர் காய்கறிகளை முதலில் வைக்கவேண்டுமென்றும், சிலர் விதவைஸ்திரிகளின் தலைமயிரை நீக்கி மொட்டையாக்கவேண்டும் என்றும், சிலர்மொட்டையாக்கவேண்டியதில்லைஎன்றும், சிலர் எங்கும் நிறைந்து எப்போதும் நான், நான் என்று பிரகாசிக்கும் பரமேசுவரனுக்குப் பிரதிநிதிகளாகப்பொம்மைகளையும், விக்கிரகங்களையும்ஸ்தாபித்து, அவைகளுக்கு மநுஷருக்கு இருக்கிறபடி மனைவி மக்கள் பூஜைபுனஸ்காரம், ஆடையாபரணம், படுக்கைவாஹன உற்சவங்களையும், வேசி தாசி வேடிக்கை, மேள தாள வாத்தியங்களையும் நியமித்திருப்பதோடு, சில விஷயங்களில் மநுஷர்களிலும் கீழ்ப்பட்டவர்களாக நடத்திவருகிறார்களன்றோ. திருச்செந்தூரில் ஒரு விக்கிரகம் உடைந்து போக அந்த விக்கிரகசாமி இறந்துவிட்டதாக எண்ணி அந்த உடைந்த விக்கிரகத்தை ஒரு பாடையிற் கட்டிக்கொண்டு

போய்ப் பலசடங்குகளுடன் புதைத்துச் சூதகங்கொண்டாடி
ரார்களன்றோ! பிறகு அந்த இறந்த விக்கிரகத்துக்குப் பதிலாக
வேறொரு விக்கிரகத்தையும் இரண்டுலக்ஷம் ரூபாய் செலவிட்
டுப் பிரதிஷ்டை செய்வித்தார்களன்றோ! குற்றாலத்தி லிருக்
கும் ஒரு விக்கிரகத்திற்கு மலைக்காய்ச்சல் வராதபடி தடுக்கக்
கஷாய முதலானவைகளைக்கொடுத்து வைத்தியஞ்செய்ய அக்
கோயிலுக்குவருஷாந்தரம் வைத்தியமானியம் விடப்பட்டிருக்
கிறதாக வதந்தி.

ஆழ்வார் திருநகரியில் விக்கிரகச்சுவாமிகள் மலஜல
உபாதிகளைக்கழிக்கக் கக்கூசுகளையும் கட்டிவைத்திருக்கிறதாகக்
கேள்வி. வேறோர் பெரியகோயில் விக்கிரகச்சாமி க்ஷவரம்
செய்துகொள்வதற்காக நாசுவர் வீதிக்குக் கொண்டுபோய்
வருவதாகக்கேள்வி. தஞ்சை ஜில்லாவின் ஒருகோயில் விக்கிர
கத்திற்குச் சூட்டியிருந்த புஷ்பத்தை அர்ச்சகன்திருடித் தன்
தாசிக்குக் கொடுக்க அதைத் தருமகர்த்தா அறிந்து சோதனை
செய்கையில், விக்கிரக சுவாமியானவர் அர்ச்சகனைக் காக்கும்
பொருட்டுத்தாசி முடித்திருந்தபுஷ்பத்தை வாங்கித் தரித்துக்
கொள்ள, அப்புஷ்பத்தில் தலைமயிர் இருக்க, அந்த விக்கிரகத்
திற்குச் சவுரிநாதர் என்று பெயரிட்டிருப்பதாகக்கேள்வி. அன்
றியும் ஆரியர் நாட்டில் அழகிலும், அறிவிலும், சுத்தியிலும்
சிறந்த எத்தனையோ பெண்டுகளிருக்க, அவர்களைவிட்டு, அன்
னியஜாதியும்,அன்னிய மதமுமுள்ள ஓர் துலுக்கப்பெண்ணைப்
பெருமாள் சிறையெடுத்ததாகச் சொல்லி, அந்தம்மைக்குத்
துலுக்க நாச்சியார் என்னும் பெயரிட்டு அந்த விக்கிரகத்திற்கு
அந்த ஜாதிக்கேற்றபடி பாலும் ரொட்டியும்வைத்து வணங்கி
வருவதாகக் கேள்வி. இம்மட்டோ! இப்படிப்பட்ட பரிஹாச
காரியங்கள் எத்தனையோ செய்துவருகின்றனர். நாட்டின்
ஆண்மக்கள் இப்படி செய்துவருகையில், பெண்மக்கள் சும்
மா இருக்கவில்லை. அவர்கள் காட்டேரி, குட்டிச்சாத்தான்,
மொட்டையாண்டி, முனியன், இடும்பன், காளி, கூளி, மாரி,
மதுரைவீரன் முதலானவர்களையும், இறந்துபோன பாட்
டன் பாட்டி பேரண்டாலு, இடிந்துபோன பாதாளக்கிணறு
பொன்னியம்மாள்,கண்ணியம்மாள்முதலானவர்களையும்தேவர்
களாகவும், தேவதைகளாகவும் கொண்டு படைத்துப் பூசை
செய்துவருவது பிரத்தியக்ஷமல்லவா? இப்படியேஇந்நாட்டில்
அநேக அவாந்திரபேதங்களை உண்டாக்கி இருப்பதோடு,சிலர்
காளி துர்க்கை என்னும்பெயரால் சிலதேவதைகளை நியமித்து

அவைகளுக்கு ஆடு கோழி பன்றி எருமைமுதலான பிராணிக ளின் பலிகளையும், சிலசமயங்களில் நரபலிகளையும் செய்விக்க வெறிக்கும்படி கள், சாராய முதலானவைகளைக் குடித்து விய பசாராதி கிருத்தியங்களும் செய்துவருவதோடு, இப்படிப் பட்ட கெட்ட கிருத்தியங்களும் பத்தி சாதனங்களென்றும்; மோக்ஷசாதனங்களென்றும் நம்பும்படி செய்விக்கிருக்கின் றனர். இம்மட்டோ! இந்நாட்டிற் குடிபுகுந்த கிறிஸ்தவர்கள் கிறிஸ்துநாதரை நம்பி அவரால் பாவமன்னிப்பைப் பெற்று லன்றிப் பராபரனை யடையக்கூடாதென்றும், ஆசாரங்களில் அதற்கு கிறிஸ்துமதமென்றும், மகம்மது நபியை நம்பிஅவர் மூலமாகக் கடவுளைச் சேரவேண்டுமென்றும், ஆசாரங்களில் பேதப்படுவதனால் அதற்கு மகம்மதுமதமென்றும், இப்படி யே பவுத்தர், சமணர், சைனக்காரர், பார்சிக்காரர் முதலான வர் தத்தம் மதாதிபதிகளை நம்பிஆசாரங்களில் பேதப்படுவத னால் அந்தந்த மதஸ்தர்கள் என்றும் சொல்லி வருவதோடு, சிலர் மரணக்குறியைக் காட்டக் கறுப்பு உடையைத் தரிக்க வேண்டும் என்றும், சிலர் வெள்ளை உடையைத் தரிக்கவேண்டு மென்றும், சிலர்பச்சைஉடையைத் தரிக்கவேண்டும் என்றும், சிலர்மஞ்சள் உடையைத் தரிக்கவேண்டும் என்றும், சிலர் காவி உடையைத்தரிக்கவேண்டுமென்றும், பின்னும் பலவிதபேதங் களை யுண்டாக்கிப் பிரஜைகள் மதவிஷயத்தில் பிரமிக்கும்படி செய்வித்ததன்றியில், சிலர் என்தெய்வம் பெரிது, உன் தெய் வம் சிறிது, என் ஆசாரம் நல்லது உன் ஆசாரம் தீயது என்று சொல்லிச் சச்சரவுகளைச்செய்தும், ஒரு பெயருடைய மதஸ்தர்களோடு மற்றொரு பெயருடைய மதஸ்தர் மதா வேசத்தினாலும் கோபாவேசத்தினாலும் ஒருவரைத் திட்டித் தூஷித்தும் இரத்தப் பிரளயங்களான சண்டைகள் செய்து கணக்கற்றவர்களைக் கொல்லவும் பிரயத்தனப்படுவதன்றியில், அப்படிப் பிறமதஸ்தரைத் திட்டித் தூஷித்துஅடித்துக்கொல் லும் துஷ்கிருத்தியங்களும் மோக்ஷசாதனங்களாகக் கொண் டிருக்கிறார்கள். அந்தோ! என்ன விபரீதம் பாருங்கள்! பரமே சுவரனாகிய ஏக பிதாவின் புத்திரர்கள் சகோதரவாஞ்சை யோடு சமரசமாக வாழவேண்டியிருக்க, அதற்கு மாறாகச் சயர்க்களத்திற் சாவதற்குக் காரணம் ஜனசமூகத்திற் சாமா னிய தருமங்களைச் சட்டைசெய்யாமல் விட்டுவிட்டு, விசேஷ தருமங்களையே விசேஷமாக வழங்கி வருவதனாலன்றோ? இப் படிப்பட்ட மதபேதங்களினாலும், ஆசாரங்களினாலும் சண்

டை சச்சரவுகளுமாகிய குப்பைகள் திரண்டு ஆஸ்திகமதமெ
ன்னும் அமிர்த ரசத்தில் விழுந்து சேராகிக் கெட்டுத் துர்நாற்
றம் வீச, அந்த ஆஸ்திக அமிர்த ரசத்தையுண்ண அதனருகி
லிருக்கும் சாதுக்களுக்குச் சங்கடமுண்டாகித் தவிக்கும்படி
சம்பவிக்கிறது. இப்படிச் சம்பவிக்கவே, கிருபாநிதியாகிய
அருள்வள்ளல் தமது ஆஸ்திக அமிர்தரசத்தில் நவீனமாக
வந்து நுழைந்த சேற்றையும்,குப்பைகளையும் அப்புறப்படுத்த
அருள்மாரி பெய்விப்பதைப்போலவே துஷ்ட சம்ஹாரம்
சிஷ்டபரிபாலனம் செய்து அத்தருமங்களை ஸ்தாபிக்கும்பொ
ருட்டு அடிக்கடி அவதரிக்கின்றனர். இதைப்பற்றியன்றே
பகவத்கீதையில்,

யதாயதாஹி தர்மஸ்யக்லாநிர்பவதிபாரத
"அப்யுத்தானம் அதர்மஸ்யததாத்மாநம் ஸ்ருஜாம்யஹம்
பரித்ராணாய சாதூநாம் விநாசாய சதுஷ்க்ருதம்
தர்மஸம்ஸ்தாபனார்த்தாய சம்பவாமி யுகே யுகே."

(ஓ பார்த்தா!) எப்பொழுது(வேதோக்த)தருமத்திற்கு லோப
மும், அதர்மத்திற்கு விருத்தியும் உண்டாகின்றதோ, அப்
பொழுதெல்லாம் என்னை நானே சிருஷ்டித்துக்கொள்ளு
கிறேன். சாதுக்களை இரக்ஷிக்கும்பொருட்டும், பாவிகளை
சிக்ஷிக்கும்பொருட்டும், தருமத்தை ஸ்தாபிக்கும்பொருட்டும்
யுகங்கள்தோறும் பிறந்துகொண்டே இருக்கிறேன்" என்று
சொல்லி இருப்பதற்கேற்க உலகில் சத்கருமங்கள் நசித்துத்
துஷ்கருமங்கள் விருத்தியாகுந்தோறும் அந்த ஜகதீசுவரனு
டைய அருளே அவதாரமாக வருவது பிரத்தியக்ஷம். இந்நாட்டு
வேதக்கட்டுப்பாடுகெட்டுவேள்விகளும்வருணாச்சிரமாதிவின்
கருமங்களும் மலியவே, அதைச் சீர்திருத்த சர்வேசுவரனரு
ளால் வசிஷ்டர்,பராசரர்,வியாசர்,புத்தர்முதலான மஹான்கள்
வந்ததன்றியில், பிறகு வங்கநாட்டில் சைதன்னியர், இராம
மோஹனர், தேவாநந்தர், கேசவ பிரமாநந்தர், இராமகிருஷ்
ணர், விவேகாநந்தர் முதலானவர்களும், வடதேசத்தில் இரா
மாநந்தர், கபீர் முதலானவர்களும், பாஞ்சாலநாட்டில் நான
க்கு, குருகோவிந்தர், தயாநந்தர் முதலானவர்களும், மேற்கு
நாட்டில் துக்காராம், இராமதாஸ், துளசிதாஸ், ராண்டே, பந்
தார்க்கர் முதலானவர்களும், தென்தேசத்தில் அப்பர்சுந்திரர்
சம்பந்தர் மாணிக்கவாசகர் முதலான நாயன்மார்களும், நம்மாழ்
வார்முதலான ஆழ்வார்களும்,இராமாநுஜர்,வேதாந்த தேசிகர்,

தாயுமானவர், பட்டணத்தடிகள் முதலான மஹான்களும் அவதரித்து வர்ணாச்சிரமாதிவிசேஷ தருமங்களைக் கண்டித்து, ஆஸ்திகமதத்தில் நவீனமாக வந்துகலந்த சேற்றுக்கொப்பானகுப்பை அழுக்குகளைநீக்கியதைப்போலவே, கிறிஸ்துமதத்திற்குள் லூதர், சானிங்கிஸ், தியேடர் பார்க்கர், மார்ட்டினியு முதலான மஹான்கள் அவதரித்து அம்மதத்தைச் சீர்திருத்தியும், மகம்மது மதத்துக்குள்ளாக வஹபிகள் என்போர் தோன்றி அம்மதத்தைச் சீர்திருத்தியும் வருவது பிரத்தியக்ஷமல்லவா? இம்மட்டோ "ஸங்கே சக்தி கலியுகே" அதாவது கலியுகத்தில் ஜனசமூஹ சங்கங்களினால் க்ஷேமமுண்டாகுமென்று ஸ்ரீவியாசர்சொன்ன வாக்கியத்தின்கருத்தை நன்கறிந்த வங்கதேசத்தில் கேசவ சந்திர பிரம்மாநந்தர் பிரபஞ்ச மதஸ்தர்களுக்குள் சமரசஞான முண்டாக்கக்கருதி நவவிதானம்(New Despendation) சபையை ஸ்தாபித்தது அநேகருக்குத்தெரிந்தவிஷயம். இக்கருத்தைக்கொண்டேசிலவருஷங்களுக்குமுன் அமெரிக்கா கண்டத்தைச்சார்ந்த சிக்காகோ என்னும் பெரும்பட்டணத்தில் சமயமஹாசங்கம் (The Parliament of Religions) கூட்டி அதில் இந்த பூலோகத்திலுள்ள பெரிய மதஸ்தர்களின் பிரதிநிதிகளை அழைப்பித்துத் தத்தம் மதவிஷயங்களின் உண்மைகளை வெளியிடச்செய்தும், அவ்வுண்மைகளைத் திரட்டிப் பெரிய புத்தகங்களாகப் பதிப்பித்துமிருக்கின்றனர். பிறகு பிரான்சு தேசத்திலும், பெர்லின் தேசத்திலும், இவ்வித சமய மஹாசபைகள் கூடிப்பேசியதன்றியில், சென்ற இரண்டு வருஷங்களுக்குமுன் கல்கத்தாவிலும், சென்றவருஷம் அலகாபாத்தென்னும் பிரயாகையிலும் ஸ்ரீ தர்பங்கா மஹாராஜா அவர்களுடைய அக்கிராசனத்தின்கீழ் சநாதன தருமசபை கூட்டப்பட்டு அச்சபையில் இந்நாட்டிலுள்ள பலமதஸ்தர்களும் வந்து கூடிப்பேசி சமயங்களுக்குள் சஹோதரத்துவத்தை யுண்டாக்கிவருவது பிரத்தியக்ஷமல்லவா? மேலும் ஜனசார சீர்திருத்தத்தின்பொருட்டுப் பிரதிவருஷம் சோஷியல் கான்பரன்ஸ், க்ஷத்திரியசபை, சயிஸ்தர்சபை, வைசியசபை, சான்றோர் சபை, அக்கினி குலத்தார் சபை என்றுதி பெயர்களால் எத்தனையோ சபைகள் கூடிச் சீர்திருத்த முயலுகிறது பிரத்தியக்ஷம். அடிக்கடி இத்தியாதிகளால் ஆஸ்திகமத சித்தாந்தத்திற்குள் நவீனமாகவந்து நுழைந்த அசங்கியக்குப்பைகளை நீக்கி அதைப் பரிசுத்தப்படுத்தி, பரமேசுவரனைப் பிரபஞ்ச பிதாவாகவும், அவரால் படைக்கப்

பட்ட பிரஜைகள் யாவரும் சகோதர வாஞ்சையுடனும் வாழ்விக்கவேண்டு மென்னும் எண்ணம் உலகத்தாருக்குள் ஜனித்திருத்தல் பிரத்தியக்ஷம். இந்த எண்ணத்தை முற்றும்முடியச் செய்பவர் எவரோ! இதற்கென்று எந்த அவதார புருஷர் எங்கு ஜனித்திருக்கிறாரோ, அல்லது இனிமேல் ஜனிப்பாரோ அறிகிலேம். அப்படிப்பட்ட அவதாரபுருஷர் ஜனிப்பாரென்று உலக சமயசரித்திரம் முறையிடுகின்றது. ஆகவே, அப்படிப்பட்ட அவதாரபுருஷர் வருவாரென்பது திண்ணம். அப்போதுதான் ஆஸ்திகமத சித்தாந்தம் பரிசுத்தமானதாகி, பூரணம்பெற்றுப் பரமேசுவரனைப் பிதாவாகவும், அவரால் படைக்கப்பட்ட பிரஜைகள் யாவரும் சகோதரர்களாகவும் சேர்த்துப் பேரானந்த முறச்செய்யும்.

இப்படி ஜனசமூஹ சுகத்தை விருத்தியாக்குவதே ஆஸ்திகமத சித்தாந்தத்தின் முக்கிய நோக்கம். இதுபற்றியன்றோ,

ஸ்ரீ தாயுமானசுவாமிகள்.

"எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல்
வேறொன்று மறியேன் பராபரமே." என்றும்,

"எவ்வுயிரு மென்னுயிர்போ லெண்ணி யிரங்கவுநின்
றெய்வ கருணையருள் பராபரமே."

என்றும் பாடியருளினர். ஆஹா! பிரபஞ்ச பரமபிதாவாகிய பரமேசுவரருடைய சன்னிதானத்தில் இந்துக்கள், மகம்மதியர்கள், கிறிஸ்தவர்கள், பார்சிகள், பவுத்தர், ஜைனர், ஜப்பானியர், எகிப்தியர், ரோமர், ஸ்காந்திநேவியர் முதலான எல்லாவித மதஸ்தர்களும் ஏககுடும்ப புத்திரர்களாகவும், சகோதிரர்களாகவும்நின்று, அவ்வள்ளலின் அமிர்தரசபானத்தைத் தெவிட்டாது உண்டு, சமரச சந்தோஷ சாகரத்தில் மூழ்கி, அந்த ஆநந்தவாருதியைப் பாடிபாடிக்கொண்டு ஆடுங் காக்ஷியை இன்னதென்று சொல்லவும் வேண்டுமா? இவ்வுலகத்தார் எப்போது இந்த தசையை அடைகின்றனரோ அப்போதுதான் ஆஸ்திகமத சித்தாந்தம் பூரணம் பெற்றதாகும். அதற்காகவே, ஆஸ்திகமதவிருக்ஷமானது தினேதினே பல்கிப் பெருகிக் கொப்புங் கிளைகளால் வளர்ந்து, பூத்துப் பழம் பிடித்து இப்பிரபஞ்சத்தார்க்கு நிழல்கொடுக்கத் தழைத்தோங்கு

கின்றது. அதன் பிருதுக் கொடிகளாகிய சுவாமிபக்தி, சத்தியம், சாந்தம், தயை, தானம், நியாயம், கிருபையாதிகள் எல்லாத் தேசத்தாரையும், எல்லாக்காலத்தாரையும், எல்லா ஜாதியாரையும், எல்லாமதஸ்தர்களேயும் சகோதரபந்தத்திற் கட்டுவித்து, எல்லாரையும் சமரசஞான கீதங்களைப் பாடச்செய்து இகபரசுகாநந்தத்தை அடையச் செய்கின்றது. இதுவே சமஸ்த பரிபூரணமும், மேலான மோக்ஷமண்டலத்தின் இன்பசமயமுமாகஇருப்பதன்றியில், இகலோக சுகத்திற்கும்இன்றியமையாததா யிருக்கின்றது. சமரசஞானமயமான ஆஸ்திக மதவிருக்ஷமே! உனக்கு மங்களமுண்டாவதாக! உனது குன்றுவளம் பொருந்திய நிழலில்வந்து தங்கும் உலகத்தாரனைவரும் இணையற்ற இகபரசுகாநந்தத்தைப் பெற்று பல்லாண்டு பல்லாண்டாக வாழ்வார்களாக! சுபம்! சுபம்!! சுபம்!!!

மதவிருக்ஷத்தின் முடிவுரை

முற்றிற்று.



# Opinions of the Press.

The Eighth Aniversary of the Regimental Cantonment Brahmo Samaj at Bangalore was held in the Samaj premises at 6-30 P. M. on Saturday the 31st May 1879. Mr. Chandrasacara Iyer, the Local Minister conducted Divine Service in Canarese. Sankeertans in Tamil, Telugu were sung and a short discourse delivered by the minister on the excellence of Theism. Mr. S. P. Narasimmulu Naidu, a prominent and a leading member of the Brahmo Samaj of Salem, was present on the occasion and delivered a very interesting lecture in Tamil on "Theism." He began by detailing all the important religions in the world and showed that "Theism." is an eclectic religion which harmonizes with all in fundamental principles. In support of his arguments, he quoted the ancient Greek and Roman philosophers Plato, Socrates and a'so more modern philosophers Priestly, Hamilton &c. He illustratrd his doctrines by quotations from the Koran, Zendavesta, Bible and the Vedas, &c. Among these present were Messers. Rai Bahadur A. Narainasawmy Moodeliar, A. Iyasawmy Moodaliar, R. Gopalasawmy Iyer, V. C. Munisawmy Mudeliar, T. V. Raja Mudeliar, P. Suryanna Naidu, C. Narayana sawmy Mudeliar, Etherajulu Naidu, Tiruvengadasawmy Mudeliar, Pamulayer, Seatharappa, Rangasawmy Iyengar, Thirthagiryappa, Gopalasawmy Naidu, Seshachala Mudaliar, Sutharsana Iyengar, and several others. Altogethr the lecture was very edifying, and we wish such lectures to be delivered often to keep the Bramoic zeal awake in the hearts of the Bramo Public of Bangalore. The meeting dispersed with a vote of thanks to the learned lecturer by Mr. Gopalasawmy Iyer.—*The Bangalore Spectator.*

On Sunday last in the Hall of Bangalore Bramo Samaj in Mr. Annasawmy Mudaliar's premises, Mr. S. P. Narasimmulu Naidu of Salem, delivered an address on ',Love of Theism" in Telugu. He quoted instances of rare and unflinching love recorded in the old Hindu Book and urged the audience to direct uch love in the path of Religion. His

speech bristled with lively and numerous anecdotes borrowed from Mahabharada, Ramayana, Bhagavada, and several other works and altogether kept his hearers attention directed to him. Among those present were Messrs. Chendrasakara Iyer, A. Iyasawmy Mudaliar, R. Gopalasawmy Iyer, T. M. Annasawmy Mudaliar, T. V. Raja Mudaliar, C. Narainasawmy Mudaliar, M. Etherajooloo Naidu, Candasawmy Mudaliar, Muthusawmy Mudaliar, and several others. The meeting dispersed with a vote of thanks to the lecturer by the Assistant Secretary T. V. Annasawmy Mudaliar.—*Bangalore Spectator.*

## THE BANGALORE (REGIMENTAL) BRAHMO SAMAJ.

### 1st Day.

This Ninth Anniversary of this Samaj was held in the Somaj Hall at 6 P. M. on Monday the 31st May 1880. Mr. S. P. Narasimmulu Naidu, Editor of the "Salem Patriot," &c., and a well-known Bramo * * * * was invited to preach the Anniversary Sermon. As Mr. Chandrasakara Iyer, the Local Minister, was unable to attend the Hall, Mr. Gopalasawmy Iyer, Minister and Secretary of the Samaj. conducted Divine service. Tamil Sankirtams were sung with *thumboor*. Then Mr. Narasimmulu Naidu preached the anniversary sermon. The subject was, "Has man a soul". Though he did not touch a single sentence in any of the world's Theology, he proved the existence of Soul, by illustrations from Geology, Anatomy, Physiology, &c. As the subject was a difficult, metaphysical, and Philosophical one, it gave satisfaction only to the educated portion of the audience. Though it was a rainy and dark night, a good number of educated and enlightened Bangalorians came from a distance of miles to attend this grand festival day. The Hall was tastefully decorated, among those present were, Messrs. Rai Bahudoor Narainasawmy Mudaliar, Iyasawmy Mudaliar, V. Annsawmy Mudaliar, Seshachala Mudaliar, Sathasiva Mudaliar, Thiruvengadasawmy Mudaliar, Sanjeevi Naidu, Ethirajulu Naidu. Besides these there were a number of Graduates and Undergraduates and a few Musalmen Moulvis, and Koran Preachers. The ser-

mon ended at about 9 P.M. Then *Mangalam* was sung. Gopalasawmy Iyer thanked the scientific Lecturer and ... ence in general on behalf of the Samaj.

2nd Day.

On Tuesday the 1st June 1880 or the 2nd day of the A... versary the Samaj Hall was filled with people from almost ... branches of the Bangalore Brahmo Samaj and gentleme... this city. There was not a bit of place left unoccupied ... in the streets. Messrs. Rai Bahadoor Narainasawmy Muda... Iyasawmy Mudaliar, Annasawmy Mudaliar, Sathasiva Muda... were also present. Sreemath Chendra Sekara Bramanand, ... ducted Divine service. Mr. S. P. Narasimmulu Naidu deliv... ed an extempore and eloquent lecture on the occasion. The s... ject of the lecture was "There was a God, and There is a G... The Lecturer divided the Lecture into 3 grand Sections. ... first section or by "Sruthees" he illustrated by good many q... tations taken from Vedas, Chinese, Egyptian, Judiastic reli... us works, Bible, Koran, Zendavesta &c. On the 2nd Sectio... Ukthee or reason he proved the existence of Divine Power ... Geology, Physiology, and Astronomy; and on the 3rd Sectio... Experience or Anubava, he quoted excellent opinions of ... Philosophers of Antiquity such as Sankara, Socrates, Pl... Goeth and others, and from modern Philosophers such as ... con, Priestly, Hamilton &c. On the speech with lively and ... fying logical conclusions of the day altogether kept the ... rer's attention directed to him. After the lecture was over, M... *galum* was sung. Mr. Gopalasawmy Iyer thanked the lectu... on behalf of the Samaj. The meeting dispersed at about 10 P. ...
*B. Public Opinion,* 17th June 1880.